2. ஜாக்கிர ஸ்வப்னங்களுக்கு பிர்ம்மம் அதிஷ்டானமானால் அவைகள் வியாவகாரிகமாயாவது பிராதிபாஸிகமாயாவது இருக்கவேண்டும் 313

(2) சமாதானம் (314—315)

1. நிவிர்த்தி இருவகை யாதலால் பிர்ம்மஞான மன்றியினும் ஸ்வப்னம் நிவிர்த்தியாகக்கூடும் 314

2. ஜாக்கிர் பதார்த்தம் கேவலம் அவித்தியாதோஷ ஜந்நியமா யிருப்பதால் வியாவகாரிக மென்றும், சொப்பன பதார்த்தம் நித்திராதோஷ சகித அவித்தியா ஜன்னியமா யிருப்பதால் பிராதிபாஸிகமென்றும் சொல்லப்படும். விசாரதிருஷ்டிக்கு சத்தாபேதமில்லாதபடியால், ஜாக்கிர ஸ்வப்னங்களுக்கு விலக்ஷணமில்லை 315

(3) ஆக்ஷேபம்:— வேதாந்த பரிபாஷாதி கிரந்தங்களினும் வித்தியாரணிய சுவாமிகளாலும் மூன்றுவித சத்தைகள் சொல்லப்பட்டிருக்கின்றன 316

(4) சமாதானம்:—அனாத்ம பதார்த்தங்களெல்லாம் பிராதிபாஸிகங்களாதலால் சத்தைகள் இரண்டேயாம் 317

4. தேசகால சாமக்கிரிக ளன்றியில் ஜாக்கிர பதார்த்தத்தின் உற்பத்தி (317—322)

(1) ஸ்வப்னம்போல ஆகாசாதி பிரபஞ்சமும் தேசகால சாமக்கிரியன்றியில் உண்டாகிறது 317

(2) ஆ:—மதுசூதன சுவாமிகள் மதம்:—மாயாவிசிஷ்ட பிர்ம்மத்தினின்றும் முதலில் தேசகாலம், பிறகு ஆகாசாதிகள் உண்டாயின வென்பதாம் 318

(3) ச:—(1) தேசகாலங்கள் உற்பத்தியானதாக அவர் அபிப்பிராயமல்ல 318

(2) ஆனால் அவர் அபிப்பிராயம் என்னவெனில்:—ஆகாசாதிகள்போல தேசகாலங்களும் பிரதீதியாகின்றன. விசேஷண மென்னவெனில் தேசகாலங்கள் காரணரூபமாயும், ஆகாசாதிகள் காரியரூபமாயும் பிரதீதியாகின்றன 318

(4) ஆக்ஷேபம் 319—

1. தேசகாலங்களில் காரணதையில்லாத பக்ஷத்தில் அசத்கியாதீ சித்திக்கும், மாரணத்தையும் பிரதீதியாகமாட்டாது

2. சர்வப்பிரபஞ்சத்துக்கும் பிர்ம்மம் காரணமானல், தேசகாலங்களில் காரணதையும், மற்றவைகளில் காரியதையும் பிரதீதியாக ஹேதுவில்லை 319

3. தேசகாலங்களில் காரணதை இல்லாவிட்டால், அவைகள் அகாரணமாயிருக்க அவைகள் காரணதை தோன்றுவதினுல் அன்னியதாக்கியாதி சித்திக்கும். சித்தாந்தத்தில் அநிர்வசனீயக்கியாதியே அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது 319

4. சித்தாந்தத்தில் ஞானம் விஷயத்தை அனுசரித்து உண்டாவதால், தேசகாலங்களில் தோன்றுதல் காரணதை, ஆக்காரணதை இருப்பதையே ஸ்திரப்படுத்துகிறது 319

(5) சமாதானம் (320—322)

1. சிவப்பு புஷ்பத்துடன் சம்பந்தப்பட்ட ஸ்படிகத்தில் சிவப்புவர்ணம் அந்நியதாக்கியாதி ரீதியாய்ப் பிரதீதியாவதுபோல, அதிஷ்டான பிர்ம்மத்தின் காரணத்தையும் தேசகாலங்களில் அன்னியதாக்கியாதி ரீதியாய்ப் பிரதீதியாகிறது 320

2. இதில் அந்நியதாக்கியாதியை அங்கீகரிப்பதால் எங்கும் அதையே அங்கீகரிக்க வேண்டுமென்கிற நியமமில்லை. புஷ்பம் ஸ்படிகம்போல இரண்டு பதார்த்தங்களுடன் அந்தக்கரணம் சம்பந்தப்படும்போது, அந்நியதாக்கியாதியும் கிளிஞ்சில்போல ஒரு பதார்த்தத்துடன் அந்தக்கரணம் சம்பந்தப்படும்போது அனிர்வசனீயக்கியாதியும் சித்திக்கின்றன 319-க்குச் சமாதானம் 321

3. ஸ்வப்னத்தில் பிதா காரணரூபமாயும் புத்திரன் காரியரூபமாயும் பிரதீதியாவதுபோல, தேசகாலங்கள் காரணரூபமாயும், ஆகாசாதிப் பிரபஞ்சம் காரியரூபமாயும் பிரதீதியாகின்றன. 319-க்குச் சமாதானம் 322

4. அதிஷ்டானசேதனம் அசங்கமா யிருப்பதால், அதனிடத்தில் காரணதையே இல்லை. அநிர்வசனீய தேசகாலங்களில் அநிர்வசனீய காரணதை மாயாபலத்தால் தோன்றுகிறது 322

(6) தீர்மானம், ஜாக்கிரஸ்வப்னங்கள் சமம் 322

5. ஜாக்கிரத ஸ்வப்ன பதார்த்தங்கள் அஸ்திரம் 323—324

1. ஆ:—ஜாக்கிர பதார்த்தம் சொப்பனத்திற்குப் பிறகும் இருப்பதாலும், ஒரு சொப்பனத்தில் கண்ட பதார்த்தம் மற்றொரு சொப்பனத்தில் காணப்படாதபடியாலும் ஜாக்கிர ஸ்வப்னங்கள் சமமல்ல 323

2. ச:—(1) இப்படித் தோன்றுவது மூடனுக்குத்தான் 323

(2) சகல பதார்த்தங்களும் அவித்தியா பரிணாமமாயும் சேதன விவர்த்தமாயு மிருக்கின்றன. விர்த்தி யுண்டாகும்போது அவைகளுண்டாகி விருத்தி நஷ்டமாகும்போது அவைகளும் நஷ்டமாகின்றன. ஆகையால் முதல் ஜாக்கிரத்தின் பதார்த்தமே இரண்டாவதிலும் காணப்படுவதாகச் சொல்லக்கூடாது 324

3. ஆ:—விழித்துக்கொண்ட புருஷனுக்கு முந்திய ஜாக்கிர பதார்த்தத்தின் ஞானமிருப்பதால், பதார்த்தம் ஸ்திரமல்லவெனக் கூடாது 325

4. ச:—ஸ்வப்னத்தில் தற்காலத்தில் உண்டான பதார்த்தத்தில் வெகுகாலஸ்திரதை தோன்றுவதுபோல், அவித்தியா பலத்தால் ஜாக்கிர பதார்த்தத்திலும் மித்தியா ஸ்திரதை பிராந்தியால் தோன்றுகிறது 325

6. ஜாக்கிர ஸ்வப்பனபதார்த்தங்களில் காரியகாரண பாவங்களில்லை. (325—328)

1. ஆ:—ஸ்வப்ன பதார்த்தம் சாக்ஷாத் அவித்தையினின்றும் உண்டாவதாலும், ஜாக்கிர பதார்த்தங்கள் அவையவைகளின் காரணங்களினின்றும் உண்டாவதாலும், இரண்டுக்கும் சமத்வம் சொல்லக்கூடாது. 325

2. ச:—(1) ஜாக்கிர பதார்த்தங்களிற்போல ஸ்வப்ன பதார்த்தங்களிலும் காரியகாரணபாவங்கள் தோன்றுகின்றன. சித்தாந்தத்தில் காரியகாரண பாவங்களில்லை. எல்லாம் அவித்தையின் காரியங்களே 326

(2) சுருதியில் சொல்லப்பட்ட சிருஷ்டிக்கிரமம் லய சிந்தனை மூலமாக அத்வைத போதத்தின் பொருட்டுத்தான், அதற்கு வேறு பிரயோஜனமில்லை 327

3. திருஷ்டி சிருஷ்டிவாதம் 328

7. ஜாக்கிர ஸ்வப்னங்கள் இரண்டும் சாக்ஷிபாஸ்யங்களாம் 328

8. முடிவு 328

## வேதம் குரு பொய்யென்பதற்குத் திருஷ்டாந்தம். (329—453)


1. தர்க்கதிருஷ்டியின் மூன்றாவது கேள்வி:—ஸ்வப்னம் போல் சமுசாரமும் ஸ்வல்பகால மிருக்கிறதாக விருந்தால் அனாதிகாலமாக இருக்கிற பந்தம் இல்லாமலிருக்க வேண்டும். பந்தநிவிர்த்தியான மோக்ஷத்தின்பொருட்டு ஏற்பட்டிருக்கிற வேதம் குரு சிரவணாதிசாதனங்கள் எல்லாம் நிஷ்பலமாய்விடும் 329

2. சித்தாந்தத்தை யறியாமல் இந்தக் கேள்வி கேட்கப் பட்டது 329

2. குரு உத்தரம்—(330—443)

1. சொப்பனத்தில் குருவேதம் முதலியவை பிரதீதி யாவதுபோல் உனக்கு நான் பிரதீதியாயிருக்கிறேன். என் உபதேசமும் மித்தையான பிரதீதி இதுதான். இதற்கு திருஷ்டாந்தம் 330

2. அக்கிரதேவனுடைய சொப்பனம் 331—453

1. அக்கிரதேவனுக்குச் சொப்பனம் தோன்றுதல் 331

2. அக்கிரதேவன் குருவைச் சந்தித்தல் 332

3. மித்தையான ஆசாரியரால் மித்தையான சிஷ்யனுக்கு மித்தையான சம்ஸ்கிருத கிரந்தத்தால் உபதேசம் 333—337

1. மங்களாசரணம் (333—335)

(1) அதின் பிரயோஜனம்—கிரந்த கர்த்தாவிடத்தில் நாஸ்திகபுத்தி வாராமலிருப்பது 333

(2) அதின் பேதங்கள் 333

(3) கணேச தேவீ ஸ்துதியும் ஈஸ்வர ஸ்துதியே 334

(4) நிர்க்குணவஸ்து நிர்த்தேச ரூபமங்களம் 335

(5) சகுணவஸ்து நிர்த்தேச ரூபமங்களம் 335

(6) நமஸ்காரரூபமங்களம் 335

(7) ஆசிர்வாதரூபமங்களம் ஸ்வவாஞ்சிதம் 335

(8) ஷை சிஷ்யவாஞ்சிதம் 335

2. குருவை நமஸ்கரித்தல் 335

(1) திருஷ்டாந்தம்—வனத்தில் காற்றினா லுண்டாகும் துன்பம் 336

(2) தார்ஷ்டாந்தம் பேதவாதியால் சிஷ்யனுக்கு உண்டாகுந் துன்பம் 337

(3) துன்ப நிவிர்த்திக்கு உபாயம்-வியாச சூத்திரம் (337—388)

4. அக்கிரதேவனுடைய கேள்விகள்

(1) நான் யார்? 339

(2) சம்சாரத்துக்குக் கர்த்தா யார்? 339

(3) முத்திக்குச் சாதனம் ஞானமா? கர்மமா? உபாசனையா? அல்லது இவைகளில் இரண்டா? 339

5. முதல் கேள்விக்கு உத்தரம் (340—369)

1. சித்தாந்தம் (344—341)

(1) நீ சச்சிதானந்த ஸ்வரூபம் 340

(2) நீ கர்த்தா போக்தாவன்று 340

(3) நீ ஏகம், வியாபகம் 341

2. சாங்கியமத நிராகரணம் 341

(1) சாங்கியமதம்:—(1) 25 தத்துவங்கள் 342

(2) ஆத்மா கர்த்தாபோக்தாவல்ல, அநேகம், பந்தமோக்ஷ லக்ஷணங்கள் 342

(2) ஷை மதகண்டனை 342

3. மூன்றுவித நையாயிகமத நிராகரணம் (343—351)

(1) வியாபகமத நிராகரணம் (343—347)

1. ஆத்மாவியாபகம் என்னும் மதம் (343—345)

(1) ஜீவனுடைய 14 குணங்கள்; ஈசுவரனுடைய 8 குணங்கள்; ஜீவன் நித்தியம், நானா ஜடம் 343

(2) நித்திய பதார்த்தங்கள் 343

(3) சம்சாரத்துக்குக் காரணம் பிராந்தி 343

(4) பிராந்தி நிவிர்த்தி; மோக்ஷஸ்வரூபம் 343

(5) நித்தியமான சுரோத்திர மனதுகளில் நாசம் 343

(6) ஆத்மாவின் ஞானம் (1) மனதும் ஆத்மாவும் சேர்ந்து உண்டாகிறது 343

(2) துவக்கும் மனதும் சேர்ந்து உண்டாகிறது 344

(3) ஸ்வபாவத்தில் ஆத்மா ஜடம் 344

(7) ஆத்மா அநேகம் 345

(8) ஆத்மா வியாபகம்

(1) சகல அற்பபதார்த்தங்களுடன் சம்பந்தமே வியாபக லக்ஷணம் 345

(2) அநேக பதார்த்தங்களுக்கு வியாபகத்வம் சொல்லக்கூடாது 345

(3) நிரவயவமான அநேக பதார்த்தங்கள் வியாபகமாயிருக்கலாம் 345

2. (343—345) மதகண்டனம்

(1) ஆத்மா அநேகமாயும் வியாபகமாயுமிருந்தால் இன்ன ஆத்மாவுக்கு இன்ன சரீரமென்பதைக் கர்மம் நிச்சயிக்கமாட்டாது 346

(2) மனது, இந்திரியம், பதார்த்தங்கள் இவைகளும் சரீரத்தை நிச்சயிக்கமாட்டா 346

(3) "நான், என்னுடையது" என்னும் புத்தியும் சரீரத்தை நிச்சயிக்கமாட்டாது 346

3. வேதாந்த ஸித்தாந்தம்

(1) அந்தக்கரணமே கர்த்தா போக்தா, அநேகம் 347

(2) அது வியாபகமன்று, அணுவன்று, ஆனால் மத்தியம் பரிமாணம் 347

2. மத்தியமபரிமாணமத நிராகரணம் (348—349)

1. மத்தியம்பரிமாணமதம்—ஆத்மா நாநா, கர்த்தா போக்தா, மத்தியம்பரிமாணம் 348

2. இதின் கண்டனம் 349

3. அணுபரிமாணமதநிராகரணம் (350—351)

1. இதின் விவரமும் கண்டனமும் 350

2. ஆ. கஸ்தூரிபோல் அணுவான ஆத்மா பிரகாசிக்கிறது 351

3. ஈ. திரஷ்டாந்தம் சரியன்று 351

4. ஆத்மா அணுவென்னும் சுருதியின் கருத்து 351

4. ஸித்தாந்தம் (352—353)

1. ஆத்மா ஏகம், வியாபகம், சுகாதிகள் அந்தக்கரண தர்மங்கள், அந்தக்கரண உபஹித ஆத்மாவில் கற்பிதங்கள் 352

2. இவை அந்தக்கரண விசிஷ்ட ஆத்மாவில் கற்பிதங்களல்ல 353

3. அந்தக்கரணம் அஞ்ஞான் உபஹிதத்தில் கல்பிதம் 354

5. ஆத்மாவின் சத்ரூபம் 355

6. ஆத்மாவின் சித்ரூபம்

1. ஆத்மா எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்கிறது 356

2. ஆ. ஆத்மா பிரகாசரூபமல்ல, ஜடம். அதற்கு ஞானம் குணம். அதினால் அது எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்கிறது 357

3. ச. (1) ஞானம் நித்தியமா அநித்தியமா? நித்தியமானால் அதுவே ஆத்மஸ்வரூபம் 357

(2) ஞானம் அந்தக்கரணாதிகளால் உண்டாகிறபடியால் அது அநித்தியமன்று 358

(3) உற்பத்தி நாசங்கள் அந்தக்கரண விர்த்திக்கு உண்டு 359

7. ஆத்மாவின் ஆநந்தரூபம் (360-363)

1. ஆத்மா ஆநந்தரூபம், விஷயத்தில் ஆநந்தமில்லை. இச்சை இல்லாத நிச்சல அந்தக்கரண விர்த்தியில் ஆத்மாநந்தம் விளங்குகிறது 360

2. ஆ:—இச்சை இல்லாதபோது விர்த்தி நாசமாகிறது. விர்த்தியன்றியில் ஸ்வரூபாநந்தம் விளங்காது 361

3. ச:—(1) இச்சையாகிற ராஜஸவிர்த்தி இல்லாவிட்டாலும், பிராப்தவிஷயத்தின் ஞானரூப சாத்வீகவிர்த்தி இருக்கிறது. இதில் விஷய உபஹித சேதநாநந்தம் விளங்குகிறது. இது ஆத்மாநந்தத்துக்கு வேறன்று 361

(2) அல்லது, இச்சாபாவத்தால் உண்டாகும் அந்தர்முகவிர்த்தியால் அந்தக்கரண உபஹித சேதநாநந்தம் கிரகிக்கப்படுகிறது 361

(3) முதல் (361) பக்ஷத்துக்கு இரண்டாவது (361) (பக்ஷம்) உத்தமம் 361

4. எல்லாவற்றையும்விட ஆத்மாவே எல்லாருக்கும் அதிகப் பிரீதிக்குக் காரணம் 362

5. நியாயமதத்தில் ஆனந்தம் ஆத்மாவின் குணமல்லவென்று சொன்னது சரியல்ல. சுஷுப்தியிலும் ஆனந்த மிருப்பதால் ஆத்மா ஆனந்தஸ்வரூபந்தான் 363

8. சச்சிதானந்தம் பரஸ்பரம் வேறில்லை 364

9. பிரம்ம ஆத்மாக்களின் பேதங்கள் 364

1. ஸ்வரூபத்தில் பிரம்மமும் ஆத்மாவுமொன்று 364

2. உபாதி பேதமன்றியில் இரண்டுக்கும் வேறுபேதமில்லை 365

10. பிரம்மரூப ஆத்மாவுக்கு ஜன்மமில்லை 366-366

1. ஆத்மாவுக்கு ஜநநம் ஒவ்வாது 366
2. கற்பிதங்களின் இரண்டு அம்சங்கள் 367
3. சகல பதார்த்தங்களின் ஐந்து அம்சங்கள் 368
4. ஆத்மாவின் ஷட்விகாரபாவம் 368
11. ஆத்மா அசங்கன் உபஸங்காரம் 369

6. இரண்டாவது (339) கேள்விக்கு உத்தரம் (370-374)
1. ஜகத் கர்த்தா ஈசுவரன் 370
2. அவருடைய சர்வஞ்ஞாதி விசேஷணங்கள் 371
3. அற்பஞ்ஞாதிகளுடன் கூடின ஜீவன் கர்த்தாவல்ல 372
4. ஈசுவரன் வியாபகமாயும் நித்தியமாயு மிருக்கிறார் 373
5. ஈசுவரனுக்கும் ஜீவனுக்கும் பேதம் சொரூபத்திலில்லை 374

7. மூன்றாவது (339) கேள்விக்கு உத்தரம் (375-406)
1. முத்திக்குச் சாதனம் ஞானம் 375
2. கர்ம உபாசனைகள் ஞானசாதனங்களல்ல 376-379
1. கர்ம உபாசனைகளின் பலன் அனித்தியமாகலால் அவைகளால் நித்தியமான மோக்ஷம் கிடைக்க மாட்டாது 376
2. கர்ம உபாசனைகளின் ஐந்துவித உபயோகங்கள் 377
3. கர்மத்தின் ஐந்து உபயோகங்களும் முமுக்ஷுவுக்கு வேண்டியதில்லை 377
1. பதார்த்த உற்பத்தி:—
(1) ஸ்வபாவசித்தமான மோக்ஷம் எக்கர்மத்தாலும் உண்டாகமாட்டாது 377
(2) வேதாந்தச் சிரவணமும் மோக்ஷம் உண்டாவதற்கன்று 378
2. பதார்த்தநாசம்:—ஆத்மாவுக்குப் பந்தம் ஒரு காலத்திலும் இல்லாதபடியால், முமுக்ஷுவால் இச்சிக்கக்கூடிய பதார்த்தநாசமில்லை 379
3. பதார்த்தபிராப்தி:—பந்தமில்லாத நித்திய முக்தமான ஆத்மாவைக் கர்மத்தால் அடையலாமென்பது ஒவ்வாது 379
4. பதார்த்தவிகாரம்:—நிர்விகாரமான ஆத்மாவுக்கு விகாரத்தை உண்டுபண்ணுகிற எக்கர்மமும் உபயோகப்படமாட்டாது 380
5. ஸம்ஸ்காரம்:—

1. சுத்தாந்தக்கரணத்துடன் கூடின முமுக்ஷுவுக்குப் பாபத்தை நிவிர்த்திசெய்யும் எக்கர்மமும் உபயோகப்படமாட்டாது 380

2. நிர்க்குணமான ஆத்மாவுக்கு நூதனகுணத்தைக் கொடுக்கும் எக்கர்மமும் உபயோகப்படமாட்டாது 380

4. உபாசனை மானசிககர்மத்தால் அதுவும் உபயோகப்படமாட்டாது என்பதில் வேறு யுக்திகள் சொல்லப்படவில்லை 380

3. ஆக்ஷேபங்கள் (380-383)

1. கர்மமும் உபாசனையும் ஞானத்துடன் சேர்ந்து இருக்கவேண்டியது. பக்ஷிதிர்ஷ்டாந்தம் 380

2. கர்மஉபாசனைகள் மோக்ஷத்துக்கு சாக்ஷாத் ஸாதனங்கள். சேதுதிர்ஷ்டாந்தம் 381

3. ஷை ஷை பரம்பராசாதனங்கள்

(1) கர்ம உபாசனைகள் அந்தக்கரண சுத்திமூலமாக ஞானத்துக்கும், ஞானமூலமாக மோக்ஷத்துக்கும் ஹேதுக்கள். விருக்ஷதிர்ஷ்டாந்தம் (381-382)

(2) உண்டான ஞானத்தை ரக்ஷிக்கவும் அவைகள் வேண்டியவை 383

(3) இல்லாவிடின் பாபமுண்டாகி ஞானம் நஷ்டமாகும் 383

4. சமாதானங்கள்

1. கர்ம உபாசனைகளுக்கும் ஞானத்துக்கும் விரோதம் (384—386)

(1) சரீரத்துக்கு ஆத்மா வேறு, நான் புண்ணிய பாபங்களைச் செய்து அவைகளின் பலனை அனுபவிக்கிறேன். இது கர்மியின் மதம். ஆத்மா அசங்கப்பிர்ம்மரூபமென்பது ஞானியின் மதம். ஆகையால் கர்மம் ஞானத்துக்கு விரோதம் 384

(2) கர்த்தா கர்மபலன்களின் பேதஞானம் கர்மத்துக்கு ஹேது. இவைகள் ஆத்மாவுக்கு வேறன்று என்பது ஞானியின் மதம் 384

(3) பாஷியகாரருடைய மதம் 384

(4) கர்மபலன் அநித்திய சம்சாரம். ஞானபலன் நித்தியமோக்ஷம். ஆகையால் விரோதம் 385

(5) கர்மிக்கு ஆத்மாவினிடத்தில் ஜாதி முதலியவைகளின் பிராந்தி உண்டு. ஞானிக்குப் பிராந்தியில்லை ஆகையால் ஞானிக்குக்கர்மாதிகாரமில்லை 385

(6) ஞானிக்கு உபாஸ்ய உபாஸக பாவங்களில்லாதபடியால் ஞானத்துக்கும் உபாசனைக்கும் விரோதம் 385

(7) பக்ஷி திர்ஷ்டாந்தம் சரியன்று 386

2. மோக்ஷத்துக்குக் கர்ம உபாசனைகளின் அபேக்ஷையில்லை (387—389)

1. சேது திர்ஷ்டாந்தம் சரியல்ல. சேது தர்சனம் சிரத்தையை அபேக்ஷிக்கிறது 387

2. பிர்ம்மவித்தை கர்மோபாசனைகளை அபேக்ஷிக்கிறதில்லை. மோக்ஷம் நித்தியப்பிராப்தம் 388

3. சாஸ்திரத்தில் கேவலம் ஞானம்தான் மோக்ஷசாதனமென்று சொல்லப்பட்டிருக்கிறது 389

3. கர்மஉபாசனைகள் ஞானத்துக்குச் சாதனங்களே தவிர மோக்ஷத்துக்கன்று. விருக்ஷதிர்ஷ்டாந்தம் சரியன்று. உத்தம ஜிஞ்ஞாஸுவுக்கும் வித்வானுக்கும் கர்ம உபாசனைகள் வீண் 390

4. உண்டானஞானம் கர்மோபாஸனைகளால் காப்பாற்றப்படமாட்டாது. இவைகள் ஞானத்துக்கு ஹேதுக்களானாலும் உண்டான ஞானத்துக்கு விரோதிகளாம் 391

5. (1) ஞானி சுபகர்மத்தை விடுவதாலும் அசுபகர்மத்தைச் செய்வதாலும், அவனுக்குப் பாபமில்லை 393

(2) ஜீவன்முக்தி ஆனந்தத்துக்குப் பிர்ம்மாகார விர்த்தியே காரணமானதால் ஞானிக்குக் கர்மோபாசனைகள் வேண்டியதில்லை 393

6. ஆக்ஷேபம்:— ராகத்துவேஷாதிகள் அந்தக்கரணத்தின் சஹஜ தர்மங்களானதால், ஞானியின் அந்தக்கரணமும் சஞ்சலிக்கக்கூடும். அதை நிவிர்த்திக்கும் ஞானியும் உபாசனையைச் செய்யவேண்டியது 394

7. சமாதானம் (394—399)

1. திடபோதமுள்ள ஞானிக்குச் சமாதியும் விக்ஷேபமும் சமம். அவன் கர்மோபாசனைகளில் பிரயத்தின பூர்வகமாகப் பிரவிர்த்திக்கமாட்டான் 394

2. மந்தபோதமுள்ள உத்தமஜிஞ்ஞாசுவும் கர்மோபாசனைகளில் பிரவிர்த்திக்கமாட்டான் 395

3. போதமில்லாத உத்தமஜிஞ்ஞாசுவும் அப்படியே 396

4. ஞானத்திலிச்சையுள்ள மந்தஜிஞ்ஞாசுவுமப்படியே 396

5 ஞானத்தி லிச்சை இருந்தும் போகத்தில் ஆசக்தியுள்ள மந்த ஜிஞ்ஞாசுக்கு நிஷ்காமகர்மத்திலும் உபாசனையி லும் அதிகாரமுண்டு 396

6. ஞானத்தி லிச்சையில்லாமல் போகத்தில் ஆசக்தியுள்ளவ னுக்கு சகாமகர்மத்தில் அதிகாரம் 396

7. திடபோதத்துக்கும் கர்மோபாசனைகளுக்கும் விரோத மில்லை 397

8. ஞானியின் கர்மம் ஆபாசரூபம் 398

9. மந்தபோதத்துக்கும் கர்மோபாசனைகளுக்கும் விரோதம். முடிவு 399

5. மேற்சொன்ன அர்த்தம் சர்வவேதசாரம் 400—401

6. அந்த அர்த்தத்தின் சுருக்கம் (402—404)

1. ஜீவஸ்வரூபம் 402

2. ஞானசாதனம் 403

3. சமுசாரஸ்வரூபம் 404

4. ஞானி அஞ்ஞானிகளின் சின்னங்கள் (404—406)

1. ராகவிராகங்கள் 404

2. ஞானி அஞ்ஞானிகளின் விராகலக்ஷணம் 405

3. சாக்ஷ்யசாக்ஷீபாவங்கள் 406

8. மகாவாக்கியார்த்தஞானம் (406—449)

1. ஞானஸ்வரூபம் 406

2. லக்ஷணைவிவரம் (407—429)

1. லக்ஷணைகளின் பெயர் 407

2. அவைகளின் ஞானம் அவசியம் வேண்டியது 407—408

3. விருத்திபேதங்கள்—சக்தி, லக்ஷணை, விருத்திகள் 409

4. சக்திலக்ஷணம் (410—427)

1. நியாயமதப்படி— ஈசுவர இச்சைதான் பதசக்தி 410

2. சித்தாந்தப்படி— பதார்த்த பாகும்படியான பத்தி லுள்ள சாமர்த்தியந்தான் பதசக்தி 411

(1) ஆ. தகிக்கும் சக்தி அக்கினிக்கு வேறாகக் காணப்படாததுபோல, பதசக்தியும் வர்ணசமுதாயத்துக்கு வேறாகச் சொல்லப்படக்கூடாது 412

(2) சமாதானம் 412

(1) பிரதிபந்தங்களால் அக்கினி எரிக்காதபடியால், அக்கினியின் சக்தி அக்கினிக்கு வேருகவே இருக்கிறது 413
(2) அப்படியே மற்றபதார்த்தங்களிலும் சக்தி வேருகவே இருக்கிறது 414
(3) சக்தி வேறு என்பதற்கு அனுபவம் 414

3. நியாயமதகண்டனம்—ஈசுவர இச்சை ஈசுவரதர்மமானதால் ஈசுவரனைத்தவிர வேறு இடத்தில் இருக்கமாட்டாது 415

4. வையாகரணமதப்படி :—அர்த்தஞானத்தை உண்டாக்கும்படியான பதத்திலுள்ள யோக்கியதையே பதசக்தியாம் 416

5. ஷை மதகண்டனம் (417—418)
(1) வையாகரணீ சாமர்த்தியத்தை அங்கீகரித்தால் அதுவே சக்தி. சாமர்த்தியத்தையும் அதற்கு வேருன யோக்கியதாரூபசக்தியையும் அங்கீகரிப்பது உலகவிருத்தம் 417
(2) சாமர்த்தியத்தையே யோக்கியதையாகச் சொன்னல் சித்தாந்தம் சித்திக்கிறது 417
(3) சாமர்த்தியத்தையே அங்கீகரிக்காமல் யோக்கியதையே சக்தியாகச்சொன்னல், அசமர்த்தமானபதம் அர்த்தஞானத்தை உண்டாக்கும் என்பது நபும்சகனுக்கு அமோகவீரியமிருப்பதாகச் சொல்லுவதற்கு ஒப்பாகும் ஆகையால் சாமர்த்தியமே சக்தி 418

6. பட்டரீதியாய்:-பதத்துக்கும் அர்த்தத்துக்குமுள்ள பேதாபேதரூப தாதாத்மிய சம்பந்தந்தான் சக்தி எனப்படும். 419
(2) பிரமாணம் (420—421)
1. அபேதப்பிரமாணம்-உபநிஷத்துகள் 420
2. பேதப்பிரமாணம்-சர்வலோகானுபவம் 421
3. இதரப்பிரமாணங்கள்
(1) குணம், குணீ-ஜாதி, வியக்தி, கிரியை, கிரியாவான் இவைகளின் பேதாபேதரூப தாதாத்மிய சம்பந்தம் 422
(2) காரியகாரணங்களின் ஷை

7. ஷை மதகண்டனம் (422—427)
1. வாச்சியவாசகங்களின் பேதாபேதரூப தாதாத்மிய சம்பந்தம் அசங்கதம் (422—424)

1. பேதாபேதங்கள் பரஸ்பரம் விருத்தமான தால் அவைகள் ஒரிடத்தில் சேரா 422

2. ஓம் அக்ஷரம் பிர்ம்மமென்னும் சுருதியின் கருத்து 423

3. பிர்ம்மத்துக்கும் ஓங்காரத்துக்கும் அபேதம் சித்தித்தாலும் கடாதிபதங்களுக்கும் அவை களின் அர்த்தங்களுக்கும் அபேதம் சித் திக்கமாட்டாது 423

4. சக்திவாதி (சித்தாந்தி) மதத்தில் வாச்யவாச கங்களின் கேவலம் பேதமிருக்கக்கூடும் 424

2. உபாதான காரணத்துக்கும் காரியத்துக்கும் பேதா பேதரூபதாதாத்மிய சம்பந்தமில்லை (425—427)

1. கேவலம்பேதம் நியாயமதத்தில் தோஷ மன்று 425—6

2. ஷை சித்தாந்தத்திலும் அப்படியே 427

3. பட்டருடைய மதத்திலேயே அவைகள் தோ ஷங்கள் 427

3. குணகுணீ முதலியவைகளிலும் பேத த்தை அங்கீகரிப்பதால் சித்தாந்தத் தில் தோஷமில்லை 427

4. சித்தாந்தம்:—பேதாபேதங்களுக்கு வில க்ஷணமான அநிர்வசனீய தாதாத்மிய சம்பந்தமே அங்கீகரிக்கத்தக்கது 427

5. சக்தியலக்ஷணம் 428

6. லக்ஷணையின் லக்ஷணம், லக்ஷியார்த்தம் 429

3. ஜஹற்முதலிய லக்ஷணைகள் (430—432)

1. ஜஹற்லக்ஷணை 430

2. அஜஹற்லக்ஷணை 431

3. பாகத்தியாகலக்ஷணை 432

4. தத்வமசி என்னும் மகாவாக்கியத்தில் லக்ஷணையைச் சேர்த்தல் (433—442)

1. தத்பதவாச்சியார்த்தம் 433
2. த்வம்பதவாச்சியார்த்தம் 434
3. மகாவாக்கியத்தின் வாச்சியார்த்தத்தால் ஏகத்வம் விருத்தமாக இருப்பதால், லக்ஷியார்த்தந்தான் கிரகிக்கத்தக்கது 435
4. ஜகர்லக்ஷணை அமையாது 436
5. அஜகர்லக்ஷணையும் அப்படியே 437
6. பாகத்தியாகலக்ஷணைதான் அமையும் (438—442)

1. ஜீவேசுவரஸ்வரூபம் (438—442)
1. வித்தியாரணியசுவாமிமதம்-ஆபாசவாதம் 438
2. விவரணக்காரருடைய மதம்-பிரதிபிம்பவாதம் 440
3. ஆபாசப்பிரதிபிம்பவாதங்களின் பேதம் 440
4. அவச்சேதவாதம் 441
2. எல்லாவாதங்களிலும் ஆபாசவாதந்தான் சிரேஷ்டம் 442

5. இதரமூன்று மகாவாக்கியங்களில் பாகத்தியாகலக்ஷணை 443
6. இதரவாக்கியங்களின் ஷை லக்ஷணை 443
7. (430—447) பிரிவுகளின் சுருக்கம் 444
8. இரண்டு பதங்களிலும் லக்ஷணை சொல்லவேண்டியது
1. ஆ. இரண்டு பதங்களில் லக்ஷணை நிஷ்பலம் 445
2. ச. முதல்பதத்திலாவது இரண்டாவது பதத்திலாவது லக்ஷணையை அங்கீகரிப்பதால் நான்கு வாக்கியங்களில் விருத்தம் காணப்படுகிறது 446
3. ஆ. ஈசுவரவாசகபதத்தில் மட்டும் போதுமே? 447
4. ச. அப்போது வேதவிசாரத்தால் அனர்த்தமே உண்டாகும் 447
5. ஆ. ஜீவவாசகபதத்தில்மட்டும் போதுமே 448
6. ச. அப்போது மாயாரகிதம் மாயாவிசிஷ்டமாக முடியும் 448
7. சித்தாந்தம். இரண்டு பதங்களிலும் லக்ஷணையை அங்கீகரிப்பதினால் யாதொரு தோஷமில்லை 449
9. ஓதப்புரோதபாவம் 449

9. சொப்பனகிரந்தத்தின் முடிவு 450
10. அக்கிரதரிதவனுடைய 4-வது கேள்வி 451

11. குரு உத்தரம் 452

12. தரங்கமுடிவு 453

---

# 7-வது தரங்கம்.

## 1. ஜீவன்முக்தி விதேகமுக்தி வர்ணனை.

1. பூர்வபீடிகை 454

2. ஞானிக்கு வியவகாரத்தில் நியமமில்லை 454

3. ஆக்ஷேபம் 455

4. தத்துவதிருஷ்டியின் ஹேளனம் 455

5. சித்தாந்தம் ஞானிக்கு வியவகாரத்தில் நியமமில்லை

6. ஆக்ஷேபங்கள் (455—473)

  1. சரீர நிர்வாஹத்தின்பொருட்டு வியவகாரத்தில் பிரவிர்த்தி யுண்டு (455—457)

    1. வியவகாரத்தில் நியமமில்லாவிட்டாலும், சரீர நிர்வாஹத்தின்பொருட்டு நியமமுண்டு 455

    2. கர்மவிவரமும், அதின் நாசமும் 455

    3. ஞானிக்குப் பிராரப்தமில்லை யென்பதின் கருத்து 455

    4. ஆ. ஞானமுண்டான பிறகும் வேறு ஜன்மம்கிடைக்கக்கூடும் 456

    5. ச. ஞானமுண்டானபின் வேறு ஜன்மம் உண்டாக மாட்டாது 457

  2. சமாதியில் நியமமுண்டு

    1. மனது ஒன்றைப் பிடித்துக்கொள்ளாமல் ஸ்திரப்பட மாட்டாது 458

    2. சமாதியில் மனது ஸ்திரப்படுகிறது 458

    3. சமாதி விவரம்

      1. சமாதியின் எட்டு அங்கங்கள் 459

      2. இயமலக்ஷணம் 460

      3. நியமலக்ஷணம் 461

4. புராணரீதியாய் இயம நியம லக்ஷணங்கள் 461
5. ஆசனம்
(1) ஆசனவிவரம் 462
(2) சித்தாசனலக்ஷணம் 462
6. பிராணாயாமம் 463
7. பிரத்யாகாரம் 464
8. தாரணை 464
9. தியானம் 464
10. சமாதி (465—473)
1. சமாதிலக்ஷணம் 465
2. சமாதியில் சவிகல்ப நிர்விகல்ப பேதங்கள் 465
3. சவிகல்பத்துக்கும் நிர்விகல்பத்துக்கும் பேதம் 475
4. நிர்விகல்பத்துக்கும் சுஷுப்திக்கும் பேதம் 466
5. நிர்விகல்பத்தில் இரண்டுவிதம் (1) அத்துவைத பாவனாரூபம். (2) அத்துவைத அவஸ்தானரூபம் 467
6. அத்துவைத அவஸ்தானரூபத்துக்கும் சுஷுப்திக்கும் பேதம் 469
7. நிர்விகல்ப சமாதியின் விக்கினங்கள் (469-472)
(1) லயம் 468
(2) விக்ஷேபம் 470
(3) கஷாயம்
1. கஷாயலக்ஷணம் 471
2. அந்தக்கரணத்தின் 5 பூமிகைகள் 471
3. ராகாதிதோஷங்களே சமாதிக்கு எடுபடாததினால் அவைகளைத் தோஷங்களாக எப்படிச் சொல்லலாம் 471
4. பூர்வஜன்மத்தின் ராகாதிகளின் சம்ஸ்கா்ரம் வெளிப்பட்டால் சமாதிக்கு விக்கினமாய் முடியும் 571
5. விக்ஷேபத்துக்கும் கஷாயத்துக்கும் பேதம் 471
ரசாஸ்வாதம்:—1-வது விதம் 472
2-வது விதம் 472
4. ஞானிக்கு பாஹியபிரவிர்த்தி உண்டாகாதென்னும் ஆக்ஷேபமுடிவு 473
7. சமாதானங்கள் (474—478)

1. பிரவிருத்தியிலாவது நிவிர்த்தியிலாவது ஞானிக்குநியமமில்லை. வியவகாரத்தின் அதிகமும் குறைவும் பிராரப்தபலன் 474
2. ஆ. அதிக வியவஹாரத்தால் ஞானமுண்டாகமாட்டாது 474
3. ச. வியவகாரத்தின் அதிகத்தால் ஜீவன்முக்தியின் சுகம் குறைவாயும், வியவகாரத்தின் குறைவால் ஷெ சுகம் அதிகமாயும் உண்டாகின்றது. ஞானம் மட்டும் எல்லாருக்கும் சமமாகின்றது 474
4. ஆ. ஜீவன்முக்தி சுகத்தைவிட்டுப் போகத்தில் பிரவிர்த்தித்தவன் விதேஹமோக்ஷத்தையும் விட்டு வைகுண்டலோக இச்சையைக் கொள்ளக்கூடும் 475
5. ச. ஷெ இரண்டும் அசம்பாவிதம் 475
6. ஞானியின் பிராரப்தம் ஜீவன்முக்தியின் விலக்ஷணாநந்தத்துக்கு விரோதமானாலும் ஜீவன்முக்திக்கு விரோதமன்று 476
7. அனுத்மபதார்த்தத்தில் மித்தியாபுத்தியிருந்தாலும் பிரவிர்த்தி யுண்டாகக்கூடும் 477
8. ஆ. தோஷதிருஷ்டியுண்டானால் பிரவிர்த்தி யுண்டாகமாட்டாதே 478
9. ச. தோஷதிருஷ்டியிருந்தாலும் ஞானிக்குப் பிராரப்தத்தால் பிரவிர்த்தி யுண்டாகக்கூடும் 478

## II. தத்துவதிருஷ்டி அதிருஷ்டியின் முடிவு.

1. தேசகாலாதிகளின் அபேக்ஷையன்றியில் தத்துவதிருஷ்டியின் மாணம் 479
2. உபாசகர்களின்பொருட்டு ஞானிக்கு ஷெ வேண்டியவை 480
3. தேசாதிகளின் அபேக்ஷையுடன் அதிர்ஷ்டியின் மாணம் 481

## III. தர்க்கதிர்ஷ்டியின் கதை. (482—496)

1. தர்க்கதிர்ஷ்டியின் நிச்சயம் 482
1. சர்வசாஸ்திரங்களும் பிர்ம்மஞானத்தின்பொருட்டே ஏற்பட்டிருக்கின்றன 482
2. வித்தையின் பதினெட்டுப் பிரஸ்தானங்கள் (483—496)
1. அவைகளின் பெயர் 483
2. நான்கு வேதங்களுக்கும் பிரம்மஞானத்தில் தாத்பரியம் 484
3. நான்கு உபவேதங்களுக்கும் ஷெ 485
1. ஆயுர்வேதம் 485
2. தனுர்வேதம் 485

3. சாந்தர்வவேதம் 485

4. அர்த்தவேதம் 485

4. ஆறு வேதாங்கங்கள்

1. அவைகளின் பெயர் 486

2. சிக்ஷை 487

3. கல்பம் 487

4. வியாகரணம் 487

5. நிருக்தம் 487

6. ஜோதிஷம் 487

7. பிங்கள சூத்திரம் 488

5. பதினெண் புராணங்கள், உபபுராணங்கள் 488

6. நியாய வைசேஷிக சூத்திரங்கள் 488

7. மீமாம்சா சாஸ்திரம்

1. பிர்மமீமாம்சை 489

8. தர்மசாஸ்திரங்கள் (490—493)

1. ஸ்மிருதிகள் 490

2. சாங்கிய சாஸ்திரம் 491

3. யோக சாஸ்திரம் 492

4. வைஷ்ணவ கிரந்தம்—பாஞ்சராத்திரம் 493

5. சைவ கிரந்தம்—பாசுபததந்திரம் 493

6. தேவி உபாசனை போதிக்கும் கிரந்தம் 493

9. நிகிர்ஷ்ட மதங்கள்

1. வாமமார்க்கம் 494

2. நாஸ்திகமதம் 495

10. சாஹித்தியாதி இதரக்கிரந்தங்கள் 496

3. முடிவான தீர்மானம் 496

2. தர்க்கதிருஷ்டி வித்வானுடன் கலந்து தன் நிச்சயத்தைப் பரிசோதித்தல் 497

3. தர்க்கதிருஷ்டி பிதாவைப் பார்க்க இச்சித்தல் 498

## IV. சுபசந்ததிராஜாவின் கதை.


1. சுபசந்ததி பண்டிதர்களை அழைத்தல் 499
2. சுபசந்ததியின் கேள்வி 500
3. பண்டிதர்களின் உத்தரம் (501—506)
    1. விஷ்ணு உபாசகன் 501
    2. சிவசேவகன் 502
    3. கணேசபூசகன் 503
    4. தேவிபக்தன் 504
    5. சூரிய உபாசகன் 505
    6. ஸ்மார்த்தமதம் 506
4. ஆறு சாஸ்திரங்களின் பரஸ்பர விரோதத்தன்மை 507


## V. தர்க்கதிருஷ்டி தகப்பனுக்குக் குருவாதல்.


1. தர்க்கதிருஷ்டி தகப்பனை அடைதல் 508
2. தர்க்கதிருஷ்டியின் கேள்வி 509
3. சுபசந்ததியின் உத்தரம் 509
4. தர்க்கதிருஷ்டியின் உபதேசம் (509—516)
    1. காரணப்ரஹ்மம் உபாசிக்கத்தக்கது, காரியப்ரஹ்மம் தள்ளத்தக்கது 509
    2. புராணத்திற்சொல்லியஸ்துதி நிந்தைக்கு அபிப்பிராயம் 510
    3. திருஷ்டாந்தம் 510
    4. ஐந்து தேவதைகளின் உபாசனைக்கும் பலன் ஒன்றே 511
    5. பரமாத்மாவினிடத்தில் நாமரூபங்கள் 512
    6. சகலபுராணங்களின் தாற்பரியம் (513—514)
    7. மூர்த்தி பூஜையின் கருத்து 515
    8. காரணப் ப்ரஹ்ம உபாசனை 516
5. சுபசந்ததியின் கேள்வி-பிரமாணசாஸ்திரம் யாது 518
6. தர்க்கதிருஷ்டியின் உத்தரம்
    1. உத்தர மீமாம்சை பிரமாணம் (519—520)
    2. இதர சாஸ்திரங்கள் அப்பிரமாணம் 521
    3. அந்தகோலாங்கூல நியாயம் 522

7. சுபசந்ததியின் சந்தேகநிவிர்த்தி 523

VI. சுபசந்ததியின் மரணம் 524

VII. தர்க்கதிருஷ்டியின் அந்தம்

1. தர்க்கதிருஷ்டியின் மரணம் 525
2. கிரந்தபிரயோசனம் 526
3. கிரந்தமுடிவு 527
4. மங்கலம்

விஷயசூசக அட்டவணை முற்றிற்று.

ஹரி ஓம் தத்சத்.



உ
சிவமயம்.
ஓம்.
ஸ்ரீ கணேசாயநமஃ.

# விசாரசாகரத்தின்

## * வஸ்துநிர்த்தேசரூப † மங்கல உரை.

சுகமாயும், நித்தியமாயும், பிரகாசமாயும், வியாபகமாயும், நாமரூபங்களுக்காதாரமாயும், ‡ புத்தி யறியாததாயும் புத்தி யறிவதாயும், சுத்தமாயும், அபாரமாயும் இருப்பது எதுவோ அது நான்.

"அது நான்" என்பதனால் மகாவாக்கியத்தின் (443) அர்த்தமான பிரத்திய கபின்ன (அந்தராத்மாவினும் வேறாகாத) பரமாத்மா தனது சொரூபமெனப்பட்டது.

இனி அதன் தனித்தனி விசேஷணங்களைக் கூறுவாம்:—

அது (பிரஹ்மம்) எப்படி யிருக்கிறது ? 1. ‖ "சுக"மாயிருக்கிறது (364), 2. $ "நித்திய"மாயிருக்கிறது(242-355), 3. § "பிரகாச"மாயிருக்கிறது (356), 4. ¶ "வியாபக" மாயிருக்கிறது (364), 5. ** "நாமரூபங்களுக் காதார"மாயிருக்கிறது (149).

மீண்டும் அது (பிரஹ்மம்) எப்படி யிருக்கிறது ?

6. "புத்தியறியாததாயும் புத்தியறிவதாயும்" இருக்கிறது.

(1) இதன் பொருள்:—புத்தி அதனை (பிரஹ்மத்தை) ப் பிரகாசிப்பிக்கிறதில்லை, ஆனால் அது புத்தியைப் பிரகாசிப்பிக்கிறது என்பதாம்.

(2) மற்றோர் பொருள்:—புத்தி, சப்தத்தின் சக்திவிருத்தியினால் (409) பிரஹ்மத்தை யறிகிறதில்லை, சப்தத்தின் லக்ஷணாவிருத்தியால் (409-432-438) அறிகிறது என்பதாம்.

(3) மற்றுமோர்பொருள்:—மலின (மல விக்ஷேப தோஷங்களோடு கூடிய) புத்தி பிரஹ்மத்தை யறிகிறதில்லை, சுத்த (மலவிக்ஷேப தோஷங்க

---

* வஸ்து நிர்த்தேசம் = பொருளியல்புரைத்தல். வஸ்துவென்பது இங்கு நிர்க்குண வஸ்துவாம்.

† மங்கலம் = விக்கினநாசத்திற்கு அநுகூலமான வியாபாரம்.

‡ இந்நூலாசிரியர் ஹிந்திபாஷையின் செய்யுளில் இவ்வாக்கியத்தை இருபொருள்படச் செய்திருத்தலால், அதற்கேற்றபடி இங்கும் 'புத்தியறியாததாயும் புத்தியறிவதாயும்" என்று இருபொருள்பட மொழிபெயர்க்கப்பட்டது.

‖ ஆநந்தம்=பரமப்பிரேமைக்கு விஷயமாவது. $ சத்தியம்.

§ சித்து, சைதன்யம், ஞானஸ்வரூபம்.

¶ வியாபகம் = தேசகால வஸ்துக்களால் அந்தமில்லாதது.

** அதிஷ்டானம், விவர்த்த உபாதானகாரணம்.

ளின்றிய, நான்கு சாதனங்களோடு கூடிய) புத்தி பிரஹ்மத்தை யறிகிறது என்பதாம். இப்பொருளால் சுத்த (நிர்மலமான) புத்தியும் * பலவியாப்தியால் (205) பிரஹ்மத்தை யறிகிறதில்லை, † விருத்திவியாப்தியால் (205) யறிகிறது என்று அறிந்துகொள்ளவேண்டும். இந்த விருத்தியும் தீபமானது அந்நிய பதார்த்தங்களைப் பிரகாசிப்பிக்கிறதுபோலப் பிரஹ்மத்தைப் பிரகாசிப்பதில் சாமர்த்திய முடையதன்று. ஆனால், கடத்தினால் மூடப்பட்டு இருட்டிலிருக்கும் ஒரு இரத்தினமானது தண்டத்தினால் கடமுடைந்தவுடன் தானே பிரகாசிக்கிறதுபோல, "அகம் பிரஹ்மாஸ்மி" என்னும் விருத்தியினால் பிரஹ்மத்தின் ஆவரணரூப (179) அஞ்ஞானம் நீங்கப் பிரஹ்மம் தானே பிரகாசிக்கின்றது. விருத்தி அஞ்ஞானத்தை நிவிருத்திசெய்வதே பிரஹ்மத்தைப் பிரகாசிப்பித்தலெனப்படுகிறது. பிரஹ்மம் தனது பிரகாசத்தில் புத்தி முதலிய வேறு பிரகாசங்களை யபேக்ஷியாமல் எல்லாவற்றையும் பிரகாசிப்பிப்பதாயிருத்தலால், அது "புத்தியறியாததாயும் புத்தியறிவதாயும்" என்னும் வாக்கியத்தால் சுயம்பிரகாசமென்று சித்திக்கிறது.

மற்றும் அது (பிரஹ்மம்) எவ்வாறிருக்கிறது?

7. ‡ சுத்தமாயிருக்கிறது. 8. § அபாரமாயிருக்கிறது

---

* சிதாபாஸனுக்கு விஷயமாந்தன்மையால்.

† கேவல விருத்திக்கு விஷயமாந்தன்மையால்.

‡ மாயையும் அதன்காரியமுமான மலமின்றியதாயிருக்கிறது.

§ பாரமில்லாதது அபாரமெனப்படும். பாரம்=அந்தம். இந்த அந்தம் தேசகால வஸ்து பேதங்களால் மூன்று விதமாம்.

(1) எது எல்லாவிடங்களிலும் வியாபிக்காமல் யாதேனும் ஓரிடத்திலிருக்கிறதோ, அதற்குத் தேசத்தால் அந்தமுண்டு (உ—ம்) கடம்.

பிரஹ்மம் ஓரிடத்தில் இல்லாமல் எங்கும் வியாபித்திருந்தாலும், சர்வதேசமும் பிரஹ்மத்தில் மாயையால் கற்பிக்கப்பட்டிருத்தலாலும் பிரஹ்மத்துக்குத் தேசத்தால் அந்தமில்லை.

(2) எதன் ஜன்மத்துக்கு முன்னும் நாசத்துக்குப் பின்னும் அபாவமுண்டோ அதற்குக் காலத்தால் அந்தமுண்டு. (உ—ம்) சரீராதிகள்.

பிரஹ்மத்துக்கு உற்பத்தி நாசங்க ளில்லாமையினால் நித்தியமாம். ஆதலால் அதற்குக் காலத்தால் அந்தமில்லை.

(3) எந்த வஸ்துவிற்கு அந்நிய வஸ்துக்களோடு பேதம் உண்டாகிறதோ, அந்த வஸ்துவிற்கு வஸ்துவினால் அந்தமுண்டு. (உ—ம்) கடம் வஸ்திரத்துக்கு வேறுபடுதலால் கடத்திற்கு வஸ்திரத்தால் அந்தமுண்டு.

பிரஹ்மத்தில் ஜட சேதனரூப வஸ்துக்களெல்லாம் கற்பிதங்கள். எந்த வஸ்து எதிற் கற்பிதமோ அது அதன் சொரூபமேயாம். மண்ணில் கற்பிதமான கடம் மண் வடிவமாயிருப்பதுபோல் பிரஹ்மத்தில் கற்பிக்கப்பட்டவைகளெல்லாம் பிரஹ்மசொரூபமே. ஆதலால் பிரஹ்மம் எல்லாவற்றின் ஆத்மாவா (சொரூபமா) யிருக்கிறது. எதனால் பிரஹ்மம் எதனினும் வேறுபடுகிறதில்லையோ, அதனால் பிரஹ்மத்திற்கு எந்த வஸ்துவினாலும் அந்தமில்லை.

இவ்வாற்றால் பிரஹ்மம் தேசகால வஸ்துக்களால் அந்தமில்லாததாம்; ஆதலால் அபாரமாம்.

முற்கூறிய பிரஹ்மலக்ஷணத்தின் * பரீக்ஷையைக் காட்டுவோம்:—

1. சுகம்—நித்தியம்:—பிரஹ்மம் "சுக" மாத்திரமா யிருக்கிறதென்று சொல்லும் பக்ஷத்தில், விஷயசுகத்திலும் நியாயமதப்படி (343-363) ஆத்மாவின் ஆநந்தகுணத்திலும் பிரஹ்ம லக்ஷணத்திற்கு † அதிவியாப்தி தோஷம் வருகிறது. அதன் நிவிருத்திக்காகச் "சுக" மென்பதுடன் "நித்திய" மென்பதும் சேர்க்கப்பட்டது.

(1) விஷயாநந்தம் அநித்தியமா யிருக்கின்றது.

(2) நையாயிகர் ஆத்மாவின் ‡ ஆநந்தகுணத்தை அநித்தியமெனக் கொண்டிருக்கிறார்கள்.

இங்குப் பிரஹ்மம் "சுக"மாயும் "நித்திய" மாயு மிருக்கிறதென்று சொல்லப்பட்டிருப்பதால் அவற்றில் அதிவியாப்தி யில்லை.

2. நித்தியம்—பிரகாசம்:—பிரஹ்மத்தைக் கேவலம் "நித்திய" மாகச் சொல்லும்பக்ஷத்தில் நியாய மதத்தில் (343) ஆகாசம் கால முதலியவற்றை நித்தியமாகச் சொல்லியிருத்தலால் அவற்றில் அதிவியாப்தி வரும். அதனை நீக்குதற்குப் பிரஹ்ம லக்ஷணத்தில் "நித்திய" மென்பதுடன் "பிரகாச" மென்பதும் சேர்க்கப்பட்டது. நியாய மதத்தில் ஆகாசாதிகள் நித்தியமாகக் கொள்ளப்படினும், பிரகாச ரூபமாகக் கொள்ளப்படாமல் ஜடமாகக் கொள்ளப்பட் டிருக்கின்றன. இங்குப் பிரஹ்மம் "நித்திய" மாயும் "பிரகாச" மாயு மிருக்கிறதென்று சொல்லப்பட் டிருத்தலால் அம்மதத்தில் அதிவியாப்தி யில்லை.

3. பிரகாசம்—வியாபகம்:—பிரஹ்மத்தைக் கேவலம் "பிரகாச" மாகச் சொல்லும் பக்ஷத்தில்,

(1) சூரியாதிப் பிரகாசங்களில் அதிவியாப்தி யுண்டாகும்.

(2) அல்லது நியாய மதத்தில் அங்கீகரிக்கப்பட்டிருக்கும் (343-357) ஆத்மாவின் ஞானகுணத்தில் அதிவியாப்தி யுண்டாம்.

(3) அல்லது க்ஷணிக விஞ்ஞான வாதிகள் மதத்தில் கொள்ளப்பட்டிருக்கும் (127) க்ஷணிக விஞ்ஞான ரூப ஆத்மாவினிடத்தில் அதிவியாப்தி யுண்டாம்.

அதை நிவிருத்திசெய்யப் பிரஹ்ம லக்ஷணத்தில் "பிரகாச" த்துடன் "வியாபக" மும் சொல்லப்பட்டது.

(1) சூரியாதிப் பிரகாசம் வியாபகமன்று; பரிச்சின்னமாம்.

---

* இலக்ஷித வஸ்துவிற்கு இவ்விலக்ஷணம் சம்பவிக்கிறதா, இல்லையா வென்னும் விசாரம் பரீக்ஷை.

† ஒரு வஸ்துவின் லக்ஷணம் மற்றோர் வஸ்துவிலும் இருத்தல் அதிவியாப்தி தோஷமாம்.

‡ குணம் யாதோ அது அநித்தியமேயா மென்பது நியமம்.

(2) நையாயிகர் ஆத்மாவின் ஞானகுணத்தை வியாபகமாகக் கொள்ளாது, பரிச்சின்னமாகக் கொண்டிருக்கின்றனர்.

(3) அங்ஙனமே க்ஷணிக விஞ்ஞானவாதிகள் க்ஷணிக விஞ்ஞானத்தை வியாபகமெனக் கொள்ளாது, பரிச்சின்னமாகக் கொள்ளுகின்றனர்.

இங்குப் பிரஹ்மம் "பிரகாச" மாயும் "வியாபக" மாயு மிருக்கிறதென்று சொல்லப்பட்டிருத்தலால் அதிவியாப்தி யில்லை.

4. வியாபகம்—நாமரூப ஆதாரம்:—பிரஹ்மம் கேவலம் "வியாபக" மாய் இருக்கிறதென்று சொல்லும் பக்ஷத்தில்,

(1) * ஆகாசாதிகளும் வியாபகமா யிருத்தலின் அவற்றில் அதிவியாப்தி யுண்டாம்.

(2) நியாயப் (345) பிரபாகரர் ஆத்மாவை விபுவெனக் கொண்டிருக்கின்றனர்; அதில் அதிவியாப்தி யுண்டாகும்.

(3) சாங்கிய மதத்தில் பிரகிருதியை வியாபகமெனக் கொண்டிருக்கின்றனர்; அதில் அதிவியாப்தி யுண்டாம். அதை நிவிருத்திசெய்யப் பிரஹ்ம லக்ஷணத்தில் "வியாபக" த்துடன் "நாமரூபங்களுக் காதார" மென்பதும் சேர்க்கப்பட்டது.

(1) ஆகாச முதலியன வியாபகமாயினும் நாமரூபங்களுக் காதாரமாகா.

(2) அங்ஙனமே நையாயிகரும் பிரபாகரரும் ஆத்மாவை விபுவெனக் கொண்டாலும் நாமரூபங்களுக் காதாரமாகக் கொள்ளவில்லை.

(3) சாங்கிய மதத்தில் பிரகிருதியை வியாபகமெனக் கொண்டிருக்கின்றனர். ஆனால் நாமரூபங்களுக் காதாரமெனக் கொள்ளவில்லை.

இங்குப் பிரஹ்மம் "வியாபக"மாயும் "நாமரூபங்களுக் காதார" மாயுமிருக்கிறதென்று சொல்லப்பட்டிருத்தலால் அவற்றில் அதிவியாப்தி யில்லை.

5. **நாமரூப ஆதாரம்—சுயம்பிரகாசம்:**—பிரஹ்மத்தைக் கேவலம் "நாமரூபங்களுக் காதார" மாகச் சொல்லும் பக்ஷத்தில் † பிராதிபாஸிக சர்ப்ப முதலியவற்றின் நாமரூபங்களுக்கு ஆதாரம் ரஜ்ஜு முதலியனவாம்; அவற்றில் அதிவியாப்தியுண்டாகிறது. அதனை நீக்குதற்குப் பிரஹ்மத்தின் இலக்ஷணத்தில் "நாம ரூபங்களுக்கு ஆதார" மென்பதுடன் "புத்தி யறியாததாயும் புத்தி யறிவதாயும் ‡ (சுயம்பிரகாசம்)" என்பதும் சேர்க்கப்பட்டது.

"நாமரூபங்களுக் காதார" மென்னும் ஒரு விசேஷணத்தினாலேயே எந்த மதத்தின் எப்பதார்த்தத்திலும் பிரஹ்மத்தின் இலக்ஷணத்திற்கு அதி

* ஆகாசாதிகளின் வியாபகத்துவம் ஆபேக்ஷிகமாம். (172-பார்க்க.)

† தோற்ற மாத்திரம், கற்பிதம். 315-வது பிரிவைப் பார்க்க.

‡ இதற்குச் சுயம்பிரகாசமென்னும் பொருள் 2-வது பக்கத்தில் பெறப்பட்டது.

வியாப்தி தோஷமுண்டாகாது. அன்றியும் வேதாந்த மதத்தில் (136) ரஜ்ஜுவாதி ஸ்தலங்களிற் கற்பித சர்ப்பாதிகளின் நாம ரூபங்களுக்கு ஆதாரமாக ரஜ்ஜு உபஹித சைதன்னியமே அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது; ரஜ்ஜுமுதலியன அங்கீகரிக்கப்படவில்லை. என்றாலும், இவ்விடத்தில் ரஜ்ஜுவாதிகளை நாமரூபங்களுக் காதாரமாகக் கூறி அதிவியாப்தி நிவாரணஞ் செய்தது ஸ்தூல திருஷ்டியினாற் செய்ததாம்.

6. சுயம்பிரகாசம்—சுத்தம்:—பிரஹ்மத்தைக் கேவலம் "சுயம்பிரகாச" மென்று சொல்லும் பக்ஷத்தில்,

சில உபாஸகர்களது மதத்தில் ஆத்மாவைச் சுயம்பிரகாசமாகக் கொண்டிருக்கிறார்கள்; அதில் அதிவியாப்தியுண்டாம்.

அதனை நீக்குதற்குப் பிரஹ்மலக்ஷணத்தில் "சுயம்பிரகாச" த்துடன் "சுத்த" மென்பதுஞ் சேர்க்கப்பட்டது.

அவ்வுபாசகர்களது மதத்தில் ஆத்மா ஸ்வயம்பிரகாசமாயும் அவித்தையாதி மலத்தோடு கூடியதாயு மிருப்பதாகச் சொல்லப்பட்டிருத்தலால், "சுயம்பிரகாச" மென்பதோடு "சுத்த" மென்பதைச் சேர்ப்பதனால் அதிவியாப்திதோஷம் நிவிருத்தியாய்விடுகிறது.

7. சுத்தம்—அபாரம்:—பிரஹ்மத்தைக் கேவலம் "சுத்த" மென்று சொல்லும் பக்ஷத்தில், சாங்கிய மதத்தில் (342) ஆத்மா சுத்தமென்று சொல்லப்பட்டிருத்தலால் அதிவியாப்தியுண்டாம். அதனை நீக்குதற்குப் பிரஹ்மலக்ஷணத்தில் "சுத்த" த்துடன் "அபார" முஞ் சேர்த்துச் சொல்லப்பட்டது. சாங்கியமதத்தில் ஆத்மாவைச் சுத்தமெனக் கொள்ளினும் அபாரமெனக் கொள்ளவில்லை. சாங்கிய மதத்தில் ஆத்மா தேசகாலங்களால் அந்தமுடையதன்றாயினும் வஸ்துவினால் அந்தமுடையதாம். ஆதலால் முற்றும் அபாரமன்று. ஈண்டுப் பிரஹ்மம் "சுத்த" மாயும் "அபார" (தேசகால வஸ்து பரிச்சின்னரகித) மாயு மிருக்கிறதென்று சொல்லப்பட்டிருத்தலால் அதில் அதிவியாப்தி யில்லை.

முற்கூறிய பிரஹ்ம லக்ஷணங்களில் சுகம்—நித்தியம், நித்தியம்—பிரகாசம் என்னும் இரண்டு இரண்டு விசேஷணங்களாலேயே அதிவியாப்திதோஷம் நிவிருத்தியாவதா யிருந்தாலும், பிரஹ்மத்தை யறியவேண்டுமென்னும் இச்சை யுள்ளவர்களுக்கு அந்த விசேஷணங்களின் ஞானமுண்டாகுக, அல்லது அநேக விதமாகப் பிரஹ்ம லக்ஷணத்தின் ஞானமுண்டாகுக என்னும் நிமித்தத்தால் அதிக விசேஷணங்கள் சொல்லப்பட்டன. முற்கூறிய விசேஷணங்களோடு கூடிய பிரஹ்மம் யாதோ "அதுவே நான்" என்பது மங்கலாசரணத்தின் * தாற்பரியம். (1)

* ஜீவப்பிரம ஐக்கியமான கிரந்தத்தின் விஷயம் இந்த மங்கலாசரணத்தினால் சூசனை செய்யப்படுகிறது.

## ஆக்ஷேப சமாதானங்கள்.

1-வது ஆக்ஷேபம்:—விஷ்ணு சிவன் முதலிய தேவதைகளின் ஸ்மரண ரூபமான மங்கலத்தைச் செய்யவேண்டும். அத்தேவதைகளை விட்டுத் தனது ஸ்மரணரூப மங்கலத்தைச் செய்வது சரியன்று.

சமாதானம்:—எனது (பிரத்தியகாத்மாவின்) ஸ்வரூபம் சமுத்திரம் போல அபாரமா யிருக்கிறது. அதில் விஷ்ணு, சிவன், பிரஹ்மா, சூரியன், சந்திரன், வருணன், யமன், சக்தி, குபேரன், கணபதி என்பவர்களால் உப லக்ஷிதமான (516) சகல தேவதைகளும் அலைகளாக இருக்கிறார்கள். ஆத லால் எனது ஸ்மரணரூப மங்கலத்தால் சகல தேவதைகளின் மங்கலமும் செய்ததாகிறது. ஆதலால் தனது மங்கலத்தையே செய்தலில் ஓர் அநுசிதமு மில்லை. (2)

2-வது ஆக்ஷேபம்:—விஷ்ணு சிவன் முதலிய தேவதைகளை (மாயாவிசி ஷ்ட சேதனமான ஈசுவரனது அலைகளாகச் சொல்லலாம்; உமது சொரூபத் தின் (பிரத்தியகாத்மாவின்) அலைகளாகச் சொல்லலாகாது. ஆதலால் ஈசுவர னது மங்கலத்தைச் செய்தல்வேண்டும். விருக்ஷத்தின் மூலத்தில் விடப்பட்ட ஜலத்தினால் கிளை முதலியன திருப்தி யடைவதுபோலும், பிராணனுக்கு ஆகாரம் கொடுப்பதனால் இந்திரியாதிகள் திருப்தி யடைவதுபோலும் ஈசுவர னது மங்கலத்தினால் சர்வ தேவதைகளின் மங்கலமும் சித்திக்கிறது; உம் முடைய (பிரத்தியகாத்மாவின்) மங்கலத்தினால் சகல தேவதைகளின் மங்கல மும் சித்திக்கிறதில்லை.

சமாதானம்:—கிருபையை யுடையவரும் சர்வஞ்ஞருமான எந்த ஈசுவரனை முநிகள் இருதயத்தில் தியானஞ் செய்கிறார்களோ அந்த ஈசுவரன் மாயோ பாதியினால், ரஜ்ஜுவிற் சர்ப்பம்போலும் சொப்பனத்திற் பட்டணம்போலும் என் சொரூபத்தில் மித்தையாகவே விளங்குகிறார். எந்த வஸ்து எதனிடத் திற் கற்பிக்கப்படுகிறதோ, அந்தக் கற்பித வஸ்து அதிஷ்டான ரூபமேயா மென்னும் நியம மிருத்தலால் எனது ஸ்மரணரூப மங்கலத்தினால் ஈசுவராதி சகல தேவதைகளின் மங்கலமும் சித்திக்கிறது. ஆதலால் என் சொரூப வடிவ மங்கலமே உசிதமாம். (3)

3-வது ஆக்ஷேபம்:—ஈசுவரன் சுத்தப் பிரஹ்மத்தில் கற்பிதர்; உமது சொரூபத்தில் கற்பிதரல்லர். ஆதலால் நிர்க்குணப் பிரஹ்மத்தின் மங்கலம் செய்யத்தக்கது. அதன் மங்கலத்தால் சகல தேவதைகளின் மங்கலமும் சித் திக்கும்; உமது மங்கலத்தினால் சித்திக்கமாட்டாது.

சமாதானம்:—கயிற்றையறியாததினாற் சர்ப்பப்பிரதீதியுண்டாவதுபோல, எதனை (பிரஹ்மத்தை) யறியாததினால் இந்த ஜகத்தின் பிரதீதி யுண்டாகின் றதோ, கயிற்றை யறிவதினாற் சர்ப்பம் நிவிருத்தியாவதுபோல, எதனை (பிர ஹ்மத்தை) யறிவதினால் இந்த ஜகத்து நிவிருத்தியாகிறதோ, அந்த அதிஷ்

டானரூப சுத்தப் பிரஹ்மமாகிய நான் தானேதானு யிருக்கிறேன்; 'தானே தானய்' என்று சொன்னதினுல் அம்சாம்சிபாவம், விகாரவிகாரி பாவம், உபாஸக உபாஸியபாவம் முதலிய எவ்விதத்தாலும் எனக்கும் பிரஹ்மத்துக் கும் சிறிதும் பேதமில்லை யென்பதும்; பேதமின்மையினுல் காரியத்தன்மை ரூபம், பிரகாசியத்தன்மைரூபம், ஆதேயத்தன்மைரூபம் என்னும்* மூன்றுவித பாதந்திரத் தன்மைகளும் இல்லாதவன் யான் என்பதும் சூசிக்கப்பட்டன. ஆதலால் எனது (பிரத்தியகாத்மாவின்) மங்கலமே சுத்தப் பிரஹ்மத்தின் மங்கலமாம். (4)

௫-வது ஆக்ஷேபம்:—உங்கள் பாம்பரைக் குருவாகிய தாதூஜீயவர்கள் சம்பிரதாயத்தின் இஷ்ட தேவதையாகிய ஸ்ரீராமசந்திரனை நமஸ்காரம் செய் வது யுக்தம்.

சமாதானம்:—எந்த ராமசந்திரனை யறிகிறதற்காகச் சுகிருத புருஷர் கள் ஆசையின்றிச் சற்கருமங்களைச் செய்கிறுர்களோ, அந்த ராமசந்திரன் (தாதுதயாலஜீயின் சம்பிரதாயத்தில் ராமரானவர் நிர்க்குணப் பிரஹ்ம சொரூபமா யிருத்தலின்) என் சொரூபமாகவே இருத்தலால் நான் யாரை நமஸ்கரிப்பேன்? என்னை விட வேறு வஸ்து இல்லாததினுல் நான் யாரை யும் நமஸ்காரஞ் செய்ய வேண்டியதில்லை என்பது கருத்து. அல்லது எந்தப் பிரஹ்மத்தை யறியும் விருப்பத்தால் சுகிருத புருஷர்கள் ராமசந்திரனை நிஷ்காமமாய்ப் பஜிக்கிறுர்களோ, அந்தப் பரப்பிரஹ்மம் என் சொரூபமா யிருத்தலால் நான் யாரை நமஸ்கரிப்பேன்? எனக்குப் பின்னமாக வேறெ ன்று மில்லவேயில்லை; நான் யாரை நமஸ்காரம் செய்வேன் என்பது தாற் பரியம். (5)

வஸ்துநிர்த்தேசரூபமங்கல உரை முடிந்தது.



* காரணத்தின் அதீனமாதல், பிரகாசத்தின் அதீனமாதல், ஆதாரத்தின் அதீன மாதல் என்பன மூன்றுவித பரதந்திரத் தன்மைகளாம்.




ஓம்.

ஸ்ரீ கணேசாயநம:.

# ஸ்ரீ விசாரசாகரம்.

முதலாவது தரங்கம்.

## அநுபந்த சாமாந்திய நிரூபணம்.

### 1. வஸ்துநிர்த்தேசரூபமங்கலம்.

1. சுகமாயும், நித்தியமாயும், பிரகாசமாயும், வியாபகமாயும், நாம ரூபங்களுக் காதாரமாயும், புத்தி யறியாததாயும் புத்தி யறிவதாயும், சுத்த மாயும், அபாரமாயும் இருப்பது எதுவோ, அது நான்.

2. அபாரமான எனது சொரூப சமுத்திரத்தில் விஷ்ணு, சிவன், பிரஹ்மா, சூரியன், சந்திரன், வருணன், இயமன், சக்தி, குபேரன், கணேசன் என்பவர்கள் அலைகளாயிருக்கின்றார்கள்.

3. எந்தக் கிருபாநிதியாகிய சர்வஞ்ஞை முநிகள் இருதயத்திற் கொண்டு தியானஞ் செய்கின்றார்களோ, அவர் என்னிடத்தில் உபாதியினால் மித்தையாக விளங்குகின்றார்.

4. எதனை யறியாததினால் பழுதையிற் பாம்புபோல ஜகத்துத் தோன்றுகின்றதோ, எதனை யறிவதனால் அப்பாம்புபோல ஜகத்து நசித்துப் போகின்றதோ அந்தநான், தானேதான்.

5. புண்ணியவான்கள் எந்த ராமனை ஞானவிருப்பத்தால் நிஷ்காமமாகப் பஜிக்கின்றார்களோ, அந்த ராமன் எனது ஆத்மாவா யிருத்தலால் யான் யாரை நமஸ்கரிப்பேன்? (1.)

### 2. கிரந்தமகிமை. 2-3.

வேதாந்த சித்தாந்த மென்னுஞ் ஜலத்தால் நிறைந்து மிகவும் ஆழமா யிருக்கின்ற * "விசாரசாகரம்" என்னும் நூலைச் சொல்லுகின்றேன்.

---

* பூர்வபக்ஷி சித்தாந்திகளாலேனும், குரு சிஷ்யர்களாலேனும் செய்யப்படும் ஜடம் சேதன முதலிய பதார்த்தங்களின் நிர்ணயத்திற்கு விசாரமென்று பெயர். இங்கு விசார சப்தத்திற்கு விடாத லக்ஷணையினால் பூர்வபக்ஷி முதலியோர்களால் நிர்ணயிக்கப்பட்ட அர்த்தமாகிய விசாரத்தின் விஷயமும் கொள்ளப்படும். அவ்விசாரத்தின் விஷயமான நிர்ணயிக்கப்பட்ட அர்த்தமே சித்தாந்தமாம். ஆதலால்,

1. பிரதிவாதி அல்லது சிஷ்யனாகிய வாயுவினாற் பிரேரிக்கப்பட்ட சித்தாந்தி அல்லது குரு மேகமாம்.

இதனைத் * தீரனானவன் விசாரித்து (குருமுகமாகச் சிரத்தை பக்தியுடன் கேட்டு மனனஞ்செய்து) சொரூபத்தின் சாக்ஷாத்காரரூப அபரோக்ஷ ஞான வாயிலாக அவித்தையாதி யனர்த்தங்களின் நிவிருத்தி பூர்வகமாய்ப் பரமா நந்தத்தை அடைவான். † சூத்திரம் ‡ பாஷியம் ¶ வார்த்திக § முதலிய ஸம்ஸ்கிருத கிரந்தங்கள் அநேகம் இருந்தாலும், அந்த ஸம்ஸ்கிருத நூல்களால்

---

2. அதனாலுண்டாகியது விசாரமாகிய ஜலத்தின் மழையாம்.
3. அதனோடு அதன் விஷயம் வேதத்தின் சித்தாந்தமாகிய ஜலமாம்.
4. அது சாகரத்தைப்போல் விஸ்தீரணமா யிருத்தலின் இந்நூல் சாகரமாம்.

ஆதலால் இது விசாரசாகர மெனப்படுகின்றது.

1. இதன் ஆதிமுதல் அந்தபரியந்தமான வர்ணங்களின் சமஷ்டிவடிவம் பூமியாம்.
2. இதன் கண் முற்கூறிய வேதத்தின் சித்தாந்தமாகிய ஜலம் நிறைந்திருக்கின்றது.
3. இதற்கு ஏழு பிரகரணங்களான தரங்க மென்னும் அலைகளுள.
4. இதில் கடினப் பிரசங்கமாகிய மகரங்களும்,
5. சுத்த சொரூபத்தின் நிர்ணயமான மணி மாணிக்க முதலியனவும்,
6. விவேகாதி சாதனவடிவப் பதினொன்று இரத்தினங்களு மிருக்கின்றன.
7. இதனைக் கடத்தற்கு ஜிஞ்ஞாசுவின் புத்தி ஓடம்.
8. அப்பியாசம் நல்ல காற்று.
9. பிரஹ்மநிஷ்டராகிய குரு மாலுமி.
10. இதற்குச் சம்சாரமாகிய கு (தீய) தேசத்தோடு சம்பந்தமுடைய அஞ்ஞானம் இக்கரை.
11. மோக்ஷவடிவ சுதேசத்தோடு சம்பந்தமுடைய ஞானம் அக்கரை.
12. இதனைச் சிரத்தையோடு படித்தலாகிய கடத்தற்கு மோக்ஷவடிவ சுதேசத்தின் பிராப்தி பயனும்.

இத்தன்மையதாய் இவ்விசாரசாகர மென்னும் நூலிருக்கிறது.

* 'தீ' என்பது புத்தி, அதனை 'ர' என்பது விஷயங்களினின்றும் இரக்ஷித்தல். இத்தன்மைய பிரஹ்மசரிய முதலிய சாதனங்களோடு கூடிய அதிகாரி இங்குத் "தீர" னெனப்படுகிறான்.

† சொற்ப அக்ஷரங்களை யுடையதும், சந்தேகமில்லாத சாரத்தை யுடையதும், எங்கும் பிரவிருத்தியாவதும், எதனாலுந் தடுக்கப்படாததும், தோஷமில்லாததுமாயுள்ள வாக்கியம் எதுவோ அது சூத்திரமெனப்படும். இத்தன்மைய சூத்திரங்களின் சமுதாய வடிவ ஷட் (ஆறு) சாஸ்திர முதலிய அநேக கிரந்தங்கள் இருக்கின்றன. அவற்றுள் இங்கு வேத வியாசராற் செய்யப்பட்ட 555 பிரஹ்ம சூத்திர வடிவ உத்தர மீமாம்ஸா சாஸ்திரம் "சூத்திர" சப்தத்தால் கிரகிக்கத்தக்கதாம்.

‡ சூத்திராதிரூப மூலக்கிரந்தங்களிலுள்ள பதங்களைக்கொண்டு அவற்றிற்குப் பரியாயமான தனது பதங்களைக்கூறி, பின்னர் மூலத்துள்ள பதங்களை யநுசரித்த பதங்களால் தனது பதங்களை விவரித்தல் (விசேஷமாக வர்ணித்தல்) "பாஷிய" மெனப்படும். இப்படிப்பட்ட பாஷியங்கள் அநேகமுள. அவற்றுள் இங்கு ஸ்ரீ சங்கராசாரியராற் செய்யப்பட்ட பாஷியம் கிரகிக்கத்தக்கது.

¶ மூலகிரந்தகாரரால் சொல்லப்பட்டனவும், சொல்லப்படாதனவும், விருத்தமாகச் சொல்லப்பட்டனவுமாகிய அர்த்தங்களின் சிந்தனமான விசாரம் எதன்கண் இருக்கிறதோ, அத்தன்மைய சுலோகரூபமான வியாக்கியானத்திற்கு "வார்த்திக"மென்றுபெயர். அப்படிப்பட்ட வார்த்திகங்களும் அநேகமுள. அவற்றுள் இங்கு ஸ்ரீ சங்கராசாரியருடைய சிஷ்யரான மண்டனமிசிரரென்னும் ஸ்ரீ சுரேசுவராசாரியரால் செய்யப்பட்ட வார்த்திகம் கிரகிக்கத்தக்கது.

§ முதலியவென்னும் சப்தத்தால் உபநிஷத்துக்கள் பகவத்கீதை முதலிய அநேக கிரந்தங்கள் கிரகிக்கத்தக்கனவாம்.

மந்தபுத்தியுடைய புருஷர்களுக்குப் போதமுண்டாகிறதில்லை. * தமிழ்நூல்க ளால் மந்தபுத்தியுடைய புருஷர்களுக்கும் போதமுண்டாகும். ஆதலால் நூலை ஆரம்பித்தல் நிஷ்பலமன்று. ஸம்ஸ்கிருத நூல்களை விசாரித்தற்குப் புத்தி சாமர்த்தியமில்லாத † மந்தமதியுடைய அஞ்ஞானிகளின்பொருட்டு இத் தமிழ்நூலை யாரம்பித்தல் ஸபலமாம் (பிரயோஜனமுடையதாம்). (2.)

3. தமிழ்நூல்க ளனேக மிருந்தாலும் விசாரசாகரமொழிந்த மற்றத் தமிழ் நூல்களால் ஆத்மவஸ்துவிலுள்ள சந்தேகங்கள் நிவிருத்தியாகா. இதில் இது ஏதுவாம்:—

1. சிலர் சிரவணஞ்செய்து தமிழ்நூல்களைச் செய்திருக்கிறார்கள். அவற்றின் விஷயம் சில அம்சங்களில் மாத்திரம் சாஸ்திர அநுசாரமாயும், கேட்ட அர்த்தம் ‡ சரியாகக் கிரகிக்கப்படாத அமிசங்களில் சாஸ்திர விருத்தமாயும் இருக்கும். ஆகையாற் கேள்வியுடையோராற் செய்யப்பட்ட தமிழ் நூல்களினால் சந்தேகமின்றிய போத முண்டாகிறதில்லை.

2. வேறு சிலர் சொற்பசாஸ்திரம் படித்துத் தமிழ் நூல்களைச் செய் திருக்கிறார்கள். அவற்றில் வேதாந்தார்த்தம் பூர்ணமாகச் சொல்லப்படாததி னால் அவற்றினாலும் சந்தேகமின்றிய போத முண்டாகிறதில்லை.

இந்த விசாரசாகர கிரந்தத்திலோ விஷயங்கள் பூர்ணமாயும் வேதாந்தசாஸ் திராநுசாரமாயும் எவ்விடத்திலும் விருத்தமில்லாமலு மிருக்கின்றன. ஆத்ம ஞானத்தில் உபயோகமுள்ள பதார்த்தங்கள் விஸ்தாரமாகவும் நிரூபிக்கப் பட்டிருக்கின்றன. ஆதலால் இதற்குச் சமானமாக வேறு தமிழ் நூல்க ளில்லை; எல்லாத் தமிழ்நூல்களினும் இது உத்தமமானதாம். (3.)

---

* இந்நூலாசிரியர் ஹிந்திபாஷா கிரந்தமெனக் கூறியுளராயினும், இங்குத் தமிழில் மொழிபெயர்க்கப் புகுந்தமையின் தமிழ்நூலெனக் கூறவேண்டியதாயிற்று.

† மந்தமதியுடைய அதாவது சம்ஸ்கிருத கிரந்தங்களை விசாரித்தலில் அற்ப புத்தி யுடைய அஞ்ஞானி (சொரூபத்தை யறியாதவர்) களின்பொருட்டு இத்தமிழ்நூலை ஆரம் பித்தல் என்றதனால் "சம்ஸ்கிருதத்தில் அற்ப மதியுடைய சொரூபத்தின் அஞ்ஞானி இத்தமிழ்நூலுக்கு அதிகாரி" யெனப்பட்டது.

இவ்விலக்கணத்தின் பரீக்ஷை இதுவாம்:—

1. தமிழ் சம்ஸ்கிருதம் என்னும் இரண்டிலும் அற்பமதியுடைய அஞ்ஞானிகளோ பாமரர்களும் விஷயிகளுமாகிய அநேகஜீவர்க ளிருக்கின்றார்கள். அவர்கள் மூர்க்கர்களாக யிருத்தலின் தங்களை அஞ்ஞானிகளென்று மதிக்காது, ஞானிகளென மதித்திருக்கின் றனர். ஆதலால் அறிதல் வேட்கையின்மையின், விவாகத்தில் அநதிகாரியாகிய ஷண்ட (ஆண்மையில்லாத) புருஷனைப்போல அவர்கள் கிரந்தத்தில் அதிகாரிகளாகார்.

2. சம்ஸ்கிருதத்தில் அற்பமதியையுடையவர்களோ சிலர் தமிழ் உணர்ச்சியுடை யோராய் ஞானிகளாயு மிருக்கிறார்கள். அவர்கள் தமிழ் நூலில் அற்பமதி யுடைய ரல்லர். ஆதலால் அறியும்விருப்ப மின்மையின் கிரந்தத்தில் அதிகாரிகளல்லர்; முக்த ராவர்.

3. அஞ்ஞானிகளோ சிலர் (பாமரர், அல்லது விஷயிகள், அல்லது ஜிஞ்ஞாஸுக் கள்) சம்ஸ்கிருத முணர்ந்தவர்களாயு மிருக்கின்றார்கள். அவர்கள் அற்பமதி யுடையவர்க ளல்லராகலின், தமிழ்நூலில் அதிகாரிகளல்லர்.

ஆதலால் முற்கூறிய லக்ஷணம் தோஷமின்றியதாம்.

‡ இந்திரியத்தின் அல்லது சித்தத்தின் சஞ்சலத்தன்மையினால் சிரவணம் செய்யப் பட்ட அர்த்தம் பூதாக்கினியைப்போல உள்ளவாறு தாரணஞ் செய்யப்படாத.

## 4. அநுபந்தத்தின் பெயர்.

அதிகாரி, சம்பந்தம், விஷயம், பிரயோஜனம் என்பவற்றிற்கு * அநுபந்த மென்று பெயர். அதிகாரிமுதலிய கிரந்தத்தின் அநுபந்தத்தை யறியாவிடின், விவேகிக்குக் கிரந்தத்திற் பிரவிருத்தி யுண்டாகாது. ஆதலால் எவ்வநுபந்தத்தை யறிதலால் அதிகாரி இந்நூலைக் கேட்பானோ, அவ்வநுபந்தத்தை இப்போது சொல்லுகிறேன். (4.)

## 5. அதிகாரிவர்ணநம். 5-23.

அந்தக்கரணத்தில் மூன்று தோஷங்களுண்டு:—1. ஒன்று † மலம், 2. மற்றையது விக்ஷேபம், ௩. மூன்றாவது ஆவரணம்.

1. நிஷ்காமகர்மத்தினால் அந்தக்கரணத்தின் மலதோஷம் நீங்கும்.

2. உபாசனையினால் விக்ஷேபதோஷம் நீங்கும்

3. ஞானத்தினால் ஆவரணதோஷம் நிவர்த்தியாகும்.

எவனுக்கு நிஷ்காம கர்ம உபாசனைகளால் மலவிக்ஷேபங்கள் நிவர்த்தியாகிச் சொரூபத்தை மறைக்கும் அஞ்ஞானமாத்திரம் சித்தத்திலிருக்

* வீடு நாலு கால்களின்றி நிற்காது. அதுபோல சகல கிரந்தங்களும் நான்கு அநுபந்தங்களின்றியிரா. அவற்றைத் தெரிந்துகொண்டாலன்றி விவேகிக்குக் கிரந்தத்திற் பிரவிருத்தியுண்டாகாது. ஆதலால் கிரந்தாரம்பத்தில் இவற்றைச் சொல்ல வேண்டியது அவசியம். தன்னை (அநுபந்தத்தை) யறிந்த பிறகு எது முமுக்ஷுவைக் கிரந்தத்தோடு சம்பந்தப்படுத்துகிறதோ அது அநுபந்தமாம்.

† ஸ்தூலதேகத்தில் வாதம் பித்தம் கபமென்று மூன்று தோஷங்கள் உண்டு. அவற்றை நிவர்த்திக்கத் தன்வந்திரிமுதலியோர் ஆயுர்வேதத்தைச் செய்திருக்கின்றனர். அதுபோல அந்தக்கரணத்திலும் மலம் விக்ஷேபம் அஞ்ஞானமென்று மூன்று தோஷங்களுண்டு. அவற்றை நிவர்த்திக்கக் கர்மகாண்டம் உபாஸனாகாண்டம் ஞானகாண்டமென்னும் மூன்று காண்டங்களோடு கூடிய நாலுவேதங்கள் பரமேசுவரனாற் செய்யப்பட்டிருக்கின்றன.

1. மலம் என்பது பாவம். அப்பாவம் ஜன்மாந்தரங்களிற்செய்யப்பட்ட அசுபகர்மங்களாலுண்டாகிய அதர்மம், அபூர்வம், அதிருஷ்டம் என்னும் பெயர்களோடுகூடிய சம்ஸ்காரரூபமா யிருத்தலால் அதிருக்ஷமமா யிருக்கிறது; ஆதலால் பிரத்தியக்ஷமாகிறதில்லை. அங்ஙனமாயினும் அசுபவாசனையால் அஃது அநுமிக்கப்படுகிறது. நிஷித்த கர்மத்திலாவது விஷயத்திலாவது எவனுக்கு இச்சையுண்டாகின்றதோ, அவனுடைய சித்தத்தில் அசுபவாசனை யிருக்கின்றது. அதனால் அவன் "மலதோஷத்தோடுகூடியவ" னென்று அநுமானிக்கப்படுகின்றான். இதனை நிவர்த்திக்க நிஷ்காமகர்மம், பூததயை, ஈசுவர நாமோச்சாரணம் என்பவை உபாயங்களாம். இவற்றில் முதல் இரண்டு உபாயங்களும் மலத்தை மாத்திரம் போக்கும். நாமோச்சாரணம் விக்ஷேபத்தையும் போக்கும்.:

2. சித்தத்தின் சஞ்சலத்தன்மைக்கு விக்ஷேபமென்று பெயர். எவனுடைய சித்தம் வேதாந்தத்தின் சிரவணமுதலியவற்றிலாவது மகா வாக்கியத்தின் அர்த்தமாகிய தனது சொரூபத்திலாவது ஸ்திரமாய் நிற்காமல் அந்நியவிஷயங்களில் பிரமிக்கிறதோ அவன் சித்தம் சஞ்சல முடையதாம். இதனாலேயே அவன் விக்ஷேபதோஷத்தோடு கூடியவனென் றறியப்படுகின்றான்.

கிறதோ, எவன் நான்கு சாதனங்களோடு கூடியவனு யிருக்கிருனே அப் புருடன் * அதிகாரியாவன். (5.)

## 6. நான்கு சாதனங்களின் வர்ணநம். 6-14.

1. விவேகம், 2. வைராக்கியம், 3. சமாதிஷட்சம்பத்தி, 4. முமுக்ஷுத்துவம் என்பவை சாதனங்களாம். (6.)

## 7. (1.) விவேகலக்ஷணம்.

1. ஆத்மா நாசமின்றியதும் கிரியையின்றியதுமாம்.

2. ஜகத்து நாசமுள்ளதும் கிரியையுடையதுமாம்.

இவ்வாறு அறிதலே † விவேகம் என்பர்.

இவ்விவேகமே எல்லாச் சாதனங்களுக்கு மாதாரமாம். ஏனெனின் முதலில் விவேகமுண்டாகுமாயின், பின் வைராக்கியாதி மற்றச் சாதனங்களுமுண்டாம். விவேகமுண்டாகாவிடின் மற்ற மூன்றும் உண்டாகா. ஆதலால் வைராக்கியம், சமாதிஷட்சம்பத்தி, முமுக்ஷுத்துவம் என்பவற்றிற்கு விவேகம் ‡ ஏதுவாம். (7.)

---

இதனை நிவர்த்திக்க (1) ஈசுவர நாமோச்சாரணம், அஜபாமந்திரோச்சாரணம், ஈஸ்வரமூர்த்தித் தியானம் அல்லது நிர்க்குணப் பிரஹ்மசிந்தன முதலிய உபாசனைகள் செய்யத்தக்கனவாம். ஏனெனின் உபாசனையால் சித்தம் ஏகாக்கிரமாக விக்ஷேபதோஷம் நிவிருத்தியாகிறது. (2) அல்லது ஈசுவரபுத்தியாகக் குருவைச் சரீரம், வாக்கு, மனம், தனம் என்பவைகளாற் சேவைசெய்யின், அச்சேவை கர்மோபாஸனைக ளின்றியே சித்தத்திற்குச் சுத்தியையும் ஏகாக்கிரத் தன்மையையும் கொடுக்கும். (3) அல்லது மந்தமான ஞானவிருப்பினுலும் பிரீதியுடன் வேதாந்த சிரவணத்திலாவது அப்பியாசத்திலாவது பிரவிருத்தித்தலும் கர்மோபாஸனைக ளின்றியே சித்தத்துக்குச் சுத்தியையும் ஏகாக்கிரத் தன்மையையுங் கொடுக்கும்.

3. பிரஹ்மரூப ஆத்மாவை நான் அறியேன் என்னும் வியவகாரத்திற்கு ஏது அஞ்ஞானம். இது தத்துவஞானத்தால் நிவர்த்தியாகும்.

* பிரகஸ்பதிசவனம் என்னும் யாகத்துக்குப் பிராஹ்மணனும், ராஜசூய யாகத்துக்கு க்ஷத்திரியனும், ஸோம யாகத்துக்கு வைசியனும் எப்படி யதிகாரிகளோ, அப்படியே வேதாந்த விசாரத்துக்கு நான்கு சாதனங்களோடும் கூடினவன் அதிகாரியாவன்.

† அன்னமானது நீரையும் பாலையும் பிரிப்பதுபோல, ஆத்மாவையும் அநாத்மாவையும் திடமாக விசாரித்தல் (பிரித்தறிதல்) விவேகம். இவ்விவேகமாத்திரத்தால் ஜகத்து மித்தையென்னும் பரோக்ஷஞான முண்டாகுமேயன்றி அபரோக்ஷஞான முண்டாகாது. ஆதலால் மற்றச் சாதனங்களும் வேண்டும்.

‡ சங்கை:—பிறரை வெல்லும் விருப்பினர்களாகிய பண்டிதர்களுக்கும் "ஆத்மா நித்தியம்; ஆத்மாவிற் கந்நியமான தேகாதிப் பிரபஞ்சவடிவ அநாத்மா அநித்தியம்" என்னும் வடிவினதாகிய பேதஞான மென்னும் விவேக முண்டாயிருக்கின்றது. ஆனுல் அது ஏன் அவர்களுக்கு வைராக்கியாதி பிற்சாதனங்களுக்கு ஏதுவாகிறதில்லை.

சமாதானம் :—அப்பண்டிதர்களுக்குச் சாஸ்திராப்பியாசத்தினுல் விவேகஞான முண்டாயினும், அது நிஷ்காம கர்ம உபாசனைகளால் சுத்தியின்றிய மலின அந்தக்கரணமாகிய தேசத்தி லுண்டாகின்ற தாகலின்,

1. வேறிடத்தினின்றும் பெயர்த்துச் சலசம்பந்தமின்றிய பாலைநிலத்தில் நடப்பட்ட கதலி விருக்ஷத்தினைப்போல, வைராக்கியமுதலிய பிற்சாதனவடிவ (பக்க) விருக்ஷ

## 8. (2) வைராக்கிய லக்ஷணம்.

பிரஹ்மலோக பரியந்தமான போகங்களில் இச்சையுண்டாகாமல் அவ்ற்றை விடுதலே * வைராக்கியமா மென்று வேதார்த்தத்தை யறிந்த முனிகள் சொல்லுகின்றார்கள். (8.)

## 9. (3) சமாதி ஆறன்பெயர். 9-13.

சமம், தமம், சிரத்தை, சமாதானம், உபரதி, திதிக்ஷை யென ஆறும். (9.)

## 10. [1-2] சமதமலக்ஷணம்.

(1) மனதை விஷயங்களினின்றும் தடுத்தலை நல்லதீரர் † சம மென்பர்.

---

பரம்பரைக்கு ஏதுவாகிறதில்லை. ஆனால் அந்த விவேகம் சித்திர அங்கதனைப்போலும், சித்திர அமுதத்தைப்போலும், சித்திர அக்கினியைப்போலும் சொன்மாத்திரத்தா லாகியதா யிருத்தலின் அவிவேகமேயாம்.

2. சுத்தியுள்ள அந்தக்கரண தேசத்தில் உதயமாகிய விவேகம் ஜலமும் ரசமுமுள்ள (சதுப்பு) நிலத்தில் நடப்பட்ட கதலி விருக்ஷத்தினைப்போல வைராக்கியாதி பிற்சாதன வடிவ பிறவிருக்ஷங்களின் பரம்பரைக்கு ஏதுவாகின்றது. ஆதலால் சுத்தசித்தமாகிய பூமியில் உதயமாகிய விவேகம் வைராக்கியத்திற்கு அசாதாரண காரணமாம். வைராக்கியம் ஷட்சம்பத்திக்கு அசாதாரணகாரணமாம். இவ்வாற்றால் பின்பின் சாதனங்களுக்கு முன்முன் சாதனங்கள் நிமித்தகாரணமாம். சுத்த அந்தக்கரணமாகிய பூமி எல்லாவற்றிற்கும் உபாதானகாரணமாம்.

ஆதலால் சித்தசுத்தி பூர்வகமான விவேகம் முமுக்ஷுக்களால் அவசியம் சம்பாதிக்கத்தக்கதாம்.

* வைராக்கியமாவது தியாகஞ்செய்யும் இச்சை, அல்லது இச்சையில்லாமை. இது 1 யதமானம். 2 வியதிரேகம். 3 ஏகேந்திரியம். 4 வசீகாரம் என நாலுவகையாம்.

1. யதமானம் என்பது மந்தவிவேகம்.

2. வியதிரேகம்:—கீரியானது நகுலக்கொடியை யாசிரயித்துப் பாம்புடன் சண்டையிடுவதுபோல் சத்சங்கத்தின் ஆசிரயத்தால் துர்க்குணத்தை விடுதலிலும், நற்குணத்தைக் கொள்ளுதலிலும் உண்டாகும் உற்சாகம் வியதிரேகமாம்.

3. இந்திரிய நிக்கிரகமே ஏகேந்திரியம்,

4. மனோநிக்கிரகமே வசீகாரம். இது (1) மந்தம், (2) தீவிரம், (3) தீவிரதரமென மூவகையாம்.

(1) புத்திரதனாதி நாசத்தால் சம்சாரத்தை வெறுக்கும் புத்திவிருத்தி மந்தமாம்.

(2) இந்த லோகத்தில் புத்திராதி சம்பந்தத்தா லுண்டாகும் சுகத்தை இச்சியாமலிருப்பது தீவிரம்.

(3) புனராவிருத்தி யுண்டென்பதை யறிந்து சர்வலோகங்களின் இச்சையு மில்லாமலிருப்பது தீவிரதரம்.

இவற்றில் ஞானத்துக்குக் காரணம் தீவிரதர வசீகார வைராக்கியமாம். இதனையே ஜிஞ்ஞாஸு சம்பாதிக்கவேண்டும்.

† தோஷதிருஷ்டியாகிய அங்குசத்தால் மனதாகிய யானையைச் சுவாதீனப்படுத்துவது சமம்.

(2) இந்திரியங்களை விஷயத்திற் செல்லவிடாமற் றடுப்பதனைத் * தம மென்பர். (11.)

## 11. [3-4] சிரத்தை சமாதானலக்ஷணம்.

(3) † சிரத்தை வேதகுரு வாக்கியங்களில் விசுவாசம்வைப்பது. (12.)

(4) ‡ சமாதானம் மனது சலியாமல் ஸ்திரமாய் நிற்பது. (13.)

## 12. [5] உபராமலக்ஷணம்.

---

* தோஷதிருஷ்டி பூர்வகமாய்ச் சாஸ்திரசிந்தனையாகிய சாட்டையால் சப்தாதி விஷயவடிவ மார்க்கத்தில் போகும் இந்திரியங்களாகிய குதிரைகளைச் சுவாதீனஞ் செய்தல் தமம். இரசப்பூச்சின்றிய கண்ணாடியில் முகத்தைப் பார்க்கும்போது நேத்திர விருத்தி வெளியிற் சென்றுவிடுகின்றது. அதுபோல இந்திரியவாயிலை விஷயங்களி னின்றும் தடுத்தலாகிய தமமின்றி மனதின் நிரோதமாகிய சமம் சித்தியாது. கடிவாள த்தைப் பிடித்தாலன்றிக் குதிரை யடங்காததுபோல மனதின் நிரோதமாகிய சமமின்றி இந்திரியங்களின் நிரோதமாகிய தமம் சித்தியாது. ஆதலால் இச்சமதமங்களுக்கு ஒன் றற்கொன்று அபேக்ஷையுண்டு.

அங்ஙனமே எல்லா ஷட்சம்பத்திகளுக்கும் ஒன்றற்கொன்று அபேக்ஷையுண்டு. அதுமேல் 8 வது பக்கம் § விளக்கவுரையில் நிரூபிக்கப்படும்.

† எவனுக்கு ஈசுவரன் குரு முதலியவர்களிடத்தில் பூஜ்யபுத்தியால் பிரீதிரூப பக்தியுண்டாகிறதோ, அவனுக்கு வேதம் சாஸ்திரம் குரு என்பவர்களின் வசனங்களில் சிரத்தை யுண்டாகிறது ஆகையால் சிரத்தை பக்தியை அபேக்ஷிக்கிறது. இந்தக் கிரந்தத் தில் மூன்றுவதாகச் சொல்லப்பட்ட சிரத்தை சில கிரந்தங்களில் ஆறுவதாகச் சொல் லப்பட்டிருக்கிறது.

(1) சர்வசாதனங்களின் சம்பத்தியாகிய தயிர்கடைதலின் சாமக்கிரியில் சிரத்தை கடைதற் பாத்திரமாம். அது பங்கமானால் சகல சாதனங்களும் வியர்த்தமாகும்.

(2) அல்லது சகல சாதனங்களின் சம்பத்தியாகிய விருக்ஷத்திற்குச் சிரத்தை பழமாம். அது நாசமானால் சகல சாதனங்களும் வியர்த்தமாகும்.

சிரத்தையிருந்தால் மற்றச் சகல சாதனங்களும் ஸபலமாம். ஆதலால் ஞானத்தின் சகல சாதனங்களிலும் சிரத்தை முக்கிய சாதனமாம். அது குஸங்கம் (தீநட்பு) முதலிய நாச நிமித்தங்களினின்றும் இரக்ஷிக்கத்தக்கதாம்.

சாதன சம்பத்தியாகிய தயிர் கடைதற் சாமக்கிரியின் உருவகம் ஸ்ரீ போதரத்னா கரமென்னும் நூலின் முதல் ரத்தினத்திலும், இச்சாதன சாமக்கிரியாகிய விருக்ஷத்தின் உருவகம் ஸ்ரீ பாலபோதினியென்னும் உரையோடு கூடிய பாலபோதத்தின் முதல் உபதேசத்திலும் விஸ்தாரமாய் எழுதப்பட்டிருக்கின்றன.

‡ பிரஹ்மரூப லக்ஷியத்தில் சித்தம் ஏகாக்கிரமாயிருப்பது சமாதானம். முன் அதிகாரிலக்ஷணத்தில் உபாசனையால் விக்ஷேபதோஷம் நீங்கிச் சித்த ஏகாக்கிரத்தன்மை யுண்டாயிருக்க வேண்டியதென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் இவ்விரண்டு சித்த ஏகாக்கிரத்தன்மைகளுக்கும் வித்தியாசம் யாதெனின்; முதலாவதுசகுணப்பிரஹ்மத்தின் அல்லது மூர்த்தியின் உபாஸனையால் உண்டாவது; இரண்டாவது நிர்க்குணப் பிரஹ்ம த்தினிடத்தில் இருப்பது.

(5) * உபராமமாவது † சாதனசகித சகல கர்மங்களையும் விட்டு விஷமாக எண்ணி விஷயங்களைவிட்டோடுதலும், ‡ ஸ்திரீயை வெறுத்தலுமாம். (14.)

## 13. [6] திதிக்ஷையின் லக்ஷணம்.

(6) ¶ திதிக்ஷையாவது சீதோஷ்ணம் பசிதாகமுதலிய துவந்துவங்களைச் சகிப்பது திதிக்ஷையாமெனப் பண்டிதர்களாகிய $ முனிவரவிறைவர் கூறுவர். இச்சமமுதலிய § ஆறும் ஒரே சாதனமாக வெண்ணப்படுகின்றன. ஆதலால் விவேகிகள் சாதனங்கள் ஒன்பதாகா, நான்கேயாமென்று சொல்லுவர். (15.)

---

* தியாகஞ்செய்தபின் அடையப்பட்ட விஷயத்தில் மறுபடியும் இச்சை யுண்டாகாமலிருப்பது வைராக்கியத்தின் பயனாகிய உபராமமாம். இதனையே உபரதியென்றும் விடலென்றும் கூறுவர். இதுவே மீண்டும் போகங்களில் அதீனமாகாதிருத்தல் வடிவினதாகிய வைராக்கியத்தின் பயனும். அடையாத விஷயங்களில் தோஷதிருஷ்டி பூர்வகமாய் இச்சையில்லாமலிருப்பது வைராக்கியம்.

† ஸ்திரீ, தனம், ஜாதி, அபிமானம் முதலிய கர்மத்தின் சாதனங்களோடு.

‡ இங்கு "விஷயங்களை விட்டோடுதல்" என்பதனாலேயே ஸ்திரீ முதலிய சகல விஷயங்களிலும் அருவருப்புக் காட்டப்பட்டது. மீண்டும் நாரியாகிய விஷயத்தில் அருவருப்பைக் கூறுதலால் புநருக்தி (கூறியது கூறல்) என்னும் தோஷ முண்டாகின்றது. என்றாலும் பல ஜன்மங்களில் செய்த ஸ்திரீசங்கத்தின் சம்ஸ்காரம் தீவிரமாயிருத்தலாலும், ஸ்திரீயினிடத்தில் சப்தம் ஸ்பரிசம் ரூபம் ரசம் கந்தம் மைதுன மென்னும் ஆறு விஷயங்களும் மிகுதியாய்ப் பெறப்படுதலாலும், மற்றவிஷயங்களினும் ஸ்திரீ விஷயம் பிரபலமாம். ஆதலால் அதனிடத்தில் அதிக அருவருப்பைச் செய்தல்வேண்டு மென்னும் அபிப்பிராயத்தால் அதனை மீண்டும் கூறியதாமாகலின், அது ஈண்டுக் கூறியது கூறலென்னும் தூஷணமாகாது பூஷணமேயாம்.

¶ சிரவணாதிப் பிரசங்கங்களில் அவைகளுக்கு விரோதமான சீதோஷ்ணம் பசிதாகம் முதலியவைகளைச் சகித்தல் திதிக்ஷை. இஃது இல்லாவிடின் சிரவணாதி காலங்களில் பசிதாகம் முதலியவைகள் சம்பவிக்கும். அப்போது அவற்றை நிவிர்த்திக்க மனது பிரவர்த்திக்கும். அதனால் சிரவணாதிகளுக்கு விக்கினமுண்டாகும். ஆதலால் திதிக்ஷை (சகித்தல்) அவசியம் வேண்டும்.

$ முனி = சந்நியாசி; அவர்களில் வரர் = சிரேஷ்டர்களாவார் வித்துவத்ஸந்நியாசிகள்; அவர்களுக்கு இறைவர் = ஆசாரியர். அவர்கள் ஈண்டுமுனிவரவிறைவர் எனப்படுவர்.

§ சரீரரூபரதத்திற்கு இந்திரியங்கள் குதிரைகள், மனம் கடிவாளம், புத்தி சாரதி, ஆத்மா எஜமானன். எவனுடைய சாரதி சரியாயிருக்கிறானோ, அவனுடைய இந்திரியங்களென்னும் குதிரைகள் நன்மார்க்கத்திற் சென்று, எஜமானனை ஸ்வர்க்கம் அல்லது மோக்ஷம் என்னும் இடத்திற் சேர்ப்பிக்கும். சாரதி தவறுடையவனாயின், இந்திரியங்கள் என்னும் குதிரைகள் தவறான வழியிற் சென்று எஜமானனை நரகத்திற் கொண்டு சேர்ப்பிக்கும். ஆதலால் முமுக்ஷுவானவன் தனது புத்தியாகிய சாரதி தனக்குத் தோற்றியவண்ணம் நடவாமலும், இந்திரியங்களாகிய குதிரைகள் நன்மார்க்கத்திற் செல்லும்படியாகவும் செய்யவேண்டியது. இவ்விடத்தில் புத்தியாகிய சாரதியை வசப்படுத்துதல் சமம் எனப்படும். இந்திரியங்களாகிய குதிரைகளை வசப்படுத்துதல் தம

## 14. (4.) முமுக்ஷுத்துவ லக்ஷணம்.

*பிரஹ்மப்பிராப்தியும் அநர்த்த நிவிருத்தியும் மோக்ஷத்தின் சொரூபமாம்.*

மெனப்படும். புத்தியும் இந்திரியங்களும், சாரதியின் அதீனத்திற் குதிரைகளும், குதிரைகளின் அதீனத்தில் சாரதியுமிருப்பதுபோல் இருக்கின்றன.

சுவர்ணத்தாற் செய்யப்பட்ட அநேக மணிகளையுடைய மாலை ஒரு பூஷணமாக எண்ணப்படுவதுபோல, சமதமாதிகள் வெவ்வேறு யிருந்தாலும் பரஸ்பரம் சகாயத்தை அபேக்ஷித்தலால் அவை ஆறும் ஒரு சாதனமாக எண்ணப்படுகின்றன. சமாதியாறும் பரஸ்பரம் சாதனமாதல் வருமாறு:—

1. (1) மனதை யடக்குதலாகிய சமமின்றி இந்திரியங்க ளடங்கா. ஆகலின் தமம் சமத்தை யபேக்ஷிக்கிறது.

(2) மனவடக்கமின்றிப் பகிர்முகமாகிய (ஸ்திரீ புத்திராதி விஷயங்களில் பற்றுடைய) மனதிற்கு வேதாந்த சாஸ்திரத்திலும் சற்குருவினிடத்திலும் பூர்ண சிரத்தையிராது. ஆதலால் சிரத்தையும் சமத்தை யபேக்ஷிக்கிறது.

(3) மன நிரோதமின்றிப் பிரஹ்மத்தில் சித்தம் ஏகாக்கிரத்தன்மையை யடையாது. ஆதலால் சமாதானமும் சமத்தை யபேக்ஷிக்கிறது.

(4) பால்முதலிய உத்தம ஆகாரத்தால் வளர்க்கப்பட்ட கட்டின்றிய பூனை எலியைக் கண்டவுடன் நிற்காமல் அதன்பேரில் பாய்வதுபோல், விஷயங்களினின்றும் உபரதியடைந்த மனதும் நிரோதமென்னும் கயிற்றால் கட்டப்படாததாயின், நிற்காமல் கிடைத்த விஷயங்களில் பாயும். ஆதலால் உபரதியும் சமத்தை யபேக்ஷிக்கிறது.

(5) அந்தர்முகமான மனதினால்தான் சீதோஷ்ணாதி துவந்துவங் (இருமை)களைச் சகிக்கமுடியும்; பகிர்முகமான மனதால் சகிக்கமுடியாது. ஆதலால் திதிக்ஷையும் சமத்தை யபேக்ஷிக்கிறது.

இவ்வாற்றால் தமாதிகள் ஐந்திற்கும் சமம் சககாரியாம் (சகாயமாம்.)

2. (1) அஞ்சனமே இரசப்பூச்சின்றிய கண்ணாடியில் நேத்திரவிருத்தி தடுக்கப்படாததுபோல, இந்திரியவாயிலைத் தடுத்தலின்றி மனம் தடுக்கப்படுகிறதில்லை. ஆதலால் சமம் தமத்தை யபேக்ஷிக்கிறது.

(2) உருவமுதலிய விஷயங்களில் பற்றுள்ளவனுக்குச் சற்குரு சற்சாஸ்திரங்களில் சிரத்தையிரா தாகலின் சிரத்தையும் தமத்தை யபேக்ஷிக்கிறது.

(3) இந்திரிய நிக்கிரகமின்றிச் சஞ்சலமடைந்த மனதில் ஏகாக்கிரத்தன்மை நிலைக்கிறதில்லை. ஆகலின் சமாதானமும் தமத்தை யபேக்ஷிக்கிறது.

(4) இந்திரியங்களை யடக்காவிடின், பிரத்தியக்ஷமாய் அநுபவிக்கப்பட்ட அநுகூல விஷயங்களில் இராகத்தின் புலப்பட்ட சம்ஸ்காரவாயிலாக இச்சை யுண்டாம். ஆதலால் உபரதியும் தமத்தை யபேக்ஷிக்கிறது.

(5) இந்திரிய நிரோதமின்றி விஷயங்களைக் காண்பதினால் சஞ்சலப்படும் மனது சீதோஷ்ணாதிகளைச் சகியாது. ஆதலால் திதிக்ஷையும் தமத்தை யபேக்ஷிக்கிறது.

அதன் * தீவிரமான இச்சை முமுக்ஷுத்துவ மெனப்படும். (16.)

விவேகாதிகள் நான்கும், சிரவண, மனன நிதித்தியாஸன மென்னும் மூன்றும், தத்துவம் பதார்த்தங்களின் † சோதன மொன்றுமாகிய எட்டும் ஞானத்துக்குச் சாதனங்க ளெனப்படும். (17.)

---

இவ்வாற்றால் சமமுதலியவற்றிற்குத் தமம் சககாரியாம்.

3. அங்ஙனமே சற்குரு சற்சாஸ்திர வசனங்களில் விசுவாசமாகிய சிரத்தை யின்றிச் சிரவணத்திற் பிரவிருத்திக்கும் இச்சையின்மையால் பதியினிடத் துச் செல்லுவதில் உபயோகியான சிங்காரத்தை விதவையணியாததுபோலச் சிரவணத்தில் உபயோகியான சமமுதலிய எச்சாதனத்தையும் புருஷன் தரி யான். சிரத்தையின்றித் தரிக்கப்பட்ட சகல சாதனங்களும் விதவையினாற் செய்யப்பட்ட சிங்காரத்தைப்போல வியர்த்தமாம். ஆதலால் சமமுதலிய சகல சாதனங்களும் சிரத்தையை அபேக்ஷிக்கின்றன. இவ்வாற்றால் சிரத்தை சம முதலிய சகல சாதனங்களுக்கும் சககாரி யென்பது வெளிப்படையாம்.

4. அங்ஙனமே சித்த ஏகாக்கிரத்தன்மையின்றிச் சமாதிசாதனங்கள் சித்திக்க மாட்டா. ஆதலால் சமமுதலியன சமாதானத்தை யபேக்ஷிக்கின்றன. இவ் வாற்றால் சமமுதலியவற்றிற்குச் சமாதானம் சகாயமாம்.

5. அங்ஙனமே விஷயங்களினின்றும் சித்தம் உபரதி யடையாதாயின் சமமுதலி யன சித்திக்கமாட்டா. ஆதலால் சமமுதலியன உபரதியை யபேக்ஷிக்கின்றன. இவ்வாற்றால் சமமுதலியவற்றிற்கு உபரமம் சகாயமாம்.

6. அங்ஙனமே சீதம் உஷ்ணம், பசி தாகம், லாபம் நஷ்டம் முதலிய அநேக வியவ காரத்தாலுண்டாம் உபத்திரவங்களைச் சகித்தலின்றி மனநிரோதம், இந்திரிய நிரோதம், குருசாஸ்திர வசனங்களில் விசுவாசம், சித்தத்தின் ஏகாக்கிரத் தன்மை, அடையப்பட்ட தனுதி விஷயங்களில் உபரதி என்னும் இவை உண்டாகா. ஆதலால் சமாதிகள் திதிக்ஷையாகிய தவத்தையும் அபேக்ஷிக் கின்றன. இவ்வாற்றால் சமமுதலியவற்றிற்குத் திதிக்ஷை சகாயமாம்.

இவ்விதமாகச் சமமுதலியன பரஸ்பரம் சகாயமாகின்றன. ஆதலால் இவை ஆறும் ஒரே சாதனவடிவமாம்.

* தீவிரமென்பது பசியுள்ளவன் அன்னத்தைத் தேடுவதுபோலும், நெருப்பில் அகப் பட்டவன் ஜலத்தைத் தேடுவதுபோலுமாம். இந்த முமுக்ஷுத்துவம் எல்லாச்சாதனங் களுக்கும் முன்னரே யுண்டாகின்றது. ஏனெனின் "பிரயோஜனத்தைக்கருதாமல் மந்த னும் ஒன்றிற் பிரவர்த்தியான்" என்பதனால் மந்தமான மோக்ஷரூபபலத்தின் இச்சை யில்லாவிட்டால் நிஷ்காம கர்மத்தில் ஒருவனுக்கும் பிரவிருத்தி யுண்டாகாது. ஆதலால் மந்தமான மோக்ஷ இச்சை எல்லாச் சாதனங்களுக்கும் முன்னரே இருக்கவேண்டி யது. ஆனால் அப்போது அது தீவிரமாயிராது. மற்றச் சாதனங்கள் சித்தித்தபின் அவ் விச்சை தீவிரமாகின்றது. அத்தீவிர இச்சைதான் சிரவணாதிகளிற் பிரவிருத்தியுண்டா கும்படி செய்கின்றது.

† சேதனத்துக்கும் ஜடத்துக்கும் முறையேயுள்ள காரணகாரியத்தன்மை அதிஷ்டான அத்தியஸ்தத்தன்மை திருஷ்டா திருசியத்தன்மை சாக்ஷிசாக்ஷியத்தன்மை என்பவற்றைச் சாஸ்திரத்திற் கூறியபடி விசாரித்தல் அதாவது அன்னம் பாலையும்

## 15. அந்தரங்க பகிரங்க சாதனங்கள் 15-16.

1. முற்கூறிய விவேகாதிகளெட்டும் * அந்தரங்க சாதனங்களாம்.

2. யஞ்ஞாதிகர்மங்கள் † பகிரங்கஸாதனங்களாம்.

அவற்றில் ஜிஞ்ஞாசுவானவன் பகிரங்கத்தைவிட்டு ‡ அந்தரங்கத்தைத் கொள்ளவேண்டியது.

1. எவற்றிற்குச் சிரவணத்திலாவது ஞானத்திலாவது பிரத்தியக்ஷபயனிருக்கிறதோ அவை அந்தரங்கசாதனமாம்.

விவேகாதிகள் நான்கும் சிரவணத்துக்குச் சாதனமா யிருக்கின்றன. ஏனெனின்,

---

நீரையும் பிரிப்பதுபோலும், அல்லது வெண்ணெயையும் மோரையும் பிரிப்பதுபோலும், மண்ணையும் கிணற்றாகாயத்தையும் பிரிப்பதுபோலும் பிரிப்பதே பதார்த்தசோதனையாம். வேதாந்த சாஸ்திரத்திற் சொல்லப்பட்ட சகலப் பிரக்கிரியைகளுக்கும் இப்பொருளை யறிவித்தலிலேயே தாற்பரியமாம். இவ்வர்த்தமே மகாவாக்கியார்த்த ஞானத்தில் உபயோகியாம். ஆதலால் முற்கூறிய பதார்த்த சோதனம் முமுக்ஷுவினால் செவ்வையாய்ச் செய்யத்தக்கதாம்.

* தனுசினின்று விடுபட்ட பாணமானது லக்ஷியத்தை (குறியை)த் துளைப்பதிற் சமீபித்த சாதனமாகுதலால் அதுஅதன் அந்தரங்கசாதனமாம். அதுபோல விவேகாதிகள் எட்டும் ஞானத்தின் சமீபித்த சாதனமாயிருத்தலின் ஞானத்தின் அந்தரங்கசாதனங்களெனப்படுகின்றன.

† தனுசு தூரத்திலிருப்பதாய் லக்ஷியத்தைத் துளைத்தற்குப் பாணத்தை விடுதல் வாயிலாகச் சாதனமாயிருத்தலால், அது அதற்குப்பகிரங்கசாதனமாம். அதுபோல யஞ்ஞமும், ஸகுணோபாஸனை முதலிய கர்மங்களும் ஞானத்துக்குத் தூரத்திருப்பனவாய், பாவமும் விக்ஷேபமுமான மலங்கள் இயன்றவாறு ஒழிதலாகிய சித்தசுத்தியைக் கொடுத்தலோடு ஞான விருப்பத்தை யுண்டாக்குதல்வாயிலாகச் சாதனங்களா யிருக்கின்றன. ஆதலால் அவை ஞானத்தின் பகிரங்கசாதனங்களாம்.

‡ இவற்றில் அந்தரங்கசாதனத்தைச் சம்பாதித்தபின் பகிரங்கத்தை விடவேண்டியது. கிணற்றில் விழுந்தபுருஷன் முதலில் மரவேர் முதலிய ஏதேனும் ஓராதாரத்தைப் பிடித்துக்கொள்ளுகிறான். பின் அவனை வெளிப்படுத்துவதற்கு இரக்கமுள்ள ஓர் புருஷன் கயிற்றை விடின், அப்போது அவன் தான் முன்பற்றியிருந்ததைவிட்டுக் கயிற்றைப் பிடிக்கின்றான். அவ்வாறு கயிற்றைப் பிடிக்காமல் தான் முன் பிடித்திருந்த ஆதாரத்தையும் விட்டுவிடுவானாயின் அக்கிணற்றிலேயே மூழ்குவன்.

அங்ஙனமே ஜனனமரணமென்னும் ஜலத்தோடுகூடிய சம்ஸாரமாகிய கிணற்றில் விழுந்த ஜீவன் சாதுசங்கமுதலிய நிமித்தத்தா லடையப்பட்ட சுபவாசனையினால் கர்ம உபாசனைகளிற் பிரவர்த்திக்கின்றான். எப்போது ஈசுவரனாகிய தயையுடைய புருஷனது கிருபையினால் சித்தசுத்தி பூர்வகமான ஞானவிருப்பமுதலிய சாதனங்களின் அடைவுண்டாகின்றதோ, அப்போது அந்தப் புருஷன் ஞானவிருப்புடையோனாய்க் கர்மமாகிய பகிரங்க சாதனத்தைவிட்டு விவேகமுதலிய அந்தரங்க சாதனத்தைச் சித்தத்தில் தரிக்கின்றான். ஆனால் அந்தரங்க சாதனத்தை யடைதலின்றிப் பகிரங்க சாதனத்தை விடுவானாயின், இந்தச் சீவன் உபயப்பிரஷ்ட (இரண்டினின்றும் நழுவியவ) னாய்ச் சம்சாரமாகிய கிணற்றில் மூழ்குவன்.

(1) விவேகாதிகளின்றிய பகிர்முக புருஷனுக்குச் சிரவணம் சித்திக்கிற தில்லை.

(2) அங்ஙனமே சிரவணமனன நிதித்தியாசனங்களுக்கு ஞானத்தில் உபயோகமிருக்கின்றது. சிரவணாதிகளின்றி ஞானமுண்டாகிறதில்லை.

(3) அங்ஙனமே தத்பதார்த்த துவம்பதார்த்தங்களின் ஞானமின்றியும் அபேதஞான முண்டாகிறதில்லை.

இவ்வாறு விவேகாதி நான்கு சாதனங்களும் சிரவணத்திலும், சிரவணாதி நான்கு சாதனங்களும் ஞானத்திலு முபயோகப்படுதலால் அவ்வெட்டும் அந்தரங்கசாதனங்களாம்.

**16.** 2. எந்தச் சாதனத்துக்குச் சிரவணமாவது ஞானமாவது பிரத்தியக்ஷ பயனுகிறதில்லையோ, அந்தக்கரணசுத்தி எதற்குப் பயனுகிறதோ, அது ஞானத்துக்குப் பகிரங்கசாதன மெனப்படுகின்றது. இத்தன்மையன யஞ்ஞாதி கர்மங்களாம்.

யஞ்ஞாதி கர்மங்கள் சம்சாரத்துக்குச் சாதனமா யிருத்தலின், அவற்றால் அந்தக்கரணசுத்தி யுண்டாமென்று கூறுதல் பொருந்தா தாயினும், அவை * ஸகாமபுருஷனுக்குச் சம்சாரத்துக்கு ஹேதுவாயும், நிஷ்காமபுருஷனுக்கு அந்தக்கரண சுத்திக்கு ஹேதுவாயு மிருக்கின்றன. இவ்வாறு நிஷ்காமபுருஷனுக்கு அந்தக்கரணசுத்தி வாயிலாக ஞானத்துக்கு ஹேதுவா யிருத்தலால் யஞ்ஞாதிகள் பகிரங்கஸாதனங்க ளெனப்படுகின்றன.

விவேகாதிகள் அந்தரங்கஸாதனங்க ளெனப்படுகின்றன. பகிரங்க மென்பது தூரத்தது. அந்தரங்க மென்பது சமீபத்தது. யஞ்ஞாதி கர்மங்களையும்

---

* ஒருவர் இரஸாயன முணர்ந்தவராய் ஸ்தானதானங்களுடைய ஸாதுவாயிருந்தார். அவர் தமது சிஷ்யனைச் சமீபத்தில் உட்காரவைத்து, உருக்கியதாமிரத்தில் ஓர் பச்சிலையின் இரசத்தைப் பிழிந்து இரஸாயனம் செய்து காட்டினர். பின்னர்த் தாம் அநேக வருஷங்கள் வரையில் தீர்த்தயாத்திரை செய்துகொண்டிருந்தார். அப்போது அச்சிஷ்யனது கையினால் இரஸாயனம் செய்யப்படவில்லை; உண்மையானவழி தடைபட்டது. அந்தக் குருவானவர் மீண்டும் திரும்பிவந்தபோது சிஷ்யனை நோக்கி "தாமிரத்தில் இப் பச்சிலையின் இரசத்தினையே நேரான கையினால் விடுவதனால் இரஸாயன முண்டாகாது; தரித்திரத்தன்மையே யுண்டாகும். தலைகீழாகப் பச்சிலையின் இரஸத்தைப் பிழிவதனால் அல்லது வேறு சேர்க்கையினால் இரஸாயனமுண்டாம்; தரித்திரத்தன்மை நீங்கிவிடும்" என்றனர். அப்போது அவன் அவ்வாறே செய்து சித்திபெற்றான்.

அங்ஙனமே சாஸ்திரமாகிய குரு ஜீவனுக்குச் சித்தசுத்தியாகிய இரஸாயனம் சித்திக்கும்பொருட்டு அறிவிக்கப்பட்ட கர்மம் எதுவோ, அது காமத்தால் (இச்சையோடு) செய்யப்பட்டதாய்ச் சித்தசுத்தியாகிய இரஸாயனத்திற்கு ஏதுவாகாது, சம்ஸாரமாகிய தரித்திரத்தன்மைக்கு ஏதுவாகின்றது. இக்கர்மமே நிஷ்காமத்தன்மையாற் செய்யப்பட்டதாய்ச் சித்தசுத்தியாகிய இரஸாயனத்திற் கேதுவாய்ச் சம்ஸாரமாகிய தரித்திரத்தன்மையை நீக்குகின்றது. இங்கு அநுபான பேதத்தால் ஔஷதத்தின் குணம் வேறுபடுதலும் திருஷ்டாந்தமாம்.

அவற்றிற்குச் சாதனமான ஸ்திரீ தன புத்திராதிகளையும் தியாகம் செய்பவன் ஞானதிகாரியாவன். ஞானதிகாரியிடத்தில் யஞ்ஞாதிகள் சம்பவியாமையால் தூரத்திருப்பனவாம். (19.)

## 17. விவேகாதிகள் அந்தரங்க சாதனமாமாறு.

விவேகாதிகள் ஞானதிகாரியிடத்திற் சம்பவித்தலால் சமீபத்தவாம். அவற்றிலும் இவ்வளவு பேதமுண்டு:—* விவேகாதிகள் சிரவணத்தி லுபயோகப் படுகின்றன. † சிரவணதிகள் ஞானத்தி லுபயோகப்படுகின்றன. ஆதலால் விவேகாதிகளை யபேக்ஷித்துச் சிரவணதிகள் அந்தரங்கமாயும், சிரவணதிகளை யபேக்ஷித்து விவேகாதிகள் பகிரங்கமாயு மிருக்கின்றன. எல்லாக் கிரந்தங்களிலும் விவேகாதிகளையும் அந்தரங்கஸாதனமாய்ச் சொல்லிப் பகிரங்கமாய்ச் சொல்லாவிடினும், விவேகாதிகளுக்கு ஞானத்திற்குச் சாதனமான சிரவணத்தில் பிரத்தியக்ஷ பயனுண்டு. சிரவணதிகளைப்போல விவேகாதிகளும் ஜீஞ்ஞாசுவாற் கொள்ளத்தக்கனவாம்; யஞ்ஞாதிகளைப்போலத் தள்ளத்தக்கனவன்று; ஆதலால் விவேகாதிகள் அந்தரங்க மெனப்படுகின்றன; யஞ்ஞாதிகளை யபேக்ஷித்தும் அந்தரங்கமாம்; இதனுலும் அந்தரங்க சாதனங்களிற் சொல்லப்படுகின்றன. (20.)

## 18. ஞானத்தின் முக்கிய அந்தரங்க சாதனங்களான (மகாவாக்கிய) சிரவண மனன நிதித்தியாசனங்களின் இலக்ஷணம்.

விசாரித்துப் பார்க்குமிடத்து ஞானத்துக்கு முக்கியமான அந்தரங்க சாதனங்கள் "தத்துவமஸி" முதலிய மகாவாக்கியங்களாம்; சிரவணதிகளுமன்று. ஏனெனின்,

‡ 1. யுக்தியினுல் வேதாந்த வாக்கியத்தின் தாற்பரியத்தை நிச்சயஞ் செய்வது சிரவணமென்று சொல்லப்படுகின்றது. (21.)

---

* வேதாந்தசாஸ்திர சிரவணம் நீண்டகாலம் நிரந்தர ஆதரவோடு கூடியதாயிருத்தலால், விவேகாதி நான்குசாதனங்களின்றிப் பகிர்முகமாகிய புருஷனுக்கு இடையின்றிய சிரவண முண்டாகாது. சிரவணமின்றி மனனநிதித்தியாசனங்களு முண்டாகிறதில்லை. ஆதலால் மனனநிதித்தியாசனங்களுக்கு ஏதுவாகிய சிரவணத்தில் விவேகாதி நான்கு சாதனங்களின் உபயோக (பல) மிருக்கின்றது.

† சிரவணதிகளின்றித் திடஞான முண்டாகாதாகலின் ஞானத்தில் சிரவணதி நான்கின் உபயோகமுண்டு.

‡ அக்கினியின் ஞானம் புகையாலுண்டாகுதல் புகை அக்கினியை நிச்சயிக்கும் குறியா (இலிங்கமா)ம். அதுபோல வேதாந்தவாக்கியங்களின் தாற்பரியமாகிய அத்வைத ஸ்வரூபஞானம் உபக்கிரம உபஸம்ஹாராதிகளால் உண்டாகிறது. ஆதலால் அவைகள் தாற்பரிய நிச்சயத்துக்கு இலிங்கங்களா யிருக்கின்றன. அவ்விலிங்கங்கள் ஆறு யுக்தி சப்தத்தால் கிரகிக்கப்படுகின்றன.

2. ஜீவப்பிரஹ்மங்களின் * அபேதத்துக்குச் சாதகமான யுக்திகளா

அவ்விலிங்கங்களாவன:—

(1) உபக்கிரம உபஸம்ஹாரமும், (2) அப்பியாஸம், (3) அபூர்வதை, (4) பலம், (5) அர்த்தவாதம், (6) உபபத்தி என்பனவாம்.

1. உபக்கிரமமாவது பிரகரணத்தின் ஆரம்பம். உபஸம்ஹாரமாவது பிரகரணத்தின் முடிவு. ஆரம்பத்திற் சொல்லிய அர்த்தத்தையே முடிவிலும் சொல்வது உபக்கிரம உபஸம்ஹாரங்களின் ஏகரூபமாகிய முதலாவது இலிங்கம்.

2. அத்வைதார்த்தத்தை யடிக்கடி சொல்வது அப்பியாஸமாம். யாசகன் தன் பிரயோஜனமான ஒரே கருத்தை வெவ்வேறு வசனங்களால் வெளியிடுவது போல் வெவ்வேறு யுக்திகளால் அத்வைதப் பிரஹ்மத்தைப் பிரதிபாதிப்பதே அப்பியாஸம்.

3 பிரஹ்மம், உபநிஷத்துக்களொழிந்த மற்றப் பிரமாணங்களால் அறியப்படாதென்றும், ஸ்வயம்பிரகாசமா யிருத்தலால் அந்நியப் பிரமாணங்களை யபேக்ஷிக்கிறதில்லையென்றும் பிரதிபாதிப்பதே அபூர்வதை.

4. அத்வைதப் பிரஹ்ம ஞானத்துக்கு அநர்த்தங்களின் நிவிருத்தியும் பிரஹ்மத்தின் பிராப்தியுமே பயனெனச் சொல்வது பலமென்னும் நான்காவது இலிங்கமாம்.

5. பேதஞானத்தின் நிந்தை வடிவினவும் அபேதஞானத்தின் ஸ்துதி வடிவினவுமான வாக்கியங்கள் அர்த்தவாத மெனப்படும்.

6. பிரதிபாதிக்கப்படும் அத்வைதார்த்தத்துக்கு அநுகூலமான திருஷ்டாந்தங்கள் உபபத்தி யென்னும் ஆறுவது இலிங்கமாம். மண்ணிற்கும் அதிலுண்டாகிய கடாதிகளுக்கும் பேதமில்லாததுபோலவும், தங்கத்துக்கும் அதனாற் செய்யப்பட்ட நகைகளுக்கும் பேதமில்லாதது போலவும், காரணமான பிரஹ்மத்துக்கும் அதன் காரியமான ஜகத்துக்கும் பேதமில்லையெனப் பிரதிபாதிப்பதே உபபத்தியாம்.

இந்த ஆறு இலிங்கங்களாலும் வேதாந்தவாக்கியங்களின் அத்வைதார்த்தத்தை நிச்சயிப்பதே சிரவணமெனப்படும். வேதாந்தசாஸ்திரத்தின் அப்பியாசம் அதற்குச் சாதனமாயிருத்தலின் அதுவும் சிரவண மெனப்படும். இவ்விலிங்கங்கள் "சுருதிஷட்லிங்க சங்கிரக" மென்னும் நூலில் விளக்கப்பட்டிருக்கின்றன.

* ஜீவப்பிரஹ்ம அபேதத்தின் சாதகயுக்திகள் இவையாம்:—

1. ஜீவன் பிரஹ்மத்தினும் அபின்னம்; சச்சிதானந்த வடிவமாயிருத்தலின்; ஈசுவரசேதனம்போல; எது சச்சிதாநந்த வடிவமன்றோ அது பிரஹ்மத்தினும் அபின்னமன்று; கடம்போல; எதனால் இது (ஜீவன்) இங்ஙனமன்றோ, அதனால் பிரஹ்மத்தின் பின்னமுமன்று; ஆனால் அபின்னமாம். ஈண்டு (இவ்வநுமானத்தில்),

1. ஜீவன் பக்ஷம்;
2. அதற்குப் பிரஹ்மத்தோடு அபேதம் சாத்தியம்;
3. சச்சிதானந்தவடிவத்தன்மை ஏது;
4. ஈசுவரசேதனமும், கடமும் உதாரணம் (திருஷ்டாந்தம்).

இது முதலியன அநுமானப்பிரமாணவடிவ யுக்திகளாம்.

னும், * பேதத்துக்குப் பாதகமான யுக்திகளானும் அத்விதீயப்பிரஹ்மத்தைச் சிந்தனைசெய்தல் மனனமென்று சொல்லப்படுகிறது. (22.)

---

2. (1) கடமட உபாதிகளை நீக்கின் கடாகாச மடாகாசங்களுக்கு அபேத மிருத்தல்போல, புத்தியும் மாயையுமாகிய உபாதிகளை யொழிக்கின் ஜீவப் பிரஹ்மங்களுக்கு அபேத மிருக்கின்றது.

(2) கடாகாசம் ஜலாகாசம் மகாகாசம் மேகாகாசம் என நான்கு ஆகாசங்களிருக்கின்றன. அவற்றுள் ஜலாகாசத்திற்கும் மேகாகாசத்திற்கும் அபேத மில்லையாயினும், கடாகாச மகாகாசங்களுக்குப் பெயர்மாத்திரத்தாற் பேதமுண்டு; பரமார்த்தமாயில்லை. அங்ஙனமே கூடஸ்தன் ஜீவன் பிரஹ்மம் ஈசுவரன் என நான்கு சேதனங்களுண்டு. அவற்றில் ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் அபேத மில்லையாயினும், அவற்றின் அதிஷ்டானலக்ஷியார்த்தமாகிய கூடஸ்தனுக்கும் பிரஹ்மத்திற்கும்பெயர்மாத்திரத்தால் பேதமுண்டு; பரமார்த்தமாயில்லை. இவை முதலியன திருஷ்டாந்த (உவமானப்பிரமாண) வடிவ யுக்திகளாம்.

3. "இங்கு நாநாவென்பது சிறிதுமில்லை" என்றல் முதலிய சுருதிகளில் பேதம் நிஷேதிக்கப்பட்டிருக்கின்றது. அந்த நிஷேதம் (விலக்கு) வாஸ்தவ அபேத முளதாயின் சம்பவிக்கும்; அஃதின்றிச் சம்பவியாது. ஆதலால் பேத நிஷேதத்தினது அநுபபத்தி (பொருத்தமின்மை) யின் ஞானமாகிய அர்த்தாபத்திப் பிரமாணத்தால் ஜீவப் பிரஹ்மங்களின் அபேதத்தினது ஞானமாகிய அர்த்தாபத்திப் பிரமை யுண்டாகின்றது. இது முதலியன அர்த்தாபத்திப் பிரமாணவடிவ யுக்திகளாம்.

இவ்வாறு பிரத்தியக்ஷப்பிரமாண சப்தப்பிரமாணங்களுக்கு வேறாய் யுக்தியென்னும் பதத்திற்கு வாச்சியமான அநுமானம் உவமானம் அர்த்தாபத்தியென்னும் மூன்று பிரமாணங்கள் அபேதத்தின் சாதக யுக்திகளாம்.

* ஜீவப்பிரஹ்ம பேதத்தின் பாதகயுக்திகள் இவையாம்:—

1. ஜீவப்பிரஹ்மங்களின் பேதம் மித்தையாம்; ஔபாதிகமா (உபாதியினாலாகியதா) யிருத்தலால்; கடாகாச மகாகாசங்களின் பேதத்தைப்போல; யாது மித்தையன்றோ அது ஔபாதிகமு மன்று. எங்ஙனம்: கடபடங்களுக்கு வியவகாரதசையில் பேதமுண்டு; அது ஔபாதிக மன்று; ஆதலால் மித்தையுமன்று. எதனால் அது (ஜீவன்) இங்ஙனமன்றோ, அதனால் மித்தையன்றெனலு மின்று; ஆனால் மித்தையேயாம். ஈண்டு,

(1) பேதம் பக்ஷம்;

(2) மித்தியாத்தன்மை சாத்தியம்;

(3) ஔபாதிகத்தன்மை ஏது;

(4) இரண்டு ஆகாயங்களின் பேதமும் கடபடங்களின் பேதமும் உதாரணம்.

இது முதலியன அநுமானப்பிரமாணவடிவ யுக்திகளாம்.

ஈண்டு முதலியவென்னும் சொல்லால் "முமுக்ஷுசர்வஸ்வஸாரஸங்கிரஹ" த்திற் கூறப்பட்டனவும், "வேதாந்த பதார்த்தமஞ்சுஷா" விற் கூறப்பட்டனவும், இந்நூலின் மூன்றாவது தரங்கத்தின் டிப்பணி (விளக்கவுரை)யில் சொல்லப்பட்ட பஞ்சபேதங்களை நிவர்த்திக்கும் ஐந்தநுமானங்களுள் நான்கநுமானங்களும் கொள்ளப்படும்.

2. (1) பிம்பப் பிரதிபிம்பங்களின் பேதம் மித்தையாவதுபோல, ஜீவப்பிரஹ்மங்களின் பேதம் மித்தையாம்.

3. அநாத்மாகார விருத்தியின் மறைப்பின்றிய பிரஹ்மாகார விருத்தியின் ஸ்திதி * நிதித்தியாஸனமென்று சொல்லப்படுகின்றது. நிதித்தியாஸனத்

---

(2) அநேக கடாகாசங்களுக்கு ஒன்றற்கொன்றுள்ள பேதம் மித்தையாவதுபோல, ஜீவர்கள் ஒருவரோடு ஒருவர்க்குள்ள பேதம் மித்தையாம்.

(3) சொப்பன ஜீவர்களுக்கும் சொப்பன கடமுதலியவற்றிற்கும் உள்ள பேதம் மித்தையாதல்போல, ஜீவ ஜடங்களுக்குள்ள பேதம் மித்தையாம்.

(4) இரஜ்ஜுவிற்கும் கற்பித சர்ப்பத்திற்கும், அல்லது சாக்ஷிசேதனத்திற்கும் சொப்பனப்பிரபஞ்சத்திற்கு முள்ள பேதம் மித்தையாதல்போல, ஜடஜகத்திற்கும் ஈசுவரனுக்குமுள்ள பேதம் மித்தையாம்.

(5) இரஜ்ஜுவிற் கற்பிக்கப்பட்ட சர்ப்பம் தண்ட முதலியவற்றிக்காவது, சொப்பன பதார்த்தங்களுக்காவது ஒன்றற்கொன்றுள்ள பேதம் மித்தையாதல்போல, ஜட பதார்த்தங்களுக் கொன்றற்கொன்றுள்ள பேதம் மித்தையாம்.

இவை முதலியன உவமானப் பிரமாணவடிவ யுக்திகளாம்.

3. மகாவாக்கியங்களில் சொல்லப்பட்ட ஜீவப்பிரஹ்மங்களின் அபேதம் யாதோ, அது தோற்றப்படுகின்ற பேதத்தின் மித்தியாத்தன்மையின்றிப் பொருந்தாததாய்ச் ஜீவப்பிரஹ்மங்களினது பேதத்தின் மித்தியாத்தன்மையைக் கற்பிக்கின்றது. இது முதலியன அர்த்தாபத்திப் பிரமாணவடிவ யுக்திகளாம்.

4. சாக்கிர சொப்பனங்களில் உபாதியிருத்தலால் ஜீவப் பிரஹ்மங்களின் பேதந் தோற்றுகிறது. அங்ஙனமே சுழுத்தியில் உபாதிகளில்லாமையால் பேதம் தோற்றுகிறதில்லை. ஆதலால் ஜீவப் பிரஹ்மங்களுக்குப் பாரமார்த்திக பேதத்தின் அபாவமிருக்கின்றதென்னும் நிச்சய முண்டாகின்றது. இது முதலியன அநுபலப்திப் பிரமாணவடிவ யுத்திகளாம்.

இவையாவும் பேதத்தின் பாதக யுக்திகளாம்.

* நிதித்தியாஸனத்துக்கும் சாக்ஷாத்காரத்துக்கும் பேதம் யாதெனின், சாக்ஷாத்காரத்தில் அநாத்மாகார விருத்தியின் அந்தராயமின்றிய பிரஹ்மாகார விருத்தியின் ஸ்திதி, ஸ்வபாவமாய் வளர்ந்த மரத்தின் கிளையினைப்போல் பிரயத்தனமின்றி யுண்டாகிறது. நிதித்தியாஸனத்தில் பிரஹ்மாகார விருத்தியின் ஸ்திதி பிரயத்தனத்தால் வளைக்கப்பட்ட கிளைபோல் உண்டாகிறது. கையினாற் பிடித்திருத்தலாகிய பிரயத்தனம் நீங்கினவுடன் கிளை நிமிர்ந்துவிடுவதுபோல், நிதித்தியாசனத்தில் பிரயத்தினம் நீங்கினவுடன் பிரஹ்மாகார விருத்தியின் ஸ்திதியும் தங்குகிறதில்லை.

அல்லது:—சாக்ஷாத்கார முடையவனுக்கு வியவகாரகாலத்தில் ஓர் காலத்து முற்கூறிய விருத்தியின் ஸ்திதி இல்லாததாகக் கர்த்தவ்வியபுத்தியினால் பச்சாத்தாபமு (பின் வருந்துதலு) ண்டாகிறதில்லை. நிதித்தியாசன முடையவனுக்கு வியவகாரகாலத்தில் ஓர் காலத்து முற்கூறிய விருத்தியினது ஸ்திதியின் அபாவ முண்டாகக் கர்த்தவ்விய புத்தியினால் பச்சாத்தாப முண்டாகிறது.

சாக்ஷாத்காரத்தோடு நிதித்தியாஸனத்துக்கு இத்துணைப் பேதமுண்டு.

தின் பரிபாக அவஸ்தையினையே சமாதி யென்பர். ஆதலால் சமாதியும் வேறு சாதனமாகாமல் * நிதித்தியாஸனத்தில் அடங்குகிறது. (23.)

இந்தச் சிரவண மனன நிதித்தியாஸனங்கள் ஞானத்திற்குச் சாக்ஷாத் சாதனங்களன்று. ஆனால் புத்திதோஷங்களாகிய அசம்பாவனையையும் விபரீத பாவனையையும் நாசஞ் செய்வனவாம்.

---

* திரிபுடியின் விளக்கத்தோடு கூடிய சவிகற்பசமாதி எதுவோ, அதுவே நிதித்தியாசனமாம். அதன் பரிபாக அவஸ்தை நிர்விகற்பசமாதி யெனப்படுகின்றது. ஆதலால் இங்கு "சமாதி" யென்னும் சொல்லால் திரிபுடியின் பான (விளக்க) மின்றிய நிர்விகற்பசமாதி கொள்ளப்படுகின்றது. அந்த நிர்விகற்பசமாதி 1. பாகியம், 2. ஆந்தர மென்னும் பேதத்தால் இருவகைத்தாம்:—

1. மூர்த்தி முதலிய பாகிய ஆலம்பனத்தை (பற்றுக்கோட்டை)ச் சிந்தித்தலால் உண்டாவது எதுவோ, அது பாகியநிர்விகற்பசமாதியாம்.

2. சர்வாந்தர (எல்லாவற்றினும் உள்ளாகிய) அத்வைதப் பிரஹ்மத்தைச் சிந்தித்தல் எதுவோ, அது ஆந்தரநிர்விகற்பசமாதியாம்.

அவற்றுள், ஆந்தர நிர்விகற்பசமாதியும் (1) சாக்ஷாத்காரவடிவம் (2) அசாக்ஷாத்கார வடிவமென்னும் பேதத்தால் இருவகையினதாம்:—

(1) குருமுகவாயிலாக அர்த்தத்தோடுகூடிய மகாவாக்கியத்தின் சிரவண மனனாதி வடிவ விசாரபூர்வகமாய் அத்வைதப் பிரஹ்மத்தைச் சிந்தித்தலால் பிரஹ்மாத்மாவின் ஏகத்துவம் அபரோக்ஷபானத்தோடு உண்டாவது எதுவோ, அது சாக்ஷாத்காரவடிவ ஆந்தரநிர்விகற்பசமாதியாம்.

(2) விசாரபூர்வக அத்வைதப் பிரஹ்மத்தின் சிந்தனத்தினாலும் ஏகத்துவத்தின் பரோக்ஷபானத்தோடு உண்டாவது யாதோ, அது அசாக்ஷாத்காரவடிவ ஆந்தரநிர்விகற்பசமாதியாம்.

(1) அவற்றுள், அசாக்ஷாத்காரவடிவம் யாதோ அது சாக்ஷாத்காரவடிவ சமாதியின் சாதனமாம். ஆதலால் அது நிதித்தியாசனத்தில் அடங்கும்; வேறு சாதனமன்று.

(2) சாக்ஷாத்காரவடிவ சமாதி எதுவோ, அது ஒரு க்ஷணத்தில் உதயமாகின்றது. இரண்டாவது க்ஷணத்தில் நிலைத்து ஆவரணத்தைக் கெடுக்க ஆரம்பிக்கின்றது. மூன்றாவது க்ஷணத்தில் ஆவரணம் நாசமாகின்றது. அதனால் ஜீவன்முக்தி யுண்டாகின்றது. முதலில், இது க்ஷணமிருப்பதாயினும் ஆவரணத்தைக் கெடுக்கின்றது. ஆதலால் வித்துவானிடத்தில் ருதம்பரை (மறைந்துள்ளவைகளைக் காணும் உண்மை) யுணர்ச்சி முதலிய சித்தி யுண்டாகுதலின் சங்கையில்லை. கடத்தின் சாக்ஷாத்கார முண்டாகத் தற்காலம் (அப்பொழுதே) கடத்தின் ஆவரணம் பங்கமாகின்றது. அதன்பொருட்டுப் பின் புத்தியைத் தடுத்தலின் பிரயோஜனமில்லை. அங்ஙனமே பிரஹ்மத்தின் ஆவரணம் பங்கமானபின் அடத்தினால் விருத்தியை நிரோதித்தலின் பிரயோஜனமில்லை. இங்ஙன முண்டாகிய பின்னரும், ஏழாவது பூமிபரியந்தம் எந்த விருத்திநிரோதம் செய்யப்படுகின்றதோ, அந்த நிரோதம் வாசனாக்ஷய மனோநாசவாயிலாக, அதாவது மனதின் ஸ்தூலத்தன்மையின் நிவிருத்திவாயிலாக, ஜீவன்முக்தியின் விலக்ஷண ஆநந்தத்திற்கு ஏதுவாம்; ஆவரண பங்கத்திற்கு ஏதுவன்று.

இவ்வாற்றால் சமாதி நிதித்தியாசனத்தில் அடங்குகின்றது.

1. * சமுசயத்தினை அசம்பாவனை யென்பர்.

2. † விபரியயத்தினை விபரீதபாவனை யென்பர். (24.)

## 19. சிரவணாதிகள் பரம்பரையாக ஞானத்திற்கு ஏதுவாதல்.

சிரவணத்தினால் பிரமாண சந்தேகமும், மனனத்தினால் பிரமேய சந்தேகமும் நீங்குகின்றன.

1. ‡ வேதாந்தவாக்கியம் அத்விதீயப் பிரஹ்மத்தைப் பிரதிபாதிக்கிறதா? அல்லது அந்நிய அர்த்தத்தைப் பிரதிபாதிக்கிறதா? என்று ‖ பிரமாணத்தில் சந்தேக முண்டாகிறது. அது சிரவணத்தினால் நிவிருத்தியாகிறது.

2. ஜீவப்பிரஹ்மங்களின் அபேதம் சத்தியமா? அல்லது பேதம் சத்தியமா? என்று $ இவ்வாறு ¶ பிரமேயத்தில் சந்தேக முண்டாகின்றது. அது மனனத்தினால் நிவிருத்தியாகின்றது.

3. தேகாதிகள் சத்தியம், ஜீவப்பிரஹ்ம பேதமும் சத்தியமென்னும் ஞானத்தினை விபரீதபாவனை யென்பர். அதனையே விபரியயமென்றும் கூறுவர். அது நிதித்தியாசனத்தினால் நிவிருத்தியாகிறது.

---

* "இது ரஜ்ஜுவா? அல்லது சர்ப்பமா?" என்றிவ்வாறு இரண்டு கோடி (பக்ஷங்)களை விஷயிக்கும் ஞானம் சமுசயம் எனப்படும்.

† "இது சர்ப்பம்" என்னும் அவித்தியாவிருத்தி விபரியயமாம். இதுவே பிராந்தி ஞானமென்றும், விபரீதபாவனையென்றும் சொல்லப்படும். இதனையே விபரீதஞானமென்றும், ஞானத்தியாஸமென்றும் கூறுவர். இவ்வாறு இங்கு மித்தையான அநாத்மவடிவ தேகாதிகளைச் சத்தியரூபமாகவும் ஆத்மரூபமாகவும் அறிவது விபரியயம்.

‡ வேதத்தின் அந்த (கடைப்) பாகமாகிய உபநிஷத்து; அல்லது வேதத்தின் அந்தம் அதாவது நிர்ணயம் எதன்கண் இருக்கின்றதோ, அத்தன்மைய சூத்திரபாஷியவடிவ உத்தரமீமாம்ஸாசாஸ்திரம் வேதாந்த மெனப்படும். அவற்றின் வாக்கியமாவது பதசமுதாயம் (சொற்களின் கூட்டம்) வேதாந்தவாக்கிய மெனப்படும்.

‖ பிரமாஞானத்துக்குக் கரண மெதுவோ. அது பிரமாண மெனப்படும். இங்கு வேதத்திற் சொல்லப்படும் மோக்ஷமுதலிய பதார்த்தங்களின் யதார்த்த அநுபவ வடிவ சாப்திப் பிரமையின் கரணமாகிய உபநிஷத்துவடிவ சப்தம் எதுவோ, அது பிரமாண சப்தத்தின் அர்த்தமாம். அதன் சொரூபத்தில் முற்கூறியவிதமான எந்தச் சம்சய முண்டாகின்றதோ, அது பிரமாணகத சம்சயமாம். விசாரித்துப் பார்க்குமிடத்து எவ்வளவு பிரமேயகத சம்சயங்களின் பேதம் சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றனவோ, அவ்வளவே பிரமாணகத சம்சயங்களின் பேதமும் சித்திக்கின்றன.

$ "இவ்வாறு" என்பது இதுமுதல் அநேக வடிவினையுடைய பிரமேயகத சம்சயங்களை யென்பதாம். பிரமேயகத சம்சயத்தின் அநேக பேதம் பஞ்சதசியின் உரையிலும், அங்ஙனமே பாலபோதத்தின் பாலபோதினி யென்னும் உரையிலும் எழுதப்பட்டிருக்கின்றன.

¶ பிரமாஞானத்தினாலேனும் அல்லது அதன் சாதனமாகிய பிரமாணத்தினாலேனும் அறியத்தக்க மோக்ஷமுதலிய பதார்த்தங்கள் எவையோ, அவை இங்குப் பிரமேயமெனப்படுகின்றன.

இவ்விதத்தால் சிரவணாதிகள் மூன்றும் அசம்பாவனை விபரீதபாவனைகளை நாசம்பண்ணுவனவாம். அசம்பாவனை விபரீதபாவனைகளும் ஞானத்திற்குப் பிரதிபந்தகமாம். ஆதலால் ஞானத்தின் பிரதிபந்தகத்தைக் கெடுக்கும் வாயிலாகச் சிரவணாதிகள் ஞானத்திற்கு ஹேது வெனப்படுகின்றன; சாக்ஷாத் ஹேதுவன்று. (25.)

## 20. அவாந்தரவாக்கியம் பரோக்ஷஞானத்திற்கும், மகாவாக்கியம் அபரோக்ஷஞானத்திற்கும் ஏதுவாமாறு.

ஞானத்திற்குச் * சாக்ஷாத் சாதனம் சுரோத்திர சம்பந்தி வேதாந்த வாக்கியமாம். அவ்வேதாந்த வாக்கியம் இருவகையாம்:—1. ஒன்று அவாந்தர வாக்கியம்; 2. ஒன்று மகாவாக்கியம்.

1. பரமாத்மாவினது அல்லது ஜீவனது சொரூபத்தை யறிவிக்கும் வாக்கியம் அவாந்தரவாக்கிய மெனப்படும்.

2. ஜீவபரமாத்மாக்களின் ஏகத்துவத்தை யறிவிக்கும் வாக்கியம் மகாவாக்கிய மெனப்படும்.

1. அவாந்தர வாக்கியத்தினால் பரோக்ஷஞான முண்டாகும்.

2. மகாவாக்கியத்தினால் அபரோக்ஷஞான முண்டாகும்.

1. "பிரஹ்மம் இருக்கிறது" என்னும் ஞானத்தைப் பரோக்ஷஞான மென்பர்.

2. "பிரஹ்மம் நான்" என்னும் ஞானத்தினை அபரோக்ஷஞான மென்பர்.

"நீ பிரஹ்மம்" என்று குருவினா லுச்சரிக்கப்பட்ட வாக்கியம் சுரோதாவின் காதில் சம்பந்தப்பட்டவுடனே "நான் பிரஹ்மம்" என்னும் அபரோக்ஷஞானம் சுரோதாவுக் குண்டாகிறது. சுரோதாவின் காதில் வாக்கியம் சம்பந்தமாதலின்றி ஞானமுண்டாகிறதில்லை. ஆதலால் சுரோத்திர சம்பந்தி வாக்கியமே ஞானத்திற்கு ஏதுவாம்.

1. சுரோத்திர சம்பந்தி அவாந்தர வாக்கியம் பரோக்ஷஞானத்திற்கு ஹேதுவாம்.

2. சுரோத்திர சம்பந்தி மகாவாக்கியம் அபரோக்ஷஞானத்திற்கு ஏதுவாம். மகாவாக்கியத்தினால் எல்லோருக்கும் அபரோக்ஷஞானமே யுண்டாகிறது; பரோக்ஷஞான முண்டாகிறதில்லை. (26.)

---

* கண்ணிற் போடப்பட்ட மை நேத்திர ரோகத்தை நிவர்த்தித்தல் வாயிலாகச் சூரியனைப் பார்க்கச் சாதனமாயிருக்கிறது. சாக்ஷாத்சாதன மன்று. சூரியனைக் காண்பதற்குச் சாக்ஷாத்சாதனம் நேத்திரமாம். அங்ஙனமே சிரவணாதிகளும் ஞானத்தின் பிரதிபந்தங்களாகிய சமுசய விபரியயரூப ரோகங்களை நிவர்த்தித்தல் வாயிலாக ஞானத்திற்குச் சாதனங்களாம்; சாக்ஷாத்சாதனம் சுரோத்திரசம்பந்தி மகாவாக்கியங்களாம்.

## 21. வேதாந்தத்தின் ஏகதேசியின் மதம்.
## (கேவல வாக்கியத்தால் பரோக்ஷஞான முண்டாகுமெனல்.)

* ஏகதேசியின் மதம் இதுவாம்:—

1. சிரவணமனன நிதித்தியாசனங்களோடு கூடிய வாக்கியத்தினால் அபரோக்ஷஞான முண்டாகிறது.

2. கேவல வாக்கியத்தினால் பரோக்ஷஞான முண்டாகிறது; அபரோக்ஷஞான முண்டாகிறதில்லை.

கேவல வாக்கியத்தினாலேயே அபரோக்ஷஞான முண்டாகுமாயின், சிரவண மனன நிதித்தியாசனங்கள் வியர்த்தமாகும். சித்தாந்தத்தில் கேவல வாக்கியத்தால் அபரோக்ஷஞான முண்டாகிறது; சிரவணாதிகளால் அசம்பாவனை விபரீதபாவனைகள் நாசமாகின்றன; ஆதலால் சிரவணாதிகள் வியர்த்தமாகா. என்றலும், எந்த வஸ்துவின் அபரோக்ஷஞான முண்டாகிறதோ, அந்த வஸ்துவில் ஒருவருக்கும் அசம்பாவனை விபரீதபாவனைகள் உண்டாகா. ஆதலால் கேவல வாக்கியத்தினால் † அபரோக்ஷஞான முண்டாகுமென்று சொல்லுவோர் சித்தாந்தத்தில் "தத்துவமஸி" முதலிய வாக்கியங்களால் பிரஹ்மத்தின் அபரோக்ஷஞான முண்டானபின், அசம்பாவனை விபரீதபாவனைகள் சம்பவியாவாகலின், சிரவணாதி சாதனங்கள் வியர்த்தமாம். "கேவல வாக்கியத்தால் பரோக்ஷஞான முண்டாகின்றது; சிரவண மனன நிதித்தியாசனங்களைச் செய்தால் அபரோக்ஷஞான முண்டாகின்றது" என்னும் மதத்தில் சிரவணாதிகள் வியர்த்தமாகா. இது அநேக கிரந்தகாரருடைய ‡ மதம். அங்ஙனமாயினும் இம்மதம் § நலமுடையதன்று. ஏனெனின், (27.)

## 22. முற்கூறிய ஏகதேசியின் மதம் நலமுடையதாகாமை. 22-23.

சப்தத்திற் கிது சுபாவமாம்:—

1. எந்த வஸ்து || வியவஹிதமாயிருக்கிறதோ, அதன் ஞானம் சப்தத்தினால் பரோக்ஷமாகவே யுண்டாம். எவ்விதத்தினாலும் வியவஹிதவஸ்துவின்

* சித்தாந்தத்தின் ஏகதேசத்தை ஆசிரயித்துச் சுவதந்திரமாக அதிக அர்த்தம் எவற்றில் நிரூபிக்கப்பட்டிருக்கிறதோ, அத்தன்மைய பஞ்சதசி முதலிய வேதாந்தத்தின் பிரகரணகிரந்தங்களின் கர்த்தாக்களாகிய ஆசிரியர்கள் இங்கு ஏகதேசி யெனப்படுவர்.

† கேவல வாக்கியத்தினால் அபரோக்ஷஞான முண்டாமென்று கூறுவோர் சித்தாந்திகள்; அவர்கள் மதத்தில்.

‡ மந்தபோதமுடையவனுக்குச் சிரவணமுதலிய சாதனங்களின் ஆலசியம் (சோம்பல்) உண்டாகலாகாது என்னும் அபிப்பிராயத்தால் கூறிய இது சம்க்ஷேபசாரீரகத்திற்கு வேறான அநேக பிரகரணக் கிரந்தங்களின் கர்த்தாக்களது மதமாம்.

§ திடஞான முடையோருக்கும் சிரவண முதலியவற்றில் கர்த்தவ்வியபுத்தி உண்டாகலாகாதென்னும் அபிப்பிராயத்தால் கேவல வாக்கியத்தினால் அபரோக்ஷ ஞானத்தைக் கூறும் சித்தாந்தியை அநுசரித்து இச்சமாதானம் சொல்லப்படுகின்றது.

|| தேசத்தினாலாகிய அல்லது காலத்தினாலாகிய அந்தராயத்தினை (மறைப்பினை) வியவதான மென்பர். வியவதானமுடைய வஸ்துவினை வியவஹிதமென்பர்.

ஞானம் சப்தத்தால் அபரோக்ஷமாகிறதில்லை. வியவஹித சுவர்க்கத்தின் ஞானமும், இந்திராதி தேவதைகளின் ஞானமும் சாஸ்திரரூப சப்தத்தினால் பரோக்ஷமாகவே யுண்டாகின்றன.

எந்த வஸ்து அவ்வியவஹிதமாக இருக்கிறதோ, அதன் (1) அபரோக்ஷ ஞானம் (2) பரோக்ஷஞான மிரண்டும் சப்தத்தா லுண்டாகின்றன.

(1) எங்கு அவ்வியவஹித வஸ்துவினைச் சப்தம் "இருக்கிறது" என்னும் வடிவத்தால் அறிவிக்கிறதோ, அங்கு அவ்வியவஹிதத்திற்கும் பரோக்ஷஞான முண்டாகின்றது. அது * "பத்தாவது புருஷன் இருக்கிறான்" என்பதாம். இவ்வாறு 'இருக்கிறா' னென்னும் வடிவத்தால் அறிவிக்கப்பட்ட அவ்விய வஹித தசமனுடைய ஞானம் சப்தத்தினால் பரோக்ஷமாகவே யுண்டாயிருக் கின்றது.

(2) எங்கு அவ்வியவஹித வஸ்துவினை "இது இருக்கிறது" என்னும் வடிவத்தால் சப்தம் அறிவிக்கிறதோ, அங்கு சப்தத்தினால் அவ்வியவஹிதத் தின் அபரோக்ஷஞானமே யுண்டாகிறது; பரோக்ஷஞான முண்டாகிறதில்லை.

---

1. எந்த வஸ்து தூரதேசத்திலிருக்கின்றதோ, அது தேசத்தினால் வியவஹித மாம். எந்த வஸ்து சென்ற அல்லது வருங்காலங்களில் உளதாகின்றதோ, அது காலத் தினால் வியவஹிதமாம்.

2. வியவஹிதத்திற்கு வேறான அந்தராயமின்றிய வஸ்து எதுவோ அது அவ் வியவஹித மெனப்படுகின்றது.

* இந்த இது பிரசங்கமாம்:—ஓர் பத்துச் சிறுவர்கள் ஒன்றுசேர்ந்து வினோத மாகத் தேசாந்தரத்திற்குப் போனார்கள். போகுங்கால் வழியில் கானற்சல ஆறு ஒன்று எதிர்ப்பட, அதனைக்கடந்து கரையேறினவுடன் அவர்களுள் முதன்மையான ஒரு சிறு வன் மற்ற ஒன்பது சிறுவர்களையும் எண்ணித் தன்னை யெண்ணாது சொல்லத்தொடங் கினான்:—என தன்பன் !

1. "பத்தாவது புருஷனை யான் காணேன்". இவ்வஞ்ஞானவஸ்தை யுண் டாயிற்று.

2-3. அதனால் "பத்தாமவன் இல்லை", "காணப்படவில்லை" என்னும் இருவகை ஆவரண முண்டாயிற்று.

4. அதனால் அழுகை முதலிய விக்ஷேப முண்டாயிற்று.

5. பின்னர் ஓர் உண்மையுரைப்போனென்னும் ஆப்தபுருஷன் வந்தான். அவன் "பத்தாமவன் இருக்கின்றான்" என்னும் அவாந்தரவாக்கியத்தைச் சொன்னான். அத னைக் கேட்டு அப்பத்தாவது புருஷனுக்குத் தனது சொரூபமான பத்தாமவனது "பத்தா மவனிருக்கிறான்" என்னும் பரோக்ஷஞானமே யுண்டாயிற்று.

6. பின்னர்ப் "பத்தாமவன் எங்கு இருக்கின்றான் ?" என்று கேட்க, அவ்வாப்தபுரு ஷன் "பத்தாமவன் நீ" என்னும் வாக்கியத்தைக் கூறினான். அப்போது அவனுக்குப் "பத்தாமவன் யான்" என்னும் அபரோக்ஷஞான முண்டாயிற்று.

7. அதனால் அஞ்ஞானத்தாலாகிய ஆவரணத்தோடு அழுதல் முதலிய விக்ஷேபம் நாசமாயிற்று. அதனால் ஹர்ஷ (சந்தோஷ) வடிவ திருப்தி யுண்டாயிற்று.

அது, "பத்தாவது புருஷன் நீ" என்றிவ்வாறு சப்தத்தா லறிவிக்கப்படும் தசமனுக்கு அவனது அபரோக்ஷஞானமே யுண்டாவதுபோலவாம்.

(1) அங்ஙனமே பிரஹ்மம் எல்லாவற்றிற்கும் ஆத்மாவா யிருத்தலால் அத்தியந்தம் அவ்வியவஹிதமாயிருக்கிறது. அதனை "இருக்கிறது" என்னும் வடிவத்தால் அவாந்தரவாக்கியம் போதிக்கிறது. ஆதலால் அவ்வியவஹிதப் பிரஹ்மத்தின் ஞானமும் அவாந்தர வாக்கியத்தினால் பரோக்ஷமாகவே யுண்டாகின்றது.

(2) "பத்தாமவன் நீ" என்னும் வாக்கியத்தினைப்போல சுரோதாவின் ஆத்மவடிவ (சொரூப) மாகப் பிரஹ்மத்தை மகாவாக்கியம் போதிக்கிறது. ஆதலால் * மகாவாக்கியத்தினால் அவ்வியவஹிதப் பிரஹ்மத்தின் பரோக்ஷஞான முண்டாகாமல் அபரோக்ஷஞானமே யுண்டாகின்றது. (28.)

---

அங்ஙனமே, இப்புருஷனாகிய ஜீவன் ஸ்தூலசரீரத்தோடுகூடிய புரியஷ்டக வடிவ ஒன்பது புருஷர்களோடு சேர்ந்து சம்சாரமென்னும் கானற்சல ஆற்றிற் பிரவேசித்து, அதன் மனுஷ்ய தேகமாகிய கரையில் வந்து ஒருகால் ஞானவிருப்பகாலத்தில் விசாரிக்கின்றான். அப்போது,

1. தன்னின்வேறாகிய முற்கூறிய ஒன்பது புருஷர்களையும் அறிகின்றான். ஆனால் அவர்களை யறிபவனாகிய தனது நிஜரூபப்பிரஹ்மத்தை அறியேன் என்னும் அஞ்ஞான அவஸ்தை யுண்டாயிற்று.

2-3. அதனால் "பிரஹ்மமில்லை", "காணப்படவில்லை" யென்று இருவகை ஆவரணம் உண்டாயிற்று.

4 அதனால் அர்த்தாத்தியாசமும் ஞானாத்தியாசமுமாகிய விக்ஷேப மென்னும் சோக முண்டாயிற்று.

5. பின்னர்ப் "பிரஹ்மம் இருக்கிறது" என்று குருவானவர் அவாந்தரவாக்கியத்தைச் சொல்ல, அதனைக்கேட்டுப் "பிரஹ்மம் இருக்கிறது" என்னும் பரோக்ஷஞான முண்டாகின்றது.

6. பின்னர்ப் "பிரஹ்மம் யார்" என்று கேட்கக் குருவானவர் "நீயே பிரஹ்மம்" என்னும் மகாவாக்கியத்தைச் சொன்னார். அதனைக் கேட்டுச் சிஷ்யனுக்கு "யான் பிரஹ்மம்" என்னும் அபரோக்ஷஞான முண்டாகின்றது.

7. அதனால் அஞ்ஞானத்தினாலாகிய ஆவரணத்தோடுகூடிய இருவகை அத்தியாச வடிவ விக்ஷேபத்தின் நாச முண்டாகின்றது. அதனால் அத்தியந்த ஹர்ஷரூப நிரங்குசு (தடையற்ற) திருப்தி (ஆநந்தம்) உண்டாகின்றது.

இச்சிதாபாஸனது ஏழு அவஸ்தைகளின் வர்ணனம் ஆசாரியரால் செய்யப்பட்ட உபதேசஸஹஸ்ரியிலும், அங்ஙனமே இந்நூலின் நான்காவது தரங்கத்திலும் விஸ்தாரமாக எழுதப்பட்டிருக்கின்றது. இங்குச் சுருக்கமான அதன் தன்மைமாத்திரம் அறிவிக்கப்பட்டது.

* இங்கு இது இரகசியமாம்:—பத்தாவது புருஷனுக்கு மனதினாலும் நேத்திரத்தினாலும் பிரத்தியக்ஷமாகத்தக்க தேகாதி சங்காதங்களின் சாமக்கிரியாகிய மனமும் நேத்திரமுமிருந்தும், அபரோக்ஷஞான முண்டாகவில்லை. ஆனால் "பத்தாமவன்நீ"யென்னும்

23. அன்றியும், "எந்த வஸ்துவின் அபரோக்ஷஞான முண்டாகின்றதோ, அதனிடத்து அசம்பாவனை விபரீதபாவனைகள் உண்டாகாவாகலின், சிரவ ணாதிகள் * வியர்த்தமா" மென்று சொல்லப்பட்டது.

அச்சங்கை பொருந்தாது. ஏனெனின், இராஜன் † பார்ச்சுவென்னும் மந் திரியை நேத்திரத்தால் அபரோக்ஷமா யறிந்தும் விபரீதபாவனை நீங்கவில்லை. அதுபோல மகாவாக்கியத்தினால் பிரஹ்மத்தின் அபரோக்ஷஞான முண்டானா லும், எவனுடைய புத்தியில் அசம்பாவனாதி தோஷங்க ளிருக்கின்றனவோ, அவனுடைய தோஷவடிவ களங்கத்தோடு கூடிய ஞானம் பலத்திற்கு ஏது வாகாது; அந்தத்தோஷ நிவிருத்தியின்பொருட்டுச் சிரவணாதிகளைச் செய்ய வேண்டும். எவனுடைய புத்தியில் தோஷங்களில்லையோ அவன் சிரவணாதி களைச் செய்யவேண்டியதில்லை.

இவ்வாற்றால் ஞானத்துக்குச் சாதனம் மகாவாக்கியமாம்; சிரவணாதிக ளன்று. ஆனால் ஞானப்பிரதிபந்தங்களான தோஷங்களைச் சிரவணாதிகள் நாசஞ்செய்கின்றன. ஆதலால் சிரவணாதிகள் ஞானத்திற்குச் சாதனங்களெனப் படுகின்றன. விவேகாதிகள் சிரவணாதிகளுக்கு ஹேதுவாகலின் ஞானத்திற்குச் சாதனங்க ளெனப்படுகின்றன. (29.)

விவேகாதி ‡ நான்கு சாதனங்களோடு கூடிய புருஷன் எவனோ அவன் அதிகாரியாவன்.

---

வாக்கியத்தினாலேயே அபரோக்ஷஞான முண்டாயிருக்கிறது. ஆதலால் பத்தாமவனது அபரோக்ஷஞானமாகிய பிரமைக்குச் சப்தம் கரணமாம். அதனால் அது பிரமாணமாம். அதற்கு மனமும் நேத்திரமும் சககாரிகளாம். அங்ஙனமே பிரஹ்மத்தின் அபரோக்ஷ ஞானமாகிய பிரமைக்குக் கரணம் மகாவாக்கியமாகிய சப்தமாம். ஆதலால் அது பிர மாணமாம். அதற்குச் சாதனங்களாற் சம்ஸ்கரிக்கப்பட்ட மனம் சககாரியாம்.

* "மைத்திரேயி! ஆத்மா பார்க்கத்தக்கது; சிரவணஞ் செய்யத்தக்கது; மனனஞ் செய்யத்தக்கது; நிதித்தியாசனஞ் செய்யத்தக்கது." என்றல் முதலிய சுருதியாற் சொல் லப்பட்ட ஆத்மதரிசனத்திற்குச் சாதனமான சிரவணாதிகள் நிஷ்பலமாகத்தக்கனவாகா; ஸபல மாகத்தக்கனவாம். கேவல மகாவாக்கியத்தினால் அபரோக்ஷஞானத்தை அங்கீ கரிக்கச் சுருதியிற்கூறிய சிரவணாதி சாதனங்கள் நிவர்த்திக்கத்தக்க தோஷமின்மையி னால், ரோக மில்லாதிருக்க ஔஷதத்தை உபயோகப்படுத்துவதுபோல நிஷ்பலமாகு மென்பது அபிப்பிராயம்.

† பார்ச்சுவென்னும் மந்திரியின் விஸ்தாரமான விருத்தாந்தம் மேல் ஐந்தாவது தர ங்கத்திற் சொல்லப்படும். ஆதலால் இங்கு அவர் பெயர்மாத்திரம் சொல்லப்பட்டது.

‡ ஞானத்திற்குமுன் சகுணப்பிரஹ்மத்தின் சாக்ஷாத்காரபரியந்தம் எவனுக்கு உபா சனை யுண்டாயிருக்கிறதோ, அவனைக் கிருதோபாஸனன் என்பர். அவனின் வேறாகிய வனை அகிருதோபாஸனன் என்பர். அவர்களுள் கிருதோபாஸனனது வைராக்கியாதி சாதனங்கள் தீவிரமாயிருத்தலின் பிரசித்தமாய்க் காணப்படுகின்றன. அகிருதோபாஸ னனது சாதனங்கள் மந்தமாயிருத்தலின் பிரசித்தமாய்க் காணப்படாது மறைந்திருக் கின்றன. ஆனால் எங்ஙனம் வஸ்திரத்தின் ஒரு முன்தானையைப் பிடிக்க வஸ்திரமுழுவ தும் பிடிக்கப்பட்டதாகின்றதோ, அங்ஙனமே நான்கு சாதனங்களினின்றும் ஒருசாத

## 24. சம்பந்தவர்ணநம்.

1. கிரந்தத்திற்கும் விஷயத்திற்கும் பிரதிபாத்தியப் பிரதிபாதகபாவ சம்பந்தமுளது. கிரந்தம் பிரதிபாதகமும், விஷயம் பிரதிபாத்தியமுமாம். (விஷயத்தைச்) சொல்லுவது எதுவோ அது பிரதிபாதகமாம். சொல்லப்படுவது யாதோ அது பிரதிபாத்தியமாம்.

2. அதிகாரிக்கும் பலத்துக்கும் பிராப்பிய பிராபகபாவ சம்பந்தமுளது. பலம் பிராப்பியம்; அதிகாரி பிராபகன். எந்த வஸ்து அடையப்படுகிறதோ அது பிராப்பியம். எவன் அடைகிருனே, அவன் பிராபகன்.

3. அதிகாரிக்கும் விசாரத்திற்கும் கர்த்துரு கர்த்தவ்வியபாவ சம்பந்தமுளது. அதிகாரி கர்த்தா; விசாரம் கர்த்தவ்வியம். செய்பவன் கர்த்தா; செய்யத்தக்கது கர்த்தவ்வியம்.

4. கிரந்தத்திற்கும் ஞானத்திற்கும் ஜநக ஜந்நியபாவ சம்பந்தமுளது. விசாரவாயிலாகக் கிரந்தம் ஞானத்திற்கு ஜநகமாம்; ஞானம் ஜந்நியமாம். உற்பத்திசெய்வது யாதோ அது ஜநகமாம். உற்பத்தியாவது யாதோ அது ஜந்நியமாம்.

இவை † முதலிய வேறு ‡ சம்பந்தங்களையும் அறிந்துகொள்க. (30.)

## 25. விஷயவர்ணநம்.

ஜீவப்பிரஹ்மங்களின் ஏகத்துவம் (ஐக்கியம்—ஒருமை) இந்நூலிற்கு விஷயமாம். எது பிரதிபாதனஞ்செய்ய (சொல்ல)ப்படுகிறதோ, அது விஷயமெனப்படுகின்றது. இந்நூலில் ஜீவப்பிரஹ்மங்களின் ஏகத்துவம் பிரதிபாதனஞ் செய்யப்படுகின்றதாகலின், அவ்வேகத்துவம் நூலிற்கு விஷயமாம். அதனையே சகல வேதவாக்கியங்களும் பிரதிபாதிக்கின்றன. ஆதலால் ஜீவப்

---

னம் நிச்சயிக்கப்படின், எல்லாச்சாதனங்களும் மறைந்திருக்கின்றன என்னும் நிச்சயமுண்டாகின்றது. என்னை, விவேகாதி நான்கு சாதனங்களும் ஒன்றற்கொன்று சககாரியாயிருத்தலின். ஆனால் எவ்வெவ்வகையானும் சிரத்தையுள்ளவனும் வியசனமுள்ளவனுமாகிய தீவிரபுத்தியுடைய புருஷனுக்குப் போதமுண்டாமென்பது விவேகமாம்.

† இங்கு "முதலிய" என்னும் சொல்லால் சிரவணாதி சாதனங்களுக்கும் ஞானத்திற்கும், அங்ஙனமே விஞ்ஞானத்திற்கும் மோக்ஷத்திற்கும் உள்ள சாத்தியசாதனபாவ முதலிய சம்பந்தங்களைத் தெரிந்துகொள்க.

‡ ஜலத்தையும் தெளிதலையும்போன்றிருத்தலால், யோக்கியதை (தகுதி) யுடையனவாய் ஒன்றற்கொன்று உபயோகியான இரண்டு பதார்த்தங்களுக்குச் சம்பந்தம் சித்திக்கின்றது; உபயோகமின்றிய பதார்த்தங்களுக்குச் சித்திக்கிறதில்லை. ஆதலால் யோக்கியதையின்றிச் சம்பந்தம் சம்பவியாமையின் ஞானமாகிய அர்த்தாபத்திப் பிரமாணத்தால் அவ்வப்பதார்த்தங்களின் யோக்கியதையைக் கற்பித்தலாகிய அர்த்தாபத்திப்பிரமை யுண்டாகின்றது. இக்காரணத்தால் சாஸ்திரங்களில் சம்பந்தத்தின் வியவகாரம் எழுதப்பட்டிருக்கின்றது; வேறு பிரயோஜனத்தின்பொருட்டன்று.

பிரஹ்மங்களின் பேதத்தைக் கூறுவோர் * சடர்களும் (புறங்கூறுவோரும்) வேதத்திற்கு விரோதிகளுமாவர். (31.)

## 26. பிரயோஜன வர்ணநம். 26 - 32.

பிரபஞ்சத்திற்குக் காரணமான அஞ்ஞானமும் பிரபஞ்சமும் ஜனன மரணவடிவ துக்கத்திற்கு ஹேதுவா யிருத்தலால் அநர்த்தமெனப்படுகின்றன. அவ்வநர்த்தத்தின் நிவிருத்தியும் பரமாநந்தத்தின் பிராப்தியும் மோக்ஷம் எனப்படுகின்றது. அது (மோக்ஷம்) 1. கிரந்தத்தின் பரமப்பிரயோஜனமாம்; 2. ஞானம் அவாந்தரப்பிரயோஜனமாம். (32.)

1. எதனிடத்திற் புருஷனுக்கு இச்சையுண்டாகின்றதோ அது பரமப் பிரயோஜன மெனப்படுகின்றது. அதுவே புருஷார்த்தமென்றும் சொல்லப்படுகின்றது. அந்த இச்சை துக்கநிவிருத்தியிலும் சுகப்பிராப்தியிலும் சகல புருஷர்களுக்கு முண்டாகின்றது. அதுவே மோக்ஷத்தின் சொரூபமாம்.

ஆதலால் பரமப் பிரயோஜனம் மோக்ஷமாம்; ஞானமன்று. ஏனெனின் சுகப்பிராப்தி துக்கநிவிருத்திகளுக்குச் சாதனமாகவோ ஞான மிருக்கிறது. சுகப்பிராப்தி அல்லது துக்கநிவிருத்திரூபமாக ஞானமில்லை. ஆதலால் அவாந்தரப் பிரயோஜனம் ஞானமாம். (33.)

2. எந்த வஸ்துவின் வாயிலாகப் பரமப்பிரயோஜனம் அடையப்படுகிறதோ, அது அவாந்தரப்பிரயோஜன மெனப்படும். கிரந்தத்தின் ஞானவாயிலாக முக்திரூபப் பரமப்பிரயோஜன மடையப்படுகின்ற தாகலின், ஞானம் அவாந்தரப் பிரயோஜனமாம். (34.)

## 27. கிரந்தத்தின் பிரயோஜனத்தில் சங்கையும் சமாதானமும். 27 - 32.

“அநர்த்த நிவிருத்தியும் பரமாநந்தப் பிராப்தியும் கிரந்தத்தின் பரமப் பிரயோஜனமா” மென்று சொல்லப்பட்டது. அது பொருந்ாது. ஏனெனின் † சகல வேதங்களும் ஜீவனைப் பரமாநந்த சொரூபமாக வர்ணிக்கின்றன. நீங்களும் அதனை யங்கீகாரஞ் செய்கிறீர்கள். அடையாத வஸ்துவின் அடைவு கூடும். எப்போதும் பிராப்தமாயி (அடையப்பட்டி)ருக்கிற வஸ்துவின் அடைவு முற்றும் பொருந்ாது. ஆதலால் “எப்போதும் பரமாநந்த சொரூபமாயுள்ள ஆத்மாவிற்குப் பரமாநந்தப் பிராப்தி கூறுதல் எவ்விதத்தாலும் பொருந்தா” தென்று ஒருவன் சங்கை செய்கிறான். (35.)

---

* புருஷர்களது முகந்திற்கெதிரில் பிரியவசனங்களைக் கூறி, புறத்தே அவர்களை அப்பிரியப்படுத்துகிறவர்கள் எவர்களோ, அவர்கள் சடரெனப்படுவர்.

† “விஜ்ஞானமாநந்தம் ப்ரஹ்ம-பிரஞ்ஞானமாகிய ஜீவனெவனோ அவன் ஆநந்த வடிவப் பிரஹ்மமாவன்.” என்றல் முதலிய நான்குவேதங்களின் வாக்கியங்களும் ஜீவனைச் சுபாவமாகச் சித்தித்த (இயல்பாற் பெறப்பட்ட) ஆநந்த வடிவமெனக் கூறுகின்றன.

**28.** அச்சங்கையைக் கேட்டுக் கிரந்தத்தின் பிரயோஜனத்திற் சிரத்தையை விடலாகாது. ஆத்ம வித்தையை யுபதேசிக்கும் குருவின் கிருபையினால் சந்தேகவடிவ குதர்க்கங்களைத் திருஷ்டாந்தத்தினால் நிவிருத்தி செய்துவிட வேண்டும். (36.)

**29.** அந்தத் * திருஷ்டாந்தம் சொல்லப்படுகின்றது:—ஒரு புருஷன்கையில் கங்கணம் இருக்க, அவனுக்கு "என்கைக் கங்கணம் காணாமற்போயிற்று" என்று பிரமமுண்டாய் விடுமாயின், அப்போது அவனுக்கு மற்றொருவன் வார்த்தையினால் "என் கங்கணம் கையிலிருக்கின்றது" என்று கங்கணத்தின் ஞான முண்டாய்விடுகின்றது. அப்போது அவன் "என் கங்கணம் கிடைத்து விட்டது" என்று சொல்லுகிறான். இவ்வாற்றால் அடையப்பட்டிருந்த கங்கணத்தின் அடைவும் சொல்லப்படுகின்றது. (37.)

அங்ஙனமே பரமாநந்த சொரூபமான ஆத்மாவினிடத்தில் அவித்தையின் பலத்தினால் "ஆத்மா பரமாநந்தசொரூப மன்று; பிரஹ்மமே பரமாநந்த சொரூபம்; அந்தப் பிரஹ்மத்துக்கும் எனக்கும் வியோகம் உண்டாய்விட்டது; உபாசனையினால் அந்தப் பிரஹ்மத்தை யடைவேன்" என்று அநேக மூடஜனங்களுக்குப் பிராந்தி யுண்டாயிருக்கிறது. வெகு பண்டிதர்களும் இவ்வாறு சொல்லுகிறார்களெனின், அவர்களும் மூடர்களேயாவர். ஏனெனின், ஜீவப்பிரஹ்ம வியோகத்தை யங்கீகரிப்பவர் மூர்க்கரெனப்படுகின்றனர். அப்புருடர்களுக்கு உத்தம சம்ஸ்காரத்தினால் பிரஹ்ம ஞானியாகிய ஆசாரியரிடத்தினின்றும் ஒருகால் வேதாந்த சிரவணம் கிடைத்துவிடுமாயின், அப்போது கேட்ட அர்த்தத்தை நிச்சயித்துப் "பரமாநந்தம் நமக்குக் கிரந்தத்தினாலும் ஆசாரியருடைய கிருபையினாலும் கிடைத்தது." என்று சொல்லுகிறார்கள். அங்ஙனம் அவர்கள் கூறுவதற்கு அபிப்பிராயம் இதுவாம்:—ஆத்மாவோ முன்பும் பரமாநந்த சொரூபமாகவே யிருந்தது. ஆனால் "எனது ஆத்மா பரமாநந்த சொரூபமா யிருக்கிற" தென்று விளங்காதிருந்தது. ஆதலால், பரமாநந்தம் பிராப்தமில்லாததுபோலிருந்தது. ஆசாரியர் மூலமாகக் கிரந்தத்தைக் கேட்டலால் பரமாநந்தம் புத்தியில் விளங்குகிறது. அதனால் பரமாநந்தத்தை அடைந்ததாகச் சொல்லுகிறார்கள்.

இவ்வாற்றால் **பிராப்தத்தின் பிராப்தியும்** (அடைந்ததின் அடைவும்) பொருந்துதலால் பரமாநந்தப் பிராப்தி வடிவ கிரந்தத்தின் பிரயோஜனம் சம்பவிக்கின்றது. (38.)

**30.** பிராப்தத்தின் பிராப்தி கிரந்தத்தின் பிரயோஜனமாவதுபோல, **நித்திய நிவிருத்தத்தின் நிவிருத்தியும்** பிரயோஜனமாதல் சம்பவிக்கின்றது.

---

* வாதிப்பிரதிவாதிகள் இருவருக்கும் சம்மதமான பொருள் யாதோ, அது திருஷ்டாந்தமாம். அதுவே உதாரணமாம். திருஷ்டாந்தத்தினால் சித்தித்தபொருளைத் தார்ஷ்டாந்தமென்பர். அதனையே சித்தாந்த மென்றும் கூறுவர்.

திருஷ்டாந்தம்:—ரஜ்ஜுவினிடத்திற் சர்ப்பம் நித்திய நிவிருத்தமாம். அது ரஜ்ஜுவின் ஞானத்தால் நிவிருத்தியாகிறது. அங்ஙனமே ஆத்மாவினிடத்திற் சமுசாரம் நித்திய நிவிருத்தமாம். அதன் நிவிருத்தி ஆத்மாவின் ஞானத்தினால் உண்டாகிறது. ஆகையால் * நித்திய நிவிருத்தத்தின் நிவிருத்தியும் † நித்தியப் பிராப்தத்தின் பிராப்தியும் கிரந்தத்தின் பரமப்பிரயோஜனமாம்.(39.)

## 31. ஒரு பதார்த்த (மோக்ஷ)த்தில் பாவம் அபாவமென்று இரண்டு பொருந்தாமை.

"காரணசகித ஜகத்தின் நிவிருத்தியும் பரமாநந்தப்பிராப்தியும் கிரந்தத்தின் பிரயோஜனமாம்" என்று முன் சொல்லப்பட்டது. அது பொருந்தாது. ஏனெனின் நிவிருத்தியென்பது துவம்ஸத்திற்காம். துவம்ஸம் நாசம் என்பன பரியாயச்சொற்கள். "அந்த நாசம் அபாவரூபமாம். ஆதலால் மோக்ஷத்தில் பாவரூபத்தன்மையும், அபாவரூபத்தன்மையுமாகிய இரண்டும் தோற்றுகின்றன.

1. அநர்த்தத்தின் நிவிருத்தியைக் கூறுதலால் அபாவவடிவத்தன்மை தோற்றுகின்றது.

2. பரமாநந்தத்தின் பிராப்தியைச் சொல்லுதலால் பாவவடிவத்தன்மை தோற்றுகின்றது.

அவ்விரண்டும் ஒரு பதார்த்தத்தில் பொருந்தா. ஏனெனின் பாவரூபத்தன்மையும் அபாவரூபத்தன்மையுமாகிய இரண்டும் தம்மில் விரோதிகளாம். விரோதி தர்மங்கள் எவையோ அவை ஒருகாலத்தில் ஒருவஸ்துவிலிரா. ஆதலால் கிரந்தத்தின் பிரயோஜனம் சம்பவியாது." என்று ஒருவன் சங்கை செய்கின்றான். (40.)

---

* வர்த்தமான காலத்தில் வியாவகாரிக அல்லது பிராதிபாஸிகப் பிரபஞ்சத்தின் பாவமிருக்கவும், பாரமார்த்திக சத்தையினால் பிரபஞ்சத்திற்கு மூன்று காலத்திலும் நிஷேதமுக சுருதியினாலும் வித்துவான்களது அநுபவத்தினாலும் சித்தித்த அத்தியந்தாபாவ மிருக்கின்றது. அதுவே அதன் நித்தியநிவிருத்தியாம். இதனையே விஷயவடிவ நிவிருத்தி யென்றும் கூறுவர். முற்கூறிய நித்தியநிவிருத்தியினையுடைய பிரபஞ்சம் எதுவோ,அது நித்தியநிவிருத்தம் அதாவது துச்சம்(வெறுமை-பாழ்)எனப்படுகின்றது. அந்த நித்தியநிவிருத்தப் பிரபஞ்சத்தின் நிவிருத்தி, அதாவது இருக்கின்ற பரமார்த்த சத்தையினால் சுருதி யுக்தி தத்துவஞானம் என்பவற்றால் முக்காலத்தின்மையை நிச்சயித்தலாகிய விஷயிவடிவ நிவிருத்தி யாதோ, அது நித்தியநிவிருத்தத்தின் நிவிருத்தியாம்.

† தன் வீட்டில் புதைக்கப்பட்டிருக்கும் நிதி அறியாமையினால் அடையப்படாதது போலிருக்கின்றது. அதனை அஞ்சனமுதலிய சாதனங்களால் நிச்சயித்தலாகிய ஞானம் எதுவோ அது நித்தியப் பிராப்தத்தின் பிராப்தியாம். அங்ஙனமே பரமாநந்த வடிவப் பிரஹ்மம் யாதோ, அது எல்லாவற்றிற்கும் தானே தானாக (சொரூபமா)யிருத்தலால் நித்தியப் பிராப்தமாம். ஆயினும் அது அஞ்ஞானத்தினால் அடையப்படாததுபோ லிருக்கின்றது. அதனைத் தத்துவஞானத்தினால் "நானே பரமாநந்த வடிவப் பிரஹ்மம்" என்று நிச்சயித்தலாகிய ஞானம் எதுவோ அது நித்தியப் பிராப்தத்தின் பிராப்தியாம்.

## 22. அச்சங்கையின் உத்தரம்.

காரணசகித ஜகத்தின் நிவிருத்தி அதிஷ்டானப் பிரஹ்மரூபமாம்; அதனின் வேறன்று. அது சர்ப்ப நிவிருத்தி அதிஷ்டான ரஜ்ஜு வடிவமாதல் போலவாம். "சகல கற்பித வஸ்துக்களின் நிவிருத்தியும் அதிஷ்டான ரூபமாம்; அதனின் வேறாகா" தென்பது பாஷியகாரரது சித்தாந்தம். ஆதலால் இவ்விடத்தில் அநர்த்த நிவிருத்தி * பிரஹ்மரூபமாம். ஏனெனின் சகல அநர்த்தத்திற்கும் அதிஷ்டானம் பிரஹ்மமாம். அந்தப் பிரஹ்மம் பாவரூப (உண்மை வடிவ) மாம். ஆதலால், அநர்த்தத்தின் நிவிருத்தியே பாவரூபமாயிருத்தலின் கிரந்தத்தின் பிரயோசனம் பொருந்துகின்றது என்னும் வார்த்தை சித்தித்தது. (41.)

வாழ்த்து.

இந்த முதலாவது தரங்கத்தை எந்த ஜிஞ்ஞாசுவானவன் நிரந்தரமாகப் படிக்கிறானோ, அவனைத் தீனதயாளுவான தாது குருவானவர் முக்தனாகச் செய்வாராக.

அநுபந்த சாமாநியநிரூபணம் என்னும் முதலாவது தரங்கம்

முற்றிற்று.

---

* கற்பித அநர்த்தத்தின் நிவிருத்தியில் இரண்டு பக்ஷங்களுண்டு:—

1. "அறியப்படுதற்றன்மைத் தர்மத்தினால் உபலக்ஷித (உபலக்ஷணத்தா லறியப்பட்ட) அதிஷ்டான வடிவம் கற்பிதத்தின் நிவிருத்தியாம்" என்பது முதற்பக்ஷம்.

2. "கற்பிதத்தின் நிவிருத்தி அதாவது அபாவம் எதுவோ அது அதிஷ்டானத்தினும் அதாவது அதிகரணத்தினும் வேறாகிய அநிர்வசனீயமாம்" என்பது இரண்டாவது பக்ஷம்.

அவற்றுள் முதற்பக்ஷம் பாஷியகாரரதாம்; இரண்டாவது பக்ஷம் நியாயவாசஸ்பதிகாரராகிய வாசஸ்பதிமிசிரரதாம்.

1. எங்ஙனம் முதற்பக்ஷத்தில் "புருஷன் ஸ்தாணு" என்னும் வாக்கியத்திற்குப் "புருஷனது அபாவ வடிவம் ஸ்தாணு" என்னும் பாதசாமாநாதிகரணியத்தினால் அர்த்தமாகின்றதோ, அங்ஙனமே "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம - நிச்சயமாக இவ்வெல்லாம் (ஜகத்து) பிரஹ்மம்" என்று விதிமுகத் தன்மையினால் சகல ஜகத்திற்கும் பிரஹ்ம வடிவத் தன்மையைப் பிரதிபாதிக்கும் சுருதி வாக்கியத்திற்கும் "இந்தத் தோற்றப்படுகின்ற சர்வசகத்தின் அபாவவடிவம் பிரஹ்மம்" என்று "சர்வம்" "பிரஹ்மம்" என்னும் சமான விபக்தி (முதல் வேற்றுமையினை)யுடைய இரண்டு பதங்களுக்கும் பாதசாமாநாதிகரணிய வடிவ சம்பந்தத்தினால் அர்த்தமாகின்றது. ஆதலால் கற்பித அநர்த்தத்தின் நிவிருத்தி அதாவது பரமார்த்த சத்தையினால் அத்தியந்தாபாவம் யாதோ, அது பிரஹ்ம வடிவமாயிருத்தலின் மோக்ஷத்தில் பாவவடிவத்தன்மையும் அபாவவடிவத்தன்மையுமிருத்தலால் துவைதம் வரும் என்னும் சங்கையில்லை.

2. இரண்டாவது பக்ஷத்தில் "புருஷன் தாணு" என்னும் வாக்கியத்திற்குப் "புருஷனுடைய அபாவமுடையது தாணு" என்னும் அர்த்தம் உண்டாகின்றது. "நிச்சயமாக இவ்வெல்லாம் பிரஹ்மம்" என்னும் சுருதி வாக்கியத்திற்கும் "தோற்றுகின்ற இச்சகல சகத்தின் அபாவமுடையது பிரஹ்மம்" என்பது பொருளாகின்றது.

முற்கூறிய அபாவ வடிவ நிவிருத்தியும் அநிர்வசநீய மென்னும் மித்தையாம். எந்த வஸ்து அநிர்வசநீயமாமோ, அது வாஸ்தவ அதிஷ்டானத்தினும் பின்னமாகாது; அதிஷ்டான வடிவமாம். ஆதலால் மோக்ஷத்தில் துவைதம் வரும் என்னும் சங்கையில்லை.

கூறிய இவ்விரண்டு பக்ஷங்களில் முதற்பக்ஷத்தில் இலாகவமுண்டு. இரண்டாவது பக்ஷத்தில் கௌரவமுண்டு. ஆதலால் முதற்பக்ஷம் சிரேஷ்டமாம். இருவகையாலும் மோக்ஷத்தில் துவைதம் வரும் என்னும் சங்கையில்லை.

ஓம்.

ஸ்ரீகணேசாயநமஃ.

# ஸ்ரீ விசாரசாகரம்.

## இரண்டாவது தரங்கம்.

## * அநுபந்தவிசேஷ நிரூபணம்.

இதன் முதல் தரங்கத்தில் அநுபந்தம் சுருக்கமாகச் சொல்லப்பட்டது. அது இப்போது இரண்டாவது தரங்கத்தில் விஸ்தாரமாய்ப் பிரதிபாதிக்கப்படுகிறது.

### 33. காரணத்தோடு ஜகத்து நீங்குதலாகிய மோக்ஷத்தினது முதல் அம்சத்தின் இச்சை பொருந்தாமை. 33 - 36.

நாலு சாதனங்களோடு கூடினவன் அதிகாரி என்று சொல்லப்பட்டது. அந்நான்கு சாதனங்களில் முமுக்ஷுத்துவமொன்று. முமுக்ஷுத்துவமென்பது மோக்ஷ இச்சை. காரணசகித (மூலாவித்தையோடுகூடிய) ஜகத்தின் நிவிருத்தியும் பிரஹ்மப்பிராப்தியும் மோக்ஷமெனப்படுகின்றது. இதில் காரண சகித ஜகத்தின் நிவிருத்தியாகிய மோக்ஷ அம்சத்தினை ஒருவரும் விரும்புகிறதில்லை யென்னும் வார்த்தையை, (42.)

### 34. பூர்வபக்ஷி பிரதிபாதனம் செய்கிறான். அதிகாரிகண்டநம். (1) 34 - 38.

மூலாவித்தையோடு ஜகத்தின் † நாசத்தை யொருவரும் இச்சிக்கிற தில்லை. ஆனால் விவேகியானவன் மூன்றுவித துக்கங்களையும் நாசஞ்செய்ய

---

* ஒருவன் வீடுகட்ட ஆரம்பிக்கும்பொழுது வேறொருவன் தடுக்கிறான். அப்போது அவன் நியாஸ்தலத்தில் தன் பாத்தியதையை ஸ்தாபித்துக்கொண்டு தடையில்லாதவனாய் மறுபடியும் வீடுகட்டுகிறான். அதுபோல கிரந்த கர்த்தா இதன் முதல் தரங்கத்தில் அநுபந்த சதுஷ்டயத்தைச் சாதாரணமாய் நிரூபித்தார். அது இந்நூலாசிரியர் வீட்டினைச் செய்யத் தொடங்கியது போலும். அதனை இரண்டாவது தரங்கத்தின் முற்பாதியால் பூர்வபக்ஷி தடுத்துவிட்டான். அப்போது சித்தாந்தியாகிய நூலாசிரியர் சுருதியாகிய இராஜாவை அநுசரித்த யுக்தியாகிய மந்திரியினிடத்து முறையிட்டுக்கொண்டு அவர் பலத்தால் மறுபடியும் தடையில்லாதவராய் நான்கு அநுபந்தங்களின் நிரூபணத்தோடு இந்நூலைச் செய்ய ஆரம்பித்திருக்கின்றார்.

இவ்வாற்றால் இவ்விரண்டாவது தரங்கத்தில் நான்கு அநுபந்தங்களையும் விசேஷமாக நிரூபித்திருக்கின்றார்.

† பிச்சைக்காரன் பயத்தினால் சமையல்பண்ணாமலிருக்க ஒருவனும் இச்சியாததுபோலும், சீலைப்பேனுக்கஞ்சி துணியை எறிந்துவிட ஒருவனும் இச்சியாததுபோலும், பசு பக்ஷிகளின் பயத்தினால் நிலத்தைவிட்டுவிட ஒருவனும் இச்சியாததுபோலும்

இச்சிக்கிறான். இதன் அபிப்பிராயம் இதுவாம்:—துக்கம் மூன்றுவகையினதாம்:— 1 ஒன்று அத்தியாத்மதுக்கம். 2 மற்றையது அதிபூததுக்கம். 3 மூன்றாவது அதிதைவதுக்கம்.

1. ரோகம், தாகம், பசி முதலியவற்றாலுண்டாகும் துக்கம் * அத்தியாத்ம துக்கமெனப்படும். (43.)

2. திருடர், புலி, சர்ப்ப முதலியவற்றாலுண்டாகும் துக்கம் † அதிபூத துக்கமெனப்படும். (44.)

3. யக்ஷராக்ஷஸப் பிரேதக்கிரகாதிகளாலும் சீதவாத ஆதபங் (குளிர் காற்று வெயில்) களாலும் உண்டாகும் துக்கம் ‡ அதிதைவதுக்கமெனப்படும்.

இத்தன்மைய மூன்றுவித துக்கங்களை நிவிருத்திக்க எல்லோருமிச்சிக்கிறார்கள். துக்கத்திற்கு அன்னியமான எதனையும் நிவர்த்திக்க விவேகி இச்சிக்கிறதில்லை. ஆதலால் அஞ்ஞானசகித சகல ஜகத்தின் நிவிருத்தியில் இச்சை யொருவருக்கு முண்டாகிறதில்லை. (46.)

**35.** மேலும், "எல்லோரும் துக்க நிவிருத்தியை இச்சித்தாலும், அஞ்ஞானசகித சகல ஜகத்தின் நிவிருத்தியின்றித் துக்கநிவிருத்தி யுண்டாகாது. ஆதலால் துக்கநிவிருத்தியின் பொருட்டு அஞ்ஞான சகித சர்வஜகத்தின் நிவிருத்தியையும் அபேக்ஷிக்கிறார்கள்" என்று சித்தாந்தீ கூறுகின்றார். (47.)

**36.** அது பொருந்தாது. ஏனெனின் ஆயுள்வேதத்திற் சொல்லிய ஔஷதங்களால் ரோகஜந்நிய துக்கங்கள் நிவிருத்தியாகின்றன. போஜனத்தினால் பசியாலுண்டாகும் துக்கம் நிவிருத்தியாகின்றது. இவ்விதமாக அததற் கேற்பட்ட பரிகாரத்தால் அந்தந்தத் துக்கம் நிவிருத்தியாகின்றது. ஆதலால் அஞ்ஞான சகித ஜகத்தின் நிவிருத்தியின்றியும் துக்கநிவிருத்தியுண்டாம். துக்க நிவிருத்தியின் பொருட்டு அஞ்ஞானசகித ஜகத்தின் நிவிருத்தியை விரும்புதல் $ பொருந்தாது. "காரணசகித ஜகத்தின் நிவிருத்தியும் பிரஹ்மத்தின்

---

விவேகியானவன் மூவித துக்கங்களின் பயத்தினால் காரணத்தோடு ஜகத்து நசித்துப் போகவேண்டுமென்று இச்சியான்; மூவித துக்கத்தின் நாசத்தை யிச்சிக்கிறான். இது சாங்கியமதாநுசாரிகளது சங்கை.

* ஆத்மாவை யாசிரயித்திருக்கும் ஸ்தூல சூக்ஷ்ம சரீரம் அத்யாத்ம மெனப்படும். அதனாலுண்டாகும் துக்கம் அத்யாத்ம துக்க மெனப்படும். அதனையே அத்தியாத்ம தாப மென்றும் கூறுவர்.

† தனது சரீராதி சங்காதங்களுக்கு வேறாய் சக்ஷுராதி இந்திரியத்திற்கு விஷயமாவது யாதோ அது அதிபூதமாம். அதினின்று முண்டாகும் துக்கம் அதிபூத துக்கமெனப்படும்.

‡ சரீராதி தனது சங்காதத்திற்கு வேறாய் சக்ஷுராதி இந்திரியத்திற்கு விஷயமாகாதிருப்பது அதிதைவமாம். அதன் பிரேரணையினாலுண்டாகும் துக்கம் அதிதைவ துக்கமாம்.

$ முன் அநுபவிக்கப்பட்ட வஸ்துவின் இச்சையுண்டாம். பிரஹ்மவடிவ அதிஷ்டானத்தின் ஞானத்தினால் காரண சகித ஜகத்தினது நிவிருத்தியின் அநுபவம் முன் எப்போதும் செய்யப்படவில்லை. ஆதலால் காரணசகித ஜகத்தின் இச்சை ஒருவருக்கும்

பிராப்தியும் மோக்ஷ மெனப்படுகின்றது." இதில் காரணசகித ஜகத்தின் நிவிருத்தி வடிவ மோக்ஷத்தின் முதலாவது அம்சத்தில் இச்சை யொருவருக்கு முண்டாகாது. (48.)

## 37. பிரஹ்மப் பிராப்தி வடிவ மோக்ஷத்தினது இரண்டாவது அம்சத்தின் இச்சையும் ஒருவருக்கும் பொருந்தாதென்னும் வார்த்தையைப் பூர்வபக்ஷி கூறுகின்றான்.

எந்தவஸ்து முன் அநுபவிக்க (அறிய) ப்பட்டிருக்கிறதோ, அதனை யடைய இச்சையுண்டாகும். அறியப்படாத பதார்த்தத்தை யடையவேண்டுமென்று இச்சையுண்டாகாது. அன்னியதேசங்களில் அனேகபதார்த்தங்கள் அறியப்படாமலிருக்கின்றன. அவைகளை யடைய இச்சை யொருவருக்கு முண்டாகாததுபோல் அதிகாரிக்குப் பிரஹ்மசொரூபத்தின் ஞான மில்லை. எவனுக்குப் பிரஹ்மத்தின் ஞானமிருக்கிறதோ அவன் அதிகாரியல்லன்; முக்தனவன். அவனுக்குப் பிரஹ்மப் பிராப்தியில் இச்சையுண்டாகாது. ஆதலால் வேதாந்த சிரவணத்துக்கு முன் அறியப்படாத பிரஹ்மத்தை யடைதலில் இச்சையுண்டாகாது. இவ்வாற்றால் அஞ்ஞானசகித ஜகத்தின் நிவிருத்தியும் பிரஹ்மப்பிராப்தியுமான மோக்ஷத்தில் இச்சை யொருவருக்குமுண்டாகமாட்டாது. ஆதலால் முமுக்ஷு ஒருவனும் இல்லை. (49.)

## 38. முமுக்ஷுத்துவம் பொருந்தாமையால் வைராக்கிய முதலியனவும் பொருந்தாதெனல்.

### வேறு விதத்தால் அதிகாரியின் அபாவத்தைப் பூர்வபக்ஷி பிரதிபாதிக்கின்றார்.

எல்லோரும் விஷயசுகத்தை இச்சிக்கிறார்கள். சகல விஷயங்களையும் விட்டுத் தவஞ்செய்கிறவர்களும் பரலோகத்தினுத்தமபோகங்களை இச்சித்து அநேக கிலேச (துன்ப) ங்களைப் பொருத்துக்கொள்ளுகிறார்கள். ஆதலால் இகலோக அல்லது பரலோக விஷயசுகத்தை எல்லோரும் இச்சிக்கிறார்கள். அந்த விஷயசுகம் மோக்ஷத்திலில்லை. ஆதலால் மோக்ஷசாதனத்தை ஒருவரும் இச்சிக்கிறதில்லை. இவ்விதத்தால் மோக்ஷத்தின் இச்சையாகிய முமுக்ஷுத்துவம் சித்திக்கிறதில்லை. அன்றியும் எல்லோருக்கும் விஷயசுகத்தில் இச்சை யிருத்தலால் வைராக்கிய சம தம உபரதிகளும் ஒருவரிடத்திலும் சித்திக்கிறதில்லை. ஆதலால் சாதனசதுஷ்டய சகித அதிகாரி யில்லாமையால் கிரந்தாரம்பம் நிஷ்பிரயோசனமாம். (50.)

---

கூடாது என்பது பூர்வபக்ஷியினது சங்கையின் விளக்கமாம். இதற்குச் சமாதானம் மேல் 63-வது பிரசங்கத்தின் டிப்பணி (விளக்கவுரை) யில் சொல்லப்படும்.

## விஷயகண்டநம். (2) 39-44.

## பூர்வபக்ஷம்.

### 39. ஜீவப்பிரஹ்ம ஐக்கியம் பொருந்ாதெனல்.

முன் (25) "ஜீவப்பிரஹ்ம ஐக்கியம் இக்கிரந்தத்தின் விஷயம்" என்று கூறியது பொருந்தாது. ஏனெனின்,

1. பிரஹ்மமோ,

(1) [1] * அவித்தை [2] † அஸ்மிதை [3] ‡ ராகம் [4] ‖ துவேஷம் [5] § அபிநிவேசம் என்னும் ஐந்து கிலேசங்களு மின்றியதாம்.

(2) விபாபகமாம்;

(3) ஏகமாம்; ¶ ஸஜாதீய பேதரகிதமாம். ஏனெனின் பிரஹ்மத்திற்கு ஸஜாதீயமான வேறு பிரஹ்மமில்லை.

---

* விசாரித்துப் பார்க்க எது இல்லாமற்போகிறதோ, அது அவித்தையெனப்படும். அவ்வவித்தை 1. மூலாவித்தை 2. தூலாவித்தை யென இருவகைத்து.

1. சுத்தசைதன்னியத்தை மூடிக்கொண்டிருப்பது மூலாவித்தை.

2. கடமுதலிய உபாதியுடைய சைதன்னியத்தை மறைப்பது எதுவோ அது தூலாவித்தையாம். மூலாவித்தையும் (1) காரிய (2) காரணபேதத்தால் இருவகைத்து.

(1) ஆவரண விக்ஷேப சக்திகளுடன்கூடி அநாதிபாவரூபமா யிருப்பது காரண வடிவ அவித்தையாம்.

(2) ஒன்றில் மற்றொன்றின் புத்தி வடிவத்தோற்றம் எதுவோ, அது காரியவடிவ அவித்தையாம்.

அவற்றில் காரியவடிவ அவித்தையும்,

[1] அநாத்மாவாகிய தேகாதிகளிடத்தில் ஆத்மபுத்தி,

[2] அநித்தியமான ஆகாயாதிகளில் நித்தியபுத்தி,

[3] துக்கரூப தனாதிகளில் சுகபுத்தி,

[4] அசுசியான சரீரம் ஸ்திரீ புத்திரர்களை முத்தமிடுதல் முதலியவற்றில் சுசி புத்தி என்று இவ்வாறு நான்கு வகைப்படும்.

இங்குப் பஞ்சக்கிலேசப் பிரசங்கத்தில் முற்கூறிய நால்வகைக் காரியாவித்தையே கொள்ளப்படும்.

† புத்தி ஆத்மாக்களின் ஒருமை யுணர்ச்சி அஸ்மிதை. இதனையே சாமாநிய அகங்கார மென்றும் கூறுவர்.

‡ அநுகூல பதார்த்தத்தின் ஞானத்தால் உண்டாகும் புத்திவிருத்தி ராகம்.

‖ பிரதிகூல பதார்த்தத்தின் ஞானத்தாலுண்டாகும் புத்திவிருத்தி துவேஷம்.

§ மரணபயத்தால் சரீரத்தை ரக்ஷித்தலிலுண்டாகும் ஆக்கிரகம் அபிநிவேசம்.

¶ பிரஹ்மம் ஸஜாதீய விஜாதீய ஸ்வகதபேதரகிதமா யிருக்கிறது.

1. தனக்குச் சமானஜாதியோடுள்ள பேதம் ஸஜாதீயம்; ஒரு பிராமணனுக்கு மற்றொரு பிராமணனோடுள்ள பேதம் போலும்.

2. தனக்கு அன்னியஜாதியோடுள்ள பேதம் விஜாதீயம்; பிராமணனுக்குச் சூத்திரனோடுள்ள பேதம் போலும்.

2. ஜீவனே,

(1) சர்வக்கிலேசமுடையதும்,

(2) பரிச்சின்னமும்,

(3) நாநாவுமாம். ஏனெனின் எத்தனை சரீரங்களுளவோ அத்தனை ஜீவர்களுள. எல்லாச் சரீரங்களிலும் * ஒரே ஜீவன் இருப்பதாய்ச் சொல்லும் பக்ஷத்தில் ஒரு சரீரத்தி லுண்டாகும் சுகதுக்கங்கள் எல்லாச் சரீரத்திலும் உண்டாகவேண்டும்.

---

3. தனக்குத் தன் அவயவங்களோடுள்ள பேதம் ஸ்வகதபேதம். அது பிராஹ்மணனுக்குத் தனது கை கால் முதலிய அவயவங்களோடுள்ள பேதம் போலும்.

1. எல்லாம் ஒரே பிரஹ்ம ஸ்வரூபமாயிருத்தலால் ஸஜாதீயமான வேறு பிரஹ்மமில்லாமையால் பிரஹ்மம் ஸஜாதீய பேதரகிதமானது.

3. பிரஹ்மசேதனத்துக்கு வேறாகத் தோன்றும் ஜடப்பிரபஞ்சம் விஜாதீயம். பிரபஞ்சம் சத்தியமானால் பிரஹ்மம் விஜாதீய பேத சகிதமாயிருக்கும். ஆனால் பிரபஞ்சம் சத்தியமன்று; ரஜ்ஜுவிற் கற்பிக்கப்பட்ட சர்ப்பம்போல் மித்தையாயிருக்கிறது. எது மித்தையோ அது அதிஷ்டானத்தினும் வேறுபடுகிறதில்லை. ஆதலால் பிரஹ்மம் விஜாதீய பேதரகிதமாயிருக்கிறது.

3. பிரஹ்மம் நிரவயவமாயிருக்கின்றது. சச்சிதானந்தங்கள் பிரஹ்மத்தின் தர்மங்களாம்; அவயவங்களன்று. புஷ்பத்தின் ஸ்பரிச ரூப ரஸ கந்தங்களாகிய குணங்கள் போல் சச்சிதானந்த தர்மங்கள் பிரஹ்மத்தின் ஸ்வரூபமேயாம்; அதனின் வேறன்று. ஆதலால் பிரஹ்மம் ஸ்வகதபேத ரகிதமாயிருக்கின்றது.

* ஜீவப்பிரஹ்ம ஐக்கியவிஷயமாய் ஆக்ஷேப சமாதானங்கள்:—

1. ஆக்ஷேபம்:—எல்லாச் சரீரங்களிலும் ஒரே ஆத்மா இருந்தால் பிரஹ்மத்திற்கும் ஆத்மாவிற்கும் ஏகத்துவஞ் சொல்லக்கூடும். ஆத்மா அநேகமாயிருப்பதால் ஏகத்துவஞ் சொல்லலாகாது.

1. சமாதானம்:—1. ஆத்மா அநேகமென்பதற்கு யாதொரு பிரமாணமுமில்லை.

2. இந்திரியமாகிய பிரத்தியக்ஷப் பிரமாணங்களால் அஞ்ஞானிக்குப் பேதம் தோற்றுகின்றது. அது சரீரத்தை விஷயஞ்செய்வதாம்; ஆத்மாவை விஷயஞ்செய்வதன்று. ஏனெனின், ஆத்மா சுருதியைத் தவிர வேறு பிரமாணங்களால் அறியத்தக்கதன்று. ஆதலால் சரீரங்களிலுள்ள ஆத்மா வெவ்வேறன்று. அநேக கடங்களிலுள்ள ஆகாசம் ஒன்றாயிருப்பதுபோல அநேக சரீரங்களிலுள்ள ஆத்மாவுமொன்றே. இதற்கும் பிரஹ்மத்திற்கும் ஏகத்துவஞ் சொல்லக்கூடும்.

2. ஆக்ஷேபம்:—ஆத்மா அநேகமென்பதில் ஒருபிரமாணமுமில்லை யென்பது பொருந்தாது. ஏனெனின் ஆத்மா நாநாவென்னும் அர்த்தத்தில் பிரத்தியக்ஷாதி சகல பிரமாணங்களும் இவ்வாறு சித்திக்கின்றன:—

1. எங்கெங்கு அகம்பிரத்தியயத்தின் (யானெனு முணர்ச்சியின்) பேதமிருக்கின்றதோ, அங்கங்கு ஆத்மாவின் பேதமுண்டு.

(1) தேகங்கள்தோறும் "யான் பிராஹ்மணன், யான் க்ஷத்திரியன்" என்பதாக அகம்பிரத்தியயத்தின் பேதம் பிரத்தியக்ஷமாய்க் காணப்படுகின்றது.

40. "சுகமுதலியன அந்தக்கரண தர்மங்கள். அவ்வந்தக்கரணம் அநேகமாம். ஆதலால் ஒருவனுக்குச் சுகதுக்கங்கள் உண்டானால் எல்லோருக்கும் அவை உண்டாகிறதில்லை. சாக்ஷி சுகதுக்கரகிதமாயும் ஏகமாயும் சர்வக்கிலேசரகிதமாயும் இருக்கிறது. அதற்குப் பிரஹ்மத்தோடு ஏகத்துவஞ் சொல்லக்கூடும்." என்று வேதாந்தி கூறுகின்றனர்.

---

(2) சகல தேகங்களிலும் ஆத்மாவின் ஏகத்துவமுளதாயின், "நீ, யான், இது" என்றல் முதலிய வியவகாரத்திற்குக் கேடுண்டாகும். அதனால் ஆத்மாவின் பேதத்தில் பிரத்தியக்ஷப்பிரமாண மிருக்கின்றது.

2. ஆத்மாவின் பேதமில்லையாயின் "நீ, யான், இது" என்றல் முதலிய வியவகாரம் சித்தியாது. ஆதலால் வியவகாரசித்தி பேதமின்றிச் சம்பவியாமையால் ஆத்மாவின்பேதத்தில் அர்த்தாபத்திப் பிரமாணமும் சித்தமாகின்றது.

3. (1) ஆத்மா சரீரங்கள்தோறும் வேறு வேறும்; சரீரவடிவ வியக்திகள் பின்னமாயிருத்தலின்; ஆ முதலிய பசுக் (விலங்கு) களைப்போல.

(2) ஆத்மா சரீரங்கள்தோறும் பின்னபின்னமாம்; சரீரங்கள்தோறும் அகம்பிரத்தியயத்திற்குப் பேதமிருத்தலால்; கடமுதலியவற்றைப்போல.

இவைமுதலிய அநுமானப்பிரமாணங்களும் ஆத்மாவின் பேதத்தில் சித்தித்திருக்கின்றன.

4. (1) "அதிதி, தேவர், கந்தர்வர், மனிதர், பிதிரர், அசுரர்" என்று தேவர் முதலியோரது பேதத்தைப் பிரதிபாதிக்கும் சுருதியும்,

(2) "தேவர், தானவர், கந்தர்வர், இயக்கர், இராக்கதர், கின்னரர்" என்றல் முதலிய புராணவசனமும் ஆத்மாவின் பேதத்தில் பிரமாணமாம்.

5. ஆத்மாவிற்கு ஏகத்துவம் அங்கீகரிக்கின், வேதாந்த சித்தாந்தத்தில் சுகதுக்காதிகளின் வியவஸ்தை சித்தியாது. ஏனெனின்,

(1) ஒருவன் துக்கி அல்லது சுகியானால் எல்லோரும் துக்கிகள் அல்லது சுகிகளாதல்வேண்டும்.

(2) ஆத்மாவின் ஏகத்துவமுளதாயின் சகலரும் சர்வஞ்ஞராவர். ஆகவே விதிநிஷேதவடிவ சாஸ்திரங்கள் வியர்த்தமாகும்; சர்வஞ்ஞர்களைக் குறித்து விதி நிஷேதமின்மையால்.

(3) ஒருவன் பெத்தனானால் எல்லோருக்கும் பந்த முண்டாகும். அல்லது ஒருவன் முத்தனானால் எல்லோரும் முத்தராதல்வரும்.

ஆதலால் ஆத்மா அநேகமெனல் பிரமாணசித்தமாம்.

2. சமாதானம்:—ஆத்மா அநேகமென்பதில் சொல்லப்பட்ட பிரமாணங்கள் பொருந்தா. ஏனெனின்,

1. வியாப்தியின் வியபிசாரத்தி (பிறழ்ச்சியி) னால் பிரத்தியக்ஷப் பிரமாணம் பெறப்படாமையின்,

(1) "எங்கு எங்கு அகம் பிரத்தியயத்தின் பேதமுளதோ, அங்கு அங்கு ஆத்மாவின் பேதமுளது" என்னும் நியமவடிவவியாப்தியாதோ அது வியபிசாரத்தை யடைகின்றது. ஏனெனின், யான் சிசு, யான் குமாரன், யான் எவ்வனன், யான் விருத்தன் என்று சிசுத்துவமுதலிய அவஸ்தைகளின் பேதத்தால் அகம் பிரத்தியயத்திற்குப்பேதமிருக்கின்றது.

## 41. சாக்ஷி நாநாவாதல் 41-44.

அவ்வார்த்தை பொருந்தாது. ஏனெனின் கர்த்தா போக்தாவாயுள்ள ஜீவனுக்கு வேறாகச் சாக்ஷி இருக்கிறதென்பது மலடிமகனிருக்கிறானென்பதை ஒக்கும். சாக்ஷியை அங்கீகாரஞ்செய்யினும் அதை ஒன்றெனல் பொருந்தாது; அநேகமென்றே கொள்ளவேண்டும். ஏனெனின் வேதாந்த சித்தாந்தம் இதுவாம்:—"அந்தக்கரணமும் சுகதுக்கமுதலிய அந்தக்கரண தர்மங்களும் இந்திரியங்களுக்கும் அந்தக்கரணத்துக்கும் விஷயமாகா; ஆனால் சாக்ஷிக்கு விஷயமாம். ஏனெனின் இந்திரியங்கள் பஞ்சீகிருத பூதங்களை விஷயஞ் செய்கின்றன. இதன்கண் இத்துணைப்பேதம் இருக்கிறது:—

---

என்றாலும் சிசு முதலிய அவஸ்தையினையுடைய அகம் பிரத்தியயத்தின் அர்த்தமாகிய ஆத்மாவின் பேதத்தைக் காணாமையினாலும், ஆத்மாவின் பேதமுளதாகப் பாலியாவஸ்தை முதல் விருத்தாவஸ்தை பரியந்தம் செய்யப்பட்ட காரியங்களின் ஸ்மரணை சம்பவியாமையினாலும் ஆத்மாவின் பேதத்திற் பிரத்தியக்ஷப்பிரமாணம் பெறப்படாததாம்.

2. எங்ஙனம் ஒரே தேகத்தில் அவயவங்களின் பேதத்தை ஆசிரயித்துத் தலை, கை, கால்முதலிய வியவகாரங்கள் உண்டாகின்றனவோ, அங்ஙனமே சகல சரீரங்களிலும் ஆத்மாவின் ஒருமையுண்டாகியும் சரீரத்தின் பேதத்தை ஆசிரயித்து "நீ, நான், இது" என்றல் முதலிய வியவகாரங்கள் சித்தமாகின்றன.

2. அந்த வியவகாரம் ஆத்மாவின் பேதத்தை அபேக்ஷிக்கிறதில்லை. இவ்வாறு வியவகாரம் சித்திக்கவே ஆத்மாவின் பேதமின்றி வியவகாரம் சம்பவியாமையின்மையால் ஆத்மாவின் பேதத்தில் அர்த்தாபத்திப் பிரமாணமும் அசித்தமாம் (பெறப்படாததாம்).

3. சரீரமாகிய வியக்தியின் பேதத்தாலும் நானென்னும் பிரத்தியயத்தின் பேதத்தினாலும் ஆத்மாவிற்கும் பேதமுண்டு என்னும் அநுமானப் பிரமாணமும் அசித்தமாம். ஏனெனின், ஸ்தூலசூக்ஷ்மகாரணவடிவ மூன்றுதேகங்களுக்கும் ஜாக்கிரதேக சொப்பன தேகத்திற்கும் பேதமிருக்கினும் யானென்னும் உணர்ச்சியின் அர்த்தவடிவ ஆத்மாவிற்குப் பேதமின்மையால்.

4. (1) முன்சொல்லப்பட்ட சுருதி யாதோ அது ஆத்மாவின் உபாதிவடிவ தேவர் முதலியோர் தேகத்தின் பேதத்தைக் கூறுகின்றது; ஆத்மாவின் பேதத்தைக் கூறுவதில்லை. ஏனெனின் சகலதேகத்திலும் சைதன்னியம் ஏகரூபமாயிருத்தலின் ஆத்மாவின் பேதத்தின் அசம்பவமிருக்கின்றது. அதனால் முற்கூறிய சுருதி சரீரபேதத்தைப் பிரதிபாதித்தலிற் கருத்துடையதாம்; ஆத்மாவின் பேதத்தைப் பிரதிபாதித்தலிற் கருத்துடையதன்றெனல் பெறப்பட்டது.

(2) அவ்வாறே புராணவசனத்தையும் அறிந்துகொள்க.

5. (1) ஆத்மாவிற் கபேதமுளதாயின் சுகதுக்க முதலியவற்றிற்கு வியவஸ்தை சித்தியாது என்று நீ கூறியதும் பொருந்தாது. ஏனெனின் அச்சுக துக்கங்களின் வியவஸ்தை பிராரப்தகர்மத்தின் அதீனமாயிருத்தலாலும், ஒரே தேகத்தில் கர்மபேதத்தால் சுகதுக்க முதலியவற்றின் விசித்திரத்தன்மையைக் காணுதலாலும், சுகதுக்கங்கள் புண்ணிய பாவங்களின் காரியமாயிருத்தலின் அவற்றின் பேதத்தாலும், சிதாபாசனோடு கூடிய அந்தக்கரணவடிவ போக்தாவின் பேதத்தாலும் சுகதுக்க முதலியவற்றின் வியவஸ்தை சம்பவிக்கின்றது.

1. * நேத்திரேந்திரியம் உருவமுடைய வஸ்துவின் உருவம், உருவத்திற்காசிரயமான வஸ்துவென்னும் இரண்டையும் விஷயமாக்குகிறது. அது நீல பீதாதி வர்ணங்களுடன் கூடிய கடத்தின் உருவத்தையும் உருவத்திற்காசிரயமான கடத்தையும் நேத்திரேந்திரியம் விஷயஞ் செய்வதுபோலாம்.

2, † துவக்கிந்திரியமும் ஸ்பரிசமும் அதன் ஆசிரயமுமாகிய இரண்டையும் விஷயஞ்செய்கிறது.

---

(2) ஆத்மாவிற்கு ஏகத்துவமுளதாயின் சர்வ ஜனங்களும் சர்வஞ்ஞராவர். அதனால் விதிநிஷேதவடிவ சாஸ்திரங்கள் வியர்த்தமாகுமென்றதும் அசங்கதமாம். ஏனெனின்,

ஆத்மாவே எப்போதும் எங்கும் அறிகின்றது. அங்ஙனமாயினும் அவ்வத்தேகத்தில் அவ்வப்புத்தியினைக்கொண்டு தான் அறிகின்றது. எதனால் தேகபேதத்தால் புத்தியின் பேதம் நியமிதமாயிருக்கின்றதோ, அதனால் தேகங்கள்தோறும் ஞானத்தின் பேதம் உண்டாகின்றது.

அல்லது:—எதனால் வஸ்து அறியப்படுகின்றதோ அத்தன்மைய புத்திவிருத்திவடிவ ஞானம் எதுவோ அது பரிச்சின்னமாம். ஆதலால் சக்ஷுவினைப்போல தனது சம்பந்தியாகிய வஸ்துமாத்திரத்தைப் பிரகாசிக்கும் புத்திவிருத்திக்குச் சகல பதார்த்தங்களோடும் சம்பந்தம் பொருந்தாது. அதற்கு எல்லாப்பதார்த்தங்களோடும் சம்பந்தமுளதாயின் எல்லோரும் சர்வஞ்ஞராவர். எதனால் புத்திவிருத்திக்கு எல்லாப்பதார்த்தங்களோடும் சம்பந்தமில்லையோ, அதனால் எல்லோருக்கும் சர்வஞ்ஞத்துவம் சித்தியாது.

அல்லது:—எங்ஙனம் சத்தத்தின் உற்பத்திக்கு ஏதுவாகிய வியாபக ஆகாசத்திற்கும் எங்கும் பேரி மத்தளமுதலியவற்றோடு சையோகமுளதாகியும் தண்ட முதலியவற்றால் பேரிமுதலியவற்றை யடிக்கும் இடத்தில் மாத்திரமே சப்தத்தின் உற்பத்தியுண்டாகிறதோ, எங்கும் உண்டாகிறதில்லையோ, அங்ஙனமே ஒரு பரிபூரண ஆத்மாவிற்கும் எங்குப் புத்தி விருத்திக்குப் பதார்த்தத்தோடு சம்பந்தமுண்டாகின்றதோ, அங்கு மாத்திரமே ஞானம் உதயமாகின்றது; வேறிடத்தில் இல்லை. இதனால் புத்திவிருத்திகள் அநேகமாயும் அவ்வியாபகமாயுமிருத்தலால் சகல ஜனங்களுக்கும் சர்வஞ்ஞத்துவம் சம்பவியாதென்பது பெறப்பட்டது.

ஆதலால் அற்பஞ்ஞர்களின்பொருட்டுப் பிரவிருத்தி நிவிருத்திக்கு ஏதுவாயிருத்தலின், விதி நிஷேதவடிவ சாஸ்திரங்கள் பிரயோஜனமுடையனவே யாகின்றன.

(3) ஜீவர்களுக்குச் சர்வஞ்ஞத்தன்மையின்மையால் வேதாந்த சிரவண ஜந்திய ஞானத்தினால் பிரத்தியகபின்ன பரப்பிரஹ்மத்தைத் தனது சொரூபமாக அறிபவனுக்கே முக்தியுண்டாகின்றது; பிறனுக்குண்டாகிறதில்லை. இதனால் பந்த மோக்ஷங்களின் வியவஸ்தையும் பொருந்துகின்றது. இவ்வாற்றால் ஆத்மாவின் ஐக்கியத்தில் முற்கூறிய தோஷங்களுக்கிடமில்லை.

ஆதலால் பிரஹ்மாத்ம ஐக்கியவடிவ இந்நூலின் விஷயம் எதுவோ, அது அநேக யுக்திப்பிரமாணங்களால் பெறப்பட்டுளது.

* இங்கு "உருவ" மென்னும் சொல்லால் உருவத்தன்மை ஜாதியும் உருவத்தன்மையின் வியாப்பிய (உள்ளடங்கிய) சுக்கிலத்தன்மை நீலத்தன்மை முதலிய ஏழு ஜாதிகளும் கொள்ளத்தக்கனவாம்.

† இங்கு "ஸ்பரிசம்" என்னும் சொல்லால் ஸ்பரிசத்தின் ஆசிரயமான ஸ்பரிசத்தன்மை ஜாதியும், ஸ்பரிசத்தன்மையின் வியாப்பியமான கடினத்தன்மை மிருதுத்தன்மை முதலிய நான்கு ஜாதிகளும் கொள்ளப்படும்.

3-4-5. * இரசனை ஆக்கிராணம் சிரவணம் என்னும் மூன்று இந்திரியங்களும் ரஸகந்தசப்தங்களைமாத்திரம் விஷயஞ்செய்கின்றன; தம் ஆசிரயங்களை விஷயஞ்செய்வதில்லை. ஆதலால் இம்மூன்று இந்திரியங்களாலும் அந்தக்கரணஞான முண்டாகிறதில்லை.

அங்ஙனமே நேத்திரத்தினாலும் துவக்கினாலும் அந்தக்கரணத்தின் ஞான முண்டாகிறதில்லை. ஏனெனின் பஞ்சீகிருதபூதம் அல்லது பஞ்சீகிருத பூதத்தின் காரியமான உருவமுடையது அல்லது பரிசமுடையது எதுவோ அது நேத்திரத்திற்கும் துவக்கிற்கும் விஷயமாம். அந்தக்கரணம் அபஞ்சீகிருதபூதங்களின் காரியமாயிருத்தலால் (254) நேத்திரத்திற்கும் துவக்கிற்கும் விஷயமாகிறதில்லை. இதேகாரணத்தினால் அபஞ்சீகிருதபூதகாரியமான நேத்திரேந்திரியமும் நேத்திரத்திற்கு விஷயமாகிறதில்லை; பாஹ்யவஸ்துக்கள் இந்திரியங்களுக்கு விஷயமாகின்றன. அந்தக்கரணம் இந்திரியங்களை யபேக்ஷித்து ஆந்தரமாக இருக்கிறது. அதனாலும் அந்தக்கரணம் இந்திரியத்திற்கு விஷயமாகிறதில்லை.

42. அந்தக்கரணம் தன்விருத்திக்கும் விஷயமாகிறதில்லை. ஏனெனின் அந்தக்கரணம் விருத்திக்கு ஆசிரயமாயிருக்கிறது. ஆதலால் அந்தக்கரணம் தன் † விருத்திக்கு விஷயமாகமாட்டாது. அக்கினியானது தாஹத்திற்கு ஆசிரயமாக இருக்கிறதேதவிர அதற்கு விஷயமாகிறதில்லை. ஆனால் அக்கினிக்கு வேறான காஷ்டாதி வஸ்துக்களை இந்தத்தாஹம் விஷயமாக்குகிறது. அவ்வாறு அந்தக்கரணத்திற்கு அன்னியமான வஸ்துக்கள் அந்தக்கரண ஜந்நியவிருத்திக்கு விஷயமாகின்றன; அந்தக்கரணம் விஷயமாகிறதில்லை.

43. அங்ஙனமே அந்தக்கரண தர்மங்களும் அந்தக்கரண விருத்திக்கு விஷயமாகிறதில்லை. ஏனெனின் அந்தக்கரண விருத்தி அந்தக்கரணத்தை விஷய

---

* இரசம் கந்தம் சப்தகுணம் என்னும் மூன்றினாலும் கிரமமாக இரசத்துவம் கந்தத்துவம் சப்தத்துவம் என்னும் மூன்று ஜாதிகளும், இரசத்துவவியாப்பிய மதுரத்துவ முதலிய ஆறுஜாதிகளும், கந்தத்துவ வியாப்பிய நற்கந்தத்தன்மை துர்க்கந்தத்தன்மை வடிவ இரண்டு ஜாதிகளும், சப்தத்தன்மைவடிவ வியாபக (அதிகவிடத்திலிருக்கும்) ஜாதியின் வியாப்பியமான (குறைந்தவிடத்திருக்கும்) தாரதம்மியவடிவ (அதிகத்தன்மையும் மந்தத்தன்மையுமான) இரண்டு ஜாதிகளும் கொள்ளப்படும். அதனை இயன்றவாறு கண்டு கொள்க.

† வீட்டின் நடு இருட்டிற்கு ஆசிரய (இருப்பிட) மும் விஷயமுமாம். சேதனம் அஞ்ஞானத்திற்கு ஆசிரயமும் விஷயமுமாம் (243). அதுபோல அந்தக்கரணம் விருத்திக்கு ஆசிரயமாயினும் விஷயமாகுமா? அங்ஙனமாயினும் இதில் இது இரகசியமாம்:— வீட்டின் நடு இருள் முதலியவற்றைப்போல எங்கு ஆசிரயமும் ஆசிரிதமும் பேதப்படுகின்றனவோ, அங்கு ஒரேவஸ்து ஆசிரயமும் விஷயமுமாம். எங்கு நெருப்பினையும் அதன் தாஹக சக்தியினையும் போல ஆசிரயமும் ஆசிரிதமும் பேதப்படவில்லையோ, அங்கு ஆசிரயமும் விஷயமும் ஒன்றும். அந்தக்கரணமும் விருத்தியும் பேதப்படாமையால் அந்தக்கரணம் விருத்திக்கு உபாதானவடிவ ஆசிரயமாமன்றி விஷயமாவதில்லை.

மாக்குமாயின் அதன் தர்மங்களான சுகாதிகளையும் விஷயமாக்கும். அந்தக்கரணத்தை விஷயமாக்கும் விருத்தியோ அந்தக்கரணத்திற்கு எதிர்முகமாகிறதில்லை. ஆதலால் அந்தக்கரண தர்மங்களும் அந்தக்கரண விருத்திக்கு விஷயமாகிறதில்லை.

அன்றியும் இது நியமமாம்:—விருத்தியின் ஆசிரயத்திற்குக் கொஞ்சம் தூரத்திலிருக்கும் வஸ்து விருத்திக்கு விஷயமாம்; விருத்திக்கு ஆசிரயமாய் அத்தியந்த சமீபத்திலிருக்கும் வஸ்து விருத்திக்கு விஷயமாகிறதில்லை. நேத்திரவிருத்திக்கு ஆசிரயமான நேத்திரத்திற்கு அத்தியந்த சமீபத்திலிருக்கும் அஞ்சனம் நேத்திரவிருத்திக்கு விஷயமாகாததுபோல அந்தக்கரண விருத்திக்கு ஆசிரயமான அந்தக்கரணம் எதுவோ அதன் அத்தியந்த சமீபத்திலுள்ள சுகமுதலிய தர்மங்கள் அந்தக்கரண விருத்திக்கு விஷயமாகிறதில்லை. இவ்விதத்தால் அந்தக்கரணமும் அதன் தர்மங்களும் இந்திரியங்களுக்கும் அந்தக்கரணத்திற்கும் * விஷயமாகிறதில்லை; ஆனால் சாக்ஷிக்கு விஷயமாகின்றன.

**44.** அந்தச்சாக்ஷி ஒன்றெனக் கொள்ளின், ஒரு அந்தக்கரணத்தின் சுக துக்கங்கள் சாக்ஷியால் விளங்குவதுபோல எல்லோரது சுகதுக்கங்களும் விளங்கவேண்டும். அங்ஙனம் விளங்காமையால் சாக்ஷி யநேகமெனல்வேண்டும். அநேக சாக்ஷிகளை யங்கீகரித்தலால் தோஷமில்லை. ஏனெனின் எந்தச் சாக்ஷிக்கு எந்த அந்தக்கரணம் உபாதியாயிருக்கிறதோ, அந்தச்சாக்ஷியால் அதன் உபாதியின் தர்மங்கள் விளங்குகின்றன. அதனால் எல்லோரது சுக துக்கங்களும் விளங்குகிறதில்லை.

இவ்விதமாகச் சாக்ஷியநேகமாக இருக்கிறது. அவற்றிற்கு ஏகமான பிரஹ்மத்தோடு ஏகத்துவம் பொருந்தாது.

---

* நேத்திரேந்திரியம் தன்னின் தூரத்துள்ள ஏனைய எல்லாவுருவமுடைய வஸ்துக்களையும் பிரகாசிக் (காண்) கின்றது. ஆனால் தனது அந்தத்துவம் (குருட்டுத்தன்மை), மந்தத்துவம், படுத்துவம் (தெளிவு) என்னும் தர்மங்களோடு தன்னைப் பிரகாசிக்கிறதில்லை. நேத்திரதேசத்துள்ள அந்தக்கரணம் முற்கூறிய தர்மங்களோடு நேத்திரத்தைப் பிரகாசிக்கின்றது.

அங்ஙனமே அந்தக்கரணமும் தனக்கு வேறான சகல ஜடவஸ்துக்களையும் பிரகாசிக்கின்றது. ஆனால் சுக முதலிய தர்மத்தோடு தன்னைத்தான் பிரகாசிக்கிறதில்லை. ஆனால் ஆபாஸனோடுகூடிய அந்தக்கரணத்தில் ஆரூடசாக்ஷி தர்மத்தோடு அந்தக்கரணத்தைப் பிரகாசிக்கின்றது. ஆதலால் ஆபாஸனோடுகூடிய அந்தக்கரணம் ஆபேக்ஷிக சுவயம்பிரகாசமாம்; நிரபேக்ஷ சுவயம்பிரகாசமன்று.

சாக்ஷி தனது பிரகாச (விளக்க) த்தில் மற்றொன்றன் பிரகாசத்தை அபேக்ஷிக்கிறதில்லை; எல்லாவற்றையும் பிரகாசிப்பதாயிருக்கின்றது. ஆதலால் நிரபேக்ஷ சுவயம் பிரகாசமாம்.

இந்த மூலகிரந்தத்திற் கூறிய சங்கையின் சமாதானம் இவ்வபிப்பிராயமாகவே மேல் விஷயமண்டநத்தின் பிரசங்கத்தில் சொல்லப்படும். ஆதலால் கிரந்தத்தின் விஷயத்தில் பிரமித்தல் தகுதியன்று.

## பிரயோஜன கண்டநம் (3) 45 - 59.

பூர்வபக்ஷம்.

### 45. மித்தையாகிய பந்தத்திற்குச் சாமக்கிரி யின்மையால் அதன் நிவிருத்தி கூடாமை.

அகங்கார முதலிய அநாத்ம வஸ்துக்கள் பந்த மெனப்படுகின்றன. அப் பந்தம் அத்தியாஸரூபமாயின் ஞானத்தால் நிவிருத்தியாகும். அத்தியாஸரூப மாகாதாயின் ஞானத்தினல் நிவிருத்தியாகாது. ஏனெனின் ஞானத்தின்சுபாவம் இதுவாம்:—எந்த வஸ்து அறியப்படுகிறதோ அதனிடத்துள்ள அத்தியாசத் தையும் அஞ்ஞானத்தையும் அவ்வஸ்துவின் ஞானம் நிவர்த்தியாக்குகிறது. அது ரஜ்ஜுவின் ஞானம் ரஜ்ஜுவிலுள்ள சர்ப்பாத்தியாசத்தையும் ரஜ்ஜு வின் அஞ்ஞானத்தையும் நிவிருத்தி செய்வதுபோலாம்.

பிராந்திஞானத்திற்கு விஷயமாகும் மித்தியாவஸ்துவும் பிராந்திஞான மும் * அத்தியாச மெனப்படும்.

எதினிடத்தில் எந்த வஸ்து மித்தையாகவில்லையோ சத்தியமாகவிருக் கிறதோ அதற்கு ஞானத்தினல் நிவிருத்தியில்லை.

அங்ஙனமே ஆத்மாவினிடத்தில் அகங்காராதிபந்தங்கள் அத்தியாசமா (மித்தையா) குமாயின் ஞானத்தால் அவை நிவர்த்தியாகும். ஆத்மாவினிடத் தில் மித்தையான பந்தத்தின் சாமக்கிரியில்லை; பந்தம் பிரதீதியாகிறது. ஆதலால் பந்தம் சத்தியமாம். அந்தச் சத்தியபந்தத்தின் நிவிருத்தியை ஞான த்தால் விரும்புவது பயனில்லாததாம்.

---

* தனது அபாவத்தின் அதிகரணத்திலுள்ள அவபாஸம் (விஷயமும் ஞானமும்) எதுவோ, அது அத்தியாச மெனப்படுகின்றது. எங்ஙனம்: கற்பித சர்ப்பத்தின் வியாவ காரிகமும் பாரமார்த்திகமுமாகிய அபாவத்தின் அதிகாண (ஆசிரய) இராஜ்ஜுவினிடத் தில் பிராதிபாஸிக சர்ப்பத்தின் அவபாஸம் (சர்ப்பமும் அதன் ஞானமும்) இருக்கின் றது. அது அத்தியாஸமாம்.

அல்லது அதிஷ்டானத்தினும் விஷமசத்தையுடைய அவபாஸம் எதுவோ அது அத்தியாஸ மெனப்படுகின்றது. எங்ஙனம்: வியாவகாரிகசத்தையுடைய இராஜ்ஜு வடிவ அதிஷ்டானத்தினும் விஷம அதாவது பிராதிபாஸிகவடிவ விபரீதசத்தையுடைய அவபாஸம் (சர்ப்பமும் அதன் ஞானமும்) எதுவோ அது அத்தியாசமாம்.

அவ்வத்தியாசம் க. அர்த்தாத்தியாசம், உ. ஞாநாத்தியாசம் என்னும் பேதத்தால் இருவகையினதாம்.

1. பிராந்தி ஞானத்தின் விஷயமான சர்ப்பாதி மித்தியாவஸ்து யாதோ, அது அர்த்தாத்தியாசமாம்.

2. பிராந்தி ஞானமாகிய மித்தியாவஸ்துவின் மித்தியாஞானம் எதுவோ அது ஞாநாத்தியாசமாம்.

அவற்றுள் ஞாநாத்தியாசம் பரோக்ஷம் அபரோக்ஷமென்னும் பேதத்தால் இரு வகைத்தாம்.

அர்த்தாத்தியாசம் 1. கேவல சம்பந்தாத்தியாசம், 2. சம்பந்தசகித சம்பந்தியின் அத் தியாசம், 3. கேவல தர்மாத்தியாசம், 4. தர்மசகித தர்மியின் அத்தியாசம், 5. அந்நியோந் நியாத்தியாசம், 6. அந்நியதாராத்தியாசம் என்னும் பேதத்தால் அறுவகைத்தாம்.

## 46. அத்தியாச * சாமக்கிரி நிரூபணம்.

**(1) சத்தியவஸ்துவின் ஞானத்தாலுண்டாம் சம்ஸ்காரம், (2) பிரமேயத்தின் தோஷம், (3) பிரமாதாவின் தோஷம், (4) பிரமாணத்தின் தோஷம், (5) அதிஷ்டானத்தின் விசேஷவடிவ அஞ்ஞானம் சாமானியவடிவ ஞானமென்னும் இவை அத்தியாச ஸாமக்கிரியைகள்.** இவையின்றி அத்தியாசம் உண்டாகாது.

1. கிளிஞ்சிலில் வெள்ளியின் அத்தியாசமும் ரஜ்ஜுவில் சர்ப்பத்தின் அத்தியாசமும் உண்டாகின்றன. அது எவன் உண்மையான வெள்ளியையும் சர்ப்பத்தையும் பார்த்திருக்கின்றானோ அவனுக்குண்டாகிறது. எவன் உண்மையான வெள்ளியையும் சர்ப்பத்தையும் பார்த்ததில்லையோ அவனுக்குண்டாகிறதில்லை; **ஆதலால் சத்தியவஸ்துவின் ஞானஜந்நியஸம்ஸ்காரம்** அத்தியாஸத்திற்கு ஹேதுவாம்.

2. கிளிஞ்சிலில் சர்ப்பத்தின் அத்தியாசமும் ரஜ்ஜுவில் வெள்ளியின் அத்தியாசமு முண்டாகிறதில்லையாகலின் † **பிரமேயத்தில் சாதிருசிய தோஷம்** அத்தியாசத்திற்கு ஹேதுவாம்.

---

அல்லது சம்ஸர்க்காத்தியாசம் சொரூபாத்தியாசமென்னும் வேறுபாட்டால் அர்த்தாத்தியாசம் இருவகைத்தாம்.

இந்த இது நிச்சயமாம்:—கேவல சம்பந்தாத்தியாசமே சம்சர்க்காத்தியாசமாம். சம்பந்தசகித சம்பந்தியின் அத்தியாசமே சம்ஸர்க்கசகித சொரூபாத்தியாசமாம். அதுவே அந்நியோந்நியாத்தியாசமாம். எங்கும் சம்ஸர்க்கமும் சொரூபமுமாகிய இரண்டற்கும் மிசிரத்தன்மை (கலப்பு) உண்டாகின்றது. இரண்டனுள் ஒன்றன் அத்தியாசம் எதுவோ அது அந்நியதராத்தியாசமெனப்படும். அது மித்தியா வஸ்துவின் சொரூபாத்தியாசவடிவமாகவும் சத்தியவஸ்துவின் சம்பந்தாத்தியாசவடிவமாகவும் சொல்லப்படுகின்றது.

இந்த அந்நியதராத்தியாசத்தினை அல்லது கேவல சம்பந்தாத்தியாசத்தினை வேற்றுமையாகக்கூறுதல் யாதோ அது ஆத்மா அநாத்மாக்களின் அத்தியாசத்தினது பேதத்தை அறிதற்பொருட்டாம். ஆனால் சகல அர்த்தாத்தியாசமும் அந்நியோந்நியாத்தியாச வடிவமேயாம்; அதனின் வேறன்று. அவ்வந்நியோந்நியாத்தியாசம் சிலவிடத்துக் கேவலம் தர்மத்தினதாம்; சிலவிடத்துத் தர்மசகித தர்மியினதாம். ஆதலால் முற்கூறிய பேதத்தால் அந்நியோந்நியாத்தியாசம் இருவகைத்தேயாம். இவற்றின் சுருக்கமான உதாரணம் விசாரசந்திரோதயத்தின் ஆறாவது கலையிலும் விஸ்தாரமான உதாரணம் ஸ்ரீ விருத்திப்பிரபாகரத்திலும் எழுதப்பட்டிருக்கின்றன.

* சாமக்கிரி என்பது காரண சமுதாயம். அது சமையலுக்கு அடுப்பு விறகு ஜல முதலியன சாமக்கிரிகளாகுதல் போலும்.

† பிரமாஞானத்தின் விஷயம் எதுவோ அது பிரமேயமெனப்படும். கற்பித சர்ப்பம் ரஜத முதலியவற்றின் அதிஷ்டானமாகிய ரஜ்ஜு சுத்தி முதலியன பிரமாஞானத்தின் விஷயமா மாகலின் பிரமேயமாம். அதன்கண்ணுள்ள சர்ப்ப முதலியவற்றின் சமானத்தன்மை யாதோ அதனைச் சாதிருசியதோஷ மென்பர். இதனையே பிரமேய தோஷமென்றும் கூறுவர். இரஜ்ஜுவினிடத்துப் பூமியிற்பொருந்தியிருத்தற்றன்மை, நீட்சி, மூவலயவடிவத்தன்மை என்பவை சர்ப்பத்தின் சாதிருசியமாம். சுத்தியில் வெண்பளபளப்புத்தன்மைவடிவ இரஜதத்தின் சாதிருசியமிருக்கின்றது. இவ்வாறு வேறிடங்களிலும் அதிஷ்டானத்தில் அத்தியஸ்தத்தின் சாதிருசியத்தை அறிந்துகொள்க.

3. இவ்விதமாகப் பிரமாதாவில் லோபபயாதி தோஷங்களும்,

4. நேத்திர முதலிய பிரமாணங்களில் மஞ்சட்காமாலை முதலிய தோஷங்களும் அத்தியாசத்துக்கு ஹேதுவாம்.

5. கிலிஞ்சிலின் "இது" என்னும் (149) சாமானிய ஞானமுண்டாய், "இது கிளிஞ்சில்" என்னும் விசேஷஞான முண்டாகாவிடின், அப்போது அத்தியாச முண்டாகின்றது. "கிளிஞ்சில்" என்று விசேஷ வடிவமாக ஞானமுண்டாயினும் சாமானிய வடிவமாக ஞானமுண்டாகாவிடினும், அப்போது அத்தியாச முண்டாகிறதில்லை. அதிஷ்டானத்தின் விசேஷ வடிவமாக அஞ்ஞானமும் சாமானிய வடிவமாக ஞானமும் அத்தியாசத்திற்கு ஹேதுவாம்.

இவ்வளவு அத்தியாச சாமக்கிரிக ளிருக்கின்றன. இவற்றில் ஏதாவதொன்று குறைந்தாலும் அத்தியாச முண்டாகாது. கடத்திற்குக் குலாலன், சக்கரம், தண்டம், மண் என்பவை சமாக்கிரிகள். இவற்றில் ஏதேனும் ஒன்று குறைந்தாலும் கடமுண்டாகாததுபோல அத்தியாசமும், அதன் சாமக்கிரிகளில் ஏதாவதொன்று குறைந்தாலும் உண்டாகாது; எல்லாச் சாமக்கிரிகளாலும் உண்டாகின்றது.

## 47. பந்தத்தின் அத்தியாசத்தில் சத்தியவஸ்துவின் ஞானத்தினலுண்டாகும் சம்ஸ்காரத்தின் அசித்தி.

அங்ஙனமே:—பந்த அத்தியாசத்தில் ஒருகாரணமுமில்லை. பந்தம் எங்கேனும் சத்தியமா யிருக்குமாயின், அதன் ஞானத்தாலுண்டாகும் ஸம்ஸ்காரத்தினல் ஆத்மாவினிடத்தில் மித்தையான பந்தம் பிரதீதியாகும். ஆனல் சித்தாந்தத்தில் ஆத்மாவிற்கு வேருன சத்தியவஸ்து யாதொன்று மில்லை. ஆதலால் சத்தியபந்தத்தின் ஞானஜந்நிய ஸம்ஸ்கார மில்லாமையால் ஆத்மாவினிடத்தில் பந்தத்தின் அத்தியாஸம் பொருந்தாது.

## 48. பந்தத்தின் அத்தியாசத்தில் பிரமேய தோஷம் சித்தியாமை.

அங்ஙனமே ஆத்மாவிற்கும் பந்தத்திற்கும் சாதிருசியமுமில்லை. மாருன தமப்பிரகாசத்தை (இருளொளியை) ப்போல விபரீதசுபாவ மிருக்கின்றது.

1. ஆத்மா பிரத்தியக்காம்; பந்தம் பராக்காம். பிரத்தியக் கென்பது உள்ளிற்கும், பராக் கென்பது வெளிக்கும் பெயராம்.

2. ஆத்மா விஷயியும் பந்தம் விஷயமுமாம்; பிரகாசஞ் செய்வது யாதோ அது விஷயி யெனப்படும். எது பிரகாசிக்கப்படுகின்றதோ அது விஷய மெனப்படும்.

1. பிரத்தியக்கில் பராக்கின் அத்தியாசமும் பராக்கில் பிரத்தியக்கின் அத்தியாசமும் உண்டாகிறதில்லை. எங்ஙனம்: புத்திராதிகளின் அபேக்ஷ

யால் தேகம் பிரத்தியக்காம். அதனிடத்தில் புத்திராதிகளின் அத்தியாசமும் புத்திராதிகளிடத்தில் தேகத்தின் அத்தியாசமும் உண்டாகிறதில்லை.

2. விஷயத்தில் விஷயியின் அத்தியாசமும் விஷயியில் விஷயத்தின் அத்தியாசமும் உண்டாகிறதில்லை. எங்ஙனம் : விஷயமாகிய கடமுதலியவற்றில் விஷயியாகிய தீபத்தின் அத்தியாசமும் தீபத்தில் கடமுதலியவற்றின் அத்தியாசமும் உண்டாகிறதில்லை.

அங்ஙனமே சாதிருசிய மின்மையால் பிரத்தியக்விஷயியாகிய ஆத்மாவினிடத்துப் பராக்விஷயவடிவ பந்தத்தின் அத்தியாசம் பொருந்தாது. பிரத்தியக்கிற்கும் பராக்கிற்கும் விரோத முண்டு. விஷயத்திற்கும் விஷயிக்கும் விரோதமுண்டு ; சாதிருசியமில்லை. ஆதலால் பந்தத்தின் அத்தியாசம் ஆத்மாவினிடத்திற் பொருந்தாது.

## 49. 3-4. பந்தத்தின் அத்தியாசத்தில் பிரமாதா முதலிய தோஷங்கள் சித்தியாமை.

அங்ஙனமே பிரமாதாவின் தோஷமும் பிரமாணத்தின் தோஷமுமில்லை. ஏனெனின் "பிரமாதா முதலிய சர்வப்பிரபஞ்சமும் அத்தியாசரூபமாயிருக்கின்றது. அதுவே பந்தம்" என்பது வேதாந்த * சித்தாந்தம். இவற்றால் பந்த அத்தியாசத்துக்குமுன் பிரமாத்திரு பிரமாணங்களின் சொரூபம் பெறப்படுகிறதில்லை; அவைகளின் தோஷங்களும் பெறப்படுகிறதில்லை. ஆதலால் பந்தாத்தியாசம் பொருந்தாது.

## 50. 5. பந்தத்தின் அதிஷ்டானப் பிரஹ்மத்தின், விசேஷவடிவ அஞ்ஞானம் பொருந்தாமை.

அதிஷ்டானத்தின் விசேஷவடிவ அஞ்ஞானமும் பொருந்தாது. ஏனெனின் பந்தத்திற்கு அதிஷ்டானமான பிரஹ்மம் சுயம்பிரகாச ஞானவடிவமாம். அந்தச் சுயம்பிரகாச ஞானவடிவப் பிரஹ்மத்தில் சூரியனிடத்தில் இருள்போல அஞ்ஞானம் இருக்கமாட்டாது. பிரகாசமான சூரியனுக்கும் இருளுக்கும் விரோதமிருப்பதுபோலச் சேதனப்பிரகாசமான பிரஹ்மத்திற்கும் தமோரூபமான அஞ்ஞானத்திற்கும் பரஸ்பரம் விரோதமுண்டு.

அதிஷ்டானத்தின் அஞ்ஞானத்தை யங்கீகரித்தாலும் பந்தத்தின் அத்தியாசம் பொருந்தாது. ஏனெனின் அத்தியந்தம் அறியப்பட்டதிலும் அத்தியந்தம் அறியப்படாததிலும் அத்தியாசம் உண்டாகாது. ஆனால் விசேஷவடிவமாக அறியப்படாததாய்ச் சாமானியவடிவமாக அறியப்பட்டதின்கண்

* பிரஹ்ம சைதன்னியத்துக்கு வேறான அஞ்ஞானமும் அதன்காரியமான ஸ்தூல சூக்ஷ்மப் பிரபஞ்சமாகிய இவ்வெல்லாம் சேதனத்தில் அத்தியஸ்தமாம். அந்தக்கரணரூபப் பிரமாதாவும் இந்திரியரூபப் பிரமாணமும் இவற்றில் அடங்கியிருத்தலால் இவைகளும் அத்தியஸ்தமாம். ஆதலால் பிரபஞ்சத்தின் அத்தியாசத்துக்குமுன் இவைகள் சித்திக்கிறதில்லை. இது உபநிஷதங்களின் நிரணயிக்கப்பட்ட அர்த்தவடிவ சித்தாந்தமாம்

அத்தியாச முண்டாகும். பிரஹ்மம் சாமானிய விசேஷ பாவங்களின்றி நிர்விசேஷமாய் இருக்கிறதென்பது சித்தாந்தம். ஆதலால் பிரஹ்மம் விசேஷ ரூபமாய் அறியப்படாததும் சாமானியரூபமா யறியப்பட்டது மாகாது.

அத்தியாசத்தை அவசியம் அங்கீகரிக்க வேண்டுமென்னும் ஆசையால் பிரஹ்மத்தில் சாமானிய விசேஷ பாவங்களை யங்கீகரிக்கின் சித்தாந்தத்தை விட நேரிடும்.

இவ்வாற்றால் நிர்விசேஷப் பிரகாசரூபப் பிரஹ்மத்தில் விசேஷவடிவ அஞ்ஞானமும் சாமானியவடிவ ஞானமு மில்லாமையால் அதனிடத்தில் அத்தியாசம் உண்டாகாது. ஆதலால் பிரஹ்மத்தில் பந்தம் அத்தியாசரூப மென்று கூறுதல் பொருந்தாது; ஆனால் பந்தம் சத்தியமாம். அந்த ஸத்திய பந்தம் ஞானத்தால் நிவிருத்தியாகாது. ஆகலால் ஞானவாயிலாக மோக்ஷ ரூப கிரந்தத்தின் பிரயோஜனம் பொருந்தாது. ஞானத்தினால் மோக்ஷம் கிடைக்குமென்று சொன்ன சித்தாந்தம் நலமுடையதன்று. ஆனால் கர்மத்தினால் மோக்ஷமுண்டாம் என்னும் வார்த்தையை ஏகபவிகவாதத்தின்படி சொல்லுகின்றார்:—

## 51. கேவல கர்மத்தால் மோக்ஷத்தின் சித்தி (ஏகபவிகவாதம்). 51–58.

ஞானத்தினால் சத்தியபந்தத்தின் நிவிருத்தியை யங்கீகரித்தல் யுக்தியோடுகூடிய தன்று; அயுக்தமாம் (பொருத்த மின்றியதாம்). ஆதலால் எந்தப் புருஷன் முக்தனாக விரும்புகின்றானோ அவன் சந்ததம் (இடையின்றி) நித்தியகர்மத்தைச் செய்தல்வேண்டும். இதன் அபிப்பிராயம் இதுவாம்:—

**52.** கர்மம்: 1. விகிதம், 2. நிஷித்தமென இருவகைத்தாம்.

1. புருஷனுடைய பிரவிருத்தி நிமித்தமாய் எதன் சொரூபத்தை வேதம் போதித்திருக்கிறதோ அது விகிதகர்ம மெனப்படும். புருஷனது நிவிருத்தியின்பொருட்டு எதனால் போதிக்கப்படுகிறதோ அது நிஷித்தகர்ம மெனப்படும்.

சுபாவசித்தமாய்ச் செய்யப்பட்ட கிரியை எதுவோ அது கர்மமன்று. ஏனெனின் வேதத்தால் பிரவிருத்தி நிவிருத்திகளின் பொருட்டு அறிவிக்கப்பட்டது எதுவோ அது கர்மமெனப்படும். * உதாசீனக் கிரியைகள் கர்மங்களன்று. ஆதலால் கர்மம் இருவகையினதாம்; மூன்று வகையினதன்று.

**53.** விகிதகர்மம்: (1) பிராயச்சித்தம், (2) காமியம், (3) நைமித்திகம், (4) நித்தியம் என நான்கு வகைப்படும்.

---

* வேதத்தில் விதிக்கப்படாதனவும், நிஷேதிக்கப்படாதனவுமாகிய ராகத்துவேஷங்களின்றிய ஸ்வாபாவிகமான (இயல்பான) நடத்தல் சௌசமுதலிய கிரியைகள் உதாசீனக்கிரியைகளாம்.

1. பாவநாசத்தின் பொருட்டு விதிக்கப்பட்ட கர்மம் பிராயச்சித்தமாம். எங்ஙனம்: * பிரமாதத்தினுல் ஒரு சந்நியாசி திரவியத்தைக் கிரகித்துப் பாவத்தைச் சம்பாதிக்கிருன்; அந்தப் பாவம் திரவியத்தைத் தியாகம் செய்தலாலும் மூன்றுநாள் உபவாச மிருத்தலாலும் கெடும்.

2. பலத்தின்பொருட்டு விதிக்கப்பட்ட கர்மம் காமியம். அவை மழையை இச்சிக்கிறவன் செய்யும் † காரீரியாகமும் சுவர்க்கத்தை இச்சிக்கிறவன் செய்யும் அக்கினிஹோத்திரம் சோமயாக முதலியனவுமாம்.

3. எந்தக் கர்மத்தைச் செய்யாததினுல் பாவமுண்டாகுமோ, எதைச் செய்வதனுல் புண்ணியபாவரூப பலன் உண்டாகிறதில்லையோ, எது எப்போதும் விதிக்கப்படாது, ஓர் நிமித்தத்தைக்கொண்டு விதிக்கப்பட்டிருக்கிறதோ, அக்கர்மம் நைமித்திகம். கிரகணகாலத்தில் செய்யும் சிராத்தங்கள் நைமித்திக கர்மங்களாம். வயோவிருத்தன், சாதிவிருத்தன், ஆசிரமவிருத்தன், வித்தியாவிருத்தன், தர்மவிருத்தன், ஞானவிருத்தன் என்னும் இவர்கள் வருங்காலத்தில் எழுந்து நிற்றலாகிய கர்மமும் நைமித்திகமாம். வித்தியாசப்தத்தினுல் சாஸ்திரஞானமும் ஞானசப்தத்தால் அபரோக்ஷஞானமும் கொள்ளத்தக்கன. மேற்சொன்ன விருத்தர்களில் கிரமமாகப் பின்சொல்லப்பட்டவர் முன்சொல்லப்பட்டவரினும் ‡ உத்தமர்.

---

* அவசியம் செய்யத்தக்க காரியத்தை மறந்துவிடுதல் பிரமாத மெனப்படும். அல்லது எது சாஸ்திரத்தினுல் செய்யத்தக்கதா யிருக்கின்றதோ, எதனைச் செய்தற்கு இச்சையும் இருக்கின்றதோ, அந்தக் காரியத்தைச் செய்யா திருத்தல் பிரமாத மெனப்படும். எங்ஙனம்: எதியாகிய சந்நியாசிக்குத் திரவியத்தைக் கிரகிக்கலாகாதென்று சாஸ்திரம் விதித்திருக்கின்றது; தனக்குக் கிரகிக்கலாகாதென்னும் இச்சையு மிருக்கின்றது. மீண்டும் அதைச் செய்யா திருத்தல் (திரவியத்தைக் கொள்ளுதல்) பிரமாத மெனப்படும்.

† தன்தேசத்தில் மழை பெய்யவேண்டுமென்னும் விருப்பமுடைய அரசன் தன் பிரஜைகளினின்றும் திரவியத்தின் வியாபகவடிவத்தைச் செய்துகொண்டு எந்த யாகத்தைச் செய்கின்ருனே அது காரீரியாக மெனப்படும் அல்லது வம்ச (மூங்கில்) விருக்ஷத்தின் அங்குரம் (முளை) கரீரமாம். அவற்றின் ஹோமத்தால் உண்டாகும் யாகம் காரீரியாக மெனப்படும்.

‡ இதன் பொருள் இதுவாம்:—

1. அவஸ்தாவிருத்தரினும் ஜாதி (வருண) விருத்தர் உத்தமர்.

2. கேவல வருணவிருத்தரினும் அவஸ்தாவிருத்தரும் வருணவிருத்தருமானவர் உத்தமர்.

3. அவஸ்தாவிருத்தர் வருணவிருத்தர் இருவரினும் ஆசிரமவிருத்தர் உத்தமர்.

4. கேவல ஆசிரமவிருத்தரினும் அவஸ்தாவிருத்த ஆசிரமவிருத்தர் உத்தமர்.

5. அவஸ்தாவிருத்தர் ஆசிரமவிருத்தர் வருணவிருத்தரென்னும் மூவரினும் வித்தியாவிருத்தர் உத்தமர்.

6. கேவல வித்தியாவிருத்தரினும் அவஸ்தாவிருத்த வித்தியாவிருத்தர் உத்தமர்.

4. எதனைச் செய்யாததினால் பாவமுண்டாகிறதோ, செய்வதினால் புண்ணியமில்லையோ, எது எப்போதும் விதிக்கப்பட்டிருக்கிறதோ அது நித்தியகர்மம். அவை ஸ்நாந சந்தியாவந்தனாதிகளாம்.

இவ்விதமாக நான்குவித விகிதகர்மங்களும் நிஷித்தகர்மமும் சேர்ந்து கர்மம் ஐந்துவகையாம்.

**54.** மோக்ஷத்தை யிச்சிக்கிறவன் காமிய நிஷித்தகர்மங்களைச் செய்யலாகாது. ஏனெனின் காமியகர்மத்தால் உத்தமலோகமும் நிஷித்தகர்மத்தால் நீசலோகமும் அடையப்படும். ஆதலால் இவற்றைத் தியாகஞ்செய்து, நித்தியகர்மங்களை எப்போதும், நைமித்திககர்மங்களை நிமித்தங்கள் நேரிடும்போதும் செய்யவேண்டும். ஏனெனின் நித்திய நைமித்திககர்மங்களைச் செய்யாவிட்டால் பாவங்கள் உண்டாம். அப்பாவங்களால் நீசயோனி அடையப்படும். ஆதலால் பாவத்தைத் தடுப்பதற்காக நித்திய நைமித்திக கர்மங்களைச் செய்யவேண்டும். நித்திய நைமித்திககர்மங்களுக்கு அவற்றைச் செய்யாததினாலுண்டாகும் பாவங்கள் செய்வதனாலுண்டாகாமலிருப்பதே பயன்; வேறுபயனில்லை. ஆதலால் முமுக்ஷுவானவன் நித்திய நைமித்திக கர்மங்களை அவசியம் செய்யவேண்டும்.

**55.** ஒருகால் எவனாவது பிரமாதத்தினால் நிஷித்தகர்மத்தைச் செய்தால் அந்தத் தோஷத்தை நிவிருத்திசெய்வதற்காகப் பிராயச்சித்தத்தைச்

---

7. அவஸ்தாவிருத்த வித்தியாவிருத்தரினும் வருணவிருத்த வித்தியாவிருத்தர் உத்தமர்.

8. வருணவிருத்த வித்தியாவிருத்தரினும் ஆசிரமவிருத்த வித்தியாவிருத்தர் உத்தமர்.

9. அவஸ்தாவிருத்த வருணவிருத்த ஆசிரமவிருத்த வித்தியாவிருத்தரினும் தர்மவிருத்தர் உத்தமர்.

10. அவஸ்தாவிருத்த தர்மவிருத்தரினும் வருணவிருத்த தருமவிருத்தர் உத்தமர்.

11. வருணவிருத்த தருமவிருத்தரினும் ஆசிரமவிருத்த தருமவிருத்தர் உத்தமர்.

12. ஆசிரமவிருத்த தருமவிருத்தரினும் வித்தியாவிருத்த தருமவிருத்தர் உத்தமர்.

13. அவஸ்தாவிருத்தர்முதல் தருமவிருத்தர்பரியந்தமான இவ்வெல்லோரினும் ஞானவிருத்தர் உத்தமர். அவர்களுள்ளும்,

14. கேவல ஞானவிருத்தரினும் அவஸ்தாவிருத்த ஞானவிருத்தர் உத்தமர்.

15. அவஸ்தாவிருத்த ஞானவிருத்தரினும் வருணவிருத்த ஞானவிருத்தர் உத்தமர்.

16. வருணவிருத்த ஞானவிருத்தரினும் ஆசிரமவிருத்த ஞானவிருத்தர் உத்தமர்.

17. ஆசிரமவிருத்த ஞானவிருத்தரினும் வித்தியாவிருத்த ஞானவிருத்தர் உத்தமர்.

18. வித்தியாவிருத்த ஞானவிருத்தரினும் தர்மவிருத்த ஞானவிருத்தர் உத்தமர்.

இங்குத் தர்மமென்னும் சொல்லால் சாஸ்திரத்திற் கூறிய அர்த்தத்தின் அநுஷ்டானமும், வித்தியாவிருத்தரென்னும் சொல்லால் அதிக சாஸ்திராப்பியாசமுடையவரும், ஞானவிருத்தரென்னும் சொல்லால் அதிக ஆரூடரும் கொள்ளப்படுவர்.

செய்யவேண்டும். ஒருவன் இந்த ஜன்மத்தில் நிஷித்தகர்மத்தைச் செய்யாமலிருந்தாலும் ஜன்மாந்தரத்தில் செய்தபாவத்தைப் போக்குவதற்காகப் பிராயச்சித்தத்தைச் செய்யவேண்டும். ஆனால் இவ்வளவு பேதமுண்டு:— பிராயச்சித்தம் இருவகைத்தாம். (1) ஒன்று அசாதாரணம், (2) ஒன்று சாதாரணம்.

ஓர் பாவவிசேஷத்தை நிவர்த்திக்கச் சாஸ்திரத்தினால் விதிக்கப்பட்ட பிராயச்சித்தம் அசாதாரணமாம். அது முன் (53)ல் சொல்லப்பட்ட உபவாசாதிகளாம்.

2. சர்வபாவங்களையும் நிவர்த்திக்கச் சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட பிராயச்சித்தம் சாதாரணமாம். அது கங்காஸ்நாநம், ஈசுவரநாமோச்சாரண முதலியனவாம்.

இவ்விதத்தால் இரண்டுவிதப் பிராயச்சித்தங்களுள.

1. பாவம் அறியப்பட்டதாயின் அதைப் போக்குவதற்காகச் சாஸ்திரத்திற் சொல்லிய அசாதாரணப் பிராயச்சித்தத்தைச் செய்யவேண்டும்.

2. ஜன்மாந்தரத்திற் செய்யப்பட்டதும் இப்போது அறியப்படாததுமான பாவத்தைப்போக்கச் சாதாரணப் பிராயச்சித்தத்தைச் செய்யவேண்டும். ஏனெனின்,

1. அசாதாரணப் பிராயச்சித்தத்தின் சுபாவமிதுவாம்:—எப்பாவத்தைப் போக்க எப்பிராயச்சித்தம் விதிக்கப்பட்டிருக்கிறதோ அப்பாவம் அப்பிராயச்சித்தத்தால் நீங்கும்; மற்றையது நீங்காது.

2. ஜன்மாந்தரத்தின் பாவமின்னதென்று தெரியாமையால் அதனை நிவிர்த்திக்க, சாதாரணப் பிராயச்சித்தத்தைச் செய்யவேண்டும்.

56. சாதாரணப் பிராயச்சித்தத்தினால் சர்வபாவங்களும் நிவிருத்தியாகின்றன. கங்காஸ்நான முதலியனவாகச் சொல்லப்படும் சாதாரணப்பிராயச்சித்தங்கள் கேவலப்பிராயச்சித்த வடிவமன்று; ஆனால் 1. காமியவடிவமும், 2. பிராயச்சித்தவடிவமுமாம். ஏனெனின்,

1. கங்காஸ்நாநத்தினாலும் ஈசுவரநாமோச்சாரணத்தினாலும் உத்தமலோகம் அடையப்படுவதாய்ச் சாஸ்திரம் கூறுதலால் அவை காமியரூபமாம்.

2. பாவத்தைப் போக்குவதாகலின் பிராயச்சித்தரூபமாம்.

அசுவமேதயாகம் பிரமஹத்தியாதி பாவங்களை நிவர்த்திக்கிறது; சுவர்க்கப்பிராப்திரூபபலத்தையும் கொடுக்கிறது. அங்ஙனமே கங்காஸ்நாநாதிகளுமாம்; கேவலப் பிராயச்சித்தமன்றாகலின் உத்தமலோகத்தைக் கொடுக்கின்றன. அதனை (உத்தமலோகப் பிராப்தியை) முமுக்ஷுவானவன் இச்சிக்கிறதில்லை. அங்ஙனமாயினும் உத்தமலோகத்தில் இச்சையுள்ளவனுக்குக் கங்காஸ்நாநாதிகள் பாவத்தைப் போக்கி அவ்வுத்தமலோகத்தைத் தருகின்றன.

இச்சையில்லாதவனுக்குப் பாவமாத்திரத்தையே போக்குகின்றன. ஆதலால் இச்சையோடு அநுஷ்டிக்கப்பட்ட காமியரூபப் பிராயச்சித்தமும், இச்சையின்றி யநுஷ்டிக்கப்பட்ட கேவலப் பிராயச்சித்தரூபமாம்.

வேதாந்த மதத்தில் சகல கர்மங்களும் ஸகாமபுருஷனுக்கு ஸம்ஸாரத்துக்கு ஹேதுவும், நிஷ்காமபுருஷனுக்கு அந்தக்கரணசுத்தியால் மோக்ஷத்துக்கு ஹேதுவுமாவதுபோல, ஒரே கங்காஸ்நாநமும், அங்ஙனமே ஈசுவரநாம உச்சாரணமும் ஸகாமனுக்குக் காமியவடிவப் பிராயச்சித்தமாயும் நிஷ்காமனுக்குக் கேவலப் பிராயச்சித்தரூபமாயு மிருக்கின்றன. ஆதலால் முமுக்ஷு சாதாரணப் பிராயச்சித்தத்தைச் செய்யவேண்டும்.

இவ்விதத்தால் ஜன்மாந்தரத்தின் பாவங்களெல்லாம் ஞானமின்றியே நிவிருத்தியாகின்றன.

**57.** அங்ஙனமே முமுக்ஷுவுக்கு ஜன்மாந்தரத்தின் காமியகர்மமும் மலடிக்குச் சமானமாம்; பலத்திற்கு ஏதுவன்று. ஏனெனின் வேதாந்தசித்தாந்தத்தில் கர்மாநுஷ்டான காலத்தில் புருஷனது இச்சை பலத்திற்கு ஏதுவெனக் கொள்ளப்பட் டிருக்கின்றது. இச்சையோடு அநுஷ்டிக்கப்பட்ட கர்மம் சுவர்க்காதி பலத்திற்கு ஹேதுவாம்; நிஷ்காமமாக அநுஷ்டிக்கப்பட்டது சுவர்க்காதி பலத்திற்கு ஹேதுவன்றென்பது வேதாந்த சித்தாந்தம்.

அங்ஙனமே நம்முடைய ஏகபவிகவாதியின் சித்தாந்தத்தில் கர்மசித்தியின் பிறகும் புருஷனுடைய இச்சை பலத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. அப்புருஷனது இச்சை புருஷன் முமுக்ஷுவானகாலத்தில் நீங்கிவிட்டது. ஆதலால் ஜன்மாந்தரத்தின் காமியகர்மமும் பலனுக்கு ஹேதுவாகிறதில்லை. ஒருவன் தனத்தை யடையவேண்டுமென்னும் இச்சையால் ஒரு தனிகனை ஆராதிக்கிறான். அப்படி யாராதித்தபின் அவனுக்குச் சில ஹேதுக்களால் தனத்திலிச்சை விட்டுப்போமாயினும் தனப்பிராப்திரூப பலன் உண்டாகிறதில்லை. அங்ஙனமே ஜன்மாந்தரத்தின் காமியகர்மத்திற்கும் முமுக்ஷுவுக்கு இச்சையில்லாமையால் பலன் உண்டாகிறதில்லை.

இவ்வாற்றால் கேவல கர்மத்தினால் மோக்ஷமுண்டாகும்.

**58.** வர்த்தமான ஜன்மத்தில் காமியகர்மமும் நிஷித்தகர்மமும் செய்யப்படாததினால் ஊர்த்துவ (மேல்) அதோ (கீழ்) லோகங்க ளடையப்படுகிறதில்லை. ஜன்மாந்தரத்தின் பிராரப்தமான நிஷித்த காமியகர்மங்கள் போகத்தால் நாசமாகின்றன. நித்திய நைமித்திக கர்மங்களைச் செய்யாததினா லுண்டாகும் பாவம் அவற்றைச் செய்வதினால் முமுக்ஷுவுக்குச் சம்பவிக்கிறதில்லை. ஜன்மாந்தரத்தின் சஞ்சிதநிஷித்தகர்மங்கள் சாதாரணப் பிராயச்சித்தத்தால் நிவிருத்தியாகின்றன. ஜன்மாந்தரத்தின் சஞ்சித காமியகர்மங்கள் முமுக்ஷுவுக்கு இச்சை யில்லாமையால் பலனைக் கொடுக்கிறதில்லை. ஆகையால் முமுக்ஷு நித்தியநைமித்திக சாதாரணப் பிராயச்சித்தரூப கர்மங்களைச்

செய்யவேண்டும். வர்த்தமான ஜன்மத்தின் அறியப்பட்ட நிஷித்தகர்ம முளதாயின் அசாதாரணப் பிராயச்சித்தத்தைச் செய்யவேண்டும்.

2. * அல்லது, முமுக்ஷுவானவன் நித்தியநைமித்திகங்களையே செய்து பிராயச்சித்தத்தை விட்டுவிடுக. ஏனெனின் சஞ்சிதநிஷித்த காமிய கர்மங்கள் முமுக்ஷுவுக்கு நாசமாய்விடுகின்றன. வேதாந்தமதத்தில் ஞானிக்குச் சஞ்சிதகர்மங்கள் நாசமாவதாய் அங்கீகரிக்கப்பட்டிருப்பதுபோல, நிஷித்த காமியங்களைவிட்டு நித்தியநைமித்திகங்களைச் செய்கிற முமுக்ஷுவுக்கு நம்முடைய மதப்படி சஞ்சிதகர்மங்கள் நாசமாகின்றன.

3. † அல்லது, சஞ்சிதமான காமியநிஷித்தகர்மங்கள் யாவுஞ் சேர்ந்து ஒரு ஜன்மத்தைக் கொடுக்கும். ஆதலால் முமுக்ஷுவுக்கு வேறு ஒரு ஜன்மமுண்டாகும்.

4. ‡ அல்லது, யோகியின் காயவியூகத்தைப்போல ஒரேகாலத்தில் எல்லாச் சஞ்சிதமும் அநந்த சரீரங்களை ஆரம்பிக்கின்றன. அவற்றால் முமுக்ஷு பின் ஜன்மத்தில் எல்லாவற்றின் பயனையும் அநுபவித்துக்கொள்ளுகின்றான்.

5. ¶ அல்லது, நித்திய நைமித்திகங்களைச் செய்தலாலுண்டாகும் கிலேசம் ஜன்மாந்தரத்தின் சஞ்சித நிஷித்தகர்மங்களின் பயனும். ஆதலால் ஜன்மாந்தரத்தின் சஞ்சித நிஷித்தகர்மங்கள் வேறுஜன்மத்தைத்தரா. காமியமாகிய சஞ்சிதம் எதுவோ அது ஒரு ஜன்மத்திலேனும் ஒரு காலத்திலேனும் அநந்த சரீரங்களை ஆரம்பிக்கின்றது. ஆதலால் மேல் ஜன்மத்தில் முமுக்ஷுவுக்குத்

---

* சாதாரண அசாதாரணப் பிராயச்சித்தங்களைச் செய்வதில் வெகு சிரமத்தைக் கண்டு முமுக்ஷுவுக்குத் தன் மதத்தில் பிரியமுண்டாகாதென்னும் அபிப்பிராயத்தால் பூர்வபக்ஷி வேறு எளிய உபாயத்தைச் சொல்லுகிறான்.

† "நாபுக்தம் க்ஷீயதே கர்ம கல்பகோடிஶதைரபி । அவஶ்யமேவ போக்தவ்யம் க்ருதம் கர்ம ஶுபாஶுபம் ॥ நூறுகோடி கற்பங்களாலும் அஞ்ஞானியின் கர்மம் போகமின்றி நாசமாகாது. ஆனால் செய்யப்பட்ட சுபாசுபகர்மங்கள் அவசியம் அநுபவிக்கத்தக்கனவாம். போகமின்றி (அநுபவித்தலின்றி) கர்மத்திற்கு நாசத்தை அங்கீகரிக்கின், முற்கூறிய சாஸ்திரவசனங்களுக்கு விரோதமுண்டாகும். அதனை நீக்குதற்பொருட்டு வேறுபக்ஷத்தைக் கூறுகின்றார்.

‡ அநேக விலக்ஷண ஜன்மங்களுக்குக் காரணமான அநேக கர்மங்களின் பயன் ஒரு ஜன்மத்திற் சம்பவியாதென்னும் சங்கையைக்கொண்டு வேறு பக்ஷத்தைக் கூறுகிறார்.

¶ யோகியின்காயமாவது சரீரங்கள்; அவற்றின் வியூகமாவது சமூகம் (கூட்டம்); அதனைப்போல ஒருகாலத்திலும் அநேகவித ஜன்மங்களால் அநேகவித சுகமநுபவிக்கப்படுவதுபோல அநேகவித துக்கமும் பின் ஜன்மத்தில் அநுபவிக்க நேருமென்னும் அச்சத்தால் முமுக்ஷுவுக்கு இம்மதத்தில் பிரவிருத்தியுண்டாகாதென்னும் அபிப்பிராயத்தால் ஏகபவிகவாதி பின்ஜன்மத்தில் முமுக்ஷுவுக்குக் கேவல சுகத்தின் போகத்தைக் காட்டித் தன் மதத்தில் உருசியை யுண்டுபண்ணுகின்றார்.

துக்கத்தின் லேசமு முண்டாகிறதில்லை; கேவலம் சுகத்தின்போக முண்டாகிறது. ஏனெனின், ஜன்மாந்தரத்தின் சஞ்சிதமான, விகிதகர்மங்களால் சரீர முண்டாயிருக்கிறது. சஞ்சித நிஷித்தம் நித்தியநைமித்திக கர்மாநுஷ்டானக் கிலேசத்தினுல் முன் ஜன்மத்திலேயே அநுபவித்துக் கொள்ளப்பட்டது.

இவ்விதமாகப் பிராயச்சித்தமின்றிக் கேவல நித்தியநைமித்திக கர்மங்களின் அநுஷ்டானத்தினுல் மோக்ஷமுண்டாகின்றது. ஆதலால் நித்தியகர்மங்களை எப்போதும், நைமித்திக்கர்மங்களை நிமித்தம் நேரிடும்போதும் அநுஷ்டிக்க வேண்டியது. இந்தமதத்தைச் சாஸ்திரத்தில் ¶ ஏகபவிகவாத மென்பர்.

## 59. பந்தநிவிருத்தி ஞானவாயிலாக நூலின் பிரயோஜன மாகாமை.

இதனுலும் ஞானவாயிலாகப் பந்தநிவிருத்தி நூலின் பிரயோஜனமன்று. ஏனெனின், எந்த வஸ்து வேறொன்றினு லுண்டாகிறதில்லையோ, அது முக்கியப் பிரயோஜனமாகிறது. ரூபஞானம் நேத்திரமின்றி வேறெதனுலு முண்டாகாமையால் ரூபஞானமே நேத்திரத்தின் முக்கியப் பிரயோஜனமாவது போல, பந்தநிவிருத்தியானது கிரந்தமின்றிக் கர்மத்தினு லுண்டாகின்றது; ஆதலால் பந்தத்தின் நிவிருத்தி கிரந்தத்தின் பிரயோஜனமன்று.

இவ்வாற்றுல் கிரந்தத்தின் அதிகாரிவிஷயப்பிரயோஜனங்கள் பொருந்தா.

## 60. சம்பந்த கண்டநம். (4)

### பூர்வபக்ஷம்.

அதிகாரிமுதலியவை யின்மையால் சம்பந்தமும் பொருந்ாது. ஏனெனின்,

1. விஷயமின்மையால் கிரந்தத்திற்கும் விஷயத்திற்கும் பிரதிபாத்தியப் பிரதிபாதகத்தன்மைச் சம்பந்தம் பொருந்தாது.

2. அதிகாரியும் பயனுமின்மையால் அவற்றிற்குப் பிராப்பியப் பிராபக பாவ சம்பந்தம் பொருந்தாது.

3. அதிகாரியின்மையால் அவனுக்கும் விசாரத்திற்கும் கர்த்திருகர்த்தவ்யபாவ சம்பந்தம் பொருந்தாது.

4. ஞானம் பயனில்லாததாயிருத்தலின் கிரந்தத்திற்கும் ஞானத்திற்கும் ஜந்நியஜநகபாவசம்பந்தம் பொருந்தாது. ஸபலவஸ்து ஜந்நியமாம்; முற்கூறியபடி ஞானம் ஸபலமன்று.

5. ஞானத்தின் சொரூபமுமில்லை. இதனுலும் ஞானத்திற்கும் கிரந்தத்திற்கும் சம்பந்தம் பொருந்தாது. ஏனெனின் ஜீவப்பிரஹ்மங்களின் அபேத

¶ ஏகபவிகத்தை - ஏகஜன்மத்தை அல்லது மோக்ஷத்துக்குச் சாதனமாக ஒரு கர்மத்தை; வாதம்-சொல்லுதல்; ஏகபவிகவாத மென்னும் சொல்லிற்குப் பொருளாம்.

நிச்சயத்திற்குச் சித்தாந்தத்தில் ஞானமென்று பெயர். அவ்வபேதநிச்சயம் பொருந்தாது. ஏனெனின் ஜீவப்பிரஹ்மங்களுக்கு அபேதமில்லையென்னும் வார்த்தை விஷயநிராகரணத்தில் முன் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. ஆதலால் அபேதநிச்சயவடிவ ஞானம் பொருந்தாது.

இவ்வாற்றால் அதிகாரி முதலிய அநுபந்தங்களின் அபாவத்தால் கிரந்தத்தின் ஆரம்பம் பொருந்தாது.

## பூர்வபக்ஷியின் கிரமமாக உத்தரம். 61—93.

## 61. அதிகாரி மண்டநம். (1) 61—71.

### 34 - 36. இலக்கத்திலுள்ள பூர்வபக்ஷத்திற்கு உத்தரம். 61-63.
### [மோக்ஷத்தினது முதலம்சத்தின் இச்சை பொருந்துமாறு.]

"மோக்ஷத்தின் இச்சை ஒருவருக்கும் பொருந்தாது. ஏனெனின் மோக்ஷத்தில் இரண்டு அம்சங்களுள.

1. ஒன்றே காரணத்தோடுகூடிய ஜகத்தின் நிவிருத்தியாகிய மோக்ஷத்தின் அம்சம்.

2. மற்றைய அம்சம் பிரஹ்மத்தின் பிராப்திவடிவமாம்.

அவற்றுள் காரணத்தோடுகூடிய ஜகத்தின் நிவிருத்திவடிவ மோக்ஷத்தினது முதலம்சத்தின் இச்சை ஒருவருக்குமில்லை. ஆனால் மூன்றுவித துக்க நிவிருத்தியினிச்சை எல்லாப் புருஷர்களுக்குமுண்டு. அந்தத் துக்கநிவிருத்தி தத்தம் உபாயங்களினால் உண்டாய்விடுகின்றது. ஆதலால் காரணத்தோடு கூடிய ஜகத்தின் நிவிருத்தியை விரும்புகிறவனாகிய முமுக்ஷு அதிகாரியெனல் பொருந்தாது." என்று முதலில் பூர்வபக்ஷி கூறினார்.

## 62. அதன் சமாதானத்தை முதலில் கூறுகின்றார்.

ஜகத்திற்குக் காரணமான அஞ்ஞானம், ஜகத்து என்பவற்றின் நாசமின்றிய வேறு உபாயங்களால் மூன்றுவித துக்கங்களின் நாசமுண்டாகாது. மூல அவித்தையின் நிவிருத்தியால் சகல துக்கங்களும், துக்கங்களுக்குக் காரணமான ரோகாதிகளும், ரோகாதிகளுக்கு ஆசிரய (இட)மான சரீராதிகளும் நாசமாகின்றன. ஆதலால் மூன்றுவித துக்கநாசத்தின்பொருட்டுக் காரணசகித ஜகத்தின் நிவிருத்திரூப மோக்ஷத்தின் முதலம்சத்தை எல்லோரும் இச்சிக்கிறார்கள்.

**தாற்பரியம் இதுவாம்:**—எவர்கள் சகல ஔஷதாதி உபாயங்களைச் செய்தலிற் சமர்த்தர்களோ அவர்களுக்கும் துக்கம் நியமமாக நிவிருத்தியாகிறதில்லை. ரோகாதிகளால் உண்டாகும் துக்கங்கள் சிலருக்கு ஔஷதாதி உபாயங்களால் நிவிருத்தியாகின்றன; சிலருக்கு ஔஷதாதிகளால் நிவிருத்தியாகிறதில்லை. ஆதலால் ஔஷதாதி உபாயங்களால் ரோகாதிகளால் உண்டாகும் துக்

கங்கள் நியமமாக நிவிருத்தியாவதில்லை.[மேலும் எவனுக்கு ஔஷதாதி உபாயங்களால் துக்கம் நிவிருத்தியாகிறதோ, அவனுக்கும் துக்கம் மறுபடியும் உண்டாகிறது. ஆதலால் ஔஷதாதி உபாயங்களால் துக்கம் அத்தியந்தம் நிவிருத்தியாகிறதில்லை. எது நிவிருத்தியாகி மறுபடியும் உண்டாகிறதில்லையோ, அது அத்தியந்த நிவிருத்தி எனப்படும். ஔஷதாதி உபாயங்களால் துக்க நிவிருத்தி நியமமாக உண்டாகிறதில்லை; நிவிருத்தியான துக்கம் மறுபடியும் உண்டாகிறது. ஆதலால் அவ்வுபாயங்களால் அத்தியந்த நிவிருத்தியு முண்டாகிறதில்லை.

மேலும் துக்கத்தின் சகல சாதனங்களும் நாசமானல் சகல துக்கங்களும் நியமமாக நிவிருத்தியாகும். அச்சாதனங்கள் நாசமாக மறுபடியும் துக்கமுண்டாகாது. ஆதலால் துக்க நிவிருத்தியின் பொருட்டுத் துக்க* சாதனங்களினது நிவிருத்தியின் இச்சை யெல்லோருக்கும் உண்டாகிறது.

**63.** அந்தத் துக்கத்தின் சாதனம் அஞ்ஞானமும், அதன் காரியமான பிரபஞ்சமுமாம். இவ்வார்த்தை சாந்தோக்கிய உபநிஷத்தில் பூமவித்தையிற் பிரசித்தம். அங்கு இது **பிரசங்கமாம்**:—"ஒரு சமயத்தில் சனற்குமாரரிடத்தில் நாரதர் சென்று, "சுவாமின், ஆத்மஞானியா யிருக்கிற புருஷனுக்குச் சோகமுண்டாகாது. நானோ சோகத்தோடு கூடியவனா யிருக்கிறேன். ஆதலால் நான் அஞ்ஞானியா யிருக்கிறேன். எனக்கு அஞ்ஞானம் நீங்கும்படி உபதேசம் செய்யவேண்டும்" என்று சொன்னார்.

அப்போது சனற்குமாரர் நாரதரைப் பார்த்துச் சொல்லுகிறார் :—நாரதரே, பூமா சோகரகிதமாயும் சுகரூபமாயும் இருக்கிறது. பூமாவுக்கு அந்நியமான சகலமும் துச்சமாயும் துக்கத்துக்குச் சாதனமாயும் இருக்கின்றன.

**பூமா** என்பது பிரஹ்மத்திற்காம்.

இவ்விதமாகப் பிரஹ்மத்துக்குப் பின்னமான வஸ்து எதுவோ அதனைச் சகல துக்கங்களுக்கும் சாதனமென்பர். அஞ்ஞானமும் அதன் காரியமான பிரபஞ்சமும் பிரஹ்மத்துக்குப் பின்னமா யிருத்தலின் துக்கந்துக்குச் சாதனமாம். அவைகள் நிவிருத்தியாவதால் சகல துக்கங்களும் நியமமாக அத்தியந்தமாய் நிவிருத்தியாகின்றன. ஆதலால் சகல துக்கங்களின் நிவிருத்தியின்

---

* கபத்தை யுண்டுபண்ணும் பதார்த்தங்களை விட்டாலன்றிக் கபரோகம் நிவிருத்தியாகாதாகலின், கபநிவிருத்தியை விரும்புகின்றவன் "யான் வைத்தியனால் தெரிந்துகொண்டு கபத்தை யுண்டுபண்ணும் பதார்த்தங்களை விடுவேன்." என்று கபத்தினது சாதனங்களின் நிவிருத்தியை இச்சிக்கிறான். அங்ஙனமே துக்கத்தினது சாதனங்களின் நிவிருத்தியின்றித் துக்கத்தின் நிவிருத்தி யுண்டாகாது. ஆதலால் துக்கத்தின் நிவிருத்தியை விரும்பும் புருஷன், "யான் சாஸ்திரத்தினாலும் குருவினாலும் தெரிந்துகொண்டு துக்கத்தின் சாதனங்களை விடுவேன்" என்று துக்கத்தின் சாதனங்களினது நிவிருத்தியையும் இச்சிக்கிறான்.

பொருட்டு அஞ்ஞானசகிதப் பிரபஞ்சத்தின் * நிவிருத்திரூப மோக்ஷத்தின் முதல் அம்சத்தின் விருப்பம் பொருந்துகிறது.

**64. இலக்கம். 37-38-ல் உள்ள பூர்வபக்ஷத்தின் உத்தரம். 64-65.**

**(மோக்ஷத்தின் இரண்டாவது அம்சத்தின் இச்சைகூடும்.)**

அன்றியும் "எந்தவஸ்து அநுபவிக்கப்பட்டிருக்கிறதோ அதனையடைய இச்சை உண்டாகும். பிரஹ்மம் ஒருவராலும் அநுபவிக்கப்படவில்லையாகலின், பிரஹ்மப் பிராப்திரூப மோக்ஷத்தின் இரண்டாவது அம்சத்தின் இச்சை ஒருவருக்கும் உண்டாகிறதில்லை." என்று பூர்வபக்ஷியினால் முன் (37-வது பிரசங்கத்தில்) சொல்லப்பட்டது.

அதன் † சமாதானத்தைக் கூறுகின்றார்:—எல்லோரும் சுகத்தை அநுபவித்திருக்கிறார்கள். ஆதலால் சுகத்தில் இச்சை எல்லோருக்கும் உண்டாகிறது.

---

* இங்கு இது சங்கையாம்:—முன் அநுபவிக்கப்பட்ட பதார்த்தம் எதுவோ அதன்கண் இச்சையுண்டாமென்பது நியமம். பிரஹ்மவடிவ அதிஷ்டானத்தின் ஞானத்தால் அஞ்ஞானஸகித பிரபஞ்சத்தினது நிவிருத்தியின் அநுபவம் முமுக்ஷுவுக்கு முன் ஒருகாலத்திலு முண்டானதில்லை. ஆதலால் அவனுக்கு அஞ்ஞானஸகிதப் பிரபஞ்சத்தினது நிவிருத்தியின் இச்சை பொருந்தாது.

இந்த 36-வது பிரசங்கத்தின் டிப்பணியிற் கூறிய சங்கைக்கு இது சமாதானமாம்:-அநுபவிக்கப்பட்ட வஸ்துவின் இச்சை யுண்டாகுமென்னும் நியமமில்லை. ஆனால் அநுபவிக்கப்பட்ட வஸ்துவின் ஸஜாதீயமான வஸ்துவின் இச்சை யுண்டாமென்பது நியமமாம். அநுபவிக்கப்பட்ட வஸ்துவின் இச்சை யுண்டாயின் புசித்த போஜனத்தில் மீண்டும் பிரவிருத்தி யுண்டாதல் வேண்டும்; உண்டாகிறதில்லை. ஆனால் அதற்கு ஸஜாதீயமாய் அதன் சமான அல்லது அதனின் வேறான போஜனத்தில் இச்சை யுண்டாகிறது. அஞ்ஞானத்துக்கும் பிரபஞ்சத்துக்கும் அதிஷ்டானம் பிரஹ்மமாவதுபோல கற்பித ஸர்ப்பத்துக்கு அதிஷ்டானம் இரஜ்ஜு முதலியனவாம். ஆதலால் பிரஹ்மமும் ரஜ்ஜுவும் அதிஷ்டானத்தன்மையால் பரஸ்பரம் ஸஜாதீயங்களா யிருக்கின்றன. ஸர்ப்பாதிகளின் நிவிருத்தியும் அஞ்ஞானஸகித பிரபஞ்ச நிவிருத்தியும் பரஸ்பரம் ஸஜாதீயங்களா யிருக்கின்றன. ரஜ்ஜுவாதிகளின் ஞானத்தால் சர்ப்பாதிகளின் நிவிருத்தி யுண்டாகிறதென்பது முமுக்ஷுவுக்கு அநுபவிக்கப்பட்டதாம். ஆதலால் அவற்றின் ஸஜாதீயமான பிரஹ்மஞானத்தால் அஞ்ஞான சகிதப் பிரபஞ்சத்தின் நிவிருத்தியில் இச்சை யுண்டாகக்கூடும்.

† இங்கு இது இரகசியமாம்:—அநுபவிக்கப்பட்ட வஸ்துமாத்திரத்தின் இச்சை யுண்டாகுமாயின்; அநுபவிக்கப்பட்ட ரோகமுதலிய நிமித்தத்தா லுண்டாகிய துக்கத்திலும், அதன் சாதனமாகிய ரோகாதி வடிவப் பிரதிகூல வஸ்துவிலும் இச்சை எல்லோருக்கும் உண்டாதல்வேண்டும்; உண்டாகிறதில்லை. ஆதலால் அநுபவிக்கப்பட்ட சுகத்திலும், சுகத்தின் சாதன வடிவ அநுகூல வஸ்துவிலும் இச்சையுண்டாம். அவற்றிலும் அநுபவிக்கப்பட்ட அநுகூல வஸ்துவின் சஜாதீயத்தின் இச்சை யுண்டாமென்பது நியமம். எதனால் புத்தியில் பிரஹ்மாநந்தத்தின் பிரதிபிம்பவடிவ விஷய சுகம் எல்லோராலும் அநுபவிக்கப்பட் டிருக்கின்றதோ, அதன் சஜாதீய பிம்பபூத சுகவடிவப் பிரஹ்மம் சாஸ்திரங்களிற் கேட்கப்பட் டிருக்கின்றதோ, அதனால் பிரஹ்மப் பிராப்தியின் இச்சை கூடும்.

"பிரஹ்மம் நித்திய சுகரூபமாம்" என்று சாஸ்திரத்தில் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆதலால் உத்தம விவேகியானவன் சுகசொரூபப் பிரஹ்மத்தின் அடைவை இச்சிக்கிறான்.

65. சகல ஜனங்களும் விஷய ஜந்நிய சுகத்தை இச்சிக்கிறார்கள். அந்த விஷய ஜந்நிய சுகம் மோக்ஷத்தில் கிடைக்கிறதில்லை; ஆனால் பிரபஞ்சத்திற் கிடைக்கிறது. ஆதலால் மோக்ஷ இச்சையுள்ள அதிகாரியே சித்தியாமையால் கிரந்தாரம்பம் நிஷ்பிரயோஜனமாம்." என்று முன் (38 - வது பிரசங்கத்தில்) சொல்லப்பட்டது.

இப்படி ஆக்ஷேபிக்கும் பூர்வபக்ஷியை இது கேட்கவேண்டும்:—(1) முமுக்ஷு ஒருவனும் இல்லையா? (2) அல்லது முமுக்ஷு இருந்தும் அவனுக்குக் கிரந்தத்திற் பிரவிருத்தி உண்டாகிறதில்லையா ?

1. "முமுக்ஷுவே இல்லை" எனின், அது பொருந்தாது. ஏனெனின் எல்லோரும் சர்வ துக்கநாசத்தையும் நித்திய சுகப்பிராப்தியையும் இச்சிக்கிறார்கள். அந்தச் சர்வ துக்கநாசமும் சுகப்பிராப்தியுமே மோக்ஷமாம். ஆதலால் எல்லோரும் முமுக்ஷுக்களாகவே இருக்கிறார்கள்.

அன்றியும், "விஷய ஜந்நிய சுகத்தை எல்லோரும் இச்சிக்கிறார்க"ளென்று கூறப்பட்டது.

அஃதில்லை; ஆனால் சுகமாத்திரத்தை எல்லோரும் இச்சிக்கிறார்கள். அந்தச் சுகம் விஷயத்தினாலுண்டாகுக; அல்லது விஷயமின்றி உண்டாகுக. விஷய ஜந்நிய சுகத்தினையே விரும்புவார்களாயின், சுழுத்தி சுகத்தின் இச்சையுண்டாகலாகாது. சுழுத்தி சுகம் விஷயஜந்நியமன்று. ஆதலால் சுகமாத்திரத்தை எல்லோரும் இச்சிக்கிறார்கள்; கேவலம் விஷயஜந்நிய சுகத்தையே இச்சிக்கிறதில்லை. அதற்கு மாறான ஆத்மசுகத்திலும் இச்சையுண்டாகிறது; விஷயசுகத்தில் இச்சையுண்டாகிறதில்லை. ஏனெனின் எல்லோருக்கும் குறைந்த அல்லது அதிக விஷயசுகம் கிடைத்தும் இருக்கிறது. ஆனால் "எக்காலத்திலும் நாசமாகாத ஒரேவிதமான சுகம் நமக்குக் கிடைக்கவேண்டு"மென்னும் இச்சை எப்போதுமிருக்கிறது. இத்தன்மைய சுகம் ஆத்மசொரூபமான மோக்ஷமாம். ஆதலால் எல்லோரும் முமுக்ஷுக்களாவர். "முமுக்ஷு ஒருவரும் ஆகார்" என்று கூறுதல் பொருந்தாது.

## 66. முமுக்ஷு சித்தித்தலால் கிரந்தத்தின் ஆரம்பம் ஸபலமாமெனல். 66—68.

2. "முமுக்ஷு இருந்தும் அவனுக்குக் கிரந்தத்தில் பிரவிருத்தி உண்டாகிறதில்லை; ஆதலால் கிரந்தாரம்பம் நிஷ்பலமாம்" என்று கூறுகிறவனை இது கேட்கவேண்டும்:—

(1) கிரந்தம் மோக்ஷசாதன மாகாமையினால் அதில் பிரவிருத்தி உண்டாகவில்லையா ?

(2) அல்லது இந்தக் கிரந்தத்தைவிட வேறு சாதனங்களிருத்தலால் அவற்றிற் பிரவிருத்தி யுண்டாய் இதில் பிரவிருத்தி உண்டாக வில்லையா ?

(3) அல்லது எந்தச் சமமுதலிய சாதனங்களால் கிரந்தத்தில் அதிகாரம் சொல்லப்பட்டதோ, அந்தச் சமமுதலியவற்றையுடைய ஞானத் துக்கு¦யோக்கியமான அதிகாரி ஒருவனுமில்லாமையால் கிரந் தத்திற் பிரவிருத்தி உண்டாகவில்லையா ?

(1) "கிரந்தம் மோக்ஷத்திற்குச் சாதனமன்" றென்று கூறியது யாதோ அது பொருந்தாது. ஏனெனின் மோக்ஷம் ஞானத்தால் நியமமாக உண்டாகிறதென்பது வேதத்தின் சித்தாந்தம்.

அந்த ஞானம் சிரவணத்தால் உண்டாகிறது.

அச்சிரவணம் இரண்டு * விதமாம்:—

(1) ஒன்றோ வேதாந்த வாக்கியத்திற்கும் சுரோத்திரத்திற்கு முள்ள சையோகரூப சிரவணமாம்.

(2) மற்றையது வேதாந்தவாக்கியத்தின் விசாரரூபசிரவணமாம்.

இவற்றில் ஞானத்திற்கு ஹேது முதல் சிரவணமாம்; இரண்டாவதன்று. ஏனெனின், சப்த ஜந்நியஞானத்தில் இந்திரியத்தோடு சப்தத்திற்குள்ள சையோகமே எங்கும் ஹேதுவாம். ஆதலால் வேதாந்தவாக்கியத்திற்கும் சுரோத்திரத்திற்கு முள்ள சையோகரூப சிரவணம் பிரஹ்ம ஞானத்திற்கு ஹேதுவாம். அவாந்தரவாக்கியத்தின் சிரவணம் பரோக்ஷஞானத்துக்கும், மகாவாக்கியத்தின் சிரவணம் அபரோக்ஷஞானத்துக்கும் ஹேதுவென்பது முன் (20-ல்) பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது.

எவனுக்கு ஞானமுண்டானாலும் அசம்பாவனை விபரீதபாவனைகள் இருக் கின்றனவோ, அவன் இரண்டாவது [1] சிரவணத்தையும் [2] மனனத்தையும் [3] நிதித்தியாசனத்தையுஞ் செய்யவேண்டும்.

[1] வேதாந்த வாக்கியத்தின் விசாரரூப சிரவணத்தினால் வேதாந்த வாக்கியத்திலுள்ள அசம்பாவனை நீங்குகிறது. "வேதாந்த வாக்கியம் பிரஹ் மத்தைப் பிரதிபாதிக்கிறதா ? அல்லது வேறு அர்த்தத்தைப் பிரதிபாதிக்கிற தா?" என்னும் சமுசயம் வேதாந்த வாக்கியத்தின் அசம்பாவனையாம். அது அவற்றின் விசாரத்தால் நிவிருத்தியாகிறது.

[2] மனனத்தால் பிரமேயத்தின் அசம்பாவனை நீங்குகிறது. ஜீவப்பிரஹ் மங்களின் ஏகத்துவம் வேதாந்தத்தின் பிரமேயமென்று சொல்லப்படுகின்

---

* அங்க அங்கி பேதத்தால் சிரவணம் இருவகைத்தாம். அவற்றுள் இரண்டாவது சிரவணம் முதல் சிரவணத்திற்கு உபகாரகமாம். ஆதலால் அது அங்க (சாதன) சிரவண மெனப்படுகின்றது. முதல் சிரவணம் உபகாரியமா மாகலின் அங்கி (பல) சிரவண மெனப்படும்.

றது. "அவ்வேகத்துவம் சத்தியமா ? அல்லது ஜீவப் பிரஹ்மபேதம் சத்தியமா?" என்னும் சம்சயம் யாதோ, அது பிரமேயத்தின் அசம்பாவனையெனப் படுகின்றது. அது மனனத்தினால் நீங்குகின்றது.

[3] நிதித்தியாசனத்தால் விபரீதபாவனை நிவிருத்தியாகிறது.

இவ்விதத்தால் முதல் சிரவணமோ ஞானவாயிலாக மோக்ஷத்துக்கு ஹேதுவாம். விசாரரூப சிரவண மனன நிதித்தியாசனங்கள் அசம்பாவனை விபரீதபாவனைகளின் நிவிருத்திவாயிலாக மோக்ஷத்துக்கு ஹேதுவாம். வேதாந்தமென்பது உபநிஷத்து. அது இந்த நூலைவிட வேறாயிருக்கினும், அதன் சமான அர்த்தமுடைய பாஷைவாக்கியங்கள் இந்நூலினுமிருக்கின்றன. அவற்றின் சிரவணத்தினாலும் ஞான முண்டாகுமென்பது * இனி (99 - ல்) பிரதிபாதிக்கப்படும்.

இவ்வாறு ஞானவாயிலாகக் கிரந்தம் மோக்ஷத்துக்கு ஹேதுவாம். இந்தக் கிரந்தம் விசாரரூபமாயும் மனனரூபமாயு மிருத்தலால் அசம்பாவனாதி தோஷங்களின் நிவிருத்திவாயிலாக மோக்ஷத்திற்கு ஹேதுவாம். ஆதலால் கிரந்தத்தினால் மோக்ஷம் உண்டாகாதென்பது கேவலம் ஹடமாத்திரமாம்.

**67.** (2) "கிரந்தத்தினால் மோக்ஷம் உண்டாம். ஆனால் வேறு சாதனங்களாலும் மோக்ஷமுண்டாம். ஆதலால் கிரந்தத்தின் ஆரம்பம் நிஷ்பலமாம்." என்று கூறுவானாயின்,

அவனை இது கேட்பாம்:—மோக்ஷத்தைத் தரும் வேறு சாதனங்கள் எவை? "ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தைப் பிரதிபாதிக்கும் † உபநிஷத்து சூத்திரபாஷிய முதலிய ஸம்ஸ்கிருத கிரந்தங்கள் அநேகமிருக்கின்றன. அவற்றினாலும் ஞானவாயிலாக மோக்ஷம் உண்டாகிறது. இதற்கு வேறு அதிகாரியில்லை. ஆதலால் இந்தக் கிரந்தம் நிஷ்பிரயோஜனமாம்." என்று சொல்லுவானாயின்,

அவ்வார்த்தை சத்தியமாமாயினும், அந்தக் கிரந்தங்களின் அர்த்தத்தைக் கிரகிக்கச் சக்தி யில்லாத முமுக்ஷுவுக்கு அவற்றால் ஞானமுண்டாகாது.

---

* பாஷைநூலின் சிரவணத்தினாலும் ஞானமுண்டாகிறது என்னும் வார்த்தை மேல் 99-வது பிரசங்கத்தில் சொல்லப்படும்.

† வேதத்தின் அந்த (கடைப்) பாகமாகிய வேதாந்தம் எதுவோ அது உபநிஷத்தெனப்படும். அவ்வுபநிஷத்துகள் அநேகமாம் (க0அ). அவற்றில் ஈசம், கேனம், கடம், பிரசினம், முண்டகம், மாண்டூக்கியம், தைத்திரீயம், ஐதரேயம், சாந்தோக்கியம், பிருகதாரணியகம் என்னும் பத்து உபநிஷத்துகளும் முக்கியமாம். அவற்றிற்கு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகளால் செய்யப்பட்ட பாஷியமுளது. சூத்திர பாஷியங்களின் இலக்ஷணம் முன் 2-வது பக்கத்தில் †, ‡ குறியுள்ள டிப்பணிகளில் எழுதப்பட்டுளது.

ஆதலால் மந்த புத்தியுடைய முமுக்ஷுவுக்கு அவற்றிற் பிரவிருத்தியுண்டாகாது; இந்தக் கிரந்தத்திற்றான் பிரவிருத்தி யுண்டாகும்.

**68.** (3) அன்றியும், "கிரந்தத்தினால் மோக்ஷமுமுண்டாம். சம்ஸ்கிருத கிரந்தங்களால் மந்தபுத்தி யுள்ளவர்களுக்குப் போதமும் உண்டாகாது. முமுக்ஷுவும் உண்டு; என்றாலும் கிரந்தத்தில் பிரவிருத்தி உண்டாகிறதில்லை. ஏனெனின் விவேக வைராக்கிய சமமுதலியவற்றை யுடையவன் அதிகாரி யெனப்பட்டது. அது துர்லபமா (கிடைத்தலரிதா) கலின் தன்னிடத்தில் சாதனமின்மையைக் கண்டு கிரந்தத்திற் பிரவிருத்தி யுண்டாகிறதில்லை." என்று கூறுவாராயின்,

அவரை இது கேட்பாம்:—[1] அதிகாரிகள் அநேகரில்லையா ? [2] அல்லது ஒருவரும் இல்லையா ?

[1.] "அதிகாரிகள் அநேகரில்லை" எனின்,

அதனை யாமும் அங்கீகரிக்கின்றோம்.

[2.] "ஞானத்திற்கு யோக்கியமான அதிகாரி ஒருவரும் இல்லை" என்று கூறின்,

அவ்வார்த்தை பொருந்தாது. ஏனெனின் அந்தக்கரணத்தில் (க) மலம் (உ) விக்ஷேபம் (ங) சொரூபாவரணமென மூன்று தோஷங்களிருக்கின்றன.

(க) மலம் என்பது பாவத்திற்காம்.

(உ) விக்ஷேபம் என்பது சஞ்சலத்தன்மைக்காம்.

(ங) ஆவரணம் என்பது அஞ்ஞானத்திற்காம்.

(க) சுபகர்மத்தால் மலதோஷம் நீங்குகின்றது.

(உ) உபாசனையினால் விக்ஷேபதோஷம் நீங்குகிறது.

(ங) ஞானத்தால் ஆவரணதோஷம் நிவிருத்தியாகின்றது.

எவனுடைய அந்தக்கரணத்தில் மல விக்ஷேப தோஷங்கள் இருக்கின்றனவோ அவன் அதிகாரி யல்லன். ஆனால் இந்த ஜன்மத்திலாவது பூர்வ ஜன்மத்திலாவது செய்த சுப கர்மத்தினாலும் உபாசனையினாலும் எவனுடைய மல விக்ஷேப தோஷங்கள் நிவிருத்தியா யிருக்கின்றனவோ, அங்ஙனமே ஞான யோக்கிய * அதிகாரியா யிருக்கின்றானோ, அவனுக்கு இந்தக் கிரந்தத்தில் பிரவிருத்தி உண்டாகும்.

---

* 1. கிருதோபாஸனர், 2. அகிருதோபாஸனர் என்னும் பேதத்தால் அதிகாரிகள் இருவகையாவர். அவர்களுள்,

1. சகுணப் பிரஹ்மத்தின் சம்பூர்ண (சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மை பரியந்தமான) உபாசனை எந்தப் புருஷனாற் செய்யப்பட் டிருக்கின்றதோ, அவன் கிருதோபாஸனனவன். அவனிடத்திலோ சாஸ்திரத்திற் கூறப்பட்ட சாதனங்கள் யாவும் பிரசித்தமாய்க் காணப்படுகின்றன.

## 69. பாமர விஷயிபுருஷர்களின் லக்ஷணம்.

"எல்லோரும் விஷய சுகத்தை யிச்சிக்கிறார்கள். நித்திய சுகத்தை ஒருவரும் இச்சிக்கிறதில்லை" என்று முன் (38-ல்) சொல்லப்பட்டது.

அது பொருந்தாது. ஏனெனின், 1. பாமரன், 2. விஷயி, 3. ஜிஞ்ஞாசு, 4. முக்தனெனப் புருஷர் நான்கு வகையினராவர்.

1. இகலோகத்தில் நிஷித்தமாயும் விகிதமாயும் இருக்கிற போகங்களில் ஆசக்தியுள்ள சாஸ்திர ஸம்ஸ்கார மின்றிய புருஷன் * பாமரன் எனப்படுவான்.

2. சாஸ்திராநுசாரமாக விஷய போகங்களை அநுபவித்துக்கொண்டு இக பரலோகங்களின் போகங்களை யடையக் கர்மஞ் செய்பவன் † விஷயி யெனப்படுவன்.

## 70. ஜிஞ்ஞாசுவின் லக்ஷணம்.

3. இத்தன்மைய புருஷன் ஜிஞ்ஞாஸு வெனப்படுவன்:—எந்தப் புருஷன் உத்தம ஸம்ஸ்காரத்தினால் சத்சாஸ்திரங்களைச் சிரவணஞ் செய்கிறானோ, அவ்வுத்தமனுக்கு இவ்வாறு விவேக முண்டாகிறது:—

2. எவனுக்கு ஞானத்திற்கு முன் சகுணப் பிரஹ்மத்தின் உபாஸனை அபூர்ணமா யிருக்கிறதோ, அவன் அகிருதோபாஸனனாவன். அவனிடத்தில் சகல சாதனங்களும் பிரசித்தமாய்க் காணப்படுவதில்லை. ஆனால் சிற்சில சாதனங்கள் பிரசித்தமாய்க் காணப்படுகின்றன; கௌணமாயு மிருக்கின்றன. ஆதலால் அவனுக்குச் சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மை யின்மையால் ஞானமுண்டாகிய பின்னர் விபரீதபாவனை யிருக்கின்றது. அதனை நிவிருத்திக்கும்பொருட்டு நிதித்தியாஸனம் கர்த்தவ்வியமாம்.

* 1. உத்தமன், 2. மத்திமன், 3. கனிஷ்டன் என்னும் பேதத்தால் பாமரர் மூவகையினராவர்.

1. சாஸ்திரவுணர்ச்சி யுடையவனாயினும் இவ்வுலகத்துப் போகங்களிலேயே பற்றுடையவன் உத்தம பாமரனாவன்.

2. சாஸ்திர முணராதவனாய்ப் பிறர்வாயாற் கேட்கப்பட்ட சாஸ்திரார்த்தங்களில் விசுவாசம் வைத்தலின்றி இவ்வுலக போகங்களிலேயே பற்றுடையவன் மத்திமபாமரனாவன்.

3. முற்றும் சாஸ்திர சம்ஸ்கார மின்றி யிருத்தலால் இவ்வுலக போகங்களிலேயே ஆசக்தனா யிருப்பவன் கனிஷ்ட (அற்ப) பாமரனாவன்.

† 1. உத்தமன், 2. மத்திமன், 3. கனிஷ்டன் என்னும் பேதத்தால் விஷயி மூவகையினராவர்.

1. வைகுண்டம் அல்லது பிரஹ்மலோக முதலியவற்றின் இச்சையினால் சகாம உபாசனையிற் பிரவிருத்தித்தவன் உத்தமவிஷயியாவன்.

2. சுவர்க்கலோகத்தின் இச்சையினால் ஸகாம கர்மத்தில் பிரவிருத்தித்தவன் மத்திமவிஷயியாவன்.

3. இவ்வுலகத்து ராஜ்ஜியாதி போகங்களின் இச்சையினால் புண்ணிய கர்மத்திற் பிரவிருத்தித்தவன் கனிஷ்டவிஷயியாவன்.

(1) விஷயசுகம் அநித்தியமாம். அஃதுள்ளகாலத்திலுங்கூட ஏதேனும் ஓர் துக்கம் அவசியம் இருந்துகொண்டிருக்கும். முடிவில் நாசமுடையதாகிய சுகம் துக்கத்திற்கு ஏதுவாம். இனிச் சுகம் போய்விடுமென்னும் பயத்தினால் வர்த்தமான காலத்திலும் சுகம் துக்கத்திற்கு ஹேதுவா யிருக்கிறது. இவ்வாறு விஷயசுகம் துக்கத்தினால் விழுங்கப்பட் டிருக்கின்றது; ஆதலால் துக்கரூபமாம்.

(2) இந்தத் துக்கம் இலௌகிக வுபாயத்தினால் நிவிருத்தியாகிறதில்லை. ஏனெனின் உபாயம் செய்பவனுக்கும் சகல துக்கங்களும் நிவிருத்தியாகிறதில்லை. நிவிருத்தியாயினும் மறுபடியும் உண்டாகின்றன.

(3) சரீரம் உள்ளவரையில் துக்க நிவிருத்தி சம்பவிப்பதுமில்லை. ஏனெனின் சரீரங்கள் எவையோ அவை யாவும் புண்ணிய பாவங்களால் உண்டாகின்றன.

[1] மனுஷிய சரீரமோ மிசிரகர்மத்தின் பயன் என்பது பிரசித்தம்.

[2] தேவசரீரமும் மிசிரகர்மபயனே. தேவசரீரம் கேவலம் புண்ணியத்தின் பயனுமாயின், தேவர்களுக்குத் தம்மினும் அதிகமான மற்றைத் தேவர்களது விபூதியைக் கண்டு தாபம் உண்டாகின்றது; அஃது உண்டாகலாகாது. எல்லாத் தேவர்களினும் பிரதானமான இந்திரனுக்கும் அநேக தைத்திய தானவர்களது பயத்தினால் துக்க முண்டாவதாகச் சாஸ்திரங்களிற் சொல்லப்பட் டிருக்கிறது. தேவசரீரம் கேவலம் புண்ணியபயனே யாமாயின் தேவர்களுக்குத் துக்க முண்டாகலாகாது. ஆதலால் தேவசரீரமும் புண்ணியபாவ மிரண்டின் பயனும். அன்றியும் தேவர்கள் பாபாகிதர்க ளென்று சுருதியில் சொல்லியிருத்தற்குத் தாற்பரிய மிதுவாம்:—கர்மத்திற்கு * அதிகாரம் கேவல மனுஷிய சரீரத்தில் இருக்கிறதே யல்லாமல் பிறவற்றில் இல்லை. ஆதலால் தேவசரீரத்திற் செய்யப்பட்ட சுபாசுபகர்மங்களின் பயன் தேவர்களுக் குண்டாகிறதில்லை. தேவசரீரத்திற்கு முந்திய சரீரத்திற் செய்யப்பட்ட சுபாசுப கர்மங்களின் பயன் தேவசரீரத்திலும் உண்டாகிறது. இவ்வாறு தேவசரீரம் மிசிரகர்மத்தின் பயனுயிருக்கின்றது.

[3] திரியக்கு பசு பக்ஷிகளின் சரீரங்களும் மிசிரகர்ம பயனும். ஏனெனின் அவற்றின் பிரசித்தமான துக்கம் பாவத்தின் பயனும், மைதுனாதிசுகம் புண்ணியபயனுமாம்.

* இதில் இத்துணைப் பேதமுண்டு:—பரமேசுவரனது பக்தி, தயை, சத்தியம், ஞானமுதலிய சுபகுணங்களுக்கோ மனிதர் மாத்திரத்திற்கு அதிகாரமுண்டு. வர்ணாசிரமங்களின் கர்மங்களுக்கோ வர்ணாசிரமமுடைய மனிதர்களுக்கே ஏற்றபடி அதிகாரமுண்டு. ஆதலால் தேவர் திரியக்கு பசு பக்ஷிகளுக்குக் கிரமமாகச் சர்வஞ்ஞத்தன்மை அற்பஞ்ஞத்தன்மை வடிவ ஏதுவினால் ஞானியையும் சிறுவனையும்போல வர்த்தமான சரீரத்தில் செய்யப்பட்ட சுபாசுப கர்மங்களின் பயன் வேறு ஜன்மத்தில் உண்டாகிறதில்லை. இது சாஸ்திர மரியாதை.

(க) வயிற்றினால் நடக்கும் (ஊரும்) ஜந்துக்கள் திரியக்கெனப்படும்.

(ங) பக்ஷங்களால் பறக்கும் பிராணிகள் பக்ஷியெனப்படும்.

(ச) நான்குபாதங்களால் நடப்பவை பசுவெனப்படுகின்றன.

(ஞ) சிலவிடத்துப் பசு பக்ஷிகளும் திரியக்கென்றே சொல்லப்படுகின்றன.

இவ்வாறு சகல சரீரங்களும் புண்ணியபாவங்களால் ஆக்கப்பட்டிருக்கின்றன.

[1] சில சரீரம் அதிக புண்ணியத்தினாலும் சொற்ப பாவத்தினாலும் உண்டாகின்றன. அவை தேவசரீரங்களாம். தத்தம் புண்ணியங்கள் எவையோ அவற்றானே சகல தேவர்களிடத்தும் பாவம் குறைவாயிருக்கின்றது. ஆதலால் குறைந்த பாவத்தினாலும் அதிக புண்ணியத்தினாலும் ஆக்கப்பட்டது தேவசரீர மெனப்படுகின்றது. இந்த அபிப்பிராயத்தினாற்றான் தேவசரீரம் கேவலம் புண்ணியகர்ம பலனென்று சாஸ்திரத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது; ஆதலால் விரோதமில்லை. பிராமணர்கள் மிகுதியாக வசிக்கும் கிராமம் பிராமணக் கிராமமெனப்படுவதுபோல அதிக புண்ணியத்தின் பயனாயிருத்தலால் தேவசரீரம் கேவல புண்ணியத்தின் பயனெனப்படுகின்றது. ஆனால் கேவல புண்ணியத்தின் பயன் அன்று.

[2] திரியக்கு பசு பக்ஷிகளின் சரீரம் அதிக பாவத்தினாலும் குறைந்த புண்ணியத்தினாலும் ஆக்கப்பட்டிருக்கிறது.

[3] உத்தம மனுஷியர்களது சரீரம் தேவ சரீரத்திற்குச் சமானமாயிருக்கிறது. நீசர்களது சரீரம் சர்ப்பாதிகளின் சரீரத்திற்குச் சமமாம்.

இவ்வாற்றாற் சகலசரீரங்களும் புண்ணிய பாவங்களா லாக்கப்பட்டனவாம். பாவத்தின் பயன் துக்கமாகலின் சரீரம் உள்ளவரையில் துக்கம் நிவிருத்தியாகாது.

[1] அந்தச் சரீரம் தர்மா தர்மங்களின் பயனாயிருக்கிறது. அவற்றின் நிவிருத்தியின்றிச் சரீரம் நிவிருத்தியாகிறதில்லை. ஏனெனின், இப்போதுள்ள சரீரம் போனாலும் புண்ணிய பாவங்களால் வேறு சரீரம் உண்டாகும் ஆதலால் புண்ணிய பாவங்களின் நிவிருத்தியின்றிச் சரீரம் நிவிருத்தியாகாது.

[2] அந்தப் புண்ணிய பாவங்கள் ராகத்துவேஷங்களின் நாசமின்றி நிவிருத்தியாகா. ஏனெனின், இப்போதுள்ள புண்ணியபாவங்கள் அநுபவத்தால் நிவிருத்தியானாலும் ராகத்துவேஷங்களால் வேறு புண்ணியபாவங்கள் உண்டாகும். ஆதலால் ராகத்துவேஷங்களின் நிவிருத்தியின்றிப் புண்ணிய பாவங்கள் நிவிருத்தியாகா.

[3] அந்த ராகத்துவேஷங்கள் அநுகூலப் பிரதிகூல ஞானங்களா லுண்டாகின்றன.

(க) எதன்கண் அநுகூலஞான முண்டாகிறதோ அதன்கண் ராகமுண்டாகின்றது.

(ங) எதன்கண் பிரதிகூலஞான முண்டாகிறதோ அதன்கண் துவேஷ முண்டாகின்றது. ஆதலால் அநுகூலப்பிரதிகூல ஞானங்களின் நிவிருத்தியின்றி ராகத்துவேஷங்கள் நிவிருத்தியாகா.

[4] அந்த அநுகூலப் பிரதிகூல ஞானங்கள் பேதஞானத்தால் உண்டாகின்றன. ஏனெனின், எந்தவஸ்துவைத் தன் சொரூபத்திற்கு அன்னியமாக அறிகிறானோ, அதன்கண் அநுகூலஞானம் அல்லது பிரதிகூலஞான முண்டாகிறது. தன் சொரூபத்தில் அநுகூலப்பிரதிகூல ஞானங்க ளுண்டாகிறதில்லை.

(க) சுகத்தினது சாதனத்தின் பெயர் அநுகூலமாம்.

(ங) துக்கத்தினது சாதனத்தின் பெயர் பிரதிகூலமாம்.

தன் சொரூபம் சுகத்திற்காவது துக்கத்திற்காவது சாதனமன்று. சுகரூபமாயிருக்கினும் அது சுகத்திற்குச் சாதனமன்று. ஆதலால் சொரூபத்திற்குப் பின்னமாக எந்தவஸ்து அறியப்பட்டதோ, அதனிடத்தில் அநுகூலப் பிரதிகூல ஞானங்க ளுண்டாகின்றன. இவ்விதமாகப் பதார்த்தங்களினுண்டாம் தன்னினும் வேறென்னும் ஞானமெதுவோ, அது அநுகூலப்பிரதிகூல ஞானங்களுக்கு ஹேதுவாம். * அந்தப் பேதஞானத்தின் நிவிருத்தியின்றி அநுகூலப்பிரதிகூல ஞானங்கள் நிவிருத்தியாகா.

[5] அந்தப்பேதஞானம் அவித்தையினாலுண்டாகிறது. ஏனெனின் "சகலப்பிரபஞ்சமும், அதன் ஞானமும் சொரூபத்தை அறியாதகாலத்தில் இருக்கின்றன" வென்பது சகல வேதசாஸ்திரங்களின் மூரசாம். இவ்வாற்றால் எல்லாத்துக்கங்களுக்கும் காரணம் சொரூபத்தின் அஞ்ஞானமாம்.

அந்தச் சொரூப அஞ்ஞானம் சொரூப ஞானமின்றி நிவிருத்தியாகாது. ஏனெனின், எந்தவஸ்துவின் அஞ்ஞானம் இருக்கிறதோ, அந்த அஞ்ஞானம் அந்தவஸ்துவை அறிவதனால் நிவிருத்தியாகிறது. எங்ஙனம்: ரஜ்ஜுவின் அஞ்ஞானம் ரஜ்ஜுஞானத்தால் நிவிருத்தியாகிறது. வேறெதனாலும் நிவிருத்தியாகிறதில்லை. சொரூபஞானமே அஞ்ஞானத்தின் நிவிருத்தி வாயிலாகத் துக்கநிவிருத்திக்கு ஹேதுவாம்.

---

* அஞ்ஞானவடிவ மூலம் நீங்கவே, ஞானிக்கு ஜீவ ஈசுவரர்களது பேதமும் அதன் உள்ளடங்கிய ஜீவ ஜீவர்களது பேதம், ஜீவ ஜடங்களின் பேதம், ஜட ஈசுவரர்களது பேதம் என்னும் இவ்வைந்து பேதமும் வாஸ்தவமாகக் காணப்படுவதில்லை. ஆனால் கற்பித உபாதியினாலாகியனவா யிருத்தலின் கற்பிதமாகக் காணப்படுகின்றன. ஆதலால் பாதிதாநுவிருத்தியினால் வறுத்தவிதையினைப்போல அநுகூலப் பிரதிகூல ஞானமும், இராகத்துவேஷ (பஞ்சக்கிலேச)மும் சுபாசுபக் கிரியைகளும் தோற்றுகின்றன. ஆனால் அதன் பயனாகிய வரும்பிறப்பும் சுகதுக்கங்களும் உண்டாகா.

சொரூப ஞானத்தால் பிரஹ்மம் அடையப்படுகிறது. அந்தப் பிரஹ்மம் நித்தியமாயும், ஆநந்த சொரூபமாயும், துக்க சம்பந்தமின்றியதாயும் இருக்கிறது. ஆதலால் சொரூபஞானத்தால் நித்தியமும் துக்கசம்பந்த மில்லாததுமான பிரஹ்ம சொரூப ஆநந்தம் அடையப்படுகிறது.

இவ்விதமாகத் துக்க நிவிருத்திக்கும் பரமாநந்தப் பிராப்திக்கும் காரணம் சொரூபஞானமாம். ஆதலால் சொரூபம் அறியத்தக்கது.

இப்படி எவனுக்கு விவேகம் உண்டாகிறதோ அவன் * ஜிஜ்ஞாஸுவெனப் படுகிறான்.

4. ஸ்தூலசூக்ஷ்மகாரண சரீரங்களுக்குப் பின்னமாயுள்ள தன் சொரூபத்தைப் பிரஹ்மரூபமாக அபரோக்ஷமாய் அறிபவன் முக்தனெனப்படுகிறான்.

## 71. கிரந்தத்தில் ஜிஞ்ஞாஸுவுக்குப் பிரவிருத்தியுண்டாம்; முக்தர்முதலிய மூவருக்கு முண்டாகாதெனல்.

1-2. இவ்வாறு நால்வகைப் புருஷர் உளர். அவர்களுள் பாமரனுக்கும் விஷயிக்கும் விஷயசுகத்தில் திருப்தியுண்டாகிறது; சில விஷயிகளுக்குப் பரமசுகத்திலும் இச்சையுண்டாகின்றது. என்றாலும் அதனை யடைதற்குரிய உபாயமல்லாததனை உபாயமாக நினைத்து அதில் பிரவர்த்திக்கிறார்கள். ஏனெனின் உபாயத்தின் ஞானம் சத்சங்கத்தினாலும் சத்சாஸ்திரத்தினாலு முண்டாம்; அது அவர்களுக்கில்லை. ஆதலால் பாமரனுக்கும் விஷயிக்கும் சுகப்பிராப்தியின் பொருட்டுக் கிரந்தத்திற் பிரவிருத்தி உண்டாகாது. துக்க நிவிருத்தியின் பொருட்டும் அவர்கள் வேறு உபாயங்களில் பிரவர்த்தித்தலால் கிரந்தத்திற் பிரவிருத்தி உண்டாகிறதில்லை. ஆதலால் துக்கநிவிருத்தி சுகப்பிராப்திகளின் பொருட்டுப் பாமரவிஷயிகளுக்குக் கிரந்தத்திற் பிரவிருத்தி உண்டாகாது.

3. அங்ஙனமாயினும், ஜிஞ்ஞாசுவுக்கு விஷயசுகத்தில் திருப்தி உண்டாகிறதில்லை. ஆனால் பரமசுகத்திலும் துக்கத்தின் அத்தியந்த நிவிருத்தியிலும் இச்சை உண்டாகிறது. "இந்தப் பரமசுகப்பிராப்தியும் துக்கத்தின் அத்தியந்த நிவிருத்தியும் ஞானமின்றி உண்டாகாவெனச் சத்சங்கத்தால் விவேகமுண்டானவனுக்குக் கிரந்தத்திற் பிரவிருத்தி உண்டாகும்.

---

* 1. உத்தமன், 2. மத்திமன், 3. கனிஷ்டன் என்னும் பேதத்தால் ஜிஜ்ஞாஸுக்கள் மூவகையாவர்.

1. தீவிர ஜிஞ்ஞாஸை யுடையவனாய் நான்கு சாதனங்களோடு அல்லது மந்த போதத்தோடு கூடியவன் உத்தம ஜிஜ்ஞாஸுவாவன்.

2. மந்த ஜிஞ்ஞாஸையினால் வேதாந்த சிரவணத்திற் பிரவர்த்திப்பவன் மத்திம ஜிஜ்ஞாஸுவாவன்.

3. மந்த ஜிஞ்ஞாஸையினால் நிஷ்காம கர்ம உபாசனையில் பிரவர்த்திப்பவன் கனிஷ்ட ஜிஜ்ஞாஸுவாவன்.

4. முக்தனுக்கும் கிரந்தத்திற் பிரவிருத்தி யுண்டாகாது. ஏனெனின் ஞானவான் முக்தனெனப்படுகின்றான். அவன் * கிருத கிருத்தியன். அவனுக்குச் செய்யவேண்டிய தொன்றுமில்லை. இது மேற் † பிரதிபாதிக்கப்படும். விளையாட்டாக அவன் பிரவர்த்தித்தாலும் அவனுக்குக் கிரந்தத்தினால் யாதொரு பிரயோஜனமும் சித்திக்கமாட்டாது. ஆதலால் முக்தனை உத்தேசித்தும் கிரந்தம் உண்டாகவில்லை.

இவ்வாற்றால் மோக்ஷ இச்சையுள்ளவன் அதிகாரி யெனல் பொருந்துகின்றது.

## 72. விஷயமண்டநம் (2) 72-73.

### 39-44-ல் உள்ள பூர்வபக்ஷத்தின் உத்தரம்.

"ஜீவன் இராகாதிக்கிலேச சகிதமாயிருக்கிறான்; பிரஹ்மம் கிலேசரகிதமாயிருக்கிறது. ஆதலால் ஜீவப்பிரஹ்ம ஐக்கியம் கிரந்தத்தின் விஷயமாமெனக் கூறியது பொருந்தாது" என்று முன் (39) கூறப்பட்டது.

அது சத்தியமாயினும் ராகத்துவேஷ ரகிதமான சாக்ஷிக்குப் பிரஹ்மத்தோடு ஏகத்துவம் கூடும்.

"கர்த்தா போக்தாவுக்கு வேறான சாக்ஷி மலடிமகன்போல அசத்தா"மென்று முன் கூறப்பட்டது.

அது பொருந்தாது. ஏனெனின் கர்த்தா போக்தாவாகிய சமுசாரியின் விசேஷ்யபாகத்துக்குச் சாக்ஷியென்று பெயர். சாக்ஷியை நிஷேதிக்கின், சமுசாரியினது விசேஷபாகத்தின் நிஷேதமுண்டாகுதலால் கர்த்தா போக்தாவாகிய சமுசாரியின் நிஷேதமே யுண்டாகும்.

---

* அஞ்ஞான தசையில் இகலோக வியவகாரத்தின் பொருட்டு வியவசாயாதிகள், பரலோகத்தின் பொருட்டு ஸகாமகர்மோபாஸனைகள், சித்தசுத்தி ஏகாக்கிரத்தன்மைகளின் பொருட்டு நிஷ்காமகர்மோபாஸனைகள், வேதாந்த சிரவணத்தின் பொருட்டு விவேக வைராக்கியாதி சாதனங்கள், அபரோக்ஷஞானத்தின் பொருட்டுக் குருபதேசம், சமுசயாதிகளின் நிவிருத்தியின் பொருட்டுச் சிரவணாதிகள், தத்பதார்த்தத்தில் பரோக்ஷப் பிராந்தியையும் துவம்பதார்த்த விஷயத்தில் பரிச்சின்னப் பிராந்தியையும் நிவிருத்திக்க ஓதப்புரோதபாவம், மோக்ஷத்தின் பொருட்டுத் திடமான அபரோக்ஷஞானம் என்னும் இவற்றைச் செய்யவேண்டியதும் சம்பாதிக்கவேண்டியதும் கர்த்தவ்வியமாம். இவற்றைச்செய்தும் சம்பாதித்து மிருப்பவன் கிருதகிருத்தியனாவன்.

† இவ்வார்த்தை மேல் ஐந்தாவது தரங்கத்தில் 275-வது பிரசங்கத்திற் சொல்லப்படும். இதன்மேல் பாமரனுக்கும் விஷயிக்கும் விஷயசுகத்தில் திருப்தி சொல்லப்பட்டிருக்கின்றது. அதன்பொருட்டுச் சந்தோஷமில்லை. ஏனெனின், விஷயசுகத்தின் போகத்திற்கு அக்கினியில் போடப்பட்ட நெய்யைப்போல அதிகபோகத்தின் இச்சையாகிய ஆசையை விருத்திசெய்வதாயிருத்தலால் அதன்பொருட்டுச் சந்தோஷமில்லை. ஆனால் "விஷயசுகத்திற்கு விலக்ஷணமான நித்திய நிரதிசய ஆத்மசுகமும் இருக்கிறது" என்னும் ஞானமின்மையால் மனோரதமாத்திரமாக வரும் விஷயசுகத்தில் உண்டாம் கிருதார்த்தத்தன்மையின் ஞானம் முற்கூறிய திருப்தியென்னும் சொல்லிற்குப் பொருளாம்.

* ஒரே சைதன்னியத்தில் சாக்ஷிபாவத்திற்கு அந்தக்கரணம் உபாதியாயும், கர்த்ருத்துவ போக்திருத்துவங்களுக்கு விசேஷணமாயு மிருக்கிறது.

விசேஷணத்துடன் கூடியது விசிஷ்டமெனப்படும்.

உபாதியுடையது உபஹிதமெனப்படும்.

எந்தவஸ்து எந்த இடத்தில் தானிருந்கிறதோ, அந்த இடத்திலுள்ள வேறொரு வஸ்துவை அறிவித்துக்கொண்டு தான் வேறாயிருக்கிறதோ, அது உபாதியெனப்படும். எங்ஙனம்: நியாயமதத்தில் கர்ணகோளகத்திலிருக்கும் ஆகாசத்திற்குச் சுரோத்திரமென்று பெயர். அக்கர்ணகோளகம் சுரோத்திரத்திற்கு உபாதியாம். ஏனெனின் அக்கர்ணகோளகம் எவ்வளவு இடத்திலிருக்கிறதோ, அவ்வளவு இடத்திலிருக்கிற ஆகாசத்தைச் சுரோத்திரவடிவமாக அறிவித்துத் தான் வேறாய் இருக்கிறது. ஆதலால் கர்ணகோளகம் சுரோத்திரத்திற்கு உபாதியாம். அங்ஙனமே அந்தக்கரணமும் எவ்வளவிடத்தில் தானிருக்கிறதோ, அவ்வளவு இடத்திலிருக்கும் சைதன்னியத்தைச் சாக்ஷியென்னும் பெயரால் அறிவித்துத் தான் வேறாயிருக்கிறது. ஆதலால் அந்தக்கரணம் சாக்ஷிக்கு உபாதியாம்.

இதனால், † அந்தக்கரணத்திலிருக்கும் சேதனமாத்திர மெதுவோ அது சாக்ஷியெனப்படுகின்றதென்னும் பொருள் சித்தித்தது.

**73.** தன்னோடு வஸ்துவை அறிவிப்பது எதுவோ அது விசேஷண மெனப்படுகிறது.

குண்டலமுடைய புருஷன் வந்தானென்னுமிடத்தில் புருஷனுக்குக் குண்டலம் விசேஷணமாம். ஏனெனின் தன்னோடு புருஷனது வரவைக் குண்டலம் அறிவிக்கின்றதாகலின் விசேஷணமாம். "நீலவர்ணமுள்ள கடத்தை நான் பார்த்தே" னென்னுமிடத்திலும் நீலவர்ணம் கடத்திற்கு விசேஷணமாம்.

அங்ஙனமே அந்தக்கரணமும் கர்த்தா போக்தாவாகிய ஜீவசைதன்னியத்திற்கு விசேஷணமாம். ஏனெனின், அந்தக்கரணத்தோடு சைதன்னியத்

---

* ஒரே அந்தக்கரணம் விவேகியின் திருஷ்டியினால் சேதனத்திற்கு உபாதியும், அவிவேகியின் திருஷ்டியினால் விசேஷணமுமாம். ஆதலால் ஒரே சேதனம் விவேகிக்குச் சாக்ஷிவடிவமாயும், அவிவேகிக்கு ஜீவவடிவமாயும் விளங்குகின்றது. இது பாலபோதத்தில் ஸ்பஷ்டமாய் எழுதப்பட்டுளது.

† ஈண்டு இது சாக்ஷியினது இலக்ஷணத்தின் பரீக்ஷையாம்.

1. அந்தக்கரணமோ தானுமிருக்கின்றது, ஆனால் அது அதன்கண் இருப்பதன்று.

2. சேதனமோ சிதாபாஸனுமாம். அது சேதனமாத்திர மன்று.

3. சேதனமாத்திரமோ பிரஹ்மமுமாம். அது அந்தக்கரணத்தின்கண் இருப்பதன்று.

ஆதலால் மேல் எழுதப்பட்ட சாக்ஷியின் லக்ஷணம் தோஷமின்றியதாம்.

தைக் கர்த்தா போக்தா வடிவமாக அந்தக்கரணம் அறிவிக்கிறது. ஆதலால் சமுசாரிக்கு அந்தக்கரணம் விசேஷணமாம்.

இதனால் இது பெறப்பட்டது:—அந்தக்கரணத்துள்ள சேதனமும் அந்தக்கரணமும் சமுசாரி எனப்படுகிறது. ‡ இவ்வர்த்தத்தை மேல் விஸ்தாரமாகக் கூறுவாம்.

**74.** ராகத்துவேஷாதிக்கிலேசங்கள் சமுசாரியிடத்திருக்கின்றன; சாக்ஷியினிடத்தில்லை. சமுசாரி இடத்திலும் விசேஷணபாகமான அந்தக்கரணத்தில் இருக்கின்றன; ¶ விசேஷியபாகமான சேதனத்திலில்லை. சமுசாரியின் விசேஷியமான சேதனபாகத்திற்கும் சாக்ஷிக்கும் பேதமில்லை.

1. ஒரே சைதன்னியம் அந்தக்கரணத்தோடு சமுசாரி எனப்படுகின்றது.

2. அந்தக்கரணத் தன்மையைவிட்டுச் சாக்ஷி எனப்படுகின்றது.

ஆதலால் சாக்ஷிக்கும் சமுசாரியின் விசேஷியபாகத்திற்கும் பேதமில்லை. விசேஷியபாகத்தில் கிலேசத்தை யங்கீகரிக்கும் பக்ஷத்தில் சாக்ஷியிலும் கிலேசத்தை யங்கீகரிக்கவேண்டும். அன்றியும் "சாக்ஷி சர்வக் கிலேசமுமில்லாதது" என்பது வேதாந்தத்தின் சித்தாந்தம். ஆதலால் சமுசாரியின் விசேஷியபாகத்தில் கிலேசமில்லை; ஆனால் விசேஷணமாத்திரமான அந்தக்கரணத்தில் கிலேசமிருக்கிறது. இந்த அபிப்பிராயத்தால்றான் ராகத்துவேஷங்கள் புத்தியின் தர்மங்களாம், ஜீவனது தர்மங்க ளன்றென்று சொல்லப்படுகின்றன. இவ்விதத்தால் அந்தக்கரண விசிஷ்ட ஜீவனுக்குப் பிரஹ்மத்தோடு ஏகத்துவம் பொருந்தாதாயினும், அந்தக்கரண உபஹித சாக்ஷிக்குப் பிரஹ்மத்தோடு ஏகத்துவம் பொருந்தும்.

**75.** முன் (41) "சாக்ஷி அநேகம்; பிரஹ்மம் ஏகம். ஆதலால் நாநா சாக்ஷிக்கும் ஏகப்பிரஹ்மத்திற்கும் ஏகத்துவம் பொருந்தாது. வியாபகமான ஏகப்பிரஹ்மத்தோடு சாக்ஷிக்கு அபேதம் அங்கீகரிக்கின், சாக்ஷியும் எல்லாச் சரீரங்களிலும் வியாபகமாய் ஏகமேயாகும். இதனால் சர்வ சரீரங்களின் சுக துக்கங்களும் விளங்கவேண்டும்" என்று முன் கூறப்பட்டது.

அச்சங்கை பொருந்தாது. ஏனெனின் ஈசுவரசாக்ஷி ஏகமாம். ஜீவ சாக்ஷி அநேகமாயும் பரிச்சின்னமாயு மிருக்கிறது; என்றாலும் வியாபகப் பிரஹ்மத்திற்கு வேறாக இல்லை. கடாகாசம் நாநாவாயும் பரிச்சின்னமாயுமிருக்கினும் மகாகாசத்திற்கு வேறாகாது; மகாகாச ரூபமாகவேயிருக்கிறது. அதுபோல நாநாவாயும் பரிச்சின்னமாயுமுள்ள சாக்ஷியும் பிரஹ்மத்திற்கு வேறாகாமல் பிரஹ்மரூபமாகவே யிருக்கிறது.

---

‡ இவ்வர்த்தம் 4-வது தரங்கத்துள்ள 201-202 இலக்கங்களிலும், அங்ஙனமே ஆறுவது தரங்கத்திலும் சொல்லப்படும்.

¶ எதன் ஆசிரிதமாய் விசேஷண மிருக்கின்றதோ அது விசேஷியபாக மெனப்படும்.

76. "சுகதுக்கங்கள் அந்தக்காணவிருத்திக்கு விஷயமாகா" என்று முன் (43) சொல்லப்பட்டது.

அது பொருந்தாது. ஏனெனின், சுகதுக்கங்கள் சாக்ஷியால் விளங்குவனவாம்; அந்தச் சாக்ஷி நாநாவாம். அங்ஙனமாயினும், எப்போது அந்தக்கரணத்தின் பரிணமம் சுகரூபம் அல்லது துக்கரூபமாகிறதோ, அதேசமயத்தில் அந்தக்காணத்தின் ஞானரூபவிருத்தி சுகதுக்கங்களை விஷயஞ்செய்வதாகிறது. அந்த விருத்தியி லாரூடமான சாக்ஷி அவற்றைப் பிரகாசிக்(அறி)கிறது. இவ்வாறு நூலாசிரியர்கள் சுகதுக்கங்கள் சாக்ஷிக்கு விஷயமாம்; விருத்தியின்றிக் கேவல சாக்ஷிக்கு விஷயமாகா என்று கூறியிருக்கின்றனர்.

இந்த ஸ்தானத்தில் இது இரகசியமாம்:—ஆகாசத்தில் கடாகாசமென்னும் பெயரும் ஜலத்தைக் கொண்டுவருதலாகிய காரியமும் கடரூப உபாதி திருஷ்டியால் தோற்றுகின்றன. அந்தத் திருஷ்டியின்றி அவை தோற்ற; ஆகாசமாத்திரமே தோற்றும். ஆதலால் கடாகாசம் மகாகாசரூபமாம்.

அங்ஙனமே சேதனத்தில் சாக்ஷியென்னும் பெயரும் தர்மசகித அந்தக்கரணத்தின் பிரகாசரூப காரியமும் அந்தக்கரணரூப உபாதி திருஷ்டியால் தோற்றுகின்றன. அந்தத் திருஷ்டியின்றி * அவை தோற்றுகிறதில்லை. ஆனால் சைதன்னியமாத்திரமான பிரஹ்மமே தோற்றுகிறது. ஆதலால் சாக்ஷி பிரஹ்மரூபமாம்.

இந்த அபிப்பிராயத்தால் சாக்ஷி ஏகமென்று சொல்லப்பட்டது.

ஏனெனின், உபாதி திருஷ்டியின்றிச் சாக்ஷியில் அநேகத்துவமும் பரிச்சின்னத்துவமும் பிரதீதியாகிறதில்லை.

அந்தச் சாக்ஷி ஜீவபதத்தின் லக்ஷியமாம். இதனை † மேற்கூறுவாம்.

இவ்வாற்றால் ஜீவப்பிரஹ்ம ஐக்கியம் கிரந்தத்திற்கு விஷயமாதல் பொருந்துகின்றது.

## 77. பிரயோஜன மண்டநம்-(3) 77-92.

### 45-வது இலக்கத்துப் பூர்வபக்ஷத்தின் உத்தரம்.

### ‡ காரிய அத்தியாசத்தின் நிரூபணம். 77-84.

"பந்தம் சத்தியம். அது ஞானத்தால் நிவிருத்தியாகிறதில்லை. மித்தியா வஸ்துவின் நிவிருத்தி ஞானத்தினு லுண்டாகிறது. ஆத்மாவினிடத்தில் மித்

* வெள்ளைக் காகிதத்தின்பேரில் மை தடவுதலால் அதன் மத்தியில் வெண்மை எழுத்துக்கள் அமைக்கப்படின், அவ்வெழுத்திற்கும் வெள்ளைக் காகிதத்திற்கும் எங்ஙனம் சொல்மாத்திரம் பேதமோ, அங்ஙனமே சாக்ஷிக்கும் சுத்த சைதன்னியத்திற்கும் பேதமுளது. எங்ஙனம் மைவடிவ உபாதியின் திருஷ்டியின்றி எழுத்து என்னும் பெயர் இல்லையோ, ஆனால் அவ்வெள்ளைக் காகிதமாத்திரமிருக்கின்றதோ அங்ஙனமே அந்தக்கரணவடிவ உபாதியின் திருஷ்டியின்றிச் சாக்ஷியென்னும் பெயரில்லை; ஆனால் அந்தச் சுத்த சைதன்னியமே யிருக்கின்றது.

† இது மேல் 4-வது தரங்கத்தின் 201-202 இலக்கங்களிலும் அங்ஙனமே 6-வது தரங்கத்தின் 341 இலக்கத்திலும் சொல்லப்படும்.

‡ அஞ்ஞானத்தினுலாகிய ஸ்தூலசூக்ஷ்ம பிரபஞ்சவடிவப்பிரமம் காரியாத்தியாசமாம்.

தியா பந்தத்தின் சாமக்கிரியில்லை. ஆதலால் பந்தம் சத்தியமாம். அதன் நிவிருத்தி ஞானத்தினுலுண்டாகிறதில்லை." என்று முன் கூறப்பட்டது.

அது பொருந்தாது. ஏனெனின், பந்தம் மித்தையாம்; அதற்கு ஞானத்தினுல் நிவிருத்தி பொருந்துகின்றது.

**78. இலக்கம் 47-48-ல் உள்ள பூர்வபக்ஷத்தின் உத்தரம். 78-82.**

"சத்திய வஸ்துவின் ஞானம் சம்ஸ்காரவாயிலாக அத்தியாசத்திற்கு ஹேதுவாம். எங்ஙனம் சத்தியமான சர்ப்பத்தின் ஞானம் சம்ஸ்காரவாயிலாகச் சர்ப்பாத்தியாசத்துக்கு ஹேதுவோ, அங்ஙனமே பந்தம் சத்தியமாலுல் சத்தியபந்தத்தின் ஞான முண்டாகும். சித்தாந்தத்திலோ அவ்வநாத்ம வஸ்துக்கள் எவையும் சத்தியமன்று. ஆதலால் சம்ஸ்காரவாயிலாக அத்தியாசத்திற்குச் சாமக்கிரியாகும் சத்திய வஸ்துவின் ஞானம் இல்லாமையால் பந்தம் அத்தியாசமன்று; ஆனல் சத்தியமாம்." என்று முன் சொல்லப்பட்டது.

(1. சத்தியவஸ்து ஞான ஜந்நிய சம்ஸ்காரத்தின் கண்டநம்)

அச்சங்கை பொருந்தாது. ஏனெனின், அத்தியாசத்தில் ஸம்ஸ்காரவாயிலாகச் சத்திய வஸ்துவின் ஞானம் ஹேதுவன்று. ஆனல் வஸ்துவின் ஞானம் ஹேதுவாம். அந்த வஸ்து சத்தியமாகுக அல்லது மித்தையாகுக. சத்திய வஸ்துவின் ஞானமே அத்தியாசத்தில் ஹேதுவாகுமாயின், ஒரு புருஷன் உண்மையான மாமரத்தைப் பார்த்ததில்லை. ஆனல் வித்தையாடியாற் காண்பிக்கப்பட்ட பொய் மாமரத்தைப் பலதடவை பார்த்தும், "இது மாமர" மென்று அவன் சொல்லக் கேட்டுமிருக்கிறுன். அந்தப் புருஷன் இலுப்பை மரத்தை ஒருகாலத்திலும் பார்த்ததுமில்லை, "இது இலுப்பை மர" மென்று கேட்டதுமில்லை. அவனுக்கு அந்த இலுப்பை மரத்தைக் கண்டவுடன் அதனிடத்தில் மாமர அத்தியாச முண்டாகிறது. பூர்வபக்ஷியின் மதப்படி இந்த அத்தியாச முண்டாகலாகாது. ஏனெனின் உண்மையான மாமரத்தின் ஞானம் அவனுக்கில்லை. நம் மதப்படியே வித்தையாடியால் காண்பிக்கப்பட்ட பொய் மாமரத்தின் ஞானமிருத்தலால் இலுப்பை மரத்தில் மாமர அத்தியாச முண்டாகக்கூடும். ஆதலால் ஸஜாதீயவஸ்துவின் ஞானஜந்நிய ஸம்ஸ்காரமே அத்தியாஸத்துக்கு ஹேதுவாம்.

இந்த ஸம்ஸ்காரத்தை யுண்டுபண்ணும் ஞானமும் அதன் விஷயமும் மித்தையாகவாவது சத்தியமாகவாவது இருக்குக. ஸம்ஸ்காரவாயிலாக ஞானம் ஹேதுவாம்.

"ஞானஜந்நிய ஸம்ஸ்காரம் ஹேதுவா" மென்று கூறுதலிற் பொருட்பேதமில்லை; ஒருபொருளேயாம். ஏனெனின், "ஞானம் ஸம்ஸ்காரவாயிலாக ஹேது" என்பதன் பொருள் இதுவாம்:—ஞானம் ஸம்ஸ்காரத்திற்கு ஏது; ஸம்ஸ்காரம் அத்தியாசத்திற்கு ஹேது என்பதாம். ஆதலால் ஸம்ஸ்கா

வாயிலாக ஞானம் ஹேதுவென்று கூறுதலாலும் ஞானஜந்நிய ஸம்ஸ்காரமே அத்தியாஸத்திற்கு ஹேதுவென்பது சித்திக்கிறது.

79. (சித்தாந்தி:—) கேவல வஸ்துவின் ஞானமே அத்தியாசத்திற்கு ஹேதுவெனக் கூறின் பொருந்தாது. ஏனெனின், எது காரணமோ அது காரியத்திற்கு அவ்வியவஹித பூர்வகாலத்தில் இருக்கவேண்டுமென்பது நியமம். கடத்திற்கு ஹேதுவான தண்டசக்காதிகள் கடத்திற்கு அவ்வியவஹித பூர்வகாலத்தி லிருக்கின்றன. அதுபோல அத்தியாசத்திற்கு ஞானம் ஹேதுவாமெனக் கொள்ளின் அதுவும், அத்தியாசத்திற்கு அவ்வியவஹித பூர்வகாலத்தில் இருக்கவேண்டும்.

1. (பூர்வபக்ஷி:—) அது பொருந்தாது. ஏனெனின், எவனுக்குச் சர்ப்ப ஞான முண்டாயிருக்கிறதோ, அவனுக்கு ஞானமுண்டாகி ஒரு மாசத்திற்குப் பின்னும் ரஜ்ஜுவில் சர்ப்பாத்தியாச முண்டாகின்றது. அது உண்டாகலாகாது. ஏனெனின், ரஜ்ஜுவில் சர்ப்பாத்தியாசத்திற்குக் காரணம் சர்ப்ப ஞானம். அது முன்னரே நாசமாய்விட்டது. ஆதலால் அது அத்தியாசத்திற்கு அவ்வியவஹித பூர்வகாலத்திலில்லை; பூர்வகாலத்திருக்கினும் அவ்வியவஹித பூர்வகாலத்தில் இல்லை.

(1) அவ்வியவஹித மென்பது மறைப்பின்றியதற்காம்.

(2) வியவஹித மென்பது மறைப்பு (இடையு) ள்ளதற்காம்.

2. காரியத்திற்கு முந்தியகாலத்தில் காரணமிருத்தல்வேண்டும். அது வியவஹித பூர்வகாலத்தி லிருக்குக; அல்லது அவ்வியவஹித பூர்வகாலத்தில் இருக்குக. "காரியத்துக்கு அவ்வியவஹித பூர்வகாலத்திற்றான் காரண மிருக்கவேண்டு" மென்னும் நியமத்தைக் கொள்ளின், "விஹித கர்மம் சுவர்க்கப்பிராப்திக்கும் நிஷித்தகர்மம் நரகப் பிராப்திக்கும் ஹேதுக்களா" மென்னும் சாஸ்திர வசனம் அப்பிரமாணமாய்விடும். ஏனெனின் காயிக, வாசிக, மானஸக் கிரியைகளுக்குப் பெயர் கர்மமாம். அந்தக் கிரியைகள் அநுஷ்டானகாலத்திற்குப் பின்னரே நாசமாய் விடுகின்றன. சுவர்க்க நரகங்கள் காலாந்தரத்தில் உண்டாகின்றன. ஆதலால் சுவர்க்க நரகப் பிராப்திக்கு அவ்வியவஹித பூர்வகாலத்தில் விஹிதநிஷித்த கர்மங்களில்லை. எங்ஙனம் வியவஹித பூர்வகாலத்தின் சுபாசுப கர்மங்கள் சுவர்க்க நரகப்பிராப்திக்கு முறையே ஹேதுக்களோ, அங்ஙனமே "வியவஹித பூர்வகாலத்தின் சர்ப்பஞானமும் ரஜ்ஜுவில் சர்ப்பாத்தியாசத்துக்கு ஹேதுவாம்." என்று இவ்வாறு கூறின்,

1-2. (சித்தாந்தி:—) அவ்வார்த்தை பொருந்தாது. ஏனெனின், எங்ஙனம் நஷ்ட ஞானமும் நஷ்ட கர்மமும் முறையே அத்தியாசத்திற்கும் சுவர்க்க நரகப் பிராப்திக்கும் ஹேதுவாகின்றனவோ, அங்ஙனமே இறந்துபோன குயவனாலும் நஷ்டமான தண்ட சக்காதிகளாலும் கடம் உண்டாக

வேண்டும். ஏனெனின், எங்ஙனம் ரஜ்ஜுவில் சர்ப்ப அத்தியாசத்திற்கு வியவஹித பூர்வகாலத்தில் சர்ப்பஞானம் இருக்கின்றதோ, சுவர்க்க நரகப் பிராப்திக்கு வியவஹித பூர்வகாலத்தில் சுபாசுப கர்மங்கள் இருக்கின்றனவோ, அங்ஙனமே கடத்திற்கு வியவஹித பூர்வகாலத்தில் மரித்துப்போன குயவனும் நஷ்ட தண்டமும் இருக்கின்றன. அவற்றாலும் கடம் உண்டாதல் வேண்டும்; அங்ஙன முண்டாகிறதில்லை. ஆதலால் வியவஹித பூர்வகாலத்தில் உள்ளவஸ்து ஹேதுவாகிறதில்லை. ஆனால் அவ்வியவஹித பூர்வகாலத்திலுள்ள வஸ்து எதுவோ அதுவே ஹேதுவாகிறது.

சுபாசுப கர்மமும் காலாந்தரத்தில் வரப்போகிற சுவர்க்க நரகப் பிராப்திக்கு ஹேதுவாகிறதில்லை. ஆனால் சுப கர்மம் தனக்கடுத்த உத்தரக்ஷணத்தில் தர்மத்தை உற்பத்தி செய்கிறது. அசுபகர்மம் அதர்மத்தை உற்பத்தி செய்கின்றது. அந்தத் தர்மாதர்மங்கள் அந்தக்கரணத்தில் தங்குகின்றன. அவற்றால் காலாந்தரத்தில் சுவர்க்க நரகங்கள் அடையப்படுகின்றன. அதன் பின்னர் தர்மாதர்மங்கள் நாசமடைகின்றன. இந்த அபிப்பிராயத்தினாலேயே சாஸ்திரத்தில் சுபாசுப கர்மங்கள் அபூர்வவாயிலாகப் பலத்துக்கு ஹேதுவாம்; சாக்ஷாத் ஹேதுவன்றெனக் கூறியிருக்கின்றனர். தர்மாதர்மங்களுக்கே அபூர்வமென்றும், அதிருஷ்டமென்றும், புண்ணியபாவமென்றும் பெயர். தர்மாதர்மங்களை யுண்டுபண்ணும் சுபாசுபக் கிரியையினையும் சிலர் தர்மாதர்மமென்று கூறுகின்றனர். பிரபஞ்சத்தில் சுபக்கிரியை செய்கிறவனை இவன் தர்மம் செய்கிறானென்றும், அசுபக்கிரியை செய்கிறவனை இவன் அதர்மஞ் செய்கிறானென்றும் ஜனங்கள் சொல்லுகிறார்கள். இந்தச் சுபாசுபக்கிரியைகளுக்குத் தர்மாதர்மங்களென்று பெயர் இல்லை. ஆனால் அந்தக் கிரியைகள் தர்மாதர்மங்களை யுண்டுபண்ணுவனவாம்; ஆதலால் கிரியைகளுக்குத் தர்மாதர்மங்களென்று பெயரிட்டிருக்கிறார்கள். ஆயுளை விருத்திசெய்யும் நெய்யைச் சாஸ்திரத்தில் ஆயுசென்று சொல்வதுபோலக் கிரியையினைத் தர்மாதர்மமென்பர்.

இவ்வாற்றால் அவ்வியவஹித பூர்வகாலத்தில் ஹேது உளதாகின்றது.

**80.** ரஜ்ஜுவில் சர்ப்பாத்தியாசத்திற்கு அவ்வியவஹித பூர்வகாலத்தில் சர்ப்பஞானமில்லை. ஆதலால் சர்ப்பஞானம் ரஜ்ஜுவில் சர்ப்பாத்தியாசத்திற்கு ஹேதுவன்று. ஆனால் சர்ப்பஞானத்தினாலுண்டாகும் ஸம்ஸ்காரமே ரஜ்ஜுவில் சர்ப்பாத்தியாசத்திற்கு ஹேதுவாம். அங்ஙனமே கிளிஞ்சிலில் வெள்ளி அத்தியாசத்திற்கு ஹேது வெள்ளி ஞானத்தால் உண்டாகும் ஸம்ஸ்காரமாம். இவ்வாற்றால் சகல ஸம்ஸ்காரங்களுமே அத்தியாசத்திற்கு ஹேதுவாம்.

வஸ்துஞானம் ஸம்ஸ்காரத்திற்கு ஹேதுவாம். சுபாசுபகர்மங்களால் உண்டாகும் தர்மாதர்மங்கள் அந்தக்கரணத்தில் தங்குவதுபோல வஸ்துஞானத்தாலுண்டாகும் ஸம்ஸ்காரமும் அந்தக்கரணத்தில் தங்குகிறது.

எவனுக்கு முன் சர்ப்பஞான முண்டாகவில்லையோ, அவனுக்கு வேறு வஸ்துக்களின் ஞானத்தாலுண்டாகிய ஸம்ஸ்கார மிருந்தபோதிலும் ரஜ்ஜுவில் சர்ப்பாத்தியாசம் உண்டாகாது. எந்த வஸ்துவில் அத்தியாசமுண்டாகிறதோ, அதற்கு ஸஜாதீயமான வஸ்துவின் ஞானத்தாலுண்டாகும் ஸம்ஸ்காரம் அத்தியாசத்திற்கு ஹேதுவாகிறது; விஜாதீய வஸ்துவின் ஞானஜந்நிய ஸம்ஸ்காரம் ஹேதுவாகிறதில்லை. சர்ப்பத்திற்கு ஸஜாதீயம் சர்ப்பமேயொழிய வேறில்லை. சர்ப்பத்தின் பூர்வஞானம் எவனுக்கில்லையோ, வேறு வஸ்துக்களின் ஞானமிருக்கின்றதோ, அவனுக்கு ஸஜாதியவஸ்து ஞான ஜந்நிய ஸம்ஸ்காரம் இல்லாமையால் ரஜ்ஜுவில் சர்ப்பாத்தியாசம் உண்டாகிறதில்லை.

ஸம்ஸ்கார மென்பது சூக்ஷ்மாவஸ்தை. இவ்வாற்றால் அத்தியாசத்திற்கு முன் உண்டாகிய ஸஜாதீய வஸ்துவின் ஞானஜந்நிய ஸம்ஸ்காரமே அத்தியாசத்திற்கு ஹேதுவாம்.

"சத்தியவஸ்துவின் ஞானஜந்நிய ஸம்ஸ்காரமே அத்தியாசத்திற்கு ஹேதுவாம்; மித்தியாவஸ்துவின் ஞானஜந்நிய ஸம்ஸ்காரம் ஹேதுவன்று" என்னும் நியமமில்லையென்பது மா மாத் திருஷ்டாந்தத்தால் முன் (78) பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் மித்தியாவஸ்துவின் ஞான ஜந்நிய ஸம்ஸ்காரமும் அத்தியாசத்திற்கு ஹேதுவாம்.

**81.** அது பந்தத்தின் அந்தியாசத்திலும் பொருந்துகின்றது. ஏனெனின், அகங்காராதி அநாத்ம வஸ்துக்களும் அவற்றின் ஞானமும் பந்தமெனப்படும்.

அந்த அநாத்ம வஸ்துக்கள் ரஜ்ஜுவில் சர்ப்பம்போல் எப்போது தோற்றுகின்றனவோ, அப்போதுதான் இருக்கின்றன; பிரதீதியாகாதகாலத்தில் இல்லை யென்பது எமது வேத சம்மத சித்தாந்தம். இந்தக் காரணத்தினாலேயே சுழுத்தியில் சகலப் பிரபஞ்சமு மில்லையென்று பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. சுழுத்தியில் எப்பதார்த்தமும் பிரதீதியாகிறதில்லை. ஆதலால் சகலப் பிரபஞ்சமும் சுழுத்தியில் லயமாகின்றன. இதனைச் சாஸ்திரத்தில் * திருஷ்டி சிருஷ்டிவாத மென்பர். இப்பொருள் பின் (317-329) பிரதிபாதிக்கப்படும்.

இவ்வாறு அநந்த அகங்காராதிகளும் அவற்றின் ஞானமும் உற்பத்தியாய் லயமாகின்றன. அகங்காராதிகளின் பிரதீதி யுண்டாகுங் காலத்தில் இவைகளுண்டாகியும், பிரதீதி லயமாகுங்காலத்தில் இவை லயமாகியும் வருகின்றன. அகங்காராதிகளும் அவற்றின் ஞானமும் அத்தியாசமாமென்பது

* திருஷ்டியென்பது அவித்தையின் விருத்திவடிவ ஞானம்; அதன் சமகாலத்தில் சிருஷ்டி அதாவது பதார்த்த (விஷய)ங்களின் உற்பத்தி; அதன் வாதம் அதாவது சொல்லுதல் எப்பக்ஷத்திற் செய்யப்படுகின்றதோ, அப்பக்ஷத்தினைச் சாஸ்திரத்தில் திருஷ்டிசிருஷ்டிவாதமென்பர்.

அநிர்வசனீயக்கியாதியின் பிரஸ்தாபத்திற் சொல்லப்படும் அகங்காரம் சாக்ஷி பாஸ்யமென்பது விஷயப்பிரஸ்தாபத்தில் சொல்லப்பட்டிருத்தலால் அகங்காரத்தின் பிரதீதி சாக்ஷிரூபமாகவே யிருக்கிறது. அதற்கு உற்பத்தி லயங்கள் பொருந்தா. அங்ஙனமாயினும், அகங்காரத்தையும் சாக்ஷி விருத்தியினாலேயே பிரகாசிக்கிறது; சாக்ஷாத்தாகப் பிரகாசிக்கிறதில்லை. அந்த விருத்திக்கு உற்பத்திலயங்களிருத்தலால் அகங்காரப்பிரதீதிக்கும் உற்பத்தி லயங்கள் சொல்லப்படுகின்றன.

இவ்வாறு உத்தரோத்தர அகங்காராதிகளின் உற்பத்திக்கும் அவற்றினது ஞானத்தின் உற்பத்திக்கும் ஏது பூர்வபூர்வ மித்தியா அகங்காராதிகளின் ஞானஜந்திய ஸம்ஸ்காரம் என்பது பொருந்துகிறது.

**82**. உத்தரோத்தர அகங்காராதிகளின் அத்தியாசத்துக்குப் பூர்வபூர்வ அத்தியாசத்தின் ஸம்ஸ்காரம் ஹேதுவாகுமெனல் பொருந்துமாயினும், முதலில் உண்டான அகங்காரத்திற்கும் அதன் ஞானத்திற்கும் ஸம்ஸ்காரம் ஹேதுவெனல் பொருந்தாது. ஏனெனின், அந்த முதல் அகங்காரத்திற்குமுன் வேறு அகங்கார முண்டாயிருக்குமாயின், அதன் ஞானத்தின் ஸம்ஸ்காரமுளதாம். அந்த முதல் அகங்காரத்திற்குமுன் வேறு அகங்காரம் உண்டானதில்லை. அங்ஙனமே "சகல வஸ்துக்களின் முதல் அத்தியாசத்திற்கு ஹேது ஸம்ஸ்காரமெனல் பொருந்தாது" என்று கூறின்,

சமாதானம்:—இச்சங்கையும் சித்தாந்த வுணர்ச்சியின்மையா லுண்டாகின்றது. ஏனெனின், வேதாந்த சித்தாந்தம் இதுவாம்:—பிரஹ்மம், ஈசுவரன், ஜீவன், அவித்தை, அவித்தைக்கும் சைதன்னியத்திற்குமுள்ள சம்பந்தம், அநாதிவஸ்துக்களின் பேதம் என்னும் ஆறும் சொரூபமாக அநாதியாம். * உற்பத்தியில்லாதவஸ்து சொரூபமாக அநாதியெனப்படுகிறது. இந்த ஆறு வஸ்துக்களும் உற்பத்தியாகிறதில்லை. ஆதலால் அவை சொரூபமாக அநாதியாம்.

---

* **1.** பிரஹ்மம் அவித்தைக்கு அதிஷ்டானமாயிருத்தலின், அது அவித்தை (மூலப்பிரகிருதி)யினின்றும் உண்டாகிறதில்லை. ஈசுவரஜீவாதிகள் பிரஹ்மமின்றிச் சித்தியாமையால் பிரஹ்மம் அந்நான்கினின்றும் உண்டாகிறதில்லை. ஆதலால் பிரஹ்மம் அநாதியாம்.

2. பிரஹ்மம் நிர்விகாரமாயிருத்தலின் அதனினின்றும் அவித்தையுண்டாகிறதில்லை. ஈசுவராதி நான்கன் சித்தியோ அவித்தையினது சித்தியின் அதீனமாயிருத்தலின் அவற்றினின்றும் அவித்தையுண்டாகிறதில்லை. ஆதலால் அவித்தை அநாதியாம்.

3-4. ஜீவேசுவரர்கள் கேவலம் பிரஹ்மத்திலிருந்தாவது கேவலம் மாயையிலிருந்தாவது பரஸ்பரத்தினின்றாவது சுவசித்தியினது அதீனத்தின் பேதத்தினின்றாவது உண்டாகிறதில்லை. அவித்தியா சேதனங்களது சம்பந்தத்தின் சித்தியால் ஜீவேசுவரர்களின் சித்தி யுளதாகின்றது. அச்சம்பந்தம் தானும் அநாதியா யிருக்கின்றது. அதனினின்றும் அவர்களுண்டாகிறதில்லை. ஆதலால் ஜீவேசுவரர்களும் அநாதியாவர்.

அகங்காராதிகளுக்குச் சுருதியில் உற்பத்தி சொல்லப்பட்டிருத்தலால் அவை சொரூபமாக அநாதியாகாவிடினும் பிரவாகரூபமாகச் சகல வஸ்துக்களும் அநாதியாம். சகலவஸ்துக்களின் பிரவாகம் நீங்குகிறதில்லை. அநாதி காலத்தில் ஒருகடமு மில்லையென்று சொல்லும்படியான அத்தன்மைய ஓர்கால மிருந்ததில்லை. ஆதலால் கடத்தின் பிரவாகம் அநாதியாம். இவ்வாற்றுல் சகல வஸ்துக்களின் பிரவாகமும் அநாதியாம். பிரளயகாலத்திலும் சுழுத்திற்போல சகல வஸ்துக்களும் ஸம்ஸ்காரரூபமா யிருக்கின்றன.

ஆதலால் பிரபஞ்சத்தின் பிரவாஹம் அநாதியாயிருத்தலின் பிரபஞ்சம் * அநாதியெனப்படுகிறது. இத்தன்மைய ஞானமில்லாதவனுக்கு "முதல் அத்தியாசத்திற்கு ஹேதுவான ஸம்ஸ்காரம் பொருந்தாது" என்னும் சங்கை யுண்டாகிறது. சித்தாந்தத்தில் எந்த அகங்காராதி வஸ்துக்களின் அத்தியாசமும் எல்லாவற்றிற்கும் முதலில் இல்லை. ஆனுல் யாவும் தத்தம் பூர்வபூர்வ வத்தியாசங்களுக்கு உத்தரோத்தர அத்தியாஸங்களாயிருக்கின்றன. ஆதலால் சங்கை பொருந்தாது.

---

5. பிரஹ்மமும் அவித்தையும் அநாதியாகலின் அவற்றின் தாதாத்மிய சம்பந்தமும் அநாதியாம். அவற்றினின்றும் அது உண்டாகிறதில்லை. ஈசுவரன்முதலிய மூன்றன் சித்தியோ சம்பந்தத்தினது சித்தியின் அதீனமாயிருக்கின்றது. ஆதலால் அவற்றினின்றும் அது உண்டாகிறதில்லை. ஆதலால் அவித்தியாசேதனங்களின் சம்பந்தம் அநாதியாம்.

6. இவ்வைந்து வஸ்துக்களும் தாமே தம்மிலிருந் துண்டாகின்றனவெனக் கொள்ளின் ஆத்மாசிரயதோஷமுண்டாகும். ஆதலால் இவ்வைந்து வஸ்துக்களும் தாம்தம்மினின்று முண்டாகிறதில்லை. எதனுல் இவற்றிற்கு உற்பத்தியில்லையோ, அதனுல் அவ்வைந்து வஸ்துக்களுக்கும் பாஸ்பரம் பேதமுண்டு. அதற்கும் உற்பத்தி பொருந்தாது.

இவ்வாற்றுல் இவ்வாறு வஸ்துக்களுக்கும் உற்பத்தியில்லையாகலின் இவை சொரூபமாக அநாதியாம். அவற்றுள்,

(1) பிரஹ்மம் மூன்று காலத்திலும் பாதிக்கப்படாதது. ஆகலின் அநாதி அநந்தமாம்.

(2) அவித்தை முதலிய ஐந்தும் ஞானத்தால் பாதத்தை யடைகின்றன. ஆகலின் அநாதி ஸாந்தமாம்.

* பிரபஞ்சம் அநாதியாதலால் வெகுகாலம் நிலைத்திருப்பதா யிருத்தலின் சத்தியமாகுமே? என்னும் சங்கைக்கு,

இது சமாதானமாம்:—எங்ஙனம்: இரஜ்ஜுவில் சர்ப்பத்தின் பிரமமுண்டாகின்றது; சொப்பனமு முண்டாகின்றது. அது ஒரு கடிகை, ஒரு சாமம், இரண்டு சாமம், நான்குசாமம் வரையிலும் பூர்வசித்தமும் அநாதி சித்தமுமாகக் காணப்படுகின்றது. அல்லது சர்ப்பமுதலிய பிரமம் வருஷபரியந்தமு மிருக்கின்றது. என்றுலும் இரஜ்ஜுவின் ஞானமும் ஜாக்கிரத்தின்ஞானமு முண்டாக, அதன் முக்காலத்தின்மையின் நிச்சயவடிவபாத முண்டாகின்றது. ஆதலால் பிரபஞ்சம் மித்தையாம். இதனை பிரவாக வடிவமாக அநாதிஸாந்த மெனப்படுகின்றது.

இவ்வாற்றால் ஸஜாதீய வஸ்துவின் பூர்வஞானஜந்நிய ஸம்ஸ்காரத்தால் அகங்காராதி பந்தத்தின் அத்தியாசம் சம்பவிக்கிறது.

**83.** இலக்கம் 49-ல் உள்ள பூர்வபக்ஷத்தின் உத்தரம் 83-84.
(2-பிரமேயதோஷத்தின் கண்டநம்.)

"மூன்றுவிதமான தோஷங்கள் அத்தியாசத்துக்கு ஹேதுவாம்; பந்தத்தின் அத்தியாஸத்தில் எத்தோஷமும் பொருந்தாதாகலின் பந்தம் சத்தியமா" மென்று முன் கூறப்பட்டது.

அச்சங்கை பொருந்தாது. ஏனெனின், தோஷமின்றி அத்தியாசம் உண்டாகாவிடின் அத்தியாசத்துக்குத் தோஷம் ஹேதுவாகும். வஸ்திரமுண்டாவதற்கு நூல், நாடா (நூனுழி), தூரி (நூற்பாத்திருத்தும் படைமயிர்) இவைகள் ஹேதுக்களா யிருக்கின்றன. அவை இருந்தால் வஸ்திரமுண்டாகும்; அவை இல்லாவிடின் வஸ்திரமுண்டாகாது. அதுபோலத் தோஷம் அத்தியாசத்திற்கு ஹேதுவன்று; ஏனெனின், சாதிருசிய தோஷமின்றி ஆத்மாவினிடத்தில் ஜாதியின் அத்தியாச முண்டாகின்றது.

பிராமணத்துவாதி ஜாதி ஸ்தூலசரீர தர்மமாம்; ஆத்மாவின் தர்மமும் சூக்ஷ்மசரீரத்தின் தர்மமுமன்று. ஏனெனின் முன் சரீரத்திலிருந்த ஆத்மாவும் சூக்ஷ்மசரீரமும் வேறு சரீரம் அடையும்போதும் இருக்கின்றன. ஆனால் ஜாதிமாத்திரம் வித்தியாசப்படுகிறது. "முன் சரீரத்திருந்த ஜாதியே பின் சரீரத்தும் இருக்கவேண்டு" மென்னும் நியமமில்லை. ஆத்மாவின் அல்லது சூக்ஷ்ம சரீரத்தின் தர்மம் ஜாதியாகுமாயின், பின்சரீரத்தில் வேறு ஜாதி உண்டாகலாகாது. ஆதலால் ஜாதியானது ஆத்மாவின் தர்மமும் சூக்ஷ்மசரீரத்தின் தர்மமு மன்று. ஆனால் ஸ்தூலசரீரத்தின் தர்மமாம். அன்றியும் "நான் துவிஜன்" என்பதாகப் பிராமணத்துவ க்ஷத்திரியத்துவ வைசியத்துவ ஜாதிகளின் தோற்றம் ஆத்மாவினிடத்தி லுண்டாகின்றது. ஆதலால் ஆத்மாவினிடத்தில் ஜாதியின் அத்தியாச மிருக்கிறது. கயிற்றில் சர்ப்பம் பாரமார்த்திகமா யில்லாதிருந்தும் தோற்றுகின்றமையால் அதில் சர்ப்பாத்தியாச முண்டாகின்றது. அதுபோல ஆத்மாவினிடத்தில் ஜாதி பாரமார்த்திகமா யில்லாதிருந்தும் தோற்றுவதினால் ஆத்மாவினிடத்தில் ஜாதியின் அத்தியாசமிருக்கிறது.

மேலும் ஆத்மாவோடு ஜாதிக்கு சாதிருசியமில்லை. ஏனெனின்,

1. ஆத்மா வியாபகமாயும் ஜாதி பரிச்சின்னமாயு மிருக்கின்றன.
2. ஆத்மா பிரத்தியக்காயும் ஜாதி பராக்காயு மிருக்கின்றன.
3. ஆத்மா விஷயியாயும் ஜாதி விஷயமாயு மிருக்கின்றன.

இவ்வாற்றால் ஆத்மாவினிடத்தில் அதற்கு விரோதியான ஜாதியின் அத்தியாசமு முண்டாகிறது.

துவிஜாதி யென்பது மூன்று வர்ணத்திற்காம்.

எங்ஙனம் ஆத்மாவினிடத்தில் சாதிருசியமின்றி ஜாதியின் அத்தியாச முண்டாகிறதோ, அங்ஙனமே சாதிருசியமின்றி அகங்காராதி பந்தங்களின் அத்தியாசமும் ஆத்மாவினிடத்தி லுண்டாகிறது.

சாதிருசியதோஷம் அத்தியாசத்துக்கு ஹேதுவன்று. சாதிருசியதோஷம் அத்தியாசத்திற்கு ஏதுவாமாயின்,

1. ஆத்மாவினிடத்தில் ஜாதியத்தியாச முண்டாகலாகாது.

2. மேலும் * சங்கில் மஞ்சள்நிற அத்தியாசமுண்டாகலாகாது.

3. † கற்கண்டில் கைப்பு அத்தியாச முண்டாகலாகாது. ஏனெனின், வெண்மைக்கும் மஞ்சள் நிறத்துக்கும் விரோதமுண்டு; சாதிருசியமில்லை. அங்ஙனமே மதுரத்திற்கும் கைப்பிற்கும் விரோதமுண்டு ; சாதிருசியமில்லை. ஆதலால் அதிஷ்டானத்தில் மித்தியாவஸ்துவின் சாதிருசியதோஷம் அத்தியாசத்துக்கு ஹேதுவன்று.

---

* நியாயமதத்தில் நித்தியமாயும் ஏகமாயும் அநேக தர்மி(வியக்தி)களிற் கலந்திருக்கும் தர்மம் ஜாதியென்று சொல்லப்படும். அதற்கும் ஆத்மாவுக்கும் சாதிருசியவடிவப் பிரமேயதோஷம் பொருந்துகிறது. ஆதலால் ஆத்மாவினிடத்தில் ஜாதியின் அத்தியாச முண்டாகிறது. அதனால் பிரமேயதோஷம் அத்தியாஸத்துக்கு ஹேதுவாமென்று ஒருவன் சொல்லக்கூடு மென்பதை மனதிற்கொண்டு வேறு சங்கில் மஞ்சள்நிற அத்தியாஸ திருஷ்டாந்தத்தைச் சொல்லுகிறார்.

† அங்ஙனமாயின் சங்கில் மஞ்சள் அத்தியாசமில்லை. ஆனால் மஞ்சட்காமாலை தோஷமுள்ள நேத்திரத்திலிருக்கிற மஞ்சள் வர்ணம் சங்கில் ஒட்டுகிறது. ஆகையால் சங்கு மஞ்சளாய்த் தோன்றுகின்றது என்னும் சங்கை யுண்டாயிற்று.

ஆண்டுக் கூறுகின்றார்:—கடத்தில் பூசப்பட்ட சுவர்ணம் தட்டானுக்கும் அந்நியனுக்கும் தெரிவதுபோல சங்கிலுள்ள பீதவர்ணம் காமாலையுள்ளவனுக்கு மாத்திரம் தெரிகிறது; பிறனுக்குத் தெரிகிறதில்லை. ஆதலால் அந்தவர்ணம் நேத்திரத்தினின்றும் வெளியேபோய்ச் சங்கி லொட்டவில்லை; அது பிரமரூபமா யிருக்கிறது.

அங்ஙனமாயின், ஆகாசத்தில் பறந்தபக்ஷி எவனுடைய நேத்திரத்துக்குச் சமீபத்திலிருந்துபோகிறதோ, அவனுக்குமாத்திரம் வெகுதூரம் போகிறவரையில் தெரிகிறது; மற்றவனுக்குத் தெரிகிறதில்லை. அதுபோல எவன் கண்ணிலிருந்து மஞ்சள்வர்ணம் சங்கில் சென்றிருக்கிறதோ, அவனுக்குமாத்திரம் அது தெரிகிறது; மற்றவனுக்குத் தெரிகிறதில்லை. யென்று சங்கை யுண்டாயிற்று.

ஆண்டுக் கூறுகின்றார்:—ஆகாயத்தில் பறந்தபக்ஷி எவன் கண்ணிற்குச் சமீபத்திலிருந்துபோனதோ, அவன் வேறொருவனுக்கு அதனை விரலினால் சுட்டிக் காட்டினால் தெரியும். அதுபோல சங்கிலுள்ள பீதவர்ணம் விரலினாற் சுட்டப்பட்டும் பிறனுக்குத் தெரிகிறதில்லை. ஆதலால் மஞ்சள்வர்ணம் சத்தியமன்று; பிரமவடிவாம்.

இவ்வாறு சங்கில் மஞ்சள் அத்தியாஸம் சாதிருசியமின்றி யுண்டாகின்றது. என்றலும் இத்திருஷ்டாந்தம் முற்கூறிய சங்கை சமாதானவடிவ விவாதத்தால் சித்திக்கிறது. பிரத்தியக்ஷசித்த வஸ்துவில் விவாதமுண்டாகிறதில்லை யென்னும் ஆசங்கையை மனதிற்கொண்டு, இம்மூன்றாவது கற்கண்டில் கைப்பத்தியாசத்தின் திருஷ்டாந்தம் சொல்லப்பட்டிருக்கிறது.

## 84. (3. பிரமாதா தோஷத்தின் கண்டனம்.)

அங்ஙனமே பிரமாதாவின் லோபபயாதி தோஷங்களும் அத்தியாசத்து க்கு ஹேதுவன்று. ஏனெனின், லோபமில்லாத வைராக்கிய புருஷனுக்கும் கிளிஞ்சிலில் வெள்ளி அத்தியாசமுண்டாகிறது; பூர்வபக்ஷியின் மதப்படித் தோஷமில்லாமையினால் அத்தியாச முண்டாகலாகாது. ஆதலால் பிரமாதா வின் தோஷமும் அத்தியாசத்துக்கு ஹேதுவன்று.

### (4. பிரமாணதோஷத்தின் கண்டனம்.)

பிரமாணதோஷமும் அத்தியாசத்துக்கு ஹேதுவன்று. ஏனெனின், எல்லோருக்கும் ரூபமில்லாத ஆகாசத்தில் நீலவர்ணமும், கொப்பரை கூடாரம் என்பவற்றின் வடிவமும் தோற்றுகின்றன. ஆதலால் எல்லோருக்கும் ஆகா யத்தில் நீலவர்ணம், கொப்பரை, கூடாரம் என்பவற்றின் அத்தியாச முண்டா கிறது. எல்லோருக்கும் நேத்திரவடிவப் பிரமாணத்தில் பித்தமுதலிய தோஷ மிருப்பதாகக் கூறுவது பொருந்தாது. ஆதலால் பிரமாணதோஷமும் அத்தி யாசத்துக்கு ஹேதுவன்று.

ஆகாயத்தில் உள்ள நீலமுதலியவற்றின் அத்தியாசத்தில் பிரமாண தோஷம் ஒன்றுமாத்திரம் இல்லையென்பதில்லை; சகலதோஷங்களுமில்லை; சாதிருசியமுமில்லை; பிரமாதாவின் தோஷமுமில்லை. எங்ஙனம் சகலதோஷங்க ளின் அபாவத்தினாலும் ஆகாயத்தில் நீலமுதலியவற்றின் அத்தியாசமுண் டாகிறதோ, அங்ஙனமே ஆத்மாவினிடத்திலும் பந்தாத்தியாசம் தோஷங்க ளின்றியே உண்டாகிறது. ஆதலால் "தோஷங்களின்மையால் பந்தம் அத்தி யாச ரூபமன்" றென்ற சங்கை பொருந்தாது. ஏனெனின், சகல தோஷங்களு மில்லாமலிருந்தும் ஆகாசத்தில் நீலவர்ணாதிகளின் அத்தியாசம் சகல புரு ஷர்களுக்கு முண்டாகிறது. ஆதலால் தோஷம் அத்தியாசத்திற்கு ஏதுவன்று.

பித்தமுதலிய எத்தோஷங்களு மில்லாதவனுக்கும் ஆகாயம் நீலமுடைய தாயும் கொப்பரைவடிவினதாயும் கூடாரவடிவினதாயும் தோற்றுகின்றது. ஆதலால் பிரமாணதோஷம் அத்தியாசத்திற்கு ஏதுவன்று.

இவ்வாற்றால் * தோஷம் அத்தியாசத்துக்கு ஹேதுவன்று. ஆதலால் பந்தாத்தியாசத்தில் தோஷத்தின் அபேக்ஷையில்லை.

---

* தோஷம் அத்தியாஸத்துக்கு ஹேதுவன்றென்று கூறியதற்கு அபிப்பிராயம் இதுவாம்:— சகலதோஷங்களுமிருந்தால் அத்தியாஸ முண்டாகுமென்னும் நியமமில்லை. ஆனால் யாதேனும் ஒரு தோஷமிருந்தாலும் அத்தியாஸமுண்டாகும். இங்கு ஆகாசத்தில் நீலமுதலியவற்றின் அத்தியாசத்தில் எல்லாத் தோஷங்களு மில்லையென்று சொல்லப் பட்டிருக்கின்றது. ஆதலால் ஒரு தோஷமும் அத்தியாசத்திற்கு ஏதுவன்று. அங்ஙனமா யினும் யாண்டு ஒரு தோஷமுமில்லையோ, ஆண்டு அவித்தையே தோஷமாம். முற்றும் தோஷமில்லையாயின், அத்தியாஸம் உண்டாகாது. ஒரு தோஷமுமின்றி அத்தியாசமுண் டாகாது. இதனாற்றான் ஸ்ரீமதுசூதனஸ்வாமிகள் அத்வைதசித்தியில் தோஷ ஜந்யத் துவம் பிரமத்திற்குஇலக்ஷணமெனக்கூறியிருக்கிறார். இவ்விடத்தில்யாதொரு தோஷமு

ஸம்க்ஷேபசாரீரகத்தில் பந்தாத்தியாசத்தைப்பற்றிச் சொல்லுமிடத்தில் * தோஷங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன. கிரந்தம் விரியுமென்னும் பயத்தினால் நாமெழுதவில்லை. தோஷம் அத்தியாசத்துக்கு ஹேதுவாகுமாயின்

---

மின்றி அத்தியாஸமுண்டாவதாகச் சொல்வது பிரௌடிவாதமாம். பிரௌடி-தன்னுடைய உத்கிருஷ்டத்தன்மையின் பொருட்டு ; வாதம்-சொல்லுதல்; பிரௌடிவாதமெனப்படும். இதில்

ஓர் துவைதவாதி சங்கை செய்கின்றார்:—விவாதத்திற்கு விஷயமான ஜகத்து மித்தையன்று; அதிஷ்டானத்தின் சமானசத்தையுடையதாய்த்தோஷத்தினால் உண்டாகாததாயிருத்தலின்; யாதுயாது அதிஷ்டானத்தின் சமானசத்தை யுடையதாய்த் தோஷத்தினால் உண்டாகாததோ அது அது மித்தையன்று; யாது அதிஷ்டானத்தின் சமானசத்தை யுடையதாய்த் தோஷத்தினால் உண்டாகாததாகாது, ஆனால் அங்ஙனமே தோஷத்தினால் உண்டாவதாயிருக்கின்றதோ, அது மித்தையன்றென்பதில்லை; ஆனால் மித்தையாம்; இரஜ்ஜு சர்ப்ப முதலியவற்றைப்போல வென்னும் வியதிரேக அநுமானத்தால் ஜகத்தினது அத்தியாசமில்லை.

அச்சங்கை பொருந்தாது. ஏனெனின், வியாவகாரிக இரஜ்ஜுமுதலியன கற்பித சர்ப்பமுதலியவற்றிற்கு அதிஷ்டானமாயின், அந்தத் திருஷ்டாந்தத்தினால் முற்கூறிய அநுமானத்தின் சித்தி உண்டாகின்றது. விசாரித்துப் பார்க்குமிடத்துச் சர்ப்பமுதலியவற்றின் அதிஷ்டானம் இரஜ்ஜுமுதலிய உபாதிகளையுடைய சேதனமாம்; அல்லது விருத்திரூப உபாதியாசவுடையசேதனமாம். இது நான்காவது தரங்கத்தில் அநிர்வசநீயக் கியாதியின் நிரூபணத்திற் சொல்லப்படும். ஆதலால் அந்தச் சேதனத்திற்குப் பரமார்த்த சத்தை யிருத்தலால், அதன் சமானசத்தையுடைய தோஷத்தின் அபாவம் திருஷ்டாந்தத்திலு மிருக்கிறது.

அல்லது, முக்கிய சித்தாந்த (திருஷ்டி சிருஷ்டிவாத) த்திலோ சகல காரியங்களுக்கும் பிராதிபாஸிகசத்தை யிருத்தலால், திருஷ்டாந்த ரஜ்ஜு சர்ப்பமுதலியவற்றிற்கும் தார்ஷ்டாந்த ஜகத்திற்கும் விலக்ஷணத்தன்மை யின்மையால், ஒரேசேதனம் இரஜ்ஜு சர்ப்ப முதலியவற்றிற்கும் கட முதலியவற்றிற்கும் அதிஷ்டானமாம். இதனாலும் அதிஷ்டானத்தின் சமானசத்தையுடைய தோஷத்தின் அபாவமிருக்கின்றது. ஆதலால் சகல அத்தியாசங்களுக்கும் அதிஷ்டானத்தினும் விஷமசத்தையுடைய தோஷத்தினால் ஆக்கப்படுந்தன்மை யிருக்கின்றது.

இவ்வாற்றால் ஏது திருஷ்டாந்தங்களின் இன்மையால் முற்கூறிய வியதிரேகி அநுமானத்தின் அசித்தியுளது. அதனால் பிரபஞ்சம் சத்தியமன்று; ஆனால் மித்தையேயாம்.

* இங்கு அத்தியாசத்திற்கு ஏதுவாகிய தோஷத்தைக் கூறுதல் இதுவாம்:—

1. அந்தக்கரணதேசத்திலுள்ள அஞ்ஞானத்தின் விக்ஷேபத்துக்கு ஹேதுவான சத்தியிலுள்ள சுபாசுப கர்மங்களின் ஸம்ஸ்காரரூப அதிருஷ்டம் பிரமாதாதோஷமாம்.

2. சேதனத்தில் வேறு பிரமாணமில்லாமையினால் தன் சொரூபமே பிரமாணமாம். அதிலிருக்கிற அவித்தை பிரமாணதோஷமாம்.

3. சேதனத்தில் நிரபேக்ஷ ஆந்தரத்தன்மையிருக்கிறது. பிரபஞ்சத்தில் சாபேக்ஷ ஆந்தரத்தன்மை யிருக்கிறது. சேதனத்தில் பாரமார்த்திக வஸ்துத்தன்மை யிருக்கிறது. பிரபஞ்சத்தில் அநிர்வசநீய வஸ்துத்தன்மையிருக்கிறது. ஆதலால் ஆந்தரத்தன்மை வஸ்துத்தன்மைகளால் சேதனத்தில் பிரபஞ்சத்தின் சாதிருசியம் சித்திக்கிறது. அது பிரமேயதோஷமாம்.

இவ்வாற்றால் ஸம்க்ஷேபசாரீரகமுதலிய கிரந்தங்களில் அத்தியாசத்திற்குக் காரணமான தோஷங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

அதை யெடுத்துச்சொல்லுவோம். அந்தத்தோஷம் அத்தியாசத்திற்கு ஹேது வன்று; அதனாலும் அது இங்கு நிரூபிக்கப்படவில்லை.

## * காரண அத்தியாச நிரூபணம் 85-92.

## 85. இலக்கம் 50-ல் உள்ள பூர்வபக்ஷத்திற்குச்சமாதானம் 85-86

(5 அதிஷ்டானத்தின் விசேஷரூப அஞ்ஞானத்தின் கண்டநம்)

"விசேஷவடிவத்தான் அறியப்படாதவஸ்துவில் அத்தியாசமுண்டாகும். ஆத்மா சுயம்பிரகாசம். அதனிடத்தில் அஞ்ஞானம் பொருந்தாது. ஏனெனின் இருளிற்கும் ஒளிக்கும் பரஸ்பரம் விரோதமுண்டு. மிகுந்த வெளிச்சத்திலுள்ள ரஜ்ஜுவில் சர்ப்பாத்தியாச முண்டாகாததுபோலச் சுயம்பிரகாசமான ஆத்மாவில் பந்தாத்தியாசம் உண்டாகாது." என்று முன் சொல்லப்பட்டது.

அச்சங்கையும் பொருந்தாது. ஏனெனின், ஆத்மா பிரகாசரூபமாயிருந்தாலும் அதன் சொரூபப்பிரகாசம் அஞ்ஞானத்திற்கு விரோதியன்று, ஆத்ம சொரூபப்பிரகாசம் அஞ்ஞானத்திற்கு விரோதியாகுமாயின், சுழுத்தியில் பிரகாசரூப ஆத்மாவினிடத்தில் அஞ்ஞானம் தோற்றுகின்றது. அது தோற்றலாகாது.

கோர நித்திரைவிட்டெழுந்தவன் "நான் சுகமாய்த் தூங்கினேன், ஒன்றும் தெரியவில்லை" என்று அறிகிறான். இந்த ஞானத்திற்குச் சுகமும் அஞ்ஞானமும் விஷயங்களாம். இந்த ஞானம் ஜாக்கிரகாலத்தில் பிரத்தியக்ஷமன்று. ஏனெனின், எந்த ஞானத்தின் விஷயம் எதிரிலிருக்கிறதோ, அந்த ஞானம் பிரத்தியக்ஷரூபமாம். ஜாக்கிரகாலத்தில் சுகமும் அஞ்ஞானமுமில்லை. ஆதலால் ஜாக்கிரத்தில் சுகத்தின் ஞானமும் அஞ்ஞானத்தின் ஞானமும் பிரத்தியக்ஷரூபமன்று; ஆனால் ஸ்மிருதி ரூபமாம். அந்த ஸ்மிருதி அறியப்படாத வஸ்துவினதுண்டாகாது; ஆனால் அறியப்பட்ட வஸ்துவினதே யுண்டாகும். ஆதலால் சுழுத்தியில் சுகம் அஞ்ஞான மென்பவற்றின் ஞானமிருக்கிறது. அந்தச் சுழுத்திஞானம் அந்தக்கரணம் இந்திரிய மென்பவற்றா லுண்டாகிறதில்லை. ஏனெனின் சுழுத்தியில் அந்தக்கரணமு மிந்திரியங்களும் இல்லை. ஆதலால் சுழுத்தியில் ஆத்மசொரூபமே ஞானமாம். ஞானம் பிரகாசம் என்பவற்றிற்குப் பொருள் ஒன்றே.

---

* பிரபஞ்சத்துக்குக் காரணம் அதிஷ்டானத்தின் விசேஷரூப அஞ்ஞானம். அதன் அத்தியாஸம் காரண அத்தியாஸம் எனப்படும். பிரபஞ்ச அத்தியாஸத்துக்குக் காரணம் அஞ்ஞானம். அஞ்ஞான அத்தியாஸத்துக்குக்காரணம் அந்நியமொன்றுமில்லை. ஆதலால் அஞ்ஞானத்திற்கு அத்தியாஸம் பொருந்தாது. என்றலும் தீபத்தைப்போலும், சாங்கியர் கொண்டுள்ள சொப்பிரகாச ஆத்மாவைப்போலும், நையாயிகர் கொண்டுள்ள பேதத்தைப்போலும், அஞ்ஞானம் தன்னையும் பிறவற்றையும் நிர்வகிப்பதாம். ஆதலால் அதன் அத்தியாசம் பொருந்துகின்றது.

இவ்வாறு சுழுத்தியில் ஆத்மா பிரகாசரூபமாயிருக்கிறது. அந்தப் பிரகாசரூப ஆத்மாவில் சொரூபசுகமும் அஞ்ஞானமும் விளங்குகின்றன. ஆத்மசொரூபப் பிரகாசம் அஞ்ஞானத்திற்கு விரோதியாயின், சுழுத்தியில் அஞ்ஞானந் தோற்றலாகாது. ஆதலால் ஆத்மா பிரகாசரூபமாகவே இருக்கிறது. ஆனால் அதன் சொரூபப் * பிரகாசம் அஞ்ஞானத்திற்கு விரோதியன்று; மாறான ஆத்மாவின் சொரூபப்பிரகாசம் அஞ்ஞானத்திற்குச் சாதகமாம்.

இவ்வபிப்பிராயத்தினாற்றான் வேதாந்த சாஸ்திரத்தில், "சாமானிய சைதன்னியம் அஞ்ஞானத்திற்கு விரோதியன்று; விசேஷ சைதன்னியமே அஞ்ஞானத்திற்கு விரோதியா" மென்று சொல்லப்பட்டிருக்கிறது. எங்கும் வியாபித்திருக்கிற சைதன்னியம் சாமானிய சைதன்னிய மென்றும், விருத்தியிலிருக்கிற சைதன்னியம் விசேஷ சைதன்னிய மென்றும் சொல்லப்படும். கட்டையிலிருப்பது சாமானிய அக்கினி. அது இருளிற்கு விரோதியன்று. கட்டையைக் கடைதலாலுண்டாகும் விசேஷ அக்கினி திரியிலேற்றப்பட்டு இருளிற்கு விரோதியாகிறது. அதுபோல வியாபக சைதன்னியம் அஞ்ஞானத்திற்கு விரோதியன்றாயினும், வேதாந்த விசாரத்தால் எந்த அந்தக்கரண விருத்தி பிரஹ்மாகாரமாகிறதோ, அதிலிருக்கிற சைதன்னியம் அஞ்ஞானத்திற்கு விரோதியாம்.

இவ்வாற்றால் கேவல சைதன்னியம் அஞ்ஞானத்திற்கு விரோதியன்று. ஆனால்

1. † விருத்திசகித சைதன்னியம் அஞ்ஞானத்திற்கு விரோதியாம்.

2. அல்லது சைதன்னியசகிதவிருத்தி அஞ்ஞானத்திற்கு விரோதியாம்.

1. முதற்பக்ஷத்தில் அஞ்ஞானநாசத்திற்குச் சைதன்னியம் ஹேதுவாயும் விருத்தி சாதகமாயும் இருக்கின்றன.

2. இரண்டாவது பக்ஷத்தில் அஞ்ஞான நாசத்திற்கு விருத்தி ஹேதுவாயும் சைதன்னியம் சாதகமாயு மிருக்கின்றன.

இது அவச்சேதவாதத்தின் கிரமம்.

---

* அந்தகாரம் ஆகாயமுதலிய நான்குபூதங்களின் குணங்களாகிய சப்தஸ்பரிச ரச கந்தங்களை ஆவரணம் செய்கிறதில்லை. ஆனால் தேயுவின் குணமான ரூபத்தையே ஆவரணஞ் செய்கிறது. ஆதலால் அந்தகாரம் தேயுவின் சாமானிய சொரூபத்தை ஆசிரயித்து, அதனையே விஷயஞ்செய் (மறைக்) கின்றதாகலின், சாமானியதேயு அந்தகாரத்திற்கு விரோதியன்று. அங்ஙனமே அஞ்ஞானமும் சேதனத்தின் சாமானியப் பிரகாசத்தை ஆசிரயித்திருக்கின்றது; அதனையே விஷயஞ் செய்கின்றது. ஆதலால் சாமானிய சேதனம் அஞ்ஞானத்திற்கு விரோதியன்று.

† அவச்சேதவாதத்தில் விருத்திஸகித சைதன்னியம் அல்லது சைதன்னியத்தோடு கூடிய விருத்தி விசேஷ சைதன்னிய (கற்பித விசேஷ சைதன்னிய) மெனப்படுகின்றது. அது அஞ்ஞானத்திற்கு விரோதியாம். இரண்டிலும் பிற்பக்ஷம் சிரேஷ்டமாம்; விருத்தியே ஆவரண பங்கத்திற்கு ஏதுவாயிருத்தலின்.

ஆபாச (202) வாதத்திலோ சாமானிய சைதன்னியத்தைப்போல விசேஷ சைதன்னியமும் அஞ்ஞானத்திற்கு விரோதியன்று. ஆனால் விருத்திசகித ஆபாசன் அல்லது ஆபாச சகித விருத்தி அஞ்ஞானத்திற்கு விரோதியாம்.

இவ்வாற்றால் பிரகாசரூப சைதன்னியம் அஞ்ஞானத்திற்கு விரோதியன்று. ஆதலால் * அஞ்ஞானம் சைதன்னியத்தை யாசிரயித்துக்கொண்டிருக்கிறது. அந்தஅஞ்ஞானத்தால் சூழப்பட்டஆத்மாவினிடத்தில் பந்தாத்தியாசம் பொருந்துகின்றது.

**86.** "சாமானியரூபத்தால் அறியப்பட்டும், விசேஷரூபத்தால் அறியப் படாமலுமிருக்கிற வஸ்துவில் அத்தியாச முண்டாகும். ஆத்மாவில் சாமானிய விசேஷபாவங்க ளில்லாமையினால் நிர்விசேஷமான ஆத்மா அறியப்பட்டும் அறியப்படாமலும் இருத்தல் பொருந்தாது. அதனிடத்தில் அத்தியாசம் சம்பவியாது." என்று முன் சொல்லப்பட்டது.

அவ்வார்த்தையும் பொருந்தாது. ஏனெனின், "ஆத்மா இருக்கிறது" என்று எல்லோருக்கும் விளங்குகிறது. ஆத்மா என்பது தன் சொரூபத்திற்காம். "யான் இல்லை" என்று ஒருவனுக்கும் தோற்றுகிறதில்லை. ஆனால் "யான் இருக்கிறேன்" என்று எல்லோருக்கும் தோற்றுகிறது. ஆதலால் "ஆத்மா இருக்கிறது" என்று எல்லோருக்கும் விளங்குகிறது. ஆனால் சைதன்னியமாயும் ஆநந்தமாயும் வியாபகமாயும் நித்தியசுத்தமாயும் நித்தியமுக்தமாயும் ஆத்மா இருப்பதாக எல்லோருக்கும் விளங்குகிறதில்லை. ஆதலால் சைதன்னியாதி லக்ஷணங்களோடு கூடியதாக ஆத்மா அறியப்படவில்லை; ஆனால் சத்துவடிவமாக அறியப்பட்டதாம். இது அநுபவசித்தம். இந்த அநுபவசித்த வார்த்தை யுக்தியால் தள்ளப்படமாட்டாது.

1. எல்லோருக்கும் விளங்குகிற ஆத்மாவின் சத்ரூபம் சாமானியரூபமாம்.

2. கேவலம் ஞானிகளுக்கு விளங்குகிற ஆத்மாவின் சைதன்னிய ஆநந்தாதிரூபம் விசேஷரூபமாம்.

1. எது அதிககாலத்திலும் அதிக தேசத்திலுமுள்ளதோ அது சாமானியரூப மெனப்படும்.

2. எது சொற்பகாலத்திலும் சொற்பதேசத்திலு முளதோ, அது விசேஷரூப மெனப்படும்.

---

* சூரியனிடத்தில் அந்தகாரம் சம்பவியாததுபோல ஸ்வயம்பிரகாசமான ஆத்மாவில் அஞ்ஞானம் சம்பவியாது என்று முன் கூறப்பட்டது.

அச்சங்கை பொருந்தாது. ஏனெனின், சூரியாதிஜோதிகள் மகாதேஜஸின் விசேஷரூபங்களாம்; சாமானியரூபங்களன்று. ஆத்மாவின் ஸ்வரூபமோ சாமானியப் பிரகாசமாம். ஆதலால் அது அஞ்ஞானத்திற்கு விரோதியன்று. ஆதலால் திருஷ்டாந்த (சூரிய) தார்ஷ்டாந்த (சேதன)ங்களின் விஷமத்தன்மையால் முற்கூறிய சங்கைக்கு இடமில்லை.

ஆத்மாவின் சொரூபமே சேதன ஆநந்தாதிகளா யிருத்தலால் சத்ரூபம் போலச் சேதன ஆநந்தாதிகளும் எங்கும் வியாபகமாம். சத்தை யபேக்ஷித்துச் சேதன ஆநந்தாதிகள் சொற்ப தேசத்திலும், ஆநந்தாதிகளை யபேக்ஷித்துச் சத்ரூபம் அதிக தேசத்திலும் இருப்பதாகச் சொல்லுதல் கூடாது. ஆதலால் சத்ரூபம் ஆத்மாவின் சாமானிய அம்ச மென்றும், சேதனாதிகள் விசேஷாம்ச மென்றும் சொல்லுதலும் பொருந்தாது. அங்ஙனமாயினும் சத்தின் பிரதீதி எல்லோருக்கும் அவித்தியாகாலத்திலும் உண்டாகிறது. "ஆத்மா சேதனானந்தாதி ரூப" மென்னும் பிரதீதி எல்லோருக்கும் அவித்தியாகாலத்தி லுண்டாகிறதில்லை. கேவலம் ஞானிக்குமாத்திரம் உண்டாகிறது. அவித்தியாகாலத்தில் சேதனானந்தாதிகளு மிருக்கின்றன ; ஆனால் தோற்றுகிறதில்லை. ஆதலால் இவை இல்லாதவைபோன்றிருக்கின்றன. இவ்வபிப்பிராயத்தால்

1. சைதன்னியாதிகள் சொற்பகாலத் திருப்பனவாகச் சொல்லப்படுகின்றன.

2. சத்ரூபம் அதிககாலத்திலிருப்பதாகச் சொல்லப்படுகின்றது.

இவ்வாற்றால் சத்ரூபத்திற்கும் சேதனாதிகளுக்கும் சாமானிய விசேஷ பாவங்களில்லையாயினும், சொற்பகாலத்திலும் அதிககாலத்திலும் தோன்றுவதால் சாமானிய விசேஷ பாவங்களைப்போல இவைகளிருக்கின்றன. இக்காரணத்தினால்

1. ஆத்மாவின் சத்ரூபம் சாமானிய அம்சமெனப்படுகின்றது.

2. சேதனாதிகள் விசேஷ அம்ச மெனப்படுகின்றன.

ஆத்மா நிர்விசேஷமென்னும் சித்தாந்தத்திற்கும் ஹானியில்லை. ஆத்மாவில் சாமானிய விசேஷபாவங்களை அங்கீகரிக்கும் பக்ஷத்தில் "ஆத்மா நிர்விசேஷம்" என்னும் சித்தாந்தத்திற்கு ஹானியுண்டாகும். அந்தச் சாமானிய விசேஷபாவங்கள் அங்கீகரிக்கப்படவில்லை; ஆனால் அவித்தையினால் சாமானிய விசேஷ பாவங்களைப்போலப் பிரதீதி யுண்டாகின்றமையினால் சாமானிய விசேஷபாவம் கூறுவர்.

இவ்விதமாகச் சத்ரூபத்தால் அறியப்பட்டதும், சேதன ஆனந்த நித்திய சுத்த நித்திய முக்த பிரஹ்மரூபத்தால் அறியப்படாததுமான ஆத்மாவில் பந்தத்தின் அத்தியாசம் பொருந்துகின்றது. அத்தியாசரூப பந்தத்திற்கு ஞானத்தால் நிவிருத்தியும் பொருந்துகின்றது. அதனால் கிரந்தத்தின் பிரயோஜனம் சம்பவிக்கிறது.

## 87. இலக்கம் 51-58-ல் உள்ள பூர்வபக்ஷத்தின் உத்தரம் 87-92.

(பூர்வபக்ஷி:—) "நிஷித்தகாமிய கர்மங்களைத் தியாகஞ் செய்து நித்திய நைமித்திகப் பிராயச்சித்த கர்மங்களைச் செய்யவேண்டியது. நிஷித்த கர்மம் இல்லாததினால் நீசலோகமும் காமிய கர்மம் இல்லாததினால் உத்தமலோக

மும் அடையப்படமாட்டா. நித்திய நைமித்திக கர்மங்களைச் செய்யாததினு லுண்டாகும் பாவம் அவற்றைச் செய்வதினு லுண்டாகிறதில்லை. இந்த ஜன் மத்திலாவது முன் ஜன்மங்களிலாவது செய்த பாவங்கள் சாதாரண அசா தாரணப் பிராயச்சித்தங்களால் நிவிருத்தியாகின்றன. முன் செய்த காமிய கர்மங்களின் பலத்தில் இச்சை யிப்போ தில்லாததினால் முமுக்ஷுவுக்கு அவற்றின் பயன் உண்டாகிறதில்லை. ஆதலால் முமுக்ஷுவுக்கு ஞானமின்றி யே ஜன்மாபாவரூப மோக்ஷமுண்டாம்." என்று முன் சொல்லப்பட்டது.

(சித்தாந்தி:—) அதுபொருந்தாது. ஏனெனின், நித்தியநைமித்திக கர்மங் களுக்கும் சுவர்க்கரூப பயனுண்டு என்பதனைப் பாஷியகாரர் யுக்தியினாலும் பிரமாணத்தினாலும் நிரூபித்திருக்கின்றனர். ஆதலால் நித்தியநைமித்திக கர் மங்களால் உத்தமலோகம் அடையப்படும்; ஜன்மாபாவம் சித்திக்கமாட் டாது. நித்திய நைமித்திக கர்மங்களின் பலத்தை யங்கீகரியாவிடின், அவற் றைப் போதிக்கும் வேதம் நிஷ்பலமாகும். ஏனெனின், நித்தியநைமித்திக கர்மங்களைச் செய்யாததினால் பாப முண்டாகுமாயின்; அவற்றைச் செய் வதினால் பாப முண்டாகாதிருத்தலே அவற்றின் பலனாதல் பொருந்தும். அந்த நித்திய நைமித்திகங்களைச் செய்யாததினால் பாபமுண்டாகிறதில்லை. ஏனெனின் அவற்றைச் செய்யாமலிருப்பது அபாவரூபம்; பாபம் பாவரூபம். அபாவத்திலிருந்து பாவ முண்டாகமாட்டாது. ஆதலால் "நித்திய நைமித் திக கர்மங்களைச் செய்யாததினால் பாபமுண்டாகு" மென்று கூறுதல் பொருந்தாது. நித்திய நைமித்திகங்களைச் செய்யாததினால் பாப முண்டாகு மென்று கொள்ளின், "அபாவத்திலிருந்து பாவ முண்டாகமாட்டாது" என்று கீதையின் 2-வது அத்தியாயத்தில் பகவான் சொல்லியிருக்கின்றார். அதற்கு விரோதமுண்டாகும். ஆதலால் நித்தியநைமித்திக கர்மங்களின் அபாவத்தால் பாவரூப பாபத்தின் உற்பத்தி பொருந்தாது. இவ்வாறு நித் தியநைமித்திக கர்மங்களுக்குப் பாபமுண்டாகாமலிருப்பதே பயன் அன்று. ஆனால் நித்தியநைமித்திக கர்மங்களின்றியும் பாபமுண்டாகாமை சித்திக் கின்றது. ஆகையால் நித்திய நைமித்திக கர்மங்களுக்குச் சுவர்க்கரூப பலனை அங்கீகரியாவிடின் கர்மம் நிஷ்பலமாகும்; நிஷ்பல கர்மத்தைப் போதிக்கும் வேதமும் நிஷ்பலமாகும். ஆதலால் நித்தியநைமித்திக கர்மங்களாலுஞ் சுவர் க்கபல னுண்டாகிறது.

88. "ஜன்மாந்தரத்தின் காமிய கர்மங்கள் இச்சை யில்லாமையினால் பலனைக் கொடுக்கமாட்டா" வென்று முன் கூறப்பட்டது.

அவ்வார்த்தையும் பொருந்தாது. ஏனெனின், கர்மரூபமான விதையினின்று இரண்டு முளைகளுண்டாகின்றன. ஒன்று வாசனை, மற்றொன்று அதிருஷ்டம். தர்ம அதர்மங்களுக்கு அதிருஷ்டமென்று பெயர். சுபகர்மத்திலிருந்து சுப வாசனையும் தர்மரூபமுளையு முண்டாகின்றன. அசுப கர்மத்திலிருந்து அசுப வாசனையும் அதர்மரூப முளையு முண்டாகின்றன. சுப வாசனையால் மேல் சுப

கர்மத்தில் பிரவிருத்தி யுண்டாகிறது; தர்மத்தால் சுகபோக முண்டாகிறது. இப்படியே அசுப வாசனையால் அசுப கர்மத்திற் பிரவிருத்தியும் அதர்மத்தால் துக்காநுபவமு முண்டாகின்றன. இவ்வாற்றால் வாசனாரூபமும் அதிருஷ்ட ரூபமுமான முளைகள் கர்மரூப வித்தினின்று முண்டாகின்றன. அவற்றில்,

1. "வாசனாரூப முளையோ உபாயத்தால் நாசமடைகிறது."

2. "அதிருஷ்டரூப முளைபலத்தைக் கொடுக்காமல் எவ்விதத்தாலும் நாசமடைகிறதில்லை."

இது சாஸ்திர சித்தாந்தம்.

1. அசுப கர்மத்தினின்றும் உண்டாகிய அசுபவாசனாரூப முளை சற்சங்காதி யுபாயங்களால் நாசமடைகிறது.

2. சுப கர்மத்தினின்று முண்டாகிய சுபவாசனாரூபமுளை துற்சங்க முதலியவற்றால் நாசமடைகிறது.

சாஸ்திரத்தில் எவ்வளவு புருஷார்த்தம் சொல்லப்பட்டிருக்கிறதோ, அதனால் பிரவிருத்திக்கு ஏதுவான வாசனை நசிக்கின்றது. ஆதலால் புருஷார்த்தமும் ஸபலமாம். போகத்துக்கு ஹேதுவான அதிருஷ்டம் நாசமடைகிறதில்லை. ஆதலால் "பலத்தைக் கொடுக்காமல் கர்மம் நிவிருத்தியாகிறதில்லை" என்று சாஸ்திரத்திற் சொல்லியதற்கும் விரோதமில்லை. இவ்வாற்றால் அஞ்ஞானிக்குப் பலபோகமின்றிக் கர்மம் நிவிருத்தியாகாது.

ஞானிக்கோ போகமின்றியும் கர்மம் நிவிருத்தியாகிறது. ஏனெனின் கர்மம், கர்த்தா, பலன் என்பன பரமார்த்தமாகவோ யில்லை; ஆனால் அவித்தையினாற் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. அந்த அவித்தைக்கு ஞானம் விரோதியாம். ஆதலால் அவித்தியா கற்பித கர்மாதிகளும் ஞானத்தால் நாசமாகின்றன. சொப்பனத்தில் நித்திரையினால் தோன்றும் பதார்த்தம் ஜாக்கிரகாலத்தில் நித்திரையின் நிவிருத்தியினால் தோன்றாததுபோல, அவித்தியாரூப நித்திரையினால் தோன்றும் கர்மம் கர்த்தா பலன் என்பனவும் ஞானதசை வடிவ ஜாக்கிரத்தில் அவித்தையின் நிவிருத்தியால் அபாவமாகின்றன; ஞானமின்றி அபாவமாகிறதில்லை.

1. இச்சை யில்லாமையினால் கர்மத்தின் பலபோகமுண்டாகாதெனின், ஈசுவரனது சங்கற்பம் மித்தையாகும். ஏனெனின் "பலபோகமின்றி அஞ்ஞானிக்குக் கர்மம் நிவிருத்தியாகா" தென்பது ஈசுவர சங்கற்பம். இச்சையின்மையால் செய்த கர்மத்தின் பயனுண்டாகாதெனின், ஈசுவர சங்கற்பம் பொய்யேயாகும். "ஈசுவரன் சத்தியசங்கற்பன்" என்னும் வார்த்தை சாஸ்திரத்தில் பிரசித்தம். ஆதலால் "இச்சையின்மையால் முன்செய்த காமிய கர்மத்திற்குப் பலனுண்டாகா" தென்பது விருத்தம்.

2. இச்சை யில்லாமையினாலேயே காமிய கர்மபல முண்டாகாதெனின், அசுப கர்மத்தின் பலன் ஒருவருக்கு முண்டாகலாகாது. ஏனெனின், அசுப கர்மத்தின் பயனாகிய துக்கத்தில் ஒருவனுக்கு மிச்சை யுண்டாகிறதில்லை.

ஆதலால் ஞானமின்றிக் கர்மபலத்தின் அபாவம் உண்டாகாது.

**89.** "எங்ஙனம் கர்மத்தின் அநுஷ்டான காலத்தில் இச்சையில்லாதவனுக்குக் கர்மத்தின் பயன் வேதாந்த மதத்தில் அங்கீகரிக்கப்படவில்லையோ, அங்ஙனமே கர்மாநுஷ்டானத்திற்குப் பிறகும் புருஷனது இச்சை நீங்கிவிடுமாயின் கர்மபலன் உண்டாகா" தென்று முன் (57) சொல்லப்பட்டது.

அவ்வார்த்தையும் வேதாந்த சித்தாந்தத்தைத் தெரியாது கூறியதாம். ஏனெனின், பலத்தில் இச்சையுடன் கர்மம் செய்கிறவனுக்கும் இச்சையில்லாமற் கர்மம் செய்கிறவனுக்கும் கர்மபலபோகம் நிச்சயமாகவே யுண்டாகும். ஆனால் இச்சையின்றிய கர்மத்தினால் அந்தக்கரணம் சுத்தமாகிறது. இச்சையோடு கர்மஞ் செய்கிறவனுக்குக் கேவலம் போகமோ உண்டாகிறது; ஆனால் அந்தக்கரணம் சுத்தமாகிறதில்லை.

1. "இச்சை யில்லாமற் கர்மத்தைச் செய்வதனால் அந்தக்கரணஞ் சுத்தமாகிச் சிரவணத்தினால் ஞானமுண்டாய்விடுகின்றது. அவனுக்குக் கர்மத்தின் பலனுண்டாகிறதில்லை."

2. "பலாபேக்ஷையின்றிக் கர்மஞ்செய்தும் சிரவண மில்லாததினாலாவது அல்லது வேறு எக்காரணத்தினாலாவது ஞான முண்டாகாதவனுக்கு இச்சையின்றிய கர்மத்தின் பலபோகம் நிவிருத்தியாகாது."

இது வேதாந்த சித்தாந்தம்.

ஆதலால் ஞானமின்றிக் கர்மத்தின் பலபோகம் * நிவிருத்தியாகாது.

**90.** "பிராயச்சித்தத்தினால் சகல அசுப கர்மங்களும் நாசமாகின்றன" என்று முன் கூறப்பட்டது.

அவ்வார்த்தையும் பொருந்தாது. ஏனெனின், அநந்தகற்பத்தின் அசுப கர்மங்கள் எவையோ, அவற்றிற்கு ஒரு ஜன்மத்தில் பிராயச்சித்தம் பொருந்தாது. கங்காஸ்நானம் ஈசுவரநாமோச்சாரண முதலியனவாகிய சர்வபாவங்களையும் நாசஞ்செய்யும் சாதாரணப் பிராயச்சித்தங்கள் எவையோ, அவைகளும் ஞானத்திற்கே சாதனங்களாம். ஆதலால் சகல பாவங்களையும் நாசஞ் செய்வனவாகச் சொல்லப்படுகின்றன. இதனால் ஞானத்தினாலேயே சகல பாவங்களும் நாசமாகின்றன.

---

* போகம் பிராயச்சித்தம் ஞானம் என்னும் மூன்றினாலும் கர்மத்தின் நிவிருத்தி யுண்டாகின்றது. இதற்கு நான்காவது காரணமில்லை.

1. அவற்றுள், பிராரப்தகர்மம் போகத்தினால் நிவிருத்தியாகின்றது.

2. செய்யப்படும் கர்மம் பிராயச்சித்தத்தினாலும் ஞானத்தினாலும் நிவிருத்தியாகின்றது.

3. சஞ்சிதகர்மத்தின் சிறிது நீக்கம் சாதாரணப் பிராயச்சித்தத்தினா லுண்டாகிறது. முழு நிவிருத்தியும் ஞானத்தினா லுண்டாகின்றது.

**91.** "நித்தியநைமித்திக கர்மங்களைச் செய்வதனால் உண்டாகும் கிலேசம் பூர்வசஞ்சித நிஷித்த கர்மங்களின் பயனாகவிருத்தலால் அவற்றிற்கு வேறு பயனில்லை" யென்று முன் சொல்லப்பட்டது.

அவ்வார்த்தையும் பொருந்தாது. ஏனெனின், சஞ்சித நிஷித்தகர்மங்கள் பலவிதமாயிருத்தலால் அவற்றின் பயனாகிய துக்கமும் பலவிதமாயிருக்கின்றது. கர்மாநுஷ்டானத்தின் கிலேசமே அவற்றின் பயனெனல் பொருந்தாது.

**92.** "சகலசஞ்சித காமிய கர்மங்களாலும் ஒரேசரீர முண்டாகு" மென்று முன் (57) சொல்லப்பட்டது.

அவ்வார்த்தையும் பொருந்தாது. ஏனெனின் சஞ்சிதகாமிய கர்மங்கள் அநேகமாம். அவற்றிற்கு ஒரு ஜன்மத்தில் அநுபவம் பொருந்தாது.

ஒருவனுக்கு ஒரேகாலத்தில் நாநாசரீரங்களால் போகம் சொல்லப்பட்டது. அதுவும் சித்தயோகிக்குப் பொருந்துமேயன்றி மற்றவர்கட்குப் பொருந்தாது. சித்தயோகிக்கும் மற்ற எல்லாச்சாமார்த்தியங்களு முண்டாகும்; ஆனால் ஞானமின்றி மோக்ஷம் உண்டாகா" தென்பது வேதத்தின் சித்தாந்தம்.

இவ்வாற்றால் காமியகர்மங்களையும் நிஷித்தகர்மங்களையும் விட்டுக் கேவலம் நித்தியநைமித்திக கர்மங்களை அஞ்ஞானிசெய்யின், அவனுக்கு நித்தியநைமித்திக கர்மங்களின் பயனை அநுபவித்தற்பொருட்டும் முன்செய்த சுபாசுபகர்மங்களின் பயனை அநுபவித்தற்பொருட்டும் அநேகசரீரங்கள் உண்டாகும்; மோக்ஷமுண்டாகாது. ஆதலால் ஞானவாயிலாகப் பந்தம் நிவர்த்தியாவதே கிரந்தத்தின் பிரயோஜனமாதல் பொருந்துகின்றது. சொப்பனத்தில் தோற்றும் பொய்ப்பொருள் ஜாக்கிரம் வந்தாலன்றி நிவர்த்தியாகாததுபோல, அஞ்ஞானத்தால் தோற்றும் பொய்யான பந்தமும் ஞானரூபஜாக்கிரம் வந்தாலன்றி நிவர்த்தியாகாது.

## 93. சம்பந்தமண்டநம். (4)
## கிரந்தத்தின் ஆரம்பம் பொருந்துகின்றது.

இவ்வாற்றால் கிரந்தத்திற்கு அதிகாரி, விஷயம், பிரயோஜனம் என்பவை சம்பவிக்கின்றன. அதிகாரிமுதலியன சம்பவித்தலால் சம்பந்தமும் சம்பவிக்கிறது. ஆதலால் கிரந்தத்தின் ஆரம்பம் பொருந்துகின்றது.

அநுபந்தவிசேஷ நிரூபணமென்னும்
இரண்டாவது தரங்கம்

முற்றிற்று.

---

ஓம்.

ஸ்ரீ கணேசாய நம:.

# ஸ்ரீ விசாரசாகரம்.

## மூன்றாவது தரங்கம்.

ஸ்ரீ குரு சிஷ்ய லக்ஷணம். 94-96.
குரு பக்தி பயன்களின் றன்மையை நிரூபித்தல். 97-108.

### 94. கிரந்தாரம்பத்தின் பிரதிஞ்ஞை.

நான்கு அநுபந்தத்தோடு கிரந்தத்தை யறிந்து ஞானத்துடன் கூடிய குருவினிடத்தில் எவன் கிரந்தத்தைப் படிக்கிறானோ, அல்லது ஏகாக்கிரசித்தத்தோடு கேட்கிறானோ, அவன் மோக்ஷத்திற்கு மார்க்கமான ஞானத்தையடைவான்.

குருசிஷ்யஸம்வாதத்தால் அர்த்தநிரூபணம் பண்ணுவதால் கேட்பவனுக்குப் போதம் சுலபமாயுண்டாகுமென்னும் காரணத்தால் குருசிஷ்யசம்வாதமாகக் கிரந்தம் ஆரம்பிக்கப்படுகிறது.

### 95. ஸ்ரீ குருலக்ஷணம்.

வேதாத்தியயனஞ் செய்து அதன் பொருளை யறிந்து ஜீவப்பிரஹ்ம ஐக்கியநிச்சயத்தால் ஆத்மஞானத்தில் நிலைத்தவரே குருவாவர். வேதாத்தியயனஞ்செய்தும் ஆத்மஞானத்தில் நிஷ்டையில்லாதவர்+ தாம் முக்தராயினும் பிறருக்கு உபதேசஞ் செய்யத்தக்க குருவாகார். ஏனெனின், ஜிஞ்ஞாசுவின் சந்தேகங்களைப் போக்க அவருக்கு யுக்திகள் தோன்றா. சந்தேகங்க ளெழும்பாத உத்தம ஸம்ஸ்காரத்துடன்கூடிய ஜிஞ்ஞாசுவை யுபதேசிக்க இவர் சமர்த்தராயினும் எல்லோருக்கு முபதேசிக்கத்தக்கவ ராகாமையின் ஆசாரியராகார். ஆனால்,

1. வேதாத்தியயனம் பண்ணினவரா யிருத்தல்வேண்டும்.

2. ஆத்மஞானநிஷ்டை யுடையவரா யிருத்தல்வேண்டும். அவரே ஆசாரியரெனப்படுவார்.

+ ஆசாரியராகார். ஞானநிஷ்டை யுடையவரும் வேதாத்தியயனஞ் செய்யவில்லையேல், அவர்

3. அவர் சிஷ்யனுடைய புத்தியில் தோற்றும் ஐவகைப் பேதங்களையும் * நாநாவித யுக்திகளால் கெடுப்பதிற் சமர்த்தராதல்வேண்டும். அப்பேதங்களாவன:-ஜீவஈசுவரபேதம், ஜீவர்களின் பரஸ்பரபேதம், ஜீவஜடபேதம், ஈசுவர ஜடபேதம், ஜடஜடபேதம் என்பனவாம். இப்பேதங்களை அவர் கண்டிக்கவேண்டும். ஏனெனின் பேதம் பயத்திற்குக் காரணம். ஆதலால் பேதத்தை யவசியம் நிராகரிக்கவேண்டும்.

4. பேதத்தின் நிராகரணத்தினால் அத்துவயமாயும் அவித்தியாதி மலரகிதமாயுமுள்ள பிரஹ்மம் எதுவோ அதனைத் தரிசிப்பிக்க (தனது சொரூபமாகச் சாக்ஷாத்கரிக்கச்செய்ய) வேண்டும்.

5. சகல சமுசாரத்தையும் மித்திபாவடிவமாக உபதேசிக்கவேண்டும்.

இத்தன்மைய அற்புத உபதேசத்தைச் செய்பவர் ஆசாரியரெனப்படுகிறார். ஞானமின்றித் தன் தலையை மொட்டை யடித்துக்கொண்டும் சிஷ்யனையு மிப்படிச் செய்விப்பவராவது, வேறோர் சம்பிரதாயப்படி சின்னங்களை மாத்திரம் தரிக்கும்படிச் செய்பவராவது ஆசாரியராகார். சமுசாரமாகிய முதலைவாயினின்றும் விடுவிக்கிறவரும் தத்துவபோதனையைச் செய்கிறவருமாயுள்ளவரே குரவராவர்; வேஷதாரிகள் குரவராகாரென்று அறிஞர் கூறுவர்.

## 96. சிஷ்யனது லக்ஷணம்.

சாஸ்திரானுசாரமாகத் தேசிகர்லக்ஷணம் சொல்லப்பட்டது. எந்தச் சாதனத்தால் கிரந்தத்தில் அதிகாரமுண்டாகின்றதோ அந்தச் சாதனம் சிஷ்யனது லக்ஷணமாம். இதனால் முன் கூறப்பட்ட அதிகாரியின்லக்ஷணமே சிஷ்யனது லக்ஷணமெனத் தெரிந்துகொள்க.

## 97. குருபக்தியின் பல வர்ணநம்.

குருவினிடத்தில் ஈசுவரனிடத்தினும் அதிகபக்தி செய்யவேண்டும். ஏனெனின், சகல சாஸ்திரங்களிலும் சமர்த்தனாயுள்ளவனாயின் அவனும் குருவுபதேசமின்றி ஞானத்தை யடையான்.

---

* ஐந்து பேதங்களின் கண்டந யுக்திகள்:—

1. ஜீவேசுவரர்களின் பேதம் கற்பிதம்; அவித்தியா மாயாரூப உபாதிகளாலாயினவையாயிருத்தலின்; கடாகாச மடாகாசங்களின் பேதம்போல.

2. ஜீவர்களின் பரஸ்பரபேதம் கற்பிதம்; ஆபாஸ சகித அந்தக்கரணரூப உபாதியினாலாகியனவா யிருத்தலின்; நாநா கடாகாசங்களின் பேதம்போல.

3. ஜீவஜடங்களின் பேதம் கற்பிதம்; ஸாபாஸ அந்தக்கரணநிராபாஸ நாமரூபமய உபாதிகளாலாகியனவா யிருத்தலின்; சொப்பனத்திலுள்ள சராசரங்களைப்போல.

4. ஈசுவரஜடபேதம் கற்பிதம்; ஸாபாஸமாயை நாமரூபமய உபாதிகளாலாகியனவாயிருத்தலின்; சாக்ஷி சொப்பனப் பிரபஞ்சங்களின் பேதத்தைப்போல.

5. ஜடஜடங்களின் பேதம் கற்பிதம்; நாமரூபமய உபாதியினாலாகியனவா யிருத்தலின்; இரஜ்ஜுவிற் கற்பிதசர்ப்ப தண்டமுதலியவற்றின் பேதம்போல.

இவ்வைவகை அநுமானங்களும் பஞ்சபேதத்தின் கண்டநத்தில் யுக்திகளாம்.

முற்கூறியதனையே திருஷ்டாந்தத்தால் கூறுவாம்:—

வேதரூபமான சமுத்திரம் குருவின்றி உப்பைப்போல் க்ஷாரமாயிருக்கிறது. க்ஷார (உப்பு) சமுத்திரத்தில் விழுந்தவன் அந்த ஜலத்தைப் பானஞ்செய்து கேவலம் உவர்ப்பை யநுபவிக்கிறன். அதனல் கிலேசத்தை யடைகிறன். அங்ஙனமே குருவின்றி வேதார்த்தத்தை விசாரிக்கிறவன் பேதரூபமான க்ஷாரத்தை யநுபவித்து ஜனனமரணவடிவ துக்கத்தை யடைகிறன். இக்காரணத்தினல் ராமாநுஜர் மத்துவாசாரியர் முதலிய அநேகர் வேதார்த்தத்தை விசாரித்தும் குருமுகமாக விசாரியாமையினல் பேதத்தில் நிச்சயத்தை யடைந்து ஜநநமரணரூப துக்கத்தையே யடைந்தார்கள்; முக்திரூப ஆநந்தத்தை யடையவில்லை. ராமாநுஜர் முதலியோரும் வேதத்தைத் தங்கள் குருமுகமாய் விசாரித்து வியாக்கியானங்களைச் செய்திருக்கின்றர்கள். என்றலும் எவர்கள் மூலமாய் அவர்கள் விசாரித்தார்களோ அவர்கள் குருமாரல்லர். ஏனெனின் "ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தை யுபதேசிக்கிறவரே குருவாவர்" ரென்று முன் குருலக்ஷண (95) பிரசங்கத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. இவர்களுக்கு உபதேசித்தவர்கள் ஜீவப் பிரஹ்ம பேதத்தை யுபதேசித்திருப்பதால் அவர்களிடத்தி லுபயோகிக்கும் குருசப்தம் ஜயினர்கள் தங்கள் ஆசாரியரிடத் துபயோகிக்கும் குருசப்தம்போலாம். ஜயினர்கள்போல் பேதவாதிகளின் சிஷ்யர்களும் தங்களுக்கு வேதோபதேசஞ் செய்கிறவர்களைக் குருவென்று சொல்லுகிறர்கள்; ஆனல் அவர்கள் குருவாகார். ஆதலால் ராமானுஜர் முதலிய பேதவாதிகள் குருமுகமாக விசாரித்தவர்களாகார். இக்காரணத்தால் பேதத்தில் அபிமானம் வைத்து ஜநநமரணரூப துக்கத்தை யடைகிறர்கள்.

அங்ஙனமே மற்றும் முன் லக்ஷணங்களுடன் கூடிய குருவின்றித் தாமாகவே வேதார்த்தத்தை விசாரிப்பவர்களும், பேதவாதிகளிடத்தில் படித்து விசாரிப்பவர்களும் பேதமென்னும் க்ஷாரத்தை யநுபவித்து ஜநநமரணரூப துக்கத்தையே யநுபவிக்கிறர்கள்.

மேகவடிவ பிரஹ்மவித்தென்னும் குருமுகமாகக் கேட்டு விசாரிப்பவர்களுக்கு வேதம் அமிர்தத்தினும் அதிக ஆநந்தத்திற்கு ஹேதுவாகிறது. எங்ஙனம் சமுத்திர ஜலம் இயல்பாகவே யுப்பா யிருந்து, மேகவாயிலாக மதுரமாகின்றதோ, அங்ஙனமே வேதார்த்தமும் பிரஹ்மஞானியாகிய குருவாயிலாக ஆநந்தத்திற்கு ஹேதுவாகிறது.

## ௬8. ஞானியாகிய குருவினின்றும் வேதார்த்தத்தைப் படித்தலும் கேட்டலும் தகுதியாமெனல்.

"குருவினிடத்துப் படித்த வேதத்தின் அர்த்தத்தை விசாரித்தலால் முக்தியாகிய பயனுண்டாகின்றது." என்று முன் சொல்லப்பட்டது. அதனல் குரு ஞானியா யிருக்கவேண்டு மென்றவது அஞ்ஞானியா யிருக்கவேண்டுமென்றவது சொல்லப்படவில்லை. அதனை இனிக் கூறுவாம்:—"ஞான

யில்லாதவர் குருவாகார்" என்பதனை முன் கூறிவந்தோமாயினும், முற்கூறிய வார்த்தையினைத் திருஷ்டாந்தத்தினுற் கூறுவாம்:—

1. துருத்தி முதலிய தோற்பாத்திரங்களின் வாயிலாகவேனும் குடவாயிலாகவேனும் கிரகிக்கப்பட்ட சமுத்திரத்தின் ஜலம் உவர்ப்பினும் விலக்ஷணமான சுவைக்கு ஏதுவன்று. அங்ஙனமே அஞ்ஞானி புருஷன் வாயிலாகக் கிரகிக்கப்பட்ட வேதமாகிய சமுத்திரத்தின் அர்த்தமாகிய ஜலம் விலக்ஷணமான ஆநந்தத்திற்கு ஏதுவன்று. ஆதலால் அஞ்ஞானியாகிய பாடகன் தோற்பாத்திரத்திற்கும் கடத்திற்கும் சமானமாவன்.

2. ஞானி மேகத்திற்குச் சமானமாவ னென்னும் வார்த்தை முன் சொல்லப்பட்டது.

ஆதலால் தோற்பாத்திரத்திற்கும் கடத்திற்கும் சமானமான அஞ்ஞானியாகிய பாடகர்களைவிட்டு மேகத்திற்குச் சமானமாகிய ஞானியினின்றும் வேதத்தின் அர்த்தத்தைப் படிக்க அல்லது கேட்க.

## 99. பாஷா கிரந்தத்தினுலும் ஞான முண்டாமெனல்.

ஞானியினிடத்தில் வேதத்தைப் படிக்கவேண்டுமென்று கூறுதலால் வேதத்தின் கேள்விவாயிலாகவே ஜீவப்பிரஹ்மங்களின் சொரூபத்தை விசாரித்தலால் ஞானமுண்டாகின்றது. வேறு ஸம்ஸ்கிருத கிரந்தங்களினுலாவது பாஷா கிரந்தங்களினுலாவது ஞானமுண்டாகாது. ஆதலால் பாஷாகிரந்தத்தின் ஆரம்பம் நிஷ்பலமாகும் என்னும் சங்கை யுண்டாகின்றது.

அதற்குச் சமாதானம்:—"பிரஹ்மத்தை யறிந்தவன் பிரஹ்மரூபமாவன்" என்பது வேதத்திற் பிரசித்தமாம். ஆதலால் அவனுடைய வாக்கு வேதரூபமாம். அந்த வாக்கு ஸம்ஸ்கிருத வடிவமாகுக அல்லது பாஷை வடிவமாகுக. அது எவ்வாற்றானும் பேதப் பிரமத்தைக் கெடுக்கும்.

"வேத வாக்கியத்தாலன்றி ஞானம் உண்டாகா" தென்று கூறின்,

அந்நியமமில்லை. ஆயுள்வேதத்திற் சொல்லிய ரோகங்கள் அவற்றின் ஸ்தானங்கள் ஔஷதங்கள் என்னும் அவை முழுவதின் ஞானமும் வேறு ஸம்ஸ்கிருத நூல்களாலும் மற்றைப் பாஷை நூல்களாலும் உண்டாய்விடுகின்றது. அங்ஙனமே எல்லாவற்றின் ஆத்மாவாகிய பிரஹ்மத்தின் ஞானமும் பாஷை முதலிய நூல்களாலு முண்டாகும்.

இதனுற்றான் சர்வஞ்ஞர்களான முனிகளும் மகரிஷிகளும் ஸ்மிருதி புராண இதிகாசங்களில் பிரஹ்மவித்தையின் பிரகரணத்தைக் கூறினர். வேதத்தினுலன்றி ஞான முண்டாகாவிடின் ஸ்மிருதியாதிகளில் அவ்வெல்லாப் பிரகரணங்களும் வியர்த்தமாய்ப்போம். ஆதலால் ஆத்மாவின் சொரூபத்தைப் பிரதிபாதிக்கும் வாக்கியத்தினுல் ஞானமுண்டாகும். அந்த வாக்கியம் வேத

மாகுக; அல்லது வேறு பாஷையாகுக. இதனுல் * பாஷா கிரந்தத்தினுலும் ஞான முண்டாகுமென்பது சித்தித்தது.

---

* பாஷா கிரந்தத்தால் ஞானமுண்டாகாது என்று ஆக்கிரகஞ் செய்பவனை இது கேட்பாம்:—1. பாஷா கிரந்தம் வேதாநுசாரியல்லாமையின், அதனுல் ஞானமுண்டாகாதா? 2. அல்லது அது பாஷாரூபமா யிருத்தலால் ஞானமுண்டாகாதா? 3. அல்லது அவதார புருஷர்களால் செய்யப்படாமையால் ஞானமுண்டாகாதா? 4. அல்லது அசுத்தமா யிருத்தலின் ஞானமுண்டாகாதா?

1. வேதாநுசாரி யன்றெனும் முதற்பக்ஷத்தைக் கூறின், (1) வேதத்தின் பாடத்தை யநுசரித்ததன்ரு? (2) அல்லது வேதத்தின் அர்த்தத்தை யநுசரித்ததன்ரு?

(1.) வேதத்தின் பாடத்தை யநுசரித்ததன்றெனின், மற்ற ஸம்ஸ்கிருத கிரந்தங்களும் வேதத்தை யநுசரித்தவையன்ருகலின் அவற்ருலும் ஞானமுண்டாகலாகாது.

(2.) "வேதார்த்தத்தை யநுசரித்ததன்" றெனின், அது பொருந்தாது. ஏனெனின் எப்படிச் சில ஸம்ஸ்கிருத கிரந்தங்கள் வேதார்த்தத்தை யநுசரித்திருக்கின்றனவோ, அப்படியே சில பிராகிருத கிரந்தங்களும் வேதார்த்தத்தை யநுசரித்திருக்கின்றன. ஆதலால் எங்ஙனம் ஆயுள்வேதத்தை யநுசரித்த மற்ற ஸம்ஸ்கிருத பிராகிருத கிரந்தங்களால் ஔஷதாதிகளின் ஞான முண்டாகின்றதோ, அங்ஙனமே வேதார்த்தத்தை யநுசரித்த ஸம்ஸ்கிருத பிராகிருத கிரந்தங்களாலும் ஞான முண்டாகும்.

2. பாஷாகிரந்தம் பாஷாரூபமா யிருத்தலால் அவற்ருல் ஞான முண்டாகாதென்று சொல்லும்பக்ஷத்தில், எப்படி ஸம்ஸ்கிருத கிரந்தம் தேவபாஷை வடிவினதோ, அப்படியே பிராகிருத கிரந்தமும் மனுஷ்ய பாஷை வடிவினதாம். பாஷைத்தன்மை இரண்டிலும் சமானமாம்.

3. "பாஷாகிரந்தம் அவதார புருஷனுற் செய்யப்படாமையின் அதனுல் ஞான முண்டாகா" தென்று சொல்லும்பக்ஷத்தில் சில ஸம்ஸ்கிருத கிரந்தங்களும் அவதார புருஷர்களாற் செய்யப்படவில்லை. ஆதலால் அவற்ருலும் ஞான முண்டாகலாகாது.

4. "பாஷாகிரந்தம் அசுத்த" மென்று சொல்லும்பக்ஷத்தில், எப்படி இதன் 401 இலக்கத்திற் கூறியபடி பிராகிருத நியமத்தால் ஸம்ஸ்கிருத கிரந்தம் அசுத்தமாயிருக்கிறதோ, அப்படியே ஸம்ஸ்கிருதத்தின் நியமத்தாலும் பிராகிருத கிரந்தம் அசுத்தமா யிருக்கிறது. அசுத்தத்தன்மை இரண்டிலும் சமமாம்.

இவ்வாற்ருல் பாஷா கிரந்தத்தால் ஞான முண்டாகமாட்டாதென்று கொள்ளுதல் ஹடமாத்திரமாம். இந்த அபிப்பிராயத்தால் நாநக், தாதூஜீ, ராமதாஸஸ்வாமி, ஞானுபா, ஏகநாதஸ்வாமி முதலிய அநேக மகான்கள் பிராகிருத கிரந்தங்களைப் பரோபகாரார்த்தம் செய்திருக்கிருர்கள். அவை எங்ஙனம் கல்யாணத்தைச் செய்வனவோ, அங்ஙனமே இக்காலத்தைய பிரஹ்ம ஞானிகளும் பிராகிருத கிரந்தங்களைச் செய்திருக்கிருர்கள்; செய்கின்ருர்கள்; இனிச் செய்வார்கள்; அவை யாவும் ஸம்ஸ்கிருதாப்பியாச மின்றிய அதிகாரி புருஷர்களுக்கு ஞானவாயிலாகக் கல்யாணத்திற்கு ஏதுவாம்.

அப்பயதீக்ஷிதர் என்னும் பண்டிதர் சித்தாந்த லேசமென்னும் கிரந்தத்தில் பிழைபட்ட சொற்களின் உச்சரிப்பை நிஷேதிக்கும் சுருதியைப் பிரமாணமாகக் கொடுத்துப் பாஷா கிரந்தங்களை நிஷேதித்திருக்கின்றனர். அது தனது பாண்டித்தியத்தின் பிரபலத்தன்மையைக்கொண்டு செய்திருக்கின்றனர் ஏனெனின், ஸ்ரீ வேதவியாசரால் செய்யப்பட்ட சூதசம்ஹிதையில் "ஸம்ஸ்கிருத பிராகிருதங்களாலும் கத்திய பத்திய

## 100. ஜிஞ்ஞாசு பிரஹ்மஞானியாகிய ஆசாரியரது சேவைசெய்ய வேண்டுமெனல்.

எந்தப் பிரஹ்மவித்தின் வாக்கு வேதவசனத்துக்குச் சமானமா யிருக்கிறதோ, அந்தப் பிரஹ்மவித்தாகிய ஆசாரியரை ஜிஞ்ஞாசுவானவன் சேவிக்க வேண்டியது. ஏனெனின், சேவையினால் குருவானவர் பிரஸன்னராயின், அப்போது ஜிஞ்ஞாசுவானவன் தன் சொரூபத்தை யறிந்துகொள்ளுகிறான். இதனால் இது அறியத்தக்கதாம்:—குருசேவை ஈசுவரசேவையினும் அதிகமாம். ஏனெனின்,

1. ஈசுவரசேவை அதிருஷ்டபலத்திற்கு ஏதுவாம்.

2. குருசேவையோ அதிருஷ்டம் திருஷ்டமென்னும் இரண்டு பலங்களுக்கும் ஹேதுவாம்.

(1) எந்த வஸ்து தர்மாதர்மங்களின் உற்பத்தி வாயிலாகப் பலத்திற்கு ஹேதுவாயிருக்கின்றதோ, அது அதிருஷ்டபலத்திற்கு ஹேதுவெனப்படும்.

(2) எந்த வஸ்து தர்மாதர்மங்களின் உற்பத்தியின்றி நேரே பலத்திற்கு ஹேதுவா யிருக்கின்றதோ, அது திருஷ்ட பலத்திற்கு ஹேதுவெனப்படும்.

1. ஈசுரசேவை தர்மத்தின் உற்பத்திவாயிலாக அந்தக்கரணத்தின் சுத்தி வடிவ பலத்துக்கு ஹேதுவாகிறது. ஆதலால் ஈசுவரசேவை அதிருஷ்டபலத்துக்கு ஹேதுவாம்.

2. குருசேவை தர்மாபேக்ஷையின்றி ஆசாரியரது பிரசன்னத்தன்மையால் உபதேசரூப பலத்துக்கு ஹேதுவா யிருத்தலால் திருஷ்டபலத்துக்கு ஹேதுவாம். அன்றியும், குருசேவை தர்மத்தின் உற்பத்திவாயிலாக அந்தக்கரண சுத்திவடிவ பலத்துக்கு ஹேதுவா யிருத்தலால் அதிருஷ்ட பலத்துக்கும் ஹேதுவாகிறது.

இவ்வாற்றால் ஆசாரியசேவை ஈசுவரசேவையினும் உத்தமமாம். ஆதலால் ஜிஞ்ஞாசு எல்லாவிதத்தினாலும் பிரஹ்மவித்தான குருவைச் சேவிக்க வேண்டும்.

---

அக்ஷரங்களாலும், தேசபாஷையின் அக்ஷரங்களாலும் போதிப்பவர் எவரோ அவர் குருவெனப்படுகின்றார்." என்னும் பொருளுடைய வாக்கியங்களால் பிராகிருத பாஷையினாலும் போதமுண்டாகும் என்பது குறிப்பிக்கப்பட்டிருக்கின்றது. அன்றியும், முற்றும் பிராகிருத பாஷை உச்சரிக்கத் தகாததாமாயின், சகல லௌகிக விவகாரங்களும் சாஸ்திர வியாக்கியானமுதலிய வைதிகவிவகாரங்களும் லோபமாகும். அநாதிகாலத்தைய பாஷா வியவகாரத்தைமுற்றும் நிஷேதித்தல்பொருந்தாது. ஆதலால் பரிசேஷத்தால் (ஒழிபால்) முற்கூறிய சுருதிக்கு எஞ்ஞசம்பந்தமுள்ள வியவகாரத்தில் பிழைபட்ட சொற்களின் உச்சரிப்பின்நிஷேதம்-தாற்பரியார்த்தமாமென்பது சிஷ்டபுருஷர்களின் அபிப்பிராயம்.

## 101. ஆசாரியசேவைக் கிரமம்.

குரவன் கிடைத்தவளவில் தண்டம்போலச் * சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்து, அவரது பரிசுத்தமான பாதாரவிந்தங்களின் தூளியை உத்தமாங்கமாகிய சிரசில் தரிக்கவேண்டும்.

மிகத் தீவிர ஞானவிருப்பம் உண்டாகும்வண்ணம் குருவின் சமீபத்திலேயே யிருக்கவேண்டும். பந்தத்தை நீக்க விரும்புகிறவன் தன் சரீரம் மனது தனம் வாக்கு என்பவற்றைக் குருவுக் கர்ப்பணஞ் செய்யவேண்டும்.

## 102. சரீரார்ப்பணக் கிரமம். (1).

சரீரத்தினுல் குருவுக்கு வேண்டிய பலவித சேவைகளைச் செய்வதும், அவருடைய கட்டளைகளைக் கொஞ்சங்கூட மீறுமல் நடப்பதும் சரீர அர்ப்பணமாம்.

## 103. மன அர்ப்பணக் கிரமம். (2)

மனதில் ஸ்ரீராமனெனக் குருவை யெண்ணி அவரிடத்திற் † பிரேமை வைக்கவேண்டும். தன்னிடத்தில் அவருக்குச் சந்தோஷ முண்டாகும்படி நடக்கவேண்டும். சொப்பனத்திலும் அவரிடத்தில் தோஷதிருஷ்டி வரலாகாது. ‡ ஹரி, ஹரன், பிரஹ்மா, கங்கை, சூரியன் என்று அவரை அறியவேண்டும்.

---

* இரண்டு பாதங்கள் இரண்டு முழந்தாள்கள் இரண்டு கைகள் மார்பு தலை யென்னும் இவ் வெட்டு அங்கங்களும் தரையிற் படும்படி தண்டம்போல் தீர்க்க நமஸ்காரஞ் செய்வது சாஷ்டாங்க நமஸ்காரமாம்.

† பிரேமை யென்பது பக்தி; அதனை இராமனுகிய பரமேசுவரனுக்குச் சமானமாக வைத்தல்வேண்டும். அதாவது குருவைப் பரமேசுவர னென்றறிந்து பக்திசெய்யவேண்டும். இதில் இது சுருதிப்பிரமாணமாம்:—"யஸ்ய தேவே பரா பக்தி: யதா தேவே ததா குரௌ। தஸ்யைதே கதிதா ஹ்யர்தா: ப்ரகாசந்தே மஹாத்மந:॥" எவனுக்குத் தெய்வத்தினிடத்து மேலான பக்தி யிருக்கின்றதோ, தெய்வத்தினிடத்திற்போல குருவினிடத்து மிருக்கின்றதோ, அந்த மகாத்மாவிற்குச் சொல்லிய இந்தப் பிரஹ்மாத்ம ஐக்கியவடிவ வேதார்த்தங்கள் தாமே பிரகாசிக்கும். கனிஷ்டபத்தி ஒன்பது விதம்:—(1) சிரவணம், (2) கீர்த்தனம், (3) ஸ்மரணம், (4) பாதசேவனம், (5) அர்ச்சனம், (6) வந்தனம், (7) தாஸபாவம், (8) ஸகாபாவம், (9) ஆத்மநிவேதனம் அதாவது தேகாதிக ளெல்லாவற்றையும் சமர்ப்பித்தல் என்பனவாம்.

‡ ஈண்டு இது இரகசியமாம்:—

1. குரு சிஷ்யனிடத்தில் அன்புட னிருக்கும்போது அவரை ஹரி (விஷ்ணு) ரூபமென்றறிக.
2. கோபிக்கும்போது அவரை ஹர சிவ ரூப மென்றறிக.
3. ராஜஸீ வியவகாரத்தில் தத்பரராகும்போது பிரஹ்மா வென்றறிக.
4. சாந்தமா யிருக்கும்போது கங்கைவடிவ மென்றறிக.
5. வசனமாகிய கிரணங்களால் பிரம சந்தேகங்களுடன் கூடிய அஞ்ஞானத்தை நிவர்த்திக்கும்போது சூரியரூபமென் றறியவேண்டும்.

இவ்வாறு பிரஹ்மவேத்தாவான குருவினிடத்தில் சிஷ்யன் எப்போதும் ஈசுவர பாவத்தை வைக்கவேண்டியது. சொப்பனத்திலும் தோஷ திருஷ்டியைக் கொண்டுவரலாகாது. ஞானத்திற்குமுன் ஞானத்தை அடைவதற்காகக் குருவைச் சேவிக்கவேண்டியது. ஞானமடைந்தபின் செய்ந்நன்றி மறத்தலென்னும் தோஷத்தை நிவர்த்திக்கக் குருவைச் சேவிக்கவேண்டியது.

க்ஷேமத்தை விரும்பியவன் குருவின் வடிவத்தை இருதயத்திற் கொண்டு தியானிக்கவேண்டும். இது மனதின் அர்ப்பணமாம்.

## 104. தன அர்ப்பணக் கிரமம். (3)

1. பத்தினி, புத்திரன், பூமி, பசு, தாசி, தாசன், திரவியம், கிரகம், தானியம் என்பவற்றைத் தன மென்பர். இவ் வெல்லாவற்றையும் விட்டுச் சந்நியாசியாகிய குருவைச் சரணாகதி அடைவது தன அர்ப்பணமாம். ஏனெனின், குரு சந்நியாசியாயிருத்தலால் அவர் ஒன்றையும் அங்கீகரியார். ஆனால் அவரை யடைவதற்காகத் தனத்தை விட்டிருக்கின்றான். ஆதலால் இவ்வாறு விடுதலும் குருவிற்கே அர்ப்பண மெனப்படுகிறது.

குருவானவர் கிரகஸ்தாச்சிரமத்திலிருந்தால் அவருக்கே யெல்லாவற்றையும் அர்ப்பணஞ் செய்யவேண்டியது. இது வேறுவகைத் தனார்ப்பணமாம்.

இதில் பிரஹ்ம வித்தையின் ஆசாரியர் கிரகஸ்த ராகாரெனின், அச்சங்கை பொருந்தாது. ஏனெனின் யாஞ்ஞவல்கியர், உத்தாலகர் முதலிய பிரஹ்மவித்தியா ஆசாரியர்கள் கிரகஸ்தர்க ளென்றே வேதத்திற் கேட்கப்படுகின்றது. ஆதலால் கிரகஸ்தரும் குருவாதல் கூடும்.

## 105. வாக்கின் அர்ப்பணக்கிரமம். (4)

குருவின் குணங்களைப் புகழ்ந்து சொல்லுதலோடு தோஷத்தை ஒருபோதும் சொல்லாதிருத்தலே வாக்கின் அர்ப்பணமாம்.

## 106. குருவை யடைந்தபின் சிஷ்யன் நடந்து கொள்ள வேண்டிய விதம். 106-108.

புருஷன் தன்க்ஷேமத்தை விரும்பின், முன் சொன்னபடி சரீராதிகளை யர்ப்பணஞ்செய்து, குருவிருக்கு மிடத்திலாவது அல்லது சமீபத்திலாவது வெகுகாலம் வாசஞ்செய்யவேண்டும். தான் * பிக்ஷையினால் ஜீவிக்கவேண்டும்.

107. பிக்ஷை யன்னம் வாங்கிவந்தால் அதனைத் தானாகப் புசியாமல் தேசிகர் முன் வைத்துவிடவேண்டும். பின்னர்த் தன்பொருட்டுக் குருவினிடம் போஜனம் கேட்கலாகாது. ஒருதினத்தில் மறுமுறை ஊருக்குள் பிக்ஷைக்குப் போகலாகாது. குருவானவர் தயைசெய்து கொடுத்தால் சாப்பிடவேண்டியது. சிஷ்யனுடைய பக்தியைப் பரீக்ஷித்தறியும்பொருட்டுக் குரு கொடுக்காவிட்டால் உபவாசமாயிருந்து வழக்கம்போல் மறுநாள் பிக்ஷைக்குப் போகவேண்டியது. மறுபடியும் குருவின் முன் வைக்கவேண்டியது. இதில் யாதொரு மனோவருத்தத்தையு மடையலாகாது.

---

* இந்தக்கிரமம் பிரஹ்மசாரி அல்லது சந்நியாசியாகிய சிஷ்யனுக்காம்; கிரகஸ்தனுக்கன்று.

**108.** இப்படியிருந்துகொண்டு வருங்காலத்தில் குருவின் சமயம் பார்த்து, மலர்ந்த முகத்தோடு அவர் தன்னை நோக்குங்காலத்தில் இரு கரங்களையும் கூப்பி அவரைத் துதிசெய்து வணக்கத்துடன் "சுவாமி அடியேன் ஒன்று கேட்க விரும்புகிறேன்" என்று தெரிவித்துக் கொள்ளவேண்டியது. அப்போது குரு உத்திரவு கொடுத்தால் கேட்கவேண்டியது.

ஒருகால் ஜன்மாந்தரத்தின் உத்தம கர்மத்தினால் குருவானவர் கிருபை செய்து சிஷ்யனுக்குத் தனுதியர்ப்பணமின்றியே உபதேசஞ் செய்து விடுவாராயின், அந்த உத்தம அதிகாரிக்குக் கல்யாண முண்டாய்விடும். ஏனெனின் குரு சேவைக்கு இரண்டு பலனுண்டு. ஒன்று குருவின் பிரசன்னத் தன்மை; மற்றொன்று அந்தக்கரண சுத்தி. அவ்விரண்டும் அவனுக்குச் சித்தித்திருக்கின்றன.

எவன் மனோ வாக்குக் காய தனங்களை யர்ப்பணஞ் செய்து மனதைச் செலுத்தி குருவைச் சேவை செய்கிறானோ, அவன் தான் சகலவடிவமுமான பிரஹ்மரூபமாய்விடுகிறான். தாதுவானவர் எப்போதும் அவனுக்குச் சகாயம் செய்கிறார்.

குரு பக்தி பயன்களின் றன்மை நிரூபண மென்னும்

மூன்றாவது தரங்கம்

முற்றிற்று.



ஓம்.

ஸ்ரீ கணேசாயநமஃ.

# ஸ்ரீ விசாரசாகரம்.

## நான்காவது தரங்கம்.

### உத்தமாதிகாரி உபதேச நிரூபணம்.

இப்போது குரு சிஷ்ய வினாவிடையாக ஒரு * புதிய கதையைச் சொல்லுகிறேன். அதைக் கேட்பதினால் ஜிஞ்ஞாசுவானவன் ஆத்மவிசாரணையிற் சமர்த்தனாகின்றான்:—

### 109. சுபசந்ததிராஜா அவருடைய தத்துவதிருஷ்டி அதிருஷ்டி தர்க்கதிருஷ்டி யென்னும் மூன்று புத்திரர் என்பவர்களது கதை. 109-111.

சுபசந்ததி யென்னு மோரரசன் பூமி சுவர்க்க பாதாள மென்னும் மூன்று லோகங்களையும் ஆண்டுகொண்டிருந்தான். அவனுக்கு மூன்று குமாரர்க ளிருந்தார்கள். அவர்கள் தத்துவதிருஷ்டி, அதிருஷ்டி, தர்க்கதிருஷ்டி யெனப் பெயரிடப்பட்டிருந்தார்கள். † அவர்கள் முறையே உத்தம மத்திம கனிஷ்டராவர். அவர்கள் நான்கு சாஸ்திரங்களுங் கற்று மூவுலகங்களிலும் பிரசித்தி பெற்றிருந்தார்கள். சுபசந்ததி யரசன் தன் பாலியத்தை விளையாட்டிலும் யௌவனத்தை ஸ்திரீலோலத்திலும் செலுத்தி அநேக போகங்களை யனுபவித்துக்கொண்டு தன்னுடைய புஜபல பராக்கிரமத்தால் மூவுலகங்களையும் நீதியுடன் ஆண்டுவந்தான்.

110. அவனுக்கு ஒருகாலத்தில் தன் மனதில் பூர்வபுண்ணிய வலியால் அகஸ்மாத்தாய் ஆத்மா உற்பத்திரகிதமும் சுகசொரூபமுமாம்; அதற்கு வேறானவெல்லாம் துக்கரூபமாமென்னும் விவேகமுண்டாயிற்று. உண்டாகவே, யான் ஆத்மவிசாரணை செய்யும்பொருட்டு ராஜ்யத்தை விட்டுவிடுவேனாக, சுவர்க்கமத்திய பாதாளமென்னும் மூன்று உலகத்தையும் மூன்று புத்திரர்களும் அரசாட்சி செய்க என்று விசாரித்து, மந்திரியைக்கொண்டு அவர்களைத் தன் சமீபத்தில் வரவழைத்து, இரகசியமாய்த் தனக்குண்டான வைராக்கியத்தை

* அநாதி வேதத்திற் சொல்லிய ஜநகர் யாஞ்ஞவல்கியர் முதலியோர் கதையைப் போல இந்தக் குருசிஷ்ய ஸம்வாதரூப கதை சொல்லப்படுகிறது. இது புராணாதிகளிற் சொல்லப்படவில்லை. இது ஸ்வபுத்தியால் கற்பிக்கப்பட்டதாகலின் "புதிய" என்றார்.

† இம்மூன்று குமாரர்களும் முறையே 4-வது தரங்கத்தின் உத்தமாதிகாரியாயும், 5-வது தரங்கத்தின் மத்தியமாதிகாரியாயும், 6-வது தரங்கத்தின் கனிஷ்டாதிகாரியாயு மிருக்கிறார்கள்.

அவர்களுடன் சொல்லி ராஜ்யத்தை ஒப்புக்கொள்ளும்படி கட்டளையிட்டார். ஒருவனுக்குப் பாதாளலோகத்தையும் ஒருவனுக்குச் சுவர்க்கலோகத்தையும் மற்றொருவனுக்குப் பூலோகத்தையுங் கொடுத்தார். பூலோகத்தில், எங்கு * மரித்தால் சிவனதுபதேசத்தைக் கேட்டு அநாயாசமாக மோக்ஷமடையப் படுகிறதோ, அப்படிப்பட்ட சர்வாந்தரியாமியாகிய பரமசிவனால் வசிக்கப் படுவதும், உத்தரவாகினி யென்னும் கீர்த்தி பெற்று விளங்கும் கங்கைநதிக் கரையிலிருப்பதுமான காசிப்பட்டணத்தில் இருந்துகொண்டு ராச்சியபாரம் பண்ணும்படி ஆஞ்ஞாபித்தார். ராஜ்யத்தைப் பாகித்துக் கொடுக்காவிட்டால் சகோதரர்களுக்கு இராஜகாரியத்தில் துன்பம் நேரிடுமெனக் கருதி இவ்விதமாய்ப் பிரித்துக்கொடுத்தார். மறுபடியும் குமாரரைப் பார்த்து இந்த அபார சமுசாரம் துக்கரூபமாயிருக்கிறது. பாமரர்கள் இதைச் சுகமெனக் கருதி தனத்தையே மேலாகப் பாவித்து ஆத்மவிசாரஞ் செய்யாம லிருக்கிறார்கள். இப்படிப்பட்ட ஜனங்களின் சகவாசத்தை விட்டு நிஜமான சுகத்தையடைய விரும்புகிறேன் என்று சொன்னார்.

**111.** பிதாவின் இவ்விதமான வார்த்தைகளைக் கேட்டு நல்ல யுக்தி புத்திகளுடன் கூடிய மூன்று சகோதரர்களுங் கூடி யேகாந்தத்திருந்து யோசித்தார்கள்; அதாவது நம்முடைய பிதாவானவர் துக்கமான சமுசார சாகரத்தில் நம்மைத் தள்ளிவிட்டுத் தான்மாத்திரம் பிரஹ்மானந்தமடைய இச்சிக்கிறார். இதனால் ஆத்மவிசாரத்தில் ஆசக்தியுள்ளவர்கள் அபாரமான துக்கரூப ராஜ்யத்தை விட விரும்புகிறார்கள்.

## 112. மூன்று புத்திரர்களும் வீட்டைவிட்டுப் புறப்பட்டுக் குருவைச் சந்தித்தல்.

ஆதலால் நாமும் இந்தத் துக்கரூபமான ராஜ்யத்தை விட்டுவிடவேண்டுமென்று தீர்மானித்து மோக்ஷ இச்சை யுள்ளவர்களாய், சுபசந்ததி (நல்ல சந்ததியை யுடையவன்) என்னும் பிதாவின்பெயரைக் காரணப்பெயராக்கிச் சற்குருவைத் தேட அரண்மனையை விட்டுப் புறப்பட்டார்கள். புறப்பட்டு அநேக தேசங்கள் போய்த் தேடித் தேடிக் கடைசியாய்க் கங்காதீரத்துக்கு வந்து, அவ்விடத்தில் ஓர் ஏகாந்தமான ஸ்தலத்தில் மரம், கிளை, தழைகளால் நெருங்கிய † வனத்தில் ஓாலமரத்தடியில் ‡ சின்முத்திரை தரித்து, ஜீவப்

* காசியில் மரணமடைந்தால் மோக்ஷம் கிடைக்கும் என்னும் சுருதியின் அபிப்பிராயம் இவ்விடத்தில் காண்பிக்கப்பட் டிருக்கிறது.

† 1. மரத்தின் நெருக்கம் வனத்தின் சிறப்பு.
 2. கிளையின் நெருக்கம் மரத்தின் சிறப்பு.
 3. தழைகளின் நெருக்கம் கிளையின் சிறப்பு.

இந்தவனம் மூவகை நெருக்கத்தோடுங் கூடியிருத்தலால் மிக்க அழகுடையதாம்.

‡ அங்குஷ்டத்தை (பெருவிரலை)யும் தர்ஜனியை (அதற்கடுத்த விரலையும்) சேர்த்தலால் பத்திராமுத்திரை யுண்டாகின்றது. இதனை லோபாமுத்திரை தர்க்கமுத்திரை ஞானமுத்திரை (சின்முத்திரை) என்பர்.

பிரஹ்ம ஐக்கியத்தை ‡ நிர்த்தோஷர்களாயும் ஏகாக்கிர சித்தர்களாயும் உள்ள அநேக சிஷ்யர்களுக்கு உபதேசஞ்செய்யும் திரிகுணாதிதரான குருவைக் கண்டார்கள். அப்போது கைலாசத்தில் ஸனகாதிகளுக் குபதேசித்த பரம சிவனைப்போல அவரைப் பாவித்துச் சாஷ்டாங்கமாய் நமஸ்காரம் செய்து, மோக்ஷ இச்சையுடன் ** விதிப்படி சரணடைந்து ஆறுமாதம் அவரைச் சேவை செய்தார்கள். பிறகு குருவானவர் பிரசன்னராகி அமிர்த வசனத்துடன் †† எக்காரணமாய் வந்திருக்கிறீர்கள்? நீங்கள் யார்? எங்கிருந்து வந்தீர்கள்? என்று கேட்டார். அப்போது தத்துவதிருஷ்டியானவன் தம்பிமார்களது குறிப்பை உள்ளத்தில் தெரிந்துகொண்டு கைகூப்பி நின்று சொல்லுகிறான்.

## 113. தத்துவ திருஷ்டியினால் பிரசினே செய்வதற்குக் குருவின் ஆஞ்ஞையைக் கேட்டலும் குரு ஆஞ்ஞை கொடுத்தலும்.

பகவானே! நாங்கள் மூன்றுபேரும் பிராதாக்கள்; சுபசந்ததி யென்பவரின் புத்திரர்கள். தீனரும் நவீனரும் அறியாதவர்களுமாகிய நாங்கள் இருதயத்தில் அநேக அபிப்பிராயங்களே அறியவிரும்புகிறோம். (சொரூபஞானத்தை யடையவிரும்புகிறோம்.) தாங்கள் கிருபைக்கடலாயும் கற்பகதருவிற்குச் சமானமாயும் விளங்குகிறீர்கள். நாங்கள் துக்காதினர்களா யிருக்கிறோம். உத்திரவு கொடுத்தால் எங்கள் கோரிக்கைகளைத் தெரியப்படுத்திக் கொள்ளுகிறோம்.

### ஸ்ரீ குரு சொல்லுகின்றார்.

சிஷ்யனே, என்வார்த்தையைக்கேள். நீ எதனைக் கேட்கின்றாயோ அதனைச் சொல்லுகிறேன். அதனால் உன்னிருதயத்திலுள்ள சந்தேகங்கள் நிவிருத்தியாகிப் பரமானந்தமடைவாய்.

---

‡ 1. திருட்டு, வியபிசாரம், ஜீவஹிம்சை யென்னும் மூன்றும் சரீரதோஷங்களாம்.

2. பொய்ம்மொழிதல், பிறர் நிந்தை, கடுஞ்சொல், வீண்பேச்சு என்னும் நான்கும் வாக்கின் தோஷங்களாம்.

3. இச்சை, சிந்தை, புத்தியின் மந்தத்தன்மை யென்னும் மூன்றும் மனதின் தோஷங்களாம்.

இவை நிருசிஹ்மதாபநீய உபநிஷத்திற் சொல்லப்பட்ட பத்துத் தோஷங்களாம்.

** மூன்றாவது தாங்கத்தில் சொல்லியபடி.

†† 1. நீங்கள் மூவரும் எக்காரணமாக வந்திருக்கிறீர்கள் என்பது முதல் வினு.

2. நீங்கள் உங்களுள் என்ன ஆகின்றீர்களென்பது நீங்கள் யாரென்னும் இரண்டாவது வினு.

3. எங்கிருந்து வந்தீர்களென்பது நீங்கள் யாருடைய புத்திரர்களென்னும் மூன்றாவது வினு.

தத்துவதிருஷ்டியின் மூன்று பிரசினேகளில் இரண்டாவது மூன்றாவது வினுக்களுக்கு முதலிலும் முதல் வினுவிற்குப் பின்னும் விடை கொடுக்கப்பட்டது.

## 114. தத்துவதிருஷ்டியின் மோக்ஷ இச்சையைக் குறிப்பிக்கும் விண்ணப்பம்.

குருவின் கருணையைக்கண்டு சிஷ்யன் இருதயத்தி லானந்தங் கொண்டு, தன் காரியம் சித்திபாய்விட்டதாக வெண்ணி வணக்கத்துடன் கேட்கத் தொடங்கினன்.

### தத்துவதிருஷ்டி சொல்லுகின்றன்.

பகவானே, தாங்கள் கிருபாநிதியாகவும் சதாசிவனுக்குச் சமானமான சர்வஞ்ஞராயுமிருக்கிறீர்கள். அஞ்ஞானமதியுடைய நாங்கள் ஜனனமரணாதி துக்கரூப சமுசாரத்திற்குப் பயப்படுகிறோம். அதன் நிவிருத்திக்கும் பரமாநந்தப் பிராப்திக்கும் உபாயத்தைச் சொல்லி யருளல்வேண்டும். அநேக சகாம வுபாசனைகளையும் கர்மங்களையுஞ்செய்தும் நாங்கள் இச்சிக்கும் பலனை யடைய வில்லை. ஆனல் மாருன சமுசாரம் அவற்ருல் விருத்தியாகிறது. ஆதலால் எந்த வேறு உபாயத்தால் நாங்கள் கிருதார்த்தர்களாவோமோ அவ்வுபாயத்தைச் சொல்லியருள்க.

## 115. குருவின் உத்தரம். (மோக்ஷவிச்சை பிராந்திஜந்நிய மென்பதனேடு மகாவாக்கியத்தின் உபதேசம்.)

துக்கநிவிருத்தி பரமாநந்தப்பிராப்தியினை மோக்ஷமென்பர். சிஷ்யனுடைய இருதயத்தில் மோக்ஷ இச்சை யிருப்பதைக்கண்டு அதற்குச் சாதனமான வேதத்திற் கூறியுள்ள ஞானத்தை யுபதேசிக்கிருர்.

ஞானத்தின் சொரூபம் அநேக சாஸ்திரங்களில் அநேகவிதமாய் வர்ணிக்கப்பட்டிருந்தபோதிலும், ஜீவப்பிரஹ்மபேதத்தை நிவர்த்திக்கும் ஞானமே மோக்ஷசாதனமென வேதத்திற் சொல்லியிருப்பதால் அந்த ஞானத்தையே உபதேசிக்கிருர்.

சிஷ்யனே, பரமாநந்தப் பிராப்தியிலும் ஜனன மரணாதி துக்கரூப சமுசார நிவிருத்தியிலும் உனக்குண்டாயிருக்கும் இச்சை பிராந்தியினுலுண்டானதென்று அறி. ஏனெனின்,

1. இயற்கையிலேயே பரமானந்தசொரூபமா யிருக்கிருய். ஆதலால் அதனையடைய நீ இச்சிப்பது சரியன்று. எது கிடைக்கவில்லையோ அதனை யடைய இச்சிக்கக்கூடும். உன்னுடைய சொரூபமோ எப்போதும் பிராப்தமாகவே யிருக்கிறது. அதை யடையவேண்டுமென்று உண்டாகும் இச்சை பிராந்தியின்றி யுண்டாகிறதில்லை.

2. ஜனனமரணாதி சமுசாரம் எப்போதாவது உனக்கு இருக்கும்பக்ஷத்தில் அதை நிவர்த்திக்க இச்சையுண்டாகலாம். ஆனல் அந்தச் சமுசாரம் சிறிதும் உன்னிடத்தில் இல்லை. ஆனதால் உண்டாகாத துக்கத்தை நிவர்த்திக்க உண்டாகுமிச்சை பிராந்தியின்றி யுண்டாகாது.

சிஷ்யனே ஜனனமரணமற்ற சேதனரூபப் பிரஹ்மமே நீ. ஆதலால் உன் இருதயத்தில் ஜன்மாதிதுக்கத்தை மதிக்கவேண்டாம்.

## 116. பிரசினம்:—எனது ஆத்மா ஆநந்தரூபமாகுமாயின் விஷயசம்பந்தத்தினால் ஆநந்தத்தின் பானம் ஆத்மாவில் உண்டாகலாகாதெனல்.

### தத்துவதிருஷ்டி கேட்கலாயினன்.

பகவானே, என் ஆத்மா ஆநந்தரூபமாயின் விஷயசம்பந்தத்தால் ஆநந்தம் ஆத்மாவினிடத்தில் தோற்றலாகாது. ஆதலால் ஆத்மா ஆநந்தரூபமன்று. ஆனால் விஷய சம்பந்தத்தால் ஆத்மாவினிடத்தில் ஆநந்தமுண்டாகிறது.

## 117. உத்தரம்:—ஆத்மவிமுகனுக்கு அந்தர்முகவிருத்தியில் ஆநந்தம் விளங்குதலும், விஷயத்தில் ஆநந்தம் இல்லையெனலும்.

### ஸ்ரீ குரு சொல்லுகின்றார்.

சிஷ்யனே, எவன் புத்தி ஆத்மசொரூபத்தை யறியவில்லையோ அவனுக்கு விஷயத்தி லிச்சை யுண்டாகிறது. இவ்விடத்தில் போகசாதனமே விஷயமெனப்படுகின்றது. ஆதலால் தனபுத்திராதிகளையும் கொள்ளவேண்டும்.

1. அவ்விஷய விச்சையினால் புத்தி சஞ்சலமா யிருக்கும். அச்சஞ்சல புத்தியில் ஆத்மசொரூபாநந்தத்தின் பிரதிபிம்பம் விளங்குகிறதில்லை.

2. இச்சித்தவிஷயம் கிடைத்தவுடன் க்ஷணமாத்திரம் புருஷனது புத்தி ஸ்திரப்பட்டு அதன் விருத்தி அந்தர்முகமாகின்றது. அந்த அந்தர்முக விருத்தியில் ஆத்மாவின் சொரூபாநந்தம் பிரதிபிம்பிக்கிறது.

அந்த ஆத்ம சொரூப ஆநந்தத்தின் பிரதிபிம்பத்தை யநுபவிக்கிற புருஷனுக்கு "எனக்கு விஷயத்தா லாநந்த முண்டாயிற்"றென்று * பிராந்தி யுண்டாகிறது. ஆனால் விஷயத்தி லாநந்தமில்லை.

1. ஒருகால் விஷயத்தி லாநந்த முண்டாகுமாயின், ஒரு விஷயத்தி லாநந்த மடைந்தவனுக்கு மற்றொரு விஷயத்தில் இச்சை யுண்டாகும்போதும், முந்திய ஆநந்தம் இருந்துகொண்டே யிருக்கவேண்டும். ஆனால் அநுபவத்தில் அப்படியில்லை. நம்முடைய கிரமப்படி இரண்டாவது விஷயத்தி னிச்சையால் புத்தி சஞ்சலப்படுவதால் அச்சஞ்சல புத்தியில் சொரூபாநந்தத்தின் பிரதிபிம்பம் விளங்குகிறதில்லை.

---

* ஆத்மசொரூப ஆநந்தத்தின் பிரதிபிம்பத்தை அநுபவித்துப் புருஷனுக்கு விஷயத்தில் ஆநந்தத்தின் பிராந்தி யுண்டாகின்றது. அது, நாய்க்குப் பசையற்ற எலும்பைக் கடித்துத் தனது தாடையிலிருந்து வரும் இரக்தத்தைச் சுவைக்க அவ்வெலும்பிலிருந்து வருவதாகப் பிராந்தியுண்டாவதுபோலவாம்.

2. விஷயத்திலேயே ஆநந்தம் உண்டாகுமாயின், ஒருவனுடைய பிரியமான புத்திரன் அல்லது மிகுந்த பிரியமுள்ள மற்றொருவன் வெகுகாலம் தேசாந்தரம் போயிருந்து வந்தவுடன் அவனைப் பார்த்தவுடனே முதலில் உண்டாகும் ஆநந்தம் எதுவோ அது மறுபடியும் எப்போதும் இருப்பதில்லை. அது மாறாமல் நீடித்திருக்கவேண்டும். ஏனெனின் அந்த ஆநந்தத்துக்குக் காரணமான புருஷன் சமீபத்திலேயே இருக்கிறான். ஆனால் அநுபவத்தில் அப்படி நீடித்திருப்பதில்லை. நம்முடைய கிரமமாகவோ முதலிற்றான் ஆநந்தம் பொருந்துகின்றது; எப்போதும் சம்பவிக்கிறதில்லை. ஏனெனின் ஒருமுறை புருஷனைக் கண்டவுடன் விருத்தி ஸ்திரப்படுகிறது. மறுபடியும் விருத்தி வேறுவிஷயத்திற் சென்று சஞ்சலப்படுவதால் முந்திய ஆநந்தம் விளங்குகிறதில்லை. ஆதலால் பதார்த்தத்திலாநந்தம் இல்லை.

3. அல்லது விஷயத்தில் ஆநந்தமுளதாயின் சமாதியி லுண்டாகிற * யோகாநந்தத்தின் விளக்கமுண்டாகலாகாது. ஏனெனின், சமாதியில் ஓர் விஷயசம்பந்தமு மில்லை.

4. † அல்லது விஷயத்திலேயே ஆநந்த முளதாயின் சுழுத்தியி லாநந்தத்தின் பானமுண்டாகலாகாது. ஏனெனின் சுழுத்தியிலும் ஒருவிஷயத்தின் சம்பந்தமுமில்லை. ஆதலால் விஷயத்தி லாநந்தமில்லை. ஆனால் ஆத்மசொரூபாநந்தம் முழுவதும் விளங்குகிறது. இதனாற்றான் "ஆத்மசொரூபாநந்தத்தைக்கொண்டு யாவரும் ஆநந்தரூப முடையவராகின்றனர்" என்று வேதத்திற் சொல்லப்பட்டிருக்கிறது.

சிஷ்யனே, ஆநந்த சொரூபமே ஆத்மாவென்றறி. விஷய சம்பந்தத்தினால் அது பிரகடமாகிறது. இது இணையில்லாத சித்தாந்தம் அதனை யான் உனக்கு இப்போது சொன்னேன். இதில் உனக்குச் சந்தேகம் உளதாயின் அதை மனதில் வைக்காமல் எனக்குத் தெரிவி. நான் அதற்குத்தரம் சொல்லுகிறேன்.

**118. பிரசினம்:—ஞானிக்கு விஷயத்தின் இச்சையும் அதன் சம்பந்தத்தால் முன்கிரமப்படி சுகத்தின் விளக்கமு முண்டாகிறதா? இல்லையா? எனவும். தத்துவதிருஷ்டி கேட்கலாயினன்.**

பகவானே, தாங்கள் முன் விஷயசம்பந்தத்தால் ஆத்மாநந்தத்தினது ஞானத்தின் கிரமத்தை முன் சொன்னீர்கள். அது அஞ்ஞானிக்குச் சொன்னீர்கள்; ஞானிக்குச் சொல்லவில்லை. ஏனெனின் எவன் புத்தி ஆத்ம சொரூபத்திலும் விமுகமாயிருக்கின்றதோ, அவனைப்பற்றி நீங்கள் பிரஸ்தாபித்திருக்

* சித்தத்தின் ஏகாக்கிரத்தன்மையாகிய யோகத்தினால் வெளிப்படக்கூடிய ஆநந்தம்.

† சமாதி திருஷ்டாந்தம் சர்வலோகத்தின் அநுபவத்திற்கு விஷயமன்றென்னும் அருசி யுண்டாதலால் வேறு திருஷ்டாந்தம் கூறுகின்றார்

கிறீர்கள். இப்படிப்பட்டவன் அஞ்ஞானியே யல்லாமல் ஞானியல்லன். ஆதலால் தாம் இப்போது ஞானிக்கு விஷயத்தில் இச்சையும் விஷயசம்பந்தத்தால் முற்கூறியபடி சுகத்தின் விளக்கமும் உண்டாகின்றனவா? இல்லையா? வென்பதைச் சொல்லியருள்க.

### 119. உத்தரம்:—இருவகை ஆத்மவிமுகர் உளரெனல். விஷயாநந்தம் சொரூபாநந்தத்தினும் வேறன்றெனல். ஸ்ரீ குரு சொல்லலுற்றார்:—

சிஷ்யனே, நீ மனதையும் காதையும் சாவதானமாக்கிக்கேள்.

முன்னே நாம் எந்த ஆத்மவிமுகனைச் சொன்னோமோ, அவன் அஞ்ஞானியே ஆகான். ஆனால் ஞானியினுடைய புத்தியும் எப்போது வியவகாரத்தில் வந்து விடுகிறதோ, அப்போது அவன் தத்துவத்தை * மறந்து விடுகிறான். அந்தக்காலத்தில் ஞானியும் ஆத்மவிமுகனே யாகின்றான். ஞானியின் புத்தி எப்போதும் ஆத்மாகாரமாயிருக்குமாயின், அவனுக்குப் போஜனாதி வியவகாரஞ் சம்பவியாது. ஆதலால், ஆத்மவிமுக புத்தி இருவருக்கும் பொருந்துகின்றது.

அஞ்ஞானியின் புத்தியோ எப்போதும் ஆத்மவிமுகமா யிருக்கிறது. ஞானியின் புத்தி ஆத்மவிமுக மாகும்போது, விஷயத்தி லிச்சை, விஷயசம்பந்தத்தால் ஆத்மசொரூபாநந்தத்தின் விளக்கம் என்பவை அஞ்ஞானிக்குண்டாவதுபோல் ஞானிக்கு முண்டாகின்றன. ஆனால் இவ்வளவு பேதமாம்:—

---

* ஜாக்கிரதாகாரவிருத்தி யுண்டாகும்போது ஸ்வப்பனாகார விருத்தி யுண்டாகிறதில்லை; ஸ்வப்பனாகாரவிருத்தி யுண்டாகும்போது ஜாக்கிரதாகாரவிருத்தி யுண்டாகிறதில்லை. அதுபோல ஞானியின் புத்தியும் ஆத்மாகார மாகும்போது அநாத்மாகார மாகிறதில்லை; அநாத்மாகார மாகும்போது ஆத்மாகார மாகிறதில்லை.

ஒரே அந்தக்கரணத்தில் ஒரேகாலத்தில் பின்னவிஷயவடிவ ஸாமானிய விசேஷரூப இரண்டு விருத்திக ளுண்டானாலும், விசேஷரூப இரண்டு விருத்திக ளுண்டாகா. ஆதலால் வேறுவியவகாரத்தில் பொருந்தியுள்ள புருஷன் பெட்டியில் கையை வைத்துக் கொண்டே பணத்தை மறந்துவிடுகிறான்; மீண்டும் வியவகாரம்முடியவே அப்பணத்தின் நினைவு வருகிறது. அதுபோல ஞானியின் புத்தியும் வியவகாரத்தில் விசேஷமாய்ப் பொருந்தி யுள்ளபோது, தத்துவத்தை மறந்து வியவகாரம் முடிந்தவுடன் தத்துவத்தின் நினைவைக் கொள்ளுகிறது.

இதனாற்றான் பகவான் பாஷியகாரர் பிரஹ்மசூத்திர பாஷியத்தில் முதல் அத்தியாயத்தின் முதல் பாதத்தில் "வியவகாரத்தில் ஞானியும் பசுவென்னும் அவிவேகிகளைப்போல வியவகரிக்கிறான்" என்று சொல்லியிருக்கிறார். இதனால் மேல் எழுதியுள்ள பொருள் பொருத்தமுடையதாம்.

1. விஷய சம்பந்தத்தால் விளங்கு மாநந்தம் தன் சொரூபாநந்தத்திற்கு வேறன்று? ஆனால் அதன் ஆபாசமே என்று ஞானி அறிகிறான். இதனால் விஷயபோகத்திலும் ஞானிக்குச் * சமாதி சித்திக்கிறது.

2. அஞ்ஞானியோ தன் சொரூபமே ஆநந்தமென்றறிகிறதில்லை.

3. உண்மையில் இருவருடைய சொரூபமும் ஆநந்தமாம். விஷயத்தில் கேவலம் அஞ்ஞானிக்குப் பிராந்தி யுண்டாகிறது.

## 120. ஜன்மாதி துக்கங்கள் எவற்றின்கண் உள? எனல்.

## சிஷ்யன் கேட்கலாயினான்:—

சுவாமின், "நீ (360-363) பரமாநந்த சொரூப" மென்று தாங்கள் முன் சொன்னதை நான் நன்றாக அறிந்தேன்.

"ஜனன மரணாதி சமுசாரரூப துக்கம் என்னிடத்தி லில்லாமையால் அதன் நிவிருத்தி பொருந்தா" தென்று தாங்கள் சொன்ன விஷயத்தில் ஒரு சந்தேகமுளது:—ஜன்மாதி துக்கம் என்னிடத்தில்லையாயின், எனக்கு வேறாகிய எதனை இச்சம்சாரம் ஆசிரயித்துக்கொண்டிருக்கிறதோ, அதனைத் தாங்கள் தயைசெய்து காட்டவேண்டும். அதைத் தெரிந்துகொள்வதினால்

* சொல்லப்பட்ட இந்தச் சமாதி எதுவோ அது, தெரிந்து கூடிய திருடனைப்போல விஷயத்தில் தோஷதிருஷ்டிவடிவ விவேகத்தின் விழிப்பினாலும், மித்தியாபுத்திவடிவ திடவைராக்கியமிருத்தலினாலும், பத்தமுக்த மகிபாலனைப்போலசொற்பபோகத்தினால் சந்தோஷத்தினாலும், கொலை செய்தற்குரிய புருஷனது போகத்தைப்போல பரிணாமத்தில் போகம் துக்கத்திற்கு ஏதுவாமென்பதின் ஞானமுண்டாதலால் திடராகமின்மையினாலும், விஷயாநந்தம் சொரூபாநந்தத்தினும் வேறாகாமையினது விளக்கத்தினாலும் (ஆத்மாநந்தத்தின் பிரதிபிம்பத்திற்கு வேறாக விஷயத்தில் முற்றும் ஆநந்தமின்மையினது ஞானத்தினாலும்) சொரூபத்தின் அநுசந்தான வடிவ சமாதியினது குணத்தின் சமத்தன்மையினால் "இந்தப் புருஷன் சிங்கம்" என்பதைப்போல கௌணமாம் (உபசாரமாத்திரமாம்).

அல்லது:—எங்ஙனம்:—பாலர்கள் தமது பாதத்தின் விரலைச் சுவைக்கின்றார்கள். பல்லின்றிய விருத்தபுருஷன் தனது உதடுமாத்திரத்தைச் சுவைக்கின்றான். அவர்கள் அந்நியவிஷயபோகத்திற்குப் பாகமுடையவர்களல்லர். அங்ஙனமே,ஞானியும் சாஸ்திரத்திற்கு விரோதமின்றிய விஷயபோகத்தைச் செய்கின்றவனாய்ச் சொரூபத்தின் அநுசந்தானத்தினால் இராகமின்மையின் அவனுக்கு விஷயபோகத்தில் சமாதி சொல்லப்படுகின்றது. அது விக்ஷேபத்தோடு கூடியதாயிருத்தலின் மிக்க அதமமான விஷயசமாதியாம். ஆதலால் நாயின் பாத்திரத்தில் வார்க்கப்பட்ட பாலைப்போல இதன் விஷயம் ஆதரஞ் செய்யத்தக்கதன்று; ஆனால் ஞானிக்கு உபேக்ஷிக்கத்தக்கதாம். க்ஷணிக விஷயாநந்தமாயிருத்தலாலும், தேகாபிமான வடிவ ஆவரணத்தின் அபாவத்தினாலும் சுத்த சின்மாத்திர வாசனையின் இருப்பினாலும் ஞானியின் மனம் யாண்டுச் செல்லுகின்றதோ, ஆண்டுப் பாதரக்ஷையோடு கூடிய புருஷனுக்குத் தோலால் மூடப்பட்ட பிருதிவியினைப்போல சமாதியிருக்கிறது. இவ்வர்த்தம் பாலபோதத்தின் ஒன்பதாவது உபதேசத்தில் பிரமாணத்தோடு எழுதப்பட்டிருக்கிறது. விருப்புள்ளார் ஆண்டுக் காண்க.

அதனிடத்தில் சம்சார துக்கத்தைக் கண்டு என்னிடத்திலில்லையென்று கொள்வேன்.

### 121. உத்தரம்:—ஜன்மமுதலிய துக்கம் ஓரிடத்து மில்லையெனல்.

### ஸ்ரீ குரு சொல்லலுற்றார்:—

சிஷ்யனே, என் வார்த்தையைக் கேள். அதனால் உன் சந்தேகங்களெல்லாம் நிவிருத்தியாகும். ஜகத்தின் * அத்தியந்தநாசம் உன்னிடத்திலும் என்னிடத்திலும் வேறிடத்திலும் இல்லை.

### 122. பிரசினம்:—துக்கம் ஓரிடத்துமில்லை யெனின் பிரத்தியக்ஷமாக ஏன் தோற்றுகின்றது? எனல்.

### தத்துவதிருஷ்டி சொல்லலாயினான்:—

ஐயனே, ஜன்ம மரண முதலிய சமுசார துக்கம் என்னிடத்திலும் பிறரிடத்திலும் ஓரிடத்திலும் இல்லையெனின், ஏன் பிரத்தியக்ஷமாகிறது? இல்லாத வஸ்து தோற்றாது. மலடிமகனும் ஆகாச புஷ்பமும் தோற்றாததுபோலச் சமுசாரமு மில்லையாயின் தோற்றலாகாது. ஜன்ம முதலிய சமுசாரம் தோற்றுகின்றது. ஆதலால் "ஜன்மாதி சமுசாரரூப துக்கம் இல்லை" யென்று சொல்லுதல் பொருந்தாது.

### 123. உத்தரம்:—ஆத்மாவை யறியாததினால் தோற்றுதலும் இரஜ்ஜு சர்ப்ப திருஷ்டாந்தமும்.

### ஸ்ரீ குரு சொல்லலுற்றார்:—

ஜன்மாதி ஜகத்துப் பரமார்த்தமாகஇல்லையாயினும், ஆத்மாவைப் பிரஹ்ம சொரூபமென்று அறியாததினால் மித்தையாகத் தோற்றுகிறது. எங்ஙனம் சொப்பன பதார்த்தம், ஆகாசத்தில் கருமை, ரஜ்ஜுவிற் சர்ப்பம் என்பன பரமார்த்தமாக இல்லாமலிருந்தும் பொய்யாகத் தோற்றுகின்றனவோ, அங்ஙனமே ஜன்மாதி ஜகத்துப் பரமார்த்தமாக இல்லை; மித்தையாகத் தோற்றுகின்றது.

### 124. பிரசினம்:—இரஜ்ஜுவில் சர்ப்பம் எப்படித் தோற்றுகின்றது? எனல்.

### தத்துவதிருஷ்டி கேட்கலாயினான்:—

ரஜ்ஜுவில் சர்ப்பம் மித்தையாம். அதுபோல ஆத்மாவில் சமுசார துக்கம் மித்தையாமென்று சொல்லப்பட்டது. ஆண்டுத் திருஷ்டாந்த ஞானமின்றித் தார்ஷ்டாந்த (சித்தாந்த) ஞானமுண்டாகாது. ஆதலால் "ரஜ்ஜுவில் சர்ப்பம் எப்படித் தோற்றுகிறது?" என்பது திருஷ்டாந்தத்தில் பிரசினம் (கேள்வி).

---

* ரஜ்ஜுவில் கற்பித சர்ப்பத்திற்கு வியாவகாரிக சத்தையினால் அத்தியந்தாபாவ மிருக்கிறது. அங்ஙனமே பிரஹ்மத்திற் கற்பிதமான ஜகத்திற்குப் பரமார்த்த சத்தையினால் அத்தியந்தாபாவ மிருக்கிறது. அதுவே ஜகத்தின் நித்தியநிவிருத்தியாம்.

## 125. கேள்வியின் அபிப்பிராயம். 125-130.

யாண்டு ரஜ்ஜுவில் சர்ப்பம், கிளிஞ்சிலில் வெள்ளி முதலியன பிரமமா யிருக்கின்றனவோ; ஆண்டு நான்கு மதங்களைக் கேட்டிருக்கின்றேன்.

1. சூனியவாதிகள் அசத்கியாதி கூறுவர்.
2. க்ஷணிக விஞ்ஞானவாதிகள் ஆத்மக்கியாதி கூறுவர்.
3. நியாயவைசேஷிக மதஸ்தர்கள் அந்நியதாக்கியாதி கூறுவர்.
4. சாங்கியப் பிரபாகரர்கள் அக்கியாதி கூறுவர்.

## 126. 1. அசத்கியாதி.

ஆண்டுச் சூனியவாதியின் அபிப்பிராயம் இதுவாம்:—ரஜ்ஜுவில் சர்ப்பம் அத்தியந்தம் அசத்தாக இருக்கிறது. அப்படியே வேறிடத்திலும் அத்தியந்தம் அசத்தாக இருக்கிறது. இப்படி அத்தியந்தம் அசத்தாயிருக்கிற சர்ப்பத்தின் பிரதீதி ரஜ்ஜுதேசத்தில் உண்டாகிறது. இதனை அசத்கியாதி யென்பர். அத்தியந்தம் அசத்தாயிருக்கிற சர்ப்பத்தின் கியாதி அதாவது விளக்கமும் * சொல்லுதலும் அசத்கியாதி எனப்படும்.

## 127. 2. ஆத்மக்கியாதி.

விஞ்ஞானவாதியின் அபிப்பிராயம் இதுவாம்:—ரஜ்ஜுவிடத்திலும் அப்படியே வேறிடத்திலும் புத்திக்கு வெளியில் ஓரிடத்தும் சர்ப்பமில்லை. சகல பதார்த்தமும் புத்திக்கு வேறாக இல்லை. சகல பதார்த்தங்களின் ஆகாரத்தையும் புத்தியே தரிக்கிறது. அந்தப்புத்தி க்ஷணிக விஞ்ஞானரூபமாக இருக்கிறது. க்ஷணிகந்தோறும் உற்பத்தி நாசங்களை யடையும் விஞ்ஞானம் எதுவோ அதுவே (புத்தி) சர்ப்பரூபமாகப் பிரதீதியாகிறது. இதற்கு ஆத்மக்கியாதியென்று பெயர். ஆத்மா என்றால் க்ஷணிக விஞ்ஞானரூப புத்தி; அதன் கியாதியென்பது தோற்றமும் † சொல்லுதலுமாம்.

## 128. 3. அந்நியதாக்கியாதி. 128-129.

நையாயிக வைசேஷிகர்களது அபிப்பிராயம் இதுவாம்:—புற்றுமுதலிய இடங்களில் மெய்யான சர்ப்பம் இருக்கிறது. அது நேத்திரத்தினாற் பார்க்கப்படுகிறது. நேத்திரதோஷ பலத்தினால் சர்ப்பம் சமீபத்தில் எதிரில் தோற்றுகிறது. மெய்யான சர்ப்பத்திற்கும் நேத்திரத்திற்கும் மத்தியில் சுவர்முதலிய மறைவுகளிருந்தபோதிலும் தோஷசகித நேத்திரத்தினால் மறைபட்ட சர்ப்பமும் பார்க்கப்படுகிறது.

---

* அசத்கியாதியின் விசேஷக்கூற்றும் கண்டனமும் விருத்திரத்நாவலியின் பத்தாவது ரத்நத்திற் செய்யப்பட்டிருக்கின்றன; விருத்திப்பிரபாகரத்தின் ஏழாவது பிரகாசத்திலும் செய்யப்பட்டிருக்கின்றன.

† ஆத்மக்கியாதியை விசேஷமாய்க் கூறுதலோடு கண்டித்தல் விருத்திரத்நாவலியின் பதினோராவது ரத்நத்திலும், அங்ஙனமே விருத்திப்பிரபாகரத்தின் ஏழாவது பிரகாசத்திலும் செய்யப்பட்டிருக்கிறது.

இதிலோர் சங்கை:—

தோஷத்தினுல் சாமர்த்தியம் குறைகிறதே யன்றி விருத்தியாகிறதில்லை. ஜாடராக்கினியின் ஜீர்ணஞ்செய்யுஞ் சாமர்த்தியம் வாத பித்த கபதோஷங்களால் குறைவதுபோல, நேத்திரத்தின் சாமர்த்தியமும் திமிர (இருள்) முதலிய தோஷங்களால் குறையவேண்டியது. புற்று முதலிய இடங்களிலுள்ள சர்ப்பத்தின் ஞானம் தோஷசகித நேத்திரத்தா லுண்டாவதாகச் சொல்லப்பட்டது. அங்குச் சுத்த நேத்திரத்திற்கு பிறவிடத்திலுள்ள பொருளின் பிரத்தியக்ஷஞான முண்டாகாது; ஆனுல் தோஷசகித நேத்திரத்திற்கு உண்டாகும். ஆதலால் "தோஷமுள்ள நேத்திரத்துக்குச் சாமர்த்தியம் அதிக்மாகிறது" என்று கொள்ளுதலில் ஓர் திருஷ்டாந்தமுமில்லை.

அச்சங்கை பொருந்தாது. ஏனெனின், சிலருக்குப் பித்ததோஷத்தினுல் ஓர்விதரோக முண்டாகும்போது நான்கு மடங்குண்டாலும் திருப்தியாகிறதில்லை. பித்ததோஷத்தினுல் ஜடராக்கினியின் ஜீர்ணிக்கும் சக்தி அதிகப்படுகிறதுபோல, நேத்திரத்திலும் இருள் முதலிய தோஷங்களால் வேறிடத்தி (மறைவி) லிருக்கும் சர்ப்பத்தின் பிரத்தியக்ஷஞ் செய்யத்தக்க சாமர்த்தியம் விருத்தியாகிறது.

இவ்விதத்தால் புற்று முதலிய ஸ்தலங்களில் இருக்கப்பட்ட சர்ப்பம் அந்நியதா அதாவது வேறுபிரகாரமாய் எதிரிலிருக்கிற ரஜ்ஜுவில் கியாதி (தோற்றுதலும், சொல்லுதலும்) ஏதுவோ அது * அந்நியதாக்கியாதி எனப்படும்.

**129.** † சிந்தாமணிகாரர் மதம் இதுவாம்:—தோஷமுள்ள நேத்திரத்தினுல் புற்றிலுள்ள பாம்பு பார்க்கப்படுமாயின், மத்தியிலுள்ள வேறு பதார்த்தங்களும் ‡ பார்க்கப்படவேண்டும். ஆதலால் மறைவிலிருக்கிற பொருள் நேத்திரத்தினுல் அறியப்படமாட்டாது. ஆனுல் தோஷமுள்ள நேத்திரத்திற்கு ரஜ்ஜுவானது தன் சொரூபமாக விளங்குகிறதில்லை; சர்ப்பரூபமாக விளங்குகிறது. ஆதலால் ரஜ்ஜுவின் அந்நியதா அதாவது வேறுவிதமாய் சர்ப்பரூபமான கியாதி (தோற்றமும் சொல்லுதலும்) அந்நியதாக்கியாதி யெனப்படும்.

---

* இது பிராசீனமதம். இந்த மதத்தில் ஓரிடத்திலிருக்கிற வஸ்து வேறொரு இடத்தில் தோற்றுவதே பிராந்தி என்று சொல்லப்படுகிறது. சித்தாந்தத்திற் சொல்லிய அர்த்தாத்தியாஸ ஞானத்தியாஸரூபப் பிராந்தி இம்மதத்தில் அங்கீகரிக்கப்படவில்லை.

† இது சிந்தாமணியென்னும் நூலிற்குக் கர்த்தாவாகிய நவீன நையாயிகர்மதமாம். இம்மதத்தில் ஒருவஸ்து வேறு ரூபமாய்த் தோற்றுவதாகிய ஞானத்தியாசமே பிராந்தி எனப்படுகிறது. இவ்வந்நியதாக்கியாதியின் விசேஷக்கூற்றும் கண்டனமும் விருத்திரத்நாவலியின் பன்னிரண்டாவது ரத்நத்திலும், விருத்திப்பிரபாகரத்தின் ஏழாவது பிரகாசத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றன.

‡ காசுக்கடையில் உள்ள வெள்ளி சுத்திதேசத்தில் விளங்குமாயின், ஆண்டுக்கடையும் அதில் உள்ள சகலசாமக்கிரியோடு கூடிய வியாபாரியும் தோஷவலியால் தோற்றுதல்வேண்டும்; அங்ஙனம் தோற்றுகிறதில்லை.

## 130. 4. அக்கியாதியும், முற்கூறிய மூன்று மதங்களின் கண்டநமும்.

அக்கியாதிவாதியின் அபிப்பிராயம் இதுவாம்:—

1. அசத்கியாதி மதப்படி அசத்தின் தோற்ற முண்டாகும் பக்ஷத்தில், மலடிமகன் முயற்கொம்பு முதலியனவும் தோற்றவேண்டும். அப்படித் தோற்றாமையால் அசத்கியாதிமதம் பொருத்தமுடையதன்று.

2. க்ஷணிகவிஞ்ஞானவாதியின் மதப்படி க்ஷணிகந்தோறும் மாறும் புத்தி சர்ப்பாகாரத்தைத் தரிக்கும் பக்ஷத்தில் க்ஷணத்துக்குமேல் அச்சர்ப்பந் தோற்றலாகாது. ஆனால் அநுபவத்தில் பிரமமுள்ளவரையில் அச்சர்ப்பந் தோற்றுகிறது. ஆதலால் ஆத்மக்கியாதி மதம் ஏற்றுக்கொள்ளத்தக்கதன்று.

3. அந்நியதாக்கியாதியின் முதற்கிரமம் சிந்தாமணிகாரருடைய அந்நிய தாக்கியாதி மதத்தினுற் கண்டிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் சிந்தாமணி காரர் மதப்படியும் அந்நியதாக்கியாதி மதம் அசங்கதமாம். ஏனெனின் ஞேயாநு சாரமாக ஞானமுண்டாகிறது. "ஞேயம் ரஜ்ஜு, ஞானம் சர்ப்பத்தினது" என்று கூறுதல் முற்றும் விரோதமாம். ஆதலால் இந்தக்கிரமம் மதிக்கத்தக்க தாம்:—யாண்டு ரஜ்ஜுவிற் சர்ப்பப்பிரம முளதோ ஆண்டு நேத்திரத்திற்குத் தன் விருத்திவாயிலாக ரஜ்ஜுவுடன் சம்பந்தமுண்டாய், 'இது' என ரஜ்ஜுவின் சாமாநிய ஞானமுண்டாகிறது. சர்ப்பத்தின் ஸ்மரணையு முண்டாகிறது. "இது சர்ப்பம்" என்பதில் இரண்டு ஞானங்களுள:—

1. "இது" என்னும் அம்சமோ ரஜ்ஜுவின் சாமானியப் பிரத்தியக்ஷ ஞானமாம்.

2. "சர்ப்பம் இருக்கிறது" என்பது சர்ப்பத்தின் ஸ்மிருதி ரூப ஞானமாம்.

இவ்விதத்தால் "இது சர்ப்பம்" என்பதில் இரண்டு ஞானங்களுள. ஆனால் பிரமாதாவின் பயதோஷமும் பிரமாணத்தின் இருள் தோஷமுமாகிய இவைகளின் பலத்தினுல் "எனக்கு இரண்டு ஞானங்களு முண்டாயிருக்கின்றன" என்று புருஷனுக்கு விவேகமுண்டாகிறதில்லை. "இது" எனும் அம்சமான ரஜ்ஜுவின் சாமானியஞானம் யதார்த்தமாம். முன்பார்த்த சர்ப்பத்தின் ஸ்மரணரூபஞானமு முண்மையேயாம். என்றாலும், "எனக்கிரண்டு ஞானங்க ளுண்டாயின, அவைகளில் ரஜ்ஜுவின் சாமானியப் பிரத்தியக்ஷ ஞான மொன்று; சர்ப்பத்தின் ஸ்மரணரூபஞான மொன்று" என்னும் விவேக முண்டாகிறதில்லை. இவ்விரண்டு ஞானங்களின் அவிவேகத்துக்குச் சாங்கியப்பிரபாகர மதத்தில் பிரமமென்பர். பிரமமுண்டாகிற இடங்களி லெல்லாம் இப்படியே அறியவேண்டும்.

"இந்தக் கிரமமாக ரஜ்ஜு முதலியவற்றில் சர்ப்பாதிப் பிரமமுண்டாகுமிடத்தில் நான்குமதங்களைக் கேட்டிருக்கிறேன். அவற்றில் உத்தமமான

தைச் சொன்னால் நான் அதைக் கொள்ளுகிறேன்" என்பது சிஷ்யனது பிரசினம்.

## 124–130 பிரசங்கங்களிலுள்ள பிரசினத்தின் உத்தரம் 131 - 146.

## 131. அக்கியாதிமதகண்டனம் 131-132.

### குரு சொல்லலுற்றார்.

சிஷ்யனே, அந்த நான்கு மதங்களுக்கும் வேறாகப் பிரமஸ்தலத்தில் அநிர்வசனீயக்கியாதி யென்னும் ஐந்தாவது மதம் ஒன்றுண்டு. அசத்கியாதி, ஆத்மக்கியாதி, அந்நியதாக்கியாதி, அக்கியாதியென்னும் * நான்கு மதங்களும் யுக்தியில்லாதனவாம்.

எங்ஙனம் பின்பின் மதநிருபணத்தில் முன் மூன்றுமதங்களும் அசங்கதமெனப்பட்டனவோ, அங்ஙனமே அக்கியாதிமதமும் அசங்கதமாம். ஏனெனின், "இது சர்ப்பம்" என்னும் ஞானத்தில்,

1. முதலில் "இது" என்னும் அம்சமோ இரஜ்ஜுவின் சாமானியமாகிய பிரத்தியக்ஷமாம்,

2. "சர்ப்பம்" என்பது முன்பார்த்த சர்ப்பத்தின் ஸ்மரணரூபஞானம்.

இது அக்கியாதிவாதியின் மதமாம். ஆண்டு முன்பார்த்த சர்ப்பத்தின் ஸ்மரணையினையே அங்கீகரித்து, எதிரிலிருக்கும் ரஜ்ஜுவில் சர்ப்பஞானத்தை அங்கீகரியாவிடின், எதிரிலிருக்கும் ரஜ்ஜுவைக்கண்டு புருஷன் பயப்பட்டு ஓடுகிறான். அந்தப் பயமும் ஓடுதலுமுண்டாகலாகாது. ஆதலால் எதிரிலிருக்கும் ரஜ்ஜுவிற்றான் சர்ப்பம் தோற்றுகிறது; முன்பார்த்த சர்ப்பத்தின் ஸ்மரணையுண்டாகிறதில்லை.

**132.** அல்லது,

ரஜ்ஜுவின் விசேஷவடிவமான யதார்த்தஞானமுண்டானபிறகு, "எனக்கு ரஜ்ஜுவினிடத்தில் மித்தியாசர்ப்பம் தோற்றியது" என்று புருஷனுக்

---

* மேற்சொல்லிய நான்கு மதங்களன்றிச் சத்கியாதி என்று பூர்வபக்ஷிகளின் ஐந்தாவது மதமொன்றுண்டு. அம்மதப்படிச் சுக்தியின் அவயவங்களோடு இரஜதத்தினவயவமும் எப்போதுமிருக்கின்றது. சுக்தியின் அவயவம் சத்தியமாயிருப்பதுபோல இரஜதத்தின் அவயவமும் சத்தியமாம்; மித்தையன்று. தோஷத்தோடுகூடிய நேத்திர சம்பந்தத்தால் சித்தாந்தத்தில் அவித்தையில் பரிணாமமாக அநிர்வசனீய ரஜதம் உண்டாவதுபோல, தோஷத்தோடுகூடிய நேத்திர சம்பந்தத்தால் இரஜதாவயவத்தினின்று சத்திய ரஜதமும் உண்டாகின்றது. சித்தாந்தத்தில் அதிஷ்டான ஞானத்தால் அநிர்வசனீய ரஜதம் நிவிருத்தியாவதுபோல, சுக்திஞானத்தால் சத்திய ரஜதமும் தனது அவயவத்திற் றூம்சமாகிறது. இம்மதமும் தள்ளத்தக்கது. ஏனெனின், சுக்தி ரஜத திருஷ்டாந்தத்தினால் பிரபஞ்சம் மித்தை என்னும் அநுமிதி உண்டாகின்றது. சத்கியாதி வாதத்தில் சுக்தியில் இரஜதம் சத்தியமாம். இதைத் திருஷ்டாந்தமாக வைத்துக்கொண்டு பிரபஞ்சத்தில் மித்தியாத்துவசித்தி பெறுவது முடியாது. இன்னும் இந்தமதத்தில்அநேக தோஷங்களுள. கண்டிக்கும் யுக்திகள் கடினமாகையால் இங்கு எழுதப்படவில்லை.

குண்டாகும் பாதத்திறுலும் ரஜ்ஜுவினிடத்திலேயே சர்ப்பம் பிரதீதியாகி றது; முன்பார்த்த சர்ப்பத்தின் ஸ்மிருதியுண்டாகிறதில்லை.

2. இது "சர்ப்பம்" என்னுமிடத்தில் ஒரேஞான முண்டாகிறது; இரண்டுஞானங்க ளுண்டாகிறதில்லை.

3. ஒரேகாலத்தில் அந்தக்கரணத்தில் ஸ்மரணரூப ஞானமும் பிரத்தியக்ஷரூப ஞானமும் உண்டாகமாட்டா.

ஆதலால் * அக்கியாதிமதமும் முற்றும் அசங்கதமாம். இந்நான்கு மதங்களின் லக்ஷணங்களும் கண்டனமும் விவரணம், ஸ்வாராஜ்யசித்தி முதலிய கிரந்தங்களில் விஸ்தாரமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. யுக்திகள் கடினமாயிருத்தலால் ஜிஞ்ஞாஸுவுக்குச் சுருக்கமாக அவற்றின் தன்மைமாத்திரம் சொல்லப்பட்டது; விரிவாயெழுதப்படவில்லை.

## 133. 5. சித்தாந்தத்திலுள்ள அநிர்வசனீயக்கியாதியின் தன்மை.

சித்தாந்தத்தில் அநிர்வசனீயக்கியாதியுளது. அதன்றன்மை இதுவாம்:— அந்தக்கரணத்தின் விருத்தி நேத்திராதிவாயிலாக வெளிப்பட்டு விஷயசமானுகாரமாகிறது. அதனுல் விஷயத்தின் ஆவரணம் நீங்கி விஷயந் தோற்றுகிறது. அதற்கு(ச் சூரியாதி)ப் பிரகாசமும் சாதகமாயிருக்கிறது; பிரகாசமின்றிப் பதார்த்தம் விளங்குகிறதில்லை.

- யாண்டு ரஜ்ஜுவில் சர்ப்பப்பிரம முண்டாகின்றதோ, ஆண்டு அந்தக்கரணத்தின் விருத்தி நேத்திரவாயிலாக வெளிப்படுகின்றது; ரஜ்ஜுவுடன் அதன் சம்பந்தமு முண்டாகிறது. ஆனுல் † இருள்முதலிய தோஷங்கள் பிரதி

* இதனை விசேஷமாகக் கூறுதலும் கண்டித்தலும் விருத்திரத்நாவலியின்பதின்மூன்ருவது ரத்நத்திலும் விருத்திப்பிரபாகரத்தின் ஏழாவது பிரகாசத்திலும் செய்யப்பட்டுள.

† இருள் சப்தத்தால் மந்தாந்தகாரமும் கொள்ளத்தக்கது. ஏனெனின் தோஷமின்றிய கண்ணுடையவனுக்கு நல்ல வெளிச்சத்தில் ரஜ்ஜுமுதலிய அதிஷ்டானத்தினது விசேஷரூபத்தின் அஞ்ஞானம் உண்டாகிறதில்லை.

காடாந்தகாரத்தில் அதிஷ்டானத்தின் சாமாநியவடிவமான "இதந்தை" யின் ஞானமுண்டாகிறதில்லை. அதிஷ்டானத்தின் சாமாநியரூப ஞானமின்றியும் விசேஷரூப அஞ்ஞானமின்றியும் அத்தியாஸ முண்டாகிறதில்லையென்னும் வார்த்தை முன் இரண்டாவது தரங்கத்தில் அத்தியாசத்தின் பிரசங்கத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. மந்தாந்தகாரத்தில் விசேஷரூபத்தின் அஞ்ஞானமும் சாமானியரூபத்தின் ஞானமுமாகிய இரண்டும் பொருந்துகின்றன. ஆதலால் நேத்திரத்தினது விஷயத்தின்கணுள்ள அத்தியாஸத்தில் மந்தாந்தகாரத்தின் அபேக்ஷையிருத்தலின் அதுவும் கொள்ளப்படும். நேத்திரத்தின் மந்தத்தன்மை வடிவ திமிரதோஷமும் கொள்ளப்படும். இரண்டில் ஒன்றுளதாயின் அப்போது பிரமமுண்டாம். முதலிய என்னும் சொல்லால் காமாலைமுதலிய நேத்திரத்தின் ரோகங்களும் கொள்ளப்படும்.

பந்தகமா யிருக்கின்றன. ஆதலால் விருத்தியின் சொரூபம் ரஜ்ஜுவின் சமானாகாரமாகிறதில்லை. அதனால் ரஜ்ஜுவின் ஆவரணம் நாசமாகிறதில்லை.

இவ்விதத்தால் ஆவரண பங்கத்தின்பொருட்டு விருத்தியின் சம்பந்த முண்டாகியும், எப்போது ரஜ்ஜுவின் ஆவரணம் பங்கமாகிறதில்லையோ, அப்போது ரஜ்ஜு சேதனத்திலுள்ள அவித்தையில் க்ஷோப (கலக்க) முண்டாய் அவ்வவித்தை சர்ப்பாகார பரிணாமத்தை யடைகிறது.

1. அந்த அவித்தையின் காரியமான சர்ப்பம் சத்தாயிருக்குமாயின், அது ரஜ்ஜுஞானத்தினால் பாதமாகாது; ஆனால் பாதமாகிறது. ஆதலால் சர்ப்பம் சத்தன்று.

2. அச்சர்ப்பம் அசத்தாமாயின் மலடிமகன்போலத் தோற்றாது; ஆனால் அநுபவத்தில் தோற்றுகிறது. ஆதலால் அது அசத்துமன்று.

ஆனால் சதசத்துக்கு விலக்ஷணமான * அநிர்வசனீயமாம். இளிஞ்சில் முதலியவைகளில் வெள்ளி முதலியவைகளும் இவ்வாறு அநிர்வசனீயமாய் உற்பத்தியாகின்றன. இந்த அநிர்வசனீயத்தின் கியாதி அதாவது பிரதீதியும் சொல்லுதலும் அநிர்வசனீயக்கியாதி எனப்படும்.

## 134. பிரமஸ்தலத்தில் அந்தக்கரணத்திற்குப் பின்னமான அவித்தையின் பரிணாமமாகிய சர்ப்பாதி விஷயங்களும் அவற்றின் ஞானமும் ஒரே சமயத்தில் உற்பத்தியாய் ஒடுங்குகின்றன; அவை சாக்ஷிபாஸ்யமாமெனல்.

எங்ஙனம் சர்ப்பம் அவித்தையின் பரிணாமமோ, அங்ஙனமே அதன்ஞான ரூபவிருத்தியும் அவித்தையின் பரிணாமமேயாம்; அந்தக்கரணத்தின் பரிணாமமன்று. ஏனெனின், ரஜ்ஜுஞானத்தால் சர்ப்பம் பாதிக்கப்படுவதுபோல அதன் ஞானமும் பாதிக்கப்படுகிறது. அந்தக்கரணத்தின் ஞானமாயின் பாதமாகலாகாது. ஆதலால் சர்ப்பம்போலச் சர்ப்பஞானமும் அவித்தியாகாரியமாய்ச் சத்து அசத்துகளுக்கு விலக்ஷணமான அநிர்வசனீயமா யிருக்கிறது. ஆனால்,

---

* சத்தின் விலக்ஷணம் அசத்து; அதனை அசத்துக்கு விலக்ஷணம் என்று சொல்லுதல் விருத்தம். அசத்துக்கு விலக்ஷணம் சத்து; அதனைச் சத்தின் விலக்ஷணமென்று சொல்லுதல் விருத்தம். சதசத்துக்கு வேறான மூன்றாவது பதார்த்த மில்லாமையினால் அநிர்வசனீய சப்தத்தினது அர்த்தத்தின் உணர்ச்சியே யில்லையென்னும் சங்கைக்கு,

இது சமாதானம்:—1. மூன்று காலத்திலும் பாதிக்கப்படாதது சத்தெனப்படும்; அதற்கு விலக்ஷண மென்பதனால் பாதிக்கத்தக்கதென்று ஏற்படுகிறது.

2. ஸ்வரூபமில்லாத மலடிமகன் முதலியவை அசத்தெனப்படும். அதற்கு விலக்ஷண மென்பதனால் ஸ்வரூபமுடையதென்று ஏற்படுகிறது.

1. சர்ப்பம்ர ஜ்ஜு உபஹித சேதனத்திலிருக்கும் தமோகுணப் பிரதான அவித்தை யம்சத்தின் பரிணமமாம்.

2. விருத்திஞானம் சாக்ஷி சேதனத்திலிருக்கும் அவித்தையினது சத்துவ குணத்தின் பரிணமமாம்.

எந்தச்சமயத்தில் ரஜ்ஜுசேதனத்தின் அவித்தை சர்ப்பாகாரமாய்ப் பரிணமிக்கிறதோ, அதே சமயத்தில் சாக்ஷியை ஆசிரயித்த அவித்தை ஞானாகாரமாய்ப் பரிணமிக்கிறது. ஏனெனின், எந்த நிமித்தத்தினால் ரஜ்ஜு உபஹித சேதனத்தை யாசிரயித்த அவித்தையில் * க்ஷோப (கலக்க) முண்டாயிற்றோ, அதே நிமித்தத்தினால் சாக்ஷியை யாசிரயித்த அவித்தியாம்சத்திலும் கலக்கமுண்டாகிறது. ஆதலால் பிரமஸ்தலத்தில் சர்ப்பாதி விஷயங்களும் அவற்றின் ஞானமும் ஒரேசமயத்தி லுண்டாகின்றன; ரஜ்ஜு முதலிய அதிஷ்டானங்களின் ஞானத்தினால் ஒரேசமயத்தில் லயமாகின்றன. இவ்வாற்றால்,

1. சர்ப்பாதிப் பிரமத்தில்,

(1) வெளியிலிருக்கும் அவித்தியாம்சம் சர்ப்பாதி விஷயங்களுக்கு உபாதானகாரணமாம்.

(2) சாக்ஷி சேதனத்தை யாசிரயித்து உள்ளேயிருக்கும் அவித்தியாம்சம் சர்ப்பாதி விஷயங்களின் ஞானவடிவ விருத்திக்கு உபாதானகாரணமாம்.

2. சொப்பனத்திலோ,

(1) சாக்ஷியை யாசிரயித்த அவித்தையின் தமோகுணம்சமே விஷயரூப பரிணமத்தை யடைகின்றது.

(2) அந்த அவித்தையிலுள்ள சத்துவகுணம்சம் ஞானரூபபரிணமத்தை அடைகின்றது.

ஆதலால் சொப்பனத்தில் உள்ளேயிருக்கும் அவித்தையே விஷயத்திற்கும் ஞானத்திற்கும் உபாதான காரணமாம்.

இக்காரணத்தினால் வெளியேயிருக்கும் ரஜ்ஜுசர்ப்பாதிகளும், உள்ளேயிருக்கும் சொப்பனபதார்த்தங்களும் சாக்ஷிபாஸ்ய மெனப்படுகின்றன. அவித்தையின் விருத்திவாயிலாக எதனைச் சாக்ஷி பிரகாசிக்கிறதோ அது சாக்ஷிபாஸ்ய மெனப்படும்.

## 135. ரஜ்ஜுவில் சர்ப்பமும் அதன் ஞானமும் அவித்தையின் பரிணமமும் சேதனத்தின் விவர்த்தமுமாம்.

ரஜ்ஜு முதலியவற்றில் அநிர்வசனீய சர்ப்பாதிகளும் அவற்றின் ஞானமும் பிரமமென்றும் அத்தியாஸமென்றும் சொல்லப்படும். அந்தப் பிரமம் அவித்தையின் பரிணமமும் சேதனத்தின் விவர்த்தமுமாம்.

---

ஆதலால் பாதிக்கத்தக்க ஸ்வரூபமுடையது அநிர்வசனீய பதார்த்தமாம்; அங்ஙனமே பிரபஞ்சமும் இரஜ்ஜு சர்ப்பாதிகளுமாம். அவற்றின் உபலப்தியென்னும் பிரதீதி வேதாந்த நிபுண பண்டிதர்களுக் குண்டாகின்றது.

* உபாதானம் காரியாபி (காரியத்திற் கெதிர்) முகமாகுதல் க்ஷோபம் எனப்படும்.

1. உபாதானகாரணத்துக்குச் சமான சுபாவமுடைய வேற்றுச்சொரூபம் பரிணாமமெனப்படும்.

2. அதிஷ்டானத்திற்கு விபரீதமான சுபாவமுடைய வேற்றுச்சொரூபம் விவர்த்தமெனப்படும்.

1. உபாதானகாரணம் அவித்தை. அது அநிர்வசனீயம். அப்படியே ரஜ்ஜுவில் சர்ப்பமும் அதன் ஞானமும் அநிர்வசனீயமா யிருக்கின்றன. ஆகையால் ரஜ்ஜுவில் சர்ப்பமும் அதன் ஞானமும் அவித்தையின் சமான சுபாவமுடைய வேற்றுச்சொரூபம் அதாவது அவித்தையின் வேறுவிதமான வடிவம். அவை அவித்தையின் பரிணாமமாம்.

2. அங்ஙனமே ரஜ்ஜு அவச்சின்ன அதிஷ்டான சேதனம் சத்ரூபமாக இருக்கிறது. சர்ப்பமும் அதன் ஞானமும் சத்துக்கு விலக்ஷணமாயிருக்கின்றன. ஆதலால் ரஜ்ஜுவில் சர்ப்பமும் அதன் ஞானமும் அதிஷ்டான சேதனத்திற்கு விபரீத சுபாவமுடைய சேதனத்தின் வேறுவிதமான வடிவமாம்.

## 136. ரஜ்ஜு அந்தக்கரணங்களின் உபஹித சேதனம் அதிஷ்டானமாம்; ரஜ்ஜுவன்றெனல். சர்ப்பமும் அதன் ஞானமும் ரஜ்ஜு ஞானத்தால் நிவிருத்தியாதல்.

1. மித்தியா சர்ப்பத்துக்கு அதிஷ்டானம் ரஜ்ஜு உபஹித சேதனமாம்; ரஜ்ஜுவன்று. ஏனெனின், சர்ப்பம்போல ரஜ்ஜுவும் கற்பிதமாயிருக்கிறது. ஒரு கற்பிதவஸ்து வேறோர் கற்பித வஸ்துவிற்கு அதிஷ்டானமாகாது. ஆதலால் ரஜ்ஜு உபஹித சேதனமே அதிஷ்டானமாம்; ரஜ்ஜுவன்று.

ரஜ்ஜு விசிஷ்டசேதனத்தை அதிஷ்டானமெனினும் ரஜ்ஜு, சேதனம் என்னும் இரண்டும் அதிஷ்டானமாகும். ஆண்டு ரஜ்ஜு பாகத்தில் அதிஷ்டானத்தன்மை பாதிதமாம், ஆதலால் ரஜ்ஜு உபஹித சேதனமே அதிஷ்டானமாம்; ரஜ்ஜு விசிஷ்டசேதனமன்று.

2. அங்ஙனமே சர்ப்பஞானத்துக்குச் சாக்ஷிசேதனம் அதிஷ்டானமாம்.

இவ்வாறு பிரமஸ்தானத்தில் விஷயத்திற்கும் அதன் ஞானத்திற்கும் உபாதி பேதத்தால் அதிஷ்டானம் வேறுபடுகிறது; ஒன்றாக இருக்கிறதில்லை.

1. விசேஷவடிவமாக ரஜ்ஜுவின் அறியாமையே, அவித்தையிற் கலக்க வாயிலாக இரண்டன் உற்பத்தியிலும் நிமித்தமாம்.

2. அங்ஙனமே இரஜ்ஜுவின் ஞானம் இரண்டன் நிவிருத்தியிலும் நிமித்தமெனப்பட்டிருக்கின்றது.

## 137. இதிற் சங்கை:—ரஜ்ஜுவின் ஞானத்தால் சர்ப்பத்தின் நிவிருத்தி பொருந்தாதெனல்.

இவ்வாறு சங்கை யுண்டாகின்றது:—ரஜ்ஜு ஞானத்தால் சர்ப்பத்தின் நிவிருத்தி பொருந்தாது. ஏனெனின், "மித்தியாவஸ்துவிற்கு எது அதிஷ்டானமோ, அந்த அதிஷ்டானத்தின் ஞானத்தினுல் மித்தை நிவிருத்தியாகுமென்பது அத்துவைதவாதத்தின் சித்தாந்தம்." மித்தியாசர்ப்பத்திற்கு அதிஷ்டானம் ரஜ்ஜு உபஹித சேதனமாம்; ரஜ்ஜுவன்று. ஆதலால் ரஜ்ஜு ஞானத்தால் சர்ப்பம் நிவிருத்தியாகாது.

## 138. இதற்குச் சமாதானம்:—ரஜ்ஜுவின் ஞானமே சர்ப்பத்தினது அதிஷ்டானத்தின் ஞானமாம்.

இது சமாதானமாம்:—"ரஜ்ஜு முதலிய ஜடபதார்த்தங்களின் ஞானம் அந்தக்கரணத்தின் விருத்திரூபமாயின், ஆண்டு ஆவரணபங்கம் விருத்தியின் பிரயோஜனமாம். அந்த ஆவரணம் அஞ்ஞானத்தின் சக்தியாம். ஆதலால் ஆவரணம் ஜடத்தின் ஆசிரிதமன்று; ஆனுல் ஜடத்துக்கு அதிஷ்டானமான சேதனத்தின் ஆசிரிதமாம். ஆதலால்,

1. ரஜ்ஜு சமான ஆகாரத்தையடைந்த அந்தக்கரணத்தின் விருத்தியினுல் ரஜ்ஜு அவச்சின்ன சேதனத்தின் ஆவரணமே பங்கமாகிறது.

2. விருத்தியிலுள்ள சிதாபாசனுல் ரஜ்ஜுவின் பிரகாசமுண்டாகிறது.

3. சேதனம் சுயம்பிரகாசமாயிருக்கிறது. அதில் ஆபாசனது உபயோகமில்லை.

இந்த விஷயம் முழுவதும் மேல் இத்தரங்கத்தில் (187-வது பிரசங்கத்தில்) சொல்லப்படும்.

இவ்வாற்றுல்,

1. சிதாபாசனுடன் கூடிய அந்தக்கரணத்தின் விருத்திரூப ஞானத்திலுள்ள விருத்திபாகத்திற்கு ஆவரணபங்கரூபபலம் சேதனத்திலுண்டாகிறது.

2. சிதாபாஸபாகத்திற்குப் பிரகாசவடிவ பலம் ரஜ்ஜுவிலுண்டாகிறது.

ஆதலால் விருத்திஞானத்திற்குக் கேவலம் ஜடமான ரஜ்ஜு விஷயமாகிறதில்லை. ஆனுல் அதிஷ்டான சேதனத்துடன் கூடிய ரஜ்ஜு ஆபாசனுடன் கூடிய விருத்திக்கு விஷயமாகிறது. இக்காரணத்தால் சித்தாந்தக் கிரந்தத்தில் "அந்தக்கரணஜந்நியவிருத்திஞானம் பிரஹ்ம முழுவதினையும் விஷயஞ் செய்கிறது" என்றெழுதப்பட்டிருக்கிறது.

இந்தப்பிரகாரமாக ரஜ்ஜு ஞானத்தால் ஆவரணமின்றியதாய்ச் சர்ப்பத்தின் அதிஷ்டானமான ரஜ்ஜு அவச்சின்னசேதனமும் தன் பிரகாசத்தி

ஞல் விளங்குகிறது. ஆதலால் ரஜ்ஜுவின் ஞானமே சர்ப்பத்தின் அதிஷ்டான ஞானமாம். அதனுல் ரஜ்ஜுஞானத்தால் சர்ப்பம் நிவிருத்தியாகும்.

## 139. சங்கை:—ரஜ்ஜுஞானத்தால் சர்ப்பஞானத்தின் நிவிருத்தி பொருந்தாமை.

வேறு சங்கை:—இவ்வாற்ருல் மேற்சொல்லியபடி ரஜ்ஜுஞானத்திஞல் சர்ப்பம் நிவிருத்தியாஞுலும் சர்ப்பஞானம் நிவிருத்தியாகாது. ஏனெனின் சர்ப்பத்திற்கு அதிஷ்டானம் ரஜ்ஜு அவச்சின்ன சேதனமாம்; சர்ப்பஞானத்துக்கு அதிஷ்டானம் சாக்ஷிசேதனமாம். முன்சொன்னபடி ரஜ்ஜுஞானத்தால் ரஜ்ஜு அவச்சின்னசேதனமே விளங்குகிறது; சாக்ஷிசேதனம் விளங்குகிறதில்லை. ஆதலால் ரஜ்ஜு ஞானமுண்டாஞுலும் சர்ப்பஞானத்துக்கு அதிஷ்டானமான சாக்ஷிசேதனம் அறியப்படாததாயிருக்கிறது. அறியப்படாத அதிஷ்டானத்தில் கற்பிதத்தின் நிவிருத்தியாகிறதில்லை. அறியப்பட்ட அதிஷ்டானத்திற்ருன் கற்பிதத்தின் நிவிருத்தியுண்டாகின்றது. ஆகையால் ரஜ்ஜு ஞானத்தால் சர்ப்பஞானத்தின் நிவிருத்தி பொருந்தாது.

## 140. அதன் சமாதானம்:—சர்ப்பத்தின் இன்மையால் சர்ப்பஞானம் நிவிருத்தியாதல் 140-142.

சமாதானம் இதுவாம்:—ஞானம் விஷயத்தின் அதீனமாயிருக்கிறது. விஷயமாகிய சர்ப்பம் நிவிருத்தியாகவே சர்ப்பஞானம் விஷயமின்மையால் தானே நிவிருத்தியாகிறது.

**141.** சங்கை:—அதிஷ்டானஞானமின்றிக் கற்பிதம் நிவிருத்தியாகிறதில்லை. சர்ப்பத்தின் ஞானமும் கற்பிதம்; அதன் அதிஷ்டானம் சாக்ஷிசேதனம்; அதன் ஞானமின்றிக் கற்பித சர்ப்பத்தின் ஞானம் நிவிருத்தியாதல் பொருந்தாது என்று கூறின்,

**142.** அதன் சமாதானம் இதுவாம்:—நிவிருத்தி இருவகையாம்.

1. ஒன்று * அத்தியந்தநிவிருத்தி;
2. மற்றென்று காரணத்தில் லயமாகுதல்.

காரணத்துடன் காரியமும் நிவிருத்தியாகுதல் அத்தியந்தநிவிருத்தியெனப்படும்.

எல்லாக் கற்பிதவஸ்துக்களுக்கும் காரணம் அதிஷ்டானத்தை ஆசிரயித்துக்கொண்டிருக்கும் அஞ்ஞானமாம்.

1. அதிஷ்டான ஞானத்திஞலேயே அஞ்ஞானத்தோடு கற்பிதகாரியங்களின் நிவிருத்தியுண்டாகின்றது.

---

* வஸ்திரம் தனக்குக் காரணமான நூலுடன் எரிந்துபோகுதல் அத்தியந்த நிவிருத்தி. கடம் உடைந்து மண்ணுகப்போகுதல் மற்றெருவித லயரூபநிவிருத்தி.

2. ஆனால் காரணத்தில் லயமாகும் நிவிருத்தி அதிஷ்டான ஞானமின்றியும் உண்டாகும்.

சுழுத்தியிலும் பிரளயத்திலும் சகல பதார்த்தங்களும் அதிஷ்டான ஞானமின்றி அஞ்ஞானத்தில் லயமடைகின்றன. அங்குச் சர்வபதார்த்தங்களின் லயத்துக்குக் காரணம் போகத்திற்கு எதிர்முகமாகும் கர்மத்தின் அபாவமாம். அங்ஙனமே அதிஷ்டான சாக்ஷியின் ஞானமின்றியே சர்ப்பஞானம் நிவிருத்தியாகிறது. அங்குச் சர்ப்பஞானத்துக்கு விஷயமான சர்ப்பத்தின் அபாவமே சர்ப்பஞானத்தின் நிவிருத்திக்குக் காரணமாகிறது.

இவ்வாறு ரஜ்ஜுஞானத்தால் சர்ப்பத்தின் நிவிருத்தி யுண்டாகின்றது. சர்ப்பஞானத்துக்கு விஷயமான சர்ப்பத்தின் அபாவத்தால் சர்ப்பஞானத்தின் லயமுண்டாகின்றது.

## 143. இரஜ்ஜு ஞானசமயத்தில் சாக்ஷியின் விளக்கமுண்டாகின்றது.

அல்லது, சர்ப்பமும் அதன் ஞானமுமாகிய இரண்டும் ரஜ்ஜுஞானத்தினாலேயே நிவிருத்தியாகின்றன. ஏனெனின், ரஜ்ஜுவின் பிரத்தியக்ஷஞானமுண்டாகும்போது அந்தக்கரணத்தின் விருத்தி நேத்திரவாயிலாக வெளிப்பட்டு ரஜ்ஜுதேசத்தை யடைந்து அதன் சமானாகாரமாகின்றது. ஆதலால் ரஜ்ஜுவின் பிரத்தியக்ஷசமயத்தில் விருத்தியுபஹிதசேதனமும் ரஜ்ஜுஉபஹிதசேதனமுமாகிய இரண்டும் ஒன்றாகின்றன, அவற்றிற்குப் பேதமிருப்பதில்லை. இதில் இது ஏதுவாம்:—சேதனத்துக்குச் சொரூபமாகவோ பேதம் ஓரிடத்துமில்லை. ஆனால் உபாதிபேதத்தால் சேதனத்திற்குப் பேதமுண்டாகிறது. விருத்தியுபஹித சேதனத்தையும் ரஜ்ஜு உபஹித சேதனத்தையும் பேதிக்கும் உபாதிகள் விருத்தியும் ரஜ்ஜுவுமாம்.

1. அந்த விருத்தியும் ரஜ்ஜுவும் வேறுவேறிடங்களி லிருக்கும்போது உபாதியுடைய சேதனங்கட்குப் பேதமுண்டாகிறது.

2. இரண்டு உபாதிகளும் ஓரிடத்தி லிருக்கும்போது உபஹித சேதனங்கட்கும் பேதம் சம்பவிக்கிறதில்லை.

இது வேதாந்தபரிபாஷைமுதலிய கிரந்தங்களில் எழுதப்பட்டிருக்கிறது.

1. வெவ்வேறிடங்களிலிருக்கும் உபாதிகளினாலேயே உபஹிதசேதனத்துக்குப் பேதமுண்டாகிறது.

2. ஒரே இடத்தில் இரண்டு உபாதிகளு மிருக்கும்போதும் இரண்டு உபாதிகளா லுபஹிதமான சேதனமும் ஒன்றேயாம்.

இவ்வாறு ரஜ்ஜுவின் பிரத்தியக்ஷஞான சமயத்தில் ரஜ்ஜு உபஹிதசேதனமும் விருத்தியுபஹிதசேதனமும் ஒன்றாயிருக்கின்றன. அங்குச் சாக்ஷிசேதனமே விருத்தியுபஹித சேதனமாம். ஏனெனின், அந்தக்கரணத்திலும் அதன்

விருத்தியிலுமுள்ளதாய் அவற்றைப் பிரகாசிப்பிக்கும் சேதனமாத்திரம் சாக்ஷி யெனப்படும். இவ்விதமாக ரஜ்ஜுவின் பிரத்தியக்ஷஞானசமயத்தில் சாக்ஷி சேதனத்திற்கும் ரஜ்ஜு உபஹித சேதனத்திற்கும் அபேதமுண்டாகின்றது.

1. ரஜ்ஜு உபஹித சேதனம் ரஜ்ஜுஞானத்தால் விளங்குகிறது.

2. ரஜ்ஜு உபஹித சேதனத்திற்கு வேறாகாத சாக்ஷி சேதனமும் ரஜ்ஜு ஞானத்தால் விளங்குகிறது. இவ்வாறு ரஜ்ஜுஞானசமயத்தில் அதிஷ்டான சாக்ஷியின் விளக்கமிருத்தலால் கற்பித சர்ப்பஞானத்தின் நிவிருத்தி சம்ப விக்கின்றது.

## 144. சகலத் திரிபுடிகளின் ஞானத்தில் சாக்ஷியின் ஞான முண்டாமெனல்.

அல்லது, கூடஸ்ததீபிகையில் வித்தியாரண்ய ஸ்வாமிகள் இது கூறி யிருக்கின்றனர்:—

1. "ஆபாஸ ஸஹித அந்தக்கரணத்தின் விருத்தி இந்திரியவாயிலாக வெளியிற் சென்று கடாதி விஷயங்களைப் பிரகாசிக்கின்றது.

2. கடாதிவிஷயம், அங்ஙனமே ஆபாஸசகித விருத்திரூப அவற்றின் ஞானம், அங்ஙனமே ஆபாஸஸஹித அந்தக்கரணரூப ஞாதா என்னும் இம் மூன்றையும் சாக்ஷி பிரகாசிக்கிறது."

1. "இது கடம்" என்பதாக ஆபாஸஸஹித விருத்தியினால் கடமாத்திரத் தின் பிரகாசமுண்டாகிறது.

2. "நான் கடத்தை அறிகிறேன்" என்பதாக

(1) நான் என்னும் சப்தத்துக்கு அர்த்தமாகிய ஞாதா,

(2) ஞேயமாகிய கடம்,

(3) அதன் ஞானம் என்னும் திரிபுடிகளைச் சாக்ஷி பிரகாசிக்கிறது.

(ஞாதா, ஞானம், ஞேயமென்னும் மூன்றும் திரிபுடி எனப்படும்.)

இவ்வாற்றாற் சகலத் திரிபுடிகளையும் பிரகாசிப்பது சாக்ஷியாம்.

சாக்ஷி தான் அஞ்ஞாதமாயிருந்தால் திரிபுடியின் ஞானம் சாக்ஷியினு லுண்டாகாது. ஆதலால் சகலத்திரிபுடிகளின் ஞானத்தில் சாக்ஷியின் ஞானம் அவசியம் உண்டாகிறது.

அந்தச் சாக்ஷிஞானத்தால் சர்ப்பஞானத்தின் நிவிருத்தி சம்பவிக்கிறது. இது முற்கிரமப்படி சர்ப்பத்துக்கும் அதன் ஞானத்துக்கும் அதிஷ்டானங் கள் வெவ்வேறெனச் சொல்லப்பட்டது. இதில் இவ்வளவு சங்கை சமாதானங் கள் உள. இப்பக்ஷத்தில் மற்றும் அநேக சங்கை சமாதானவடிவ விவா தங்களுள,

## 145. சர்ப்பத்திற்கும் அதன் ஞானத்திற்கும் அதிஷ்டானம் சாக்ஷியாதல். 145. 146.

ஆதலால் சர்ப்பத்துக்கும் அதன் ஞானத்துக்கும் அதிஷ்டானம் ஒன்றே யென்னும் பக்ஷத்தைக் கூறுகின்றார்:—

ஆண்டு வெளியிலிருக்கும் ரஜ்ஜுசேதனம் சர்ப்பத்துக்கும் அதன் ஞானத்துக்கும் அதிஷ்டானம் என்று கூறின்—

அது கூடாது. ஏனெனின்—

1. எவ்வளவு ஞானம் உண்டாகின்றனவோ, அவை பிரமாதா அல்லது சாக்ஷியை ஆசிரயித்துண்டாகின்றன. ஞானம் வெளியிலுள்ள ரஜ்ஜுசேதனத்தின் ஆசிரிதமெனல் கூடாது.

2. அதுபோல சர்ப்பத்திற்கும் சர்ப்பஞானத்திற்கும் அதிஷ்டானம் அந்தக்கரண உபஹித சாக்ஷிசேதனமென்று கொள்ளின், சரீரத்தினுள் அந்தக்கரண தேசத்தில் சர்ப்பம் தோற்றுதல் வேண்டும்; ரஜ்ஜுவினிடத்தில் சர்ப்பம் தோற்றவேண்டியதில்லை. உள்ளே உற்பத்தியாகிய சர்ப்பம் மாயையின் பலத்தால் வெளியில் தோற்றுவதாகக் கொள்ளின் ஆத்மக்கியாதியின் மதம் சித்திக்கும்.

இவ்விதத்தால்

1. ரஜ்ஜு உபஹிதசேதனம் ஞானத்துக்கு அதிஷ்டானமாகாது.

2. அந்தக்கரண உபஹிதசேதனம் சர்ப்பத்துக்கு அதிஷ்டானமாகாது.

ஆதலால் சர்ப்பத்திற்கும் அதன் ஞானத்திற்கும் அதிஷ்டானம் ஒன்றெனல் பொருந்தாது. அங்ஙனமாயினும், ரஜ்ஜுவின் அருகிற்சென்ற அந்தக்கரணத்தின் "இது" எனும்வடிவ விருத்தியிலுள்ள சேதனத்தின் ஆசிரிதமான அவித்தை சர்ப்பாகார ஞானகார பரிணாமங்களை யடைகிறது.

1. உபஹித சேதனத்திலுள்ள அவித்தையின் தமோகுணாம்சம் சர்ப்பத்திற்கு உபாதானகாரணமாம்.

2. அதிற்றானேயுள்ள சத்துவ குணாம்சம் சர்ப்பத்தின் ஞானத்திற்கு உபாதானகாரணமாம். சர்ப்பத்திற்கும் அதன் ஞானத்திற்கும் விருத்தியுபஹித சேதனம் அதிஷ்டானமாம்.

1. விருத்தி வெளியில் ரஜ்ஜுதேசத்திற் சென்றது. அதனால் விருத்தியுபஹித சேதனமும் வெளியில் இருக்கிறது. ஆதலால் அது சர்ப்பத்தின் ஆசிரயமாதல் கூடும்.

2. அந்தக்கரணத்தின் சொரூபம் எவ்வளவோ, அவ்வளவே சாக்ஷியின் சொரூபமுமாய்ச் சரீரத்தினுள்ளிருக்கும் அந்தக்கரணமே விருத்திஸ்வரூப

பரிணாமத்தை யடைகிறது. ஆதலால் விருத்தியுபஹித சேதனம் சாக்ஷியாம். அதனால் அது ஞானத்துக்கு ஆசிரயமாதல் கூடும்.

ரஜ்ஜு பிரத்தியக்ஷமாகும்போது ரஜ்ஜுசேதனமும் விருத்திசேதனமும் இரண்டும் ஒன்றாகுதலால் ரஜ்ஜு ஞானத்தில் சர்ப்பமும் அதன் ஞானமும் நிவிருத்தியாதல் கூடும்.

**146.** யாண்டு ஒரே ரஜ்ஜுவில் பத்துப் புருஷர்களுக்குச் சிலருக்குச் சர்ப்பமும், சிலருக்குத் தடியும், சிலருக்குப் பூமாலையும், சிலருக்குப் பூமியின் வெடிப்பும். சிலருக்கு நீர்த்தாரையுமாய் வெவ்வேறாகத் தோற்றுகின்றதோ, அல்லது எல்லோருக்கும் சர்ப்பமே தோற்றுகின்றதோ, ஆண்டு எந்தப் புருஷனுக்கு ரஜ்ஜுவின் சாக்ஷாத்கார முண்டாகின்றதோ, அவனது விருத்தி சேதனத்தில் கற்பித அத்தியாசத்தின் நிவிருத்தி யுண்டாகிறது. எவனுக்கு ரஜ்ஜுஞான முண்டாகவில்லையோ, அவனுக்கு அத்தியாசத்தின் நிவிருத்தி யுண்டாகிறதில்லை. ஆதலால் விருத்திசேதனமே கற்பிதத்தின் அதிஷ்டானமாம்; ரஜ்ஜுமுதலிய விஷய உபஹித சேதனமன்று.

ரஜ்ஜு உபஹித சேதனத்தைச் சர்ப்ப தண்டாதிகளுக்கு அதிஷ்டானமெனக் கொள்ளின், பத்துப் புருஷர்களுக்குத் தோற்றும் பத்துப்பொருள்களும் ஒவ்வொருவனுக்கும் தோற்றுதல் வேண்டும். ஆனால் எமது கிரமப்படி எவனுடைய விருத்தி சேதனத்தில் எந்தப்பொருள் கற்பிதமாகிறதோ, அந்தப்பொருள் அவனுக்குமாத்திரம் தோற்றுகிறது; பிறனுக்குத் தோற்றுகிறதில்லை.

இவ்வாறு வெளியிலுள்ள சர்ப்பாதிகளுக்கும் அவற்றின் ஞானத்திற்கும் விருத்தியுபஹிதசாக்ஷி அதிஷ்டானமாம். சொப்பன பதார்த்தங்களுக்கும் அவற்றின் ஞானத்திற்கும் அந்தக்கரண உபஹித சாக்ஷியே அதிஷ்டானமாம்.

இவ்வாற்றால் சதசத்துகளுக்கு விலக்ஷணமான அநிர்வசனீய அவித்தையின் பரிணாமமான அநிர்வசனீயசர்ப்பாதிகளின் கியாதி (பிரதீதியும் சொல்லுதலும்) * அநிர்வசனீயக்கியாதி யெனப்படும்.

## 147. பிரசினம்:—அபாரமித்தையாகிய ஜகத்தின் ஆதாரமும் அதிஷ்டானமு மெவையெனல். சிஷ்யன் கேட்கலாயினன்.

சுவாமி! எதன்கண் இந்த அபாரமான ஜகத்துத் தோற்றுகின்றதோ, அத்தன்மைய இதன் ஆதாரம் யாது? அதனை எனக்குச் சொல்லவேண்டும்.

---

* அநிர்வசனீயக்கியாதி ஸ்ரீ விருத்திரத்நாவலியின் எட்டாவது ரத்நத்தில் சிறிது சொல்லப்பட்டிருக்கின்றது. அதுவே விரிவாய் ஸ்ரீ விருத்திப்பிரபாகரத்தின் ஏழாவது பிரகாசத்தில் நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

முற்கூறிய பிரசினத்தின் உத்தரம் 148. 149.

## 148. மித்தையாகிய ஜகத்திற்கு ஆதாரமும் அதிஷ்டானமும் நீயெனல்.

### ஸ்ரீ குரு சொல்லலுற்றார்.

சிஷ்யனே! உன்னுடைய நிஜரூப அஞ்ஞானத் (பிரஹ்மஸ்வரூபமாக வறியாத) தினால் உனக்கு மித்தையான ஜகத்துத் தோற்றுகிறது. ஆதலால் ஜகத்துக்காதாரமும் அதிஷ்டானமும் நீ. எங்ஙனம்: ரஜ்ஜுவை யறியாமையால் மித்தையான சர்ப்பம் தோற்றுகிறது; அங்கு மித்தையான சர்ப்பத்துக்கு ஆதாரமும் அதிஷ்டானமும் ரஜ்ஜுவாம்.

மித்தியாசர்ப்பத்திற்கு அதிஷ்டானம் முக்கிய (சித்தாந்த) மான இரண்டாவது பக்ஷத்தில் விருத்தியுபஹித சேதனமும், முதற்பக்ஷத்தில் ரஜ்ஜு உபஹித சேதனமுமாம். எந்தப்பக்ஷத்திலும் ரஜ்ஜு அதிஷ்டானமன்று.

அங்ஙனமாயினும், முதற்பக்ஷத்தில் சேதனத்தில் அதிஷ்டானத்தன்மையின் உபாதி ரஜ்ஜுவாம். ஆதலால் ஸ்தூல திருஷ்டியினால் ரஜ்ஜுவே யதிஷ்டான மெனப்படுகிறது., மித்தியாசர்ப்பத்துக்கு ரஜ்ஜு அதிஷ்டானமும் ஆதாரமுமா யிருப்பதுபோல மித்தியா ஜகத்துக்கு நீயே அதிஷ்டானமும் ஆதாரமுமாயிருக்கிறாய்.

## 149. ஆத்மாவின் சாமானியரூபம் ஆதாரமும் விசேஷவடிவம் அதிஷ்டானமுமாமெனல்.

இவ்விடத்தில் இது ரகசியமாம்:—ரஜ்ஜுவில் இரண்டு ஸ்வரூபங்களுள.

1. ஒன்று சாமானியரூபம்.

2. மற்றொன்று விசேஷரூபம்.

1. சாமானியவடிவம் "இது" என்பதாம்.

2. விசேஷவடிவம் "ரஜ்ஜு"வாம்.

1. "இது சர்ப்பம்" என்று மித்தியாசர்ப்பத்தோடு அபின்னமாய்ப் பிராந்திகாலத்திலும் தோற்றுகிற "இது" என்னும் ரூபம் சாமானியரூபமாம்.

2. பிராந்திகாலத்தில் எதன் ஸ்வரூபம் தோற்றாது, எது தோற்றுவதனால் பிராந்தி நீங்குகிறதோ, அது ரஜ்ஜுவின் விசேஷரூபமாம்.

அதுபோல ஆத்மாவுக்கும் இரண்டு ஸ்வரூபங்களுண்டு. 1. ஒன்று சாமானியரூபம். 2. ஒன்று விசேஷரூபம்.

1. சத்ரூபம் சாமானியரூபம்.

2. அசங்கத்தன்மை, கூடஸ்தத்தன்மை, நித்தியமுக்தத்தன்மை முதலியன விசேஷரூபம்.

எனெனின்,

1. "ஸ்தூலசூக்ஷ்மசங்காதம் 'இருக்கிறது' " என்பதில் ஸ்தூலசூக்ஷ்ம சங்காதத்தின் பிராந்திசமயத்திலும் மித்தையான சங்காதத்திற்கு வேறாகாமல் சத்ரூபம் விளங்குகிறது. ஆதலால் ஆத்மாவின் சத்ரூபம் சாமானியரூபமாம்.

2. ஸ்தூலசூக்ஷ்ம சங்காதத்தின் பிராந்திசமயத்தில் ஆத்மாவின் அசங்க கூடஸ்த நித்தியமுக்தஸ்வரூபம் தோற்றுகிறதில்லை. ஆனால் அசங்காதிஸ்வரூப ஆத்மா தோற்றுவதனால் சங்காத (சரீர) ப்பிராந்தி நிவிருத்தியாகிறது. ஆதலால் அசங்கத்தன்மை, கூடஸ்தத்தன்மை, நித்தியமுக்தத்தன்மை, வியாபகத்தன்மை முதலியன விசேஷரூபங்களாம்.

1. எல்லாப்பிராந்திகளினும் சாமானியரூபம் ஆதாரமெனப்படுகின்றது;

2. விசேஷரூபம் அதிஷ்டானமெனப்படுகின்றது.

1. சர்ப்பத்துக்கு ஆசிரயமான ரஜ்ஜுவின் சாமாநிய "இது" எனும் வடிவம் சர்ப்பத்துக்கு ஆதாரமாயிருக்கிறது;

2. விசேஷ ரஜ்ஜு சொரூபம் அதிஷ்டானமாயிருக்கிறது.

1. அங்ஙனமே மித்தியாப்பிரபஞ்சத்தின் ஆசிரயமான ஆத்மாவின் சாமானிய சத்ரூபம் பிரபஞ்சத்தின் ஆதாரமாம்.

2. அசங்கத்தன்மை முதலிய விசேஷரூபங்கள் அதிஷ்டானமாம்.

இவ்வாறு ஆதார அதிஷ்டானங்களுக்குச் சிறிது பேதம் * சர்வஞ்ஞாத்ம முனிவரால் சொல்லப்பட்டிருக்கிறது.

## 150. பிரசினம்:—ஜகத்திருஷ்டாவை ஆத்மாவிற்கு வேறெனச் சொல்லவேண்டுமெனல்.

### சிஷ்யன் கேட்கலாயினன்.

சுவாமி! பொய்யான ஜகத்துக்குத் திருஷ்டா யார்? எவன் அதிஷ்டானமாயும் ஆதாரமாயுமிருக்கிறானோ அவன் திருஷ்டாவாகான். தாற்பரியமிதுவாம்:—ஜகத்துக்கு ஆதாரமும் அதிஷ்டானமும் ஆத்மாவாதலால், ஆத்மாவினும் வேறாக ஜகத்திருஷ்டாவைச் சொல்லுதல்வேண்டும். அது சர்ப்பத்துக்கு அதிஷ்டானமும் ஆதாரமுமான ரஜ்ஜு எதுவோ அதனினும் வேறாகிய புருஷன் சர்ப்பத்துக்குத் திருஷ்டாவாதல்போலவாம்.

## முற்கூறிய பிரசினத்தின் உத்தரம் 151 - 152.

## 151. சகல கற்பிதங்கட்கும் அதிஷ்டானமே திருஷ்டாவாதல்.

### ஸ்ரீ குருவானவர் சொல்லலுற்றார்.

ஜகத்தில் எந்தவஸ்து மித்தையோ அது அதிஷ்டானத்தில் கற்பிதமாம். அதிஷ்டானம் இருவகைத்தாம்:—ஒன்று சேதனம்; மற்றொன்று ஜடம்.

1. அதிஷ்டானம் ஜடமாயிருக்குமிடத்தில் அதிஷ்டானத்தினும் திருஷ்டா வேறாம்.

---

* இவர் சம்க்ஷேபசாரீரகமென்னும் நூலின் ஆசிரியரும் ஸ்ரீ சங்கராசாரியஸ்வாமிகளின் பௌத்திர சிஷ்யருமாவர்.

2. சேதனம் அதிஷ்டானமா யிருக்குமிடத்தில் அதிஷ்டானமே திருஷ்டாவாம்; வேறு திருஷ்டாவில்லை.

சொப்பனத்திற்கு அதிஷ்டானம் சாக்ஷிசேதனம். அதுவே அந்தச்சொப்பனத்திற்குத் திருஷ்டாவாம். அங்ஙனமே ஜகத்துக்கு ஆத்மாவே அதிஷ்டானம். அதுவே திருஷ்டாவாம். ஸ்தூலதிருஷ்டியாகப் பழுதையைச் சர்ப்பத்திற்கு அதிஷ்டானமெனக்கொண்டு இச் சங்கை சமாதானங்கள் சொல்லப்பட்டன. சித்தாந்தத்திலோ சர்ப்பத்துக்கு அதிஷ்டானம் சாக்ஷிசேதனமாம். அதுவே திருஷ்டாவாம். ஆதலால் சகல கற்பிதங்களுக்கும் அதிஷ்டானமே திருஷ்டாவாம். சங்கை சமாதானங்கள் பொருந்தா.

## 152. மித்தையாகிய சம்சாரத்தின் நிவிருத்தியை விரும்புதல் கூடாது.

சிஷ்யனே! இவ்விதமாகச் சமுசாரரூபதுக்கம் பிராந்தியால் உன்னிடத்தில் தோற்றுகிறது. அந்த மித்தையின் நிவிருத்தியை இச்சித்தல் கூடாது.

திருஷ்டாந்தம்:—ஒரு இந்திரஜாலிகன் ஒருவனுக்குப் பொய்யான சத்துருவை மந்திரபலத்தினால் காண்பிப்பானாயின் அச்சத்துருவைக் கொல்ல அவன் பிரயத்தனப்படுகிறதில்லை; அதுபோல மித்தியாசமுசாரத்தினது நிவிருத்தியின் இச்சை பொருந்தாது.

## 153. பிரசினம்:—ஜன்மாதி சம்ஸாரம் துக்கஏதுவாயிருத்தலின் அதன் நிவிருத்திக்கு உபாயம் எனக்குக் காட்டுவீராக எனல்.

சுவாமி! "ஜகத்து உன்னிடத்தில் மித்தையாக விருக்கிறது; சத்தியமாகவில்லை" யென்று நீங்கள் சொன்னது சத்தியமாகவிருந்தாலும், அந்த மித்தியாரூபத்தினாலாவது அல்லது வேறு எந்த வுபாயத்தினாலாவது ஜனனமரணாதி சமுசாரம் என்னிடத்தில் தோற்றாதிருக்கும்படியான வுபாயத்தைத் தேவரீர் சொல்லி யருளல்வேண்டும்.

"பொய்யை நிவிருத்தி செய்யச் சாதனம் வேண்டியதில்லை" யென்று தேவரீர் சொன்னது சத்தியமாக விருந்தாலும், எவனுக்கு மித்தியாபதார்த்தம் துக்கத்துக்கு ஏதுவாயிருக்கிறதோ, அவனுக்கு அந்த மித்தியாபதார்த்தம் சாதனத்தினால் தள்ளத்தக்கது. ஒருவனுக்குத் தினந்தோறும் பயங்கரமான சொப்பனமுண்டாகிறது. அது பொய்யாகவிருந்தாலும் அதனை நீக்குதற்காக ஜபம் பாதப்பிரக்ஷாளன முதலிய அநேக வுபாயங்களை அநுஷ்டிக்கின்றான். அதுபோல இந்தச் சமுசாரம் பொய்யாகவிருந்தாலும் ஜன்மாதி துக்கத்திற்கு ஹேதுவாக எனக்குத் தோற்றுகிறது. ஆதலால் சமுசாரத்தை நிவிருத்திசெய்ய இச்சிக்கிறேன். தாம் தயவுசெய்து உபாயத்தைக் காட்டுவீராக.

### முற்கூறிய பிரசினத்தின் உத்தரம் 154-155.

### 154. ஆத்மாவின் அஞ்ஞானத்தினுல் ஜகத்தின் பிரதீதி யுண்டாகின்றது. அதன் நிவிருத்தியின் உபாயம் ஞானத்தின் சொரூபமாமெனல்.

### ஸ்ரீ குரு சொல்லலுற்ருர்.

சிஷ்யனே! ஜகத்ரூபமான துக்கத்தை நிவிருத்திசெய்யும் சாதனத்தைக் கேட்டாய். அதை யானுனக்கு * முன்னமே சொல்லிவிட்டேன். அதனை நீ திடமாக நிச்சயஞ்செய். அதனுல் ஜகத்ரூபதுக்கம் உன்னிடத்தில் தங்காது.

சிஷ்யனே! உன்னுடைய ஆத்ம சொரூபத்தை நீ யறியாததினுல் ஜகத்ரூபதுக்கம் உனக்குத் தோற்றுகிறது. அது ஆத்மஞானத்தால் நிவிருத்தியாகிறது. எந்த வஸ்து எதன் அஞ்ஞானத்தினுல் விளங்குகிறதோ, அந்த வஸ்து அதன் ஞானத்தினுல் நீங்குகிறது என்பது நியமம். ரஜ்ஜுவை யறியாததினுல் சர்ப்பம் தோற்றுகிறது. அது ரஜ்ஜுவென்று தெரிந்தமாத்திரத்தில் நிவிருத்தியாகிறது. அதுபோல ஆத்மாவை யறியாததினுல் ஜகத்துத் தோற்றுகிறது. ஆத்மாவை யறிந்தமாத்திரத்தில் ஜகத்து நிவிருத்தியாகிறது. அந்த ஆத்மஞானத்தை யானுனக்குச் சொல்லிவிட்டேன்.

ஜகத்து என்னிடத்தில் மூன்றுகாலத்திலுமில்லை. ஏனெனின் அது மித்தையா யிருக்கிறது. எது மித்தையோ அது அதிஷ்டானத்தின் ஹானியைச் செய்கிறதில்லை. கானல்ஜலம் பூமியை நனைக்கிறதில்லை. அதுபோல ஜகத்து விளங்குகிறது; ஆனுல் மித்தையாயிருக்கிறது; எனக்கு ஹானி யுண்டாக்குவதில் சிறிதும் சாமர்த்திய முடையதன்று. "நான் சச்சிதானந்தரூபப் பிரஹ்ம ஸ்வரூபமா யிருக்கிறேன்" என்னும் நிச்சயத்திற்கு ஞானமென்று பெயர். அதுவே மோக்ஷத்திற்குச் சாதனம்; வேறெதுவும் சாதனமன்று. அந்த ஞானத்தை நான் உனக்கு முன்னமே உபதேசம் செய்துவிட்டேன்.

### 155. அஞ்ஞானத்தின் நாசம் கேவல ஞானத்தாலாம்; கர்ம உபாசனைகளா லாகாதெனல்.

சிஷ்யனே! ஜகத்தின் உபாதானகாரணம் அஞ்ஞானமாம். அந்த அஞ்ஞான நாசத்தால் ஜகத்துத் தானே நாசமாகிறது. ஏனெனின் உபாதானம் நசித்தபின் காரிய மிருப்பதில்லை. அந்த அஞ்ஞானத்தின் நாசம் கேவலம் ஞானத்தினுல் உண்டாகிறது; கர்மத்தினுலும், உபாசனையினுலும் உண்டாகிறதில்லை. ஏனெனின் அஞ்ஞானத்திற்கு விரோதி ஞானமாம்; கர்ம உபாசனைகள் விரோதிகளன்று.

திருஷ்டாந்தம்:—வீட்டினுள்ளிருக்கும் இருள் எச்செய்கையாலும் நீங்குகிறதில்லை; கேவலம் பிரகாசத்தால் நீங்குகிறது. அதுபோல அஞ்ஞான

---

* முன் இதே தரங்கத்தின்கண் உள்ள (115-123) பிரசங்கங்களிற் சொல்லப்பட்டது. மீண்டும் அவ்வுபாயத்தையே கூறுகின்ருர்.

வடிவ இருள் ஞானரூபப்பிரகாசத்தால் நிவிருத்தியாகிறது; வேறெந்தச் சாதனங்களாலும் நிவிருத்தியாகிறதில்லை. சிஷ்யனே! ஜகத்து நிவிருத்தியாகும்படியான உபதேசத்தை யான் உனக்குச் சொன்னேன். இதனை நீ மனதிற்கொண்டு செவ்வையாய் விசாரித்துச் சமுசயங்களேதேனுமிருந்தால் கேட்பாயாக.

பிரசிநம் 156-158.

## 156. முற்கூறிய அர்த்தத்தை அநுவதித்தலோடு சொல்லப்படும் சங்கையைச் சூசிப்பித்தல்.

சிஷ்யன் கேட்கலாயினன்.

சுவாமி! தாம் சொன்னபடி "ஜகத்திற்குக் காரணம் அஞ்ஞானம். அந்த அஞ்ஞான நாசத்தாலுண்டாகும் ஜகத்தின் நிவிருத்தி ஞானத்தாலுண்டாகிறது" என்பதையும், "ஜகத்து மித்தை; ஜீவன் ஆநந்தஸ்வரூபன்; அவன் பிரஹ்மத்தினும் வேறல்லன்; பிரஹ்மரூபமேயாவன் என்னும் நிச்சயத்திற்கு ஞானமென்று பெயர். அதில் ஜகத்து மித்தை; ஜீவன் ஆநந்தஸ்வரூபன்." என்பதையும் நான் சத்தியமாக அறிந்தேன்.

ஆனால் ஜீவனும் பிரஹ்மமும் ஒன்றென்றதை யான் அறியவில்லை; ஜீவப்பிரஹ்மங்களின் பேதத்தையறிவிக்கும் சங்கை என் மனதில் தோற்றுதலால்.

## 157. பிரஹ்மமும் எனது சொரூபமும் ஒன்றற்கொன்று விருத்தமாம். ஆதலால் அதனோடு எனக்கு ஐக்கியம் பொருந்தாதெனல்.

சுவாமி!

1. நான் புண்ணிய பாபங்களைச் செய்கிறேன்.

2. அவற்றின் பயனாகிய ஜனனமரணம், சுகதுக்கம் என்பவற்றை யநுபவிக்கிறேன்.

3. அநேகவிதமான ஜகத்து என்னிடத்தில் தோற்றுகிறது.

4. ஜகத்திற்குக் காரணமான அஞ்ஞானத்தை நிவிருத்திக்க நான் ஞானத்தை விரும்புகிறேன்.

1. பிரஹ்மத்தில் புண்ணியமில்லை, பாபமில்லை.

2. ஜன்மம் இல்லை, மரணமில்லை, சுகமில்லை, துக்கமில்லை.

3. வேறெவ்விதக் கிலேசமும் பிரஹ்மத்திலில்லை.

4. ஞானத்தின் இச்சையுமில்லை.

ஆதலால் பிரஹ்மத்தின் சொரூபமும் எனது சொரூபமும் ஒன்றற்கொன்று விருத்தமாம். ஆதலால் இரண்டற்கும் ஏகத்துவம் பொருந்தாது.

என்னிடத்திலும் ஜன்மாதி சமுசாரம் பரமார்த்தமாயில்லை. என்றும் பொய்யான ஜன்மாதிகள் எனக்குப் பிராந்தியினல் தோற்றுகின்றன; பிரஹ்மத்தில் இல்லை. ஜீவனுக்கும் பிரஹ்மத்துக்கும் இவ்வளவு பேதமிருக்தலால் * ஏகத்துவம் பொருந்தாது.

## 158. பக்ஷிவடிவத்தன்மையால் விலக்ஷணமாயுள்ள ஜீவப்பிரஹ்மங்களின் ஐக்கியத்தினல் கர்ம உபாசனைகளைப் பிரதிபாதிக்கும் வேதம் நிஷ்பலமாமெனல்.

### வேறு சங்கை.

சுவாமி ! எனக்கு வேறொரு சமுசயம் உண்டு. அதனைத் தாம் கேட்க வேண்டும். அச்சம்சயம் எத்தன்மையதெனின், அதனல் ஜீவப்பிரஹ்மங்களின் ஏகத்துவநிச்சயம் கெட்டுப்போகும். அதனைச் சொல்லுகின்றேன். தாம் கேட்டு அச்சம்சயத்தைக் கெடுக்கவேண்டும். வேதத்தில் இவ்வாறு பார்த்திருக்கிறேன்:—புத்திரூபமான ஒரு விருக்ஷத்தில் இரண்டு பக்ஷிகளுண்டு. அவைகளிரண்டும் சமானமாம். அவற்றில்,

1. ஒன்று கர்மபல போக்தாவாயிருக்கின்றது.

2. மற்றொன்று சுத்தமாய்ப் போகமின்றியதாய் அசங்கமாய்க் கர்மபல போக்தாவைப் பிரகாசிக்கிறது.

இவற்றில்,

1. ஒன்று கர்மபலத்தைப் புசிக்கும் ஜீவனகத் தோற்றுகின்றது.

2. மற்றொன்று பரமாத்மாவாகத் தோற்றுகிறது. ஆதலால் அவற்றிற்கு ஏகத்துவம் பொருந்ாது.

வேதத்திற் கர்மமும் உபாசனையும் வெகுவிதமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. அவை ஜீவனும் பிரஹ்மமும் ஒன்றென்பதில் நிஷ்பலமாய்விடும். ஏனெனின், தாம் ஜீவப்பிரஹ்ம ஐக்கியம் கூறுகின்றீர்கள். அது 1. பிரஹ்மத்தில் ஜீவஸ்வரூபத்திற்கு அந்தர்பாவம் சொல்லுகின்றீர்களா? 2. அல்லது ஜீவனிடத்தில் பிரஹ்மத்தின் ஸ்வரூபத்திற்கு அந்தர்பாவம் சொல்லுகிறீர்களா?

1. ஒருகால் பிரஹ்மத்தில் ஜீவஸ்வரூபத்திற்கு அந்தர்பாவம் சொல்லும் பக்ஷத்தில் ஜீவனே பிரஹ்மரூபமாதலால் அதிகாரி இல்லாமற்போவான். அதனல் கர்ம உபாசனைகள் நிஷ்பலமாகும்.

2. ஜீவனிடத்தில் பிரஹ்மஸ்வரூபத்திற்கு அந்தர்பாவம் சொல்லும் பக்ஷத்தில்,

1. பிரஹ்மம் ஜீவரூபமாயிருத்தலால் எதன் உபாசனை செய்யப்படுகின்றதோ, அந்த வுபாசியத்தின் அபாவமுண்டாகும். ஆதலால் உபாசனை நிஷ்பலமாகும்.

2. அன்றியும், கர்மபலத்தைக் கொடுக்கிற பரமாத்மாவின் அபாவமுண்டாகுமாகலின், கர்மம் நிஷ்பலமாகும்.

* இது பிரமேயகத சம்சயத்தின் சொரூபமாம்.

மீமாம்ஸகர் சொல்லும் "கர்மமே ஈசுவரன்; அதனாலேயே பயனுண்டாகிறது." என்னும் வார்த்தை நலமுடைத்தன்று. ஏனெனின் கர்மம் ஜடம்; அவற்றிற்குப் பலத்தைக் கொடுக்கும் சாமர்த்தியம் பொருந்தாது. ஆதலால் கர்மத்தின் பலத்தை ஈசுவரனே கொடுக்கிறார்.

இவ்வாற்றால் பரமாத்மாவுக்கும் ஜீவனுக்கும்* ஏகத்துவம் பொருந்தாது.

## இலக்கம் 157-ல் உள்ள பிரசினத்தின் உத்தரம். 159-172.

### 159. நான்கு ஆகாயமும் நான்கு சேதனமும்.

### ஸ்ரீ குரு சொல்லலுற்றார்.

சிஷ்யனே! உனக்குண்டாகிற சந்தேகத்தை நிவர்த்திக்கும் விசாரத்தைச் சொல்லுகிறேன் கேள்.

**ஒரு ஆகாசத்திற்கு நான்கு பேதங்கள் உள:**—அவை 1. கடாகாசம், 2. ஜலாகாசம், 3. மேகாகாசம், 4. மகாகாசம் என்பனவாம். அதுபோல **ஒரே சேதனத்திற்கு நான்கு பேதங்களுள:**—அவை 1. கூடஸ்தன், 2. ஜீவன், 3. ஈசுவரன், 4. பிரஹ்மம் என்பனவாம்.

இந்நான்கு பேதங்களும் ஆகாயத்திற்போல சேதனத்திலுமுண்டு.

சிஷ்யனே! எப்போது இவற்றின் ஸ்வரூபங்களை நன்றாகக் கேட்டுத் தெரிந்துகொள்ளுகிறாயோ, அப்போது உனது சங்கைக்குச் சமாதானம் நீயே தெரிந்துகொள்ளுவாய். ஆதலால் நான் உனக்கு இவற்றின் சொரூபங்களைச் சொல்லுகிறேன் கேள். இவற்றைக் கேட்பதினால் சந்தேகமின்றிய ஞானம் உனக்குண்டாகி ஜன்மாதி துக்கங்களும் நாசமாய்விடும்.

### 160. 1. கடாகாசவர்ணனம்.

சிஷ்யனே! ஜலத்தினால் நிறைந்திருக்கிற கடத்துக்கு எவ்வளவு ஆகாசம் அவகாசங் கொடுக்கிறதோ, அவ்வளவு ஆகாசத்தினைக் கற்றோர் † கடாகாசமென்று சொல்லுவர்.

---

* இது பிரமாணகத சம்சயத்தின் சொரூபமாம்.

† இங்கு இது சங்கையாம்:—கடத்திற்கு வெளியே இருக்கிற ஆகாசம் மகாகாசமாம்; அதனின் வேறாய் உள்ளே யிருக்கிற ஆகாசம் கடாகாசமாமென்னும் இக்கடாகாசத்தின் லக்ஷணம் எளிதாம். அதனைவிட்டு "ஜலத்தினால் நிறைந்திருக்கிற கடத்திற்கு எவ்வளவு ஆகாசம் அவகாசங் கொடுக்கிறதோ, அவ்வளவு ஆகாசம் கடாகாசமாம்" என்று இவ்வாறு லக்ஷணஞ் செய்வதனால் என்ன பிரயோஜனம்?

இதற்கு இது சமாதானமாம்:—கடாகாசத்திற்கு முற்கூறிய லக்ஷணஞ் செய்யின், கடம் எதில் நிலைத்திருக்கின்றதோ, அந்த ஆகாசம் ஐந்தாவது கபாலாகாச (ஓட்டாகாய) மென்று சொல்லலாகும். அது சாஸ்திரத்திற்கு விருத்தமாம். ஆதலால் இவ்விரண்டாவது லக்ஷணம் செய்தல் உசிதமாம்.

## 161. 2. ஜலாகாசவர்ணனம்.

சிஷ்யனே! ஜலம் நிறைந்த கடத்தில் நக்ஷத்திராதிகளோடு ஆகாசத்தின் பிரதிபிம்பமுண்டாகிறது. அவ்வாகாயத்தின் * பிரதிபிம்பமும் கடாகாயமுமாகிய இரண்டும் சேர்ந்து ஜலாகாசமென்று சொல்லப்படும்.

### இதில் ஒருவன் சங்கிக்கின்றான்.

ஆகாசத்தின் பிரதிபிம்ப முண்டாகாது; ஆனால் கேவலம் நக்ஷத்திராதிகளின் பிரதிபிம்பமுண்டாகும். ஏனெனின், ஆகாசம் ரூபமில்லாதது; ரூபமுள்ள பதார்த்தங்களின் பிரதிபிம்பமுண்டாமாகலின் ஆகாசத்துக்குப் பிரதிபிம்பம் பொருந்தாது.

### அச்சங்கைக்குச் சமாதானம்.

ஜலத்தில் ஆகாசத்தின் பிரதிபிம்ப முண்டாகாவிடின், குதிரைக்குளப்படியளவு ஜலத்தில் மனிதனளவான பெருமையின் (ஆழத்தின்) தோற்றமுண்டாகிறது. அது உண்டாகலாகாது. ஆதலால் ஆகாசத்தின் பிரதிபிம்பத்தை ஒப்புக்கொள்ளுதல் தகுதியாம்.

ரூபமில்லாத பதார்த்தத்துக்குப் பிரதிபிம்பமுண்டாகிறதில்லை யென்று கூறின், அதுவும் நியமமில்லை. ஏனெனின் † ரூபமில்லாத சத்தத்துக்குப் பிரதித்தொனி யுண்டாகிறது. அந்தப் பிரதித்தொனி சத்தத்தின் பிரதிபிம்பமாம். ஆதலால் ரூபாகித ஆகாசத்துக்கும் பிரதிபிம்பம் கூடும்.

## 162. 3. மேகாகாசவர்ணனம்.

மேகத்துக்கு எந்த ஆகாசம் அவகாசங் கொடுக்கிறதோ, மேக ஜலத்தில் எந்த ஆகாசத்தின் பிரதிபிம்ப முண்டாகிறதோ, அவ்விரண்டினையும் மேகாகாசமென்பர்.

### இதில் ஒருவன் சங்கிக்கின்றான்.

மேகம் ஆகாசத்தில் இருக்கிறது. ஆனால் அதில் ஜலமும் ஆகாசப்பிரதிபிம்பமும் காணுதலின்றி எங்ஙனம் அறியப்படும்?

---

* ஜலமின்றிப் பிரதிபிம்ப முண்டாகாது. ஆதலால் ஈண்டு ஆகாயத்தின் பிரதிபிம்பம் என்பதனால் கடத்திலுள்ள ஜலம் எதுவோ அதனோடு கூடிய ஆகாயத்தின் பிரதிபிம்பம் கொள்ளப்படுகின்றது.

† குணம் குணத்தை ஆசிரயித்திராது; ஆனால் ஆகாசாதி திரவியத்தை யாசிரயித்திருக்கும் என்னும் நியமப்படி நீலபீதாதி வர்ணமயமான ரூபம் ரூபகுணத்தை ஆசிரயிக்கா திருத்தலால் ரூபாகிதமாம். இந்த ரூபாகித நீலமுதலிய வர்ணங்களின் பிரதிபிம்பம் கண்ணாடிமுதலிய சொச்ச உபாதியில் உண்டாகின்றது. அங்ஙனமே ரூபாகித ஆகாசத்திற்கும் ரூபாகித சேதனத்திற்கும் பிரதிபிம்பம் பொருந்துகிறது.

### அதற்குச் சமாதானம்.

மேகத்தில் ஜலமும் ஆகாசப்பிரதிபிம்பமும் பிரத்தியக்ஷமாகாவிடினும் அனுமானத்தினால் அறியப்படுகின்றன.

1. மேகத்திலிருந்து ஜலவிருஷ்டி யுண்டாவதால் மேகத்தில் ஜலமிருக்கிறதென்று அனுமானமுண்டாகின்றது. மேகத்தில் ஜலமிராதாயின் ஜலவிருஷ்டி மேகத்தினின்று முண்டாகாது.

2. மேகத்திலுள்ள ஜலம் ஆகாயத்தின் பிரதிபிம்பத்தோடுகூடியதாயிருக்கிறது. ஏனெனின், ஜலமிருந்தால் அது ஆகாயத்தின் பிரதிபிம்பமின்றியிராது. ஆதலால் மேகத்திலுள்ள ஜலமும் ஆகாயத்தின் பிரதிபிம்பத்தோடு கூடியதாம்.

இவ்வாற்றால் மேகத்தில் ஜலம் ஆகாசத்தின் பிரதிபிம்ப மென்பவற்றின் அனுமான முண்டாகிறது.

## 163. 4. மகாகாச வர்ணனம்.

பிரஹ்மாண்டத்துக்கு உள்ளும் புறமும் ஒரேவிதமாயும் வியாபகமாயும் இருக்கிற ஆகாசத்தின் ஸ்வரூபத்தை அற்புத புத்தியையுடைய பண்டிதர் **மகாகாச**மென்று சொல்லுவர்.

## 164. நான்கு சேதனங்களினது வர்ணனத்தின் உபோற்காதம்.

சிஷ்யனே! நான்குவித ஆகாசத்தின் லக்ஷணத்தைச் சொன்னேன். இனி * நான்குவித சேதனத்தின் லக்ஷணத்தைச் சொல்லுகிறேன் கேள். அதனைக் கேட்பதினால் விசாரத்தின் பயனாகிய ஞானம் அடையப்படும்.

## 165. 1. கூடஸ்த வர்ணனம்.

புத்தி † அல்லது வியஷ்டி அஞ்ஞானத்தின் அதிஷ்டான சேதனத்துக்குக் கூடஸ்தரென்று பெயர்.

---

* சில அத்வைதக் கிரந்தங்களில் ஜீவன் ஈசுவரன் பிரஹ்மம் என மூன்று சேதனங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அநாதியான ஆறுபதார்த்தங்களிலும் இம்மூன்றே எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றன. கூடஸ்தசேதனத்தை விட்டதனால் ஒருதோஷமுமில்லை. ஏனெனின், கூடஸ்தனுக்கும் பிரஹ்மத்துக்கும் பெயர்மாத்திரத்தில் பேதமாம்; வேறெவ்வித பேதமுமில்லை. இதுவுமன்றி வித்தியாரண்யஸ்வாமிகள் திருக்குத்திருசிய மென்னும் கிரந்தத்தில் கூடஸ்தன் பாரமார்த்திகஜீவனென்றும் ஜாக்கிர காலத்திலுள்ள அந்தக்கரணப் பிரதிபிம்பன் வியாவகாரிகஜீவனென்றும், சொப்பனத்திலுள்ளவன் பிராதிபாஸிகஜீவனென்றும் சொல்லியிருக்கிறார். இவ்விதத்தால் கூடஸ்தன் ஜீவனிடத்து அந்தர்பாவமாயிருக்கிறான்.

† ஜீவஸ்வரூபம் புத்திப்பிரதிபிம்பமாகவும் அவித்தியாப் பிரதிபிம்பமாகவும் இனி வர்ணிக்கப்படுதலால் இவ்விடத்தில் இரண்டு பக்ஷங்கள் பிரஸ்தாபிக்கப்பட்டன.

1. எந்தப்பக்ஷத்தில் புத்தியோடுகூடிய சேதனம் ஜீவனாகிறதோ, அந்தப் பக்ஷத்தில் புத்திக் கதிஷ்டானசேதனம் கூடஸ்த னெனப்படுகிறது.

2. எந்தப்பக்ஷத்தில் வியஷ்டி அஞ்ஞானத்தோடுகூடிய சேதனம் ஜீவனென்று சொல்லப்படுகிறதோ, அந்தப்பக்ஷத்தில் வியஷ்டி அஞ்ஞானத்துக்கு அதிஷ்டான சேதனம் கூடஸ்தனெனப்படுகிறது.

இந்த ஸ்தானத்தில் இது சித்தாந்தமாம்:—ஜீவத்தன்மைக்கு எது விசேஷணமோ, அதன் அதிஷ்டானத்துக்குக் கூடஸ்தனென்று பெயராம். இந்தக் கூடஸ்தன் உற்பத்தியில்லாததாம். இதன் அபிப்பிராயம் இதுவாம்:—பிரஹ்மத்துக்கு வேறாக எப்படிச் சிதாபாஸன் உண்டாகிறானோ, அப்படிக் கூடஸ்தனுண்டாகிறதில்லை; ஆனால் பிரஹ்மரூபமாகவே யிருக்கிறான். அது கடாகாசம் மகாகாசத்துக்கு வேறாகாமல் மகாகாசரூபமாகவே யிருப்பதுபோலாம். இந்தக்கூடஸ்தன் எவனோ அவனே ஆத்மபதத்தின் லக்ஷியார்த்தமாம். கூடஸ்தனுக்கே பிரத்தியக்கென்றும் நிஜரூபமென்றும் ஜீவஸாக்ஷியென்றும் பெயர்.

## 166. 2. ஜீவ வர்ணனம் 166-170.

அநேக காமகர்மங்களுடன் கூடிய புத்தியில் உண்டாகிற சேதனப் பிரதிபிம்பத்தை வித்துவான்கள் ஜீவனென்பர். அந்தக் கேவலப் பிரதிபிம்ப மாத்திரத்தை ஜீவனென்று சொல்லுவதில்லை. ஆனால் கடாகாசத்தோடு கூடிய ஆகாசப் பிரதிபிம்பத்தை ஜலாகாசமென்று சொல்லுவதுபோலப் பிம்பமாகிய கூடஸ்தனோடு கூடிய சிதாபாசனை ஜீவனென்று சொல்லுகிறார்கள்.

ஆதலால் புத்தியிலுள்ள * சிதாபாஸனும் புத்தியின் அதிஷ்டான சேதனமுமாகிய இரண்டற்கும் † ஜீவனென்று பெயர்.

---

* இங்கே "சிதாபாஸ" னென்னும் சப்தத்தால் புத்தியோடுகூடிய சிதாபாஸன் கொள்ளப்படும். இவ்வார்த்தை மேல் 187-வது பிரசங்கத்தின் ஆரம்பத்தில் நூலாசிரியரால் எழுதப்பட்டிருக்கின்றது. பஞ்சதசியில் ஸ்ரீ வித்தியாரணிய ஸ்வாமிகளும் "புத்தி அதன்கண் உள்ள சிதாபாஸன் அவ்விரண்டற்கும் அதிஷ்டானமாகிய கூடஸ்த சைதன்னியம் என்னும் மூன்றன் சமூகம் ஜீவனெனப்படுகின்றது" என்றெழுதி யிருக்கின்றனர். ஆதலால் புத்தி அல்லது அவித்தை அதன்கண் உள்ள சிதாபாஸன் அவற்றிற் கதிஷ்டானமாகிய கூடஸ்தன் என்னும் மூன்றும் சேர்ந்து ஜீவனெனப்படுகின்றது.

† காமமும் கர்மமுமாகிய ஜலத்தோடுகூடிய புத்திவடிவு கடத்தில் சேதனத்தின் பிரதிபிம்பமிருக்கின்றதுஎன்னும் கிரமம் அறிதற்கரியதாம். ஆதலால் ஸ்தூலதேகவடிவு கடத்தில் நகசிகைபரியந்தம் நிரம்பியுள்ளது புத்தியாகிய ஜலமாம். அதில் சேதனத்தின் பிரதிபிம்பமும் கூடஸ்தனுமாகிய இரண்டற்கும் பெயர் ஜீவனென்னும் கிரமம் அறிதற்கெளியதாம்.

1. இங்குக் கேவல புத்தியோடுகூடிய சிதாபாஸனைத் துவம்பதத்தின் அர்த்தமாகிய ஜீவனெனக் கூறின், அதில் பாகத்தியாகலக்ஷணை சம்பவியாது; ஆனால் வாச்சிய பாகம் முழுவதினையும் விடுதலாகிய விட்டலக்ஷணை சம்பவிக்கின்றது. அங்ஙனம் கொள்ளுதல் ஆசாரியர்களது யுக்திக்கு விருத்தமாம்.

**167.** முன் பிம்பமாகிய கூடஸ்தனோடு கூடிய ஆபாஸன் ஜீவன் எனப் பட்டது. அதனால்,

1. இது தோற்றுகின்றது:—புத்தியிலுள்ள பிரதிபிம்பம் எதுவோ, அது கூடஸ்தனதாம்; வெளிப் பிரஹ்மசேதனத்தினதன்று. ஏனெனின், எதனது பிரதிபிம்ப முண்டாகின்றதோ, அது பிம்ப மெனப்படுகின்றது. அது கூடஸ்தனைப் பிம்பமென்று சொன்னமையால் அதன் பிரதிபிம்பமாமென்னும் பிரதீதியுண்டாகின்றது. அதனை இப்போது கூறுகின்றார்.

சிவப்புப் புஷ்பத்தின்பேரில் வைக்கப்பட்ட வெண்மையான ஸ்படிகத்தில் புஷ்பத்தினது சிவப்பு வர்ணத்தின் தோற்றம் உண்டாகிறது. அது அந்தச் சிவப்புப் புஷ்பத்தின் பிரதிபிம்பமாம். அதுபோலக் கூடஸ்தனை யாசிரயித்த புத்தியில் கூடஸ்தனுடைய பிரகாசத்தின் தோற்ற முண்டாகிறது. ஸ்படிகம் மிகவும் சுத்தமாயிருப்பதுபோலப் புத்தியும் சத்துவகுணத்தின் காரியமாயிருத்தலின் மிகச் சுத்தமாயிருக்கிறது. ஆதலால் கூடஸ்தனது தோற்றத்திற்கும் பிரதிபிம்பமென்று பெயர்.

2. அல்லது, பிரஹ்ம சைதன்னியத்தின் பிரதிபிம்பமுண்டாம். கடத்திலுள்ள ஜலத்தில் மகாகாசத்தின் பிரதிபிம்ப முண்டாகிறது; கடத்தினுள்ளிருக்கும் ஆகாசத்தின் பிரதிபிம்ப முண்டாகிறதில்லை. ஏனெனின், எவ்வளவு கம்பீரத்துவம் (ஆழம்) ஜலத்தில் காணப்படுகிறதோ அவ்வளவு ஆழம் கடத்திலுள்ள ஆகாசத்தில் இல்லை. அந்த ஆழம் ஆகாசத்தின் பிரதிபிம்பமாம். ஆகையால் அது வெளியாகாசத்தின் பிரதிபிம்பமாம்.

1. "வியாபகசேதனத்திற்கு பிரதிபிம்பம் பொருந்தா"தென்று ஒருவன் சொல்லுவானாயின்,

அச்சங்கை ஆகாச திருஷ்டாந்தத்தால் நிவிருத்தியாகிறது. ஏனெனின், ஆகாசம் வியாபகமாயிருந்தும் அதன் பிரதிபிம்பமுண்டாகிறது. அங்ஙனமே வியாபக சைதன்னியத்திற்கும் பிரதிபிம்பம் பொருந்தும்.

2. "ரூபமுடைய பதார்த்தத்திற்கு ரூபமுடைய பதார்த்தத்தில் பிரதிபிம்பமுண்டாகிறது" என்று ஒருவன் கூறுவானாயின்,

அதுவும் நியமமில்லை. ஏனெனின், "ரூபமில்லாத சப்தத்திற்கு ரூபமில்லாத ஆகாசத்தில் பிரதிபிம்பமுண்டாகிற" தென்று முன்னமே (161) சொல்லப்பட்டது. ஆகையால் சைதன்னியத்திற்கும் பிரதிபிம்பம் கூடும்.

---

2. அதிஷ்டானத்திற் கபின்னமாய் அதிஷ்டானத்தை மறைப்பது ஆரோப்பிய மெனப்படும். அதிஷ்டானத்தின் வேறாய் ஓரிடத்தும் ஆரோப்பியத்தின் தோற்றமுண்டாகிறதில்லை. இது அநுபவத்திற்கு விருத்தமாம்.

ஆதலால் சிதாபாஸனோடு கூடிய புத்திவிசிஷ்ட கூடஸ்தசேதனன் ஜீவனென்று கொள்ளுதல் தகுதியாம்.

இவ்விதத்தால் புத்தியிலுள்ள ஆபாஸனும் புத்தியின் அதிஷ்டான சேதனமுமாகிய இரண்டற்கும் பெயர் ஜீவனென்று சொல்லப்பட்டது.

1. அந்த ஜீவன் துவம்பதத்தின் வாச்சிய மெனப்படுகின்றது.

2. ஜீவனிடத்திலுள்ள சிதாபாஸனைவிட்டுக் கூடஸ்தன்மாத்திரம் துவம் பதத்தின் லக்ஷியமெனப்படுகின்றது.

1. அஹம் (நான் என்னும்) சப்தத்தின் வாச்சியமும் ஜீவனும்.

2. கேவல கூடஸ்தன் அஹம் சப்தத்தின் லக்ஷியமாம்.

**168.** சிதாபாஸன் கூடஸ்தன் என்னும் இரண்டற்கும் பெயர் ஜீவனு மாயினும், ஜீவத்தன்மையின் சகல தர்மங்களும் ஆபாஸனிடத்தி லிருக்கின் றன. புண்ணியம் பாபம் அவற்றின் பயனாகிய சுக துக்கம், லோகாந்தரம் போகுதல் இந்த லோகத்திற்கு வருதல் முதலிய எல்லாவற்றையும் ஆபாஸ சகித புத்தி செய்கின்றது; கூடஸ்தன் செய்கிறதில்லை; கூடஸ்தனிடத்தில் கேவலம் பிராந்தியால் தோற்றுகின்றன.

அந்தப் பிராந்தித் தோற்றமும் புத்திசகித ஆப்பாசனுக்குண்டாகிறது; கூடஸ்தனுக்குண்டாகிறதில்லை. ஏனெனின்,

1. கூடம் என்பது கொல்லன் பட்டடை. அதுபோல நிர்விகாரமாயிருப் பது கூடஸ்தனென்று சொல்லப்படுகிறது.

2. அல்லது கூடமென்பது மித்தையாகிற புத்தியும் சிதாபாஸனுமாம். அவற்றின்கண் அசங்க (பற்றின்றிய) வடிவமாக நிலைத்திருப்பது கூடஸ்தன் எனப்படுகிறது.

ஆகையால் கூடஸ்தனிடத்தில் பிராந்தியாதிகள் சம்பவியா; ஆனால் சிதா பாஸனிடத்தில் சம்பவிக்கும்.

**169.** முற்றும் விசாரித்துப் பார்க்குமிடத்துப் புண்ணியபாபங்கள் சுக துக்கங்கள் லோகாந்தரம்போகுதல் வருதல் என்பவை கேவலம் புத்தியி லிருக்கின்றன; * ஆபாஸனிடத்த மில்லை. புத்தியின் சையோகத்தால் ஆபாஸ னிடத்தில் இருக்கின்றன.

* இருப்புக் கொப்பரையில் காய்ச்சப்பட்ட தைலத்தில் ஆகாயத்தின் பிரதிபிம்ப முண்டாகின்றது. அவ்வக்கினியின் தாபம் (காய்வு) தைலத்திற்கேயாம்; அதன்கண் ணுள்ள ஆகாயத்தின் பிரதிபிம்பத்திற்கில்லை. அப்போது தைலநிரம்பிய கொப்பரையின் அதிஷ்டானவடிவ ஆகாயத்திற்கு எங்கிருந்துண்டாகும்? அதுபோலப் புண்ணிய பாபாதி வடிவ சம்ஸ்காரம் எதுவோ அது கேவல புத்தியி லிருக்கின்றது. ஆபாஸனிடத் தும் பிராந்தியின்றி இல்லை. அப்போது அவற்றின் அதிஷ்டான கூடஸ்தனிடத்து எங் கிருந்தண்டாகும்? ஆனால் கூடஸ்தனிடத்தி அதன் தோற்றமே அஞ்ஞானத்தினாலாகிய பிராந்தியாம்.

எங்ஙனம் "ஜலசகித கடம் கோணலாலும் நேராலும் ஒருவனால் கொண்டுபோகப்பட்டாலும் கொண்டுவரப்பட்டாலும், அதன் சம்பந்தத்தினால் ஆகாசத்தினாபாசம் சகலக் கிரியைகளையும் செய்கிறதோ, தான் சுதந்தரமாக ஒன்றையும் செய்கிறதில்லையோ, அங்ஙனமே காமகர்மரூபமான ஜலத்தால் நிறைந்த புத்திரூபமான கடம் புண்ணியமுதலிய சகல விகாரங்களையும் தரிக்கிறது; அதன் சம்பந்தத்தால் சிதாபாஸனும் தரிக்கிறான். கூடஸ்தன் சகல விகாரமு மில்லாதவனா யிருக்கிறான். ஜலம் நிறைந்த கடத்தின் விகாரங்களில்லாததாய்க் கடாகாசமிருக்கின்றது. அதுபோலக் கூடஸ்தனையுமறிக ஆகையால் ஜீவத்தன்மையின் தர்மங்கள் சிதாபாஸனிடத்தில் இருக்கின்றன. ஆயினுங் கூடஸ்தனிடத்தில் அஞ்ஞானத்தால் தோற்றுகின்றன. ஆகையால் புத்தியினிடத்துள்ள கூடஸ்தசகித சிதாபாஸன் ஜீவனெனப்படுகின்றான்.

**170.** வர்ணிக்கப்பட்ட ஜீவஸ்வரூபத்தில் பிராஞ்ஞனுக்கு ஹானியுண்டாகிறது. ஏனெனின், சுழுத்தியின் அபிமானியாகிற ஜீவனுக்குப் பிராஞ்ஞனென்று (342) பெயர். சுழுத்தியில் புத்தி அபாவமாயிருத்தலால் புத்தியில் ஆபாஸனும் பொருந்தாது. இதனால் பிராஞ்ஞனுடைய சொரூபத்தைப் பிரதிபாதிக்கும் சாஸ்திரத்துக்கும் விரோதம் சம்பவிக்கிறது. இக்காரணத்தால் ஜீவஸ்வரூபம் வேறுவிதமாகச் சொல்லப்படுகிறது:—

1. அஞ்ஞானத்தின் அம்சத்துக்கு வியஷ்டியஞ்ஞான மென்று பெயர்.

2. சம்பூர்ண அஞ்ஞானத்துக்கு ஸமஷ்டியஞ்ஞான மென்று பெயர்.

அந்த அஞ்ஞான அம்சத்திலுள்ள சேதனத்தின் ஆபாஸமும் அஞ்ஞான அம்சத்துக்கு அதிஷ்டானமான கூடஸ்தனுமாகிய இரண்டையும் சேர்த்து ஜீவனென்னும் பதத்தால் சொல்லுவர். ஆதலால் இந்த ஜீவஸ்வரூபத்தில் பிராஞ்ஞனுக்கு அபாவமில்லை. ஏனெனின், சுழுத்தியில் அஞ்ஞான மிருக்கிறது. சுழுத்தியிலுள்ள சைதன்னியத்தின் பிரதிபிம்பசகித அஞ்ஞானாம்சம் எதுவோ, அது புத்திரூபத்தை யடைகிறது. சேதனத்தின் பிரதிபிம்பமும் கூடவே யுண்டாகிறது. இந்தச் சிதாபாசஸகித புத்தியில் புண்ணியாதி சமூசாரம் தோற்றுகிறது. இந்த அபிப்பிராயத்தால் சில சாஸ்திரங்களில் புத்தியே ஜீவத்தன்மைக்கு உபாதியாகச் சொல்லப்பட்டிருக்கிறது. விசாரதிருஷ்டியால் பார்க்குமளவில் ஜீவத்தன்மையின் உபாதி * அஞ்ஞானமாம்.

---

* இங்குப் புத்தி அல்லது புத்தியின் சம்ஸ்காரவடிவம் கடமாம். அதில் வியஷ்டி அஞ்ஞானவடிவ ஜலம் நிரம்பியிருக்கிறது. அதில் சேதனத்தின் பிரதிபிம்ப மிருக்கின்றது.

அல்லது வியஷ்டி அஞ்ஞானவடிவம் கடமாம். அதில் மலின சத்துவ குணவடிவ ஜலம் நிரம்பியிருக்கிறது. அதில் சேதனத்தின் பிரதிபிம்பமிருக்கிறது. அது அதிஷ்டான கூடஸ்தனோடு ஜீவனெனப்படுகின்றது.

## 171. ஈசுவரவர்ணனம்.

மாயையினிடத்திலுள்ள சேதனத்தின் சாயை † (ஆபாஸம்)மாயையின் அதிஷ்டான சேதனம் என்னும் இரண்டையும் ஈசுவர னென்பர். அந்த ஈசுவரன் மேகாகாசத்துக்குச் சமானமாவர்.

1. அந்த ஈசுவரன் அந்தரியாமி யாவர். ஏனெனின், எல்லோருள்ளிலுமிருந்து பிரேரணை செய்கிறார்.

2. அவர் சதாமுக்தர். ஏனெனின், அவருக்குத் தமது ஸ்வரூபத்தில் ஆவரணமில்லை. ஆதலால் அவருக்கு ஜன்மமரணாதி பந்தம் தோற்றுகிறதில்லை. இக்காரணத்தால் ஈசுவரன் நித்தியமுக்தராவர்.

3. ஈசுவரன் சர்வஞ்ஞர்; சகலபதார்த்தங்களையும் அறிபவராயிருக்கிறார். ஏனெனின், மாயையில் சுத்தசத்துவகுணமுண்டு.

தமோகுண ரஜோகுணங்களால் அமிழ்த்தப்பட்டதாகாது, ரஜோதமோர் குணங்களைத் தான் அமிழ்த்தும் சத்துவகுணம் எதுவோ, அது ‡ சுத்தசத்துவகுண மெனப்படும்.

சத்துவகுணத்தினின்றும் ஞான முற்பத்தியாகின்றது. ஆகையால் சத்துவகுணம் பிரகாச ஸ்வபாவமுள்ளதாம். இப்படிப்பட்ட சத்துவகுணமுடைய மாயையிலிருக்கும் சேதனுபாஸத்துக்குத் தன் ஸ்வரூபத்திலாவது வேறு பதார்த்தத்திலாவது ஆவரணம் சம்பவிக்கிறதில்லை. ஆகையால் ஈசுவரன் முக்தனும் சர்வஞ்ஞனுமாவன்.

ஜீவேசுவரர்களிடத்திலுள்ள அதிஷ்டான சைதன்னியம் ஜீவேசுவரரிருவரிடத்திலும் பந்தமோக்ஷ பேதமின்றியதா யிருக்கிறது; ஆகாசம் போல் ஏகரசமா (ஒரே தன்மையா) யிருக்கிறது. ஆனால் ஆபாஸ அம்ஸத்தில் பந்தமோக்ஷங்க ளிருக்கின்றன. அதிஷ்டானத்தில் ஆபாஸனுக்குப் பிராந்தியால் அவை தோற்றுகின்றன. ஆதலால் கேவலம் ஆபாசனிடத்தில் பந்தமோக்ஷங்க ளிருக்கின்றன. அதனிடத்தும் இவ்வளவு பேதமுண்டு:—

1. எந்த ஆபாஸனிடத்தில் ஆவரண மிருக்கிறதோ அவனிடத்தில் பந்த மிருக்கிறது.

2. எவனிடத்தில் சொரூபாவரண மில்லையோ அவன் முக்தனுவன்.

1. ஈசுவரனிடத்தில் ஆவரணமில்லாமையால் ஈசுவரன் சதாமுக்தனு யிருக்கிறான்.

---

† இங்கு "ஆபாஸ" மென்னும் சொல்லால் மாயையோடுகூடிய ஆபாஸம் கொள்ளப்படும்.

‡ ஓர் பிராஹ்மணஜாதியுடைய ராஜாவானவன் க்ஷத்திரிய சூத்திர சாதியுடைய இரண்டு மந்திரிகளால் தான் அமிழ்த்தப்படாது, அவ்விருவரையும் தான் அமிழ்த்தியிருப்பன். அங்ஙனமே ரஜோதமோகுணங்களால் அமிழ்த்தப்படாது, அவ்விரண்டையும் தான் அமிழ்த்தும் சத்துவகுணம் எதுவோ, அது சுத்தசத்துவகுணமாம்.

2. ஜீவனிடத்தில் ஆவரணமிருப்பதால் அவன் பத்தனு யிருக்கிறான். பத்தனென்பது கட்டுப்பட்டவனு யிருக்கிறான் என்பதாம். ஏனெனின், எந்த அவித்தையம்சத்தில் உண்டாகிற சைதன்னியத்தி னுபாஸத்திற்கு ஜீவனென்று பெயரோ, அந்த அவித்தைக்கு ஆவரணஞ்செய்தல் சுபாவமாம்.

1. மாயை, 2. அஞ்ஞானம், 3. அவித்தை என்பன ஓரே வஸ்துவுக்குப் பெயராயினும்,

1. சுத்தசத்துவத்தின் பிரதானத்தால் மாயை யெனப்படுகின்றது.

2-3. மலினசத்துவகுணத்தின் பிரதானத்தால் அஞ்ஞானமென்றும் அவித்தையென்றும் சொல்லப்படும்.

ரஜோகுண தமோகுணங்களால் அமிழ்த்தப்பட்ட சத்துவகுணம் * மலினசத்துவகுண மெனப்படும்.

ஆதலால் ரஜோகுண தமோகுணங்கள் அதிகமாயிருத்தலால் அவித்தையிலுள்ள ஜீவனுடைய ஆபாஸாம்சத்தினை அவித்தையானது சொரூபாவரணஞ் செய்கிறது. ஆதலால் ஜீவனிடத்தில் பந்தம் இருக்கிறது; ஈசுவரனிடத்திலில்லை.

1. அதிஷ்டான சேதனத்தோடு கூடிய மாயையில் உள்ள ஆபாஸவடிவ ஈசுவரன் எதுவோ, அது தத்பதத்தின் வாச்சிய மெனப்படும்.

2. கேவலம் அதிஷ்டானசேதனம் தத்பதத்தின் லக்ஷியமாம்.

"ஈசுவரனே ஜகத்தின் உற்பத்தி பாலனம் சம்ஹாரம் என்பவற்றைச் செய்கிறு"ரென்று சகலசாஸ்திரங்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றது. அதன் அபிப்பிராயம் இதுவாம்:—சேதனும்சம் ஆகாசம்போல் அசங்கமாயிருக்கிறது. ஆபாசாம்சம் ஜகத்தின் உற்பத்தி முதலியவற்றைச் செய்கிறது. அதனிடத்திற்றான் சர்வஞ்ஞத்துவ மிருக்கிறது. பக்தர்களின்பேரில் அநுக்கிரகம் செய்வதும் மற்ற ஐசுவரியங்களும் கேவலம் ஆபாசனிடத்தி லிருக்கின்றன. சேதனும்சம் ஏகரச (ஒரேவித)மாம். அதனிடத்தில் ஸத்தாஸ்பூர்த்தியைக் கொடுத்தலன்றி வேறு ஐசுவரியம் பொருந்தாது.

## 172. 4. பிரஹ்மசொரூபவர்ணனம்.

பிரஹ்மாண்டத்துக்கு உள்ளும் புறமும் மகாகாசம்போல நிறைந்திருக்கிற சேதனம் பிரஹ்ம மெனப்படும். அந்தப் பிரஹ்மம் தூரத்திலும் இல்லை; சமீபத்திலும் இல்லை. ஏனெனின், எந்த வஸ்து தனக்குப் பின்னமாயும் தேசரூப உபாதியுடையதாயுமிருக்கிறதோ, அது சமீபத்திலும் தூரத்திலும் இருப்பதாகச் சொல்லப்படும். பிரஹ்மம் பின்னமன்று; ஆனால் எல்லாவற்றின் ஆத்மாவாயும் தேசமுதலிய சர்வ உபாதிகளு மில்லாததாயு மிருக்கிறது. ஆகையால் அது தூரத்திலும் சமீபத்திலு மிருப்பதாகச் சொல்லப்படுகிறதில்லை.

* சூத்திரஜாதியுடைய இரண்டு ராஜபுத்திரர்களால் பிராஹ்மண ஜாதியுடைய ஒரு மந்திரி அமிழ்த்தப்படுவதுபோல ரஜோகுண தமோகுணங்களால் அமிழ்த்தப்படும் சத்துவகுணம் எதுவோ அது மலினசத்துவகுண மெனப்படும்.

பிரஹ்மசப்தத்தின் வாச்சியமும் ஸோபாதிகமாம். ஏனெனின் வியாபக வஸ்துவுக்குப் பிரஹ்மமென்று பெயர்.

அந்த வியாபகத்துவம் இருவகைத்தாம். 1. ஒன்று ஆபேக்ஷிக வியாபகத் தன்மை; 2. ஒன்று நிரபேக்ஷிக வியாபகத்தன்மை.

1. எந்த வஸ்து எந்தப் பதார்த்தத்தை யபேக்ஷித்து வியாபகமாக இருக்கிறதோ, எதை யபேக்ஷித்து வியாபகமாக இல்லையோ, அதன்கண் ஆபேக்ஷிக வியாபகத்துவஞ் சொல்லப்படுகிறது. எங்ஙனம்: பிருதிவியாதிகளை யபேக்ஷித்து மாயை வியாபகமாயிருக்கிறது; சேதனத்தை யபேக்ஷித்து அப்படியில்லை. ஆகையால் மாயையினிடத்தில் ஆபேக்ஷிக வியாபகத்துவ மிருக்கிறது.

2. எந்த வஸ்து எல்லாவற்றையு மபேக்ஷித்து வியாபகமாயிருக்கிறதோ, அதன்கண் உள்ள வியாபகத்துவம் நிரபேக்ஷிக வியாபகத்துவ மெனப்படும். அந்த நிரபேக்ஷிக வியாபகத்துவம் சேதனத்திலிருக்கிறது. ஏனெனின், சேதனத்துக்குச் சமானமாகவாவது அதிகமாகவாவது வேறெதுவும் வியாபகமாயில்லை. ஆனால் சைதன்னியமே எல்லாவற்றினும் வியாபகமாயுள்ளது. ஆகையால் சேதனத்தில் நிரபேக்ஷிக வியாபகத்துவ மிருக்கிறது.

இந்த இரண்டுவித வியாபகத்துவங்களுடன் கூடிய வஸ்து பிரஹ்ம சப்தத்திற்கு வாச்சியமாம்; இவ்விருவகை வியாபகத்துவங்களும் மாயாவிசிஷ்ட சேதனத்தில் இருக்கின்றன. ஏனெனின்,

1. விசிஷ்டனிடத்துள்ள மாயா அம்சத்தில் ஆபேக்ஷிக வியாபகத்துவ மிருக்கின்றது.

2. சேதன அம்சத்தில் நிரபேக்ஷிக வியாபகத்துவம் இருக்கின்றது.

சேதனத்தின் * ஏகதேசத்தில் மாயை யிருத்தலாலும் மாயாவிசிஷ்ட சேதனத்தைவிட சுத்தசேதனம் அதிகவியாபகமா யிருத்தலாலும் மாயாவிசிஷ்ட சேதனத்தில் நிரபேக்ஷிக வியாபகத்துவம் பொருந்தாது. ஆதலால் சுத்த சேதனத்தில் நிரபேக்ஷிக வியாபகத்துவம் இருக்கிறது. அங்ஙனமாயினும், மாயாவிசிஷ்ட சேதனம் பரமார்த்த திருஷ்டியாகச் சுத்தத்திற்கு வேறுகாமல் சுத்தரூபமாகவே இருக்கிறது. ஆகையால் மாயாவிசிஷ்டத்திலும் சேதனாம்சத்தில் நிரபேக்ஷிகமாகவே வியாபகத்துவ மிருக்கிறது. இவ்வாற்றால்,

1. மாயாவிசிஷ்டமே பிரஹ்மசப்தத்தின் வாச்சியமாதல் கூடும்.

2. சுத்தசேதனம் பிரஹ்மசப்தத்தின் லக்ஷியமாம். ஆகையால் ஈசுவர சப்தம் பிரஹ்மசப்த மிரண்டற்கும் ஒரே அர்த்தம் தோற்றுகிறது; வெவ்வேறு அர்த்தங்கள் இல்லை.

---

* கடத்தை உண்டாக்கும் சக்தி எந்த மண்ணிலுமில்லை; களிமண்ணில் மாத்திர மிருக்கிறது.

அங்ஙனமாயினும்,

1. பிரஹ்மசப்தத்துக்கு இது சுபாவமாம்:—பலவிடங்களில் லக்ஷியார்த்தத்தை அறிவிக்கின்றது; சிலவிடங்களில் வாச்சியார்த்தத்தைக் கூறுகின்றது.

2. ஈசுவரசப்தத்திற்கு இது சுபாவமாம்:—பலவிடங்களில் வாச்சியார்த்தத்தைப் போதிக்கின்றது; சிலவிடங்களில் லக்ஷியார்த்தத்தைக் கூறுகின்றது. இவ்வளவு பேதமுண்டு. ஆதலால் இலக்ஷியார்த்தத்தைக்கொண்டு பிரஹ்ம சப்தத்துக்கு அர்த்தம் வேறாக நிரூபிக்கப்பட்டது.

## இலக்கம் 158 உள்ள பிரசினத்தின் உத்தரம் 173-175.

### 173. கூடஸ்தர் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றார்; ஆபாஸன் புசிக்கின்றானெனல்.

சிஷ்யனே! நான்குவித சேதனங்களையும் சொன்னேன். அவற்றில்,

1. ஜீவனுடைய ஸ்வரூபத்திலுள்ள மித்தையாகிய ஆபாஸாம்சம் புண்ணிய பாபங்களைச் செய்து அவற்றின் பயனை யநுபவிக்கிறது.

2. கூடஸ்தனாகிய சேதனம் சிவ (கலியாண) ரூபமாக இருக்கிறது.

ஆகையால் "புத்திரூப விருக்ஷத்தில் பரமாத்மா ஜீவன் என்று இரண்டு பக்ஷிகளிருக்கின்றன" என்பதாக முதலில் நீ எந்தச் சங்கை செய்திருந்தாயோ, அதற்குப் பரமாத்மாவையும் ஜீவனையும் கொள்ளலாகாது. ஆனால் கூடஸ்தன் பிரகாசித்துக்கொண்டிருக்கிறார், ஆபாசன் புசிக்கின்றான் என்று உத்தரம் சொல்லப்பட்டது.

### 174. ஆபாஸம் கர்மத்தைச் செய்கின்றது; பலத்தையும் தருகின்றது; சேதனம் தருகிறதில்லையெனல்.

ஜீவஸ்வரூபத்திலுள்ள சேதனத்தின் சாயையாகிற ஆபாஸாம்சம் கர்மத்தைச் செய்கிறது. அக்கர்மஞ் செய்யும் ஆபாஸாம்சத்துக்கு சாயையாகிய ஈசுவரனுடைய ஆபாஸாம்சம் பலனைக் கொடுக்கிறது. இதனால் இவ்வார்த்தை சித்தித்தது:—

1. ஜீவஸ்வரூபத்திலுள்ள ஆபாஸாம்சம் புண்ணிய பாபங்களைச் செய்து அவற்றின் பலத்தைப் புசிக்கிறது.

2. ஈசுவரனிடத்திலுள்ள ஆபாஸாம்சம் கர்மபலத்தைக் கொடுக்கிறது.

1. இவ்விரண்டிலுமுள்ள சேதனம்சத்தில் எவ்விதப் பேச்சிற்கு மிடமில்லை.

2. ஜீவனிடத்துள்ள சேதனம்சத்தில் கர்மம் பலம் என்பவற்றின் சம்பந்த மில்லை.

3. ஈசுவரனிடத்துள்ள சேதனம்சத்தில் பலத்தைத் தருதலின் சம்பந்த மில்லை. அச்சேதனத்தில் அவற்றைச் சொல்லுகிறவன் மூடன். ஏனெனின், சேதனம் இரண்டிடங்களிலும் அசங்கமாயும் ஏகரூபமாயும் இருக்கிறது;

சேதனத்தில் பேதமில்லை. ஜீவசேதனத்தை ஈசுவரசேதனத்துக்கு வேறாக வேனும் ஈசுவரசேதனத்தை ஜீவசேதனத்துக்கு வேறாகவேனும் நினைக்கிற வன் நிந்திக்கத்தக்கவனுவன். இப்படிச் சொல்லுவதனால் "ஜீவனும் பரமாத்மா வும் ஒன்றென அங்கீகரிப்பதில் கர்மோபாஸனைகளைப் பிரதிபாதிக்கும் வேதம் நிஷ்பிரயோஜனமாகும்" என்று செய்யப்பட்ட இரண்டாவது சங்கைக்குச் சமாதானஞ் சொல்லப்பட்டது:—ஜீவேசுவரர்களிடத்துள்ள சேதனபாகங்க ளுக்கு அபேதமும், ஆபாஸ பாகத்திற்குப் பேதமுமுண்டு. ஆகையால் இருவகை வசனங்களும் பொருந்துகின்றன.

## 175. ஜீவப்பிரஹ்மங்களின் இலக்ஷியார்த்தத்திற்கு அபேத முண்டெனல்.

சிஷ்யனே! நீ செய்த பிரசினங்களுக்கு யான் உத்தரஞ் சொன்னேன்.

1. "ஒரு விருக்ஷத்தில் இரண்டு பட்சிகளுண்டு. ஒன்று புசிக்கின்றது; ஒன்று இச்சையின்றி யிருக்கின்றது. ஆதலால் ஜீவப்பிரஹ்மங்களின் ஐக்கியம் பொருந்தா" தென்று நீ கூறியிருந்தாய்.

அதற்கு "இந்த ஸ்தானத்தில் ஜீவப்பிரஹ்மங்களைக் கொள்ளலாகாது; கூடஸ்தனையும் புத்தியிலுள்ள ஆபாஸனையும் கொள்ளவேண்டும். அவை கடா காசத்தையும் ஆகாசத்தின் சாயையினையும்போலத் தம்மில் பின்னமா யிருக் கின்றன." என்று யாம் உத்தரஞ்சொன்னேம்.

2. "ஜீவனே கர்ம உபாசனைகளைச் செய்கின்றவன்; பரமாத்மா பய னைத் தருபவர்; அவர்களுக்கு ஐக்கியம் பொருந்தா" தென்று நீ பிரசினஞ் செய்தாய்.

அதற்கும் யாம் இவ்வாறு உத்தரங் கூறினேம்:—

1. கர்மத்தைச் செய்பவன் ஜீவனல்லன்; பயனைத் தருபவன் ஈசுவரனல் லன்; ஆனால் ஜீவனிடத்துள்ள ஆபாஸ அம்சம் எதுவோ அது கர்மத்தைச் செய்கிறது.

2. ஈசுவரனிடத்துள்ள ஆபாஸ அம்சம் எதுவோ அது பலத்தைத் தரு கின்றது.

3. ஜீவேசுவரரிடத்துள்ள சேதனம்சம் எதுவோ அது கடாகாச மகா காசத்தினைப்போலப் பேதத்தின் கந்தமின்றியதா யிருக்கிறது.

இவ்வாற்றால்,

ஜீவப்பிரஹ்மங்களுக்கு ஏகத்துவஞ் சித்திக்கிறது. ஆகையால், சிஷ்ய னே! "நான் பிரஹ்மம்" என்று நீ அறிவாயாக.

1. நான் என்னும் சொல்லிற்குக் கூடஸ்தனைப் பொருளென்றறி.

2. பிரஹ்மமென்னும் சொல்லிற்குக் மகாகாசத்திற்குச் சமமாகச் சொல் லப்பட்ட லக்ஷியார்த்தம் பொருளென்றறி.

நான் என்னும் சொல்லிற்கும் பிரஹ்மமென்னும் சொல்லிற்கும் வாச்சி யார்த்தத்தில் அபேதமில்லை; ஆனால் லக்ஷியார்த்தத்தில் அபேதமாம்.

சிஷ்யனே !

1. எதுவரையில் "நான் பிரஹ்மம்" என்று நீ அறியவில்லையோ, அது வரையில் நீ உன்னைத் தீனன் என்றும் துக்கியென்றும் மதிப்பாய்.

2. பரமாத்மாவை வேருக நினைத்திருக்கின்றுய். அது உனக்குப் பயத்திற்கு ஹேதுவாகும். ஆகையால் "நான் பிரஹ்ம" மென்று நீ யறி.

## 176. பிரசினம்:—நான் பிரஹ்மமென்னும் ஞானம் யாருக்குண்டாகிறது? எனல். தத்துவதிருஷ்டி கேட்கலாயினுன்.

சுவாமி! "நான் பிரஹ்மம்" என்னும் ஞானம் யாருக்குண்டாகிறது? என்பதைத் தாம் கிருபைசெய்து சொல்லியருளல்வேண்டும். தாம் சொன்னு லன்றி நான் இவ்வார்த்தையை அறிந்துகொள்ளமாட்டேன். இக்கேள்வியால் சிஷ்யனுடைய மனதிலுள்ள இரகசியமான அபிப்பிராயம் இதுவாம்:—
1. "நான் பிரஹ்ம மென்னும் ஞானம் கூடஸ்தனிடத் துண்டாகிறதா ?
2. அல்லது ஆபாஸஸகிதபுத்தியி லுண்டாகிறதா ?

1. கூடஸ்தனிடத்துச் சொல்லுவோமாயின் கூடஸ்தன் விகாரியாவன்.

2. ஆபாஸஸகித புத்தியிற் சொல்லுவோமாயின், அவனுக்கு நான் பிரஹ்மமென்னும் ஞானம் பிராந்திரூபமாகும். ஏனெனின், "கூடஸ்தனும் பிரஹ்மமு மொன்று; ஆபாஸன் வேறு." என்று தாம் முன்னமே சொல்லியிருக்கிறீர்கள். ஆதலால் பிரஹ்மத்துக்கு வேறுன ஆபாஸனைப் பிரஹ்மரூபமாக அறிதல் பிராந்தியேயாகும். சர்ப்பத்துக்கு வேறுன ரஜ்ஜுவைச் சர்ப்பரூபமா யறிதல் பிராந்தியாம். இவ்வாறு ஆபாஸசகிதபுத்திக் குண்டாகும் "நான் பிரஹ்ம" மென்னும் ஞானம் யதார்த்தமாகாது ; பிராந்திவடிவமாகும்.

ஒருகால் 'நான் பிரஹ்மம்' என்னும் ஞானத்தைப் பிராந்திரூபமாகவே யங்கீகரிப்போமாயின், இந்த ஞானத்தால் மித்தையாகிய ஜகத்தின் நிவிருத்தி யுண்டாகாது. ஆனுல் யதார்த்த ஞானத்தால் மித்தையின் நிவிருத்தி யுண்டாகிறது. அது ரஜ்ஜுவின் யதார்த்த ஞானத்தால் மித்தியாசர்ப்பம் நிவிருத்தியாவதுபோலாம். இவ்விதத்தால் ஆபாஸஸஹித புத்திக்கு 'நான் பிரஹ்மம்' என்னும் ஞானம் பொருந்தாது.

## முற்கூறிய பிரசினத்தின் உத்தரம். 177 - 183.

## 177. ஆபாஸனது சப்த(ஏழு)அவஸ்தைகளின் பெயர் 177-178. ஸ்ரீ குருவானவர் சொல்லலுற்ருர்.

சிஷ்யனே ! இப்போது ஆபாஸனது ஏழு அவஸ்தைகளைச் சொல்லுகிறேன் கேள். இவ்வேழில் எதுவும் சேதனமாகிய கூடஸ்தனுக்கில்லை. "நான் பிரஹ்ம" மென்னும் ஞானமும் இவ்வேழினுள்ளேயே இருக்கிறது.

**178**. சப்தாவஸ்தைகளின் பெயர். (1) அஞ்ஞானம், (2) ஆவரணம், (3) பிராந்தி (விக்ஷேபம்), (4) பரோக்ஷஞானம், (5) அபரோக்ஷஞானம், (6) சோகநாசம் (அநர்த்த நிவிருத்தி), (7) அதிஹர்ஷம் (ஆநந்தப்பிராப்தி).

## 179. 1 - 2. அஞ்ஞான ஆவரணங்களின் சொரூபவர்ணனம்.

சிஷ்யனே !

1. "நான் பிரஹ்மத்தை யறியேன்" என்னும் வியவஹாரத்துக்குக் காரணம் அஞ்ஞானமாம்.

2. "பிரஹ்மமில்லை; விளங்கவில்லை" என்னும் வியவஹாரத்துக்குக் காரணம் ஆவரணமாம்.

ஆவரணத்தால் இவ்வியவகாரங்க ளுண்டாகின்றன. ஏனெனின், அஞ்ஞானத்திற்கு இருவகைச் சக்திகள் உண்டு. (க) ஒன்று அஸத்வாபாதகம்; (உ) மற்றொன்று அபானுபாதகம். இவ்விரண்டிற்கும் ஆவரணமென்று பெயர்.

1. "வஸ்து இல்லை" யென்னும் தோற்றத்தைச் செய்யுஞ் சக்தி அஸத்வாபாதக மெனப்படும்.

(2) வஸ்து விளங்கவில்லை யென்னும் தோற்றத்தைச் செய்யும் அஞ்ஞானத்தின் சக்தி அபானுபாதக மெனப்படும்.

(1) இவ்வாற்றால் "பிரஹ்மம் ~~விளங்கவி~~ இல்லை" என்னும் வியவகாரத்துக்குக் காரணம் அஞ்ஞானத்தின் அஸத்வாபாதகசக்தியாம்.

(2) "பிரஹ்மம் விளங்கவில்லை" யென்னும் வியவகாரத்துக்குக் காரணம் அஞ்ஞானத்தின் அபானுபாதகசக்தியாம். இவ்விரண்டிற்கும் ஆவரண மென்று பெயராம்.

## 180. 3. பிராந்தி வர்ணனம்.

கூடஸ்தனிடத்தில் தோற்றுகிற ஜன்மாதி சமுசாரம் வேதத்தில் * பிராந்தி யெனப்படுகிறது. இதனையே சோகமென்பர்.

## 181. 4-5. இருவகை ஞானவர்ணனம். (பரோக்ஷம் அபரோக்ஷம்).

1. "பிரஹ்மமில்லை" என்னும் ஆவரணம்சத்தைப் "பிரஹ்மமிருக்கிறது" என்னும் பரோக்ஷஞானம் நாசஞ்செய்கிறது. ஏனெனின், "பிரஹ்மம்

* தேகம் பிராணன் இந்திரியம் அந்தக்கரணத்தோடுகூடிய சிதாபாஸன் என்னும் இவற்றின் ஜன்மமுதலிய சம்பந்தவிசிஷ்ட கேவல கர்மவடிவ சம்பந்திகளின் பிரதீதி அல்லது சம்பந்தவிசிஷ்ட தர்மியோடுகூடிய தர்மவடிவ சம்பந்திகளின் பிரதீதி தம்விஷயத்தோடு ஆத்மாவினிடத்துண்டாதல், ஆத்மாவின் தாதாத்மிய சம்பந்தத்தின் பிரதீதி அல்லது சத்தியத்தன்மை முதலிய தர்மங்களின் சம்பந்தத்தின் பிரதீதி தனது விஷயத்தோடு அநாத்மாவில் உண்டாதல் அத்தியாசமெனப்படுகின்றது. இதனையே பிராந்தி, விக்ஷேபம், சோகம் என்று கூறுவர்.

சத்திய ஞான * அநந்தரூபமா யிருக்கிறது" என்னும் ஞானத்துக்குப் பரோக்ஷஞானமென்று பெயர். இந்தப் பரோக்ஷஞானம் "பிரஹ்மமில்லை" என்னும் பிரதீதிக்கு விரோதியாம்; வேறொன்றற்கு விரோதியன்று.

2. "நான் பிரஹ்ம" மென்னும் அபரோக்ஷஞானம் சகல அவித்தியா சமூகத்துக்கும் விரோதியாம். இக்காரணத்தால்,

(1) "பிரஹ்மத்தை நான் அறியவில்லை" என்பது அஞ்ஞானம்.

(2) "பிரஹ்மமில்லை; விளங்கவில்லை" என்பது ஆவரணம்.

(3) "நான் பிரஹ்மமல்லன்; ஆனால் புண்ணிய பாபங்களைச் செய்பவனும் சுகதுக்கங்களை யநுபவிப்பவனுமாகிய ஜீவன்" என்பது பிராந்தி. இவ்வளவு அவித்தியா சமூகத்தை அபரோக்ஷஞானம் நாசம்பண்ணுகிறது.

## 182. 6. பிராந்தி நாசவர்ணனம்.

(1) என்னிடத்தில் ஜன்மமும் மரணமுமில்லை.

(2) சுகதுக்கங்களின் லேசமு மில்லை.

(3) ஒரு சமுசார தர்மமும் என்னிடத்தில் இல்லை.

(4) ஆனால் ஜனனமில்லாத கூடஸ்தன்யான் என்று சிஷ்யனே ! இவ்விதமாகச் சர்வ அநர்த்தங்களையும் நிஷேதித்தல் பிராந்திநாசத்தின் சுவரூபமாம்.

இவ்விடத்தில் கூடஸ்தனிடத்தில் ஜனனத்தை நிஷேதிப்பதினால் ஸர்வ அநர்த்தங்களையும் நிஷேதித்ததாகக் கொள்ளவேண்டியது. ஏனெனின், ஜனனத்தோற்றத்திற்குப் பின் வேறு அநர்த்தங்கள் தோற்றுகின்றன. ஆதலால் ஜனனத்தை நிஷேதிப்பதினால் சகல அநர்த்தங்களும் நிஷேதிக்கப்படுகின்றன. இந்தப் பிராந்திநாசத்தினையே சோகநாச மென்றும் கூறுவர்.

---

* தேசகால வஸ்துக்களால் எதற்கு அந்த (பரிச்சேத) முண்டாகிறதில்லையோ, அத்தன்மைய் சர்வதேசத்திலும் சர்வகாலத்திலும் சர்வ வஸ்துக்களிலும் வியாபகமான வஸ்து எதுவோ அது அநந்த மெனப்படுகின்றது. இதனையே விபுவென்றும் பூமா வென்றும் கூறுவர். முன் வஸ்துநிர்த்தேசரூபமங்கல வுரையின் டிப்பணியில் காட்டியபடி பிரஹ்மம் தேசகால வஸ்துக்களால் அந்தமில்லாததா யிருத்தலின் அது சுருதியில் ஆநந்தரூபமென்று சொல்லப்பட்டிருக்கின்றது.

இங்கு அநந்தரூபமென்று சொல்லுதலால் "ஆநந்தவடிவம் பிரஹ்மமாம்" என்பது அர்த்தத்தினால் சித்திக்கின்றது. ஏனெனின், சாந்தோக்கிய உபநிஷத்தில் பூமவித்தையின் பிரசங்கத்தில் நாரதரை நோக்கிச் சநற்குமார குருவானவர் கூறியிருக்கின்றார்:— "பூமா(பரிபூர்ணம்) எதுவோ, அது சுகரூபமாம்; அற்ப (பரிச்சின்ன)த்தில் சுகமில்லை" என்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆதலால் அநந்தரூபமெதுவோ அது பூமாவாம். பூமாவென்பது எதுவோ அது ஆநந்தரூபமாமென்று அறிந்துகொள்க.

## 183. 7. ஹர்ஷசொரூபவர்ணனம்.

சிஷ்யனே! "நான் அத்வயப் பிரஹ்மஸ்வரூபன்" என்று உனக்குச் சமுசயமின்றி உனது ஸ்வரூபஞானம் எப்போது உண்டாகுமோ, அப்போது உனக்கு ஆநந்தமுண்டாகும். அதனை * ஹர்ஷ மென்றறிவாய்.

நான் இப்போது உனக்கு ஏழவஸ்தைகளையும் சொன்னேன். அவை யாவும் ஆபாஸனுடையனவாம்; அவனிடத்திலேயே ஞானமும் இருக்கிறது. "ஞானம் யாருக்குண்டாகிறது" என்ற கேள்விக்கு உத்தரஞ் சொன்னேன். இன்னும் ஏதாவது கேட்கவிரும்பினால் கேள்.

## 184. பிரசினம்:—பிரஹ்மத்திற்கு வேறாகிய ஆபாஸனுக்கு "யான் பிரஹ்மம்" என்னும் ஞானம் மித்தையாகும். (இலக்கம் 176-ல் உள்ள) பிரசினத்தின் இரகசிய அபிப்பிராயம்.

கூட (இரகசியமான) அபிப்பிராயமாகப் பிரசினஞ்செய்திருந்ததனை இப்போது சிஷ்யன் பிரகடஞ் செய்கிறான்:—

சுவாமி! "கூடஸ்தனும் பிரஹ்மமும் ஒன்று; ஆபாஸன் பிரஹ்மத்துக்கு வேறு." என்று தாம் முன் சொன்னீர்கள்.

அந்தப் பிரஹ்மத்துக்கு வேறாகிய ஆபாஸனுக்கு "நான் பிரஹ்மம்" என்னும் பிரஹ்மரூபமான ஞானம் பொருந்தாது.

1. "எனது அதிஷ்டானமாகிய கூடஸ்தன் பிரஹ்மரூபமாம்" என்று ஆபாசனுக்கு ஞானமுண்டாயின், யதார்த்தஞானமாகும்.

2. "நான் பிரஹ்மம்" என்னும் ஞானம் யதார்த்தமாகாது. ஏனெனின், நான் என்பது தன் ஸ்வரூபத்திற்காம். எதனை நான் என்கிறார்களோ அந்த ஆபாஸனது சொரூபம் மித்தையாகலின் பின்னமாம். ஆதலால் பிரஹ்மத்தினும் வேறாகிய ஆபாஸனது சொரூபத்தினைப் பிரஹ்மவடிவமாக அறியின் அது மித்தியாஞானமாகும்.

அது சர்ப்பத்துக்கு வேறான ரஜ்ஜுவைச் சர்ப்பரூபமாக அறியும் ஞானம் மித்தையாவதுபோலாம். மித்தையென்பது பிராந்தி. அந்தப் † பிரஹ்ம ஞானம் இந்தப் பிராந்திரூபமாகச் செல்லுதல் கூடாது.

---

* இந்த ஹர்ஷத்திற்கு ஸ்ரீ வித்தியாரண்ணியசுவாமிகள் பஞ்சதசியின் திருப்திதீபத்தில் "நிரங்குசத்திருப்தி" என்று பெயரிட்டிருக்கின்றார். மேலும் மேலும் ஆநந்தத்தில் இச்சை யுண்டாதலால் விஷயாநந்தம் சாங்குசமாயிருக்கிறது. பிரஹ்மாநந்தத்திற்கு மேலான ஆநந்தமில்லாமையால் அது நிரங்குசமாயிருக்கிறது. (அங்குசம்—தடை.)

இவ்வேழவஸ்தைகளில் அஞ்ஞானம், ஆவரணம், விக்ஷேபம் என்னும் மூன்றும் பந்தத்துக்குக் காரணமாயிருக்கின்றன. மற்ற நான்கும் மோக்ஷத்துக்குச் சாதனங்களாயிருக்கின்றன.

† இங்கு இது பிரசினஞ்செய்யும் சிஷ்யனைக்கேட்கும் பிரசினமாம்:—

## 185. உத்தரம்:—"அகம்" சப்தத்தின் இரண்டர்த்தமும், அவற்றில் கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடுள்ள முக்கிய சாமாநாதிகரணியமும், ஆபாஸனுக்குள்ள பாதசாமாநாதிகரணியமும்.

சிஷ்யனே! "நான்" என்னும் சப்தத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறேன் கேள். அதனால் உன்னிருதயத்திலுள்ள சங்கையாகிய களங்கங்கள் அநேகம் நிவிருத்தியாய்விடும்.

சிஷ்யனே! "நான் பிரஹ்ம"மென்னும் ஞானம் புத்திஸஹித ஆபாஸனுக்குண்டாய்க் கூடஸ்தனுக்குண்டாகாவிடினும், அந்த ஆபாஸன் கூடஸ்தனையும் தன் ஸ்வரூபத்தையும் தன்னாத்மாவாக அதாவது தானாகவே அறிகிறான். அந்த ஆத்மா "நான்" என்னும் சொல்லால் கிரகிக்கப்படுகின்றது. அதுவே "அகம்-நான்" என்னும் சொல்லிற்குப் பொருளாம்.

1. அந்த "நான்" என்னும் சப்தத்தில் விளங்குகிற கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு எப்போதும் அபேதமிருக்கிறது. அது கடாகாசத்துக்கும் மகாகாசத்துக்கும் எப்போதும் அபேத மிருப்பதுபோலாம். இக்காரணத்தினால்

---

1. பிரஹ்மஞானத்தின் சொரூபம் மித்தையாகிய சம்சாரத்தினுள்ளடங்கிய மித்தியாசிதாபாஸனை ஆசிரிதமா யிருத்தலின் மித்தையாம். ஆதலால் இந்த மித்தியா ஞானத்தால் கானற்சலத்தால் தாகம் நீங்குமென்றாற்போலச் சம்ஸாரத்தின் நிவிருத்தி எங்ஙன முண்டாகுமென்று சொல்லுகிறாயா?

2. அல்லது அந்த ஞானத்தின் விஷயமாகிய சிதாபாஸனுக்கும் பிரஹ்மத்திற்குமுள்ள ஐக்கியமெதுவோ, அது சர்ப்பத்திற்கும் ரஜ்ஜுவிற்குமுண்டாம் ஐக்கியத்தைப்போல மித்தையாமாகலின், அந்த மித்தியாவிஷயத்தின் ஞானமும் மித்தையாம். ஆதலால் அந்த மித்தியாஞானத்தினால் சம்ஸாரத்தின் நிவிருத்தி எங்ஙன முண்டாகுமென்று சொல்லுகிறாயா?

1. அவற்றுள், ஞானத்தின் சொரூபம் மித்தையாமென்பதை யாமும் அங்கீகரித்திருக்கின்றோம். ஆனால் அந்த மித்தையாகிய ஞானத்தினால் சம்ஸாரத்தின் நிவிருத்திகூடும். ஏனெனின், "யக்ஷனுக்குத் தக்க பலி" என்னும் இலௌகிக நியாயத்தினால் எங்ஙனம் மித்தையாகச் சம்சாரமிருக்கிறதோ, அங்ஙனமே அதன் நிவிருத்தியின் பொருட்டான ஞானமும் மித்தையா யிருத்தல்வேண்டும்.

அல்லது:—"சமானசத்தையுடைய பதார்த்தங்கள் தம்மிற் சாதகபாதகமாம்." என்னும் நியமத்தினாலும் மித்தையாகிய ஞானத்தினாலேயே மித்தையாகிய சம்ஸாரத்தின் நிவிருத்தி சம்பவிக்கிறது.

கானற்சலமும் தாகமும் சமானசத்தையுடையனவன்று; விஷமசத்தையுடையனவாம். ஆதலால் பிராதிபாஸிக கானற்சலத்தினால் வியாவகாரிக தாகத்தின் நிவிருத்தி சம்பவியாது என்பது மேல் ஐந்தாவது தரங்கத்திலும் சொல்லப்படும்.

கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு * முக்கிய சாமாநாதிகரணியம் வேதாந்தசாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

எந்த வஸ்துவுக்கு எந்த வஸ்துவோடு எப்போதும் அபேதமிருக்கிறதோ, அந்த வஸ்துவிற்கு அதனோடு முக்கியஸாமாநாதிகரணியம் சொல்லப்படுகிறது. எங்ஙனம்:—கடாகாசத்துக்கு மகாகாசத்துடன் எப்போதும் அபேதமிருக்கிறது. ஆதலால் கடாகாசம் மகாகாசமாயிருக்கிறது. இவ்வாற்றால் கடாகாசத்துக்கு மகாகாசத்துடன் முக்கியஸாமாநாதிகரணிய முண்டு.

இவ்வாறு கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு முக்கியஸாமாநாதிகரணியமுண்டு. ஏனெனின், கூடஸ்தனுக்கும் பிரஹ்மத்துக்கும் எப்போதும் அபேதமிருக்கிறது. ஆதலால் "நான்" என்னும் சப்தத்தில் விளங்குகிற கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு எப்போதும் அபேதமுண்டு.

2. "நான்" என்னும் சப்தத்தில் விளங்குகிற ஆபாஸனுக்குப் பிரஹ்மத்தோடு தன் ஸ்வரூபத்தைப் பாதித்து அபேதமுண்டாகிறது. எங்ஙனம்: முகத்தின் பிரதிபிம்பத்துக்குப் பிம்பசொரூபமான முகத்தோடு பிரதிபிம்ப சொரூபத்தைப் பாதித்து அபேதமுண்டாகிறது. இக்காரணத்தினால் வேதாந்த சாஸ்திரத்தில் ஆபாஸனுக்குப் பிரஹ்மத்தோடு பாதஸாமாநாதிகரணியம் சொல்லப்பட்டிருக்கிறது.

எந்த வஸ்துவிற்குப் பாதமுண்டாய் எதனோடு அபேத முண்டாகிறதோ, அந்த வஸ்துவுக்கு அதனோடு பாதஸாமாநாதிகரணியம் சொல்லப்படுகிறது.

---

2. சிதாபாஸப் பிரஹ்மங்களின் ஒருமைவடிவ ஞானத்தின் விஷயம் மித்தையாம்; ஆதலால் அதன் ஞானமும் மித்தையாம் என்று நீ பிரகடஞ்செய்த இரண்டாவது பக்ஷம் சம்பவியாதுஎன்னும்வார்த்தை இப்போது 185-வது இலக்கத்தில்சொல்லப்படுகின்றது.

* சமான (ஒரு) வேற்றுமையின் பலத்தால் சமான (ஒரு) அதிகரண (அர்த்தவடிவ ஆசிரய)த்தினையுடைய இரண்டு பதங்கள் எவையோ அவை சமாநாதிகரண மெனப்படும். இவ்விரண்டு சப்தங் (சொற்)களுக்குமுள்ள பரஸ்பர சம்பந்த மெதுவோ, அது சாமாநாதிகரணியம் (ஒருபொருளுடைமை) எனப்படுகின்றது.

முற்கூறிய சாமாநாதிகரண சம்பந்தத்தினை ஜீவ ஈசுவரர்களின் ஐக்கியத்தைப் போதிக்கும் ஒரு வேற்றுமையுடைய பதங்களோடு கூடிய நான்குவேதங்களின் நான்கு மகாவாக்கியங்களிலும் அங்ஙனமே அத்தன்மைய அந்நிய லௌகிக வைதிகவாக்கியங்களிலும் அறிந்துகொள்க. அவற்றுள்,

1. ஒரு சத்தையும் ஒரு சொரூபமுமுடையனவா யிருத்தலால் வாஸ்தவ பேதமின்றிய இரண்டு பொருள்களை யறிவிக்கும் வாக்கியத்துள்ள இரண்டு பதங்களுக்கு "முக்கிய சாமாநாதிகரணியம்" சொல்லப்படுகின்றது. அது கடாகாசபத மகாகாசபதங்கட்கும் கூடஸ்தபத பிரஹ்மபதங்கட்கு மிருப்பதாம்.

2. பின்னசத்தையுடைய இரண்டு பதார்த்தங்களுக்கு ஒரு வேற்றுமையின் பலத்தால் ஐக்கியத்தை (ஒருமையை) யறிவிக்கும் வாக்கியத்துள்ள இரண்டு பதங்களுக்கும் "பாத சாமாநாதிகரணியம்" சொல்லப்படுகின்றது. அது ஸ்தாணுபத புருஷபதங்கட்கும் ஜகத்துப் பிரஹ்ம பதங்கட்கும் பிம்பப்பிரதிபிம்ப பதங்கட்கு மிருப்பதாம்.

(1) எங்ஙனம்: முகத்தின் பிரதிபிம்பத்திற்குப் பாதமுண்டாய் முகத்தோடு அபேதமுண்டாகிறது. ஆதலால் பிரதிபிம்பம் முகமாம்; வேறன்று. இவ்வாறு பிரதிபிம்பத்திற்கு முகத்தோடு பாதசாமாநாதிகரணிய முண்டு.

(2) அல்லது, எங்ஙனம்: கட்டையில் புருஷப்பிரமமுண்டாகிக் கட்டையெனத் தெரிந்தபின், "புருஷன் கட்டை" என்றிவ்வாறு புருஷனுக்குக் கட்டையோடு பாதஸாமாநாதிகரணிய முண்டாகிறது. அங்ஙனமே ஆபாஸனுக்குப் பாதமுண்டாய்ப் பிரஹ்மத்தோடு அபேதமுண்டாகிறது.

ஆதலால் "நான் என்னும் சப்தத்தில் விளங்குகிற ஆபாசன் பிரஹ்மமாம்; வேறன்று. இத்தன்மைய பாதசாமாநாதிகரணியம் ஆபாஸனுக்குப் பிரஹ்மத்தோடுண்டாகிறது. இவ்வாற்றால் சிஷ்யனே!

1. "நான்" என்னும் சப்தத்தில் விளங்குகிற கூடஸ்தனுக்கு முக்கிய அபேத முண்டு.

2. ஆபாசனுக்குப் பாதத்தால் அபேதமுண்டு.

### 186. பிரசினம்:—அகம்விருத்தியில் கூடஸ்த ஆபாஸர்களின் விளக்கம் கிரமமாக உண்டாகிறதா? அல்லது கிரமமின்றி யுண்டாகிறதா? எனல்.

### தத்துவதிருஷ்டி கேட்கலாயினன்.

ஸ்வாமி! "அஹம் (நான் என்னும்) விருத்தியில் சாக்ஷியும் ஆபாஸனும் விளங்குகின்றன" வென்று தாம் சொன்னீர்கள்.

இதில் எனக்கு ஒன்று தெரியவில்லை. அதாவது,

1. கூடஸ்த ஆபாசர்களின் விளக்கம் யானென்னும் விருத்தியில் கிரமமாக வுண்டாகிறதா?

2. அல்லது கிரமமின்றி யுண்டாகிறதா? என்பதாம். இதன்பொருள் இதுவாம்:—

1. கிரமமாக வென்பது பின்ன பின்னகாலத்தில் உண்டாகிறதா?

2. அல்லது கிரமமின்றி அதாவது ஒரேகாலத்தில் இரண்டன் விளக்கமும் உண்டாகின்றதா? இதனைத் தாம் எனக்கு அறிவிக்கவேண்டும்.

(நிகழ்ந்த பிரசினத்தின் உத்தரம் 187 - 205.)

### 187. ஒரே சமயத்தில் சாக்ஷி ஆபாஸர்களின் விளக்கமுண்டாகிறது.

### ஸ்ரீ குருவானவர் சொல்லலுற்றார்.

சிஷ்யனே! நீ பிரசினஞ் செய்ததற்கு நான் சாரமான உத்தரஞ் சொல்லுகிறேன். நீ சாவதானமாய்க் கேள். இதைக் கேட்பதினால் ஞானரூபமான

சூரியப்பிரகாச முண்டாகி அஞ்ஞானமாகிய இருளைக் கெடுக்கும். சிஷ்யனே! ஒரேசமயத்தில் சாக்ஷியும் ஆபாஸனும் அஹம் விருத்தியில் விளங்குகின்றன. எல்லாப் பிரகரணங்களிலும் "ஆபாசன்" என்னும் சொல்லால் அந்தக்கரண சகித ஆபாஸனைக் கொள்ளவேண்டும்.

1. அந்தக்கரணஸகித ஆபாஸன் சேதனமாகிய சாக்ஷிக்கு விஷயமாய் விளங்குகிறான்.

2. சாக்ஷி ஸ்வயம்பிரகாசரூபமாக விளங்குகிறது. அந்தக்கரணத்தின் ஆபாஸசகித விருத்திக்குச் சாக்ஷி விஷயமாகிறதில்லை.

கடாதி வெளியிலுள்ள பதார்த்தங்களிலோ இவ்வாறு கிரம முண்டு:—

இந்திரியத்துக்கும் கடத்துக்கும் சையோகமுண்டாகும்போது இந்திரியவாயிலாக அந்தக்கரணத்தின் விருத்தி வெளியிற் சென்று கடத்தின் ஸமானாகாரத்தை அடைகிறது. இரும்பினாலாவது மண்ணாலாவது செய்த கருவில் உருக்கிவிடப்பட்ட தாம்பிரம் அக்கருவின் சமானாகாரத்தை யடைவது போல அந்தக்கரணவிருத்தியும் கடத்தின சமானாகாரமாகிறது.

அந்த விருத்தி ஆபாஸனின்றி யுண்டாகிறதில்லை; ஆபாஸசகிதமாகவே யுண்டாகிறது. ஏனெனின் விருத்தி அந்தக்கரணத்தின் பரிணாமமாம்.

அந்தக்கரணத்தின் பரிணாமத்தினை விருத்தி யென்பர்.

அந்தக்கரணம் சத்துவகுண காரியமாயிருத்தலின் ஸ்வச்சமாம். ஆதலால் அந்தக்கரணத்தில் சேதனத்தின் ஆபாசமுண்டாகிறது. அதுபோல விருத்தியும் ஸ்வச்சமான அந்தக்கரணத்தின் காரியமாயிருத்தலால் விருத்தியில் சேதனத்தின் ஆபாஸமுண்டாகிறது. உண்டாகின்ற விருத்தி ஆபாஸஸகித அந்தக்கரணத்தினின்றும் உண்டாகிறது. இக்காரணத்தாலும் விருத்தி ஆபாஸ சகிதமாகவே வுண்டாயிருக்கிறது.

## 188. அஞ்ஞானத்திற்கு ஆசிரயமும் விஷயமும் சேதனமாமெனல்.

விஷயமாகிற கடம் தமோகுண காரியமா யிருக்கிறது. ஆகையால் அது ஸ்வரூபமாக ஜடமாம். அதில் அஞ்ஞானமும் அதன் ஆவரணமு மிருக்கின்றன.

இதில் இச்சங்கை யுண்டாகிறது:—

அஞ்ஞானமும் அதன் ஆவரணமும் விசாரதிருஷ்டியினால் சேதனத்திலிருக்கின்றன; கடத்திலில்லை. ஏனெனின், 1. அஞ்ஞானம் சேதனத்தை யாசிரயித்திருக்கின்றது, 2. சேதனத்தையே விஷயமாக்குகின்றதென்பது வேதாந்த சித்தாந்தம்.

1. ஸுப்தாவஸ்தையின் பிரசங்கத்தில் அஞ்ஞானத்திற் காசிரயம் அந்தக்கரணஸகித ஆபாசனென்று சொல்லப்பட்டது. அது அஞ்ஞானத்தின் அபிமானியாம். "நான் அஞ்ஞானி" என்னும் அபிமானம் அந்தக்கரணசகித

ஆபாஸனுக்குண்டாகிறது. இக்காரணத்தினால் ஆபாஸன் அஞ்ஞானத்திற் காரியமாமெனச் சொல்லப்படுகிறது. *முக்கிய ஆசிரயம் சேதனமாம்; ஆபாஸ சகித அந்தக்கரணமன்று. ஏனெனின், ஆபாஸசகித அந்தக்கரணம் அஞ்ஞானத்தின் காரியமாம். எது எதன் காரியமோ அது அதன் ஆசிரயமாகாது. ஆகையால் சேதனமே அஞ்ஞானத்துக்கு அதிஷ்டானரூப ஆசிரயமாம்.

2. சேதனத்தையே அஞ்ஞானம் விஷயஞ்செய்கிறது. ஸ்வரூபத்தை மறைப்பதே அஞ்ஞானம் விஷயஞ்செய்தலாம். அந்த அஞ்ஞானத்தாலாகிய ஆவரணம் ஜட வஸ்துவில் பொருந்தாது. ஏனெனின், ஜடவஸ்து ஸ்வரூபமாகவே ஆவிருதமா (மறைக்கப்பட்டதா) யிருக்கிறது. அதில் அஞ்ஞானத்தாலாகிய ஆவரணத்துக்கு ஒரு பிரயோஜனமுமில்லை.

இவ்விதத்தால் அஞ்ஞானத்துக்கு ஆசிரயமும் விஷயமும் சைதன்னியமே. அது வீட்டின் நடுவிலிருக்கும் இருள் வீட்டின் இடையை மறைப்பது போலாம். ஆதலால் கடத்தின்கண் அஞ்ஞானமும் அதன் ஆவரணமும் பொருந்தா.

## 189. வெளிப்பதார்த்தங்களில் விருத்தி ஆபாஸன் என்னும் இரண்டன் உபயோகமுமுண்டெனினும் அதன்கண் அஞ்ஞானத்தினால் மறைக்கப்பட்ட கடத்தின் உதாரணமும் 189 - 190.

அதற்குச் சமாதானம் இதுவாம்:—எங்ஙனம் சேதனத்தின் ஸ்வரூபத்துக்கு வேறாகவும் சதசத்து விலக்ஷண அஞ்ஞானம் சேதனத்தை யாசிரயித்ததாயிருக்கிறதோ, அந்த அஞ்ஞானத்தால் சேதனம் மறைக்கப்பட்டதா யிருக்கிறதோ, அங்ஙனமே கடத்தின் ஸ்வரூபத்துக்கு வேறான அஞ்ஞானம் கடத்தை யாசிரயித்திராவிடினும், அஞ்ஞானமானது கடாதி ஸ்வரூபமாகப் பிரகாசமில்லாத ஜடஸ்வரூபங்களை ஆக்கியிருக்கின்றது. *ஆகையால் கடாதிகள் எப்போதுமே குருடனைப்போல மறைக்கப்பட்டனவா யிருக்கின்றன. அந்த மறைக்கப்பட்ட ஸ்வபாவம் கடாதிகளுக்கு அஞ்ஞானத்தால் உண்டாயிருக்கின்றது. ஏனெனின், தமோகுணப்பிரதான அஞ்ஞானத்தினின்றும் பூதங்களின் உற்பத்திவாயிலாகக் கடாதிகள் உண்டாகின்றன. அத்தமோகுணம் ஆவரணஸ்வபாவமுடையதாம். ஆதலால் கடாதிகள் பிரகாச மில்லாதனவாய்க் குருடாகவே யிருக்கின்றன.

இவ்வாற்றால் இருள் வடிவமான ஆவரணம் கடாதிகளில் அஞ்ஞானத்தாலாகியதாய் ஸ்வபாவசித்தமா (இயல்பாற் பெறப்பட்டதா) யிருக்கிறது.

---

* பணத்துக்கு முக்கிய ஆசிரயம் பெட்டிமுதலியனவாம். நான் தனிகன் என்னுமிடத்தில் தனத்தின் அபிமானிவடிவ ஆசிரயம் புருஷனும். அதுபோல அஞ்ஞானத்துக்கு முக்கிய ஆசிரயம் சேதனமாம். அபிமானிரூப ஆசிரயம் ஆபாஸசகித அந்தக்கரணமாம்.

கடாதிகளின் அதிஷ்டான சேதனத்தை யாசிரயித்துள்ள அஞ்ஞானம் சைதன்னியத்தை மறைத்து, ஸ்வபாவமாக மறைக்கப்பட்டுள்ள கடாதிகளையும் மறைக்கிறது.

ஸ்வபாவமாக மறைக்கப்பட்டுள்ள பதார்த்தங்களை மறைப்பதில் பிரயோஜன மில்லையாயினும், ஆவரணஞ்செய்யும் பதார்த்தம் பிரயோஜனத்தின் அபேக்ஷையின்றியே ஆவரணமின்றியதிற்போல ஆவரணத்தோடு கூடியதிலும் ஆவரணஞ்செய்கிறது. இது உலகத்தில் பிரசித்தம்.

அந்த அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்ட கடத்தையடைந்த அந்தக்கரணத்தின் ஆபாஸசஹித கடாகார விருத்தியிலுள்ள

1. விருத்திபாகமோ கடத்தினாவரணத்தைப் போக்குகிறது;

2. ஆபாஸபாகம் கடத்தைப் பிரகாசிப்பிக்கிறது.

இவ்வாறு வெளியிலுள்ள பதார்த்தங்களில் விருத்தியும் ஆபாஸனுமாகிய இரண்டும் உபயோகமாம்.

## 190. திருஷ்டாந்தம்.

இருளில் மண்ணால் அல்லது இரும்பினாற் செய்யப்பட்ட ஒரு வஸ்து சட்டியால் மூடப்பட்டிருக்கிறது. அங்குத் தடியால் அந்தச்சட்டியை யுடைத்தாலும் பின் தீபமில்லாமல் உள்ளே யிருக்கும் பொருள் பிரகாசிக்கிறதில்லை. ஆனால் தீபத்தினால் அது பிரகாசிக்கிறது. அதுபோல அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்ட கடத்தின் ஆவரணத்தை விருத்தி நாசஞ்செய்தாலும் கடம் பிரகாசிக்கிறதில்லை. ஏனெனின், கடமோ ஸ்வரூபமாக ஜடம்; விருத்தியும் ஜடம்; அதற்கு ஆவரணத்தைக் கெடுத்தல் மாத்திரம் பிரயோஜனமாம்; அதனாற் பிரகாச முண்டாகிறதில்லை. ஆதலால் கடத்தைப் பிரகாசஞ்செய்வது ஆபாஸனும்.

நேத்திரத்துக்கு விஷயமான வஸ்துவினது பிரத்தியக்ஷ ஞானத்தின் இந்தக்கிரமம் சொல்லப்பட்டது. * சிரவணாதிகளுக்கு விஷயமான பதார்த்தங்களினது பிரத்தியக்ஷத்தின் கிரமத்தையும் இவ்வாறே அறிந்துகொள்க.

---

* 1. சுரோத்திரேந்திரியத்தால் சப்தவிஷயம் பிரத்தியக்ஷமாகுமிடத்துச் சுரோத்திரவாயிலாக வெளிப்பட்ட அந்தக்கரணத்தின் ஆபாஸனோடு கூடிய விருத்தியானது தூரதேசத்திலாவது சமீபதேசத்திலாவது உள்ள சப்தாகாரத்தின் சமான ஆகாரத்தை யடைகின்றது. அப்போது விருத்தியினால் சப்தத்தின் ஆவரணம் கெடுகிறது. ஆபாஸபாகம் சப்தத்தைப் பிரகாசஞ் செய்கிறது.

2. துவக்கிந்திரியத்தால் ஸ்பரிசகுணமும் அதற்காசிரயமான கடாதிகளும் பிரத்தியக்ஷமாகும்போது விருத்தி, சரீரமாகிய கோளகத்தைவிட்டு வெளியே போகிறதில்லை. ஆனால் சரீரத்தின் கிரியையினாலாவது மற்றொன்றின் கிரியையினாலாவது சரீரமாகிய கோளகத்தோடு சையோகத்தை யடைந்த கடாதி விஷயங்களையும் அவற்றை யாசிரயித்த கடினாதிவடிவ ஸ்பரிச குணத்தையும் சரீரரூப கோளகத்திலேயே இருப்பதாய்

1. விருத்தியும் கடமுமாகிய இரண்டும் ஓரிடத்திருத்தலால் கடத்தின் ஞானம் பிரத்தியக்ஷ மெனப்படுகிறது.

2. அந்தக்கரணத்தின் விருத்தியோ கடாகாரமாய்க் கடத்தோடு சம்பந் தப்படாமல் உள்ளேயே இருக்குமாயின் அது கடத்தின் பரோக்ஷஞான மெனப்படுகின்றது.

1. "இது கட" மென்பது அபரோக்ஷஞானத்தினுகாரமாம்.

2. "கடமிருக்கிறது" அல்லது "அந்தக் கடமிருக்கிறது" என்பது பரோக்ஷஞானத்தினுகாரமாம்.

ஸ்மிருதிஞானமும் பரோக்ஷஞானமேயாம். என்றாலும் ஸ்மிருதிஞான மோ ஸம்ஸ்கார ஜந்நியமாம். அநுமிதிமுதலிய பரோக்ஷஞானம் பிரமாண ஜந்நியமாம். இவ்வளவு பேதமுண்டு.

## 191. பிரத்தியக்ஷம், அநுமானம், சப்தம், உபமானம், அர்த்தாபத்தி, அநுபலப்தி யென்னும் பிரமாணங்களைக் கூறுதல். 191 - 196.

பிரமாணத்தின் பிரசங்கத்தால் பிரமாண நிரூபணஞ்செய்வாம்:—

---

ஆபாஸசகித அந்தக்கரண விருத்தி விஷயம் செய்கிறது. அந்த விருத்தியினுல் ஆசிரயத் தோடு ஸ்பரிசத்தின் ஆவரணம் பங்கமாகிறது; சிதாபாஸன் அதனைப் பிரகாசஞ்செய் கிறது.

3. ரசனேந்திரியத்தால் ரசவிஷயம் பிரத்தியக்ஷமாகும்போதும் விருத்தி சிங்கு வையாகிற கோளகத்தை விட்டு வெளியே போகிறதில்லை. ஆனுல் சிங்குவையாகிய கோளகத்தோடு ரசவிஷயத்தின் சையோகமுண்டாகும்போது, நாவின் நுனிப்பாகத்தி லிருக்கும் ரஸனேந்திரியத்திலுள்ள ஆபாஸசகித விருத்தி ரசத்தை விஷயஞ் செய் கிறது. அங்கு விருத்தியினுல் ரஸத்தின் ஆவரணம் பங்கமாகிறது; சிதாபாஸன் மதுர முதலிய ரஸங்களைப் பிரகாசஞ் செய்கிறது.

4. கிராணேந்திரியத்தால் கந்தம் பிரத்தியக்ஷமாகும்போதும் மூக்காகிய கோள கத்துடன் புஷ்பாதிவடிவ கந்தத்தின ஆசிரயத்திற்கு அல்லது அதன் சூக்ஷ்ம அவயவங் களுக்குச் சையோக முண்டாகுங்காலத்து, மூக்கின் நுனிப்பாகத்திலிருக்கும் கிரா ணேந்திரியத்திலுள்ள ஸாபாஸ அந்தக்கரண விருத்தி புஷ்பாதிவடிவத் திரவியத்தின் ஆசிரிதமான கந்தமாத்திரத்தைக் கிரகணம் (விஷயம்) செய்கிறது. அங்கு விருத்தி பாகத்தால் கந்தத்தின் ஆவரணம் பங்கமாகின்றது; விருத்தியிலுள்ள சிதாபாஸ பாகம் கந்தத்தினைப் பிரகாசஞ்செய்கிறது.

இது சுரோத்திர முதலியவற்றின் விஷயம் எதுவோ அதனது பிரத்தியக்ஷத்தின் கிரமமாம்.

1. * சார்வாக மதஸ்தர்கள் † பிரத்தியக்ஷப் பிரமாணம் ஒன்றனையே அங்கீகரிக்கிறார்கள்.

192. 2. ‡ கணாத சுகதமதங்களை யநுசரித்தவர்கள் இரண்டாவது அநுமானப் பிரமாணத்தையும் அங்கீகரிக்கிறார்கள். ஏனெனின், பிரத்தியக்ஷமொன்றனையே பிரமாணமெனக் கொள்ளின், திருப்தியை விரும்பியவனுக்குப் போஜனத்தில் பிரவிருத்தி யுண்டாகாது. ஏனெனின், புசிக்கப்படாத போஜனத்தில் திருப்தியின் ஏதுத்தன்மையினது பிரத்தியக்ஷப் பிரமாண ஜன்னியப் பிரத்தியக்ஷ ஞானமில்லை. ஆதலால் புசிக்கப்பட்ட போஜனத்தில் அநுபவஞ் செய்யப்பட்ட திருப்தியின் ஏதுத்தன்மை எதுவோ, அதனைப் புசிக்கப்படாத போஜனத்திலும் அநுமானத்தினால் அறிவதனால் திருப்தியை விரும்பியவனுக்குப் போஜனத்திற் பிரவிருத்தி யுண்டாகுதலால் அநுமானப் பிரமாணத்தையும் அங்கீகாரஞ் செய்யவேண்டும். இவ்வாற்றால் கணாத சுகதமதங்களை யநுசரித்தவர்கள் பிரத்தியக்ஷம் § அநுமான மென்னும் இரண்டு பிரமாணங்களை அங்கீகாரஞ் செய்கின்றனர்.

193. 3. சாங்கிய சாஸ்திரத்தின் கர்த்தாவாகிய கபிலர் மதத்தை யநுசரித்தவர்கள் மூன்றாவதான சப்தப்பிரமாணத்தையு மங்கீகரிக்கிறார்கள். ஏனெனின், பிரத்தியக்ஷ அநுமானங்களாகிய இரண்டு பிரமாணங்களையே அங்கீகரிக்கின், அன்னிய தேசத்தில் ஒருவன் தகப்பன் இறந்துபோகிறான். அச்செய்தியை உண்மை யுரைப்போன் ஒருவன் வந்து "உன் பிதா இறந்துபோய் விட்டான்" என்று சொல்லுவானாயின், அப்போது கேட்பவனுக்குத் தகப்பன் இறந்துபோய் விட்டானென்னும் நிச்சய முண்டாகலாகாது. ஏனெனின், தேசாந்தரத்திலுள்ள தகப்பனது மரணத்தின் ஞானம் பிரத்தியக்ஷப் பிரமாணத்தாலும் அநுமானப் பிரமாணத்தாலும் சம்பவியாது. இவ்வாற்றால் கபிலர்

---

* ஐந்து பூதங்களையும் அங்கீகரித்துத் தேகத்தை யாத்மாவென்று சொல்லுகிறவன் லோகாயதன். அவனுக்கு விலக்ஷணமாய் ஆகாசமின்றிய மற்ற நான்கு பூதங்களை மாத்திரம் அங்கீகரித்துத் தேகத்தை யாத்மாவென்று சொல்லுகிறவன் சார்வாகன்.

† பிரத்தியக்ஷப்பிரமாணப் பிரமைகளின் நிரூபணம் விருத்திரத்நாவலியின் இரண்டாவது ரத்நத்திலும் விருத்திப்பிரபாகரத்தின் முதற்பிரகாசத்திலும் விஸ்தாரமாய்ச் செய்யப்பட்டிருக்கிறது.

‡ வைசேஷிக சாஸ்திரத்தின் கர்த்தா; இவருக்குக் கணபுக்கென்றும் பெயர்.

சுகதமதம் - பௌத்தமதம்.

§ அநுமானப்பிரமாண அநுமிதிப் பிரமைகளின் நிரூபணம் விருத்திரத்நாவலியின் மூன்றாவது ரத்நத்திலும் விருத்திப்பிரபாகரத்தின் இரண்டாவது பிரகாசத்திலும் செய்யப்பட்டிருக்கிறது.

மதத்தை யனுசரித்தவர்கள் பிரத்தியக்ஷம், அனுமானம், * சப்தம் என்னும் மூன்று பிரமாணங்களையும் அங்கீகரிக்கிறார்கள்.

**194.** 4. நியாயசாஸ்திர கர்த்தாவாகிய கௌதமர் மதத்தை யனுசரித்தவர்கள் † உபமானத்தையும் நான்காவது பிரமாணமாகக் கொண்டிருக்கின்றனர். ஏனெனின், பிரத்தியக்ஷாதி மூன்று பிரமாணங்களையே அங்கீகரிக்கின், கவயத்தை (காட்டுப்பசுவை) ப்பாராத ஒருவன் காட்டுமனிதனால் 'கவய மிருகம் பசுமாடு போன்றது' என்று கேள்விப்பட்டபின் காட்டுக்குப்போய்க் கவயத்தைப் பார்க்கும்போது அவனுக்கு அக்காட்டுமனிதன் சொன்ன "கோவினை (ஆவை) ஒக்கும் கவயம் (ஆமா)" என்னும் வாக்கியமும் அதன் பொருளும் நினைவில் வருகின்றன. அந்த "ஸ்மரணைக்குப் பின்" இது கவயமென்னும் ஞானம் அவனுக்குண்டாகிறது. உபமானப்பிரமாணத்தை யங்கீகரியாவிடின் இந்த ஞான முண்டாகலாகாது. ஆகையால் இத்தன்மைய விலக்ஷண ஞானத்துக்கு ஹேதுவான உவமானப்பிரமாணத்தையு மங்கீகரிக்கின்றார்கள்.

**195.** 5. பூர்வ மீமாம்ஸையின் ஏகதேசியான பட்டருடைய சிஷ்யராகிய பிரபாகரர் ஐந்தாவது அர்த்தாபத்திப்பிரமாணத்தையு மங்கீகரிக்கிறார். பகலில் போஜனஞ்செய்யாத புருஷனது ஸ்தூலத்தைக் கண்டு, இவன் இரவில் சாப்பிடுவன் என்னும் ஞானமுண்டாகிறது. ஏனெனின், இராத்திரிபோஜனமின்றிப் பகலிற் போஜனத்தை விட்டவனிடத்தில் ஸ்தூலத்தன்மை பொருந்தாது. ஆதலால் ஸ்தூலத்தன்மை இராத்திரி போஜனத்தின் சம்பாத்திய (காரிய) மாம். இராப்போஜனம் ஸ்தூலத்தன்மையின் சம்பாதக (காரண) மாம். சம்பாதகமான இராப்போஜனத்தின் ஞானத்துக்கு ஹேதுவான ஸ்தூலத்தன்மையின் ஞானம் ‡ அர்த்தாபத்திப்பிரமாண மெனப்படுகிறது.

**196.** 6. பூர்வமீமாம்ஸகரான பட்டர் ஆறுவது அனுபலப்திப் பிரமாணத்தையு மங்கீகரிக்கிறார். வேதாந்த சாஸ்திரத்திலும் ஆறு பிரமாணங்கள் அங்கீகரிக்கப்பட் டிருக்கின்றன. அநுபலப்திப் பிரமாணத்தின் பிரயோஜனம் இதுவாம்:—வீடு முதலியவற்றில் கடாதிகளினது அபாவத்தின் ஞான முண்டாகிறது. அங்கு எப்பதார்த்தத்தின் பிரதீதி யுண்டாகவில்லையோ அதன் அபாவத்தினது ஞானமுண்டாகிறது. அப்பிரதீதி (தோற்றாமை)யை அநுபலப்தி யென்பர். கடத்தின் அப்பிரதீதியினால் கடத்தின் அபாவ நிச்சயமுண்டா

* சப்தப்பிரமாண சாப்திப்பிரமைகளின் நிரூபணம் விருத்திரத்நாவலியின் ஐந்தாவது ரத்நத்திலும் விருத்திப்பிரபாகரத்தின் மூன்றாவது பிரகாசத்திலும் செய்யப்பட்டிருக்கிறது.

† உவமானப்பிரமாண உவமிதிப்பிரமைகளின் நிரூபணம் விருத்திரத்நாவலியின் நான்காவது ரத்நத்திலும் விருத்திப்பிரபாகரத்தின் நான்காவது பிரகாசத்திலும் செய்யப்பட்டிருக்கிறது.

‡ அர்த்தாபத்திப்பிரமாண அர்த்தாபத்திப் பிரமைகளின் நிரூபணம் விருத்திரத்நாவலியின் ஆறுவது ரத்நத்திலும் விருத்திப்பிரபாகரத்தின் ஐந்தாவது பிரகாசத்திலும் செய்யப்பட்டிருக்கிறது.

கிறது. இவ்வாறு பதார்த்தங்களின் அபாவ நிச்சயத்துக்குக் காரணமான பதார்த்தங்களின் அப்பிரதீதியினை * அநுபலப்திப்பிரமாண மென்பர்.

## 197. பிரமாணப் பிரமா ஞானங்களின் லக்ஷணம்.

1. பிரமா ஞானத்துக்கு எது கரணமோ (199) அது பிரமாண மெனப் படும்.

2. ஸ்மிருதிக்கு வேறாய்ப் பாதிக்கப்படாத பொருளை விஷயஞ்செய்யும் ஞானம் பிரமை யெனப்படும்.

ஸ்மிருதிஞானம் பிரமையன்று. ஏனெனின் பிரமாஞானம் பிரமாதாவை யாசிரயித்ததாம். ஸ்மிருதி பிரமாதாவை யாசிரயித்ததன்று; ஆனால் சாக்ஷியை யாசிரயித்ததாக அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. பிராந்திஞானமும் சமுசயமும் சாக்ஷியை யாசிரயித்திருப்பனவாக அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன. இக்காரணத்தானே ஸ்மிருதி பிராந்தி சமுசயஞானம் என்னும் மூன்றும் ஆபாஸஸஹித அவித்தையின் விருத்திரூபங்களாம்; அந்தக்கரணத்தின் விருத்திரூபங்களன்று. ஆகையால் அவை பிரமாதாவை ஆசிரயித்தனவன்று; ஆனால் சாக்ஷியை யாசிரயித்தனவாம். எது அந்தக்கரணத்தின் விருத்திரூபஞானமோ அது பிரமாதாவின் ஆசிரிதமாம். அதுவே பிரமை யெனப்படும். ஸ்மிருதிஞானம் அந்தக்கரணத்தின் விருத்தியன்றாகலின் பிரமாதாவை யாசிரயித்ததன்று; பிரமையுமன்று. ஆகையால் பிரமையின் லக்ஷணத்தில் ஸ்மிருதியின் வேறாய் என்று சொல்லுதல்வேண்டும்.

பாதிக்கப்படாத பொருளை விஷயஞ்செய்யும் ஞானமோ ஸ்மிருதிஞானமுமாம்; ஆனால் ஸ்மிருதிஞானம் ஸ்மிருதியின் வேறன்று. ஆகையால் பாதிக்கப்படாத பொருளை விஷயம்செய்யும் ஸ்மிருதியின் வேறாய ஞானமே† பிரமை யெனப்படும். இவ்விலக்கணத்தில் ஒரு தோஷமுமில்லை.

## 198. ஸ்மிருதிஞானமும் ஆறுபிரமையின் விசாரபூர்வகமான கரணத்தின் லக்ஷணமும் 198-199.

வேறு சிலர் ஸ்மிருதிஞானத்தையும் பிரமைவடிவமாகக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் மதத்தின்படி பிரமையின் லக்ஷணத்தில் "ஸ்மிருதியின் வேறாய" என்று சொல்லுதலில்லை. ஆனால் பாதிக்கப்படாத பொருளை விஷயமாக்குகிற ஞானம் ‡ பிரமை யெனப்படுகிறது.

---

* அநுபலப்திப்பிரமாண அநுபலப்தி (அபாவ) ப்பிரமைகளின் நிரூபணம் விருத்திரத்நாவலியின் ஏழாவது ரத்நத்திலும் விருத்திப்பிரபாகரத்தின் ஆறாவது பிரகாசத்திலும் செய்யப்பட்டிருக்கிறது.

† யதார்த்த அநுபவம் பிரமையென்னும் பிரமையின் லக்ஷணம் ஸ்மிருதியின் வேறாயபட்டதாம்.

‡ யதார்த்த ஞானம் பிரமையென்னும் பிரமாலக்ஷணமும் ஸ்மிருதி சாதாரணமாம்.

பிராந்திஞானம் பாதிக்கப்படாத பொருளை விஷயஞ் செய்கிறதில்லை. ஆனால் பாதிக்கப்படும் பொருளை விஷயஞ்செய்கிறது. ஆதலால் பிரமையின் லக்ஷணம் பிராந்திஞானத்திற் செல்லுகிறதில்லை.

எவர்கள் மதத்தில் ஸ்மிருதிஞானத்திலும் பிரமை வியவகாரமுளதோ, அவர்கள் மதத்தில் ஸ்மிருதிஞானம் அந்தக்கரணத்தின் விருத்தியாம்; அவித்தியாவிருத்தி யன்று; சாக்ஷியை யாசிரயித்தது மன்று; ஆனால் பிரமாதாவை யாசிரயித்ததாம். ஏனெனின் அந்தக்கரண விருத்தியின் ஆசிரயம் பிரமாதாவே யாம்; சாக்ஷியாகாது.

இவ்விதத்தால் ஸ்மிருதிஞானம்

1. சிலர் மதத்திலோ அந்தக்கரணவிருத்தியா யிருத்தலால் பிரமாரூபமாம்.

2. சிலர் மதத்தில் அவித்தியாவிருத்தியா யிருத்தலால் பிரமாரூபமன்று.

பிராந்திஞானமும் சமுசயஞானமும் எல்லோர் மதத்திலும் அவித்தியா விருத்தியும் சாக்ஷியை யாசிரயித்தனவுமாம். இதில் ஒரு விவாதமுமில்லை.

விசாரித்துப் பார்க்குமளவில் ஸ்மிருதிஞானமும் அவித்தையின் விருத்தியும் சாக்ஷியின் ஆசிரிதமாம்; பிரமாவடிவமன்று. ஏனெனின், வேதாந்த சம்பிரதாயத்தை யறிந்தவர்கள் பிரமாஞானத்தை ஆறுவிதமாகக் கூறியிருக்கின்றனர். அவற்றில் ஸ்மிருதிஞான மில்லாமையால் அது * பிரமையன்று. மதுசூதனஸ்வாமிகள் ஸ்மிருதிஞானம் சாக்ஷியை யாசிரயித்ததென்றே சொல்லியிருக்கிறார்கள்.

**199.** இப்போது அவ்வாறுவிதப் பிரமைகளைச் சொல்லுகிறேன். அவை 1. பிரத்தியக்ஷப்பிரமை, 2. அனுமிதிப்பிரமை, 3. உபமிதிப்பிரமை, 4. சாப்திப்பிரமை, 5. அர்த்தாபத்திப்பிரமை, 6. அபாவப்பிரமை யென்பனவாம்.

---

* இங்கு இது விவேகமாம்:—

1. பிரமரூபமான அநுபவத்தின் சம்ஸ்காரத்தா லுண்டாகும் ஸ்மிருதி பாதிக்கப்படும் அர்த்தத்தை விஷயமாக்குவதா யிருத்தலால் யதார்த்தமாகா திருக்கிறது. இதனாலேயே அது அவித்தையின் விருத்தியாம். அந்தக்கரணத்தின் விருத்தியன்று; சாக்ஷியை ஆசிரயித்திருக்கிறது; பிரமாதாவை யாசிரயித்தில்லை.

2. யதார்த்த அனுபவத்தின் ஸம்ஸ்காரத்தா லுண்டாகும் ஸ்மிருதி ஞானம் பாதிக்கப்படாத அர்த்தத்தை விஷயமாக்குவதா யிருத்தலின் யதார்த்தஞானமாயிருக்கிறது. இதனாலேயே அது அந்தக்கரணவிருத்தியாம்; அவித்தியாவிருத்தியன்று. பிரமாதாவை யாசிரயித்திருக்கிறது; சாக்ஷியை யாசிரயிக்கவில்லை.

ஆனால் முன்னோர்கள் ஸ்மிருதிஞானத்தை பிரமையாக வியவகரிக்கவில்லை. ஆகையால் இரண்டுவித ஸ்மிருதிகளும் அப்பிரமைகளாம். அவற்றில் அயதார்த்த ஸ்மிருதி அயதார்த்த அப்பிரமையாம். யதார்த்த ஸ்மிருதி யதார்த்த அப்பிரமையாம். இவ்வளவு பேதமுண்டு.

முன் சொன்ன பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்கள் இவற்றிற்கு முறையே காணங்களா யிருக்கின்றன.

பிரத்தியக்ஷப்பிரமையின் கரணம் பிரத்தியக்ஷப்பிரமாணமென்று சொல்லப்படும்.

1. அசாதாரணகாரணமே * கரண மெனப்படும்.

2. சகல காரியங்களுக்கும் காரணமாயிருப்பது சாதாரணகாரண மெனப்படும்.

1. தர்மாதர்ம முதலியன சகல காரியங்களுக்குங் காரணமாகையால் சாதாரண காரணமாம்.

2. எல்லாக் காரியங்களுக்கும் காரணமாகாமல் யாதேனுமோர் காரியத்திற்குக் காரணமாவது அசாதாரணகாரண மெனப்படும். அது தண்டம் ஸகல காரியங்களுக்குங் காரணமாகாமல் கடாதிகாரிய விசேஷங்களுக்குக் காரணமாவதால் கடத்தின் அசாதாரணகாரணமென்றும் கரணமென்றுஞ் சொல்லப்படுவதுபோலாம்.

1. அதுபோலப் பிரத்தியக்ஷப் பிரமைக்கு ஈசுவரனும் ஈசுவரனுடைய இச்சை † முதலியவைகளும் சாதாரண காரணங்களாம். ஏனெனின், ஈசுவரன்

---

* 1. கேவல அசாதாரண காரணத்தைக் கரணமெனின், எங்கு இரண்டு அசாதாரணகாரண முளவாகின்றனவோ அங்கு எந்தக் காரணம் கரணமாமென்னும் நிச்சயமுண்டாகாது. ஆதலால் இரண்டு காரணங்களினின்றும் ஒன்றை வியாபார வடிவமாகக்கொண்டு எஞ்சிநின்ற மற்றக் காரணம் எதுவோ அந்த வியாபாரமுடைய அசாதாரண காரணம் கரண மெனப்படுகின்றது.

2. எது காரியத்தை ஒன்றன் வாயிலாக உண்டுபண்ணுகிறதோ அது வியாபார முடைய காரண மெனப்படுகின்றது. அதுவே கரணமாம். எங்ஙனம்: கபாலம் சையோக வாயிலாக்க் கடத்தை யுண்டுபண்ணுகிறது. அதனால் கபாலம் கடத்தின் வியாபாரமுடைய காரணமாம். அதுவே கடத்தின் கரணமுமாம்.

3. எது காரியத்தை ஒன்றன்வாயிலாக உண்டுபண்ணாது நேரே யுண்டுபண்ணுகிறதோ அது கேவலகாரணமாம்; கரணமன்று. எங்ஙனம்: இரண்டு கபாலங்களின் சையோகம் கடத்தை நேரே உண்டுபண்ணுகின்றது. ஆதலால் அது கடத்தின் கேவல காரணமாம்; கரணமன்று.

முற்கூறிய கரணத்தின் லக்ஷணம் பிரத்தியக்ஷம் அநுமானம் சப்தம் என்னும் மூன்று பிரமாணங்களிலும் பொருந்துமாயினும் உபமானம் அர்த்தாபத்தி அநுபலப்தி என்னும் மூன்று பிரமாணங்களும் உவமிதிமுதலிய பிரமைகளின் நிர்வியாபார (வியாபாரமின்றிய) காரணங்களாம். அவற்றில் முற்கூறிய கரணத்தினது லக்ஷணத்திற்கு அவ்வியாப்தியுண்டாம். ஆதலால் "வியாபாரத்தின் வேறாகிய அசாதாரணகாரணம் கரண மெனப்படும்" என்னும் கரணலக்ஷணம் தோஷமின்றியதாம். ஏனெனின், சிலவிடத்து வியாபாரமுளது; சிலவிடத்து வியாபாரமில்லை; இரண்டிடங்களிலும் வியாபாரத்தினும் வேறாதற்றன்மை யிருத்தலால்.

† முதலியவென்னும் சப்தத்தால் ஈசுவரனுடைய ஞானம், ஈசுவரனுடைய பிரயத்தினம், காலம், திக்கு, அதிருஷ்டம், பிராகபாவம், ப்ரதிபந்தகாபாவம் என்னு மிவ்வேழும் கொள்ளப்படும். இவ்வொன்பதும் சர்வகாரியங்களின் சாதாரண காரணங்களாம்.

முதலியன சகல காரியங்களுக்கும் காரணங்களாம். அவையின்றி ஒருகாரியமு முண்டாகிறதில்லை. ஆதலால் ஈசுவராதிகள் சாதாரணகாரணங்களாம்.

2. நேத்திரமுதலிய இந்திரியங்கள் பிரத்தியக்ஷப்பிரமையின் அசாதாரண காரணங்களாம். ஆகையால் அவை பிரத்தியக்ஷப்பிரமையின் கரணங்களாம். இவ்விதமாக நேத்திராதி இந்திரியங்கள் பிரத்தியக்ஷப்பிரமாணங்க ளெனப் படுகின்றன.

## 200. பிரமாதா பிரமாண பிரமிதி பிரமேய சேதனங்கள்.

வேதாந்த சித்தாந்தத்தில் இந்திரியத்தைப் பிரமாஞானத்துக்குக் காரண மாகச் சொல்லுவது பொருந்தாது. ஏனெனின் சேதனத்திற்கு நான்கு பேதமுண்டு:—1. பிரமாதாசேதனம். 2. பிரமாணசேதனம். 3. பிரமிதி சேதனம்; அதனையே பிரமாசேதனமென்றும் கூறுவர். 4. பிரமேயசேதனம்; அதனையே விஷயசேதனமென்றும் கூறுவர். இவ்விதத்தால் பிரமையென்பது சேதனத்திற்காம். அச்சேதனம் நித்தியமாம்; இந்திரிய ஜந்நியமன்று. ஆத லால் இந்திரியம் அதற்குக் காரணமன்று. அங்ஙனமாயினும் சேதனத்தில் பிரமாவியவகாரத்தைச் சம்பாதிக்கும் விருத்தியும் பிரமையெனப்படுகின்றது. அவ்விருத்திக்கு இந்திரியம் கரணமாம்.

1. தேகத்தின் மத்தியிலுள்ள அந்தக்கரணத்தால் அவச்சின்னமான (வளைபட்ட) சேதனம் பிரமாதா எனப்படும்.

2. அவ்வந்தக்கரணமே நேத்திராதி இந்திரியவாயிலாக வெளிப்பட்டு எதுவரையில் கடாதி விஷயங்கள் இருக்கின்றனவோ, அவ்வளவுவரையில் நீண்டபரிணாமமாகின்றது. மேல் விஷயங்களாகிய கடாதிகளோடு சேர்ந்து கடாதிகளின் வடிவம் எப்படியோ அப்படியே அந்தக்கரணத்தின் ஆகார முண்டாகின்றது. குளத்தினுள்ள ஜலம் மடைவழியாய்ப் புறப்பட்டு நீண்ட வாய்க்கால் வடிவடைந்து வயலிற் செல்லுகின்றது. வயலிற் பாய்ந்து வயலா காரத்தை யடைகிறது. அதுபோல அந்தக்கரணமும் இந்திரியமாகிய துவா ரத்தின் வழியாய் வெளியே சென்று விஷயரூபமான வயலையடைகிறது. அங் குச் சரீரமுதல் கடாதிவிஷயம் வரையிலுள்ள அந்தக்கரணத்தின் வாய்க் கால்போன்ற நீண்டபரிணாம மெதுவோ வதனை விருத்திஞானமென்பர். அத னால் அவச்சின்னமான சேதனத்துக்குப் பிரமாணசேதனமென்று பெயர்.

3. விருத்திஞானரூப அந்தக்கரண பரிணாமத்தைப் பிரமாணமென்பர். வயலிற் பாய்ந்தஜலம் வயலின் சமானாகாரமாவதுபோலக் கடாதிவிஷயத்தில் விருத்திசென்று கடாதிகளின் சமானாகாரத்தை யடைகிறது. இச்சமானாகாரத் தால் அவச்சின்னமான சேதனத்துக்குப் பிரமாசேதனமென்று பெயர்.

4. ஞானத்துக்கு விஷயமான கடாதிகளால் அவச்சின்னமான சேதனத் தை விஷயசேதனமென்றும் பிரமேயசேதனமென்றும் கூறுவர். இவை வேதார்த்தமறிந்த ஆசாரியர்களுடைய பரிபாஷைகளாம்.

## 201. அவச்சேத வாதத்தின்படி பிரமாதா சாக்ஷிகளோடு விசேஷண உபாதிகளின் லக்ஷணம்.

இதில் இவ்வளவு பேதமாம்:—அவச்சேதவாதம் கொள்ளுவோர் மதத்திலோ,

1. அந்தக்கரண விசிஷ்டசேதனம் பிரமாதாவாம். அதுவே கர்த்தா போக்தாவாம்.

2. அந்தக்கரண உபஹிதசேதனம் சாக்ஷியாம். ஒரே அந்தக்கரணம் பிரமாதாவுக்கு விசேஷணமாயும் சாக்ஷிக்கு உபாதியாயுமிருக்கிறது.

சொரூபத்தில் எதற்குப் * பிரவேசமுண்டோ அத்தன்மைய வியாவர்த்தக (வேறுபிரித்தறிவிக்கும்) வஸ்து விசேஷண மெனப்படும்.

மற்றப் பதார்த்தங்களினின்றும் வேறுபடுத்தி வஸ்துவின் ஸ்வரூபத்தை யறிவிப்பது எதுவோ அது வியாவர்த்தக மெனப்படும்.

எது வேறுபடுத்தி அறியப்படுகிறதோ அது வியாவர்த்திய மெனப்படும்.

"நீலகட" மென்பதில் கடத்தின் நீலவர்ணம் விசேஷணமாம். ஏனெனின், நீலகடத்தில் நீலவர்ணம் பிரவேசித்து மஞ்சள் வெண்மை முதலிய வர்ணங்களுடன் கூடிய கடங்களினின்றும் இந்நீலகடத்தை வேறுபடுத்தி யறிவிக்கிறது.

ஆகையால் நீலவர்ணம் வியாவர்த்தகமாம்;

இவ்விதத்தால் நீலத்தன்மை கடத்தின் விசேஷணமாம்;

கடம் பரிச்சேத்தியமாம். ஏனெனின், மஞ்சள் முதலிய வர்ணங்களுடன்கூடின கடங்களினின்றும் இந்நீலகடம் வேறுபடுத்தப்பட்டு அறியப்படுகிறது.

வேறுபடுத் தறியப்படும் பதார்த்தம் பரிச்சேத்தியமென்றும், வியாவர்த்தியமென்றும், விசேக்ஷியமென்றும் சொல்லப்படும். "தண்டிபுருஷன்" என்பதிலும் புருஷனுக்குத் தண்டம் விசேஷணமாம்.

இவ்விதத்தால் பிரமாதாவுக்கு அந்தக்கரணம் விசேஷணமாம். ஏனெனின், பிரமாதாவின் ஸ்வரூபத்தில் அந்தக்கரணத்தின் பிரவேசமிருத்தலால் பிரமேய சேதனத்தினின்றும் பின்னப்படுத்திப் பிரமாதாவின் ஸ்வரூபத்தை யறிவித்தலால் அந்தக்கரணம் வியாவர்த்தகமாம்.

எது வஸ்துவின் ஸ்வரூபத்தில் † பிரவேசியாமல் வியாவர்த்தகமா யிருக்கிறதோ அது உபாதி யெனப்படும்.

1. நையாயிக மதத்தில் கர்ணகோளகத்தால் வளைபட்ட ஆகாசம் சுரோத்திர மெனப்படும். இவ்விடத்தில் கர்ணகோளகம் சுரோத்திரத்துக்கு உபாதியாம். ஏனெனின், சுரோத்திரத்தின் ஸ்வரூபத்திற் கர்ணகோளகம் பிரவேசியாமல் வெளியிலுள்ள ஆகாசத்தினின்றும் சுரோத்திரத்தை வேறுபடுத்தி யறிவிக்கிறது. ஆகையால் கோளகம் வியாவர்த்தகமாம்.

---

* காரியத்துடன் சம்பந்தமுடையது.

† ஆசிரயத்துக்குக் காரியத்திற் சம்பந்தமில்லாமை பிரவேசியாமையாம்.

2. கடாகாசம் மணங்கு அளவு அன்னத்திற்கு அவகாசம் (இடம்) கொடுக்கிறது என்னுமிடத்திலும் ஆகாசத்திற்குக் கடம் உபாதியாம். ஏனெனின், மணங்கு அன்னத்திற்கு அவகாசங் கொடுக்கும் ஆகாசத்தின் ஸ்வரூபத்தில் கடத்தின் பிரவேசமில்லை. கடம் பிருதிவியின் காரியம். அதன்கண் அவகாசங் கொடுத்தல் பொருந்தாது. ஆதலால் கடத்திற்குச் சொரூபத்தில் பிரவேசம் பொருந்தாது; வியாபக ஆகாசத்தினின்றும் வேறுபடுத்தறிவிக்கின்றது. ஆதலால் மணங்கு அன்னத்திற்கு அவகாசந் தருவதாகிய ஆகாசம் எதுவோ அதற்குக் கடம் உபாதியாம்.

அதுபோல அந்தக்கரண உபஹிதசேதனம் சாக்ஷியா மென்னுமிடத்தில் அந்தக்கரணம் சாக்ஷிக்கு உபாதியாம். ஏனெனின், சாக்ஷியின் ஸ்வரூபத்தில் அந்தக்கரணத்தின் பிரவேசமில்லை. பிரமேய சேதனத்தினின்றும் சாக்ஷியை வேறுபடுத்தி யறிவிக்கிறது. ஆகையால் ஒரே அந்தக்கரணம் சாக்ஷிக்கு உபாதியும் பிரமாதாவுக்கு விசேஷணமுமாம். இவ்விதத்தால்,

1. அந்தக்கரண உபஹிதசேதனம் சாக்ஷியாம்.
2. அந்தக்கரண விசிஷ்டசேதனம் பிரமாதாவாம்.
1. உபாதியுடையது உபஹித மெனப்படும்.
2. விசேஷணமுடையது விசிஷ்ட மெனப்படும்.

அந்தக்கரண விசிஷ்டப்பிரமாதாவே கர்த்தா போக்தாவும் சுகியும் துக்கியுமான சமுசாரி ஜீவனும்.

இது அவச்சேதவாதத்தின் கிரமமாம்.

## 202. ஆபாஸவாதத்தின்படி ஜீவன் சாக்ஷிமுதலியவற்றின் லக்ஷணம்.

1. ஆபாஸவாதத்தில் ஆபாஸஸஹித அந்தக்கரணம் ஜீவனது விசேஷணமாம்.

2. ஆபாஸஸகித அந்தக்கரணம் சாக்ஷிக்கு உபாதியா யிருக்கிறது. ஆகையால்,

1. ஆபாஸஸஹித அந்தக்கரண விசிஷ்டசேதனம் ஜீவனும்.
2. ஆபாஸஸஹித அந்தக்கரண உபஹிதசேதனம் சாக்ஷியாம்.

இரண்டு பக்ஷங்களிலும் விசேஷணசகிதசேதனம் ஜீவனும். அதுவே சமுசாரியாம். அங்ஙனமாயினும், விசேஷிய பாகமான சேதனத்தில் ஜனன மரண முதலிய சமுசாரம் சம்பவிக்கிறதில்லை. ஆகையால் விசேஷண மாத்திரத்தில் சமுசாரம் சம்பவிக்கிறது. அதுவே விசிஷ்டசேதனத்தில் பிரதீதியாகின்றது.

1. சிலவிடங்களில் விசேஷணத்தினது தர்மங்களின் வியவகாரம் விசிஷ்டத்தி லுண்டாகின்றது.

2. சிலவிடங்களில் விசேஷிய தர்மங்களின் வியவகாரம் விசிஷ்டத்தி லுண்டாகின்றது.

3. சிலவிடங்களில் விசேஷண விசேஷிய மிரண்டினது தர்மங்களின் வியவகாரம் விசிஷ்டத்தி லுண்டாகின்றது.

1. தடியால் கடாகாசம் நசிக்கிறது என்னுமிடத்தில் விசேஷணமான கடம் தடியால் நாசமடைகிறது; விசேஷியமான ஆகாசம் நசிக்கிறதில்லை. என்றாலும் விசிஷ்டமான கடாகாசத்தின் நாசம் பிரதீதியாகிறது.

2. "குண்டல புருஷன் தூங்குகிறான்" என்னுமிடத்தில் குண்டலம் விசேஷணமாம்; புருஷன் விசேஷியமாம். விசேஷணமான குண்டலத்தில் தூங்குதல் பொருந்தாது. ஆனால் விசேஷியமான புருஷனிடத்தில் தூங்குதலுளது; குண்டல விசிஷ்டன் தூங்குகிறான் என்று விசிஷ்டத்தில் வியவஹாரமுண்டாகிறது.

3. "ஆயுதபாணியான புருஷன் யுத்தத்துக்குப் போயிருக்கிறான்" என்னுமிடத்தில் விசேஷணமான ஆயுதமும் விசேஷியமான புருஷனும் யுத்தத்துக்குப் போயிருத்தலால் இவ்விரண்டினது தர்மங்களின் வியவஹாரம் விசிஷ்டத்திற் காணப்படுகின்றது.

இந்த இடத்தில்,

1. அவச்சேத வாதத்தில் அந்தக்கரணம் விசேஷணமாம்.

2. ஆபாஸவாதத்தில் ஆபாஸ சகித அந்தக்கரணம் விசேஷணமாம்.

இரண்டுபக்ஷங்களிலும் சேதனம் விசேஷியமாம்; அதனிடத்தில் ஜன்மாதி சமுசாரஞ் சம்பவியாது; ஆனால் விசேஷணமான அந்தக்கரணத்தின் அல்லது ஆபாஸசகித அந்தக்கரணத்தின் தர்மமாகிய ஜன்மாதி சமுசாரம் எதுவோ அது விசிஷ்டசேதனத்தில் * வியவகரிக்கப்படுகிறது. வியவகாரம் என்பது தோற்றுதற்கும் சொல்லுதற்கும் பெயராம். இதுவே ஆபாஸவாத அவச்சேத வாதங்களின் பேதமாம்.

## 203. ஆபாஸவாதத்தின் மேன்மை.

ஆபாஸ வாதத்தில் அந்தக்கரணம் ஆபாஸஸஹிதமாயும் அவச்சேத வாதத்தில் அந்தக்கரணம் ஆபாஸரகிதமாயும் இருக்கிறது. இவ்விரண்டினும் ஆபாஸவாதம் சிரேஷ்டமாம். ஏனெனின்,

1. பாஷியகாரரால் ஆபாஸவாதம் அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது.

2. அவச்சேதவாதத்தில் வித்தியாரண்ய ஸ்வாமிகள் தோஷமுஞ் சொல்லியிருக்கிறார்கள். அதாவது, ஆபாஸரகிதமான அந்தக்கரண அவச்சின்ன

* அவிவேகிகளால் அந்தக்கரணமாகிய விசேஷணத்தின் தர்மவடிவ சம்சாரத்தின் வியவகாரம் அஞ்ஞானத்தாலாகிய பிராந்தியினால் விசேஷணத்தோடுகூடிய சேதனத்திற் செய்யப்படுகின்றது.

சேதனத்தைப் பிரமாதாவாகக் கொள்ளின் கடாவச்சின்ன சேதனமும் பிரமாதாவாதல் வேண்டும். ஏனெனின்,

(1) எப்படி அந்தக்கரணம் பூதங்களின் காரியமோ, அப்படியே கடமும் பூதங்களின் காரியமாம்.

(2) எப்படி அந்தக்கரணம் சேதனத்தின் அவச்சேதகமோ அதாவது வியாவர்த்தகமோ, அப்படியே கடமும் சைதன்னியத்தின் அவச்சேதகமாம்.

ஆதலால், அந்தக்கரண விசிஷ்டம்போலக் கடவிசிஷ்டமும் பிரமாதாவாதல் வேண்டும்.

அந்தக்கரணத்தில் ஆபாஸத்தை யங்கீகரிக்கின் இந்தத் தோஷமில்லை. ஏனெனின்,

1. அந்தக்கரணம் பூதங்களின் சத்துவகுண காரியமாம்; ஆதலால் ஸ்வச்சமாம்.

2. கடாதிகள் பூதங்களின் தமோகுண காரியமாம்; ஆதலால் ஸ்வச்சமன்று.

1. எது ஸ்வச்ச பதார்த்தமோ அதுவே ஆபாஸம் (பிரதிபிம்பம்) உண்டாகத்தக்கதாம்.

2. மலினபதார்த்தம் ஆபாஸ முண்டாகத் தக்கதன்று.

கண்ணாடியும் அதன் மூடியும் மண்ணாலானவையாயினும்

1. கண்ணாடி ஸ்வச்சமா யிருத்தலால் அதில் முகத்தின் ஆபாஸ முண்டாகிறது.

2. மூடி ஸ்வச்சமில்லாததாகலின் அதில் ஆபாஸ முண்டாகிறதில்லை.

1. அதுபோல அந்தக்கரணம் சத்துவகுணமா யிருத்தலால் ஸ்வச்சமாம்; அதிற்றான் சேதனத்தினாபாச முண்டாகிறது.

2. சரீரமுதலியனவும் கடமுதலியனவும் தமோகுணகாரியமா யிருத்தலால் ஸ்வச்சமன்று. அவற்றில் சேதனத்தின் ஆபாஸ முண்டாகிறதில்லை.

## 204. அந்தக்கரணத்தில் இருவகைப் பிரகாசங்களிருத்தலால் அதுவே பிரமாதாவாம்; பிறவன்று எனல்.

இவ்விதத்தால் அந்தக்கரணத்தில் இருவகைப் பிரகாசங்களுள. ஒன்று வியாபகசேதனத்தின் பிரகாசம்; மற்றொன்று ஆபாஸத்தின் பிரகாசம்.

சரீரமுதலியவற்றிலும் கடமுதலியவற்றிலும் ஒரு வியாபக சேதனத்தின் பிரகாசமோ இருக்கிறது; இரண்டாவது ஆபாஸத்தின் பிரகாசமில்லை. ஆகையால் இருவகைப் பிரகாசங்களோடு கூடிய அந்தக்கரண விசிஷ்டசேதனமே பிரமாதா வெனப்படுகிறது.

ஒரு பிரகாசஸகித கடாதிகளுடன் கூடிய சேதனம் பிரமாதாவன்று; எவர்கள் மதத்தில் அந்தக்கரணத்தில் ஆபாஸமில்லையோ, அவர்கள் மதத்தில் கடாதிகளிற்போல அந்தக்கரணத்திலும் ஆபாஸத்தின் இரண்டாவது பிரகாசமில்லை. வியாபக சேதனத்தின் ஒரு பிரகாசம் எது அந்தக்கரணத்திலிருக்கின்றதோ, அதே வியாபகமான சேதனத்தின் பிரகாசம் கடமுதலிய

வற்றினு மிருக்கிறது. ஆகையால் அந்தக்கரணவிசிஷ்டம்போலக் கடவிசிஷ்ட அல்லது சரீரவிசிஷ்ட அல்லது சுவர்விசிஷ்ட சேதனமும் பிரமாதாவாதல் வேண்டும். இவ்விதமாகக் கடசரீராதிகளினும் அந்தக்கரணத்தில் இவ்விலக்ஷணத்தன்மையேயுளது.

1. அந்தக்கரணம் சத்துவகுண காரியமா யிருத்தலால் ஸ்வச்ச (சுத்த) மா யிருக்கிறது. ஆகையால் அது சேதனத்தின் ஆபாஸத்தைக் கிரகிக்கத் தக்கதா யிருக்கிறது.

2. அந்நிய பதார்த்தங்கள் ஸ்வச்சமாகாமையால் ஆபாசத்தைக் கிரகிக் கத்தக்கவையன்று.

1. ஆபாஸத்தைக் கிரகிக்கத்தக்க அந்தக்கரணத்துடன் கூடிய சேதனமே பிரமாதா வெனப்படும்.

2. கடாதிகளும் சரீராதிகளும் ஆபாஸத்தைக் கிரகிக்கத்தக்கவையன்று. ஆதலால் அவற்றோடுகூடிய சேதனம் பிரமாதாவன்று. இவ்விதத்தால் ஆபாஸவாதமே * சிரேஷ்டமாம்; அவச்சேதவாதம் சிரேஷ்டமன்று.

## 205. பிரமாதாமுதலிய சேதனங்களின் ஸ்வரூபம்.

அந்தக்கரணம் ஆபாஸஸஹிதமா யிருப்பதுபோல அந்தக்கரண விருத்தியும் ஆபாஸஸஹிதமாகவே யுண்டாகிறது. ஆபாஸஸஹித விருத்தி விசிஷ்ட சேதனம் பிரமாணசேதன மெனப்படும்.

கடாதி விஷயாகாரமாகும் அந்தக்கரணத்தின் விருத்தியில் ஆரூடமான சேதனம் பிரமாவென்றும் யதார்த்தஞானமென்றும் சொல்லப்படும்.

அதற்குச் சாதனமான இந்திரியம் பிரமாணமென்று சொல்லப்படும். ஏனெனின், விஷயாகாரவிருத்தியில் ஆரூடமான சேதனம் பிரமையெனப்படுகிறது. அங்குச் சேதனம் ஸ்வரூபமாக நித்தியமாயிருத்தலால் இந்திரிய ஜந்நியமன்று. ஆதலால் பிரமா சேதனத்துக்கு இந்திரியம் சாதனமன்று. அங்ஙனமாயினும் உபாதியில்லாத சேதனத்தில் பிரமாவியவகார மில்லை. ஆனால் விஷயாகார விருத்தி யுபஹித சேதனத்தில் பிரமாவியவகார முண்டாகிறது. ஆகையால் சேதனத்திற் பிரமாசப்தத்தின் பிரவிருத்தியில் விஷயாகார விருத்தி உபாதியாம். அந்த விஷயாகாரவிருத்தி இந்திரியஜந்நியமாம். இந்திரியம் அதற்குச் சாதனமாம்.

பிரமாத்தன்மையின் உபாதியாகிய விருத்தி இந்திரியஜந்நியமா யிருத்தலால் உபஹிதமான பிரமையும் இந்திரியஜந்நிய மெனப்படுகிறது. ஆகை

---

* ஆபாஸவாதத்தில் ஆபாஸனது கற்பனை அதிகமாய்ச் செய்யவேண்டியதாகிறது; அது அவச்சேதவாதத்தி லில்லையாகலின் ஆபாஸவாதத்தில் கௌரவமுண்டு. அவச்சேதவாதத்தில் இலாகவ முண்டு. அங்ஙனமாயினும், மந்தபுத்தியுடைய ஜிஞ்ஞாஸுவின் புத்தியில் ஆபாஸவாதத்தின் ஆரோபம் செவ்வையாய்ப் பதியுமென்னும் அபிப்பிராயத்தால் இங்கு ஆபாஸவாதத்தின் ஸ்துதி செய்யப்பட்டிருக்கிறது. பாஷியகாரர் முதலியோருக்கும் இதுவே தாற்பரியமாம்.

யால் இந்திரியம் பிரமைக்குச் சாதன மெனப்படுகிறது. ஆனால் அந்தக்கரணத்தின் பரிணாமங்கள் முழுவதும் பிரமை யெனப்படுவதில்லை. சரீரத்திற்குள்ளிருக்கும் அந்தக்கரணம் விஷயமாகிற கடாதிகள்வரையில் பரிணமிக்கின்றது. அந்தப் பரிணாமத்தைப் பிரமாணமென்பர்.

விஷயத்துடன் சேர்ந்து விஷயசமானகாரமாகும் அந்தக்கரணத்தின் பரிணாமம் பிரமை யெனப்படும்.

சரீரத்தினுள்ளிருக்கும் அந்தக்கரணமுதல் கடாதிவிஷயம்வரையில் நீண்டிருக்கிற அந்தக்கரணத்தின் பரிணாமம் எதுவோ அதுவே பிரமைவடிவத்தைத் தரிக்கின்றது. ஆதலால் பிரமைக்கும் பிரமாணரூப அந்தக்கரண விருத்திக்கும் அதிக பேதமில்லை.

1. இவ்விதத்தால் வெளியிலுள்ள பதார்த்தங்களின் பிரத்தியக்ஷஞான முண்டாகுமிடத்து, அந்தக்கரணவிருத்தி வெளியிற்சென்று விஷயமாகிற கடாதிகளுக்குச் சமானமான ஆகாரத்தைத் தரிக்கிறது.

2. சரீரத்தினுள்ளிருக்கிற ஆத்மாவின் பிரத்தியக்ஷஞான முண்டாகும்போது அந்தக்கரணவிருத்தி வெளியிற்போகாமல் சரீரத்தினுள்ளேயே ஆத்மாகாரமாகிறது.

1. அந்த விருத்தியால் ஆத்மாவை யாசிரயித்த ஆவரணம் நீங்குகிறது.

2. ஆத்மா தன் பிரகாசத்தால் அவ்விருத்தியில் பிரகாசிக்கிறது. இக்காரணத்தால் ஆத்மா விருத்தியின் விஷயமென்று சொல்லப்பட்டிருக்கிறது. விருத்தியிலுள்ள சிதாபாஸரூப பலத்துக்கு ஆத்மா விஷயமாகிறதில்லை.

இந்தப் பிரகாரத்தால் சாக்ஷியாகிய ஆத்மா ஸ்வயம்பிரகாசரூபமாய் விளங்குகிறதென்பது சித்தித்தது.

## 206. பிரசினம்:—இந்திரிய சம்பந்தமின்றி "அகம் பிரஹ்மம்" என்னும் ஞானம் எங்ஙனம் பிரத்தியக்ஷமாகும்? எனல் 206—210. தத்துவதிருஷ்டி கேட்கலாயினன்.

"பிரஹ்மத்தின் அபரோக்ஷஞானத்தால் சகல அவித்தியா சமூகங்களும் நாசமாகின்றன; பரோக்ஷஞானத்தால் ஆகிறதில்லை" யென்பது முன் சொல்லப்பட்டது. அதிற் சங்கை செய்வாம்:—பிரஹ்மத்தின் ஞானம் பிரத்தியக்ஷமாகாது. ஏனெனின், இந்திரியஜந்நியஞானம் பிரத்தியக்ஷமாகும்; பிரஹ்மத்தின் ஞானம் இந்திரியஜன்னியமாகாது.

## 207. 1. பிரஹ்மம் நேத்திரத்திற்கு விஷயமாகாமை. (இராமகிருஷ்ணரியரின் சரீரம் பிரஹ்மமன்றெனல்.)

ஏனெனின், நேத்திரேந்திரியத்தால் ரூபமுடையதின் அல்லது நீலமுதலிய வர்ணங்களின் ஞானமுண்டாகிறது. பிரஹ்மம் இத்தன்மையதன்று. ஆதலால் நேத்திரேந்திரிய ஜந்நியஞானம் பிரஹ்மத்தினதாகாது.

ராமகிருஷ்ணதிகளின் மனுஷியாகார மூர்த்திகள் ரூபமுடையனவாயினும், அந்த மூர்த்திகள் மாயையா லாக்கப்பட்டனவாய் மித்தையா யிருக்கின்றன; அம்மூர்த்திகள் பிரஹ்மமன்று.

புராணங்களில் ராமகிருஷ்ணதிகளுக்குப் பிரஹ்மரூபஞ் சொல்லப்பட்டிருக்கிறது. அது அவர்களுடைய சரீரரூபமூர்த்தியே பிரஹ்மமென்னும் அபிப்பிராயத்தாற் கூறியதன்று. ஆனால் அவர்களுடைய சரீரங்களுக்கு அதிஷ்டானமான சேதனம் பிரஹ்மமாமென்பது புராணங்களின் அபிப்பிராயம்.

இதில் இச்சங்கை யுண்டாகின்றது:—எல்லாச் சரீரங்களுக்கும் அதிஷ்டானசேதனம் பிரஹ்மம். ஆகையால், அதிஷ்டானசேதன அபிப்பிராயத்தால் ராமகிருஷ்ணதிகளுக்குப் பிரஹ்மத்துவம் சொல்லியிருக்குமாயின், எல்லாச் சரீரங்களுக்கும் அதிஷ்டானசேதனம் பிரஹ்மமாதலால் மனுஷ்ய பசு, பக்ஷி முதலிய சகலமுமே பிரஹ்மரூபமாகும். அவற்றிற்குச் சமானமாகவே ராமகிருஷ்ணதிகளுமாவர். ஆகையால் ராமகிருஷ்ணதிகளின் அதிஷ்டான சேதனம் "பிரஹ்மம்" என்னும் அபிப்பிராயத்தால் பிரஹ்மரூபத்துவஞ் சொல்லவில்லை. ஆனால் அவர்களுக்கு மற்ற ஜீவர்களினும் விசேஷரூபத் தன்மை சித்தித்தற்பொருட்டு அவர்களது சரீரமே பிரஹ்மமென்று நினைத்தல் தகுதியாம்.

அது பொருந்தாது. ஏனெனின், சரீரத்தைப் பாதித்து அவர்களது சரீரத்தைப் பிரஹ்மரூபமாகக் கொள்ளின்,

1. சகலசரீரங்களையும் பாதித்துச் சகலசரீரமும் பிரஹ்மரூபமாம்.

2. பாதஞ்செய்தலின்றியோ அந்நியசரீரத்தைப்போல கைகால்முதலிய அவயவங்களோடு கூடியதும் ரூபமுடையதும் கிரியையுடையதுமான சரீரத்திற்கு நிரவயவமும் ரூபமில்லாததும், கிரியையில்லாததுமான பிரஹ்மத்தோடு அபேதம் பொருந்தாது. ஆதலால் இராமகிருஷ்ணதிகளின் சரீரம் பிரஹ்மமன்று. ஆனால்,

இவ்வளவு பேதமுண்டு:—ஜீவர்களுடைய சரீரம் (1) புண்ணிய பாபங்களின் அதீனமாம்; (2) பூதங்களின் காரியமாம்; (3) ஜீவர்க்குத் தேகாதி அநாத்ம பதார்த்தங்களில் அவித்தியாபலத்தினால் நான் எனது என்னும் அத்தியாஸமுளது. அந்த அத்தியாஸம் ஆசாரியருடைய உபதேசத்தால் நிவிருத்தியாகிறது.

1. ராமகிருஷ்ணதியரின் சரீரங்கள் அவர்களது புண்ணியபாபங்களாலுண்டானவையன்று; பூதங்களின் காரியமன்று.

ஆனால்,

(1) சிருஷ்டிக்குமுன் பிராணிகளது கர்மம் போகங்களைக் கொடுக்க எதிர்முகமாகும்போது ஆப்தகாமமான ஈசுவரனிடத்திலும் பிராணிகளது கர்

மாநுசாரமாக "நான் ஜகத்தை யுண்டுபண்ணுவேனாக" என்னும் சங்கற்பமுண்டாகிறது. அச்சங்கற்பத்தினால் ஜகத்தினுற்பத்திவடிவ சிருஷ்டி யுண்டாகிறது.

(2) அப்படியே சிருஷ்டிக்குப் பிறகும் "நான் ஜகத்தைப் பாலனம் பண்ணுவேனாக" என்னும் சங்கற்பம் ஈசுவரனுக் குண்டாகிறது. அந்தச் சங்கற்பத்தால் ஜகத்தின் பாலன முண்டாகிறது.

கர்மாநுசாரமான சுகதுக்கங்களின் சம்பந்தம் பாலன மெனப்படும்.

(3) அப்பாலன சங்கற்பத்தி னிடையில் உபாஸக புருஷர்களுடைய உபாஸனா பலத்தினால் "ராமகிருஷ்ணாதி நாமசகித மூர்த்திகள் எல்லோருக்கும் பிரதீதியாகுக" என்னும் சங்கற்பம் ஈசுவரனுக் குண்டாகிறது. அந்த ஈசுவர சங்கற்பத்தினால் விசேஷ நாமரூபங்களில்லாத ஈசுவரனிடத்தில் ராம கிருஷ்ணாதி நாமங்களும், பீதாம்பராதம் முதலிய கரிய சுந்தர விக்கிரகமான ரூபங்களும் உற்பத்தியாகின்றன. அவ்விக்கிரகங்கள் கர்மாதீனமன்று.

ராமகிருஷ்ணாதி விக்கிரகங்களால் சாதுக்களுக்கும் துஷ்டர்களுக்கும் முறையே சுகமும் துக்கமும் உண்டாகின்றன. எது எவனுடைய சுகதுக்கங்களுக்கு ஏதுவாயிருக்கிறதோ, அது அவனுடைய புண்ணிய பாபங்களாலாக்கப்பட்டதாம். ஆகையால், அது புண்ணிய பாபங்களின் அதீனமாகச் சொல்லப்படுகிறது. இவ்விதத்தால்,

(1) அவதாரங்களின் சரீரங்கள் சாதுக்களுடைய சுகத்துக்கு ஹேது வாதலால் சாதுக்களின் புண்ணிய சமுதாயத்தா லாக்கப்பட்டுள்ளன.

(2) அசுராதி துஷ்டர்களுக்குத் துக்கத்திற்கு ஹேதுவாயிருத்தலால் அவர்களது பாபத்தினு லுண்டாகியனவாம். ஆகையால் "அவதாரங்களின் சரீரங்கள் புண்ணிய பாபங்களின் அதீனமன்று" என்று சொல்லுதல் பொருந்தாது.

அங்ஙனமாயினும், ஜீவனால் பூர்வசரீரத்திற் செய்யப்பட்ட புண்ணியபாப கர்மத்தின் பலன் உத்தரசரீரத்தில் அந்த ஜீவனுக்குச் சுகதுக்கமாகி விடுகிறது. அங்குச் சரீராபிமானி ஜீவனது முன் சரீரத்தின் தனது புண்ணிய பாபத்தின் ஆதீனமாகப் பிந்தியசரீரஞ் சொல்லப்படுகிறது. அதுபோல ராமகிருஷ்ணாதிகளின் சரீரங்கள் சாது துஷ்டர்களது புண்ணியபாபங்களின் அதீனமாம்; அவர்களது சுகதுக்கங்களுக்கு ஹேதுவாம். ஆனால் ராமகிருஷ்ணாதிகளின் அவதார சரீரங்கள் புண்ணியபாபங்களா லாக்கப்பட்டவையன்று. தமது சரீரங்களால் அவர்களுக்குச் சுகதுக்கங்களின் போகமுண்டாகிறதில்லை. ஆகையால் ராமகிருஷ்ணாதிகளின் சரீரங்கள் தமது புண்ணிய பாபங்களின் அதீனமன்று என்பது சம்பவிக்கின்றது.

2. அப்படியே ராமகிருஷ்ணாதியர் சரீரங்களும் பூதங்களின் பரிணாமமன்று; ஆனால் சேதனத்தை யாசிரயித்த மாயையின் பரிணாமமாம்.

(1) பஞ்சீகிருத பூதங்களின் பரிணாமமாயின் கிருஷ்ணசரீரம் கயிற்றி னாற் கட்டக் கட்டுக்குட்படவில்லையென்று சாஸ்திரத்திற் சொல்லப்பட்டிருக் கின்றது. அது அசங்கதமாகும்.

பஞ்சபூதங்களாற் செய்யப்பட்ட சித்தயோகியின் சரீரத்திலும் கட்டு முதலியன பலிக்காவிடினும், யோகிசரீரம் முதலில் கட்டுமுதலியவற்றிற் குட்பட்டுப் பின் யோகாப்பியாசரூப புருஷார்த்தத்தால் அக்கட்டு முதலிய வற்றிற் குட்படுகிறதில்லை.

கிருஷ்ணாதியர் சரீரங்கள் யோகிசரீரம்போல் யோகாப்பியாசத்தால் கட்டுக்குட்படாதவை யன்று. ஆனால் அவர்களின் சரீரங்கள் சுபாவமாகவே கட்டுக்குட்படத்தக்கவையன்று. ஆகையால் பூதங்களின் பரிணாமமன்று.

(2) மாண்டூக்கிய வுபநிஷத்தின் சங்கரபாஷியத்தின் டீகை (உரை) யில் ராமாதியர் சரீரங்கள் பூதபரிணாமங்கள் என்று ஆநந்தகிரி சொல்லியிருக் கிறார். அது ஸ்தூலதிருஷ்டியினால் மற்றச் சரீரங்களுக்குச் சமானமாக அச்சரீரங்களும் காணப்படுகின்றன என்னும் அபிப்பிராயத்தால் கூறுகின்றார். ஏனெனின்,

(3) கீதாபாஷியத்தில் பாஷியகாரர் "ஜீவர்களுக் கநுக்கிரகம் பண்ணுவ தற்காகச் சரீரத்தைத் தரித்தவர்போல் மாயையின் பலத்தினால் பரமாத்மா வானவர் கிருஷ்ணரூபமாக விளங்குகிறார். அவர் ஜன்மாதிக ளில்லாதவர். அவருக்கு வசுதேவர் மூலமாகத் தேவகியிடத்தில் ஜன்மமும் மாயையாற் பிரதீதியாகிறது." என்று கிருஷ்ணசரீரத்தை மாயாகாரியமாகச் சொல்லி யிருக்கிறார்.

ஆகையால் பூதங்களினின்றும் அவதாரசரீரம் உண்டாகிறதில்லை. ஆனால் அவர்களது சரீரத்தின் உபாதானகாரணம் சாக்ஷாத் (நேரே) மாயை யாம்.

3. மற்றச் சீவர்களுக்குத் தேகாதிகளில் ஆத்ம (நான் என்னும்) பிராந்தி யிருக்கிறது; ராமகிருஷ்ணாதியருக்கில்லை. ஏனெனின்,

(1) ஜீவனுடைய வுபாதியாகிய அவித்தை மலினசத்துவகுணமுடைய தாம். ராமகிருஷ்ணாதியர் உபாதியாகிய மாயை சுத்தசத்துவகுணமுடைய தாம். ஆகையால் ஜீவனுக்கு அவித்தையாலுண்டான பிராந்தியும் ராமகிருஷ் ணாதியருக்கு மாயையாலுண்டான சர்வஞ்ஞத்தன்மையு மிருக்கின்றன.

(2) ஜீவனுக்கு அஞ்ஞானத்தாற் செய்யப்பட்ட ஆவரணமும் பிராந்தி யும் நாசமாதற்பொருட்டு ஆசாரியர்மூலமாக மகாவாக்கிய உபதேசத்தால் உண்டாகும் ஞானம் வேண்டியதாம். அப்படி ராமகிருஷ்ணாதியருக்கு ஆவ ரணமும் பிராந்தியு மில்லாமையால் உபதேசத்தா லுண்டாகத்தக்க ஞானத் தின் அபேக்ஷையில்லை. ஆனால் ஜீவனுக்கு அந்தக்கரணவிருத்திரூபஞானம் போல் ஈசுவரனுக்கு மாயாவிருத்திரூப ஆத்மஞானம் உபதேசாதிகளின்றியு

முண்டாகிறது. ஆனால் அந்த ஞானத்தால் எவ்வித பிரயோஜனமும் ஈசுவரனுக்குச் சித்திக்கிறதில்லை. ஏனெனின்,

[1] ஜீவர்களுக்குக் கடாதிகளின் ஞானத்தால் ஆவரணபங்கமும் விஷயமாகிற கடாதிகளின் பிரகாசமு முண்டாகிறது. அன்றியும் ஜீவர்களுக்குப் பிரஹ்மவடிவமாக ஆத்மஞான முண்டாகுமிடத்தில்,

(க) ஞானத்துக்கு விஷயமான ஆத்மாவின் ஆவரணபங்கமோ ஞானத்தா லுண்டாகிறது. ஆத்மாவாகிய விஷயம் ஸ்வயம்பிரகாசமாம்.

(ங) ஆகையால் ஆத்மஞானத்தால் விஷயம் பிரகாசிக்கிறதில்லை. அப்படியே ஈசுவரனுடைய மாயாவிருத்திரூபமான "நான் பிரஹ்மம்" என்னும் ஞானத்துக்கு விஷயமான ஈசுவரனுடைய ஆத்மா ஆவரணமின்றிய ஸ்வயம் பிரகாசமா யிருக்கிறது. ஆகையால் ஆவரணபங்கமும் விஷயப்பிரகாசமும் ஈசுவரஞானத்துக்குப் பிரயோஜனமன்று.

[2] ஜீவன்முக்த வித்துவானுக்கு, ஆவரணமில்லாத ஆத்மாவை விஷயமாக்கும் அந்தக்கரணத்தின் "நான் பிரஹ்மம்" என்னும் விருத்தி ஆவரணபங்காதிப் பிரயோஜன மில்லாததாகிறது. அதுபோல ஈசுவரனுக்கும் ஆவரணபங்காதிப் பிரயோஜனமின்றி மாயாவிருத்திரூபமான "நான் பிரஹ்மம்" என்னும் ஞானம் உபதேசாதிகளின்றி யுண்டாகிறது.

இவ்விதத்தால் ராமகிருஷ்ணாதியருக்கு ஜீவர்களினும் விலக்ஷணத்தன்மையாகிய ஈசுவரத்தன்மை யிருக்கிறது. என்றாலும் அவர்கள் சரீரம் மாயையா லுண்டானதாம். ஆதலால் பிரஹ்மமன்று; மித்தையாம். மாயை யுண்டுபண்ணிய அவதாரங்களின் சரீரம் கைகால்முதலிய அவயவ சகிதமாயும் ரூபசகிதமாயும் செய்யப்பட்டிருக்கிறது. ஆகையால் அவர்கள் சரீரம் நேத்திரேந்திரியத்துக்கு விஷயமாகிறது. நேத்திரேந்திரியம் பிரஹ்மத்தை விஷயம் செய்கிறதில்லை.

## 208. 2. பிரஹ்மம் துவக்கிந்திரியத்திற்கு விஷயமாகாமை.

அப்படியே துவக்கிந்திரியமும் ஸ்பரிசத்தையும் ஸ்பரிசத்தின் ஆசிரயத்தையும் விஷயஞ்செய்கிறது. பிரஹ்மம் ஸ்பரிசத்தின் ஆசிரயமன்று; ஸ்பரிசமுமன்று. ஆகையால் பிரஹ்மம் துவக்கிந்திரியத்தின் விஷயமன்று.

## 209. 3. பிரஹ்மம் இரசனை கிராணம் சுரோத்திரேந்திரியம் என்பவற்றிற்கு விஷயமாகாமை.

ரஸனேந்திரியத்தால் ரஸஞானமும், கிராணேந்திரியத்தால் கந்தஞானமும், சுரோத்திரத்தால் சப்தஞானமும் உண்டாகின்றன. ரஸ கந்த சப்தங்களினும் பிரஹ்மம் விலக்ஷணமாயிருத்தலால் ரஸனை கிராணம் சுரோத்திரம் என்னும் இந்திரியங்களால் பிரஹ்மத்தின் ஞான முண்டாகிறதில்லை.

## 210. பிரஹ்மம் கர்மேந்திரியங்களுக்கு விஷயமாகாமை.

கர்மேந்திரியம் ஞானத்துக்குச் சாதனமன்று. ஆனால் வசனாதிக்கிரியைகளுக்குச் சாதனமாம். ஆகையால் கர்மேந்திரியங்களால் எதன் ஞானமுமுண்டாகாது.

இவ்விதத்தால் எவ்விந்திரியத்தாலும் பிரஹ்மத்தின் ஞானம் பொருந்தாது. இந்திரியத்தாலுண்டாகும் ஞானம் பிரத்தியக்ஷ மெனப்படுகின்றது. அதனையே அபரோக்ஷ மென்பர்.

ஆதலால் பிரஹ்மத்தின் அபரோக்ஷஞானம் பொருந்தாது. ஆனால் சப்தத்தால் பிரஹ்மஞானமுண்டாகிறது. சப்தத்தாலுண்டாகும் ஞானம் பரோக்ஷமே. அதனால் பிரஹ்மத்தின் ஞானமும் பரோக்ஷமேயாம்.

## 206-210-ல் உள்ள பிரசினத்தின் உத்தரம் 211-212.

### 211. இந்திரிய சம்பந்தமின்றிப் பிரத்தியக்ஷஞான முண்டாகாதென்பது நியமமன்று; சுகதுக்கங்கள் சாக்ஷி பாஸ்யமாமெனல்.

### குருவானவர் சொல்லலுற்றார்.

இந்திரிய சம்பந்தமின்றிப் பிரத்தியக்ஷஞான முண்டாகா தென்னும் நியமமில்லை. ஏனெனின், சுகதுக்கங்களின் ஞானம் எந்த இந்திரியத்தினாலு முண்டாகிறதில்லை. அந்தச் சுக துக்கங்களின் ஞானமும் பிரத்தியக்ஷமாகிறது. ஆகையால் இந்திரிய சம்பந்தத்தா லுண்டாகும் ஞானமே பிரத்தியக்ஷ ஞானமாமென்பது நியமமன்று. ஆனால் விஷயத்தோடு விருத்தியின் சம்பந்த முண்டாய் விருத்தி விஷயாகார மாகுமிடத்துப் * பிரத்தியக்ஷஞான முண்டாகிறதாகச் சொல்லப்படுகிறது.

---

* விஷயசேதனத்திற்கு விருத்திசேதனத்தோடுண்டாம் அபேதமே பிரத்தியக்ஷஞானத்தின் லக்ஷணமாம். அந்த அபேதம்,

1. சிலவிடங்களில் இந்திரியவாயிலாக வுண்டாகிறது.
2. சிலவிடங்களில் சப்தத்தினா லுண்டாகிறது.
3. சிலவிடங்களில் இந்திரியாதிவடிவ பாகிய நிமித்தமின்றியே சரீரத்தினுள்ளுண்டாகிய விருத்திவாயிலாகவும் உண்டாகிறது. அங்குப் பிரத்தியக்ஷஞானம் சொல்லப்படுகிறது.

சேதனத்துக்கு ஸ்வரூபமாக யாதொரு பேதமும் இல்லை. ஆனால் விஷயம் விருத்தியென்னும் உபாதிகளாலாகிய பேதம் இருக்கிறது. அந்த உபாதிகள் வெவ்வேறிடங்களில் இருக்கும்போது அவ்வுபாதியுடைய சேதனங்களுக்குப் பேதம் சொல்லப்படுகிறது.

எப்பொழுது விருத்தி விஷயாகாரமாகிறதோ அப்பொழுது இரண்டு உபாதிகளும் ஓரிடத்திருத்தலால் அந்த உபாதியுடைய விஷயசேதனத்திற்கும் விருத்திசேதனத்திற்கும் அபேதம் சொல்லப்படுகிறது. அந்த விஷயசேதனத்தோடு விருத்திசேதனத்திற்

1. விஷயத்தோடு விருத்திக்குண்டாகும் சம்பந்தம் சிலவிடங்களில் இந்திரியவாயிலாக உண்டாகிறது.

2. சிலவிடங்களில் சப்தத்தினு லுண்டாகிறது. "நீ தசமன்" என்னும் சப்தத்தால் தசமனுகிய தன்னுடன் அந்தக்கரணவிருத்தி சம்பந்தப்பட்டுத் தசமனுகாரமாகிறது. ஆகையால் சப்தஜந்ய தசமனது ஞானமும் * பிரத்தியக்ஷமாம்.

அதுபோலப் பிரமாதாவினிடத்தில் சுகதுக்க முண்டாகும்போது அந்தக்கரணத்தின் விருத்தி சுகாகாரமும் துக்காகாரமுமாகிறது. அந்த விருத்தியுடன் சுகதுக்கங்களின் சம்பந்த முண்டாகிறது. ஆதலால் சுகதுக்கங்களின் ஞானம் பிரத்தியக்ஷ மெனப்படுகிறது.

முன்னுண்டான சுகதுக்கங்கள் நஷ்டமானபின் எங்குப் புருஷனுக்கு ஞாபகம் வருகிறதோ, அங்குச் சுகாகார துக்காகார அந்தக்கரண விருத்தியோ

---

குண்டாம் அபேதமே பிரத்தியக்ஷஞான மெனப்படுகின்றது. இதனையே அபரோக்ஷஞானமென்றும் சாக்ஷாத்காரமென்றும் கூறுவர்.

இந்தப் பிரத்தியக்ஷஞானலக்ஷணம்,

1. இந்திரியங்களா லுண்டாகும் பாஹ்ய கடாதிகளின் பிரத்தியக்ஷஞானத்தில் அநுகதமாம் (பொருந்தியதாம்).

2. மகாவாக்கியங்களா லுண்டாகும் பிரஹ்மத்தின் பிரத்தியக்ஷஞானத்தில் அநுகதமாம்.

3. பாஹ்ய நிமித்தங்களின்றி உள்ளேயே யுண்டாகும் சுகதுக்கங்களின் பிரத்தியக்ஷஞானத்தில் அநுகதமாம்.

4. மாயையின்விருத்தியாகிய ஈசுவரஞானத்தில் அநுகதமாம்.

5. அவித்தியாவிருத்தியாகிய ரஜ்ஜுசர்ப்பாதிகளின் ஞானத்தில் அநுகதமாம்.

பிரத்தியக்ஷஞானத்தினது லக்ஷணத்தின் விசேஷநிர்ணயம் விருத்திரத்நாவலியின் இரண்டாவது ரத்நத்திற் செய்யப்பட்டிருக்கிறது.

* "நான் தசம" னென்னும் தசமனுடைய ஸ்வரூபத்தின் அபரோக்ஷஞானம் "நீ தசமன்" என்னும் சப்தப்பிரமாணத்தாலுண்டாகிறது; இந்திரியத்தினுலாவது மனதினுலாவது உண்டாகிறதில்லை. ஏனெனின், சரீரரூப தசமன் இந்திரியத்தால் அறியப்படின் நேத்திரேந்திரியத்துக்குத்தான் விஷயமாகவேண்டும். நேத்திரேந்திரியத்தால் சரீரத்தில் தசமனுடைய ஞான முண்டாகும்பக்ஷத்தில் கண்ணை மூடிக்கொண்டிருக்கிறவனுக்குத் தசமனுடைய ஞான முண்டாகலாகாது; அவனுக்கும் உண்டாகிறது. ஆகையால் தசமனுடைய ஞானம் நேத்திரேந்திரியத்தா லுண்டாகவில்லை. மனது நேரில் பாஹ்ய பதார்த்தங்களை யறியாது; ஆனுல் ஆந்தர பதார்த்தங்களை யறியும். தேவதத்தன் யஞ்ஞதத்தன் என்னும் பெயர்கள் சூக்ஷ்மத்தேதோடுகூடிய ஸ்தூலசரீரத்துக்குள்ளன. நீ நான் என்னும் வியவகாரமும் ஸ்தூலதேகத்தில் காணப்படுகின்றது. இந்த ஸ்தூலதேகத்தின் ஞானம் மனதுக்கு நேரிலுண்டாகவில்லை. இவ்விதத்தால் தசமனுடைய ஞானம் சப்தப்பிரமாணத்தா லுண்டாகிறது. அதற்கு நேத்திரமும் மனதும் சகாயமாயிருக்கின்றன.

உண்டாகிறது. ஆனால் விருத்திக்கு நஷ்டமாகிய சுகதுக்கங்களுடன் சம்பந்த மில்லை. ஆகையால் அந்த ஞானம் ஸ்மிருதிரூபமாம்; பிரத்தியக்ஷரூபமன்று.

1. அந்தக்கரணத்தின் தர்மங்களாகிய * சுகதுக்கங்கள் சாக்ஷிபாஸ்யங்களாம். அங்ஙனமாயினும் சுகாகார துக்காகார அந்தக்கரணத்தின் விருத்தி வாயிலாகச் சாக்ஷி சுகதுக்கங்களைப் பிரகாசிக்கிறது.

2. சாக்ஷிபாஸ்யபதார்த்தத்தையும் சாக்ஷி விருத்தியை யபேக்ஷித்தே பிரகாசிக்கிறது. எங்ஙனம்:—கிளிஞ்சில்வெள்ளி சாக்ஷிபாஸ்யமாம். அங்கு அவித்தையின் விருத்தியை யபேக்ஷித்துச் சாக்ஷி வெள்ளியைப் பிரகாசிக்கிறது.

1. ஆனால் சுகதுக்கங்களின் பிரகாசத்தில் அந்தக்கரணவிருத்தி சாக்ஷிக்குச் சகாயமா யிருக்கிறது.

2. மித்தையான வெள்ளிமுதலியவற்றைப் பிரகாசித்தலில் அவித்தியா விருத்தி சகாயமாயிருக்கிறது.

இவ்விதத்தால் சாக்ஷிபாஸ்ய பதார்த்தத்தின் ஞானத்திலும் விருத்தி வேண்டியதாயிருக்கிறது.

1. அந்த விருத்தி எங்கு இந்திரியாதி வெளிச்சாதனங்களா லுண்டாகின்றதோ, அங்கு அதன் விஷயம் சாக்ஷிபாஸ்யமன் றெனப்படுகிறது.

2. சுகதுக்கங்களை விஷயமாக்கும் விருத்தியில் வெளியிந்திரியாதிகள் ஏதுவன்று. ஆனால் சுகாதிக ளுண்டாகும்போது வேறு சாதனங்களின் அபேக்ஷையின்றிச் சுகாகார துக்காகார அந்தக்கரணவிருத்தி யுண்டாகின்றது. அவ்விருத்தியி லாரூடமான சாக்ஷி சுகதுக்கங்களைப் பிரகாசிக்கிறது. ஆதலால் சுகதுக்கங்கள் சாக்ஷிபாஸ்ய மெனப்படுகின்றன.

## 212. பிரஹ்மத்தின் ஞானம் பிரத்தியக்ஷமாதல் கூடுதலும், தத்துவதிருஷ்டிக்குப் பேதப் பிரமத்தின் முடிவும்.

பாகிய கடாதிகளுடன் அந்தக்கரண விருத்தியின் சம்பந்தம் நேத்திராதி இந்திரியவாயிலா யுண்டாகிறது. ஆகையால் கடாதிகள் சாக்ஷிபாஸ்யமல்ல.

அப்படியே அந்தக்கரணவிருத்தி † பிரஹ்மாகார மாகும்போது அந்த விருத்தி வெளியிற்போகாமல் சரீரத்தினுள்ளேயேயிருக்கிறது. அந்த விருத்தி

* சுகதுக்கங்கள் புத்தியைச் சேர்ந்தனவாம், ஆத்மாவைச் சேர்ந்தவையன்று; ஏனெனின் புத்தியிருக்கும்போது இவைகளிருக்கின்றன. சுழுத்தியில் புத்தி இல்லையாகலின் இவைகளும் தோற்றுகிறதில்லை.

† 1. நேத்திரத்தில் சூரியனது அபேதத்தன்மை யிருக்கிறது. அதற்கு விரல்முதலிய சொற்ப மறைப்பினால் சூரியன் மறைபடப் பிரமாண்டத்திலுள்ள சூரியனுடைய பிரகாசம் காணப்படுகிறதில்லை,

யுடன் பிரஹ்மத்திற்குச் சம்பந்த மிருக்கிறது. அதனால் பிரஹ்மஞானமும் சுகதுக்கங்களின் ஞானம்போலப் பிரத்தியக்ஷரூபமாயிருக்கிறது. ஆனால்,

1. சுகாகார துக்காகார விருத்திகளில் வெளிச்சாதனங்களின் அபேக்ஷையில்லை. ஆதலால் சுகதுக்கங்கள் சாக்ஷிபாஸ்யமாம்.

2. பிரஹ்மாகார அந்தக்கரண விருத்தியிலோ குருவாயிலாகக் கேட்கப்பட்ட வேதவசனத்திற்குச் சுரோத்திரத்தோடுண்டாம் சம்பந்தமாகிய பாஹிய சாதனம்வேண்டும். ஆகையால் * பிரஹ்மம், சாக்ஷிபாஸ்யமன்று.

இவ்விதத்தால் எங்கு விஷயத்தோடு விருத்தி சம்பந்தப்படுகிறதோ அங்குப் பிரத்தியக்ஷஞானம் சொல்லப்படுகிறது. "நான் பிரஹ்ம" மென்னும் விருத்திக்கு விஷயமாகிய பிரஹ்மத்துடன் அவ்விருத்திக்குச் சம்பந்தமிருத்தலால் பிரஹ்மத்தின் ஞானம் பிரத்தியக்ஷமாதல் கூடும்.

1. புகையைப் பார்த்து நெருப்பின்ஞான முண்டாகுமிடத்தும் புகையின்ஞானம் பிரத்தியக்ஷமாம்; நெருப்பின் ஞானம் பிரத்தியக்ஷமன்று.

---

2. மறைப்பு நீங்கினால் கண்ணிலுள்ள அந்தக்கரணத்தின் விருத்தியால், பிரஹ்மாண்டத்துள்ள சூரியனுடைய பிரகாசம் காணப்படுகிறது. அதுபோல,

1. சாக்ஷியாகிய ஆத்மாவில் பிரஹ்மத்தின் அபேதத்தன்மையுண்டு. அதற்கு அந்தக்கரணத்திலுள்ள அஞ்ஞானாம்சவடிவ சொற்ப ஆவரணத்தினால் மறைப்புண்டாக எங்கும் பரிபூர்ணமாயிருக்கும் பிரஹ்மம் பிரத்தியக்ஷமாய் விளங்குகிறதில்லை.

2. எப்போது சரீரத்தினுள்ளுண்டாகிய பிரஹ்மாத்மாவின் அபேதத்தன்மை வடிவ விருத்தியினால் முற்கூறிய ஆவரணத்தின் பங்கமுண்டாகிறதோ, அப்போது வீட்டிலுள்ள ஆகாசத்தின் அசங்கத்தன்மை முதலியவற்றின் ஞானத்தால் மகாகாசத்தின் அசங்கத்தன்மை முதலியவற்றின் ஞானமுண்டாதல்போல எங்கும் பரிபூர்ண பிரஹ்மத்தின் சொப்பிரகாசத்தன்மையினால் விளக்கமுண்டாகிறது.

* எங்ஙனம் பிரஹ்மம் சாக்ஷிபாவியமன்றோ, அங்ஙனமே பிரஹ்மம் சிதாபாஸனோடு கூடிய அந்தக்கரணத்தின் விருத்திவடிவப் பிரமாதாவிற்கும் விஷயமன்று. வேறு தீபத்தின் அபேக்ஷையின்றிக் கேவலநேத்திரத்திற்கு விஷயமாகும் தீபத்தைப்போல அந்தக்கரணத்தின் "அகம்பிரஹ்மாஸ்மி" என்னும் வடிவுடைய கேவல விருத்திக்கு விஷயம் பிரஹ்மமாம். ஆகலால் பிரஹ்மம் பிரமாதாபாவியமு மன்று. ஆனால் தனது பிரகாசத்தில் வேறொன்றினது பிரகாசத்தின் அபேக்ஷையின்றி எல்லாவற்றையும் பிரகாசிக்குந் தன்மையது ஸ்வயம்பிரகாசவடிவப் பிரஹ்மமாம்.

விருத்தியும் வஸ்திரத்தின் அழுக்கினைச் சவுக்காரம் போக்குவதுபோலப் பிரஹ்மத்தின் ஆவரணத்தைப் பங்கஞ் செய்கிறது. அதுவே அதனை விஷயஞ்செய்வதாம்; வேறுவகையால் விஷயஞ்செய்தல் விருத்திக்கில்லை.

"நான் பிரஹ்மம்" என்னும் விருத்திவடிய தத்துவஞானத்தினை வெளிச்சாதனங்களின் அபேக்ஷையின்றிச் சாக்ஷி பிரகாசிக்கின்றது. ஆதலால் அந்தத் தத்துவஞானம் சாக்ஷிபாவியமாம்.

ஏனெனின், நேத்திரவாயிலாக அந்தக்கரணவிருத்திக்குப் புகையுடன் சம்பந்த மிருக்கிறது. ஆகையால் புகையின் ஞானம் பிரத்தியக்ஷ மெனப்படுகிறது.

2. அநுமானத்தினல் அந்தக்கரணவிருத்தி சரீரத்தினுள் நெருப்பின் ஆகாரத்தைக் கொள்ளுவதாயிற்று. ஆனல் நெருப்போடு விருத்திக்குச் சம்பந்தமில்லை. ஆகையால் நெருப்பின் ஞானம் பிரத்தியக்ஷமன்று.

இவ்விதத்தால் எங்கு விருத்தியோடு விஷயத்திற்குச் சம்பந்தமுண்டாகிறதோ, அங்குப் பிரத்தியக்ஷஞானம் சொல்லப்படுகிறது.

எங்கு விருத்தியுடன் விஷயத்திற்குச் சம்பந்த முண்டாகிறதில்லையோ, விஷயம் வெளியில் தூரத்திலாவது அல்லது சென்றகால வருங்காலங்களிலாவது இருக்க அநுமானத்தினலாவது சப்தத்தினலாவது விஷயாகாரவிருத்தி சரீரத்தினுள் ளிருக்கின்றதோ அந்த ஞானம் பரோக்ஷ மெனப்படுகிறது.

இந்திரிய ஜந்நியஞானமே பிரத்தியக்ஷமா மென்னும் நியமமில்லை. சுக துக்கங்களின் ஞானம் இந்திரியஜந்நியமன்றயினும் பிரத்தியக்ஷமா யிருக்கிறது. அதுபோலத் தசமபுருஷனுடைய ஞானம் சப்தஜந்நியமாயினும் பிரத்தியக்ஷமாம்.

இவ்விதத்தால் குருவாயிலாகச் சிரவணஞ் செய்யப்பட்ட மகாவாக்கிய ரூப வேதசப்தத்தினின் றுண்டாகிய பிரஹ்மஞானமும் பிரத்தியக்ஷமேயாகிறது.

குருவின் இத்தன்மைய உபதேசத்தைக் கேட்டுப் புத்திமானன தத்துவதிருஷ்டி தன்னுத்மாவைப் பிரஹ்மரூபமாக அறிந்து பேதப்பிரமத்தைப் போக்கினன். "நான் பிரஹ்மம்" என்னும் விருத்தியில் நிராவரணமான விளக்கமுண்டாகிறது. இவ்வாறு தாதுவென்னும் முதற்பொருளினின்றே யாம் இதனைத் தெரிந்துகொண்டோம்.

* உத்தமாதிகாரியின் உபதேசநிரூபணமென்னும் நான்காவது தரங்கம் முற்றிற்று.



* எவனுடைய அந்தக்கரணம் அத்தியந்தம் சுத்தமாயிருக்கிறதோ, எவனுக்கு மகாவாக்கியரூப சப்தத்தால் திடஞானமுண்டாகிறதோ, அப்படி உண்டானபிறகு சமுசயாதிகளை நிவர்த்திக்க எவனுக்குச் சிரவணுதிகள் வேண்டியதில்லையோ, அவன் உத்தமாதிகாரி. எவன் அந்தக்கரணம் அத்தியந்தம் சுத்தமாயில்லையோ, ஆனல் கொஞ்சம் மலவிக்ஷேப தோஷங்களுடன் கூடியிருக்கிறதோ, அவன் மத்தியமதா அல்லது கனிஷ்ட அதிகாரி. மகாவாக்கியரூப சப்தத்தால் அபரோக்ஷஞான முண்டானபிறகும் சமுசயாதிகளை நிவிருத்திக்க இவன் சிரவணுதிகளைச் செய்யவேண்டும்.

# விசாரசாகரம்.

## ஐந்தாவது தரங்கம்.

### வேதமுதலியன வியாவஹாரிகமெனல். 213–276.
### மத்தியமாதிகாரி சாதனநிரூபணம். 277-303.

### 213. அதிருஷ்டியின் பிரசினம்:—வேதமும் குருவும் சத்திய மாருக அல்லது மித்தையாருக இருவகையாலும் வேதத்தினுலும் குருவினுலும் அத்வைதஞானம் பொருந்தாதெனல்.

"குருமுகமாகக் கேட்ட வேதவாக்கியத்தால் அத்வைதப் பிரஹ்மத்தின் சாக்ஷாத்கார முண்டாகிற" தென்று முன் தரங்கத்தில் சொல்லப்பட்டது. அதனைக் கேட்டு அதிருஷ்டி யென்னும் 2-வது சிஷ்யன் இவ்வாறு சங்கிக் கின்றுன்:—

1. வேதமும் குருவும் சத்தியமாயின் அத்வைதத்திற்கு ஹானியுண்டாம் (துவைதம் சித்தியாகும்.)

2. வேதமும் குருவும் அசத்தியமாயின் சமுசாரதுக்கம் நிவிருத்தியாகாது; புருஷார்த்தமுங் கிடைக்காது; அது மித்தையான கானல்ஜலத்தால் தாக சமனமாகாததுபோலும்.

இவ்வாறு இரண்டு விதங்களாலும் அத்துவைதஞானம் உண்டாகாது. இவ்வாற்ருல் சங்கரமதம் அசுத்தமா மெனக்கொண்டு இதனை மத்துவர் முத லிய புத்திமான்கள் தள்ளினுர்கள். ஆதலால் சுவாமி ! இந்தச் சங்கை யெனக் குண்டாயிருக்கிறது. இதனைத் தாம் தயைசெய்து நிவர்த்திக்கவேண்டும். கோபஞ்செய்யலாகாது.

### குரு உத்தரம். (214-236)
### 214. சங்கரமதம் பிரமாணமாதல்.

சிஷ்யனுடைய வார்த்தையைக் கேட்டுக் குரு சொல்லுகிருர்:—சங்கர மதமே பரமப்பிரமாணம்; மற்ற மத்துவர்முதலியோர் மதங்கள் அப்பிரமாண மாம். அவை வேதவிருத்தமாம். சங்கரமதமே பிரமாணமென்பதற்கு வாயு புராண கூர்மபுரா * ணுதிகளில் ஸ்ரீ வியாஸர் கலிகாலத்தில் வேதார்த்தத்

* ஆதி சப்தத்தினுல் மஹேதிகாசமாகிய சிவரகஸ்யத்தின் நவமாம்சத்தில் "[illegible]
[illegible]
[illegible]

தைப் பலர் பலவிதமாய்க் கிரகிப்பார்கள். அப்போது பரமசிவன் சங்கரரூபமாயவதரித்துப் பக்தர்களுடைய ஹிதத்தின்பொருட்டுச் சகல மதங்களையுங் கண்டித்து ஜயினபவுத்த மதங்களை நிர்மூலமாக்கிவிடுவார். கங்கையிலிருந்தும் பத்திரிநாதராகிய பிரபுவின் மூர்த்தியை வெளிப்படுத்தி ஸ்தாபிப்பார். சூரியப்பிரகாசத்தால் ஜகத்திலுள்ள இருள் நீங்கச் சகல வஸ்துக்களும் உள்ளவாறே விளங்குவதுபோலவும், சர்வசமுசயங்களும் விபரீதபாவங்களும் நீங்குவதுபோலவும், ஸ்ரீ சங்கரவியாக்கியானம் வேதார்த்த விஷயத்திலுள்ள அஞ்ஞானத்தைப்போக்கிச் சமுசயப்பிராந்திகளை நிவர்த்தித்துப் பூர்ணமான யதார்த்த வுபதேசஞ்செய்யும். வேதார்த்தத்தை வேறுவிதமாய்ச் செய்த மற்றவர்கள் மூடர்களே. அவர்கள் வீண்சிரமப்பட்டார்கள்." என்று சொல்லியிருக்கிறார்.

1. இவ்வாற்றால் சங்கரமதமே பிரமாணம்.

2. மத்துவாதியர் பேதமதம் அப்பிரமாணம் என்பதை நான் வியாஸவசனத்தால் அறிகிறேன்.

## 215. பேதவாதத்தின் அப்பிரமாணத்தன்மை.

சிஷ்யனே! வேறு பிரமாணஞ் சொல்லுகிறேன் கேள். ஆதிகவி சர்வஞ்ஞ வால்மீகிரிஷியானவர் முக்கியராகக் கணிக்கப்பட்டுளர். அவர் உத்தரராமாயணமாகிய வாசிஷ்டமென்னுங் கிரந்தத்தில் அத்வைதமதத்தில் பிரதானமான திருஷ்டி சிருஷ்டிவாதத்தை அநேக இதிஹாசங்களால் பிரதிபாதித்திருக்கிறார். ஆகையால் வால்மீகியின் வசனப்படி அத்வைதமதம் பிரமாணமாம். அவர் வசனத்துக்கு விரோதமாம் மத்வாதிகளுடைய பேதமதம் அப்பிரமாணமாம். உபநிஷத்துகள் கீதை பிரஹ்மசூத்திரம் என்னும் மூன்றுஞ் சேர்ந்து வேதாந்தத்தின் பிரஸ்தானத்திரயமென்று சொல்லப்படும். இந்தப் பிரஸ்தானத்திரயத்துக்கு மத்வர்முதலியோர் ஒருவாறு இழுத்துத் தத்தம் மதானுசாரமாக வியாக்கியானஞ் செய்திருந்தாலும், வியாஸவசனத்தினால் ஸ்ரீ சங்கராசாரியருடைய வியாக்கியானமே யதார்த்தம். வால்மீகிரிஷியின் வசனத்தினாலும் அத்வைதமதமே பிரமாணமாம். பேதவாதம் அப்பிரமாணமாம்.

இவ்வாறு சர்வஞ்ஞர்களாகிய ரிஷிகள் முனிகள் வசனத்திற்கு விரோதித்தலால் பேதவாதம் அப்பிரமாண மெனப்பட்டது. யுக்தியினாலும் பேதவாதம் விருத்தமாம். இது ஸ்ரீ * ஹர்ஷமிசிராசாரியர் முதலியோரால் கண்ட

---

ஸஂளே வாஷ ஷண ஹாம ஷணாம ஸகரிஷ்தி—சிவையே! என்னம்ச வடிவரான சங்கரரென்னும் சிவபக்தர் நான்கு சிஷ்யர்களோடு கலியில் அவதரிப்பார். மகேசுவரி! அவருக்கே என்னால் உபநிஷத்வித்தை கொடுக்கப்படும். பூமியில் பாஷண்டர்களாகிய ஷண்டர் (பேடி) களை அவர் கண்டிப்பார்" என்றல் முதலிய பல சுலோகங்களால் ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகளின் சரித்திரமுழுவதும் சொல்லப்பட்டிருத்தல் கொள்ளப்படும்.

* ஸ்ரீ ஹர்ஷமிசிராசாரியரென்பவர் சரஸ்வதியால் அநுக்கிரகிக்கப்பட்ட அத்வைதவாதியாகிய பண்டிதர். அவர் செய்தநூல் கண்டநகாத்யம். அது கண்டநமெனப் பட்டது.

ருதிக் கிரந்தங்களிலும் பேததிக்காரமுதலிய நூல்களிலும் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. அப்பேதமதத்தைக் கண்டிக்கும் யுக்திகள் கடினமாயிருத்தலால் அவற்றை இங்கு எழுதவில்லை.

## 216. பேதவாத திரஸ்காரம்.

அன்றியும் ஜைனமதம்போல் ரிஷிமுனி வசனங்களுக்கு விருத்தமான பேதமதத்தை அப்பிரமாணமாய்க்கொண்ட ஆஸ்திக அதிகாரியாகிய உனக்கு அந்தப் பேதமதம் யுக்தியால் கண்டிக்கப்படவேண்டு மென்பது அவசியமன்று.

சிஷ்யனே! பேதமதம் வேதவசனத்துக்கும் விருத்தமா மென்பதைச் சொல்லுகிறேன் கேள். கடவல்லியுபநிஷத்தில் யமதர்மராஜா பேதவுணர்ச்சி பெருந்துன்பத்தைக் கொடுக்கத்தக்கதென்று சொல்லியிருக்கிறார். ஆகையால் பேதவாதத்தை மனதினின்றொழித்து அத்வைதத்தையே கைக்கொள்ள வேண்டியது. "ம்ருத்யோஸ்ஸ ம்ருத்யுமாப்நோதிய இஹ நாநேவ பஶ்யதி" என்பது சுருதி. "த்விதீயாத்வை பயம் பவதி" "அந்யோஸாவந்யோஹமஸ்மீதி ந ஸ வேத யதா பஶுரேவ ஸ தேவாநாம்" என்னும் இரண்டும் சுருதிகள்.

இவற்றின் பொருள்:—"எவன் இங்கு (பரமாத்மாவில்) நாநாவைப்போல் பார்க்கிறானோ அவன் மிருத்தியுவினின்றும் மிருத்தியுவை யடைகிறான்." "இரண்டாவதினால் பயமுண்டாகிறது." "ஞேயத்தியேயங் (அறியத்தக்கவை தியானிக்கத்தக்கவை) களை இதுவேறு யான்வேறு என்று அறிகின்றானோ அவன் ஆத்மாவை அறிகிறதில்லை. அவன் தேவர்களுக்குப் பசுவை யொத்தவனேயாவன்." என வேதங் கோஷிக்கிறது.

சிஷ்யனே! ஆகையால் துக்கத்தைக் கொடுக்கும் மத்வாதியர் வசனங்களைக் கேட்டவுடனே துன்பத்தைத் தருவனவாகிய அவற்றை மறக்கவேண்டும். எதுவரையில் துவைதவசனம் உன்னிருதயத்தில் தங்குகிறதோ, அதுவரையில் அத்துவைத சாக்ஷாத்கார முனக்குண்டாகாது.

## (இராஜாவின் மந்திரி பர்ச்சுவின் கதை 217-228.)

## 217. பர்ச்சு தபசியாதல்.

துவைத வசனத்தின் ஸ்மரணை யுண்டாகுமாயின் அது சாக்ஷாத்காரத்தைக் கெடுக்கும். பூர்வ ஸ்மிருதி சாக்ஷாத்காரத்தைக் கெடுக்குமென்பதனை விளக்கும் ஓர் கதையைச் சொல்லுகிறேன் கேள்.

ஓரரசனுக்குப் பர்ச்சு வென்னு மோர் முக்கிய மந்திரி இருந்தான். அவன் சகல ராச்சிய காரியங்களையும் தன் விசாரணையில் வைத்திருந்தான். அதனைக் கண்டு மற்ற உத்தியோகஸ்தர்கள் பொறாமையடைந்தார்கள். ஆனால் பர்ச்சுவினிடத்தில் அரசன் வைத்திருந்த அன்பின் மிகுதியால் அவர்கள் அவனுக்கு யாதொரு தீங்கும் செய்யமுடியவில்லை. அப்போது அவர்களெல்

லோரு மாலோசித்து ஒரு யுக்தி செய்தார்கள்:—அவ்வூரில் கொள்ளைக்கார ரால் உபத்திரவ முண்டாகும்படி செய்வித்தார்கள். எதிரிகள் வந்ததைக் கேட்டு உடனே அரசன் சபைகூட்டி அவர்களைத் துரத்தியடிக்கும்படி முக்கிய உத்தியோகஸ்தர்களுக்குக் கட்டளையிட்டான். அப்போது அவர்கள் எல்லோ ரும்சேர்ந்து அரசனைப்பார்த்து, ஆண்டவனே! பர்ச்சுவையே தேவரீர் எப் போதும் கொண்டாடுகிறீர்கள்; ஆபத்துக்காலத்தில் எங்களை அனுப்பு கிறீர்கள்; பர்ச்சுவை ஏன் அனுப்பலாகாது என்றார்கள். அதனைக்கேட்டுப் பர்ச்சு கைகுவித்து ராஜாவைப் பார்த்து, சுவாமி! ஆஞ்ஞாபித்தால் இக் கணமேசென்று சத்துருக்களை ஜயித்துவருகிறே னென்றான். அப்போது அர சன் அப்படியே செய்யுமென்று பர்ச்சுவுக்கு உத்திரவளித்தனன். பர்ச்சுவும் அவ்வாறே சென்று அச்சத்துருக்களை அடித்துத் துறத்தி, பயிர்த்தொழி லாளர் முதலிய அனைவருக்கும் க்ஷேமம் விளைவித்தனன். பர்ச்சுவின் ஜயத் தைக் கேட்டு, மற்ற உத்தியோகஸ்தர்கள் அரசனிடஞ் சென்று பர்ச்சு இறந் தான் எனச் சாதித்தார்கள். இவர்கள் பொய் வார்த்தையை நம்பி அரசன் பர்ச்சு ஸ்தானத்தில் இவர்களில் ஒருவனை நியமித்து அவனுக்குப் பல்லக்கு சத்திர சாமரங்களைக் கொடுத்தான். இப்புதிய மந்திரி பர்ச்சுவாாமலும் அர சனுக்குப் பர்ச்சுவின் ஞாபகம் சொப்பனத்திலும் வாாமலு மிருக்கும்படி ஏற் பாடு பண்ணினன்.

இவ் வர்த்தமானங்களை யெல்லாம் பர்ச்சு விசாரித்தறிந்து தவவேடம் பூண்டு தன் மனதில் இவ்வாறு யோஜிக்கிறான்:—அரசனிடம் செல்ல என் னல் இப்போது முடியாது. ஏனெனின், அரண்மனை வாயிலிற்போனல் அவ் வாயில் காப்போர் என்னைக் கொன்றுவிடுவார்கள். இதுவரையில் சகல போகங்களையும் அனுபவித்தேன். ரோகமில்லாத தேகேந்திரியங்கள், ரம ணீயமான வீடு, மோகிக்கத்தக்கவர்களாய் நான்குநாற்கால் நான்குபுஷ்பம் நான்குபழம் நான்குபக்ஷி என்பவற்றால் உவமிக்கப்படும் ஸ்திரீ முதலியோ ரையு முடையனு யிருந்தேன்.

## 218. * ஸ்திரீ நிந்தை.

### நான்கு நாற்கால்கள்.

யானைத்துதிக்கைபோன்றது தொடை; மான்குளப்படிபோன்றது அல் குல்; சிங்கத்தைப்போன்றது இடை; சலிக்கும் குதிரையைப்போன்றது கண் கள் என்று வித்வான் (காவியநூல்களிற் சமர்த்தர்)கள் வர்ணித்திருக்கின் றார்கள்.

---

* இங்குக் காவிய நூல்களின்படி ஸ்திரீகளினது அவயவங்களின் வர்ணனமாகிய ஆரோபஞ் செய்யப்பட்டது. அது தோஷதிருஷ்டிவடிவ அபவாதத்தின்பொருட்டாம். ஏனெனின் லக்ஷியமாகிய குறியின்றிப் பாணத்தை விடுவதுபோல ஆரோபமின்றி அப வாத முண்டாகாதாகலின் முதலில் விஷயப்பற்றுடைய பாமரகவிகளின் வார்த்தையை அநுவதித்தல் வடிவ ஆரோபஞ் செய்யப்பட்டிருக்கிறது. பின் இத்தரங்கத்திலேயே ஸ்திரீயின் அவயவங்களில் தோஷதிருஷ்டிவடிவ அபவாதத்தையும் கூறுவர்.

## நான்கு புஷ்பங்கள்.

கமலம்போன்றது முகம்; அலசி (ஓர்வித) புஷ்பம்போன்றது தாடை; எள்ளின் மலர்போன்றது நாசி; சண்பகம்போன்றது சரீரவடிவம் என்று கவிகள் கூறுவர்.

## நான்கு பழங்கள்.

கோவ்வைக்கனிபோன்றது அதரம்; மாதுளைபோன்றது பற்கள்; வில்வப்பழங்களைப்போன்றது ஸ்தனங்கள்; * கோஹரமென்னும் பழத்தைப் போன்றது குதி என்பர்.

## நான்கு பக்ஷிகள்.

அன்னம்போன்றது மந்தநடை; குயிலைப்போன்றது குரல்; கிளிபோன்றது அதிமதுரமான வாக்கு; மயிற்றோகைபோன்றது கூந்தல் என்று இவ்வாறு கவிகள் பலவாறு வர்ணிக்கின்றனர்.

இப்படிப்பட்டவர்களும் சமுத்திரத்தை ஒருபோதும் கங்கை விடாதது போல் காமியின் மனம் இடைவிடாது செல்லத்தக்க தன்மையுடையவர்களும், பிரஹ்மா திலோத்தமையை யுண்டாக்கிச் சுந்த நிசுந்தர்களைக் கொன்றமையால் வேறு † திலோத்தமையைச் சிருஷ்டித்தார் என்று சொல்லத்தக்க

---

எதனால் பின் அபவாதஞ் செய்யப்பட்டிருக்கிறதோ அதனால் இங்கே ஸ்திரீயினது அங்கங்களின் உவமையில் தாற்பரியமில்லை. ஆனால் அவ்வாறு உவமையைத் தருகின்ற விஷயப்பற்றுள்ளவர்களைப் பரிகசிப்பதில் தாற்பரியமாம். சகல காவ்யகிரந்தங்களுக்கும் இதுவே அபிப்பிராயமாம்.

முற்கூறிய ஸ்திரீ அங்கங்களின் உவமையின் கண்டநம் உள்ளவாறே ரூபகாதர்சமென்னும் நூலில் ஸ்ரீ பீதாம்பரஜீ அவர்களால் சிங்காரவைராக்கியத்தின் பிரசங்கத்திற் செய்யப்பட்டிருக்கிறது.

* முள்ளங்கி இலையைப்போன்ற இலைகளையுடைய ஓர் செடியின் பெயர் கோஹரமென்று ஹிந்துஸ்தான் தேசத்தில் வழங்கிவருகிறது. இதனையே அங்குப் பாரஸீக வார்த்தையில் சல்கம் என்பர். அதன் அடியில் வெண்காயம் போன்ற நிறத்தையுடைய உருண்டையான பழமுண்டாம். அதனைக் கோஹரபழமென்பர். அதனைப்போன்றதாம் குதியென்பர் கவிகள்.

† பிரஹ்மாவினால் சிருஷ்டிக்கப்பட்ட திலோத்தமை சுந்தன் நிசுந்தன் என்னும் இரண்டு அசுரர்களையும் கொன்றமையால் கொலையுடையவளாகிய அவள் சிறந்தவளாகாள். என்னுடைய ஸ்திரீ கொலையுடையவளல்லள்; ஆதலால் அந்தப் பிரஹ்மதேவனாலாக்கப்பட்ட திலோத்தமையினும் மேலானவளாவள் என்பது அபிப்பிராயம்.

இது மகாபாரதத்திலுள்ள கதையாம்:—

சுந்தன் நிசுந்தனென்று இரண்டு தைத்தியர்களாகிய சகோதரர் இருந்தனர். அவர்கள் தவஞ்செய்து பிரஹ்மதேவனிடத்தினின்றும் "சகோதரர்களாகிய நாங்களிருவரும் ஒருவர் கையினால் ஒருவர் சண்டைசெய்து இறந்தால் இறக்கவேண்டும்; வேறொருவர் கையினாலும் இறக்கலாகாது" என்னும் வரத்தைப் பெற்று மூன்றுலகத்தையும் துன்பப்படுத்திவந்தார்கள். அப்போது பிரஹ்மதேவன் இரண்டு சகோதரர்களுக்குமுள்ள பிரியத்தைக் கெடுத்தற்பொருட்டு உலகத்திலுள்ள ஸ்திரீகள் யாவரினும் மிக அழகிய திலோத்தமை யென்னும் தெய்வப்பெண்ணைச் சிருஷ்டித்துப் பிரஹ்மலோகத்தினின்றும்

வர்களும், கால்கைகளில் மருதோன்றிச்சாய மேற்றினவர்களுமான இரமணீய ஸ்திரீகளை நிமிஷமும் விட்டிருந்தேனில்லை.

அவற்றி (ஸ்திரீபோகத்தி)ற்குச் சாதனமான மற்றப் * போகங்களையும் அநுபவித்தேன். இப்போது மரணம் சமீபித்தது. * அகோ! ஜகத்தில் என்னைப்போல மூடன் யாவனிருக்கிறான்! இதுவரையில் ஸ்திரீயின் அல்குலின் வாசக்தனுயிருந்தேன். அது மலின மூத்திரத்தா லெப்போது மீரமாயும், † காயமின்றி இரவும் பகலும் இரத்தம் பெருகி யொழுகுவதும் தோலால் மூடப்பட்ட மாமிசமயமாயும் மேல் அசுத்த மயிர்கள் சூழ்ந்ததாயு முள்ளது. இவற்றில் எப்படார்த்தம் அழகானது. மிக அசுத்தமாய் அருவருப்பிற் கிடமாயிருக்கிறது. ஸ்திரீயின் தொடைகள் எப்போதும் அதிமலினமாயிருந்தும், வாழைத்தண்டுக்கும் யானையின் துதிக்கைக்கும் சமானமாய் விஷயப்பற்றுள்ள கவிகளாற் சொல்லப்படுகின்றன. அவை மூத்திரச் சாக்கடைபோன்றிருக்கின்றன. இரத்தம் மாமிசம் தோல் எலும்பு முதலியவற்றால் நிறைந்துள்ளன. கீழுள்ள பெரிதான நிதம்பங்களின் மத்தியில் மலினமான மலக்குழாயி (குதமி) ருக்கிறது. அதனால் கடிதடம் அதி துர்க்கந்தமாயிருக்கிறது. இதில் ஆசை வைப்பவன் அந்தகன். ஸ்திரீகளின் உதடுகளினின்றும் உமிழ்நீர் வருகிறது. சுத்தாசுத்த விவேகமில்லாதவன் அவளைப் பார்த்து மதமுண்டாய்க் கொஞ்சமும் வெறுப்பின்றி அதனைச் சுவைக்கின்றான். அவளை அதிசுந்தரலாவண்ணிய முள்ளவளென்று நினைக்கின்றான். இவ்வாறு ஸ்திரீயின் அங்கங்களைச் சிரேஷ்டமல்லவென்று இப்போது நான் நன்றாய் விசாரித்து இவைகளையெல்லா மொழிப்பேன்.

## 219. பர்ச்சுவின் வைராக்கியம்.

‡ கலாகந்தம், பேடா, தயிர், பாயஸம், அந்நம், நெய், பல்வகைக்கறி, மற்றும் பலவித உணவுகளைப் புசித்து அவற்றின் சுவையையும் கொண்டு இதுவரையில் திருப்தியடையாத இந்த நாக்கினை வீணுகப் போஷித்தேன். பசியைக் கெடுத்தற்கோ காட்டில் பழம் கிழங்கு முதலியன விருக்கின்றன. அங்

அவர்களிடத் தனுப்பினுர். அவளைப் பார்த்து அத்தைத்தியர் "எங்களிருவரையும் மணந்துகொள்வாய்" என்றார்கள். அதற்கவள் "யான் ஒருவரை மணந்துகொள்வேனே யல்லாமல் இருவரையும் மணவேன்" என்றாள். பின் அவள் அவ்விருவரையும் தனித்தனியாய் ஏகாந்தத்தில் அழைத்து "நீ மற்றவனைக் கொன்றால் உன்னை விவாகம் செய்து கொள்வேன்" என்று ஒவ்வொருவனுக்கும் ஓதினாள். அப்போது அவ்விருவரும் ஒருவரோடொருவர் சண்டைசெய்திறந்தார்கள். இவ்வாற்றால் அந்தத் திலோத்தமை சுந்த நிசுந்த தைத்தியர்களைக் கொல்லுதலில் நிமித்தமானாள். ஆதலால் அவள் கொலையுடையவளாவள்.

* உண்டல் பருகல்முதலிய அந்நிய இந்திரிய விஷயங்களின் போகங்களையும்.

† ஆயுதமுதலியவற்றால் கிழிக்கப்பட்ட காயமின்றி ருதுகாலத்தில் ஸ்திரீயின் யோனியில் மாம்ஸமய ரக்தம் ஒழுகுகின்றது.

‡ கலாகந்த மென்பது பாலை வற்றச்செய்து அதில் சர்க்கரைப்பாகு வாசனைத்திரவியங்கள் சேர்க்கப்பட்ட ஓர்வகை உயர்ந்த பலகாரம். இது வடதேசத்தில பிரசித்தம். பேடா என்பது அதில் ஓர்வகை.

னமிருக்க ஏன் நமக்கு இந்தப் பராதீனமாகிய கட்டு. குகையே வீடும், காடே நெருங்கிய தோட்டமுமாயிருக்க இராஜாவிற்கேன் ஊழியனு யிருக்க வேண்டும். கல் படுக்கையாம்; தன் கை தலையணையாம்; அருவி ஜலமாம்; பருகக் கை பாத்திரமாம்; கமண்டல முதலியவையில்லை. இவ்விதமாக ஏகாந்தத்திலிருந்து சுகமுடையவனுய்ப் பர்ச்சு பரமாநந்தத்தை யடைந்தான். சமுத்திர பரியந்தமான பூமியைப் பெற்றாலும் ஏகாந்தமின்றிச் சுகமுண்டாகாது.

## 220. இராஜாமுதல் பிரஹ்மாபரியந்த முண்டாம் எல்லாச் சுகங்களும் ஏகாந்தத்தி லுண்டாகின்றனவெனல்.

பூமிக்கிறைவனுய் ரோகமின்மை யௌவனம் திடகாத்திரம் வலிவித்தை யென்பவற்றையுடைய அரசனிடத்திற்றன் மனிதசுகத்திற்கு முடிவுண்டாகியது. * மானுடகந்தர்வனென்று சொல்லப்படுபவன் அந்த அரசனினும் நூறு மடங்கு சுகத்தை யடைகிறான். † தேவகந்தர்வன் என்பவன் அவனினும் நூறு மடங்கு சுகமுள்ளவன். ‡ பிதிரர் என்பவர் அவனினும் நூறுமடங்கு சுகமநுபவிப்பவராவர். பிதிரரைப்பார்க்கிலும் ¶ அஜானதேவர்கள் நூறுமடங்கு சுகிகள். § கர்மதேவர்கள் அவர்களைவிட நூறுமடங்கு சுகிகள். ** முக்கியதேவர்களுடைய சுகம் அவர்களினும் நூறுமடங்கதிகம். இந்திரன் சுகம் அவர்களினும் நூறுமடங்கு அதிகம். சகலதேவர்களுக்கும் குருவானபிரகஸ்பதியின்சுகம் இந்திரனினும் நூறுமடங்கு அதிகம். பிரஜாபதியின் சுகம் குருவினும் நூறு மடங்கு அதிகம். பிரஹ்மாவின் சுகம் அவரினும் நூறுமடங் கதிகமானது. பிரஹ்மாவிற்குத் துக்கம் சிறிதுமில்லை. இவ்விதமாக அடையப்படும் சுகத்தின் கிரமத்தைத் தைத்திரீயவுபநிஷதம் அறிவிக்கிறது. அரசன்முதல் பிரஹ்மாவரையிலுள்ள சுகத்தை ஏகாந்தவாசியாயும் இருதயத்திற் காமத்தை யெரித்தவனுயு முள்ளவன் எப்போதும் அடைவான். ஏகாந்ததேசத்தில் இவ்வித சுகமிருக்கின்றது. ஸ்திரீ புத்திர தனசங்கம் எப்போதும் துக்கத்தையே தருவனவாம்.

---

* இந்தக் கற்பத்தில் மனிதனுகிப் புண்ணிய விசேஷத்தால் கந்தர்வ பதவியை அடைந்தவன் மானுடகந்தர்வன்.

† முற்கற்பத்தில் செய்த புண்ணியத்தால் இந்தக் கற்பத்தின் ஆதியிலேயே கந்தர்வத்தன்மையை அடைந்தவன் தேவகந்தர்வன்.

‡ தங்களுடைய லோகங்களில் வெகுகாலம்வரையில் வசிக்கும் அக்கினிஷ்வாத்தர் முதலியோர் பிதிரர்கள்.

¶ கற்பத்தின் ஆதியிலேயேதேவத்தன்மையை அடைந்தவர்கள் அஜானதேவர்கள்.

§ இந்தக் கற்பத்தில் அசுவமேதாதி கர்மங்களைச் செய்து வெகு ஐசுவரியத்தை அடைந்து அஜானதேவர்களால் சேவிக்கப்பட்டிருப்பவர்கள் கர்மதேவர்கள்.

** யமன், அக்கினி, வாயு, சூரியன், சந்திரன் முதலிய பிரதான தேவதைகள் முக்கியதேவர்களாவர். சிலர் யமன்முதல் பிரஹ்மாபரியந்தமுள்ள தேவதைகளையும் சிலர் 8 வசுக்கள், 12 ஆதித்தியர்கள், 11 ருத்திரர்கள் என்னும் 31 தேவர்களையும் முக்கிய தேவர்களாகச் சொல்லுகிறார்கள்.

## 221. ஸ்திரீ சங்க துக்க வர்ணனம்.

எவனுடைய ஸ்திரீ குரூபியாயும் துர்ப்பாஷிணியாயு மிருக்கிறாளோ, அவன் மனதில் எப்போதும் துக்கமே குடிகொண்டிருக்கும். ஸ்வாமி! இந்த ஸ்திரீ மலமூத்திராதிகள் நிறைந்த பாண்டம். இந்த முண்டையை எந்தப் பாவத்திற்குத் தண்டனையாக எனக்குக் கொடுத்திருக்கிறீர்கள். எருமைக் கடாவுக்கு எருமைக்கடாரியும், ஆண்பிசாசுக்குப் பெண்பிசாசும், ஆணொட்டகத்துக்குப் பெண்ணொட்டகமும் பிரியம். பெண்கழுதையின் சப்தத்தைக் கேட்டு ஆண்கழுதை மோகிக்கிறது. ராத்திரியில் ஆயிரக்கணக்கான பெண்நரிகளின் சப்தத்தைக்கேட்டு ஆண்நரிகள் ஊளையிடுகின்றன. * அபராதமின்றிய மனைவியை வைராக்கியத்தாலன்றி விடுதல் பொருந்தாது. பாபம் இதயத்துப் பொருந்தியுளது என்று இவ்வாறு புருஷனதுமனம் ஸ்திரீயின் துர்ப்பாஷணையைக் கேட்டும், அவளது குரூபமான உடலைப்பார்த்தும் இரவும் பகலும் துக்கப்பட்டுக்கொண்டிருக்கும்.

ஸ்திரீயானவள் அழகுள்ளவளாயும் மதுரமான வசனத்துடன் கூடினவளாயு மிருந்தால் குரூபமான ஸ்திரீயினும் அதிகதுக்கத்துக்கு ஹேதுவாகிறாள். சுவர்ணம்போல் காந்தியுள்ள ஸ்திரீயே பிரியமுள்ளவளாய்ப் புருஷனது தர்மார்த்தங்களைக் கெடுத்து மோக்ஷத்தையும் கெடுப்பவளாகின்றாள்.

## 222. ஸ்திரீ சங்கத்தால் தன நாசமாகுதல்.

புருஷன் அவளுடைய இனியவார்த்தையாகிய விஷங்கலந்ததேனைப் புசித்து அதனால் புத்தியை மாய்த்துக்கொள்ளுகிறான். காமாந்தகனுக்குச் சொப்பனத்திலும் அவளைத்தவிர வேறொன்றையும் பார்க்கிறதில்லை. வீட்டிலாவது வெளியிலாவது அகப்படும் தனம் வஸ்திரம் பூஷணம் முதலியவைகளெல்லாவற்றையும் அவளுடைய சரீரவுபயோகத்திற்காகவே சமர்ப்பிப்பான். குரு தாய்தந்தையர்களின் ஞாபகமே வருகிறதில்லை. பாயஸாதி பதார்த்தங்களை ஸ்திரீயாகிய தெய்வத்திற்குப் பக்தியோடு சமர்ப்பிப்பான். மோகமென்னும் மூக்கணாங்கயிற்றாற் கட்டப்பட்டு விடுபடாத புருஷனாகிய எருதை ஸ்திரீயாகிய குடியானவன் இடிக்கின்றான்.

## 223. ஸ்திரீ ஸங்கத்தால் தர்மம் கெடுதல்.

கூண்டிலடைபட்ட கிளி சுத்தாசுத்த வசனங்களைக் கற்றுக்கொடுத்தபடி சொல்லுவதுபோல ஸ்திரீ சொல்லிக்கொடுத்தபடி தாய் தந்தையரிடத்திற் பேசுகிறான். ஆண்மயில் பெட்டையின் முன்பாக ஆடி யதைச் சந்தோஷப்படுத்துவதுபோலக் காமுகன் பலவித வேஷத்தால் ஸ்திரீ சொன்னபடியாடி அவளைச் சந்தோஷிப்பிக்கிறான். இருவர் மனமும் ஒருமித்துக் காமக்

---

* இங்கே இது பொருளாம்:— வியபிசாரமுதலிய அபராதத்தினல் அல்லது வைராக்கியத்தினல் ஸ்திரீயை விடுதலுண்டாகின்றது. இந்த ஸ்திரீயின் குரூபம் துர்ப்பாஷணம் எதுவோ அது பூர்வகர்ம சையோகத்தால் ஈசுவரன் ஆக்கியிருக்கின்றார். இதில் இவளது வர்த்தமான அபராதமில்லை. என்னுடைய சித்தத்தில் வைராக்கியமுமில்லை. ஆதலால் நிரபராதஸ்திரீயை வைராக்கியமின்றி விடுதலால் எனக்குப் பாபமுண்டாகும். ஆதலால் இவளை விடுதல் பொருந்தாது. ஆனல் "பாபம் இதயத்துப் பொருந்தியுளது" அதாவது என் ஜீவனுக்குப் பூர்வஜன்மத்தில் செய்த பாபத்தின் பயன் இந்த ஸ்திரீரூபமாக வாய்த்திருக்கின்றது.

கள்ளின் வெறி மிருந்தகாலத்தில் மிகவு முன்மத்தர்களாய் வஸ்திரத்தை இழந்து அமங்களமான பிரேதம்போல் நக்கினவடிவாய் ஆடுகள்போல் அடிக்கடி பின்தொடர்ந்து திரிந்து ரமிக்கிறார்கள். மத்தியபானம் பண்ணினவன் துர்க்கந்தத்தை யறியாமல் புத்திகெட்டு மலினமான தெருச்சாக்கடைகளிற் புரளுவதுபோல் ஸ்திரீபுருஷர்கள் காமமதத்தால் விவேகங்கெட்டு மிகமலினமான சரீரங்களைக் கட்டிக்கொண்டு புரளுகிறார்கள். காமமதம் மனதைப் பிரமிக்கும்படி செய்கின்றது. காமத்தை வென்றவர்கள் இதனைக் கேட்டு ஆச்சரியப்படுகிறார்கள். காமமதத்தால் புருஷனுடைய புத்தி நாசமடைகிறது. தன்னுடையது பிறருடையது உயர்ந்தது தாழ்ந்தது என ஸ்திரீவித்தியாசந் தெரிகிறதில்லை. ஸ்திரீயே காமவெறியை யுண்டாக்குகிறாள். எவள் சுகத்தைத் தருபவளோ அவள் செய்கையினால் துக்கந்தருபவ ளாகின்றாள். காமக்கள்ளின் மதம் பிரபலப்படும்போது பிராஹ்மணஸ்திரீ நீசபுருஷனுடனும் ரமிக்கிறாள். இப்படி ஸ்திரீபுருஷர்கள் காமக்கள்ளைப்பருகி அனேகவித அனர்த்தங்களைச் செய்கிறார்கள். காமதோஷத்தினால் நரன் இவ்வாறு காலங்கழிப்பது சுந்தரமான ஸ்திரீயையடைந்ததனாலாம். இதனால்தான் அதிக சுரூபமான ஸ்திரீ துக்கத்தைத் தருபவளாவள். ஆதலால் அவளை விடுதல் சுகத்தைத் தருவதாம் என்று வெகுமுனிகள் சொல்லியிருக்கிறார்கள். எவன் அழகிய ஸ்திரீயைக் கூடப் பிரியப்பட்டு விஷத்திற்குச் சமானமாக எண்ணி ஓடாமலிருக்கின்றானோ, அவன் இரண்டுலக சுகத்தையு மிழக்கின்றான் என்பதற்குக் குணநிறைந்த முனிவர்கள் சாக்ஷி கூறுவர்.

## 224. ஸ்திரீசங்கத்தால் பிந்துகெடுதல்.

புசிக்கப்பட்ட நானாவித பதார்த்தங்களின் ரஸத்தினின்றும் பிந்து உற்பத்தியாகிறது. எல்லோருக்கும் ஜீவனம் பிந்துவின் ஆதீனமாம். பிந்து மனதின் துக்கத்தைப் போக்குகிறது. மனது எப்போது ஜீவர்களுக்கு மலத்தில் வசிக்கிறதோ, அப்போது அவர்களுக்குத் துக்கமுண்டாகிறது. மனம் இரத்தத்தில் வாசஞ்செய்யின் அப்போது சஞ்சலம் அதிகப்பட்டு இரஜோகுணமுண்டாகிறது. எப்போது மனம் பிந்துவில் வசிக்கிறதோ, அப்போது சோகமும் சஞ்சலத்தன்மையும் கெடும். அன்றியும் தானே பலமுடையவனென்றறிந்து பிரஸன்னனாகிச் சுபகாரியத்திற் பிரவேசிக்கிறான். பிந்து எவர்களிடத்து அதிகமாயுண்டோ அந்தச்சரீரத்தில் அழகும் காந்தியும் உண்டாம். பிந்துதான் சரீரத்தில் விளக்கமானது. பிந்து நசித்தால் சரீரமும் மனமும் நசிக்கின்றன. எவனுக்குப் பிந்து ஒருகாலும் நாசமடைகிறதில்லையோ அவன் சரீரம் நரைதிரையின்றிப் பிரகாசிக்கும். பிந்து சம்ரக்ஷணையால் * கேசரிமுத்திரையை அப்பியஸிக்கும் யோகி சிரேஷ்டத்துவமடைகிறான். பிந்துவை யிழுத்தலால்

* ஆறுமாத அப்பியாசத்தால் நாவினடியிலுள்ள நரம்பை 21-மயிரளவு கிரமமாக அறுத்து நாவை வளர்க்கின்றார்கள். அந்நாவை யோகிகள் லம்பகை யென்பர்.

மேற்சென்று சிரசில் நிலைத்துள்ள பிராணவாயுவைத் தடுத்தற்பொருட்டு மேல்வாய்த் துவாரத்தில் அந்த லம்பகத்தைப் பொருத்துதலைக் கேசரிமுத்திரை யென்பர். அதனால் சகல சரீரத்திலும் காமாதிவிருத்தியோடுகூடிய மனதின் பரவுதலின்மையால் பிந்துவாகிய வீரியத்தை ரக்ஷித்தலால் யோகிக்குக் கல்யாண முண்டாகிறது.

யோகி அஷ்டமாசித்திகளும் தரிக்கின்றான். போகி அவற்றை இழக்கின்றான். ஜகத்தில் இவ்வாறு மிகவும் உத்தமமாயுள்ள பிந்துவை ஸ்திரீயானவள் தன் அல்குலில் கிரகித்துக்கொள்ளுகிறாள். கரும்பை ஆலையில் அடிக்கடி கொடுத்துப் பிழிந்து சக்கையானபின் எரித்துவிடுவதுபோல ஸ்திரீயானவள் புருஷனைத் தன் புஜங்களால் ஆலிங்கனஞ்செய்து அவன் வீரியத்தை யபகரித்துத் தன் யோனிகடத்தில் நிரப்புகிறாள். இவ்வாறு புருஷன் வீரியமெல்லா மொழியும்வரையில் பிரதிதினஞ்செய்து, அவன் சரீரத்தை யசாரமாக்கிவிடுகிறாள். வாசனையிழந்த பூவின் சக்கையைப்போல் புருஷன் பிந்துவற்றுப் போனபோது அவனைக் கடுஞ்சொற்களாகிய கொள்ளிக்கட்டையாற் சுடுகிறாள். அழகு, பலம், தனம் என்பன மிகுதியாயிருக்கிற புருஷனினும் ஸ்திரீ பலமுடையவளாய் அவன் அழகு பலம் தனமுதலியவற்றைக் கெடுத்து நீ என் கணவனோ என்கிறாள். மூடன் மறுபடியும் அவளிடத்தில் ரமிக்க விரும்புகிறான். அவன் தொட்டவுடன் துர்ப்பாஷையாய்ப் பேசுகிறாள். கோபத்தினால் மூக்கைச்சுழித்து சிவந்த கண்களைச் சுழற்றுகிறாள். பிறகு புருஷன் சமீபத்திற் போகிறதில்லை. கோடிவச்சிரங்களின் சாரஞ்சேர்ந்தால் எவ்வளவு கடினமாயிருக்குமோ, அதைவிட அதிகக்கடினமானது ஸ்திரீ இருதயமென்று ரிஷிகள் முரசறைகிறார்கள். ஸ்திரீயானவள் இவனை அநாதரவுசெய்து எவ்வளவிற் கெவ்வளவு பின்னிடைகிறாளோ, புருஷன் அவ்வளவிற் கவ்வளவு அவளை ஆசையால் பின்பற்றி மரணபரியந்தம் விடாதிருக்கின்றான். சுருதிஸ்மிருதி புராணாதிகளைப் படித்துத் தர்க்கநிபுணனும் ஒருவராலும் ஜயிக்கப்படாதஅதிபுத்திசாலியாயுள்ளவனையும் ஸ்திரீ ஸ்வாதீனஞ் செய்துவிடுகிறாள். புருஷன் படிப்பித்த குரங்கு சொன்னபடி யாடுவதுபோல் ஸ்திரீயின் இஷ்டப்படி ஆடுகிறான். ஸ்திரீ மோகத்தினால் பண்டிதனும் அப்பொழுதே வார்த்தை யுக்தியெல்லாவற்றையும் மறந்துவிடுகிறான். எப்பொழுதாவது வேதாந்திகளின் ஞாபகம் வந்தால் ஸ்திரீயினிடத்தில் வெறுப்பை யடைந்து அவளை விட விரும்புகிறான். அப்போது அவள் தன் கண்ணம்பைச் செலுத்துகிறாள். அவள் கண்ணம்பிற்கு வித்வான்களே தப்பார்களென்றால் மற்ற மூடர்கள் ஒரு பொருளா ? இவ்வாறு ஸ்திரீயினிடத்தில் தீவிர வைராக்கியமில்லாமையால் மந்தமதியுடையோர் மறுபடியும் இச்சிக்கிறார்கள். அரசன் சேவகரைக் கட்டளையிடுவதுபோல் ஸ்திரீ புருஷனுக்கு நாநாவித உத்தரவுசெய்து எஜமானைப்போல் உட்காருகிறாள். எவன் ஸ்திரீயின் கண்ணாகிற பாணத்தால் துளைக்கப்படுகிறானோ அவன் இதயம் நேராகாது. நன்மை தீமை சுகம் துக்கம் முதலியவற்றை மறக்கிறான். அவன் எப்படிப் பவதுக்கத்தினின்றும் விடுபடுவான். * வேசிகளும் பரஸ்திரீகளும் ஸ்வஸ்திரீயும் மிக நிந்திக்கத்தக்கவளும் நரகத்தின் கொடியுமாவள்; சந்தேகமில்லை. விவேகியானவன் இம்மூவர்களின் சிநேகத்தையும் விட்டுவிடுகிறான்.

* இங்குக் காவியசாஸ்திரத்தில் கூறப்பட்ட சாமானியை (பொதுமகள்) பரத்தை (பிறன்மனை) தன்னவள் (இல்லாள்) என்னும் மூவகை நாயகிகளின் விடுபாடு காட்டப்பட்டது.

இவர்களுடன் சிநேகஞ்செய்கிற மூடன் நாசத்தையே யடைகிறான். தர்மார்த்த மோக்ஷங்களை ஸ்திரீ செவ்வையாய் நாசஞ்செய்கிறாள். அவளைச் சகல அநர்த்தங்களுக்குங் காரணமென் றறிந்துவிட்டவனுக்கே சுகமுண்டாகும்.

## 225. புத்திரசங்க துக்கவர்ணநம்.

புத்திரனும் அப்படியே எப்பொழுதும் துக்கத்துக்குக் காரணமாகிறான். புத்திரன் இல்லாவிட்டால் இல்லையென்கிற துக்கம் ஒன்றே. புத்திரன் உண்டானால் கர்ப்பசமயத்தில் துக்கம். பிறப்பிலும் துக்கமாம். இறந்தாலோ அநேகதுக்கம். ஸ்திரீ கர்ப்பிணி யாகாவிட்டால் அதுவரையில் ஸ்திரீபுருஷர் இருவருக்கும் பெருந்துக்க முண்டாகிறது. கர்ப்பமுண்டானால் அது நாசமடையாம லிருக்கவேண்டுமே யென்று விசாரப்படுகிறாள். பிறகு பிறப்பது பெண்ணோ ஆணோவென்று சிந்திக்கிறார்கள். கர்ப்பம் விழுந்துபோவதற்கு ஏது அநேகமுண்டு. அரைகுறையான மாஸங்களில் சிசு ஜனிக்காமலிருக்கவேண்டுமே யென்று கவலைப்படுகிறார்கள். ஒன்பதுமாத மானபின் வெகு வருத்தப்பட்டுப் பிரசவிக்கிறாள். உலகத்தில் நவக்கிரகங்களில் ஒன்றிரண்டு விரோதமில்லாதிராது. சில விருத்தமாயிருப்பதைக்கண்டு தம்பதிகள், அகோராத்திரம் மனம் வருந்துகிறார்கள். சிசு ஸ்தன்னியபானஞ் செய்யாவிட்டால் தாய்தந்தையர் கண்ணீர்விட் டழுகிறார்கள். இவ்வித சிந்தையாற் சில மாதங் கழிந்தபின் பல் முளைக்கும்போது வெகு குழந்தைகள் மரணமடைவதை எண்ணி விசனப்படுகிறார்கள். வியாதியாற் குழந்தை இளைத்துப்போனால் சந்திகளில் கழிப்புக் கழித்துப் போடுகிறார்கள் அதன் சவுக்கியத்தின் பொருட்டுப் பள்ளன் பறையன் சக்கிலியன் துலுக்கன் முதலியோர்களைக் கொண்டு பிராமணர்கள் மந்திரித்துக் கயிறுகட்டிக்கொள்ளுகிறார்கள். சைய்யத், க்வாஜா, பீர், பக்கீர் என்னுமிவர்களைத் தீரமில்லாது கை குவிக்கிறார்கள். எவனை இந்துக்கள் ஒருபோதும் மதிக்கமாட்டார்களோ அவனைப் புத்திரனை முன்னிட்டு இஷ்டனாக வழிகிறான். பைரவன் பூத முதலியவற்றைப் பிரார்த்தித்து ஸ்மசான பூமியில் *பலிகொடுக்கிறார்கள். பூஜாரியை யழைத்து வீட்டில் உடுக்கடிப்பித்து கைகுவித்து நாணமின்றிப் பூஜிப்பார். யந்திரம் தாழ்த்து முதலியவற்றை ஏராளமா யெழுதிக் குழந்தையின் கழுத்தைச் சுற்றிக் கட்டுவார்கள். தன் குலத்தில் ஒரே நாராயணனைப் பஜித்துக் கனவிலும் வேறு தேவதைகளை ஸ்மரிக்காதவர்களும் குழந்தையின்நிமித்தம் குலநியமத்தைவிட்டு வியபசாரிபோல் கண்டவிடமெங்கும் பல தேவதைகளைத் தேடுகிறார்கள். வைசூரிகண்டால் தாய்தந்தையர் மனதை வியசனம் நாசம் பண்ணுகிறது. ஸ்நானமுதலிய கிரியைகளைவிட்டு அழுக்கோடிருப்பார்கள். கழுதையை மேலான தெய்வமெனக் கொண்டாடுகிறார்கள். "தாயே உன் வாகனமான கழுதையை ஊரைச்சுற்றிக்கொண்டு வருகிறேன். அதற்குத் தீனிபோடு

* உளுந்து அரிசி முதலியவற்றால் சமைத்த அந்நத்தினையாவது மாம்சத்தையாவது ஒட்டிலாவது அல்லது இலையிலாவதுபோட்டு நான்கு சந்தியிலாவது ஸ்மசானத்திலாவது வைத்தல் பலி யென்னப்படும்.

கிறேன். என் குழந்தையைக் காக்கவேண்டும்" என்று வணக்கத்தோடு கடலையை மடியில் போட்டுக்கொண்டுபோய்க் கழுதைக்குக் கொடுப்பார்கள். இவ்விதமாக வெகு வருத்தப்பட்டுக் குழந்தைகளைக் காப்பாற்றுகிறார்கள். குழந்தை பெரியவனாகும்வரையில் மற்றும் அநேக * மாயிரம் கவலையுண்டு. குழந்தைக்கு ஆயுள் அற்பமானால் இறந்துபோவானென்று அதற்கு அநேக உபாயஞ் செய்வர். ஆயுட் குறைவால் இறந்துபோனால், தாய் தந்தையர் தலையிலடித்துக் கொண்டு தங்களை வெகுதீனர்களாகப் பாவித்து இரவும் பகலும் ஐயோவென்றலறி, ஜன்மம் வியர்த்தமாகிவிட்டதேயென்று நினைத்துத் திக்காரஞ் செய் (நிந்திக்) கிறார்கள். புத்திரனுள்ளவன் புத்திர மரணத்தாலடையுந் துக்கம் புத்திரனைப் பெறாதவன் அடையமாட்டான். புத்திரன் இறவாது பிழைத்துப் பெரியவனானால் அவன் தன் ஸ்திரீயைப் போஷித்துக் காக்கிறான். வெகு பாடுபட்டு வளர்த்த தாய்தந்தையருக்குக் குடிக்கத் தண்ணீர் கொடுப்பதும் அவனுக்குச் சுமை. இராத்திரி அவள் படுக்கையிற் சொல்லிக்கொடுத்தபடி மாதா பிதாக்களை வைவான். சற்புத்திரனாயின், காலையில் எழுந்து பெற்றோரைத் தூரத்திலிருந்து நமஸ்கரித்து அவர்கள் விரும்பினால் நெருங்கி வருவானேயன்றி மற்று அவர்கள் சந்நிதியில் நிமிர்ந்தும் பாரான். அசத்புத்திரனாயின் காலையில் எழுந்தவுடனே தாய் தந்தையரைத் தூர்ப்பாஷையாய்ப் பேசி அவர்களுக்குத் தங்கள் சரீரத்தைமாத்திரம் விட்டு வீட்டிலுள்ள பொருளையெல்லாம் எடுத்துக்கொண்டு வேறிடத்தில் குடிபோகிறான். தான் சம்பாதித்து அவர்களுக்கொன்றும் கொடுக்கிறதில்லை. இரவும் பகலும் ஸ்திரீயின் சரீரத்தையும் தன் சரீரத்தையும் போஷித்து நாட்களெல்லாம் கழிப்பான். பிதா மாதாக்கள் அவனைப் பார்த்து பெருமூச்சுவிடுவார்கள்.

இவ்விதமாகப் புத்திரன் எப்போதுட் துக்கத்தையே விளைவிப்பவனாகின்றான். விசாரித்துப் பார்க்குமிடத்து எப்போதும் புத்திரன் துக்கரூபமாகின்றானென்றறிந்தும் எவன் புத்திரனால் சுகம்பெறலாமென்று கருதுகிறானோ அவன் மூடர்களுக்கரசன்.

## 226. தனசங்க துக்கவர்ணனம்.

ஸ்திரீயையும் புத்திரனையும் விட்டுத் தனத்தை விரும்புவோன் வாயில் மண் விழும். தனம், சம்பாதிப்பதிலும் செலவிடுதலிலும் காப்பாற்றுவதிலும்

---

* 1. யௌவன அவஸ்தைக்குமுன் சிறுவர்களுக்கு விளையாட்டில் ருசி விசேஷமாயுண்டாகிறது. அவர்களை வலிந்து பிரவிருத்திக்கச் செய்தலால் தினந்தோறும் துக்கமுண்டாகிறது.

2. பள்ளிக்கூடத்தில் மற்றச் சிறுவர்களை அடித்துவருவதினாலும் அல்லது இவர்கள் அடிபட்டு வருவதினாலும் துக்கமுண்டாகிறது.

3. பின் மந்த சம்ஸ்காரத்தால் படிக்காவிட்டாலும் கிலேசமுண்டாகிறது.

4. படித்தும் வியவகார சாமர்த்தியமில்லாவிடினும் வியாகூலமுண்டாகிறது.

5. சூதாடல் முதலிய துர்வியாபாரங்களிற் பொருந்தினும் வியாகூலமுண்டாகிறது.

6. பின் அவனுக்கு மணஞ் செய்வித்தற்பொருட்டுப் பெருங்கவலையுண்டாகிறது.

7. பின் அவனது விவாக நடத்துதற்பொருட்டான கவலையுண்டாகிறது.

இவ்வாறு யௌவனாவஸ்தைவரையில் மாதா பிதாக்களுக்கு அநேக துக்கமுண்டாகின்றன என்பது தாற்பரியம்.

இழந்துபோவதிலும் துக்கத்தையே தருகிறது; தனத்தை அதிமாய்ச் சேர்க்க இச்சிக்கிறவன் இலக்ஷம் கோடி எனப்படும் * அநர்த்தங்களைச் செய்கிறான். பணஞ்சேர்க்கத் தொடங்குகிறவன் ஜாதிதர்ம குலதர்மங்களை விட்டு விடுகிறான். அப்படிச் செய்தும் அதிருஷ்டமின்றி அத்தனங் கிடைக்கிறதில்லை. கிடைத்தால் அதைக் காப்பாற்றிக் காப்பாற்றி இறக்கிறார்கள். செலவிட்டால் குறையுமேயென்னும் விசாரம் வருகிறது. முழுதும் கெட்டால் அளவில்லாத துக்கம். இவ்விதமாகத் தனம் மனதிற்குத் துக்கத்தையே விளைவிக்கிறது. அதனை யிச்சிப்பவன் இகழத்தக்கவனாவன்.

இவ்விதமாக ஸ்திரீ புத்திரன் தனம் என்பன துக்ககரமானவையெனத் தெரிந்து பர்ச்சு அவற்றில் அபிமானத்தை யொழித்தான்.

## 227. இராஜாவுக்குப் பர்ச்சுவினிடத்துப் பிரேதபுத்தி யுண்டாதலும் இராஜா ஓடுதலும்.

பர்ச்சு வனத்தில் ஏகாந்தத்திற் சென்று சித்தசாந்தியைச் செய்தான். புதிதாய்ப் பர்ச்சு ஸ்தானத்தில் மந்திரியாய் நியமிக்கப்பட்டவன் இந்த விருத்தாந்தங்களை யெல்லாங் கேள்விப்பட்டுப் பர்ச்சு ஜீவித்திருக்கிறானென்று ராஜா கேள்விப்பட்டாலாவது நேரில் சந்தித்தாலாவது நாமெல்லோரும் பொய்யராய்விடுவோம், அரசன் எல்லோரையும் தண்டிப்பான், என்று மனதில் நினைத்து உத்தியோகஸ்தர்களுடன் ஆலோசித்து ராஜாவிடம் எல்லோரும் போய், பர்ச்சு பிசாசாய்க் காட்டிற் சஞ்சரிப்பதாயும், உடம்பெல்லாம் சாம்பற் பூசிக்கொண்டிருப்பதாயும், அவனைச் சந்தித்துப் பேசுகிறவர்களை யவன் அடிக்கிறதாயும், அவனைக் கண்டவுடன் ஓடுவோர்மாத்திரம் தப்புவதாயும் தெரியப்படுத்திக்கொண்டார்கள். இதனைக் கேட்டமாத்திரத்தில் உண்மையை விசாரிக்காமலே அரசன் பர்ச்சு இறந்து பிசாசாய்விட்டனனென்று நிச்சயித்துவிட்டான். பிறகு ராஜா ஒருநாள் வேட்டையாடக் காட்டுக்குச் சென்றான். பர்வதங்களும் நெருக்கமான விருக்ஷங்களும் சிங்கம் புலி முதலிய துஷ்டமிருகங்களு மிருக்குமிடத்திற் பிரவேசித்து ஒருமரத்

* ஸ்ரீமத் பாகவதத்தில் பதினோராவது ஸ்கந்தத்திலே 23-வது அத்தியாயத்தில் "அர்த்தத்தைச் சம்பாதிப்பதிலும் சம்பாதித்த அர்த்தத்தைக் காப்பாற்றுவதிலும் அதை விருத்திசெய்வதிலும் அது செலவாகிறதிலும் நாசமாகிறதிலும் அனுபவிக்கப்படுவதிலும் மனிதனுக்குத் துக்கம் பயம் சிந்தை பிரமம் என்பவை யுண்டாகின்றன. சம்பாதிக்கிறதிலும் விருத்திசெய்வதிலும் துக்கமும், காப்பாற்றுவதில் பயமும், செலவிலும் அனுபவிப்பதிலும் சிந்தையும், நாசத்திற்பிரமமுமுண்டாகின்றன. அர்த்தத்தை அடையும்பொருட்டு (1) திருட்டு, (2) ஹிம்சை, (3) பொய்ம்மொழிதல், (4) டம்பம், (5) இச்சை, (6) குரோதம் இவ்வாறு அனர்த்தங்க ளிருக்கின்றன. அடைந்த அர்த்தவிஷயத்தில் (1) கர்வம், (2) அபிமானம், (3) ஸ்நேகத்தியாகம், (4) வைரம், (5) அவிசுவாசம், (6) அசூயை, (7) ஸ்திரீ, (8) மத்தியம், (9) சூதாடல் என்பவற்றாலுண்டாகுந் துக்கம் என ஒன்பது அனர்த்தங்கள் இருக்கின்றன. ஆகையால் ஓரர்த்தம் 15 அநர்த்தங்களுக்கு மூலகாரணமாயிருக்கிறது." என்று சொல்லப்பட்டிருத்தலால் கோடி அநர்த்தமென்றார்.

தடியில் தனது மந்திரியாகிய பர்ச்சு தவஞ்செய்வதைக் கண்டு இவன் பிசாசு என்னும் பயத்தினுல் அரசன் ஓடினுன்.

## 228. இலக்கம் 227-ல் கூறிய திருஷ்டாந்தத்தைத் தார்ஷ்டாந்தத்திற் பொருத்துதல், பேதவாதத்தைத் திக்கரித் (இகழ்) தலோடு விடவேண்டுமெனல்.

பர்ச்சு இறந்து பிசாசானுனென்னும் பொய் வசனத்தை நிசமாக நம்பி ஜீவித்திருக்கும் பர்ச்சுவைத் தன் கண்ணுல் பார்த்தும் பிசாசென்னும் நினைவால் அரசன் ஓடினதுபோல் துவைதவாதிகளின் வசனத்தைக் கேட்டு அஞ்ஞானி அதில் விசுவாசம் வைத்து அந்தக்காணத்தில் பிரஹ்மம் அத்வைதமென்னும் பிரத்தியக்ஷஞான முண்டானுலும் பேதவசன விசுவாசத்தால் எப்போதும் துக்கத்தையே யடைகிருன். ஒருகாலும் அவனுக்குப் பிரஹ்மத்தின் சாக்ஷாத்காரஞான முண்டாகிறதில்லை. பேதவசனத்தை யசத்தியமாக அறிகிறவனுக்குப் பிரஹ்மஞானம் மகாவாக்கியத்தா லுண்டாகும். சிஷ்யனே! பேதவசனத்தை நீ கேட்பாயானுல் அதைப் பொய்யாகவும் நரகசாதனமாகவும் அதைப் பிரதிபாதிப்பவ ரெல்லோரும் பொய்யரென்றும் அறி. அவர்களிடத்தில் ஒருகாலத்திலுஞ் சேரக்கூடாது. சேர்ந்தாலும் அவர்களுடைய பேதவசனத்தைக் கேட்கலாகாது. கேட்டாலும் கேட்டவுடனே அதைத் தள்ளவேண்டியது. அவ்வசனத்தை மிலேச்ச ஜனங்களது வசனமாக நினைத்து ஓடுக.

## 229. மித்தையாகிய துக்கம் மித்தையினுல் நாசமாதலும், ஓர் அரசன் சொப்பனமடைதலும், அவனுக்கு நரியால் துக்க முண்டாதலும், அது மித்தையாகிய வைத்தியனுல் கெடுதலும்.

வேதமும் குருவும் மித்தையானுல் சமுசாரதுக்கத்தை யெப்படி நிவர்த்திக்கக்கூடுமென்று நீ கேட்ட கேள்விக்கு உத்தரஞ் சொல்லுகிறேன் கேள். பொய்யான துக்கம் பொய்யான உபாயத்தால்தான் நிவர்த்தியாகும். வேதமுங் குருவும் சத்தியமாயின் பொய்யான ஜகத்தின் துக்கம் நிவர்த்தியாகாது. இதில் ஓர் திருஷ்டாந்தஞ் சொல்லுகிறேன் கேள். அதனுல் உன் சந்தேகங்கள் நிவர்த்தியாய்விடும். தேவர்களுக்கரசனுன இந்திரன்போல் வெகுபிரதாபமுள்ள அரசன் ஒருவனிருந்தான். அவனிடத்தில் பீமனுக்குச் சமானமான அனேக வீரர்களிருந்து வாயில் காத்துவந்தார்கள். அவனுடைய அந்தப்புரத்திலும் வெளியிலும் உருவின கத்தியுடன் அனேகர் காத்துவந்தார்கள். மேல் உப்பரிகையில் சயனிக்கு மறையில் புஷ்பங்கள் பரப்பின மெத்தையில் அரசன் தூங்கிக்கொண்டிருந்தான். ஒரு ஈயும் அவ்விடத்திற் பிரவேசிக்க முடியாதெனின் வேறெதுதான் அங்கே போகக்கூடும். அரசன் அப்போது ஒரு

கனவுகண்டான். அது யாதெனின், ஒரு நரி அவன் காலைப் பிடித்துக்கொண்டது. அதனை யுதரித்தள்ள அவனால் முடியவில்லை. சகாயத்துக்காகக் கூக்குரலிட்டும் வாயிலில் இருந்த வீரர்கள் சகாயத்துக்கு வரவில்லை. பிறகு அரசன் ஒரு தடியை யெடுத்து நரியின் தலையிலடிக்க அது ஓடிவிட்டது. கடித்தவிடத்தில் வெகு வலியுண்டாயிற்று. தடியின் சகாயத்தால் நொண்டிக்கொண்டு ஒரு வைத்தியன் வீட்டுக்குப் போய் இரணத்தை யாற்றும்படிக்கு மருந்துகேட்டான். வைத்தியன் தன் கையில் மருந்தில்லையென்றும் பணங்கொடுத்தால் பண்ணிக்கொடுக்கிறதாயுஞ் சொன்னான். அதனைக் கேட்டு அரசன் தன் கையில் ஒரு காசுமில்லாமையால் பின்வாங்கி வெகு வருத்தத்துடன் திரும்பி மனதில் ஆலோசித்தான்:—நான் தனிகனாயிருந்தால் இந்த வைத்தியன் வீட்டுக்கு ஓடிவருவான். நான் ஏழையென்றும் என்னாற் பிரயோஜனமில்லையென்றும் நினைத்து, என்னைக் கைவிட்டான். ஆனால் அவனிடத்திற் பிசகில்லை. பிரதிப்பிரயோசனமின்றி ஒருவனும் ஒரு காரியமும் செய்யமாட்டான். தாய் தந்தை ஸ்திரீ பிள்ளை பந்துக்களெல்லாம் தங்களுடைய பிரயோசனத்தின்பொருட்டே ஒருவனிடத்தில் அன்பு பாராட்டுகிறார்கள். பிரயோஜன மில்லாவிடின் இவர்கள் திரும்பியும் பார்க்கமாட்டார்கள். எவனது இன்மையை ஒரு நிமிஷமும் சகிக்கமாட்டார்களோ, எவன் கொஞ்சநேரம் பிரிந்துபோனாலும் அதிக துக்கப்படுகிறார்களோ, எவன் வீட்டுவாயிலில் வந்தவுடன் அவனைக் கட்டிக்கொள்ள எல்லோரும் கூடுகிறார்களோ, அவன் துரதிருஷ்டத்தினால் குஷ்டரோகியாய் விரல்கள் அழுகிப்போய் அவற்றிலிருந்து ஜலம் பெருக ஈக்களால் உபத்திரவப்பட்டுக்கொண் டிருப்பானாயின், இவனால் என்ன பிரயோசனமென்று நினைத்து முன் பிரியமாயிருந்தவர்கள் இப்போது "அடா! பாவிப்பயலே! ஏன் இன்னும் ஜீவித்துக்கொண்டிருக்கிறாய், பிராணனை விடு" என்று கடிந்து பேசுகிறார்கள். கண்ணாற் காணச் சகிக்கிறதில்லை. வாந்தியைப்போல் அருவருக்கிறார்கள். பதியினிடத்துப் பிரியமுள்ள ஸ்திரீயானவள் சற்று விலகியிருந்துகொண்டு முகத்திலுள்ள ஈக்களை யோட்டுகிறாள். இவனை மடியில்வைத்து வளர்த்த தாய் தந்தையர் இவனுக்கு வேண்டியதைக் கொடுத்து விலகிவிடுகிறார்கள். பந்துக்கள் மறைவில் நின்றுகொண்டு பேசுகிறார்கள். இவ்விதமாக சர்வஜகத்தும் தம் தம் சொந்தப் பிரயோசனத்தையே நாடுகிறது. சொந்தப் பிரயோசனத்தை நாடாமல் ஒருவனிடத்தில் அன்பு பாராட்டுவோர் யார். நான் தனிகனாயில்லாமையால் அவன் எனக்கு மருந்துகொடுக்க வில்லையென்று இப்படி நினைத்துக்கொண்டு போகும்போது அரசன் ஒரு சந்நியாசியைச் சந்தித்தான். அவன் ஒரு ஔஷதங் கொடுத்தவுடன் வலி சுத்தமாய் நீங்கிவிட்டது. அரசன் நித்திரையினின்று விழித்துக்கொண்டவுடன் கடி, துக்கம், சந்நியாசியென்னும் ஒன்றையும் காணவில்லை. சிஷ்யனே! இந்தத் திருஷ்டாந்தம் உனக்குச் சொன்னேன். இதனால் பொய்யினாற்றான் பொய் நிவர்த்தியாகும் என்று அறி. ராஜாவுக்குப் பொய்யான துக்க முண்டானகாலத்தில் நிஜமானவை யாதொன்று முபயோகப்படவில்லை.

## 230. இலக்கம் 229-ல் கூறிய பிரசங்கத்தின் அபிப்பிராயம்.

அபிப்பிராயம் இதுவாம்:—சமுசாரரூபதுக்கம் பொய்யாக இருக்கிறது ஆகையால் அதனை நிவர்த்திக்கச் சாதனங்களான வேதமும் குருவும் பொய்யாகவே யிருக்கவேண்டும். பொய்யை நாசஞ்செய்ய நிஜமான சாதனங்கள் வேண்டியதில்லை.

சத்தியசாதன முளதாயின் அதனால் மித்தை நாசமாகாது. மேற்காட்டிய உதாரணத்தில் அரசன் சமீபத்திற் பொய்யான நரி நிஜமான வாயில்காப்போரால் தடுக்கப்படாமல் வந்து கடித்து அரசனிடத்தில் அனேக நிஜமான ஆயுதங்க ளிருந்தபோதிலும் பொய்யானதடியால் அடிக்கப்பட்டு ஓடிவிட்டது. ராஜாவுக்குப் பொய்யான புண் உண்டாயிற்று. நிஜமான வைத்தியன் ஒருவனும் வரவில்லை. பொய்யான வைத்தியனிடத்திற் போய், அரசனுக்கு வெகு ஆஸ்தி யிருந்தும் ஒரு பைசாவு மில்லாமற்போனதால் மருந்து பெறக்கூடாமல், பொய்யான சந்நியாசியாற் கொடுக்கப்பட்ட பொய்யான மருந்தால் பொய்யான புண் ஆறிப்போய்விட்டது. ஒருவிதமான சத்திய சாதனமும் அரசனுடைய துக்க நிவிருத்திக்கு உபயோகப்படவில்லை. இவ்விதமான சொப்பனம் எல்லோருக்கும் அநுபவசித்தமா யிருக்கிறது. ஜாக்கிர பதார்த்தங்கள் எப்போதும் எவனுக்கும் சொப்பனத்தி லுபயோகப்படுகிறதில்லை. இது போலப் பொய்யான சமுசாரதுக்கம் பொய்யான வேதம் குரு என்பவற்றால் நாசமடைகிறது. சத்தியமான வேதத்தையும் குருவையும் அபேக்ஷிக்கிறதில்லை.

## 231. கானற்சலத்திலும் தாகத்திலுமுள்ள சத்தையின் பேதம்.

"மித்தையான கானல் ஜலத்தினால் தாகசாந்தி யாகாததுபோல் மித்தையான வேதத்தினாலும் குருவினாலும் சமுசாரதுக்கம் நாசமாகிறதில்லை. அப்படி நிவிருத்தியாகுமென்று சொல்லும்பக்ஷத்தில் கானல் ஜலத்தினாலும் தாகசாந்தி யாகவேண்டும்." என்று சிஷ்யன் சங்கித்திருந்தான்.

### அதற்குச் சமாதானம்.

பொய்யான கானல் ஜலம் யாருக்கும் தாகசாந்தி செய்ததில்லை. பொய்யான வேதத்தினாலும் குருவினாலும் சம்சாரதுக்கம் நிவிருத்தியாவதுபோல் தாகமும் கானல் ஜலத்தால் நிவிருத்தியாகவேண்டும். ஆனால் தாகம் நிவிருத்தியாகிறதில்லை. என்றாலும் உன் திருஷ்டாந்தம் விஷமமாம். அங்ஙனமே மித்தையாகிய குருவேதங்களால் சம்ஸார நிவிருத்தி பொருந்தாது. ஏனெனின், கானல் ஜலத்திலும் தாகத்திலும் ஸத்தை பேதப்படுகிறது. அதைப் பார்.

## 232. சமசத்தைகள் தம்மிற் சாதகபாதகமாதல்.

சமுசாரதுக்கமும் குருவேதங்களும் ஒரே ஸத்தையாக இருக்கின்றன. ஆகையால் குருவேதங்களால் சமுசாரதுக்கம் நிவிருத்தியாகும்.

எந்தப் பதார்த்தங்களுக்குத் தம்மிற் * சமஸத்தையுண்டோ அவற்றிற்குத் தம்மில் சாதகபாதகமுண்டாம்.

எங்ஙனம்:—1. மண்ணிற்கும் கடத்துக்கும் ஸமஸத்தையிருக்கிறது. ஆதலால் மண் கடத்துக்குச் சாதகமாம்.

---

* இதில் இது சங்கை:—சமஸத்தையுள்ள பதார்த்தங்களே தம்மிற் சாதக பாதகங்களாமென்னும் நியமம் பொருந்தாது. விஷமஸத்தையுள்ள பதார்த்தங்களும் சில இடங்களில் சாதகபாதகங்களாம். ஏனெனின்,

1. எங்கும் அதிஷ்டானத்தினும் ஆரோபத்தின் சத்தை விஷமமாம். ஆரோபத்துக்கு அதிஷ்டானம் சாதகமாயிருக்கிறது. கற்பித வெள்ளிக்கு அதிஷ்டானம் கிளிஞ்சலாம். அதற்கு வியாவஹாரிக ஸத்தையுளது. வெள்ளிக்குப் பிராதிபாஸிக ஸத்தையுளது. அப்பிராதிபாஸிக சத்தையுடைய வெள்ளிக்குச்சாதகத்தன்மை (காரணத்தன்மை) கிளிஞ்சிலி லிருக்கின்றது.

2. அல்லது ஜகத்துக்கு அதிஷ்டானம் பிரஹ்மமாம். பிரஹ்மத்திற்குப் பாரமார்த்திக ஸத்தையுண்டு. ஜகத்திற்கு வியாவகாரிசஸத்தையுண்டு. அந்த வியாவகாரிகசத்தையுடைய ஜகத்தின் சாதகத்தன்மை பிரஹ்மத்தி லிருக்கிறது. ஆகையால் விஷமஸத்தையுடையதும் சாதகமாகிறது.

3. அந்தக்கரணத்தின் விருத்திவடிவ கிளிஞ்சிலின் யதார்த்தஞானத்தால் வெள்ளியும் வெள்ளியின் ஞானமும் பாதிக்கப்படுகின்றன. அங்கு வெள்ளியின் ஞானமும் வெள்ளியும் பிராதிபாஸிகத்தை யுடையனவாம். கிளிஞ்சிலின் ஞானம் வியாவகாரிக ஸத்தை யுடையதாம். ஆதலால் விஷமஸத்தை பாதகமாயிருக்கிறது. ஆகையால் விஷமஸத்தையுள்ள பதார்த்தங்கள் தம்மிற் சாதகபாதகங்களாகாவென்னும் நியமம் அசங்கதமா மென்பதற்குச் சமாதானம் இதுவாம்:—

கேவலம் (வெறும்) கிளிஞ்சிலாவது பிரஹ்மமாவது கிரமமாக, வெள்ளி அல்லது ஜகத்தின் கற்பனைக்கு அதிஷ்டான (விவர்த்தோபாதானகாரண) மாகா. ஆனால் தூலாவித்தையுடன்கூடிய கிளிஞ்சிலானது வெள்ளிக்கும் மூலாவித்தையுடன்கூடிய பிரஹ்மசேதனம் ஜகத்துக்கும் அதிஷ்டானங்களாம். சில இடங்களில் விசேஷணத்தின் தர்மங்கள் விசிஷ்டத்தில் வியவகரிக்கப்படுகின்றன. இந்த நியமத்தால் பிராதிபாஸிக் தூலாவித்தையுடன் கூடிய சுக்தி (கிளிஞ்சில்) அல்லது சுக்தி யவச்சின்னசேதனம் பிராதிபாஸிக மெனப்படுகிறது. வியாவகாரிக மூலாவித்தை யவச்சின்ன பிரஹ்மசேதனமும் வியாவகாரிக மெனப்படுகிறது.

இங்கு அவித்தை உபாதியாம்; விசேஷணமன்று. என்றாலும் அவிவேகிகளுடைய திருஷ்டிக்கு விசேஷணம்போலக் காணப்படுவதால் விசேஷணமெனப்படுகிறது. இதனாற்றான் அவ்வவித்தையின் தர்மங்களாகிய பிராதிபாஸிகத்தன்மை வியாவகாரிகத் தன்மைகளும் தமது விசேஷிய (ஆசிரிய) மான கிளிஞ்சிலிலும் பிரஹ்மத்திலும் வியவகரிக்கப்படுகின்றன. ஆதலால் இவ்விடத்தில் விஷமஸத்தையுடையன சாதகமாகா. ஆனால் சமஸத்தை யுடையனவே சாதகமாம்.

பஞ்சபாதிகாகாரர் முறைப்படி மூலாவித்தைக்கு வேறாகத் தூலாவித்தையில்லை. ஆகையால் அதன் நிவிருத்தி கிளிஞ்சில் ஞானத்தால் உண்டாகிறதில்லை; பிரஹ்மஞானத்தினால் உண்டாகிறது. ஆனால் வியாவகாரிக அந்தக்கரணத்தின் விருத்தியாகிய சுத்தியின் யதார்த்தஞானத்தால் சுத்தியிலுள்ள தூலாவித்தையின் நீக்கமுண்டாகிறது.

2. நெருப்புக்கும் கட்டைக்கும் சமஸத்தை யிருப்பதால் நெருப்பு கட்டைக்குப் பாதகமாம்.

1. சாதகமென்பது காரணம்.

2. பாதகமென்பது நாசஞ்செய்வது.

கானல்ஜலத்துக்கும் தாகத்துக்கும் சமஸத்தை யில்லாதபடியால் கானல் ஜலம் தாகத்தின் பாதகமன்று. அதாவது தாகத்தை நிவிருத்திக்கிறதில்லை. இந்த இடத்தில் இது இரகசியமாம்:—சேதனத்திற் பரமார்த்த ஸத்தை இருக்கிறது. சேதனத்துக்கு வேறாகிய மித்தையான பதார்த்தங்களில் வியாவஹாரிக ஸத்தையென்றும் பிராதிபாஸிக ஸத்தையென்றும் இருவித ஸத்தைகளுள.

## 233. 1. வியாவகாரிகசத்தை, 2. பிராதிபாஸிகசத்தை, 3. பாரமார்த்திகசத்தை 233-235.

எந்தப் பதார்த்தத்திற்குப் பிரஹ்மஞானமின்றிப் பாதகமுண்டாகிறதில்லையோ, ஆனால் பிரஹ்மஞானத்தினாலேயே பாதகமுண்டாகிறதோ அந்தப் பதார்த்தத்தில் வியவஹாரசத்தை சொல்லப்படுகிறது.

அந்த வியவஹாரஸத்தை ஈசுவரசிருஷ்டியி லிருக்கிறது. ஏனெனின், தேகம், இந்திரியம் முதலிய பிரபஞ்சமாகிய ஈசுவரசிருஷ்டி பிரஹ்மஞானமின்றிப் பாதிக்கப்படுகிறதில்லை. பிரஹ்மஞானத்தினாலேயே பாதமாகிறது.

---

அதனால் அதன் காரியங்களான வெள்ளியும் அதன் ஞானமும் நீங்குகின்றன. ஆகையால் விஷமஸத்தையுடையன பாதகமாகா.

இது பிரசங்காநுசாரியான சமாதானமாம்.

விசாரதிருஷ்டியினால் பார்க்குமிடத்து அதிஷ்டானவடிவ சாதகத்திலும் அதிஷ்டானத்தின் ஞானவடிவ பாதகத்திலும் சமானசத்தையின் நியமமில்லை. ஆனால்

1. அதிஷ்டானவடிவசாதகமோ விஷமசத்தை யுடையதேயாம்; சமசத்தை யுடையதன்று.

2. ஞானவடிவபாதகமோ சிலவிடத்து விஷமசத்தை யுடையதாகின்றது. அது சுத்திரஜதத்தின் பாதகம் சுத்திஞானமும், சொப்பனஜகத்தின் பாதகம் ஜாக்கிரத்தின் ஞானமுமாதல்போலாம்.

3. சிலவிடத்துச் சமசத்தை யுடையது மாகின்றது. அது வியாவகாரிக ஜகத்திற்குப் பாதகம் பிரஹ்மஞானமாதல்போலாம்.

4. மித்தியாஞானமே மித்தியாவஸ்துவிற்குப் பாதகமாம் என்பது நியமிக்கப்பட்டதாம்.

ஆதலால் இங்குச் சொல்லப்பட்ட நியமம் எதுவோ அது அதிஷ்டானவடிவ சாதகத்தையும் ஞானவடிவ பாதகத்தையும் விட்டு எஞ்சிநிற்கும் பதார்த்தங்களை விஷயஞ்செய்வதா யிருக்கிறது.

ஈசுவரசிருஷ்டியின் பதார்த்தங்கள் பிரஹ்மஞானமின்றி நாசமடைந்தாலும் பிரஹ்மஞானமின்றிப் பாதமாகிறதில்லை.

அபரோக்ஷ மித்தியாநிச்சயத்துக்குப் பாதமென்று பெயர்.

அவ்வபரோக்ஷ மித்தியாநிச்சயம் ஈசுவரசிருஷ்டி பதார்த்தங்களில் பிரஹ்மஞானத்துக்குமுன் ஒருவனுக்கு முண்டாகிறதில்லை. பிரஹ்மஞானத்துக்குப் பின்னரே யுண்டாகிறது. ஆதலால், மூலாவித்தையின் காரியமாகிய ஜாக்கிர பதார்த்தங்களாகிய ஈசுவரசிருஷ்டியில் வியவகாரஸத்தை இருக்கிறது.

ஜன்மம், மரணம், பந்தம், மோக்ஷம் முதலிய வியவகாரங்களைச் சித்திக்கச் செய்வதாகிய சத்தை வியாவகாரிகஸத்தை யெனப்படும்.

**231.** 2. பிரஹ்மஞானமின்றியே எவற்றின் பாதமுண்டாகிறதோ, அப்பதார்த்தங்களில் பிராதிபாஸஸத்தை சொல்லப்படுகிறது. எங்ஙனம்: பிரஹ்மஞானமின்றியே கிளிஞ்சில், கயிறு, கானல் முதலியவற்றின் ஞானத்தினால் முறையே வெள்ளி, சர்ப்பம், ஜலம் முதலியவை பாதிக்கப்படுகின்றன. அவற்றில் பிராதிபாஸஸத்தை யிருக்கிறது.

பிரதீதிமாத்திர இருப்பு பிராதிபாஸஸத்தை யெனப்படும்.

* தூலாவித்தையின் காரியமான வெள்ளி முதலியவற்றிற்குப் பிரதீதிமாத்திர இருப்புளது. ஆதலால் அவற்றிற்குப் பிராதிபாஸஸத்தை யுளது.

---

* கடாதி ஜடபதார்த்த வுபகித சேதனத்தை யாச்சாதனஞ்செய்வ (மறைப்ப)தாகிய அவித்தை தூலாவித்தை யெனப்படும். இதனையே அவஸ்தாஞ்ஞான மென்றும் ஸாதி (உற்பத்தியுடைமைத்) தோஷமுடைய அவித்தை யென்றும் கூறுவர்.

அந்தத் தூலாவித்தை அம்சபேதத்தால் நாநாவாய்ப் பின்ன பின்ன பதார்த்தங்களை ஆவரணஞ் செய்கிறது. எந்தக் கடாதி பதார்த்தாகார அந்தக்கரணத்தின் விருத்தி யுண்டாகின்றதோ, அந்தப் பதார்த்தத்தை மறைக்கும் தூலாவித்தையின் அம்சம் நஷ்டமாகின்றது. மீண்டும் எப்போது விருத்தி வேறிடத்திற் செல்லுகின்றதோ, அப்போது ஆண்டு வேறு அவித்தையாம்சம் உற்பத்தியாகின்றது. இந்தத் தூலாவித்தை நசிக்கும் பொருட்டு பிரஹ்மஞானம் வேண்டியதில்லை; ஆனால் அது பிராதிபாஸிக சத்தையுடையதாயிருத்தலின் கடாதிகளின் ஞானத்தினாலேயே அதன் நாசமுண்டாகின்றது.

பஞ்சபாதிகையின் கர்த்தா பத்மபாதாசாரியர் மூலாவித்தையே தூலாவித்தையாம் அதனினும் வேறன்று என்று கொள்ளுகின்றனர். இவர்கள் மதத்தில் எங்ஙனம் ஜனக்கூட்டத்தின் மத்தியில் மின்னல் விழுந்தால் அப்போது எல்லோரும் விலகி மறுபடியும் சேர்ந்துகொள்ளுகிறார்களோ, அங்ஙனமே எப்பதார்த்தாகாரமாக அந்தக்கரணத்தின் விருத்தி யுண்டாகிறதோ, அப்பதார்த்தாகார அவித்தை அங்கிருந்தும் மறைபட்டு, மீண்டும் அந்த விருத்தி வேறிடத்துச் செல்லும்போது அங்குப் பரவுகின்றது. ஆனால் பிரஹ்மஞானமின்றி அதற்கு நாசமுண்டாகிறதில்லை. சொப்பனத்திற்கும் அங்ஙனமே கற்பிதசர்ப்ப முதலியவற்றிற்கும் அவித்தையின் நாசமின்றியும் விரோதி பதார்த்தங்களின் ஞானத்தினாலேனும் அவித்தையின் திரோதானத்தினாலேனும் அவித்தையில் இலயவடிவாநாசம் அல்லது திரோதான முண்டாகின்றது.

இது பிரசங்கத்தால் தூலாவித்தையின் வர்ணனம் செய்யப்பட்டது.

**235.** 3. எது முக்காலங்களினும் பாதிக்கப்படுகிறதில்லையோ, அது பரமார்த்தஸத்தை யெனப்படுகிறது. சேதனம் ஒருகாலும் பாதிக்கப்படுகிறதில்லை. ஆகையால் பரமார்த்தஸத்தை சேதனத்தினதாம்.

## 236. வேதகுருக்களுக்கும் சம்ஸார துக்கத்திற்கும் வியாவகாரிக சத்தையுண்டு. ஆதலால் அவற்றால் பவதுக்கத்தின் நாசம் பொருந்துமெனல்.

இவ்விதமாக வேதம் குரு சமுசாரதுக்கம் என்பவற்றிற்கு ஒரே வியாவகாரிக ஸத்தையிருத்தலால் அவற்றிற்குத் தம்மில் ஸமஸத்தை யிருக்கிறது. ஆதலால் * மித்தையான வேதம் குரு என்பவற்றால் மித்தையான சமுசார துக்கம் நிவிருத்தியாகக் கூடும்.

---

* மித்தையாகிய வேதத்தினாலும் குருவினாலும் மித்தையாகிய பவதுக்கத்தின் நாசம் சம்பவிக்கின்றது. இங்ஙனம் மதித்தலால் சித்தாந்தத்திற்கும் கேடில்லை.

அங்ஙனமாயினும்,

1. வேதகுருவடிவ இஷ்டத்தினை மித்தையென்று கூறுதல் அயோக்கியமாம்.

2. ஜகத்து சத்தியவாதிகளின் பரிகாசத்திற்கு விஷயமாம்.

3. ஜிஞ்ஞாசுக்களின் விபரீத சித்தனைக்கும் காரணமாம். ஆதலால் இவ்வார்த்தையின் கண்டனஞ்செய்து சித்தாந்தம் பங்கமாகாமலிருக்கும்படியான வேறுவித வார்த்தையின் நிரூபணத்தைச் செய்கின்றார்:—

வேதமும் குருவும் மித்தையென்று சொல்லுபவனைப்பார்த்து இது கேட்கின்றார்:-

1. சிஷ்யனது திருஷ்டியால் வேதகுரு மித்தையா?

2. அல்லது குருவின் திருஷ்டியால் மித்தையா?

1. சிஷ்யனது திருஷ்டியாலெனின் (1) அச்சிஷ்யன் ஞானியா? (2) அல்லது அஞ்ஞானியா?

(1) அச்சிஷ்யன் ஞானியெனின் அவனுக்கு சிஷ்யத்துவம் சம்பவியாது. உபதேசிப்பவராகிய குருவை முன்னிட்டு எல்லா ஞானிகட்கும் சிஷ்யத்துவம் உள்ளதாயினும் அவர்கட்கு அதிகாரம் உண்டாய் உபதேசித்தற்கு உரிய சிஷ்யத்துவமில்லை.

(2) அச்சிஷ்யன் அஞ்ஞானியெனின் அவனுக்கு மித்தையென்றறியவே வேதத்தினும் குருவினிடத்தும் சிரத்தையோடுகூடிய பிரவிருத்தி நிகழாமையால் போதத்தின் அடைவு அரிதாம். அல்லது அஞ்ஞானியாகிய புருஷனுக்கு வேதாந்த சிரவணத்திற்கு முன் ஜகத்தின் எப்பதார்த்தத்திலும் மித்தியாத்துவ புத்தி சம்பவிப்பதும் இல்லை.

ஆதலால் சிஷ்யனது திருஷ்டியால் வேதமும் குருவும் மித்தையாமென்று கூறுதல் பொருந்ாது.

2. குருவின் திருஷ்டியால் வேதகுரு மித்தையாமெனின், (1) குரு அஞ்ஞானியா? (2) அல்லது ஞானியா?

(1) அஞ்ஞானியெனின், அவனைக் குருவென்று கூறுதல் வேதத்தினும் விருத்தமாம். சில அஞ்ஞானி புருஷர்களும் ஜகத்தில் மூர்க்கனது திருஷ்டியால் குருவெனப்படுகின்றாரெனினும், வேதமுணர்ந்த வித்வான்களது திருஷ்டியினால் அவர்கள் குரு

பசிதாகங்கள் பிராணனது தர்மங்கள். பிராணனும் அதன் தர்மங்களும் பிரஹ்மஞானமின்றி நிவிருத்தியாகா. ஆதலால் தாகம் வியாவஹாரிகஸத்தை யுடையதாம். கானல்ஜலம் பிரஹ்மஞானமின்றியே அதன் ஞானத்தினல் பாதிக்கப்படுதலால் அது பிராதிபாஸிகத்தை யுடையதாம். ஆகையால் தாகத்துக்கும் கானல் ஜலத்துக்கும் ஸமஸத்தையில்லை. ஆதலால் கானல்ஜலத்தால் தாகசாந்தி யுண்டாகிறதில்லை.

1. இவ்விதமாகத் தார்ஷ்டாந்தத்தில் பாதிக்கும் வேத குருக்களுக்கும் பாதிக்கப்படுகிற சமுசாரதுக்கத்திற்கும் ஓரே ஸத்தை யிருக்கிறது.

2. திருஷ்டாந்தத்தில் ஜலத்துக்கும் தாகத்துக்கும் ஸத்தை பேதப்படுகிறது.

ஆகையால் திருஷ்டாந்தம் விஷமமாயிருக்கிறது அதாவது தார்ஷ்டாந்தத்துக்குச் சமமாயில்லை.

**237. சங்கை:—சுத்தி வெள்ளி முதலியன பிரஹ்மஞானமின்றியே பாதமாதலும் சம்ஸாரதுக்கம் பிரஹ்மஞானத்திற்குப் பின் பாதமாதலுமாகிய இந்தப் பேதத்தை எந்தக் காரணத்தினல் வைத்தீர்கள்? எனல்.**

ஸ்வாமி! பிரஹ்மத்துக்கு வேறுனவை யாவும் பொய்யென்று முன் சொன்னீர்கள். இந்தப் பொய்யான பதார்த்தங்களில்,

1. சுக்தியில் வெள்ளி ரஜ்ஜுவில் சர்ப்பம் கானலில் ஜலம் முதலியவை பிரஹ்மஞானமின்றிப் பாதமாதலும்,

---

சப்தத்திற்கு விஷய (வாச்சிய) மாகார் என்னும் வார்த்தை மூன்றுவது தரங்கத்தில் ஸ்பஷ்டமாய் நிருபணஞ் செய்யப்பட்டிருக்கிறது. ஆதலால் அவ்வஞ்ஞானியின் திருஷ்டியினுலோ வேதகுரு மித்தையாமென்று கூறுதல் பொருந்தாது. ஆனல் வேதகுருக்களோடு சகல சகத்தும் சத்தியமாமென்று கூறுதல் பொருந்தும்.

(2) குரு ஞானியெனின், [1] அந்த ஞானிக்கு வேதகுருக்களோடு சகல ஜகத்தும் பிரஹ்மத்திற்கு வேறுகத் தோற்றுகின்றனவா? [2] அல்லது அபின்னமாய்த் தோற்றுகின்றனவா?

[1] முதற்பக்ஷத்தைக் கூறின் அந்தப் பேதவாதியினை ஞானியென்றுவது குருவென்றுவது கூறுதல் பொருத்தமுடையதன்று.

[2] இரண்டாவது பக்ஷத்தைக் கூறின் சகலசகத்தையும் தன்னையும் பரமார்த்த சத்தைமயமான பிரஹ்மவடிவமாக அறியும் அத்வைதவாதியாகிய குருவின் திருஷ்டியினுல் வேதமும் குருவும் மித்தையென்று கூறுதல் பொருந்தாது.

ஆதலால் வேதமும் குருவும் மித்தையென்னும் வார்த்தை அறிவில்லாதவனது மன்று; அறிவுடையவனதுமன்று. ஆனல் குறைக் கொள்ளிக்கட்டையினைப்போல வேதாந்த சிரவண மனனஞ் செய்பவர்களாகிய பாதியுணர்ச்சியுள்ள புருஷர்களதாம்; அல்லது வெளி வியவகாரத்திற் பொருந்தியுள்ள புறநாட்டமுடைய ஞானிகளதாம்.

இவ்வாற்றல் வேதமும் குருவும் சத்தியமென்றுகூறுதல் யுக்தியோடு கூடியதாம்.

2. சமுசாரதுக்கம் பிரஹ்மஞானத்திற்குப் பின் பாதமாதலுமாகிய இப்பேதம் எக்காரணத்தால் வைக்கப்பட்டது.

ஞானத்தினுல் பாதிக்கப்படுமென்றும் சொன்னதற்குக் காரணம் யாது? இப்போது என் மனதில் இச் சந்தேகம் உதயமாயிருக்கிறது. இதனைத் தாம் நிவர்த்திக்கவேண்டும்.

## 238. உத்தரம்:—எதன் அஞ்ஞானத்தினுல் எது உற்பத்தியாகிறதோ, அதற்கு அதன் ஞானத்தால் பாதமுண்டாகிறதெனல்.

சிஷ்யனே! பிரஹ்மத்துக்கு வேறுனதெல்லாம் அவித்தியாகாரியம். யாவும் மித்தை; இதில் சிறிதும் சத்தியமில்லை. ஆனுல் எதன் அஞ்ஞானத்தினுல் எது உண்டாகிறதோ அதன் ஞானத்தினுல் அது பாதிக்கப்படுகிறது.

1. கிளிஞ்சில் ரஜ்ஜு கானல் முதலியவற்றை யறியாததினுல் வெள்ளி சர்ப்பம் ஜலம் முதலியவைக ளுண்டாகின்றன. கிளிஞ்சில் முதலியவற்றை யறிவதனுல் வெள்ளிமுதலியன பாதிக்கப்படுகின்றன.

2. பிரஹ்மத்தை யறியாததினு லுண்டாகிற ஜனனமரணுதி சமுசார துக்கம் பிரஹ்மத்தை யறிவதனுல் பாதிக்கப்படுகிறது.

## 239. பிரசினம்:—பிரஹ்மத்தின் அஞ்ஞானத்தினுல் சம்ஸாரம் எந்தக் கிரமத்தால் உற்பத்தியாகின்றது எனல்.

சிஷ்யன்:—ஸ்வாமி! பிரஹ்மத்தை யறியாததினுலுண்டாகிற சமுசாரம் எந்தக் கிரமத்தா லுண்டாகிறது? இதனை யெனக்கு நிச்சயமாய்ச் சொல்ல வேண்டும்.

ஸ்ரீ

## முற்கூறிய பிரசினத்தின் உத்தரம் 240-271.

## 240. சொப்பன சமானமாகக் கிரமமின்றி ஜகம் தோற்றுதல்.

ஸ்வப்பனம் கிரமமின்றியு முண்டாகின்றது. அதுபோலப் பிரமமாகப் பொய்யான ஜகத்து விளங்குகிறது. இதன் கிரமத்தையறிய இச்சிக்கிறவன் கானல்ஜலத்தில் வஸ்திரத்தை நனைக்க இச்சிக்கக் கூடும். உபநிஷத்துகளில் ஜகத்துற்பத்தி யனேகப்பிரகாரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

1. சாந்தோக்கிய வுபநிஷத்தில் சத்ரூபப் பிரஹ்மத்தினின்றும் அக்கினி ஜலம் பிருதிவி என்பவைகள் கிரமமாக உண்டானதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. தைத்திரீய வுபநிஷத்தில் ஆகாசம் வாயு அக்கினி ஜலம் பிருதிவி என்னும் ஐந்து பூதங்களும் கிரமமாக உண்டானதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

2. சிலவிடங்களில் எல்லாவற்றையும் பரமேசுவரன் உண்டுபண்ணுகிறுனென்று கிரமமின்றியு முற்பத்தி சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்விதமாக ஜகத்துற்பத்தி வேதத்தில் பலவிதமாகச் சொல்லப்பட்டிருத்தற்குத் தாற்பரிய மிதுவாம்:—ஜகத்து பொய். அது ஒரு பதார்த்தமாயிருக்கும்பக்ஷத்தில் அதனுற்பத்தியை யநேகவிதமாக வேதஞ் சொல்லியிருக்கமாட்டாது. அநேகப் பிரகாரமாய்ச் சொல்லியிருக்கிறபடியால் உற்பத்திக் கிரமத்தைச் சொல்வதில் வேதத்துக்கு அபிப்பிராயமில்லை. ஆனால் அத்வைதப் பிரஹ்மத்தை யறிவிப்பதற்காக ஜகத்தை நிஷேதிக்கப் பொய்யான ஜகத்தை ஓர்விதமாக ஆரோபஞ் செய்திருக்கிறது.

திருஷ்டாந்தம்:—மாயானை ஒன்று மேல் எழும்புவதற்காக விநோதார்த்தமாய்ச் செய்யப்படுகிறது. அதன் காதும் வாலும் கோணுமானால் அதைச் சரிப்படுத்த ஒருவரும் பிரயத்தனப்படுகிறதில்லை. அதுபோல அத்வைத ஞானத்தின்பொருட்டுப் பிரபஞ்சத்தை நிஷேதிப்பதற்காகப் பிரபஞ்சம் ஆரோபிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் பிரபஞ்சத்தி னுற்பத்திக் கிரமத்தை ஓரேவிதமாகச் சொல்ல வேதம் யத்தனஞ் செய்யவில்லை. பிரபஞ்சத்தின் உற்பத்தியை ஒரேவிதமாக வேதஞ் சொல்லாமையால், வேதத்தின் அபிப்பிராயம் பிரபஞ்சத்தை நிஷேதிப்பதிலாம், அதன் உற்பத்தியில் இல்லையென் றறிய வேண்டியது.

## 241. சூத்திரகார பாஷியகாரர்கள் சுருதிவசனத்தால் ஜகத்துற்பத்தியைக் கூறுதலின் அபிப்பிராயம்.

1. * சூத்திரகாரரும் பாஷியகாரரும் 2-வது அத்தியாயத்தில் உற்பத்தியைச் சொல்லுஞ் சுருதி வசனங்களின் விரோதங்களை யொழித்து ஒரேவிதமாகத் தைத்திரீய சுருதியின் அநுசாரமாகச் சொல்லப்பட்ட உற்பத்திக் கிரமமே எல்லா வுபநிஷத்துகளின் கருத்தென்று சொல்லியிருக்கிறார்கள். அது மந்த ஜிஞ்ஞாசுவை உத்தேசித்துக் கூறியதாம். உற்பத்தி வாக்கியங்களுக்கு முன் சொல்லிய அபிப்பிராயத்தை யறியாத மந்த ஜிஞ்ஞாசுவுக்கு உபநிஷத்துகளில் நாநாவிதமான ஜகத்தின் உற்பத்தியைப் பார்த்து உபநிஷதங்களுக்குத் தம்மில் விரோதமிருக்கின்றது என்னும் பிராந்தி யுண்டாய்விடும். அதனை நிவிருத்திசெய்வதற்காக எல்லா வுபநிஷத்துகளிலும் ஒரேவிதமாக ஜகத்துற்பத்தி பிரதிபாதிக்கப்பட்டதாகச் சொல்லியிருக்கிறார்கள்.

2. பிரஹ்மவிசாரத்தால் யதார்த்தஞான முண்டாகாதவனுக்கு லயசிந்தனையின்பொருட்டும் உற்பத்திக்கிரமம் சொல்லப்பட்டிருக்கிறது. எந்தக் கிரமத்தினு லுற்பத்தி சொல்லப்படுகிறதோ அதற்கு விபரீதக் கிரமத்தினால் லயசிந்தனை செய்யவேண்டும். அந்த லயசிந்தனையால் அத்வைதப் பிரஹ்மத்தில் புத்தி ஸ்திரப்படுகிறது. அந்த லயசிந்தனைப்பிரகாரம் பஞ்சீகரணக் கிரந்தத்தில் வார்த்திககாரரான சுரேஸ்வராசாரியரால் சொல்லப்பட்டிருக்கிறது.

---

* சூத்திரம் பிரஹ்மசூத்திரமென்றும், பாஷியகாரர் ஸ்ரீசங்கராசாரியரென்றும் அறியத்தக்கது. இரண்டாவது அத்தியாயம் பிரஹ்மசூத்திரத்தினது.

3. இந்தக் கிரந்தம் * உத்தமஜிஞ்ஞாசுவின் பொருட்டா யிருத்தலால் ஜகத்தின் உற்பத்திலயங்களின் கிரமம் சொல்லப்படவில்லை; ஆயினும் இந்நூல் சாரவடிவமா யிருத்தலால் அதனைச் சுருக்கமாய்ச் சொல்லுவாம்.

சுத்தப் பிரஹ்மத்தினின்றும் ஜகத்துற்பத்தியாகிறதில்லை. ஏனெனின் சுத்தப்பிரஹ்மம் அசங்கமாயும் கிரியையற்றதாயு மிருக்கிறது. † ஆனால் மாயாவிசிஷ்ட ஈசுவரனிடத்தினின்றும் ஜகத்துற்பத்தியாகிறது. ஆகையால் மாயை ஈசுவரர்களின் சொரூபங்களைப் பிரதிபாதிப்பாம்.

## 242. பிரசங்கத்தால் மாயாசொரூபத்தைப் பிரதிபாதித்தல்.

ஜீவேசுவர பேதங்களில்லாத சுத்தசேதனத்தை யாசிரயித்துக்கொண் டிருப்பது மாயை. அது அநாதி அதாவது உற்பத்தியற்றது.

1. ஆதி என்பது உற்பத்திக்காம். மாயையினுற்பத்தியை யங்கீகரிக்கும் பக்ஷத்தில் புத்திரனிடத்தினின்றும் பிதாவினுற்பத்தி சொல்லத்தகாதது போல் மாயாகாரியமான பிரபஞ்சத்தினின்றும் மாயையினுற்பத்தி சொல்லத் தகாததாம். ஆகையால் சேதனத்தினின்றே மாயையின் யுற்பத்தி யங்கீகரிக்க வரும். அங்கு,

2. ஜீவேசுவரத்தன்மைகள் மாயையின் காரியங்களாம். மாயை சித்தித்தா லன்றி ஜீவேசுவரர்களது சொரூபம் சித்தியாது. ஆதலால் ஜீவசேதனத்தி லிருந்தாவது ஈசுவரசேதனத்தி லிருந்தாவது மாயை யுற்பத்தியாவதாகச் சொல்லுதல் கூடாது.

3. சுத்தசேதனம் அஸங்கமாயும் கிரியாரகிதமாயும் நிர்விகாரமாயு மிருத்தலால் அதனினின்றும் மாயை யுற்பத்தியாகிறதாகக் கொள்ளின் அது விகாரியாய்விடும். அன்றியும் சுத்தசேதனத்தினின்று மாயை யுண்டாகும் மாயின், மோக்ஷதசையில் மாயை மறுபடியும் உண்டாகும். அதனால் மோக்ஷ

---

* திருஷ்டி சிருஷ்டிவாதத்தின்படி பிரஹ்மத்தில் பிரபஞ்சத்தை யாரோபித்துப் பின் அதன் அபவாதபூர்வகமாக ஐந்தாவது பூமியில் ஆரூடமாகத்தக்க உத்தம சம்ஸ்கார முடைய ஜிஞ்ஞாசு இங்கு உத்தமஜிஞ்ஞாசு எனப்படுகின்றான்.

† ஜகத்தின் விவர்த்த உபாதானவடிவ அதிஷ்டானம் மாயாவுபகித சேதனமாம்; மாயாவிசிஷ்ட சேதனமன்று. அங்ஙனமாயினும் மாயாவிசிஷ்டனை விவர்த்தவுபாதான மென்று கூறி அதனின்று ஜகத்தின் உற்பத்தியைக் கூறுகின்றார். அது அவிவேகி புருஷர்களது திருஷ்டியை யநுசரித்திருக்கிறது.

1. விவேகி புருஷர்களது திருஷ்டியினாலோ ஜகத்தின் பரிணாமியுபாதானத் தன்மை விவர்த்தவுபாதானத்தன்மைகள் மாயாவிசிஷ்ட சேதனத்திலில்லை. ஆனால்,

(1) ஜகத்தின் பரிணாமியுபாதானத்தன்மை கேவல மாயையி லிருக்கின்றது.

(2) விவர்த்தோபாதானத்தன்மை மாயாவுபகித சேதனத்தி லிருக்கின்றது.

2. அவிவேகிகளுக்கு இரண்டு தர்மங்களும் மாயாவிசிஷ்ட சேதனத்தில் பிராந்தி யினால் தோற்றுகின்றன. ஆதலால் சாஸ்திர கர்த்தாக்கள் அவிவேகிகளது திருஷ்டியின் அநுவாதமாத்திரம் செய்திருக்கிறார்கள்.

த்தின் பொருட்டாயுள்ள சாதனங்கள் பயனற்றனவாம். இவ்விதத்தால் மாயை,

1. உற்பத்தியில்லாததா யிருத்தலால் அநாதியாம்.

2. ஏகமாம்.

3. ஞானத்தால் அந்த (நாச) மடைவதா யிருத்தலால் ஸாந்தமாம்.

4. சதசத்துக்கு விலக்ஷணமாயிருக்கிறது.

(1) முக்காலத்திலும் பாதிக்கப்படாதது சத்தெனப்படும். அத்தன்மை யது சேதனமாம்.

(2) மாயை ஞானத்தால் பாதிக்கப்படுவதால் சத்தின் விலக்ஷணமாம்.

(3) முக்காலத்திலும் விளங்காதது அசத்து. அது முயற்கொம்பு மலடிமகன் ஆகாசபுஷ்பம் முதலியனவாம்.

(4) ஞானத்திற்குமுன் மாயையும் அதன் காரியமும் பிரதீதியாகின்றன.

[1] ஜாக்கிரகாலத்தில் "நான் அஞ்ஞானி" "பிரஹ்மத்தை யறியவில்லை" என்று மாயை விளங்குகிறது.

[2] சொப்பனத்தில் தோன்றும் பலவித பதார்த்தங்களின் உபாதான காரணம் மாயையாம்.

[3] சுழுத்திக்குப் பிறகு "நான் சுகமாய்த் தூங்கினேன், ஒன்றுமறியவில்லை" என்று நினைவு வருகிறது. அந்நினைவு அறியப்படாத வஸ்துவினதாகாது. ஆகையால் சுழுத்தியில் அஞ்ஞானத்தின் விளக்கமுண்டாகிறது. அந்த அஞ்ஞானமும் மாயையு மொன்றே. அவற்றிற்குப் பேதமில்லை.

இவ்விதத்தால் மூன்று அவஸ்தைகளிலும் மாயை விளங்குவதால் அது அசத்தின் விலக்ஷணமாம். இவ்வாறு சதசத்துக்கு விலக்ஷணமான மாயையின் காரியமும் சதசத்துக்கு விலக்ஷணமாம். சதசத்துக்கு விலக்ஷணமானதையே அத்வைதமதத்தில் மித்தையென்றும் அநிர்வசநீயமென்றும் கூறுவர்.

ஆதலால் மாயையினாலும் அதன் காரியத்தினாலும் துவைதம் சித்திக்கிறதில்லை. ஏனெனின் சேதனம் ஸத்ரூபமா யிருப்பதுபோல் மாயையும் அதன் காரியமும் ஸத்ரூபமாயிருந்தால் துவைதம் சித்திக்கும். மாயையும் அதன் காரியமும் சதசத்துக்கு விலக்ஷணமாயிருத்தலால் மித்தையாம். மித்தியா பதார்த்தத்தினால் துவைதம் உண்டாகாது; சொப்பனத்தின் மித்தியா பதார்த்தத்தினால் துவைதம் உண்டாகாததுபோல.

## 243. அஞ்ஞானத்திற்குத் தான் ஆசிரயமாதலும் தான் விஷயமாதலும்.

1. ஜீவேசுவரப் பிரிவின்றிய சுத்தப் பிரஹ்மத்தை யாசிரயித்துள்ளது மாயை.

2. சுத்தப் பிரஹ்மத்தையே மறைக்கிறது.

அது வீட்டை யாசிரயித்த இருள் வீட்டையே மறைப்பதுபோலும்.

இதனை ஸ்வாசிரய ஸ்வவிஷயபக்ஷமென்று கூறுவர். 1. ஸ்வ (தான்) என்பது சுத்தப் பிரஹ்மம்; அதுவே ஆசிரய (இட) மாயிருத்தல் ஸ்வாசிரயம். 2. ஸ்வ என்பது சுத்தப்பிரஹ்மம். அது விஷயமாகுதல் அதாவது மாயையால் மறைக்கப்படுதல் ஸ்வவிஷயமாம். ஸம்க்ஷேபசாரீரகம், விவரணம், வேதாந்தமுக்தாவலி, அத்வைதசித்தி, அத்வைததீபிகை முதலிய கிரந்தங்களில் அஞ்ஞானம் ஸ்வாசிரய ஸ்வவிஷயமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

## 244. முற்கூறிய அர்த்தத்தில் வாசஸ்பதியின் மதம்.

வாசஸ்பதியின் மதம் இதுவாம்:—1. அஞ்ஞானம் ஜீவனை யாசிரயித்தது. 2. பிரஹ்மத்தை விஷயஞ்செய்கிறது.

1. "நான் அஞ்ஞானி; பிரஹ்மத்தை யறியேன்" என்னும் ஞானத்தால் "நான்" என்னும் சொல்லின் பொருள் ஜீவன். அஞ்ஞானியென்று சொல்வதினால் அஞ்ஞானத்தின் ஆசிரயம் ஜீவனென்று விளங்குகிறது.

2. "பிரஹ்மத்தை யறியேன்" என்று சொல்வதினால் அஞ்ஞானத்துக்கு விஷயம் பிரஹ்மமென்று விளங்குகிறது.

இவ்விதத்தால் அஞ்ஞானம் ஜீவனை யாசிரயித்துப் பிரஹ்மத்தை விஷயமாக்குகிறது அதாவது மறைக்கிறது.

அந்த அஞ்ஞானம் ஒன்றல்ல; அனேகமாம். ஏனெனின்,

1. அஞ்ஞான மொன்றெனக் கொள்ளின் ஒருவனுடைய அஞ்ஞானம் ஞானத்தினால் நிவிருத்தியாக மற்றவர்களுக்கு அஞ்ஞானமும் அதன் காரியமான சமுசாரமும் விளங்கலாகாது.

2. இதுவரையினும் ஒருவருக்கும் ஞானமுண்டாகவில்லையென்று கூறின், இனிமேல் ஒருவருக்கும் ஞானமுண்டாகாது. அதனால் சிரவணாதி சாதனங்கள் பிரயோசன மில்லாமற்போம். ஆதலால் அனந்த ஜீவர்களை யாசிரயித்த அஞ்ஞானமும் அநந்தமாம். அநந்த ஜீவர்களுடைய அநந்த அஞ்ஞானத்தினால் கற்பிக்கப்பட்ட ஈசுவரனும் பிரஹ்மாண்டமும் அநந்தமாம். எந்த ஜீவனுக்கு ஞானமுண்டாகிறதோ அவன் அஞ்ஞானம் ஈசுவரன் பிரஹ்மாண்டம் என்பன நிவிருத்தியாகின்றன. எவனுக்கு ஞானமுண்டாகவில்லையோ அவனுக்குப் பந்தமிருக்கிறது. இது வாசஸ்பதிமதம். அது நலமுடையதன்று. ஏனெனின்,

## 245. வாசஸ்பதியின் மதத்தின் நலமின்மையும் அஞ்ஞானத்தின் ஏகத்துவமும்.

1. "ஈசுவரன் ஜீவனுடைய அஞ்ஞானத்தினால் கற்பிக்கப்பட்டவன்" என்று சொல்லுதல் சுருதி ஸ்மிருதி புராணங்களுக்கு விருத்தமாம்.

2. "ஈசுவரன் அநந்தம்; ஜீவர்கள்தோறும் சிருஷ்டி பேதமாம்" என்பதும் விருத்தமாம்.

ஆதலால் அஞ்ஞானம் அநேகமென்று கொள்வது அஸங்கதமாம்.

அஞ்ஞானத்தை யநேகமெனக்கொண்டு ஈசுவரனையும் சிருஷ்டியையும் ஒன்றெனக்கொண்டாலும் பொருந்தாது. ஏனெனின் ஜீவேசுவரப் பிரபஞ்சங்கள் அஞ்ஞான கற்பிதமாம். அஞ்ஞானம் அநந்தமெனக் கொள்ளுதலால் ஒவ்வொரு அஞ்ஞானத்திலும் கற்பிதமாகிற ஜீவனைப்போல் ஈசுவரனும் பிரபஞ்சமும் அநந்தமாகும். இதனாற்றான் வாசஸ்பதியானவர் அநந்த ஈசுவரனையும் அநந்த சிருஷ்டியையும் சொல்லியிருக்கிறார். ஆதலால் "அஞ்ஞானமோன்" றெனும் மதமே நலமுடையதாம்.

## 246. சுவாசிரய சுவவிஷயபக்ஷத்தின் அங்கீகாரம்.

அந்த * ஒரே அஞ்ஞானமும் ஜீவனை யாசிரயிக்காமல் சுத்தப் பிரஹ்மத்தை யாசிரயித்திருக்கிறது. ஏனெனின்,

1. ஜீவபாவம் அஞ்ஞானத்தின் காரியமாம். அந்த அஞ்ஞானம் எப்போதும் சுதந்தரமா யிருக்கிறதில்லை. ஆகையால் ஆசிரயமில்லாத அஞ்ஞானத்தினலோ ஜீவபாவம் பொருந்தாது. முதலில் அஞ்ஞானம் எதனையாவது ஆசிரயித்ததாகுமாயின் அப்போது அதன் காரியமான ஜீவபாவம் சித்திக்கும்.

2. ஜீவத்தன்மையைப்போல ஈசுவரத்தன்மையும் அஞ்ஞான காரியமாம். அஞ்ஞானம் ஈசுவரனை ஆசிரயித்திருக்கவில்லை.

ஆனல் இந்த அநாதி அஞ்ஞானம் சுத்தப்பிரஹ்மத்தை யாசிரயித்திருக்கிறது.

அநாதிசேதன அஞ்ஞானங்களின் சம்பந்தமு மநாதியே. சேதன அஞ்ஞானங்களின் அநாதி சம்பந்தத்தா லுண்டாகும் ஜீவேசுவர பாவங்களும் அநாதியே. ஆனல் ஜீவேசுவரபாவங்கள் அஞ்ஞானத்தின் அதீனமாம். அதனல் அஞ்ஞானத்தின் காரிய மெனப்படுகின்றன.

"நான் அஞ்ஞானி" என்றிவ்வாறு ஜீவனை யாசிரயித்ததாக அஞ்ஞானம் விளங்கினலும் சுத்தப்பிரஹ்மத்தை யாசிரயித்திருக்கும் அஞ்ஞானத்தின் அபிமானம் ஜீவனுக்கு நான் அஞ்ஞானியென்று உண்டாகிறது.

1. ஜீவன் அஞ்ஞான காரியமாயிருத்தலால் ஜீவன் அஞ்ஞானத்திற்கு அதிஷ்டானரூப ஆசிரயமாதல் பொருந்தாது. ஆனல் சுத்தப்பிரஹ்மமே அஞ்ஞானத்தின் அதிஷ்டானரூப ஆசிரயமாம்.

---

* இதன் அபிப்பிராயம் இதுவாம்:—அம்சிவடிவ இருள் ஒன்றாயினும் அதன் அம்சவடிவ நானா இருள் வீடுகள்தோறு மிருக்கின்றது. எந்த வீட்டில் தீபமிருக்கிறதோ, அந்த வீட்டின் அம்சவடிவ இருள் நாசமாகின்றது. ஆதலால் அம்சியஞ்ஞானம் ஒன்றாம்

2. சுத்தப்பிரஹ்மமாகிய அதிஷ்டானத்தை யாசிரயித்திருக்கும்* அஞ்ஞானம் அந்தப் பிரஹ்மத்தையே மறைக்கிறது. அதன்பிறகு ஜீவன் நான் அஞ்ஞானி யென்றிவ்வாறு அஞ்ஞானத்தின் அபிமானரூப ஆசிரய மாகிறான். இவ்விதத்தால் அஞ்ஞானம் ஸ்வாசிரய ஸ்வவிஷயமாம்.

## 247. அஞ்ஞான மொன்றென்னும்பக்ஷத்தில் பந்தமோக்ஷங்களின் வியவஸ்தையும் சகலப்பிரக்கிரியைகளின் சிரேஷ்டத் தன்மையோடு நாமபேதத்தால் மாயையின் சொரூபமும்.

அந்த அஞ்ஞானம் ஒன்றாக இருக்கிறது; ஞானத்தினால் நிவிருத்தியாகிறது. ஆனால் எந்த அந்தக்கரணத்தில் அஞ்ஞான மிருக்கிறதோ, அந்த அந்தக்கரண அவச்சின்ன சேதனத்திலுள்ள அஞ்ஞானாம்சம் ஞானத்தால் நிவிருத்தியாகிறது. அவனே முத்தனாகிறான். எந்த அந்தக்கரணத்தில் ஞானமுண்டாகவில்லையோ அங்கு அஞ்ஞானாம்சமும் பந்தமும் தங்குகின்றன. இவ்விதத்தால் அஞ்ஞானமொன்று என்னும் பக்ஷத்தில் பந்தமோக்ஷ வியவகாரங்கள் சித்திக்கின்றன.

வாசஸ்பதி மதப்படி அஞ்ஞானம் அநேகமென்று சிலர் புத்தியிற்படின், அதுவும் அத்வைதஞானத்துக்கு உபாயந்தான். அதனைக் கண்டிப்பதில் எவ்வித ஆக்கிரக (பிடிவாத)மு மில்லை. †எவ்விதத்தால் ஜிஞ்ஞாசுவுக்கு அத்வைத போதமுண்டாகுமோ அவ்விதத்தால் புத்தியை ஸ்திரப்படுத்தவேண்டியது.

சுத்தப்பிரஹ்மத்தை யாசிரயித்துக்கொண்டிருக்கும் மாயையினை அவித்தையென்றும் அஞ்ஞானமென்றும் கூறுவர்.

---

அதன் அம்சவடிவ நானா அஞ்ஞானம் நானா அந்தக்கரண தேசத்திலுள்ள சாக்ஷிசேதனத்தில் நிலைத்திருக்கின்றது. எந்த அந்தக்கரண தேசத்தில் ஞானமுண்டாகிறதோ அந்த அந்தக்கரண தேசத்திலுள்ள அஞ்ஞானாம்சத்தின் நாசமுண்டாகிறது. ஆகலால் ஒருவனுக்கு ஞானமுண்டாயின் அதனால் அஞ்ஞானமும் அதன் காரியமும் நீங்குதல்வாயிலாக முத்தி தோற்றுது. இவ்வாறு ஒரு அஞ்ஞானத்தை யங்கீகரித்தாலும் பந்தமோக்ஷத்தின் வியவஸ்தை பொருந்துகிறது. ஜீவனது அஞ்ஞானத்தினால் கற்பிக்கப்பட்ட ஈசுவரன் அநேகர்; ஜீவர்கள்தோறும் சிருட்டியின் பேதமுண்டு என்னும் சுருதி ஸ்மிருதி புராணங்களுக்கு விரோதமான பக்ஷத்தை யங்கீகரித்தலுமாகாது. ஆதலால் இந்தப் பக்ஷம் நலமுடையதாம்.

* "நான் அஞ்ஞானி" என்னும் அநுபவத்தால் அஞ்ஞானத்திற்கு ஆசிரயம் ஜீவனென்று வாசஸ்பதிமிசிரர் சொல்லியிருக்கிறார். அது முமுக்ஷுவின் புத்தியில் இலகுவாய்ப் படும்பொருட்டாம். ஆனால் வாசஸ்பதிமிசிருடைய அந்தரங்கக்கருத்து இதுவாம்:— நான் என்னும் சப்தத்திற்கு வாச்சியார்த்தம் அந்தக்கரண விசிஷ்டசேதனரூப ஜீவன். அதன் விசேஷியபாகமாகிய சாக்ஷிசேதனம் பிரஹ்மம். அது அஞ்ஞானத்திற்கு ஆசிரியமாயிருக்கிறது. அது (விசேஷியத்தின் தர்மம்) விசிஷ்டத்தில் வியவகரிக்கப்படுகிறது.

† "யயா யயா ஹவெ[illegible] வ்யுத்பத்திஃ ப்ரத்யகாத்மநி ; ஸா ஸைவ ப்ரக்ரியெஹ ஸ்யாத் ஸாத்வீ ஸா சாநவஸ்திதிஃ ॥" புருஷர்களுக்கு எந்த எந்தப்பிரக்கிரியைகளால் பிரத்தியகாத்மவிஷயத்தில் ஒருவனுக்குப் போதமுண்டாகுமோ, அந்தந்தப் பிரக்கிரியைகளே இங்கு (வேதாந்த சித்தாந்தத்தில்) சிரேஷ்டமாம். அதுவே வியவஸ்தையாம்." என்பது நைஷ்கர்மியசித்திகாரர் வசனமாம்.

1. சிந்திக்கக்கூடாத சக்தியுள்ளதாயும் யுக்திக்கு நிற்காததாயு மிருத்தலால் மாயை யெனப்படும்.

2. வித்தையால் நாசமடைவதால் அவித்தை யெனப்படும்.

3. ஸ்வரூபத்தை மறைப்பதால் அஞ்ஞான மெனப்படும்.

1. மாயையானது ஆசிரயிக்கும் சேதனம் சாமானியசேதனமாம். அது மாயைக்கு விரோதமில்லை; ஆனால் சாதகமா யிருக்கிறது. சத்தாஸ்புரண (விளக்க)த்தைத் தருகிறது.

2. விருத்தியில் இருக்கும் சேதனம் அல்லது சேதனசகிதவிருத்தி மாயைக்கு விரோதியென் றறியவேண்டியது.

இவ்விதத்தால் மாயை வர்ணிக்கப்பட்டது.

## 248. பிரசங்கத்தால் ஈசுவரசொரூபமும், இருவகைக் காரணத்தின் லக்ஷணமும், ஜகத்தின் உபாதானகாரண நிமித்தகாரணங்கள் ஈசுவரன் எனலும் 248-249.

ஈசுவரனது சொருபத்தைக் கூறுகின்றார்:—

1. சுத்த சத்துவகுணஸஹித மாயை,

2. மாயையின் அதிஷ்டானசேதனம்,

3. மாயையில் ஆபாஸம்,

இம்மூன்றும் சேர்ந்தது ஈசுவர னெனப்படும்.

அந்த ஈசுவரன் சர்வஞ்ஞன். அவனே ஜகத்துக்குக் காரணன்.

காரணம் இருவகைத்து:—1. உபாதானகாரணம், 2. நிமித்தகாரணம்.

1. (1) எது காரியத்தின் ஸ்வரூபத்தில் பிரவேசிக்கிறதோ,

(2) எதையின்றிக் காரியத்தின் ஸ்திதியில்லையோ,

அது உபாதானகாரண மெனப்படும்.

மண் கடத்துக்கு * உபாதானகாரணம்.

(1) கடஸ்வரூபத்தில் மண் பிரவேசிக்கிறது.

(2) மண்ணின்றிக் கடம் நிலைத்திருக்கிறதில்லை.

2. (1) எது ஸ்வரூபத்தில் பிரவேசிக்கிறதில்லையோ, ஆனால்

(2) காரியத்துக்கு வேறாக இருந்துகொண்டு காரியத்தைச்செய்கிறதோ,

(3) எதன் நாசத்தினால் காரியம் நாசமடைகிறதில்லையோ,

அது † நிமித்தகாரண மென்று சொல்லப்படும்.

---

* காரியத்தின் உற்பத்திஸ்திதி லயங்களுக்குக் காரணம் உபாதானகாரண மெனப்படும். இதுவும் உபாதானத்தின் லக்ஷணமாம்.

† காரியத்தினது உற்பத்திமாத்திரத்தின் காரணம் நிமித்தகாரண மெனப்படும். இந் நிமித்தகாரணம் அநேகவிதமா யிருக்கிறது.

கடத்திற்குக் குயவன் தண்டம் சக்கரம் முதலியன நிமித்தகாரணங்கள்.

(1) கடஸ்வரூபத்தில் அவை பிரவேசிக்கிறதில்லை;

(2) கடத்திற்கு வேறாயிருந்துகொண்டு கடத்தை யுற்பத்தி செய்கின்றன.

(3) உற்பத்தியானபின் குயவன் தண்டாதிகளின் நாசத்தினால் கடம் நாசமடைகிறதில்லை.

இவ்விதத்தால் காரணம் உபாதானம் நிமித்தமென இருவகைத்தாம்.

**249.** ஈசுவரனே ஜகத்துக் குபாதானகாரணமாயும் நிமித்தகாரணமாயுமிருக்கிறான். அது ஒரே * சிலந்திப்பூச்சி தன் வலைக்கு உபாதானகாரணமாயும் நிமித்தகாரணமாயும் இருப்பதுபோலாம்.

1. சிலந்திப்பூச்சியின் ஜடசரீரம் அதன் வலைக்கு உபாதானகாரணமாம்.

2. சிலந்தியின் சரீரத்துள்ள சேதனபாகம் நிமித்தகாரணமாம்.

ஆதலால் ஒரு ஈசுவரனையே நிமித்தகாரணமாகவும் உபாதானகாரணமாகவும் அங்கீகரித்தலில் ஒரு திருஷ்டாந்தமு மில்லையெனக் கூறின், சிலந்தியைப்போல,

1. †ஈசுவரனது சரீரமான ஜடமாயை ஜகத்துக்கு உபாதானகாரணமாம்.

2. அதன் சேதனபாகம் நிமித்தகாரணமாம்.

இவ்விதத்தால் ஒரே ஈசுவரன் ஜகத்திற்கு உபாதானமும் நிமித்தகாரணமு மாவனென்பதில் திருஷ்டாந்தம் சிலந்தியும் ‡ முக்கிய திருஷ்டாந்தம் சொப்பனமுமாம்.

---

* இதனையே ஊர்ணநாபி என்றும் எட்டுக்காற்பூச்சியென்றும் கூறுவர்.

† 1. சிலந்தியின் சரீரம் வலைக்கு உபாதானகாரணமாம்.

2. அந்தக்கரணஸஹித சேதனபாகம் நிமித்தகாரணமாம்.

1. அங்ஙனமே தமப்பிரதானப் பிரகிருதிவடிவ மாயை ஜகத்தின் உபாதானமாம்.

2. சுத்த சத்துவப்பிரதான மாயையோடுகூடிய சேதனபாகம் ஜகத்தின் நிமித்தகாரணமாம்.

கேவல சேதனபாகத்தில் காரணத்தன்மை யில்லையென்பது அபிப்பிராயம்.

‡ 1. நியாயமதத்தில் கடத்தோடு ஈசுவரனது சையோகத்தில் ஈசுவரனை அபின்னநிமித்தோபாதான காரணமாகக் கொண்டிருக்கிறார்கள். ஜீவாத்மாவின்கணுள்ள ஞானமுதலிய குணங்களில் ஜீவாத்மாவை அபின்னநிமித்தோபாதான காரணமெனக் கொண்டிருக்கிறார்கள்.

2. ஸ்ரீமத் பாகவதத்தில் பிரஹ்மாவானவர் கன்றுகளையும் கன்று மேய்ப்பவர்களையும் அபகரித்தகாலத்தில் ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா கன்றுகள் கன்றுமேய்ப்பவர் முதலிய எல்லாவற்றின் வடிவமும் தாமேயானார். ஆண்டும் ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா அவற்றின் அபின்னநிமித்தோபாதானகாரணமா யிருக்கின்றார்.

1. எந்தச் சமயத்தில் ஜீவர்களின் கர்மபலனைக் கொடுக்க ஈசுவரன் எதிர்முகமாகிறதில்லையோ அப்போது பிரளயமுண்டாகின்றது.

2. ஜீவர்களது கர்மபலத்தைக் கொடுக்க எதிர்முக மாகும்போது சிருஷ்டி யுண்டாகின்றது. இவ்விதத்தால் சிருஷ்டி ஜீவனுடைய கர்மாதீனமாயிருக்கிறது. ஆதலால்,

## 250. ஜீவனது சொரூபத்தைக் கூறுகின்றார்:—

1 ரஜோகுண தமோகுணங்களை அடக்கிக்கொள்வது எதுவோ அது சுத்தசத்துவகுண மெனப்படும்.

2. ரஜதமோகுணங்களால் தான் அடங்குவது எதுவோ அது மலினசத்துவகுண மெனப்படும்.

1. இந்த மலினசத்துவகுணசகித அஞ்ஞானம்சத்தில் உண்டாகும் சேதனத்தின் ஆபாசம்,

2. அஞ்ஞானம்,

3. அஞ்ஞானத்தின் அதிஷ்டான கூடஸ்தன்,

இம்மூன்றும் சேர்ந்தது ஜீவனெனப்படும்.

அந்த ஜீவன் கர்மத்தைச் செய்கிறான்; பலத்தை இச்சிக்கிறான்.

## 251. ஈசுவரனிடத்தில் விஷமதிருஷ்டியும் குரூரத் தன்மையு மில்லாமை.

அந்த ஜீவனுடைய கர்மாநுசாரமாக உயர்வு தாழ்வான போகங்களை யநுபவிக்கும்பொருட்டு ஈசுவரன் சிருஷ்டி பண்ணுகிறார். ஆகையால் ஈசுவரனிடத்தில் விஷமதிருஷ்டியும் குரூரத்தன்மையும் இல்லை.

எல்லாவற்றிற்கும் முதலான சிருஷ்டிக்குமுன் கருமமில்லை. பிரதமசிருஷ்டியில் உயர்வு தாழ்வான சரீரங்களையும் போகங்களையும் ஈசுவரன் சிருஷ்டிக்கின்றார். ஆதலால் ஈசுவரனுக்கு விஷமதிருஷ்டி யுண்டென்று ஒருவன் சொல்லுவானாயின்,

---

3. சூரியனானது எட்டுமாதம்வரையில் பிருதிவியின் இரசங்களை யுலர்த்துகிறது. பின் கிரீஷ்மருது வருஷருதுவின் நான்குமாதங்கள்வரையில் ஜலத்தை விடுகிறது. அந்த ஜலத்திற்குச் சூரியன் அபிந்நநிமித்தோபாதானகாரணன்.

4. ஓர் சித்திரகாரன் நவவடிவதாரியினால் தனது சரீரத்தின்பேரில் சித்திரம் எழுதுகிறான். பின் அதனைப் பார்த்துக் களிக்கின்றான். பின் அதனை நாசஞ்செய்கின்றான். அந்தச் சித்திரத்திற்கு அச்சித்திரக்காரன் அபின்னநிமித்தோபாதான காரணமாகின்றான்.

5. சாக்ஷிசேதனம் சொப்பனப்பிரபஞ்சத்தின் அபின்னநிமித்தோபாதானகாரணமாவதுபோல ஈசுவரன் ஜகத்தின் அபின்னநிமித்தோபாதான காரணமாகின்றான்.

அது பொருந்தாது. ஏனெனின், சம்சாரம் அநாதி. உத்தரோத்தர சிருஷ்டிக்குப் பூர்வ பூர்வசிருஷ்டியின் கர்மம் காரணமாம். எல்லாவற்றிற்கும் முதலில் யாதொரு சிருஷ்டியுமில்லை. ஆதலால் ஈசுவரனிடத்தில் தோஷமில்லை.

## 252. ஜீவர்களது போகத்தின்பொருட்டு ஈசுவரனுக்கு ஜகத்தையுண்டாக்கு மிச்சையுளதெனல்.

1. ஜீவர்களது கர்மபோகங்களைக் கொடுத்தலினின்றும் ஈசுவரன் எப்போது உதாசீனராகின்றரோ அப்போது பிரளயமுண்டாகிறது. பிரளயத்தில் சகலபதார்த்தங்களின் சம்ஸ்காரமும் மாயையில் தங்கியிருக்கிறது. ஆகையால் ஜீவர்களின் எஞ்சியிருக்கும் கர்மமும் சூக்ஷ்மமாய் மாயையில் தங்கியிருக்கிறது.

கர்மபோகத்தைக் கொடுக்க ஈசுவரன் சன் (எதிர்) முகமாகும்போது "ஜீவர்களது போகநிமித்தம் ஜகத்தை யுண்டுபண்ணுவேனாக" என்று ஈசுவரனுக்கு * இச்சையுண்டாகிறது.

---

இந்த இது சங்கையாம்:—

1. துக்கத்தையாவது துக்கசாதனங்களையாவது நிவர்த்தித்தற்பொருட்டு அல்லது சுகத்தையாவது சுகசாதனங்களையாவது அடையும்பொருட்டு இச்சையுண்டாகும். வேறு வஸ்துவில் இச்சை யுண்டாகாதென்பது நியமம். ஈசுவரனுக்குத் துக்கமும் துக்கசாதனங்களும் இல்லாததினுல் அவற்றின் நிவிருத்தியின்பொருட்டு இச்சை நிகழாது.

2. ஈசுவரன் பூர்ணகாமனுயிருத்தலால் சுகத்தையும் அதன் சாதனங்களையும் அடையும்பொருட்டும் அவருக்கு இச்சையுண்டாகாது.

குழந்தைகளுக்கு விநோதத்தின் இச்சை யுண்டாவதுபோல ஈசுவரனுக்கும் நிமித்தமின்றியும் ஜகத்தைச் சிருஷ்டித்தலாகிய விநோதத்தின் இச்சையுண்டாமென்று கூறின் அதுவும் பொருந்தாது. ஏனெனின், குழந்தைகளுக்கு விநோதத்தில் சித்தத்தின் களிப்பு வடிவ சுகத்தை யடைதற்பொருட்டு இச்சை யுண்டாகிறதுபோலப் பூர்ணகாமனுன ஈசுவரனுக்குக் களிப்புவடிவ சுகப்பிராப்தியின் இச்சை சம்பவியாது என்று ஒருவன் சங்கிப்பானுயின் இச்சங்கைக்கு இது சமாதானமாம்:—கற்பகவிருக்ஷம் அந்நியனது சங்கற்பமாகிய நிமித்தத்தினுல் இச்சித்த பலத்தைத் தன் சுபாவத்தினுல் கொடுப்பதுபோல் ஈசுவரனும் பலத்தைக்கொடுக்க ஸன்முகனுய் ஜீவர்களுடைய அதிருஷ்டமாகிய நிமித்தத்தினுல் இச்சாஞானப் பிரயத்தனங்களைத் தன் சுபாவத்தினுல் செய்கிறுர். அந்த ஈசுவரனது இச்சைமுதலியவற்றின் ஒவ்வொரு வியக்தியே சிருஷ்டியின் ஆரம்பகாலத்தில் உற்பத்தியாய்ப் பிரளயபரியந்தம் நிற்பதாம். ஆதலால் நித்திய மெனப்படுகின்றன. இறப்பு எதிர்வு நிகழ்வு என்னுங் காலங்களிலுள்ள சகல பதார்த்தங்களையும் விஷயஞ் செய்கின்றது. ஆதலால் எப்போதும் சிருஷ்டி அல்லது பிரளயம் சீதம் அல்லது உஷ்ணம் அல்லது மழை யுண்டாகிறதில்லை. ஆனுல் சமயாநுசாரமாகவே அவை உண்டாகின்றன.

## சூக்ஷ்மசிருஷ்டி நிரூபணம். (253—257)

### 253. பஞ்சபூதம் அவற்றின்குணம் என்பவற்றின் உற்பத்தி.

இவ்வித ஈசுவரனுடைய இச்சையால் மாயை * தமோகுணப்பிரதான மாகிறது. அந்தத் தமோகுணப்பிரதான மாயையிலிருந்து ஆகாசம் வாயு தேயு ஜலம் பூமி இவ்வைந்து பூதங்களுமுண்டாகின்றன. அப்பூதங்களில் கிரமமாகச் சப்தம் ஸ்பரிசம் ரூபம் ரஸம் கந்தமென்னும் ஐந்து குணங்களிருக்கின்றன.

1. மாயையிலிருந்து சப்தத்தோடு ஆகாயமுண்டாகிறது.

2. ஆகாயத்தினின்றும் வாயு உற்பத்தியாகிறது.

(1) வாயு ஆகாயகாரியமாதலால் ஆகாயத்தின் சப்தகுணம் வாயுவிலிருக்கிறது.

(2) தன் குணம் ஸ்பரிசமாம்.

3. வாயுவிலிருந்து தேஜசு உண்டாகிறது.

(1) தேஜஸில் ஆகாயத்தின் சப்தமும்.

(2) வாயுவின் ஸ்பரிசமும்.

(3) தன் குணமாகிய ரூபமுமிருக்கின்றன.

4. தேஜஸினின்றும் ஜலமுற்பத்தியாகிறது.

(1) ஜலத்தில் ஆகாசத்தின் சப்தமும்,

(2) வாயுவின் ஸ்பரிசமும்,

(3) தேஜஸின் ரூபமும்,

(4) தன் குணமாகிய ரசமுமிருக்கின்றன.

5. ஜலத்தினின்றும் பிருதிவி யுற்பத்தியாகிறது.

---

* தன் புருஷனுடைய சுக்கிலமாகிய பீஜத்தைத் தரிக்கின்றவளும் அநேக கிருமிகளோடுகூடிய புத்திரவடிவ கர்ப்பமுடைய கர்ப்பிணிஸ்திரீ பிரசவத்திற்குமுன் சந்ததியின் இலாபவடிவ நிமித்தத்தால் எப்போதும் பிரசன்னமா யிருக்கிறாள். அதனுற் சத்துவகுணப் பிரதானமுடையவள்போ லிருக்கிறாள். பின் பிரசவகாலத்தில் வேதனையுண்டாகிற காரணத்தினுல் பிரசன்னத்தன்மை மறைபட குளியசித்தமுடையவளாகிறபடியால் தமோகுணப்பிரதானம்போலாகிறாள். அது முன் வெண்ணிறமான மேகம் பின் மழைக்காலத்தில் கருநிறமுடையதாதல் போலவாம்.

அவ்வாறு சிருஷ்டிக்குமுன் பிரஹ்மத்தின் பிரதிபிம்பவடிவ ஜகத்தின் பீஜ (காரண)த்தைத் தரிப்பதும் அவித்தையை யுபாதியாகவுடைய அநந்த ஜீவர்களோடு கூடிய பிரபஞ்சவடிவ கர்ப்பமுடையதுமான சுத்தசத்துவப்பிரதானமாயை(ஈசுவரனது உபாதி) உளது. அது சிருஷ்டியின் ஆரம்பத்தில் சுத்தசத்துவப் பிரதான ஸ்வரூபம் மறைபட சிருஷ்டிக்கு யோக்கியமான தமோகுணப்பிரதானமான பிரகிருதிரூபமாகிறது.

(1) பிருதிவியில் ஆகாசத்தின் சப்தமும்,

(2) வாயுவின் ஸ்பரிசமும்,

(3) தேஜஸின் ரூபமும்,

(4) ஜலத்தின் ரஸமும்,

(5) தன் கந்தமு மிருக்கின்றன.

1. ஆகாசத்தில் பிரதித்தொனிரூப சப்தம் இருக்கிறது.

2. வாயுவில்,

(1) ஸீ ஸீ சப்தமுளது.

(2) உஷ்ணசீத கடினங்களுக்கு விலக்ஷணமான ஸ்பரிசமிருக்கின்றது.

3. அக்கினிரூப தேஜஸில்,

(1) புக்புக் சப்தமும்,

(2) உஷ்ண ஸ்பரிசமும்,

(3) பிரகாசரூபமு மிருக்கின்றன.

4. ஜலத்தில்,

(1) சிலிசிலு சப்தமும்,

(2) சீதமான ஸ்பரிசமும்,

(3) சுக்கில ரூபமும்,

(4) மதுரமானரசமு மிருக்கின்றன. உவர்ப்பு கைப்பு முதலியரஸங்கள் பிருதிவிசம்பந்தத்தால் ஜலத்தில் தோன்றுகின்றன. சுபாவமாக ஜலத்தின் ரஸம் மதுரமே. இந்த மாதுரியம் கடுக்காய் நெல்லிக்காய் முதலியவற்றைத் தின்று நீரைக்குடித்தலால் விளங்கும்.

5. பிருதிவியில்,

(1) கடகட சப்தமும்,

(2) உஷ்ண சீதங்களுக்கு விலக்ஷணமான கடின ஸ்பரிசமும்,

(3) வெளுப்பு கருப்பு மஞ்சள் சிவப்பு பச்சை முதலிய ரூபங்களும்,

(4) தித்திப்பு புளிப்பு உவர்ப்பு உறைப்பு கைப்பு துவர்ப்பு என்னும் ரசங்களும்,

(5) சுகந்தம் துர்க்கந்தம் என்னும் இருவித கந்தங்களும் பிருதிவியி லிருக்கின்றன. இவ்விதத்தால் குணங்கள் ஆகாசத்தில் ஒன்றும், வாயுவி லிரண்டும், தேயுவில் மூன்றும், ஜலத்தில் நான்கும், பிருதிவியில் ஐந்தும் இருக்கின்றன. அவற்றில் ஒவ்வொன்று தன்குணமாகவும் மற்றவை காரணத்தின் குணங்களாகவு மிருக்கின்றன. எல்லாவற்றிற்கும் மூலகாரணம் ஈசுவரன். ஈசுவரனிடத்தில் மாயை சேதனம் என இரண்டுபாகங்க ளிருக்கின்றன. எவ்

லாப் பூதங்களிலும் மித்தியாபாகம் மாயையினது; ஸத்தாஸ்பூர்த்திபாகம் சேதனத்தினுடையது.

### 254. அந்தக்கரணத்தின் நான்குபேதங்களோடு அதன் உற்பத்தி.

பஞ்சபூதங்களின் சத்துவகுணாம்சங்கள் சேர்ந்து சத்துவமெனப்படும் அந்தக்கரணத்தை யுண்டுபண்ணுகின்றன. அந்தக்கரணம் ஞானத்திற்கு ஹேதுவாம். ஞானத்தினுற்பத்தி சத்துவகுணத்தினின்றும் அங்கீகரிக்கப் பட்டிருக்கிறது. ஆதலால் அந்தக்கரணம் பூதங்களின் சத்துவகுணத்தின் காரியமாம். பஞ்சபூதங்களின் காரியமான ஐந்து ஞானேந்திரியங்களுக்கும் சகாயமாயிருக்கிறது. ஆகையால் பஞ்சபூதங்களுஞ் சேர்ந்த சத்துவகுணங்களால் அந்தக்கரணத்தி னுற்பத்தி யுண்டாகிறது.

1. தேகத்தின் உள்ளிருந்து காண (ஞானத்திற்குச் சாதன)மா யிருத்தலால் **அந்தக்கரண** மெனப்படும்.

பூதங்களின் சத்துவகுண காரியமா யிருத்தலால் அந்தக்கரணத்திற்குச் **சத்துவம்** என்பதும் பெயர். அந்தக்கரணத்தின் பரிணாமத்திற்கு **விருத்தி** யென்று பெயர். அவ்வந்தக்கரணவிருத்தி நான்காம்:—

1. பதார்த்தத்தின் நன்மைதீமைச் சொரூபத்தை நிச்சயம்பண்ணும் விருத்தி **புத்தி**யெனப்படும்.

2. சங்கற்ப விகற்பவடிவ விருத்தி **மன** மெனப்படும்.

3. சிந்தையாகிய விருத்தி **சித்த** மெனப்படும்.

4. நான் என்னும் அபிமானவிருத்தி **அகங்கார** மெனப்படும்.

### 255. பிராணனது ஐந்து பேதங்களோடு அதன் உற்பத்தி.

பஞ்சபூதங்களின் சேர்க்கையான ரஜோகுணாம்சத்தினின்றும் பிராண னுற்பத்தியாகிறது. அந்தப் பிராணன் கிரியாபேதத்தினாலும் ஸ்தானபேதத்தினாலும் ஐந்துவிதமா யிருக்கிறது.

1. (1) எதற்கு இருதயம் ஸ்தானமோ,
(2) பசி தாகம் கிரியையோ,

அது **பிராணன்** எனப்படும்.

2. (1) எதற்குக் குதம் ஸ்தானமோ,
(2) மூத்திர மலங்களைக் கீழ்க்கொண்டுபோதல் கிரியையோ,

அது **அபானனும்.**

3. (1) எதற்கு நாபி ஸ்தானமோ,
(2) புசித்தனவும் குடித்தனவுமான அன்ன ஜலங்கள் பசனமாகத் தக்கதாகச் சமப்படுத்துதல் கிரியையோ,

அது **சமானன்.**

4. (1) எதற்குக் கண்டம் ஸ்தானமோ,

(2) சுவாசம் கிரியையோ,

அது உதானன்.

5. (1) எதற்குச் சர்வசரீரமும் ஸ்தானமோ,

(2) அன்னபானுதிகளின் ரஸத்தைச் சகல நாடிகளிலும் இழுத்துக் கொண்டுபோகுதல் கிரியையோ,

அது வியானன்.

சிலவிடத்தில் நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் என ஐந்து வாயுக்கள் அதிகமாகச் சொல்லப்படுகின்றன. வாந்தி செய்தல், இமைத்தல், தும்மல், கொட்டாவிவிடுதல், பிணசரீரத்தை வீங்கச்செய்தல் என்பன முறையே அவற்றின் கிரியைகளெனப்படும். அவை பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம் என்பவைகளின் ரஜோகுணும்சத்தினின்றும் முறையே உண்டாகின்றன. அபானன், சமானன், பிராணன், உதானன், வியானன் இவைகள் தனித்தனியே பிருதிவியாதிகளின் ஒவ்வொன்றன் ரஜோகுணும்சத்தினின்றும் முறையே யுண்டாகின்றன. எல்லாவற்றின் சேர்க்கையான ரஜோகுணும்சத்தினின்றும் உண்டாகிறதில்லை.

ஆனல் அத்வைத சித்தாந்தத்தில் இந்தவிஷய மில்லை. ஏனெனின் வித்தியாரண்யஸ்வாமிகளும் பஞ்சீகரணக்கிரந்தத்தில் வார்த்திககாரரும் சூக்ஷ்மசரீரத்திலும் பஞ்சகோசங்களிலும் நாககூர்மாதிகளைக் கொள்ளவில்லை. அவர்கள் அபானுதி பஞ்சப்பிராணன்களைப் பூதங்களின் சேர்க்கையான ரஜோகுணும்சத்தினின்றும் உண்டானதாகச் சொல்லியிருக்கிருர்கள். ஆகையால்,

1. ஒவ்வொரு பூதத்தின் ரஜோகுணும்சத்தினின்றும் அபானன் முதலியன உண்டானதாகச் சொல்லுதல் பொருத்தமுடையதன்று.

2. சூக்ஷ்மசரீரத்தில் நாககூர்மாதிகளைக் கிரகித்தல் அசங்கதமாம், பஞ்சப்பிராணன்களே சூக்ஷ்மசரீரத்தில் கிரகிக்கப்படுகின்றன.

பிராணன் விக்ஷேபரூபமாம். விக்ஷேபஸ்வபாவம் ரஜோகுணத்தினதாம். ஆகையால்,

பூதங்களின் ரஜோகுணும்சத்தினின்றும் பிராணனது உற்பத்தி சொல்லப்பட்டிருக்கிறது.

## 256. ஞானேந்திரிய கர்மேந்திரியங்களின் உற்பத்தி.

1. ஒவ்வொரு பூதத்தின் சத்துவகுணும்சத்தினின்றும் பஞ்சஞானேந்திரியங்கள் ஆக்கப்பட்டிருக்கின்றன.

2. ஒவ்வொரு பூதத்தின் ரஜோகுணும்சத்தினின்றும் ஒவ்வொரு கர்மேந்திரிய முண்டாகின்றது.

1. ஆகாசத்தின் சத்துவகுணத்தினின்றும் ச்ரோத்திரமும்,

2. வாயுவின் சத்துவகுணாம்சத்தினின்றும் துவக்கும்,

3. தேயுவின் சத்துவகுணாம்சத்தினின்றும் நேத்திரமும்,

4. அப்புவின் சத்துவகுணாம்சத்தினின்றும் ரஸனையும்,

5. பிருதிவியின் சத்துவகுணாம்சத்தினின்றும் கிராணமும் உண்டாகின்றன. இவ்வைந்தும் ஞானத்துக்குச் சாதனமாயிருத்தலால் ஞானேந்திரியங்களெனப்படுகின்றன. ஞானம் சத்துவகுணத்தா லுண்டாதலால் இவ்வைந்தும் பூதங்களுடைய சத்துவகுணத்தின லுண்டானதாகச் சொல்லப்பட்டன.

ச்ரோத்திரேந்திரியம் ஆகாசத்தின் குணத்தை யறிதலால் அது ஆகாசத்தினின்றும் உண்டானதாகச் சொல்லப்படுகிறது. அதுபோல எப்பூதத்தின் குணத்தை எவ்விந்திரியம் அறிகிறதோ அப்பூதத்தினின்றும் அவ்விந்திரியம் உண்டானதாகச் சொல்லப்படும்.

1. ஆகாசத்தின் ரஜோகுணாம்சத்தினின்றும் வாக்கும்,

2. வாயுவின் ரஜோகுணாம்சத்தினின்றும் பாணியும்,

3. அக்கினியின் ரஜோகுணாம்சத்தினின்றும் பாதமும்,

4. அப்புவின் ரஜோகுணாம்சத்தினின்றும் உபஸ்தமும்,

5. பிருதிவியின் ரஜோகுணாம்சத்தினின்றும் குதமும் உண்டாகின்றன.

ஸ்திரீயின் யோனியிலும் புருஷனது குறியிலுமுள்ள விஷயாநந்தத்துக்குச் சாதனமான இந்திரியத்துக்கு உபஸ்தமென்று பெயர்.

கர்மம் என்பது கிரியைக்காம். இந்தப் பஞ்சேந்திரியங்களும் கிரியைக்குச் சாதனமாயிருத்தலால் கர்மேந்திரியங்களெனப்படும்.

கிரியை ரஜோகுணத்தா லுண்டாதலால் பூதங்களின் ரஜோகுணாம்சத்தினின்றும் கர்மேந்திரியங்களின் உற்பத்தி சொல்லப்பட்டது. இவ்வாறு சூக்ஷ்மசிருஷ்டி நிரூபிக்கப்பட்டது.

**257.** அபஞ்சீகிருதபூதங்கள், அவற்றின் காரியமான அந்தக்கரணம், பிராணன், கர்மேந்திரியம், ஞானேந்திரியம் என்பவை சூக்ஷ்மசிருஷ்டி யெனப்படுகின்றன.

இந்திரியங்களால் சூக்ஷ்மசிருஷ்டியின் ஞானமுண்டாகிறதில்லை. கண் மூக்கு முதலிய கோளகங்களோ இந்திரியங்களுக்கு விஷயமாம். ஆனால் அக்கோளங்களிலுள்ள இந்திரியங்கள் எந்த இந்திரியத்துக்கும் விஷயமாகிறதில்லை. சூக்ஷ்மசிருஷ்டியி னுற்பத்திக்குப் பின் ஈசுவரேச்சையால் ஸ்தூல சிருஷ்டியின்பொருட்டுப் பூதங்களின் பஞ்சீகரண மூண்டாயிற்று.

## பஞ்சீகரணம் 258-259.

### 258. பஞ்சீகரணத்தின் கிரமம்.

பஞ்சீகரணம் இருவகையாகச் சொல்லப்பட்டிருக்கிறது:—

1. ஒவ்வொரு பூதத்தின் தமோகுணம்சமும் சமமாக இரண்டிரண்டாகி ஐந்து பூதங்களின் முதற்பாதி இருந்தபடியிருக்க மற்றப்பாதி ஒவ்வொன்றும் நந்நான்காகித் தன்னம்சம் ஒழிந்த மற்ற நான்குபூதங்களுடனும் அரைக்கால் மாத்திரையாகச் சேர்ந்து பஞ்சீகரணமாயிற்று.. (எப்படியெனின், ஆகாசம் தன்பாதியை விட்டுப் பிருதிவியாதி நாலு பூதங்களுடன் சேர்ந்தது. இவ்வித மாகச் சகல பூதங்களும் தத்தம் பாதியைவிட்டு மற்றப் பூதங்களுடன் சேர்ந்தன. இதனால் தன் பாதியும் மற்ற ஒவ்வொரு பூதத்தின் அரைக்கால் அரைக்காலுஞ்சேர்ந்து மறுபடியும் பூரணமாகிய ஒவ்வொன்றிலேயேபஞ்சபூதங்களும் சேர்ந்தமையால் பஞ்சீகரணமாயிற்று.)

2. * இரண்டாவது கிரமம் இதுவாம்:—ஒவ்வொரு பூதத்திற்கும் இரண்டிரண்டு பிரிவுண்டாயிற்று; அது சமமன்று. ஆனால் ஒருபாகம் நான்கம்சத்தினதும், ஒருபாகம் ஐந்தாவது அம்சத்தினதுமாம். (ஓரம்சத்தினதாம்) இவ்வாறு குறைவு நிறைவான இரண்டிரண்டு பிரிவுகளாயின. அவற்றுள் எல்லாவற்றினும் அதிகபாகம் இருந்தபடியிருக்க, பஞ்சபூதங்களின் குறைவான ஐந்து பாகம் எவையோ அவற்றின் ஒவ்வொரு பாகத்தினை அவ்வைந்து பிரிவுசெய்து வேறாக நிற்கின்ற அதிகமான ஐந்து பாகங்களில் ஒவ்வொருபாகஞ் சேர்ந்து பஞ்சீகரண மாகின்றது.

1. முதற்பக்ஷத்தில் ஒருபாகத்தின் நான்கு பாகங்கள் வேறாக நிற்கின்றன. அரை அரைப் பாகங்களில் தனது பாகத்தைவிட்டுச் சேர்கின்றன;

2. இரண்டாவது பக்ஷத்தில் குறைந்தபாகத்தின் ஐந்து பாகங்கள் வேறு நிற்கின்றன. அதிக ஐந்துபாகங்களில் தனது பாகங்கூடியதில் சேருகிறது.

1. முதற்பக்ஷத்தில் பஞ்சீகிருத பூதங்களின் தனது அம்சம் பாதியும் பாதி அம்சம் பிறவற்றினதுமாம்.

2. இரண்டாவது பக்ஷத்தில் பஞ்சீகரணஞ் செய்தலால் தனது அம்சம் இருபத்தொன்றும் பிறவற்றின் அம்சம் நான்குமாம்.

இரண்டாவது பக்ஷத்தின் எளிதான கிரமம் இதுவாம்:—

ஒவ்வொரு பூதத்திற்கும் இருபத்தைந்து இருபத்தைந்து பாகமாயின் இருபத்தொரு இருபத்தொரு பாகங்களும் நான்கு நான்கு பாகங்களும் வேறு

* பஞ்சீகரணத்தின் முதற் கிரமத்தால் சர்வபூதங்களிலும் அரை அரைப்பங்கு தத்தமதாம். அரைப்பங்கு எவ்வளவு நான்குபாகம் பிறபூதங்களினது சேர்ந்திருக்கின்றது. அதனால் மற்றப் பூதங்களின் நான்கு பாகங்களினின்றும் தத்தம் அரை அரைப் பங்கு மறைதலால் ஆகாசாதி ஒவ்வொரு பூதத்தின் வெவ்வேறான தோற்றம் உண்டாக லாகாது. அதுவோ உண்டாகின்றது. ஆதலால் முற்கூறிய பஞ்சீகரணத்தின் கிரமம் பொருந்தாததாமென்னும் சங்கை ஓர் முமுக்ஷுவின் சித்தத்தில் உண்டாயின், அதனை நிவர்த்திக்கும்பொருட்டு இந்தப் பஞ்சீகரணத்தின் இரண்டாவது கிரமம் சொல்லப்பட்டது.

யின. நந்நான்கு பாகங்களில் ஒவ்வொரு பாகம் தன் இருபத்தொருபாகத்தை விட்டு மற்றப் பூதங்களின் இருபத்தொரு இருபத்தொரு பாகங்களில் சேருகின்றன.

இவ்வாறு இருவித பஞ்சீகரணம் சொல்லப்பட்டிருக்கிறது.

ஒவ்வொரு பூதத்தில் அவ்வைந்து பூதத்தைச் சேர்த்துச் செய்வதற்குப் பஞ்சீகரணமென்று பெயர்.

எந்தப் பூதம் பஞ்சீகரணஞ் செய்யப்படுகிறதோ அதற்குப் பஞ்சீகிருதமென்று பெயர்.

## 259. ஸ்தூலப்பிரஹ்மாண்ட முதலியவற்றின் உற்பத்தி.

அந்தப் பஞ்சீகிருத பூதங்களினின்றும்,

1. இந்திரியங்களுக்கு விஷயமான ஸ்தூலப் பிரஹ்மாண்ட முண்டாயிற்று. அந்தப் பிரஹ்மாண்டத்தினுள்,

2. பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகர்லோகம், ஜனலோகம், தபோலோகம், சத்தியலோகமென ஏழு மேல் லோகங்களும்,

3. அதலம், சுதலம், பாதாளம், விதலம், ரஸாதலம், தலாதலம், மகாதலம் என்னும் ஏழு கீழ்லோகங்களு முண்டாயின.

அந்தப் பதினன்கு லோகங்களில் ஜீவர்களது போகத்துக்கு யோக்கியமான அன்னாதிகளும் போகத்துக்கு ஸ்தானமான தேவமனுஷ்ய பசுமுதலிய ஸ்தூலசரீரங்களு முண்டாயின.

இவ்வாறு சுருக்கமாகச் சிருஷ்டி நிரூபிக்கப்பட்டது.

மாயையின் காரியத்தை விஸ்தாரமாக நிரூபித்தலால் கோடிப் பிரஹ்மாக்களின் ஆயுளினாலும் மாயையினாலாக்கப்பட்ட பதார்த்தங்களின் நிரூபணத்திற்கு முடிவுண்டாகாதென்பதனை ஸ்ரீ வால்மீகர் * வாசிஷ்டத்தில் அநேக இதிஹாசங்களால் நிரூபித்திருக்கின்றார்.

## ஆத்மவிவேகம் அல்லது பஞ்சகோசவிவேகம் (260-271)

## 260. பஞ்சகோசங்களும் அவை ஆத்மாவை மறைத்தலும்.

மாயை, மாயையின் காரியமெனும் இவற்றில் † மூன்று சரீரங்களும் ஐந்து கோசங்களும் இருக்கின்றன.

1. (1) சுத்தசத்துவகுணசகித மாயை ஈசுவரனது காரணசரீரம்.

(2) மலின சத்துவகுணத்தோடு கூடிய அவித்தியாம்சம் ஜீவனது காரணசரீரமாம்.

---

* இதனை வாசிஷ்டம் நிர்வாணப்பிரகரணம் விபஸ்சித் உபாக்கியானத்தில் காண்க.

† மூன்று சரீரங்களின் லக்ஷணத்தையும் பஞ்சகோசங்களின் லக்ஷணத்தையும் விஸ்தாரமாய் அறியவிரும்புவோர் விசாரசந்திரோதயத்தின் மூன்றாவது கலையிலும், நான்காவது கலையிலும் காண்க.

2. (1) பிற்சரீரத்தின் ஆரம்பகமாகிய பஞ்ச சூக்ஷ்மபூதங்கள், மனம் புத்தி சித்தம் அகங்காரம், பஞ்சப்பிராணன், பஞ்சகர்மேந்திரியங்கள், பஞ்ச ஞானேந்திரியங்கள் என்னும் இவை சேர்ந்து ஜீவனது சூக்ஷ்மசரீரமாம்.

(2) சகல ஜீவர்களின் சூக்ஷ்மசரீரங்களுஞ் சேர்ந்து ஈசுவரனது சூக்ஷ்மசரீரமாம்.

3. (1) ஸ்தூலப் பிரஹ்மாண்ட முழுவதும் ஈசுவரனது ஸ்தூலசரீரமாம்.

(2) ஜீவர்களின் வியஸ்டி ஸ்தூலசரீரம் பிரசித்தமாம்.

இந்த மூன்று சரீரங்களிலேயே பஞ்சகோசங்களும் இருக்கின்றன.

1. காரணசரீரத்தினை ஆநந்தமயகோசமென்பர்.

2-4. சூக்ஷ்மசரீரத்தில் விஞ்ஞானமயகோசம், மனோமயகோசம், பிராணமயகோசம் என்னும் மூன்று கோசங்களு மிருக்கின்றன.

(1) பஞ்சஞானேந்திரியங்களும் நிச்சயரூபமான அந்தக்கரணத்தின் விருத்தியான புத்தியும் சேர்ந்து விஞ்ஞானமயகோச மெனப்படும்.

(2) பஞ்சஞானேந்திரியங்களும் சங்கற்பவிகற்பவடிவ அந்தக்கரண விருத்தியாகிய மனமும் சேர்ந்து மனோமயகோச மெனப்படும்.

(3) பஞ்சப்பிராணனும் பஞ்ச கர்மேந்திரியங்களுஞ் சேர்ந்து பிராணமயகோச மெனப்படும்.

5. ஸ்தூல சரீரத்தினை அன்னமயகோச மென்பர்.

இவ்வாற்றால் மூன்று சரீரங்களிலேயே ஐந்து * கோசங்களு மிருக்கின்றன.

---

* பஞ்சகோசங்கள்:—தாய்தந்தையரால் உண்ணப்படும் அன்னத்தினின்றுண்டாகும் தாயினுடைய இரத்தத்தினுலும் பிதாவினுடைய வீரியத்தினுலும் தாயினுடைய உதரத்தில் உற்பத்தியாகி, ஜனனத்துக்குப் பிறகு பால்முதலிய அன்னங்களால் வளர்க்கப்பட்டு, மரணத்துக்குப் பிறகு அன்னரூபமான பிருதிவியில் லயமடைகிற தேகம் அன்னமயகோச மெனப்படும். பிராணமயகோசம் கேவலம் ரஜோகுணத்தின் அவஸ்தை. பிராணுதி வாயுக்கள் சரீரத்தில் பூரித்துச் சரீரத்துக்குப் பலத்தைக் கொடுத்து இந்திரியங்களை அவற்றின் காரியத்தில் பிரவர்த்திக்கும்படி செய்கின்றன. கர்மேந்திரியங்களால் வியவகாரஞ் செய்வதினுலும் இச்சைமுதலிய ரஜோகுண விருத்திகளுடன் கூடியிருப்பதாலும் மனோமயம் சத்துவ ரஜோகுணங்களின் அவஸ்தையாம். விஞ்ஞானமயம் கேவலம் சத்துவகுணத்தின் அவஸ்தையாம். இவ்விதமாக அவஸ்தாபேதத்தால் ஒரே சூக்ஷ்மசரீரத்தில் மூன்றுகோசங்கள் சொல்லப்படுகின்றன. ஆத்மாவின் ஸ்வரூபம் ஆனந்தம். இதன் பிரதிபிம்பத்துடன் கூடியும் பிரியமோதப் பிரமோதங்களாகிற விருத்திகளின் லயத்துக்கு ஸ்தானமாயும் இருப்பது அவித்தையாகிற காரணதேகம். அதுவே ஆனந்தமயகோசம். இஷ்டவிஷயத்தைப் பார்க்கிறதினு லுண்டாகும் விருத்தி பிரிய மெனப்படும். அதை யடைவதாலுண்டாகும் விருத்தி மோத மெனப்

1. * ஈசுவரசரீரத்தில் ஈசுவரனது கோசங்க ளிருக்கின்றன.

2. ஜீவசரீரத்தில் ஜீவனது கோசங்கள் இருக்கின்றன.

கோசமென்பது உறைக்காம்.

---

படும். அதை யனுபவிப்பதா லுண்டாகும் விருத்தி பிரமோத மெனப்படும். இவ் விருத்திகள் ஜாக்கிரஸ்வப்னங்களில் புண்ணியகர்மத்தின் பலனுகும் சுகாநுபவத்திலுண்டாகின்றன. சுழுத்தியில் இவ்விருத்திகள் தமக்குக் காரணமான அஞ்ஞானத்தில் லயமாகின்றன. இந்த அஞ்ஞானம் ஆனந்தமயகோசமென்று சொல்லப்படுகின்றது. அன்னமயகோசம் போகஸ்தானம். சூக்ஷ்மசரீரம் போகசாதனம். பிராணமயகோசம் கிரியாசக்தியுள்ள காரியரூபம். மனோமயம் இச்சாசக்தியுள்ள காணரூபம். விஞ்ஞானமயம் ஞானசக்தியுள்ள கர்த்தாரூபம். ஆனந்தமயகோசம் போக்தாரூபம்.

* 1. சமஷ்டி அஞ்ஞானரூப மாயை ஈசுவரனது காரணசரீரமாம். அதுவே ஈசுவரனது ஆனந்தமயகோசமாம்.

2-4. ஜீவர்களது சூக்ஷ்மசரீரங்களின் சமஷ்டியாகிய ஹிரண்யகர்ப்பன் ஈசுவரனுடைய சூக்ஷ்மசரீரமாம். இதில் (1) விஞ்ஞானமய (2) மனோமய (3) பிராணமய வடிவ ஈசுவரனது மூன்று கோசங்களு மிருக்கின்றன. அவற்றில்,

(1) திக்குப்பாலகர்கள் வாயு சூரியன் வருணன் அசுவினிகுமாரர்கள் என்னும் இவருமான ஈசுவரனுடைய பஞ்சஞானேந்திரியங்களும், சமஷ்டி புத்தியாகிய மகதத்துவ வடிவ அல்லது சர்வபுத்திகளுக்கும் அபிமானியாகிய பிரஹ்மாவடிவ ஈசுவரனுடைய புத்தியும் சேர்ந்து ஈசுவரனுடைய விஞ்ஞானமயகோச மாகின்றது.

(2) மேற்சொல்லிய சுரோத்திர முதலியவற்றின் அதிஷ்டான தேவதைவடிவ ஐந்து ஈசுவரனது ஞானேந்திரியங்களும் சமஷ்டிமனவடிவ அகங்காரமயம் அல்லது எல்லோர் மனதின் அபிமானி சந்திரமயமென்னும் ஈசுவரனது மனமுஞ்சேர்ந்து ஈசுவரனுடைய மனோமயகோச மாகின்றது.

(3) அக்கினி இந்திரன் உபேந்திரன் பிரஜாபதி யமன் என்னும் ஐந்து ஈசுவரனுடைய கர்மேந்திரியங்களும், சமஷ்டிப்பிராணனும் அல்லது வாயுவின் அபிமான தேவதைவடிவ ஈசுவரனது பிராணனுஞ்சேர்ந்து ஈசுவரனுடைய பிராணமயகோச மாகின்றது.

5. சமஷ்டி ஸ்தூல சிருஷ்டியாகிய விராட்டு ஈசுவரனுடைய ஸ்தூலசரீரமாம். அது ஈசுவரனுடைய அன்னமயகோசமாம்.

ஜீவனது சரீரத்தில் ஜீவனது கோசங்க ளிருக்கின்றன. அவை கோசகாரமென்னும் கிருமியின் முள்ளினுற் கட்டப்பட்ட கூடாகிய கோசத்தைப்போல ஜீவனது திருஷ்டியினுல் அதன் நிஜவடிவப் பிரத்தியகாத்மாவை மறைப்பனவாகின்றன. அங்ஙனமே ஈசுவரனது சரீரத்திலுள்ள ஈசுவரனது கோசங்கள் ஈசனது திருஷ்டியினுல் அவ்வீசனது நிஜவடிவப் பிரஹ்மத்தை மறைப்பனவாகா. ஆனுல் ஜீவனது திருஷ்டியினுல் பிரஹ்மத்தை மறைப்பனவாம். ஆதலால் ஜீவனுக்கு வியஷ்டி பஞ்சகோசங்களினின்றும் எப்படிப் பிரத்தியகாத்மாவை வேறுபிரித்தல் கர்த்தவ்வியமோ, அப்படிச் சமஷ்டி கோசங்களினின்றும் பிரஹ்மத்தை வேறுபிரித்தலும் ஜீவனுக்கே கர்த்தவ்வியமாம். ஈசுவரனுக்கு ஆவரண மின்மையால் நித்தியமுத்தனு யிருத்தலால் கர்த்தவ்வியம் ஒன்றுமில்லை.

உறைபோலப் பஞ்சகோசங்கள் ஆத்மாவின் ஸ்வரூபத்தை மறைத்த லால் அன்னமயாதிகள் கோசங்களெனப்படுகின்றன. அநேக மந்தபுத்தியுள்ளவர்கள் பஞ்சகோசங்களிலுள்ள அநாத்ம பதார்த்தங்களின் ஒன்றை ஆத்மாவாக நினைத்து முக்கிய சாக்ஷியாகிய ஆத்மஸ்வரூபத்தினின்றும் விமுகர் (வேற்றுமைப் பார்வையினர்) களாகவே யிருக்கிறார்கள். ஆதலால் அன்னமயாதிகள் ஆத்மஸ்வரூபத்தை மறைக்கின்றன.

## 261. விரோசன சித்தாந்தம் (அன்னமயகோசம் ஆத்மா.)

அங்குச் சில பாமரர்களாகிய விரோசன மதத்தை யனுசரித்தவர்கள் ஸ்தூல சரீரவடிவ அன்னமயகோசத்தையே ஆத்மாவென்கிறார்கள். அவர்கள் சித்தாந்தத்திற்கு இவ்வாறு யுக்தி சொல்லுகிறார்கள்:—

1. எதில் நான் என்னும் புத்தி யுண்டாகிறதோ அது ஆத்மா. அந்த நான் என்னும் புத்தி ஸ்தூலசரீரத்தி லுண்டாகிறது.

(1) "நான் மனுஷ்யன், நான் பிராமணன்" என்னும் உணர்ச்சி எல்லோருக்கும் உண்டாகின்றது.

(2) மனுஷ்யத்தன்மை பிராமணத்தன்மைகள் ஸ்தூலசரீரத்திற்றான் இருக்கின்றன. ஆதலால் ஸ்தூலசரீரம் நான் என்னும் புத்திக்கு விஷயமாதலால் ஆத்மாவாம்.

2. அல்லது எதில் முக்கியமான பிரீதி (உணர்ச்சி) யுண்டாகிறதோ அது ஆத்மா.

(1) ஸ்திரீ புத்திரன் தனம் பசு முதலியன ஸ்தூலசரீரத்துக்கு உபயோகப்படுமாயின் அவற்றில் பிரீதி யுண்டாகிறது.

(2) ஸ்தூலசரீரத்திற்கு உபயோக மாகாவிடின் பிரீதி யுண்டாகிறதில்லை.

எதன் நிமித்தமாக அன்னிய பதார்த்தங்களில் பிரீதியுண்டாகிறதோ, அந்த ஸ்தூலசரீரத்திலேயே முக்கியமான பிரீதி யிருக்கிறது. ஆகையால் ஸ்தூலசரீரமே ஆத்மாவாம். அதனை வஸ்திரம் பூஷணம் அஞ்சனம் மஞ்சனம் நானாவித போஜனங்கள் முதலியவற்றால் சிங்காரித்துப் போஷித்தலே பரமபுருஷார்த்தமாம். இது அசுரஸ்வாமியாகிய * விரோசனர் சித்தாந்தம்.

---

* தேகாத்மவாதி மதம்:—சார்வாகமதத்தை யநுசரித்தவர்கள் வாயு முதலிய நாலு பூதங்களின் சங்காதவடிவ அல்லது ஐந்துபூதங்களின் சங்காதவடிவ தேகத்தை ஆத்மாவெனக்கொண்டு அதற்கு இந்த யுக்திகளைச் சொல்லுகிறார்கள்:—[1] நான் என்னும் புத்திக்கு விஷயமாவது ஆத்மா. "நான் மனுஷ்யன்; ஸ்தூலமாயிருக்கிறேன்; மெலிந்திருக்கிறேன்; நான் பிராமணன்" என்றல் முதலிய அநுபவத்தினால் மனுஷ்யத்தன்மை முதலிய தர்மவிசிஷ்ட ஸ்தூலதேகமே நான் என்னும் உணர்ச்சிக்கு விஷயமாகிறது. ஆத்

## 262. இந்திரிய ஆத்மவாதியின் மதம் (இந்திரியம் ஆத்மா).

வேறு சிலர் இவ்வாறு கூறுகின்றனர்:—ஸ்தூலசரீரம், ஆத்மாவன்று, ஆனால்,

---

லால் தேகம் ஆத்மா. [2] அல்லது பரமப்பிரீதிக்கு விஷயமாவது எதுவோ அது ஆத்மாவாம். இந்தத் தேகத்திற்கு உபகாரஞ்செய்தலாகிய நிமித்தத்தால் ஸ்திரீ புத்திர தனாதிகளும் பிரியமாகக் காணப்படுகின்றார்கள். அந்தத் தேகமே பரமப்பிரீதிக்கு விஷயமாகிறது. ஆதலால் பரமப்பிரீதிக்கு விஷயமாதலென்னும் லக்ஷணத்தினாலும் ஸ்தூலதேகமே ஆத்மாவாம். [3] அந்தத் தேகத்தை யலங்கரித்தல் போஷித்தல் முதலியவற்றாலுண்டாகிய போகமே பரமபுருஷார்த்தமாம். [4] மரணமே மோக்ஷமாம். [5] பிரத்தியக்ஷம் ஒன்றே பிரமாணமாம்; மற்றவை அப்பிரமாணமாமென்னும் இச்சார்வாகமதம் அசங்கதமாம். ஏனெனில், [1] "நான் பார்க்கிறேன், கேட்கிறேன், பேசுகிறேன்" என்றல் முதலிய கிரமத்தால் இந்திரியமும் நான் என்னும் உணர்ச்சிக்கு விஷயமாய்க் காணப்படுகின்றது. [2] "என்னுடைய தேகம் ஸ்தூலமாயிருக்கிறது அல்லது மெலிவாயிருக்கிறது" என்றல் முதலிய கிரமத்தால் தேகத்தில் மமதையின் விஷயமும் காணப்படுகிறது. மமதைக்கு விஷயமாவது அகந்தைக்கு விஷயமாகாது. இதனால் ஸ்தூல தேகத்தில், யான் என்னும் உணர்ச்சியின் வியபிசாரம் (பிறழ்ச்சி) இருக்கிறது. ஆதலால் தேகம் ஆத்மாவன்று. [3] ஸ்திரீ புத்திரன் தனமுதலியவற்றைவிடத் தேகத்தில் அதிகப்பிரீதி தோன்றுவதுபோல் தேகத்தினும் இந்திரியங்களில் அதிகப்பிரீதி காணப்படுகிறது. ஆகையால் ஸ்தூலதேகம் எல்லாவற்றினும் அதிகப் பிரீதிக்கு விஷயமன்று. இதனாலும் ஸ்தூலதேகம் ஆத்மாவன்று. [4] சேதனமே ஆத்மாவாம். ஜடமான பூதங்களின் சங்காதத்தில் சேதனத்தன்மை யின்மையினாலும் ஆத்மாவன்று. [5] பாக்குச் சுண்ணாம்புகளுடன் கூடிய தாம்பூலத்தில் சிகப்புவர்ணத்தைக் கொடுக்குஞ் சக்தியிருப்பதுபோல் பூதசமுதாயமான தேகத்தில் ஞானசக்தி யிருக்கிறதென்பது பொருந்தாது. ஏனெனின் அவ்வாறு பூதசமுதாயமான தேகத்தில் சேதனமிருந்தால் பூதசமுதாயவடிவ கடத்திலும் சேதனத்தன்மை யுண்டாதல் வேண்டும்; உண்டாகிறதில்லை. [6] சுழுத்தி, மூர்ச்சை, மரணமுதலிய அவஸ்தைகளில் கடம்போல் தேகமும் ஜடமாயிருக்கிறது. இது எல்லோருக்கும் தெரிந்தவிஷயமே. ஆகையால் ஜடதேகம் ஆத்மாவாகாது. [7] தேகமே ஆத்மாவானால் பாலசரீரத்துக்குப் பின்னமான யௌவனசரீரத்தில் "அவனே நான்" என்னும் பிரத்தியபிஞ்ஞை யுண்டாகலாகாது. அதுவோ உண்டாகின்றது. இதனாலும் தேகம் ஆத்மாவன்று [8] சரீரத்துக்கு ஜன்ம மரணாதிகளிருத்தலால் ஜன்மத்துக்கு முன்னும் மரணத்துக்குப் பின்னும் சரீரமில்லை; ஆனால் ஆத்மா இருக்கிறது. ஆத்மா இல்லையெனின் கிருதநாசம் (செய்தது அநுபவமின்றிக் கெடுதல்) அகிருதாப்பியாகமம் (செய்யாதது அநுபவத்திற்கு வருதல்) என்னும் தோஷங்கள் நேரிடும். இதனாலும் தேகம் ஆத்மாவன்று. [9] தேகத்தை யலங்கரித்தல் போஷித்தல் முதலிய போகங்களே புருஷார்த்தமென்பது பொருந்தாது. ஏனெனின் இச்சைக்கு விஷயமாவது புருஷார்த்த மெனப்படும். சுகப்பிராப்தியிலும் துக்கநிவிருத்தியிலும் எல்லோருக்கும் இச்சையிருத்தலால் அவை புருஷார்த்தமாம். எல்லாச் சுகங்களையும்விட அதிக சுகமும அத்தியந்த துக்கநிவிருத்தியும் பரமபுருஷார்த்த மெனப்படும். இவை மோக்ஷத்தி லிருக்கின்றன. போகங்களில் தோஷமிருத்தலால் அவை பரமபுருஷார்த்தமாகா. [10] தேகமே ஆத்மாவானால் மரணத்துக்குப் பிறகு தேகம் தகிக்கப்பட்டுப்போவதால் தேகவடிவ ஆத்மாவே யில்லாமையால் மரணம் மோக்ஷமென்பது சொல்லுதல் மாத்திரமாம்; மோக்ஷத்துக்கு இடமில்லை; பிரலாபம் (பிதற்றுதல்) மாத்திரந்தான்

1. ஸ்தூல சரீரத்தில் எது இருத்தலால் ஜீவனவியவகார முண்டாகிறதோ, எது இல்லாவிட்டால் மரணவியவகார முண்டாகிறதோ, அந்த ஆத்மா ஸ்தூல சரீரத்தினும் வேறும். ஜீவனமும் மரணமும் இந்திரியங்களின் அதினமா யிருக்கின்றன. சரீரத்தில் இந்திரிய முள்ளவரையில் ஜீவனமுண்டு. இந்திரியங்களில் ஏதேனுமொன்று இல்லாவிட்டால் அப்போது மரணம் சொல்லப்படுகிறது.

2. "நான் பார்க்கிறேன் பேசுகிறேன் கேட்கிறேன்" என்றிவ்வாறு "நான்" என்னும் புத்தி இந்திரியத்தி லிருக்கிறது.

ஆகையால் * இந்திரியமே ஆத்மாவாம்.

## 263. இரணியகர்ப்பனை உபாசிப்பவர் மதம் (பிராணன் ஆத்மா).

ஹிரண்யகர்ப்பவுபாஸகர் பிராணனை ஆத்மாவென்று சொல்லுகிறார்கள். அதில் இந்த யுக்தியைக் கூறுகின்றார்கள்.

1. மரணசமயத்தில் மூர்ச்சையுண்டானால் அப்போது சமீபத்திலிருக்கப்பட்ட அவன் சம்பந்திகளாகிய புத்திராதிகள் பிராணனிருந்தால் ஜீவித்திருப்பதாயும் பிராணனில்லாவிட்டால் இறந்துபோய்விட்டதாயும் அறிகிறார்கள்.

2. அல்லது சரீரத்தில் நேத்திரேந்திரியம் இல்லாவிடின் குருட்டுச் சரீரம் இருக்கிறது. அப்படியே சுரோத்திரேந்திரியமின்றிச் செவிடாயிருக்கிறது. வாக்கின்றி ஊமையாயிருக்கிறது. இவ்வாறு இந்திரியங்களின் வியாபாரமில்லாமலும் சரீரம் நிலைத்தேயிருக்கிறது. பிராணன் இல்லாமற்போனால் தேகம் அந்த க்ஷணமே மயானம்போல் அமங்களமும் பயங்கரமுமாய் விழுகிறது.

---

மிஞ்சுகிறது. [11] உண்ணப்படாத உணவில் திருப்தி்க்கு ஏதுவாந்தன்மை அநுமானப் பிரமாணத்தால் சித்தித்தலாலும் பரதேசத்தில் இறந்த பிதாவின்மரணம் சப்தப்பிரமாணத்தினால் சித்தித்தலாலும் இவைமுதலிய வேறு பிரமாணங்களாலும் வியவகாரஞ் சித்தித்தலால் பிரத்தியக்ஷப்பிரமாணம் ஒன்றனையே அங்கீகரித்தல் ஹடமாத்திரமாம். இவ்வாற்றால் தேகாத்மவாதி சார்வாகர்மதம் அசங்கதமாம்.

* சார்வாகரின் ஏகதேசியாகிய இந்திரியாத்மவாதிகளின் மதம் அசங்கதமாம். ஏனெனின் [1] எது இல்லாவிட்டால் சரீரமிருக்கமாட்டாதோ அது ஆத்மா. கண் முதலிய ஒவ்வொரு இந்திரியமும் நாசமாகியும் குருடு செவிடு முதலியனவாய்ச் சரீரமிருக்கிறது. ஆதலால் இந்திரியம் ஆத்மாவன்று. [2] நான் பார்க்கிறேன் கேட்கிறேன் என்றிவ்வாறு நான் என்னும் உணர்ச்சிக்கு இந்திரியம் விஷயமாகுதலால் இந்திரியமே ஆத்மாவாம் என்று இந்திரியாத்மவாதி சொல்வது சரியன்று. ஏனெனின் "நேத்திரமுடையவனாகிய நான் பார்க்கிறேன்" என்பது புருஷனுக்கு அபிப்பிராயம்; நேத்திரமாகிய நான் பார்க்கிறேன் என்பது அபிப்பிராயமன்று. ஆகையால் இந்த நான் என்னுமுணர்ச்சிக்கு விஷயம் இந்திரியத்தினும் வேறாகச் சித்திக்கிறது; இந்திரியமன்று. என்

3. "நான் பார்க்கிறேன், கேட்கிறேன்" என்னுமுணர்ச்சியினாலும் இந்திரியங்களுக்கு வேறாய் ஆத்மா இருப்பதாகச் சித்திக்கிறது. ஏனெனின், "நேத்திரஸ்வரூபமான நான் பார்க்கிறேன், சிரவணரூபமான நான் கேட்கிறேன்" என்று பிரதீதியுண்டாயின் இந்திரியமே ஆத்மாவாதல் சித்திக்கும். ஆனால் "நேத்திரமுடைய நான் பார்க்கிறேன், காதுடைய நான் கேட்கிறேன்" என்று பிரதீதியாகிறது.

ஆதலால் இந்திரியத்துக்கு வேறாகவே ஆத்மா இருக்கிறது.

4. சுழுத்தியில் சகல இந்திரியங்களும் இல்லை. அங்ஙனமாயினும் பிராணனிருத்தலால் ஜீவனவியவகார முண்டாகிறது. ஆகையால் ஜீவித்தலும் மரித்தலும் இந்திரியங்களின் அதீனமன்று; ஆனால் ஸ்தூலசரீரமும் பிராணனும் பிரிதலே மரணமென்பர். ஆகையால் ஜீவனமரணங்கள் பிராணாதீனமா யிருக்கின்றன. அந்தப் பிராணனே * ஆத்மாவாம்.

---

பார்வை மந்தமாயிருக்கிறது. என் வாக்குத் தெளிவாயிருக்கிறதென்று இந்திரியம் மமதைக்கும் விஷயமாதல் காணப்படுதலால் நான் என்னும் உணர்ச்சிக்கு விஷயமாதல் பிறழுகின்றது. ஆகையால் இந்திரியம் ஆத்மாவன்று. [3] எவன் எதை யறிகிறானோ அவன் அதனினும் கடத்தைப் பார்ப்பவனைப்போல வேறாயிருக்கிறான் என்னும் நியமத்தால் இந்திரியங்களின் மந்தத்தன்மை தீக்ஷணத்தன்மைகளை யறிகிற ஆத்மா அவற்றின் (இந்திரியத்துக்கு) வேறெனச் சித்திக்கிறது. [4] மனதிற்கு வியாகூலத்தன்மை முதலியன உண்டாகியகாலத்துச் சிரவணமுதலிய தத்தம் வியாபாரம் சித்தியாமையால் இந்திரியங்களின் ஜடத்தன்மை யநுபவசித்தமாம். ஆதலால் ஜடமாயிருத்தலாலும் இந்திரியம் ஆத்மாவன்று. [5] இவ்வாறிருக்க ஹடமாய் இந்திரியமே சேதனம் என்று சொல்லும் வாதியை இது கேட்கவேண்டும். ஒரே இந்திரியம் சேதனமா? இந்திரியங்களெல்லாஞ் சேர்ந்தது சேதனமா? அல்லது எல்லா இந்திரியமும் தனித்தனியே சேதனமா? இவை மூன்று விகற்பங்கள். அவற்றுள் முதற்பக்ஷம் ஒவ்வாது. ஏனெனின், எந்த இந்திரியத்தைச் சேதனமாகச் சொல்லுகிறோமோ அது இல்லாவிடினும் ஞானமும் ஜீவனமும் காணப்படுகின்றன. ஆகையால் ஒரே இந்திரியம சேதனமன்று. இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது. ஓரிந்திரியம் நஷ்டமாயின் சமுதாயத்திற்கு ஹானி வந்துவிடுகிறது. அதனால் ஞானமும், ஜீவனமும் இருக்கலாகாது; அதுவோ இருக்கிறது. ஆதலால் இந்திரியங்களின் சமுதாயமும் சேதனமன்று. மூன்றாவது பக்ஷமும் பொருந்தாது. ஒவ்வோரிந்திரியமும் தனித்தனியே ஆத்மாவானால் ஒரு சரீரத்தில் பத்து சேதனமாகிய ஆத்மாக்களிருக்கவேண்டும். அவ்வெல்லாவற்றின் தனித்தனி இச்சையினால் ஒரு வாழை மரத்திற் கட்டப்பட்ட பத்து யானைகளால் அந்த வாழை பங்கப்படுவதுபோலத் தேகம் பங்கமாய்விடும். ஆகையால் எல்லாவிந்திரியமும் தனித்தனியே சேதனமன்று. இவ்விதத்தால் இந்திரியம் அசேதனமா யிருத்தலால் ஆத்மாவன்று. [6] சுருதியிற் சொல்லிய இந்திரியஸம்வாதம் இந்திரிய அபிமானி தேவதைகளுடையதாம்; இதனாலும் இந்திரியம் சேதனமென்பது பொருந்தவில்லை. ஆதலால் இந்திரியமே ஆத்மாவென்னும் வாதியின் மதம் அசங்கதம்.

* பிராணாத்மவாதி கண்டனம்:—சமஷ்டிப் பிராணனை யுபாஸிக்கிற ஹைரண்யகர்ப்பர்களுடைய மதமும் சரியன்று. ஏனெனின் [1] பாஹியவாயுபோல் பிராணனும் வாயுவாயிருத்தலால்பிராணன் ஆத்மாவன்று,[2] பிராணன்பார்க்கப்படாததினால்மரணம்

## 264. மன ஆத்மவாதிமதம் (மனம் ஆத்மா).

வேறுசிலர் இவ்வாறு கூறுகின்றனர்:—

1. பிராணன் ஜடம்? ஆகையால் அது கடம்போல அனாத்மாவாம்.

2. பந்தமோக்ஷங்கள் மனத்தின் ஆதீனமாயிருக்கின்றன.

(1) விஷயத்தில் ஆஸக்தியையடைந்த மனம் பந்தத்துக்கு ஹேது.

(2) விஷயவாசனையின்றிய மனம் மோக்ஷத்துக்கு ஹேதுவாம்.

3. மனச்சம்பந்தத்தினாலேயே இந்திரியம் ஞானத்துக்கு ஹேதுவாம்.

மனதின் சம்பந்தமின்றி இந்திரியத்தால் ஞானமுண்டாகிறதில்லை.

ஆகையால் சகல வியவகாரங்களுக்கும் மனதே ஹேதுவாம். * அதுவே ஆத்மா.

---

நியமமாகச் சம்பவிக்கிறதில்லை. ஏனெனின், விருக்ஷமுதலியவற்றில் பிராணன் பார்க்கப்படாவிட்டாலும் அவை ஜீவிப்பது நன்றாய்த் தெரிகிறது. மனுஷ்யன் மூர்ச்சையடையும்போதும் பிராணனிருக்கிறதாகத் தெரிகிறதில்லை. அதனால் அவன் இறந்துபோய் விட்டதாகச் சொல்லப்படுகிறதில்லை. அவன் ஜீவித்துக்கொண்டேயிருக்கிறான். ஆகையால் பிராணன் ஆத்மாவன்று. [3] தூங்கிக்கொண்டிருக்கும்போது பிராணன் இருந்தும் ஒருவன் ஒருவஸ்துவை யெடுத்துக்கொண்டு போவானாயின் அவனைத் தடுக்கிறதில்லை. ஓர் சம்பந்திவந்தால் அவனை யுபசரிக்கிறதுமில்லை. ஆதலால் பிராணன் ஜடமாம். இதனாலேயே அது ஆத்மாவன்று. [4] பிராணன் வெளியே போகிறதினால் தேகம் மரிக்கிறது. ஆகையால் பிராணனே ஆத்மாவென்று பிராணாத்மவாதி சொல்வதும் அசங்கதமாம். ஏனெனின், ஜடராக்கினி வெளியே போவதினாலும் தேகம் மரிக்கிறது. மரணத்துக்குப் பிராணன் வெளியேபோவதே காரணமன்று; நியமிக்கப்படுகிறது. சுருதியில் பிராணனைச் சிரேஷ்டமாகச் சொன்னது பிராண உபாஸனையிற் பிரவிருத்தியுண்டாகும்பொருட்டான ஸ்துதிமாத்திரமேயாம். ஆகலால் அது அர்த்தவாதவடிவமாம். [5] சுருதியில் பிராணமயாதிகோசங்களை ஆத்மாவென்று சொன்னதற்குத் தாற்பரியம் யாதெனின், ஸ்தூலாருந்ததிநியாயத்தால்அதிஷ்டானமான பிரத்தியக்பின்ன பரமாத்மாவை யறிவிப்பதிலேயே தாற்பரியமாம். [6] சுருதியில் பிராணன் இந்திரியங்களுடன் சம்வாதஞ் செய்ததாகவும், தேகத்தில் பிரவேசித்ததாகவும் சொன்னது பிராண அபிமானிதேவதையை யுத்தேசித்துச் சொன்னதாம். [7] பசியால் என் பிராணன் போகிறது; போஜனத்தால் என் பிராணன் திருப்தியடைகிறது என்று இவ்வாறு பிராணன் மமதைக்கு விஷயமாவதால் அகந்தைக்கு விஷயமாகிறதில்லை. இதனாலும் பிராணன் ஆத்மாவன்று. [8] தன்பிராணன் வெளியே போகிறதும் உள்ளே வருவதும் தன்னால் அநுபவிக்கப்படுதலால் பிராணனை யறிகிற ஆத்மா பிராணனுக்கு வேறாகவே இருக்கிறது.

* மன ஆத்மவாதிமதகண்டனம்:—நாரதபாஞ்சராத்திரத்தை யனுசரித்தவர்கள் மனமே ஆத்மாவென்று சொல்லுகிறார்கள். இது சரியன்று. ஏனெனின் (1) வாய்ச்சி, உளி முதலியவற்றைப்போல மனது கரணமாயிருத்தலால் அது ஆத்மாவன்று. (2) சுழுத்தி முதலியவற்றில் சாமானியசேதனம் இருத்தலால் மனமிருந்தால் சேதனமிருக்

## 265. விஞ்ஞானவாதி பௌத்தர் மதம் (புத்தி ஆத்மா).

க்ஷணிகவிஞ்ஞானவாதி பௌத்தர் இவ்வாறு கூறுகின்றனர் :—மனதின் வியாபாரம் புத்தியின் அதீனமா யிருக்கிறது. ஏனெனின் புத்தியின் ஆகாரமே மனமாம். ஆதலால் க்ஷணிக விஞ்ஞானரூபபுத்தியே ஆத்மா, மனது ஆத்மாவன்று.

அவர்கள் அபிப்பிராயம் இதுவாம்:—

1. சகலபதார்த்தங்களும் விஞ்ஞானத்தின் ஆகாரமாகவே யிருக்கின்றன.

2. அந்த விஞ்ஞானம் பிரகாசரூபம்.

3. ஒவ்வொரு க்ஷணத்திலும் விஞ்ஞான முண்டாகி நாசமடைகிறது.

முன் விஞ்ஞானத்திற்குச் சமானமான வேறு விஞ்ஞான முற்பத்தியாதலால் முன் விஞ்ஞானம் நாசமடைகிறது. அப்படியே மூன்றாவது விஞ்ஞானத்தின் உற்பத்தி, இரண்டாவது விஞ்ஞானத்தின் நாசம், நான்காவதினுற்பத்தி, மூன்றாவதின் நாசம், இவ்வாறு நதியின் பிரவாகம்போல் விஞ்ஞானத்தின் தாரை தொடர்ந்துகொண்டே யிருக்கிறது. அந்த விஞ்ஞானதாரை இருவகையாம்:—1. ஒன்று ஆலயவிஞ்ஞானதாரை; 2. மற்றொன்று பிரவிருத்தி விஞ்ஞானதாரை.

1. நான் நான் என்னும் விஞ்ஞானதாரையை ஆலயவிஞ்ஞானதாரை யென்பர். அதனையே புத்தியென்பர்.

---

கிறது. மனமில்லாவிட்டால் சேதனமில்லையென்னும் அந்வயவெதிரேகங்களுக்குப் பங்கம் வருதலால் மனம் சேதனமன்று. ஆனால் ஜடமாம்: ஆகையால் அது ஆத்மாவன்று. (3) என் மனது வேறிடத்திற் போயிருந்தது, இப்போது வந்துவிட்டது என்று சொல்லுவதினால் மனது மமதைக்கு விஷயமாதலால் அகந்தைக்கு விஷயமாகிறதில்லை. ஆதலால் மனதின் ஸ்திரத்தன்மையையும் அஸ்திரத்தன்மையையும் அறிகிற ஆத்மா மனதினும் வேறாகச் சித்திக்கிறது. (4) சேதனத்தின் ஆபாஸத்துடன் கூடியதாயிருத்தலால் மனது போக்தாவாயிருக்கிறது; சுவதந்திரமாயில்லை. ஆகையால் போக்தாவாதற்றன்மையினாலும் மனம் ஆத்மாவன்று. (5) "மனிதனுடைய பந்தமோக்ஷங்களுக்குக் காரணம் மனமே. விஷயத்தில் ஆஸக்தியடைந்த மனது பந்தத்தின்பொருட்டாம். நிர்விஷயமான (வாசனையின் றியதான) மனது மோக்ஷத்தின்பொருட்டாம்" என்னும் சுருதி மனம் ஞானப்பிராப்திவாயிலாக மனதைப் பாதித்து மோக்ஷத்துக்குக் காரணமும், விஷயவாசனையினால் மோக்ஷசாதனத்தைப் பிரதிபந்திக்கும் வாயிலாக அத்தியாசத்தினிருப்பால் பந்தத்திற்குக் காரணமுமா யிருக்கின்றது என்பதைச் சொல்லுகின்றது. மனம் ஆத்மாவென்று சொல்லுவதில்லை. ஆதலால் இந்தச் சுருதி மனது ஆத்மாவென்பதில் பிரமாணமன்று. ஆனால் பந்தத்தினது சாதனத்தினின்றும் நீங்குதலையும் மோக்ஷசாதனத்திற் பிரவிருத்தித்தலையும் அறிவிப்பதாம். (6) மனோமயகோசமே ஆத்மாவென்று சொல்லும் சுருதிக்குத் தாற்பரியம் முன் டிப்பணியிற் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வாற்றால் மனது ஆத்மாவென்பதும் அசங்கதமாம்.

2. "இது கடம், இது சரீரம்" என்னும் விஞ்ஞானதாரையைப் பிரவிருத்திவிஞ்ஞானதாரை என்பர்.

ஆலயவிஞ்ஞானதாரையினின்றும் பிரவிருத்திவிஞ்ஞானதாரை உற்பத்தியாகிறது. மனதின் ஸ்வரூபமும் பிரவிருத்திவிஞ்ஞானதாரையிலிருக்கிறது; ஆதலால் ஆலயவிஞ்ஞானதாரைவடிவ புத்தியின் காரியமாம். அந்தப் புத்தியே ஆத்மா.

ஆலயவிஞ்ஞானதாரையில் பிரவிருத்திவிஞ்ஞானதாரையின் பாதத்தைச் சிந்தித்தலால் நிர்விசேஷ க்ஷணிகவிஞ்ஞானதாரையின் ஸ்திதியே அவர்கள் மதத்தில் மோக்ஷமாம்.

இவ்விருத்தால் விஞ்ஞானவாதிகள் * புத்தியையே க்ஷணிகரூபமாயும் ஸ்வயம்பிரகாசரூபமாயும் கற்பித்து ஆத்மாவென்கிறார்கள்.

---

* விஞ்ஞானவாதிமதம் :— இது புத்தனுடைய சிஷ்யனாகிய யோகாசாரனை யநுசரித்தவர் க்ஷணிக விஞ்ஞான புத்தியை ஆத்மா வென்பர். அது சரியன்று. ஏனெனின் (1) ரூபாதிகளின் ஞானரூபகாரியத்துக்கு நேத்திராதி இந்திரியம் கரண (சாதன)மாக இருப்பதுபோல் நிச்சயரூப காரியத்துக்குக் காரணமாக இருத்தலால் புத்தி ஆத்மாவாகாது. ஆனால் எல்லாப் பதார்த்தங்களையும் நிச்சயஞ்செய்யும் புத்தியை அறிவதே ஆத்மாவாம். (2) அந்த ஆத்மா பிரகாசஸ்வரூபத்தால் எப்போதும் பிரகாசிக்கிறது. ஆதலால் பாவிய(ரூப)பாஸக(சூரியாதிப்பிரகாச)பேதம்போல் பாவியமான புத்திக்குவேறான பாஸகம் ஆத்மாவாம். தீபாதிகளின் பிரகாசம் கடாதிகளின் ஆகாரத்தையடைந்து மிசிரபாவத்தா(கலப்பினு)ல் பிரகாசிப்பதாயிருக்கின்றது. என்றாலும் வாஸ்தவத்தில் வேறு சுபாவமுடையதா யிருக்கிறது. அதுபோல ஞானஸ்வரூபமான ஆத்மா புத்திவிருத்தியுடன் சேர்ந்து அதன் ஆகாரத்தையடைந்து கலப்பினால் பிரகாசிப்பதாயினும் உண்மையில் புத்திவிருத்திகளினும்வேறாகவும் நித்தியசுத்தமாகவுமிருக்கிறது. எங்ஙனம் ஒரே பிராஹ்மணன் பாடுதற்றொழிலால் பாடகனென்றும் சமயற்றொழிலால் சமையற்காரனென்றும் சொல்லப்படுகிறான். அதுபோல அபஞ்சீகிருதபூதங்களின் கலப்பும் சத்துவகுணத்தினது அம்சங்களின் காரியமாகிய அந்தக்கரணம் எதுவோ அது நிச்சயவடிவக் கிரியையினால் புத்தியென்றும் சங்கற்ப விகற்பக் கிரியையினால் மனமென்றும் சொல்லப்படுகிறது. ஆதலால் அகங்காரமுடைய ஆந்தரவிருத்தியாகிய புத்தியும் இதுவெனும்வடிவ பாகியவிருத்தியாகிய மனதும்அந்தக்கரணத்தினும் வேறாகாது. இவ்வாறு பௌதிகமாதலால் தேகம் இந்திரிய மனமென்பவற்றைப்போல புத்தி அநாத்மாவாம். (4) கடவல்லி யுபநிஷத்தின் மூன்றாவது வல்லியில் ஆத்மாவை ரதிகனாயும் தேகத்தை ரதமாயும் புத்தியைச் சாரதியாயும் சொல்லப்பட்டிருக்கிறது. ரதிகனைவிட சாரதி வேறாதலால் புத்தி ஆத்மாவன்று. (5) என்புத்தி மந்தமாயிருக்கிறது; தீவிரமாயிருக்கிறது என்பதில் மமதைக்கு விஷயமாயிருக்கிறது; (6) ஆகையால் புத்தி அகந்தைக்கு விஷயமாகமாட்டாது. (7) ஆத்மா க்ஷணிகரூபமென்று சொல்வதுஞ் சரியன்று. (1) ஆத்மா க்ஷணிகமானால் முதல் வருஷத்தில் கடன் கொடுத்தவன் மறுவருஷத்தில் அதைக் கேட்கக்கூடாது. முதல் க்ஷணத்தில் போஜனஞ் செய்தவன் மறுக்ஷணத்தில் இல்லாதபடியால் போஜனத்தின் முடிவில் நான் திருப்தியடைந்தேனென்று சொல்லக்கூடாது. ஆனால் அப்படிச்சொல்வதால் ஆத்மா க்ஷணிகரூபமன்று. (2) ஆத்மா க்ஷணிகரூபமானால் மோக்ஷநிமித்த சாதனங்கள் வியர்த்தமாய் விடும். இதன் கண்டனம் விரிவாய் அறிய விரும்புவோர் ஸ்ரீபஞ்சதசியின் சித்திரதீபத்தில் 74-வது சுலோகத்தின் டிப்பணத்திற் காண்க.

## 266. பட்டர்மதம் (ஆநந்தமயகோசமே ஆத்மா).

பூர்வமீமாம்ஸையின் வார்த்திககாரரானபட்டர் இவ்வாறு சொல்லுகிறார்: மின்னல்போல ஆத்மா க்ஷணிகரூபமன்று. ஆனால் ஸ்திரஸ்வரூபமான ஆத்மா (1) ஜடரூபமாயும், (2) சேதனரூபமாயும் இருக்கிறது. அவருடைய அபிப்பிராயம் இதுவாம்:—

1. சுழுத்தியிலிருந்து விழித்துக்கொண்டவன் "நான் ஜடமாகத் தூங்கினே" னென்று சொல்லுகிறான். ஆதலால் ஆத்மா ஜடரூபமென்று சித்திக்கிறது.

2. விழித்தவனுக்கு ஸ்மிருதியுண்டாகிறது. அறியப்படாத பதார்த்தத்தின் ஸ்மிருதி யுண்டாகாது. சுழுத்தியில் ஆத்மஸ்வரூபத்திற்கு வேறான யாதொரு ஞானசாதனமுமில்லை. ஆகையால் ஸ்மிருதிக்குக் காரணமாவது சுழுத்தியிலுள்ள ஞானமே. அது ஆத்மாவின் ஸ்வரூபமேயாம்.

இவ்விதமாக ஆத்மா மின்மினிப்போல் பிரகாசரூபமாயும் அப்பிரகாசரூபமாயு மிருக்கிறது.

1. ஞானரூபமா யிருத்தலால் பிரகாசரூபமா யிருக்கிறது.

2. ஜடமாயிருப்பதால் அப்பிரகாசரூபமா யிருக்கிறது.

அந்தப் பிரகாசரூபமாயும் அப்பிரகாசரூபமாயு மிருப்பது ஆநந்தமயகோசமாம். ஏனெனின், சுழுத்தியிலுள்ள சேதனத்தின் ஆபாஸசகித அஞ்ஞானம் ஆநந்தமயகோச மெனப்படுகிறது. அங்கு ஆபாஸமோ பிரகாசரூபமாயும் அஞ்ஞானம் அப்பிரகாசரூபமாயும் இருக்கின்றன. ஆதலால் பட்டர்மதத்தில் * ஆநந்தமயகோசமே ஆத்மாவெனச் சித்திக்கிறது.

---

* ஆத்மாவை ஜடசேதனமான இரண்டுவடிவமாகச் சொல்லும் பட்டர்மதம் அசங்கதமாம். ஏனெனின், இருளொளி என்பதுபோலும் இம்மனிதன் கடமென்பதுபோலும் ஒரு வஸ்துவில் ஜடசேதனங்களாகிய இரண்டுவடிவம் விருத்தமாம். இரண்டு அம்சம் அங்கீகரிக்கினும் ஜட அம்சம் கோசரமும் சேதனம்சம் அகோசரமுமாம். இரண்டு அம்சங்களும் அநுபவகோசரமன்று. ஒரே ஆத்மாவில் இந்த விலக்ஷணத்தன்மை சம்பவியாது. ஒரே தண்டத்தைப் பார்ப்பதினால் தண்டியென்பதில்லை. தண்டத்தையும் புருஷனையும் பார்த்தலால் தண்டியென்பர். அவ்வாறு ஒரே ஜடாம்சத்தின் ஞானத்தால் இரண்டு வடிவமான ஆத்மா சித்திக்கிறதில்லை. சேதன அம்சத்தையும் அநுபவகோசரமெனக்கொள்ளின் அது ஜடமும் கற்பிதமுமாம். மேலும் ஹடமாய் இரண்டு அம்சங்களையும்அங்கீகரிக்கின் பட்டமதஸ்தரை இதுகேட்பாம்:—ஆத்மாவின் ஜடசேதனமான இரண்டம்சங்களுக்கும் என்னசம்பந்தமிருக்கிறது? சம்யோகமா? தாதாத்மியமா? விஷயவிஷயித்தன்மையா? முதற்பக்ஷத்தில் அநித்தியமான இரண்டு திரவியங்களுக்கே ஸம்யோகசம்பந்த மிருத்தல் நியமமாகலின் ஆத்மா அநித்தியமாகும். இரண்டாவது பக்ஷத்தில் சித்ஜடமான இரண்டு அம்சங்களும் ஒரு ஸ்வரூபமா யிருத்தலால் சித்தம்சம் ஜடமாகும்; ஜடாம்சம் சித்தாகும். மூன்றாவது பக்ஷத்தில் கடம்போல் இரண்டு அம்சங்களும் அநாத்மாவாகும். சுருதியில் ஆத்மா விஞ்ஞானகனமென்று சொல்லியிருத்தலால் ஆத்மாவின் பாதிபாகம் ஜடமென்பதில் பிரமாணமில்லை. ஆத்மாவின் ஜடத்தன்மையைச் சம்பாதிக்கும் எந்தஸ்மிருதி சொல்லப்பட்டதோ அது சுழுத்தியிலுள்ள அஞ்ஞானத்தையே விஷயஞ்செய்கிறது; ஆத்மாவின் ஜடத்தன்மையை விஷயஞ்செய்கிறதில்லை. இவ்வாற்றால் ஆத்மாவிற்கு ஜடசேதனமென்னும் இரண்டுவடிவம் அசங்கதமாம்.

**267. மாத்தியமிக பௌத்தர்மதம் (ஆநந்தமயகோசம் ஆத்மா).**

சூனியவாதி பௌத்தர்கள் இவ்வாறு கூறுகின்றனர்:—ஆத்மா நிரம்சமாம். ஆதலால் ஒரே ஆத்மாவுக்குப் பிரகாசரூபமும் அப்பிரகாசரூபமும் சொல்லுதல் பொருந்தாது. மின்மினியின் ஓரம்சம் பிரகாசமாயும் மற்றோரம்சம் அப்பிரகாசமாயு மிருக்கிறது. அதுபோல அம்சமில்லாத ஆத்மாவில் இரண்டு ரூபங்களைச் சொல்லுதல் அயுக்தமாம். ஆதலால்,

1. இரண்டு ரூபங்கள் சித்தித்தற்பொருட்டு ஆத்மாவை அம்சமுடையதாகக் கொள்ளவேண்டும்.

2. அம்சமுடைய பதார்த்தங்களாகிய கடாதிகள் உற்பத்தி நாசமுடையனவா யிருக்கின்றன. அதுபோல் ஆத்மாவும் அம்சமுடையதா யிருத்தலால் உற்பத்தி நாசமுடையதாகவே கொள்ளவேண்டும்.

1. உற்பத்தி நாசங்களுடையதான பதார்த்தம் உற்பத்திக்கு முன்னும் நாசத்துக்குப் பின்னும் அசத்தாம். ஆதியந்தங்களில் அசத்தாயிருப்பது எதுவோ அது மத்தியிலும் சத்தாயிராது. ஆனால் மத்தியிலும் அசத்தாகவே யிருக்கும். ஆகையால் ஆத்மா அசத்ரூபமாம்.

2. அங்ஙனமே ஆத்மாவுக்கு வேறான சகலபதார்த்தங்களும் உற்பத்தி நாசமுடையனவாம். ஆதலால் அசத்ரூபமாம்.

இவ்விதத்தால் ஆத்மாவும் அநாத்மாக்களுமான சகல வஸ்துக்களும் அசத்ரூபமா யிருத்தலால் சூனியமே பரமதத்துவமாம். இது சூன்னியவாதியாகிய மாத்தியமிக பௌத்தனது மதம்.

அவர்களும் அஞ்ஞானரூப ஆனந்தமயகோசத்தைப் பிரதிபாதிக்கிறார்கள். ஏனெனின், அஞ்ஞானம் மூன்றுவிதமாய் விளங்குகிறது:—

1. அத்வைத சாஸ்திரத்தின் ஸம்ஸ்காரமில்லாத மூடர்களுக்கோ ஜகத்ரூப பரிணாமத்தை யடைந்த அஞ்ஞானம் சத்தியமாய்த் தோன்றுகின்றது.

2. அத்வைத சாஸ்திரானுசாரமான யுக்தியில் நிபுணர்களாகிய பண்டிதர்களுக்கு அஞ்ஞானமும் அதன் காரியமான ஜகத்தும் சதசத்துக்கு விலக்ஷணமான அநிர்வசனீயரூபமாய் விளங்குகின்றன.

3. ஞானநிஷ்டையையடைந்த ஜீவன்முக்தவித்துவானுக்குக் காரியசகிதமான அஞ்ஞானம் துச்சவடிவமாகத் தோற்றுகிறது.

துச்சம், அசத்து, சூன்யம் என்னும் இம்மூன்றும் ஒரே அர்த்தத்தைத் தருகின்றன.

இவ்விதமாக ஜீவன்முக்தர்களுக்குத் துச்சவடிவமாகத் தோற்றும் அஞ்ஞானத்தில் மோகமடைந்து சூன்யவாதி பரமபுருஷார்த்தத்தை அறிகிறதில்லை. ஆனால் துச்சவடிவ* ஆநந்தமயகோசத்தினையே ஆத்மாவென்பர்.

---

* எல்லாம் சூன்யம், சூன்யமே பரமதத்துவம், சுழுத்தியிலுள்ள அஞ்ஞானரூப ஆனந்தமயகோசமே ஆத்மா என்னும் இம்மதம் சரியன்று. ஏனெனின், சூன்யம் சாக்ஷி

## 268. பிரபாகர நையாயிகர்மதம் (ஆநந்தமயகோசம் ஆத்மா).

பூர்வமீமாம்ஸையின் ஏகதேசியாகிய பிரபாகரரும் நையாயிகரும் இவ்வாறு கூறுகின்றனர்:— ஆத்மா சூனியரூபமன்று. ஏனெனின் ஆத்மாவைச் சூனியரூபமாகக் கொள்ளும் அவனை இது கேட்பாம்:— 1. சூன்யரூபத்தை நீ அனுபவித்திருக்கிறாயா? 2. இல்லையா?

1. சூனியத்தை அநுபவித்ததாகச் சொல்லும்பக்ஷத்தில் எதனால் சூனியம் அநுபவிக்கப்படுகிறதோ அந்த ஆத்மா சூன்யத்துக்கு விலக்ஷணமென்று சித்திக்கிறது.

2. சூனியத்தை அநுபவிக்கவில்லையெனின் சூனியமில்லை யென்பது சித்தித்தது.

இவ்விதத்தால் சூனியத்துக்கு விலக்ஷண்மானது ஆத்மாவாம்.

1. அதில் மனதின் ஸையோகத்தினால் ஞானமுண்டாகிறது.

2. அந்த ஞானகுணத்தால் ஆத்மா சேதன மெனப்படுகிறது.

3. ஸ்வரூபமாக ஆத்மா ஜடமாம்.

4. அவ்வாறு சுகம், துக்கம், இச்சை, துவேஷம், பிரயத்தனம், தர்மம், அதர்மம் முதலிய குணங்கள் ஆத்மாவி லிருக்கின்றன.

அவர்கள் மதத்திலும் ஆநந்தமயகோசமே ஆத்மாவாம்.

விஞ்ஞானமயகோசத்திலுள்ள புத்தி ஆத்மாவின் ஞானகுண மெனப்படுகின்றது. ஏனெனின் ஆநந்தமயகோசத்தில் சேதனம் கூடமாயிருக்கிறது; விவேகமில்லாதவனுக்குத் தோற்றுகிறதில்லை. பிரபாகர நையாயிகர்கள் சுழுத்தியில் ஆத்மாவை ஞானமில்லாததாக நினைத்து ஸ்வரூபமாக ஜடமென்கிறார்கள். ஆகையால் கூடசேதனத்தையுடைய ஆநந்தமயகோசத்திலேயே அவர்களுக்கு ஆத்மப்பிராந்தி யிருக்கிறது.

---

சகிதமாயிருக்கிறதா? அல்லது சாக்ஷிரகிதமாயிருக்கிறதா? அல்லது ஸ்வப்பிரகாசமா? என்றுமூன்றுவிகற்ப முண்டாகிறது. அவற்றுள்,முதற்பக்ஷத்தைக் கூறின், சூனியத்தின் சாக்ஷி எதுவோ அது சூனியத்துக்கு வேறானதெனச் சித்திக்கும். இரண்டாவது பக்ஷத்தைக் கூறின், சாக்ஷிரகிதசூனியமே சித்தியாது. மூன்றாவது பக்ஷத்தைக் கூறின், ஸ்வப்பிரகாசத்தன்மையால் நம்மால் விரும்பப்பட்ட பிரஹ்மமே சூநியமெனனும் வேறு பெயரால் சித்தித்தலால் சூனியமென்பது சித்திக்கவில்லை.

"இந்த ஜகத்து முன் அசத்தாகவே இருந்தது" என்னும் சாந்தோக்கிய சுருதியின் வாக்கியம் முன்பின் விரோதத்தால் சூனியத்தைப் பிரதிபாதித்தலில் இல்லை. ஆனால் நையாயிகர் வைசேஷிகர் பௌத்தர் முதலிய வாதிகள் பிராகபாவ முதலியவற்றை ஜகத்திற்குக் காரணமாகக் கொள்ளுகின்றனர். அவற்றை யநுவதித்து அவ்விபரீதக்கொள்கையை நிவர்த்திப்பதிலேயே முற்கூறிய சுருதிக்குத் தாற்பரியமாம். இவ்வாற்றால் சூனியவாதியின் மதம் அசங்கதமாம்.

அன்றியும் ஆத்மஸ்வரூபமான நித்தியஞானத்தை ஜீவனிடத்துக்கொள்ளவில்லை; ஆனால் அநித்தியஞானமென்று கொண்டிருக்கிறார்கள். அந்த அநித்தியஞானம் சித்தாந்தத்தில் அந்தக்கரணத்தின் விருத்தியாகிய பித்திரூபமாயிருக்கிறது. இவ்விதத்தால் பிரபாகர நையாயிக மதத்தில் ஆநந்தமயகோசம் ஆத்மாவாம். புத்தி அதன் குணமாம். அவர்கள் * மதமும் நலமுடையதன்று. ஏனெனின்,

## 269. ஜீவனது பஞ்சகோசத்தினைப்போல ஈசுவரனது பஞ்சகோசங்களால் அவரது சொரூபத்தை மறைத்தல்.

1. ஞானத்துக்கு வேறான ஜடவஸ்துக்களாகிய கடாதிகள் அநித்தியமாயிருக்கின்றன. ஆத்மாவும் ஞானஸ்வரூபமாகாவிடின், கடாதிகள்போல் ஜடமாய் அநித்தியமாய்விடும்.

2. ஆத்மா அநித்தியமானால் மோக்ஷத்தின்பொருட்டான சாதனங்கள் நிஷ்பிரயோசனமாய்விடும்.

இவ்விதத்தால் வேதாந்தவாக்கியத்தில் விசுவாசமில்லாத அநேக பகிர்முக புருஷர்கள் பஞ்சகோசங்களிலேயே ஒன்றை ஆத்மாவாகக்கொண்டு முக்கியமான ஆத்மஸ்வரூபமான சாக்ஷியை அறிகிறதில்லை. ஆதலால் அன்னமயாதி கோசங்கள் ஆத்மாவை மறைத்தலால் கோசங்களெனப்படுகின்றன.

ஜீவனது பஞ்சகோசங்கள் ஜீவனது யதார்த்தஸ்வரூபமான சாக்ஷியை மறைப்பதுபோல ஈசுவரனது சமஷ்டி பஞ்சகோசங்களும் ஈசுவரனது யதார்த்த ஸ்வரூபத்தை † மறைக்கின்றன. ஏனெனின் ஈவரனுடைய யதார்த்தஸ்வரூபமோ தத்பதலக்ஷியமாம். அதனைவிட்டு,

1. சிலர் மாயாரூப ஆநந்தமயகோசத்துடன்கூடிய அந்தரியாமியாகிய தத்பதவாச்சியத்தைப் பரமதத்துவமென்று சொல்லுகிறார்கள்.

2. அவ்வாறே ஹிரண்யகர்ப்பன், வைசுவாநரன், விஷ்ணு, பிரமா, சிவன், கணேசன், தேவி, சூரியன்முதலாக வாள், குந்தாலம், அரசு, எருக்கு, மூங்கில்பரியந்தமான பதார்த்தங்களில் பரமாத்மப் பிராந்தியை யடைகிறார்கள்.

* பிரபாகரர் நையாயிகர் மதம்:—சுழுத்தியில் ஞானமில்லாதிருத்தலால் ஆத்மா ஜடமேயென்பது சரியன்று. ஏனெனின் "நான் சுகமாய்த் தூங்கினேன்; ஒன்றும் அறியவில்லை" என்னும் அநுபவத்தால் முன் சொன்னது பாதிக்கப்பட்டுப்போகிறது. ஆத்மா ஜடமானால் சுழுத்தியிலுள்ள ஆநந்தத்தின் ஸ்மிருதியுண்டாகலாகாது; உண்டாதலால் ஆத்மா ஜடமன்று.

† ஜீவனது கோசங்கள் ஜீவனது நிஜரூபமான பிரத்தியகாத்மாவை ஜீவனுடைய திருஷ்டிக்கு மறைப்பதுபோல் ஈசுவரனுடைய கோசங்கள் ஈசுவரனுடைய நிஜரூபத்தை ஈசுவர திருஷ்டிக்கு மறைக்கிறதில்லை. ஏனெனின் ஈசுவரன் ஆவரணரகிதன். ஆகையால் சமஷ்டி பஞ்சகோசங்களினின்றும் பிரஹ்மஸ்வரூபத்தை ஜீவனே விவேசனம் பண்ணவேண்டியது.

சகல பதார்த்தங்களிலுமுள்ள லக்ஷியபாகம் பரமாத்வாவினும் வேற ன்று. அங்ஙனமாயினும் அந்தந்த உபாதியுடன் கூடியதைப் பரமாத்மா வெனக் கொள்ளுகிறார்கள். அது அவர்களுக்குப் பிராந்தியாம்.

1. பஞ்சகோசங்களால் மூடப்பட்ட ஜீவேசுவரர்களின் பரமாத்ம ஸ்வ ரூபத்தினின்றும் திரும்பிய பார்வையுடையவர்களாய்த் தேகாதிகளிடத்தில் ஆத்மப்பிராந்தியைச் செய்து புண்ணியபாவகர்மங்களைச் செய்கிறார்கள்.

2. அந்தரியாமிமுதல் மூங்கில்வரையி லுள்ளவைகளை ஈசுவரரூபமாக நினைத்து ஆராதனை செய்து சுகத்தையடைய இச்சிக்கிறார்கள். உபாதியின் ஆராதனைக்குத் தக்கபடியே பலன் சித்திக்கிறது. ஏனெனின், காரண சூக்ஷ்ம ஸ்தூலப் பிரபஞ்சங்களெல்லாம் ஈசுவரனுடைய மூன்று சரீரங்களிலும் அந் தர்ப்பூதமாயிருக்கின்றன. அவைகளில் உபாஸனைக்குத் தக்கபடி பலனும் எல்லா வற்றிலுமே யுண்டாகிறது.

ஆனால் பிரஹ்மஞானமின்றி மோக்ஷமுண்டாகிறதில்லை. மோக்ஷத்தை யிச்சிக்கிறவனே விவேகத்தினால் ஜீவேசுவர ஸ்வரூபங்களைப் பஞ்சகோசங் களினின்றும் வேறுபடுத்தவேண்டியது.

திருஷ்டாந்தம்:—முஞ்சமும் * இஷீகையும் சேர்ந்திருக்கின்றன; அவற் றை உரித்து வேறுபடுத்துவதுபோல விவேகத்தினால் ஜீவஈசுவரர்களின் சொரூபத்தைப் † பஞ்சகோசங்களினின்று வேறுபடுத்தி யறியவேண்டும்.

## 270. அந்தப் பஞ்சகோச விவேகத்தின் றன்மையைக் காட்டுதல்.

1. சொப்பனவஸ்தையில் ஸ்தூலதேகம் விளங்குகிறதில்லை; ஆனால் ஆத்மா விளங்குகிறது.

2. அப்படியே சுழுத்தியவஸ்தையில் சூக்ஷ்மசரீரத்தின் ஞான முண்டாகிற தில்லை. சுகத்தின் ஸ்வரூபமான ஆத்மா ஸ்வயம்பிரகாசவடிவமாக விளங்கு கிறது. சுழுத்தியில் சுகஞான மில்லாதிருக்கின் "நான் சுகமாய்த் தூங்கினே"

---

* முஞ்சமென்னும் புல்விசேஷத்தின் நீண்ட இலைகளின் நடுவில் மறைந்து நிற் கின்ற தூலத்தி (பஞ்சி) னால் சூழப்பட்டிருக்கிற நீண்ட சலாகை (தண்டு) இஷீகை யென்றும் தூலியென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தப்புல் பிருந்தாவனத்திலுள்ள முஞ்சாடவியிற் பிரசித்தமாம்.

† ஆத்மாவுக்குச் சத்து, சித்து, ஆநந்தம், அத்வயம் என்னும் நான்கும் விசேஷண ங்களாம். தேகாதிகளுக்கு அசத்து, ஜடம், துக்கம், துவயம் என்பன விஷேணங்களாம். இவற்றில் ஆத்மாவின் சத்துசித்துரூபங்கள் தேகாதிகளின் அசத்து ஜடரூபங்களை மறைக்கின்றன. ஆகையால் தேகாதிகள் சத்துசித்துரூபங்கள்போலப் பிரதீதியாகின் றன. தேகாதிகளின் துக்கத்துவயரூபங்கள் ஆத்மாவின் ஆநந்தரூபத்தையும் அத்துவய ரூபத்தையும் மறைக்கின்றன. அதனால் ஆத்மா துக்கியாயும் துவயமாயும் பிரதீதி யாகிறது. இவ்விதத்தால் ஆத்மாவுக்கும் பஞ்சகோசங்களுக்கும் பரஸ்பர அத்தியாச மிருக்கிறது. ஆதலால் முமுக்ஷுவானவன் பஞ்சகோச விவேசனத்தை அவசியஞ்செய்ய வேண்டும்.

னென்னும் ஸ்மிருதி விழித்தபின் உண்டாகலாகாது; அப்படி யுண்டாதலால் சுழுத்தியில் சுகத்தின் ஞானம் இருக்கிறது. அந்தச் சுகம் சுழுத்தியில் விஷயத்தா லுண்டானதன்று; ஆனால் ஆத்மசொரூபமேயாம். அந்த ஆத்மா ஸ்வயம்பிரகாசமா யிருக்கிறது; ஆதலால் சுகஸ்வரூபமான ஆத்மா ஸ்வயம்பிரகாசரூபத்தால் சுழுத்தியில் விளங்குகிறது.

3. நிதித்தியாசனத்தின் பலனாகிய நிர்விகற்பசமாதியவஸ்தையில் அஞ்ஞானத்தாலாகிய ஆவரணமின்றி ஆத்மா விளங்குகிறது; காரணசரீரமான அஞ்ஞானம் விளங்குகிறதில்லை.

1. இப்படி மூன்றுதேகங்களும் வியபிசாரியாம். ஓரவஸ்தையை விட்டு வேறோரவஸ்தையில் விளங்குகிறதில்லை.

2. ஆத்மா அநுகதமாயி (உள்ளீடாயி) ருந்து சகல அவஸ்தைகளிலும் விளங்குகிறது; ஆகையால் வியாபகமாயிருக்கிறது.

இந்த விவேகத்தால் மூன்று சரீரங்களுக்கும் வேறாக ஆத்மாவை யறிய வேண்டியது.

1. ஸ்தூலசரீரம் அன்னமயகோசம்.

2. காரணசரீரம் ஆநந்தமயகோசம்.

3-5. சூக்ஷ்மசரீரத்தில் பிராணமயம் மனோமயம் விஞ்ஞானமயம் என்னும் மூன்றுகோசங்க ளிருக்கின்றன.

ஆகையால் * மூன்று சரீரங்களின் விவேகத்தால் பஞ்சகோசங்களின் விவேகமே யுண்டாகிறது.

---

* ஸ்தூலதேக விவேசனம்:—ஸ்தூலதேகம் ஜனிப்பதற்கு முன்னும் மரிப்பதற்குப் பின்னும் ஏகமாய் ஆத்மா இருப்பதினால் கடத்தினும் ஆகாசம் வேறாயிருப்பது போல் ஆத்மா ஸ்தூலதேகத்தினும் வேறாயிருக்கிறது; அவ்வியபிசாரியாயுமிருக்கிறது. கடம்போலத் தேகம் உற்பத்திக்கு முன்னும் மரணத்துக்குப் பின்னும் இல்லாமையாலும் அநேகமாயிருத்தலாலும் ஆத்மாவினும் தேகம் வேறாயிருக்கிறது; வியபிசாரியாயுமிருக்கிறது. எது அதிகதேசத்திலும் அதிககாலத்திலும் இருக்கிறதோ அது அவ்வியபிசாரி யெனப்படும். எல்லாச் சரீரங்களிலுமுள்ள ஆத்மா ஒன்றாயிருத்தலால் ஆகாசம்போல வியாபகமாயிருக்கிறது. ஆதலால் எல்லாவிடங்களிலும் அது இருக்கிறது. தேகங்களினுற்பத்திக்கு முன்னும் மரணத்துக்குப் பின்னும் ஆத்மா இருத்தலால் அது முக்காலங்களிலும் பாதிக்கப்படாமலிருக்கிறது. ஆகையால் சர்வகாலமும் அது இருக்கிறது. சர்வதேசகாலங்களிலு மிருப்பதால் ஆத்மா அவ்வியபிசாரி. எந்த வஸ்து சொற்பதேசத்திலும் சொற்பகாலத்திலும் இருக்கிறதோ அது வியபிசாரி யெனப்படும். கடம்போல் தேகமும் பரிச்சின்னமாய்ச் சொற்பவிடத்தி லிருக்கிறது. உற்பத்தி நாசங்களோடு கூடியிருத்தலால் அது சர்வகாலத்திலு மில்லாமல் சொற்பகாலத்தி லிருக்கிறது. சொற்பதேசத்திலும் சொற்பகாலத்திலு மிருத்தலால் தேகம் வியபிசாரி. ஆத்மாவும், தேகமும் முறையே அவ்வியபிசாரியாயும் வியபிசாரியாயு மிருத்தலால் இரண்டற்கும் பேதஞ் சித்திக்கிறது. ஆதலால் நான் ஸ்தூலதேகமல்லன்; தேகம் என்னுடையதன்று; ஆனால் பஞ்சமகாபூதங்களுடையது. நான் ஸ்தூலதேகமல்லாமையால் ஸ்தூலதேகத்துக்குச் சொல்லப்பட்ட நாமம், ஜாதி, ஆசிரமம், நிறம், ஆசார முதலிய தர்மங்கள் நான் அல்லன்; அவைகளும் என்னுடையவல்ல. இது ஸ்தூலதேக விவேசனமாம்.

ஜீவனது ஸ்வரூபம் பஞ்சகோசங்களுக்கு வேறாயிருப்பதுபோல் ஈசுவரனுடைய ஸ்வரூபமும் சமஷ்டி பஞ்சகோசங்களுக்கு வேறாயிருக்கிறது.

நான்காவது தரங்கத்தில் நாலுவித ஆகாச திருஷ்டாந்தத்தால் ஜீவேசுவரர்களுடைய லக்ஷ்யஸ்வரூபத்தின் விவேகம் விஸ்தாரமாகச் செய்யப்பட்டிருக்கிறது. மேலே வரும் ஆறாவது தரங்கத்தில் அஸ்தி பாதி பிரியரூப நிரூபணத்திலும் அவ்வாறே மகாவாக்கியங்களின் அர்த்தநிரூபணத்திலும் ஆத்மாவின் பரமார்த்த ஸ்வரூபம் பிரதிபாதிக்கப்படும். ஆதலால் இவ்விடத்தில் சுருக்கமாக ஆத்ம விவேசனம் செய்யப்பட்டது.

## 271. மகாவாக்கியார்த்த உபதேசம்.

இவ்விதமாகப் பஞ்சகோசங்களினின்றும் ஆத்மாவை வேறாக அறிதலாலும் கிருதகிருத்தியனாகிறதில்லை. ஆனால் ஜீவப்பிரஹ்மங்களின் அபேதத்தை நிச்சயித்தற்கு மறுபடியும் விசாரம் செய்யவேண்டியதாம். ஆதலால் கர்த்தவ்வியத்தின் சுபாவரூப கிருத கிருத்தியத்தன்மையின் சித்தியின்பொருட்டு மகாவாக்கியார்த்தத்தை யுபதேசிக்கின்றோம்.

சிஷ்யனே ! பஞ்சகோசங்களினும் ஆத்மா வேறு என்று அறி. அவ்வாத்மா பிரஹ்ம ஸ்வரூபமென்றறி.

## 272. பிரசினம்:—ஆத்மா புண்யபாபங்களைச் செய்கிறது. சுகதுக்கங்களை அநுபவிக்கிறது. ஆதலால் அதற்குப் பிரஹ்மத்தோடு ஐக்கியம் பொருந்தாதெனல்.

இதில் இவ்வாறு சங்கையுண்டாகிறது. ஆத்மா புண்ணிய பாபங்களைச் செய்து ஸ்வர்க்க நரக பூலோகங்களில் அநேகவித சுகதுக்கங்களை யனுபவிக்கிறது; அதற்குப் பிரஹ்மத்தோடு ஏகத்துவம் பொருந்ாது என்னும் சங்கையுண்டாகிறது.

---

**சூக்ஷ்மதேக விவேசனம்:**—மரணம் மூர்ச்சை சுழுத்தி பிரளயம் ஞானம் என்னும் இவ்வைந்து அவஸ்தைகளில் லிங்கதேகம் தன் காரணமான அஞ்ஞானத்தில் லயமாகிறது; அதனால் வியபிசரிக்கிறது; ஆதலால் அசத்தாயிருக்கின்றது. ஆத்மா சர்வகாலங்களிலும் பிரகாசித்துக்கொண்டிருத்தலால் அவ்வியபிசாரியாயிருக்கிறது; ஆதலால் சத்ரூபமாயிருக்கிறது. ஆத்மா சத்ரூபமாயிருத்தலால் அது லிங்கதேகமன்று. லிங்கதேகமும் ஆத்மாவினதன்று. அது அபஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களின் காரியமாம்; நான் லிங்கதேகம் அல்லன்; அதனால் கர்த்ருத்வம் போக்த்ருத்வம் சுகம் துக்கம் முதலிய லிங்கதேகத்தின் தர்மங்கள் நான் அல்லன்; அவைகளும் என்னுடையவல்ல. இவற்றையெல்லாம் அறியும் நான் இவற்றின் வேறாயிருக்கிறேன்.

**காரணதேக விவேசனம்:**—காரணதேகம் அஞ்ஞானம். இது நான் அல்லன்; என்னுடையதுமன்று. காரணசரீரத்தின் தர்மங்களாகிய ஆவரண விக்ஷேபங்களும் நான் அல்லன்; அவைகளும் என்னுடையவல்ல; இவற்றை யறியும் நான் இவற்றிற்கு வேறாயிருக்கிறேன்.

(சென்ற பிரசினத்தின் உத்தரம் 273-303.)

## 273. அகர்த்தாவும், அபோக்தாவும் நித்தியமுக்தமுமாகிய ஆத்மாவிற்கு என்றும் பிரமத்தோடு அபேதமுண்மை.

அதன் சமாதானம்:—அந்தப் பிரஹ்மரூப ஆத்மாவுக்கு வேறாகக் காணப் படுவனவும் சாஸ்திரத்தினால் கேட்கப்படுவனவுமாகிய ஸ்வர்க்கநரக புண்ணிய பாபாதிகளுமாகிய எல்லாம் மித்தியாப்பிரம மென்றறிக.

மித்தியாவஸ்து அதிஷ்டானத்தைக் கெடுக்கிறதில்லை.

1. சொப்பனத்தில் மித்தையான பிச்சை வாங்குவதனால் அரசன் தரித்திரனாகிறதில்லை.

2. கானல்ஜலத்தினால் பூமி நனைகிறதில்லை.

3. பொய்யான சர்ப்பத்தால் ரஜ்ஜு விஷமுடையதாகிறதில்லை.

ஆதலால் பொய்யான எல்லாச் சுபாசுபகர்மங்களைச் செய்கிறவனாயினும் உண்மையில் கர்த்தாவல்லன். இவ்வாறு உன்னுடைய சொரூபம் ஆச்சரிய மான ஒப்பில்லாதகா யிருக்கிறது.

இதன் அபிப்பிராயம் இதுவாம்:—

1. பிரஹ்மத்துக்கு வேறாகாத உன்னுடைய ஸ்வரூபத்தில் ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களும் அவற்றின் சுபாசுபக் கிரியைகளும் அவற்றின் பலனாகிற ஜன்ம மரண ஸ்வர்க்க நரக துக்கங்களுமாகிய யாவும் அவித்தையால் கற்பிக்கப் படுகின்றன.

2. உன்னுடைய பிரஹ்மத்தன்மை அந்தக் கற்பித சாமக்கிரியினால் வேறு படுகிறதில்லை. ஆதலால் ஞானத்துக்கு முன்னும் ஆத்மா பிரஹ்மரூபமாகவே யிருக்கிறது.

3. ஆத்மாவினிடத்தில் மூன்று காலங்களிலும் சரீரமும் சரீரத்தின் தர்மமுமாகிய இவற்றின் சம்பந்தமில்லை; ஆனால் ஆத்மா எப்போதுமே நித்திய முக்தமாயிருக்கிறது. அதற்கும் பிரஹ்மத்துக்கும் ஒருகாலும் பேதமில்லை.

## 274. ஜீவன்முக்தனது நிச்சயமும் வேதாந்த சிரவணத்தின் பயனும்.

ஆத்மா எப்போதுமே நித்தியமுக்தப் பிரஹ்மஸ்வரூபமா யிருக்குமாயின் ஞானசாதனங்களான சிரவணாதிகள் வீணாகுமே என்று கூறின்,

அதற்குச் சமாதானம்:—

ஜீவன்முக்தவித்வானுடைய திருஷ்டியில் அஞ்ஞானமும் அதன் காரியமும் துச்சமா யிருக்கின்றன. அந்த ஜீவன்முக்தனது நிச்சயத்தைக் காட்டுவாம்:—சிஷ்யனே!

1. இந்தப் பிரபஞ்சம் ஆகாசத்தாமரைபோன்றிருத்தலால் இல்லை. ஆதலால் அதன் கர்த்தாவான ஈசுவரனுமில்லை.

2. சாக்ஷிக்கு விஷயமான அஞ்ஞானமுதலியன சாக்ஷியமென்று சொல்லப்படுகின்றன. அச்சாக்ஷிய மில்லாமையினுல் சாக்ஷியுமில்லை.

3. அதுபோல திருசியத்தைப் பிரகாசிப்பிப்பது திருக்கெனப்படும். பிரகாசிக்கப்படும் தேகாதிகள் திருசியமெனப்படும். அத்தேகாதி திருசியமில்லாமையினுல் திருக்குமில்லை. கேவலம் கூடஸ்தசேதனம் சாக்ஷியென்றும் திருக்கென்றும் சொல்லப்படுகிறது. அதன் நிஷேதம் பொருந்தாது. என்றுலும் சாக்ஷியத்தை யபேக்ஷித்துச் சாக்ஷியென்னும் பெயருந் திருசியத்தை யபேக்ஷித்துத் திருக்கென்னும் பெயருமாம். சாக்ஷியும் திரிசியமுமில்லை. ஆதலால் சாக்ஷி திருக்கென்னும் பெயர்கள் நிஷேதிக்கப்படுகின்றன; ஸ்வரூபம் நிஷேதிக்கப்படுகிறதில்லை.

4. பந்தமிருக்குமாயின் பந்தநிவிருத்திரூபமான மோக்ஷமுமிருக்கும்; பந்த மில்லையாகவின் மோக்ஷமுமில்லை.

5. அஞ்ஞான மிருக்குமாயின் அது ஞானத்தால் நாசமாகும். அஞ்ஞான மில்லாமையினுல் அதை நாசஞ்செய்யும் ஞானமுமில்லை.

இதனையறிந்து கர்த்தவ்வியத்தை விடவேண்டும் அதாவது நான் இதனைச் செய்யவேண்டும் என்னும் புத்தியை விடவேண்டும். ஏனெனின்,

1. இந்த லோகமும் அப்படியே பரலோகமும் துச்சமாம். அவற்றின் பொருட்டுச் செய்யவேண்டியது யாதொன்றுமில்லை.

2. ஆத்மாவில் பந்தமில்லை. ஆதலால் மோக்ஷத்தின்பொருட்டும் செய்யவேண்டியது (கர்த்தவ்வியம்) ஒன்றுமில்லை.

இவ்விதத்தால் ஆத்மாவை நித்தியமுக்தப் பிரஹ்மரூபமாக அறிந்து நிச்சலமாகி எப்போது கர்த்தவ்வியமெல்லாம் விடுவாயோ அப்போது அக்கிரியப் பிரஹ்மஸ்வரூபமான விதேகமோக்ஷத்தை அடைவாய்.

இதன் அபிப்பிராயம் இதுவாம்:—

ஆத்மா ஞானத்தின் முன்னும் நித்தியமுக்த பிரஹ்மசொரூபமாயிருக்கின்றது. ஆனுல் ஞானத்திற்குமுன் ஆத்மாவைக் கர்த்தா போக்தாவென மித்தையாகக்கொண்டு சுகப்பிராப்தி துக்கநிவிருத்திகளின்பொருட்டு ஒருவன் அனேகசாதனங்களைச் செய்கிறுன். அதனுல் கிலேசத்தையே அடைகிறுன்.

உத்தம ஆசாரியரை யடைந்தபோது அவர் வேதாந்தவாக்கிய வுபதேசத்தைச் செய்கிறுர். அவ்வேதாந்த வாக்கியத்தைக் கேட்பதனுல் "நான் கர்த்தா போக்தாவல்லன்; நான் பிரஹ்மஸ்வரூபம்; ஆதலால் எனக்குச் சிறிதும் கர்த்தவ்வியமி (செய்யவேண்டியதி) ல்லை" என்னும் ஞான முண்டாகிறது இப்படி யறிவதே சிரவணுதிகளின் பலன்; பிரஹ்மத்தின் அடைவு வேதாந்த சிரவணத்தின் பலனன்று. ஏனெனின், பிரஹ்மம் தன்ஸ்வரூபமாம்; ஆதலால் நித்தியப்பிராப்தமாம் (என்றும் அடையப்பட்டதாம்).

## 275. ஞானி அஞ்ஞானிகளின் சின்னம்.

### (கர்த்தவ்வியமும் அகர்த்தவ்வியமும்.)

எவன் கர்த்தவ்வியமிருப்பதாக நினைக்கிறானோ அவன் அஞ்ஞானி; எவன் வேறுரூபமாவதற்கு இச்சிக்கவில்லையோ அவன் ஞானி.

## 276. இரகசியதத்துவ உபதேசம்.

ஏகமாயும் அகண்டமாயும் அசங்கமாயும் ஜன்மமில்லாததாயும் அதிருசியமாயும் நாமரூபங்க ளில்லாததாயு மிருப்பது பிரஹ்மம். அதில் மூல அஞ்ஞானமில்லை; சூக்ஷ்மஸ்தூலங்களில்லை; சமஷ்டி வியஷ்டிகளில்லை; ஈசனில்லை; சூத்திராத்மாவில்லை; விராட்டில்லை; பிராஞ்ஞனில்லை; தைஜஸனில்லை; விசுவனில்லை; போகமில்லை; யோகமில்லை; பந்தமில்லை; மோக்ஷமில்லை; ஒன்றும் அதனிடத்திலில்லை; எல்லாம் அதனிடத்திலுண்டு. ஜாக்கிரகாலத்தில் விளங்கும் பிரபஞ்சமியாவும் புத்திவிலாசத்தால் பொருந்தியிருக்கின்றன. சொப்பனத்திற் போக்கிய போகங்களில்லாதிருந்து சித்திர விசித்திரமாய்ப் பிறந்திருக்கின்றன. இந்தப் புத்தி சுழுத்தியில் லயமடையவே பேதங்களொழிந்து ஒருவடிவ மாகிறது. புத்தியாற் கற்பிக்கப்படுவனவெல்லாம் மனோரதமாத்திரமாம். * நிச்சலமான பிரஹ்மம் புத்தியைப் பிரகாசிக்கிறது. எவனுடைய இருதயத்தில் ஞானமுதயமாகிறதோ அவன் இருதயத்தைவிட்டு அஞ்ஞானமென்னு மிருள் நிச்சயமாய்ப் போய்விடுகிறது. அவன் எப்போதும் அசங்கமாயும் ஏகரஸமாயும் சுயம்பிரகாசமாயுமிருக்கிற பிரஹ்மசொரூப ஆத்மாவாக இருக்கிறான். முன் ஒன்றும் உண்டானதில்லை; இப்போது மில்லை. பின்னும் ஒன்றும் உண்டாகாது. ஜகத்து மனோரதமாத்திரமான விலாசமாம். அதனுடைவையும் நிவிருத்தியையும் ஞானி இச்சிக்கிறதில்லை. ஞானிக்கு யாதொரு ஆசையுமில்லை. † பார்க்கும்போது ஞானி பார்க்கிறதில்லை; கேட்கும்போது கேட்கிறதில்லை; சகல ரஸங்களையும் ருசித்தும் ருசிக்காதவன்; துவக்கால் தொட்டும் தொடாதவன்; நல்ல வாசனையை முகர்ந்தும் முகராதவன்; பேசியும் பேசாதவன்; கிரகித்தும் கிரகிக்காதவன்; மலமோசனஞ்செய்துஞ் செய்யாதவன்; நடந்தும் நடக்காதவன்; யௌவன ஸ்திரீயை யனுபவித்தும் நித்திய

---

* நிச்சலமாகிய பிரஹ்மம் புத்தியை பிரகாசிப்பதென்று சித்தாந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால் க்ஷணிகவிஞ்ஞானவாதியின் மதத்தில் அதிவியாப்தியில்லை; அவர்கள் மதத்தில் புத்தியின் வேறான பதார்த்தம் பிரகாசிப்பதாயில்லாமையால்.

† இங்குப் பகவத்கீதையின் 5-வது அத்தியாயத்தில் 7, 8, 9-வது சுலோகங்களின் அபிப்பிராயத்தைக்கொண்டு கிரந்தகர்த்தா எழுதியிருக்கிறார். அச்சுலோகங்களை முமுக்ஷுவின் புத்தியில் செவ்வையாய்ப் பதியும்பொருட்டு அர்த்தத்தோடு எழுதுவாம்:—

சன்னியாசியாவன். சிஷ்யனே இந்த ஆச்சரியத்தை நீ அறிவாயாக. இதன் அபிப்பிராயத்தைக் கூறுவாம்:—இந்திரியங்கள் தத்தம் விஷயங்களில் பிரவே

---

யொ◌ாமயு◌ுெக்தாவிஶு◌ுஜா◌த்மாவிஜிதா◌த்மாஜிெதந்திூயஃ ।
ஸவ◌ுமூ◌ூதா◌த்மமூ◌ூதா◌த்மாகூ◌ுவ◌ுஷவி◌நலிவ்யுெத ॥ எ ॥

(இ-ள்.) 1. கர்மரூபயோகத்தோடு அல்லது பிரஹ்மநிஷ்டாரூப சந்நியாசயோகத்தோடு கூடினவனும் அதனால் ராகத்துவேஷாதிகளில்லாத பரிசுத்தமான ஆத்மாவை (மனதை) யுடையவனும்,

2. அதனால் ஜயித்த (விஷயத்தைக் கிரகித்தலினும் வேற்றுப்பார்வையை யடைந்த) இருவகை இந்திரியங்களை யுடையவனும்,

3. அதனாலேயே பாஹியவாசனைவடிவ ஸ்வபாவத்தை ஜயித்தவனும்,

4. அதனாலேயே பிரஹ்மாதி ஸ்தம்பபரியந்தமான சகல பூதங்களிலுமுள்ள ஆத்மா தன்னாத்மாவுக்கு வேறல்லவென்றிவ்வாறு சர்வாத்மத்தன்மையை அறிந்தவனுமுள்ள

பிரஹ்மவித்தானவன் சரீரசம்ரக்ஷணையின்பொருட்டு ஓர் விதியை யனுசரித்தாவது அனுசரிக்காமலாவது எந்தக் கர்மத்தைச் செய்தாலும் அதன் பலத்தை யடைகிறதில்லை. அதாவது கர்மத்தில் அகர்த்தாவென்னும் புத்தியால் யாதொரு சம்பந்தத்தையுமடைவதில்லை.

இப்போது யோகத்தோடுகூடிய தன்மை முதலிய வித்துவான்களது ஐந்து லக்ஷணங்களோடுகூடி ஆகாரமுதலியவற்றிற் பிரவிருத்திக்கும் பிரஹ்மஞானிக்குப் பார்த்தல் முதலிய இந்திரியங்களின் வியாபாரத்தில் நான் கர்த்தாவல்லன் என்னும் உணர்ச்சியோடு நிலைத்தல் தகுதியாம் என்று இரண்டு சுலோகங்களாற் கூறுகின்றார்:—

ெநவகிஞ்சிக்கூெராமீதியு◌ுெக்தாமெந்யுததத்வவித் ।
பஶ்யந்ஶ்ருண்வந்ஸ்ப்ருஶஞ்ஜிக்ரந்நஶ்நந்கச்சந்ஸ்வபஞ்ஶ்வஸந் ॥ அ ॥
ப்ரலபந்விஸ்ருஜந்க்ருஹ்ணந்நுந்மிஷந்நிமிஷந்நபி ।
இந்த்ரியாணீந்த்ரியாெர்ஷு◌ுவர்தந்த இதிதாரயந் ॥ கூ ॥

(இ-ள்.) ஆத்மஸ்வரூப பாவத்தை யறிபவனாகிய தத்துவவித்து (பிரஹ்மஞானி) தனது கூடஸ்தத்தன்மை அஸங்கத்தன்மை உள்ளும்புறமும் நிறைந்திருத்தல் என்பவற்றைத் தரிசித்தலாகிய பிரஞ்ஞையுடையவனாய்த் தான் வெளியில் பார்த்தும் கேட்டும் தொட்டும் முகர்ந்தும் புசித்தும் நடந்தும் தூங்கியும் சுவாசம்விட்டும் பேசியும் மலஜலங்களை விஸர்ஜனஞ்செய்தும் கைகளாற் கொடுக்கல் வாங்கல் செய்தும் கண்களை மூடியும் திறந்தும் "சப்தாதிவிஷயங்களாகிய இந்திரியார்த்தங்களில் இந்திரியங்களே பிரவிருத்திக்கின்றன. நான் கேட்பவன் பரிசிப்பவன் முகர்வோன் புசிப்பவன் நடப்பவனல்லன்" என்னும் லக்ஷணமுடைய விருத்தியை எப்போதும் தரிக்கின்றவனாய் அவ்வக்கர்மங்களை இந்திரியங்களே செய்கின்றன; நான் அக்கிரியனாயிருத்தலால் ஒன்றும் செய்கிறதில்லை; ஆனால் அவ்வக்கிரியைகளுக்குச் சாக்ஷியாயிருத்தலால் நிஷ்கிரியவடிவத்தால் சும்மாவிருக்கின்றேன் என்று அறிக. (தன்னை அந்தந்தக் கிரியையில் நிஷ்கிரியனாகவே காண்க.)

சிக்க. அவற்றில் எனக்குப் பற்றுதலில்லை. நான் இந்திரியமல்லன்; இந்திரியம் என்னுடையதுமன்று. நான் சாக்ஷி, கூடஸ்தன், அசங்கன். இந்திரியம்

---

இதன் பொருள்:—தேகேந்திரியாதிகளின் வியாபாரங்களில் "நான், எனது" என்னும் பாவனையை விட்டு வித்துவான் சும்மாயிருத்தல் தகுதியாம் என்பது இரண்டு சுலோகங்களின் ஒருமித்த பொருளாம்.

இங்கு இது இரகசியமாகி:—

"நான் அசங்க நிர்விகார (அக்கிரிய) பிரஹ்மசேதனம்" என்னு நிச்சயம் ஞானிக்கிருத்தலால் அவன் வாஸ்தவத்தில் யாதொரு கிரியையுஞ் செய்கிறதில்லை. பிராரப்த பலத்தால் ஞானிக்குத் தேகேந்திரியாதிகளால் தரிசனாதி வியாபாரரூபக் கிரியைகள் உண்டாகின்றன. அவை பிராரப்த பலத்தின் போகங்களாம். ஆனால் அந்தப் போகத்தில் திடவாசையாகிய ராகமுண்டாகிறது.

1. அந்த ராகம் இந்திரியங்களாலானதன்று; இந்திரியங்கள் தரிசனாதி வியாபாரங்கள் மாத்திரத்தால் கிருதார்த்தமாதலால்.

2. அந்த ராகம் ஆத்மாவினாலாகியதுமன்று; ஆத்மா எப்போதும் எல்லாவற்றையும் சாதாரணமாக நிர்விகாரமாய்ப் பிரகாசிப்பதாயிருத்தலால்.

3. பரிசேஷத்தால் (ஒழிபால்) விஷயங்களின் குணதோஷங்களை விசாரித்தற்குக் காரணமான மனதிற்கே அனுகூலத்தன்மையின் ஞானத்தால் ராகமுண்டாகிறது.

4. அந்த இச்சை ஞானியினுடைய அந்தக்கரணத்திலுண்டாகிறதில்லை. ஏனெனின், ஞானியின் அந்தக்கரணம் சாந்த (அந்தர்முக) மாயிருக்கிறது. இது "இராகம் அஞ்ஞானத்திற்குக் குறியாம்" என்றல் முதலிய சாஸ்திரவாக்கியங்களில் ஸ்பஷ்டமாம்.

இராகம் முற்றும் இல்லையாயின் போஜனாதிவடிவ சரீரநிர்வாகத்திற்கு ஏது வியாபாரங்களிலும் பிரவிருத்தி யுண்டாகாமையால் ஞானிக்குப் பிராரப்த போகமும் உண்டாகாது. ஈசுவர சங்கற்பத்திற்கு விஷயமான பிராரப்தபோகத்தின் அபாவம் ஞானிக்கும் சம்பவியாது.

1. அங்ஙனமாயினும் பிராரப்த பலத்தின் போகத்தில் விசாரத்தினால் நிவிருத்தியாகத்தகாத இத்தன்மையான போகாதிகளைப்போல பிராரப்தத்தினாற் பெறப்பட்ட அதிட (அகங்காரசிதாத்மாக்களின் பிரமஜதாதாத்மியத்தி னின்மையால் ஆபாஸவடிவ) ராகம் ஞானிக்குண்டாம். ஆனால் அந்த அதிடராகம் ஸ்வாதீனமாயிருத்தலாலும் வறுத்த விதையைப்போலத் துர்ப்பலமா யிருத்தலாலும் தேக சம்ரக்ஷணைக்குக் காரணமான சாஸ்திரவிகித போகத்துக்கு ஹேதுவாம்; வியசனத்தை யுண்டுபண்ணும் சாஸ்திரத்தில் விலக்கிய போகத்துக்கு ஹேதுவன்று.

2. அல்லது, விஷயம் சத்தியமென்னும் பிராந்தி ஞானிக்கில்லாமையினாலும் மித்தியாத்தன்மைப் புத்தியால் உண்டாகிய திடமான வைராக்கியமிருந்தலாலும் திடராகமுண்டாகிறதில்லை. இவ்வர்த்தம் மேல் 6-வது தரங்கத்தில் நூலாசிரியராலேயே நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

3. அல்லது, கழையின்பேரில் ஏறி விளையாடும் வித்தையாடியின் சித்தம் உச்சியில் பதிந்திருப்பதுபோலும், ஒருவரோடொருவர் பேசிக்கொண்டு செல்லும் வேலைக்காரிகளுக்குத் தலையிலுள்ள குடத்திற் சித்தமிருப்பதுபோலும் ஞானியின் அந்தக்கரணம் சாமாநியமாய் விஷயங்களிற் பிரவிருத்தித்தலாலும், விசேஷமாய்ச் சொரூபத்திற் பொருந்தியிருத்தலாலும், அவனது ஜடதேகமும் இந்திரியங்களும் ராகமின்றியே

விஷயத்தைத் தியாகஞ்செய்க; அல்லது அனுபவிக்க; எனக்குச் சிறிதும் சம்பந்த மில்லையென்னும் நிச்சயம் ஞானிக்கிருத்தலால் அவன் காரியங்களைச் செய்வதாகக் காணப்பட்டாலும் செய்யாதவனுவன்.

---

பிராரப்தத்தின் பலவடிவ காண்டல் முதலிய கிரியைகளால் கிருதார்த்த மாதலாலும், நிஷ்டையோடுகூடிய சாபாஸ அந்தக்கரணவடிவ ஞானிக்கு விஷயபோகத்தில் திடராகம் சம்பவியாது.

4. ஏதேனும் ஓர் பிரவிருத்திக்கு ஏதுவான பிராரப்தமுடைய ஞானியின் மனவடிவ யானை விஷயங்களில் சிறிது விக்ஷேபப்பட்ட (பிரமாதத்தை யடைந்த) தாகின்றது. அங்ஙனமாயினும் விவேக (தோஷ திருஷ்டிமித்தியாத்துவபுத்தி) வடிவ கேசரி (சிங்கம்) விழித்தலால் அந்த மனமாகிய யானை சடிதியில் பிரமாதவடிவ விக்ஷேபத்தை விட்டுச் சாந்தமாகின்றது.

எதனுல் ஞானியின் சித்தத்தில் திடராகமில்லையோ அதனுல்,

1. போகத்திற் கேதுவாகிய பிராரப்தமிருக்க அவன் காக்கைக்கண்போலும் கங்கையில் மூழ்கிய பாதியுடல்போலும் முக்கியத்தன்மையால் சொரூப சுகத்தில் இரமிக்கின்முன்.

2. அமுக்கியத்தன்மையால் கூலிவாங்குவோனைப்போலக் கிலேசத்தை யடைகின்றவனுய்த் தீவிரப் பிராரப்தத்தின் பலத்தை அனுபவிக்கிறுன்.

தளர்ந்த பிராரப்தத்தின் பயன்வடிவ நிஷித்த (விலக்கப்பட்ட) விஷயத்தைப் பிரயத்தினத்தினுல் விடுகிறுன். என்றாலும் அதனைப் புசித்தலிலும் விடுதலிலும் விகல (வெறிகொண்ட) புருஷனது சித்தம்போல ஞானியின் சித்தத்தின் அமுக்கியத்தன்மை அபிப்பிராயத்தினுலும் அவனது ஜட இந்திரியங்களினுலேயே போகமும் விடுதலும் செய்யப்படுமென்னும் அபிப்பிராயத்தினுலும் முற்கூறிய கீதையின் சுலோகத்தில் "இந்திரியங்களின் அர்த்தங்களில் இந்திரியங்கள் செல்லுகின்றன" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இதன் 276-வது பிரசங்கத்தின் முடிவில் "இந்திரியங்கள் விஷயங்களைப் புசிக்க அல்லது விடுக" என்னும் வசனத்தால் நிஷித்த அல்லது தோஷங்கண்ட விஷயங்களை விட்டு அதிடராகத்தால் கிடைத்த விகித (விதிக்கப்பட்ட) விஷயங்களைப் புசிப்பன இந்திரியங்க ளெனப்படுகின்றன; அந்தக்கரணங்களன்று.

இதன் 276-வது பிரசங்கத்திலேயே 'யௌவன ஸ்திரீயை யனுபவித்தும் நித்திய சந்நியாசியாவன்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதன் அபிப்பிராயம் இதுவாம்:—

1. தியாகி (சந்நியாசியாகிய ஞானிக்கோ ஸ்திரீபோகம் கிடைக்காது. அவனுக்கு ஸ்திரீபோகமிருக்கின் சந்நியாஸத்தை நிரூபித்தலாகிய நிஷேதத்தின் சம்பவமும் எங்கிருந்துண்டாகும்? சந்நியாசியாய் ஸ்திரீபோகத்தில் பிரவர்த்திப்பானுயின் அந்த வாந்தியை யுண்ணும் புருஷன் சந்நியாசியாகான். ஆனுல் சந்நியாசியின் வேஷத்தைத் தரிக்கும் நடனைப்போல டம்பியாதலால் கிருஹஸ்தனினும் அதமனுவன்; பூஜித்தற் குரியவனுகான்.

2. ஆதலால் பரிசேஷத்தால் (ஒழிபால்) கிருகஸ்த ஞானியினிடத்து ஸ்திரீபோகம் கிடைக்கின்றது; அந்தக் கிரகஸ்த ஞானியும் வேம்பைப் புசிக்கப் பழகுவோனுக்குத்

(லயசிந்தனம். 277-280)

## 277. சர்வப் பிரபஞ்சமும் ஈசுவர வடிவமாதல்.

இவ்விதத்தால் ஆசாரியர் சிஷ்யனுக்கு ரஹஸ்யமான தத்துவத்தை யுபதேசித்தும் சிஷ்யன்முகம் நன்றாய்ப் பிரசன்னமாகா (மலரா)ததைக் கண்டு ஆசாரியர் இவ்வாறு நிச்சயித்தார்:—சிஷ்யன் கிருதார்த்த னாகவில்லை. கிருதார்த்தனா யிருந்தால் அவன் * முகம் பிரசன்னமாயிருக்கும். ஆதலால் மறுபடியும் ஸ்தூலக்கிரமமாக உபதேசிக்க † லயசிந்தனத்தைக் கூறுகின்றார்.

மண்ணின் காரியமான கடம் உள்ளும் புறமும் மண்ணாகவே யிருக்கிறது. ஆதலால் மண்ணின் காரியங்களெல்லாம் மண்ஸ்வரூபமாகவே யிருக்கின்றன. நுரைமுதலிய ஜல காரியங்களெல்லாம் ஜல ஸ்வரூபமாகவே யிருக்கின்றன. இப்படியே எது எதன் காரியமோ அது அந்தக் காரணஸ்வரூபத்துக்கு வேறாகிறதில்லை. ஆனால் காரியம் காரணஸ்வரூபமாகவே யிருக்கிறது.

சகலப் பிரபஞ்சத்துக்கும் மூலகாரணம் ஈசுவரன். ஆதலால் சகலகாரியப் பிரபஞ்சமும் ஈசுவரஸ்வரூபத்துக்கு வேறில்லை. சகலப் பிரபஞ்சத்தின் ஸ்வரூபமும் ஈசுவரனே.

"அந்த ஈசுவரன் நான்" என்றிவ்வாறு லயசிந்தனத்தை யறிந்து நீ செய்.

---

தைலம்புசித்தலைப்போலச் சாஸ்திரக்கிரமமாய்ச் சந்ததியின்பொருட்டு ருதுமுதலிய காலங்களில் விவாகஞ்செய்துகொண்ட ஸ்திரியின் சங்கத்தைச் செய்கிறான்; விஷயப்பற்றினாற் கூடுகிறதில்லை. விஷயத்தில் பற்றுள்ளவனாய் வேதாந்தம் பேசுவதில் சமர்த்தனான கிருகஸ்தனாயின், அவன் திடராகவடிவ அஞ்ஞானத்தின் குறியோடுகூடியவனா யிருத்தலால் ஞானியல்லன்; அஞ்ஞானியாவன்.

இங்கு ஸ்திரீவடிவ விஷயத்தின் விசாரம் எதுவோ அது மற்ற எல்லா விஷயங்களின் விசாரத்திற்கும் உபலக்ஷணமாம். ராகம் திடமாயிருக்கலாகாதென்று சொன்னது துவேஷ முதலியனவும் திடமாயிருக்கலாகா தென்பதின் உபலக்ஷணமாம்.

* விரும்பிய பதார்த்தத்தை அடைதலால் சித்தத்தின் சஞ்சலத்தன்மைக்கு ஏதுவான இச்சைவடிவ விருத்தியின் நாசமாகிய நிமித்தத்தால் அசைவற்ற கண்ணாடியைப்போல அந்தர்முகமாயுதித்த சாத்துவீகவிருத்தியில் ஸ்வரூபவடிவ ஆநந்தத்தின் பிரதிபிம்பமுண்டாகின்றது. அந்த ஆநந்தத்தை யநுபவித்து முகத்தின் மலர்ச்சி யுண்டாகின்றது.

சிஷ்யனுக்கு ஞானவாயிலாக விரும்பப்பட்டதாகிய காரியத்தோடு அவித்தையின் நிவிருத்தியும் பரமாநந்தத்தின் பிராப்தியுமாகிய விரும்பப்பட்ட மோக்ஷமானது சித்திக்கவில்லை. அதனால் இச்சை நிவிருத்தியாகவில்லை. ஆதலால் அந்தர்முகவிருத்தி யுதியாமையால் சொரூபாநந்தத்தினது பிரதிபிம்ப மில்லை இதனாலேயே அந்தப் பிரதிபிம்ப கோசர அநுபவத்தின் அபாவத்தால் முகமலர்ச்சி யுண்டாகவில்லை; அந்த முகமலர்ச்சியின்மையாகிய குறியினால் இஷ்டவஸ்துவை யடையாமையாகிய அகிருதார்த்தத்தன்மையின் அநுமிதியுண்டாகிறது.

† காரியத்தைக் காரணவடிவமென் றறிந்து சிந்தித்தல் லயசிந்தன மெனப்படும்.

## 278. சகல சூக்ஷ்மசிருஷ்டியும் அபஞ்சீகிருத பூதவடிவமாதல்.

லயசிந்தனையின் சுருக்கமான கிரமம் இதுவாம்:—

1. ஸ்தூலப் பிரஹ்மாண்ட முழுவதும் பஞ்சீகிருத பூதகாரியமாம். எது பிருதிவியின் காரியமோ, அது பிருதிவிஸ்வரூபமாம். ஜலத்தின் காரியம் ஜலஸ்வரூபமாம். இவ்விதத்தால் எது எந்தப் பூதத்தின் காரியமோ, அது அதன் ஸ்வரூபமேயாம். இவ்வாறு ஸ்தூலப்பிரஹ்மாண்ட முழுவதும் பஞ்சீகிருத பூதஸ்வரூபமாம்.

2. அவ்வாறே பஞ்சீகிருதபூதமும் அபஞ்சீகிருதபூத காரியமாம். ஆதலால் அபஞ்சீகிருத ஸ்வரூபமே பஞ்சீகிருதபூதமாம்; வேறன்று.

3. அந்தக்கரணமுதலிய சூக்ஷ்மசிருஷ்டியும் அபஞ்சீகிருத பூதகாரியமா யிருத்தலால் அபஞ்சீகிருத பூதஸ்வரூபமாம். அதில்,

(1-2.) அந்தக்காணம் சகலபூதங்களின் சத்துவகுண காரியமா யிருத்தலால் சத்துவகுணஸ்வரூபமாம்.

(3-7.) பூதங்களின் ரஜோகுணம்சத்தின் காரியமான பிராணன் ரஜோகுணஸ்வரூபமாம்.

(8-9.) குதேந்திரியம் பிருதிவியின் ரஜோகுணம்சத்தின் காரியமா யிருத்தலால் அது பிருதிவியின் ரஜோகுணஸ்வரூபமாம். கிராணேந்திரியம் பிருதிவியின் சத்துவகுணகாரியமாதலால் அது சத்துவகுணஸ்வரூபமாம்.

(10-11.) இப்படியே ரஸனேந்திரியமும் உபஸ்தேந்திரியமும் ஜலத்தின் சத்துவகுண ரஜோகுண ஸ்வரூபங்களாம்.

(12-13.) நேத்திரமும் பாதமும் தேயுவின் சத்துவகுண ரஜோகுண ஸ்வரூபங்களாம்.

(14-15.) துவக்கும் பாணியும் வாயுவின் சத்துவகுண ரஜோகுண ஸ்வரூபங்களாம்.

(16-17.) சுரோத்திரமும் வாக்கும் ஆகாசத்தின் சத்துவகுண ரஜோகுண ஸ்வரூபங்களாம்.

இவ்விதத்தால் சூக்ஷ்மசிருஷ்டி முழுவதும் அபஞ்சீகிருத பூதஸ்வரூபமாம்.

## 279. சகல அநாத்ம பதார்த்தங்களுக்கும் கிரமமாகப் பிரஹ்மத்தில் லயசிந்தனம்.

இச் சிந்தனைசெய்து அபஞ்சீகிருத பூதங்களின் லயசிந்தனத்தையும் செய்யவேண்டியது.

1. பிருதிவி ஜலத்தின் காரியமானபடியால் ஜலஸ்வரூபமாம்.

2. தேஜஸின் காரியமான ஜலம் தேஜஸ்ஸ்வரூபமாம்.

3. தேஜஸ் வாயுவின் காரியமாதலால் வாயுஸ்வரூபமாம்.

4. ஆகாசத்தின் காரியமான வாயு ஆகாசஸ்ரூபமாம்.

5. தமோகுணப் பிரதானப் பிரகிருதியின் காரியமான ஆகாசம் பிரகிருதி ஸ்வரூபமாம்.

6. பிரகிருதி மாயையின் அவஸ்தா விசேஷமாம். ஆதலால் பிரகிருதி மாயாஸ்வரூபமாம்.

ஒரே வஸ்துவிற்குப் 1. பிரதானம், 2. பிரகிருதி, 3. மாயை, 4. அவித்தை, 5. அஞ்ஞானம், 6. சக்தி என்பன பெயர்களாம்.

(1) சகல காரியங்களையும் தன்னில் லயப்படுத்திப் பிரளயகாலத்தில் இருக்கிற உதாசீனஸ்வரூபத்தைப் பிரதான மென்பர்.

(2) சிருஷ்டியின் உபாதான யோக்கியமான தமோகுணப் பிரதான ஸ்வரூபத்தைப் * பிரகிருதி என்பர்.

(3) தேசகாலாதி சாமக்கிரிகளின்றி இந்திரஜாலத்தால் துர்க்கட (நிகழ்தற்கரிய) பதார்த்தங்க ளுண்டாகுமிடத்து இந்திரஜாலத்தை மாயை யென்பர். அதுபோல அசங்க அத்துவிதீயப் பிரஹ்மத்தில் இச்சாதிகள் துர்க்கடமாம் (நிகழ்தற்கரியனவாம்). அவற்றைச் செய்தலால் மாயை யெனப்படும்.

(4) ஸ்வரூபத்தை மறைத்தலால் அஞ்ஞான மெனப்படும்.

(5) பிரஹ்மவித்தையால் நாசமடைதலால் அவித்தை யெனப்படும்.

(6) சுதந்திரமாக ஒருகாலத்திலு மிருக்கிறதில்லை. ஆனால் சேதனத்தை யாசிரயித்தே யிருக்கிறது. அதனால் சக்தி யென்றுஞ் சொல்லப்படும்.

இவ்விதத்தால் பிரகிருதி முதலியவைகள் பிரதானத்தின் பேதங்களாதலால் பிரதான ஸ்வரூபமாகவே யிருக்கின்றன.

7. அந்தப் பிரதானம் பிரஹ்மசேதனத்தின் சக்தியாயிருக்கிறது. புருஷனிடத்திலுள்ள சாமர்த்தியரூப சக்தி புருஷனைவிட்டு வேறாயிராதது போலச் சேதனத்திலுள்ள பிரதானரூபசக்தி பிரஹ்மசேதனத்தைவிட ‡வேறாக இல்லை.

---

* 1. எதனினின்றும் விகுதியாகச் சகல ஜகத்தும் செய்யப்படுகின்றனவோ அத்தன்மைய சிருஷ்டியின் உபாதானகாரணம் பிரகிருதியாம்.

2. அல்லது ப்ர என்பது சத்துவகுணம்; கிரு என்பது ரஜோகுணம்; அவற்றோடு கூடிய தி என்பது தமோகுணம்; அது தமோகுணப் பிரதானவடிவப் பிரகிருதியாம்.

‡ பிரஹ்மத்தின் சக்தி பிரஹ்மத்துக்கு வேறா யிருக்குமாயின் அத்வைத சுருதிக்கு விருத்தமாகும். அபின்னமென்று கூறின் சக்தி பிரஹ்மரூபமாதலால் பிரஹ்மத்தின் வேறுதற்றன்மையைச் சக்தியென்னும் பெயராற் கூறுதல் வியர்த்தமாகும். ஆதலால் சந்

இவ்விதத்தால் பிரஹ்மத்தினிடத்தில் சகல அநாத்மபதார்த்தங்களின் லயசிந்தனத்தையும் செய்து, "அந்த அத்வைதப் பிரஹ்மம் நான்" என்று சிந்தனை செய்க.

## 280. தியானத்திற்கும் ஞானத்திற்கும் பேதம்
### அகங்கிரகத்தியானம்.

மகாவாக்கிய விசாரம்செய்தும் எவனுக்குப் புத்தியின் மந்தத்தன்மை * முதலிய ஏதேனும் ஓர் பிரதிபந்தத்தால் அபரோக்ஷஞான முண்டாகிறதில்லையோ அவனுக்கு இந்த லயசிந்தனைரூபத் தியானஞ் சொல்லப்பட்டது.

ஞானத்திற்கும் தியானத்திற்கும் இவ்வளவு பேதமுண்டு.

1. † ஞானமோ பிரமாணப் பிரமேய மென்பவற்றின் அதீனமாம்;

---

திக்கும் பிரஹ்மத்தோடு பேதம் அபேதம் இரண்டும் சொல்லவேண்டும். இருளும் ஒளியும் போல் அவ்விரண்டு தர்மங்களு மோரிடத்தி லிரா. ஆனால் ரஜ்ஜுவினோடு சர்ப்பத்தின் சம்பந்தம்போலப் பிரஹ்மத்தோடு சக்திக்குக் கற்பிதபேதமும் வாஸ்தவ அபேதமுமான அநிர்வசனீய தாதாத்மியசம்பந்தம் இருக்கிறது.

அதனால் சக்திக்குத் தனது சக்தனோடு (ஆசிரயத்தோடு) வாஸ்தவபேதமில்லாமையால் எந்தப் பிரமாணத்தினாலும் பின்னமாய்த் தோற்றுதலின்மையால் அந்தச் சக்தி பின்னமன்று. ஆனால் கற்பிதசர்ப்பம் பரமார்த்தமாக ரஜ்ஜுவடிவமா யிருப்பதுபோலச் சக்தி பரமார்த்தத்தால் பிரஹ்மவடிவமாகவே யிருக்கிறது.

* இங்கு முதலியவென்னும் சொல்லால்,

1. புத்தி மந்தத்தன்மையோ டிருப்பதாகிய விஷயாசக்தி, குதர்க்கம், விபரீய துராக்கிரகமென்னும் மூவகை வர்த்தமானப் பிரதிபந்தங்களையும் கொள்க.

2. தன புத்திராதிப் பிரியவஸ்துக்கள் நாசமாகிய பிறகும் அவற்றை ஸ்மரித்துக்கொண்டிருத்தலாகிய பூதப்பிரதிபந்தத்தையும் கொள்க.

3. பிரஹ்மலோக முதலியவற்றின் இச்சை அல்லது வரப்போகிற ஜன்மங்களுக்கு ஹேதுவான சேஷப்பிராரப்தமாகிய ஆகாமியப்பிரதிபந்தத்தைக் கொள்க. இந்த ஞானத்தின் உற்பத்தியைப் பிரதிபந்தித்தலின் நிரூபணம் பஞ்சதசியின் தியானதீபமென்னும் ஒன்பதாவது பிரகரணத்தின் 38-வது சுலோகமுதல் 53-வது சுலோகம் வரையிலும், அங்ஙனமே வேதாந்தபதார்த்த மஞ்ஜூஷாவிலும் செய்யப்பட்டிருக்கிறது. அறியவிரும்புவோர் ஆண்டுக் காண்க.

† இங்கு இது ரகசியம்:—

1. பிராந்திஞானம், 2. ஸ்மிருதிஞானம், 3. பிரமாஞானம் என ஞானம் மூன்று விதமாம். அவற்றுள்,

(1) பிராந்திஞானம் கேவலம் வஸ்துவின் (பிரமவடிவ விஷயத்தின்) அதீனமாயிருக்கிறது.

(2) ஸ்மிருதிஞானம் தனது விஷயத்திற்குச் சமானமான அல்லது அதன் சம்பந்தமுள்ள வஸ்துவின் ஞானத்திலேனும் தனது விஷயத்தை (முன்கண்ட வஸ்துவை) ச் சிந்தித்தலினாலேனும் உதயமாகிய முன்பார்த்த வஸ்துவின் மனோமய ஆகாரத்தின் அதீனமாயிருக்கிறது.

* விதி புருஷனுடைய இச்சை என்பவற்றின் அதீனமன்று.

---

(3.) பிரமாஞானத்தில் அடங்கிய சுகாதிகளின் ஞானம் நியாயமதத்திலும் வாசஸ்பதிமிசிரமதத்திலும் மனரூபமான பிரமாணத்திற்கும் சுகாதிரூபப் பிரமேயத்திற்கும் அதீனமாயிருக்கிறது.

ஆனால் சித்தாந்தத்தில் மனது பிரமாணமென்று அங்கீகாரம் பண்ணுமையினால் சுகாதிகளின் ஞானம் கேவலப்பிரமேயத்தின் (சுகாதிரூப வஸ்துவின்) அதீனமாயிருக்கிறது. மற்றப் பிரமாஞானங்கள் இந்திரியம் அநுமானமுதலிய பிரமாணங்களுக்குப் பிரமேயரூப வஸ்துக்களோடுண்டாகும் சம்பந்தத்தின் அதீனமாயிருக்கிறது. அவற்றில்,

1. சப்தப்பிரமாணத்தா லுண்டாகிய பிரஹ்மஞானரூப சாப்தீப்பிரமை மகாவாக்கியரூப சப்தப்பிரமாணத்திற்கும் பிரத்தியகபின்ன பிரஹ்மரூபப் பிரமேயத்துக்குமுள்ள லக்ஷணவிருத்திரூப பரம்பரைச் சம்பந்தத்தினது ஞானத்தின் அதீனமாயிருக்கிறது.

2. மற்ற லௌகிக பதார்த்தங்களின் சாப்தீப்பிரமாரூப ஞானம்

1. சிலவிடங்களில் சக்திவிருத்திரூப சம்பந்தத்தினது ஞானத்தின் அதீனமாம்

2. சிலவிடங்களில் லக்ஷணவிருத்திரூப சம்பந்தத்தினது ஞானத்தின் அதீனமாயிருக்கிறது.

இவ்விதத்தால்,

(1) சிலஞானம் ஞேயரூப வஸ்து மாத்திரத்தின் அதீனமாம்.

(2) சிலஞானம் பிரமாணப் பிரமேயரூப வஸ்துவின் சம்பந்தத்தின் அல்லது அச்சம்பந்தத்தினது ஞானத்தின் அதீனமாயிருக்கின்றன. பிரமப் பிரமைகளின் சாதாரணமான ஞானத்தின் விஷயத்தினை ஞேயமென்பர். அதில் பிரமேயத் (பிரமாணத்தினாலறியப்படுந்) தன்மை இல்லை.

கேவலப் பிரமாஞானத்தின் விஷயத்தினைப் பிரமேய மென்பர். அதில் ஞேயத் தன்மையு மிருக்கிறது.

இவ்விதத்தால் சகல ஞானமும் வஸ்துவின் அதீனமாம்.

1. இங்கு "வஸ்து" என்னும் சொல்லால் ஈசுவரனாலாக்கப்பட்ட அல்லது மனோமய (பரோக்ஷஞானத்தின் விஷயமான) அல்லது பிரமவடிவ வஸ்துவினோடு பிரமாண வாயிலாகவாவது அல்லது நேராகவாவது விருத்தியினது சம்பந்தம் கிரகிக்கப்படுகிறது. ஆதலால் ஞானம் விதி முதலியவற்றின் அதீனமன்று.

2. தியானமாகிய உபாசனை வஸ்துவின் அதீனமன்று. ஆனால் கர்த்தாவின் அதீனமாம்.

தியானமும் மனதின் விருத்திவடிவமாம், அங்ஙனமாயினும் அது புருஷனாற் செய்யப்பட்ட இச்சை முதலியவற்றின் அதீனமாம்; வஸ்துவின் அதீனமன்று. ஆதலால் அது மானஸஞானமன்று; ஆனால் மானஸக்கிரியையாம்.

* அங்கு விதியும் புருஷனது இச்சையும் விசுவாசத்திற்கும் ஹடத்திற்கும் உபலக்ஷண (சூசக)மாம். எவ்விதத்தால் ஞானம் விதிமுதலிய நான்கின் அதீனமாகாதோ அவ்விதம் பஞ்சதசியின் தியானதீபத்திலுள்ள 74-ம் சுலோகத்தின் விளக்கவுரையில் எழுதப்பட்டிருக்கின்றது; அதனால் இங்கு எழுதப்படவில்லை.

2. தியானமானது விதி புருஷனுடைய இச்சை விசுவாசம் ஹடம் என்பவற்றின் அதீனமாயிருக்கிறது.

1. பிரத்தியக்ஷஞானத்தில் பிரமாணம் நேத்திரமும் பிரமேயம் கடாதிகளுமாம். அங்ஙனமே நேத்திரத்துக்கும் கடத்துக்கும் சம்பந்தமுண்டாகவே புருஷனுடைய இச்சையின்றியும் கடத்தின் பிரத்தியக்ஷஞான முண்டாகிறது. விநாயகசதுர்த்தி தினத்தில் சந்திரனைப்பார்க்கக்கூடாதென்னும் நிஷேதமுண்டு; விதியில்லை. புருஷனுக்கு "இன்றையத்தினம் எனக்குச் சந்திரதரிசன முண்டாகலாகா" தென்று இச்சையுண்டானாலும் எவ்விதத்திலாவது நேத்திரப் பிரமாணத்திற்குப் பிரமேயமாகிய சந்திரனோடு சம்பந்த முண்டாய் விடுமாயின் சந்திரனுடைய பிரத்தியக்ஷஞானம் அவசியமாகவே யுண்டாகும். இவ்விதத்தால் ஞானம் பிரமாணப் பிரமேயங்களின் அதீனமாயிருக்கிறது. விதி இச்சைகளின் அதீனமாயில்லை.

2. "சாலிக்கிராமம் விஷ்ணுரூப" மென்று தியானஞ் செய்கிறவனுக்கு உத்தமபல னுண்டாகிறது. அங்குச் சாஸ்திரப் பிரமாணத்தினால் விஷ்ணுவைச் சதுர்ப்புஜமூர்த்தியாகவும் சங்குசக்கிர கதா பத்ம லக்ஷ்மிசகிதமாயும் அறிகிறான். நேத்திரப் பிரமாணத்தால் சாலிக்கிராமத்தைச் சிலையாக அறிகிறான். அங்ஙனமாயினும் விதி விசுவாச இச்சைகளால் "சாலிக்கிராமம் விஷ்ணுவா" மென்னும் தியானமுண்டாகிறது. ஆனால் இந்தத் தியானம் அநேகவிதமாம்.

(1) சாலிக்கிராமத்தை விஷ்ணுரூபமாகத் தியானிப்பதுபோல் அன்னிய வஸ்துவை அன்னியரூபமாகத் தியானிப்பது * பிரதீகத்தியான மெனப்படும்.

(2) வைகுண்ட லோகத்தில் வசிக்கிற விஷ்ணுவைச் சங்குசக்கராதிசகித சதுர்ப்புஜ மூர்த்திவடிவமாகத் தியானிப்பதில் அன்னியவஸ்துவின் அன்னியரூபமான தியானமில்லை. ஆனால் தியேயவடிவத்தின் அனுசாரமான தியானமாயிது. வைகுண்டவாசி விஷ்ணுவின் ஸ்வரூபம் பிரத்தியக்ஷமாகவோவில்லை; கேவலம் சாஸ்திரத்தினால் அறியப்படுகிறது. சாஸ்திரத்தில் சங்கு சக்கிராதி சகிதமாகவே விஷ்ணுவின் ஸ்வரூபம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் அந்தத் தியானம் † தியேய ஸ்வரூபத்தை யனுசரித்ததாகவே யிருக்கிறது.

---

* எவன் விருத்தி சாஸ்திரவாயிலாகப் பரோக்ஷமான தியேயத்தில் (தியானிக்கப்படுபொருளில்) நிலைக்கிறதில்லையோ, அந்தப்புருஷன் புருஷனைப் பிரேரிக்கும் சாஸ்திர வசனமாகிய விதியினால் போதிக்கப்பட்ட (அன்னியத்) தியேயத்தின் பிரதிநிதிவடிவ வஸ்துவில் அந்நிய (தியேய)த்தின் புத்தியாகிய உபாசனையைச் செய்யவேண்டும். அந்த அந்நியத்தில் (ஒன்றில்) அந்நியத்தின் (மற்றொன்றன்)புத்தியான உபாசனை (தியானம்) பிரதீகத்தியான மெனப்படும்.

†, அங்ஙனமே "நான் பிரஹ்மம்" என்னும் வடிவுடைய நிர்க்குண உபாசனையாகிய அகங்கிரகத்தியானமும் தியேயானுசாரமான தியானமாம்.

விதி விசுவாச இச்சைகளின்றித் தியான முண்டாகிறதில்லை.

(1) "இந்த உபாசனை செய்" என்று ஒருவனைப் பிரவர்த்திக்கும்படி செய்கிற வசனம் விதியென்று சொல்லப்படும்.

(2) அந்த வசனத்திலுள்ள சிரத்தைக்கு விசுவாசமென்று பெயர்.

(3) அந்தக்கரணத்தின் காமனைவடிவ ரஜோகுண விருத்திக்கு இச்சையென்று பெயர்.

தியானத்திற்கு ஏது இம்மூன்றுமாம்; ஞானத்திற் கேதுவாகா.

(4) தியானம் ஹடத்தி னுண்டாகும். ஞானத்தின் ஹடத்தின் அபேக்ஷையில்லை. ஏனெனின் நிரந்தரத்தியேயாகாரமான சித்தவிருத்திக்குத் தியானமென்றுபெயர். அங்கு விருத்தியில் விக்ஷேபமுண்டானால் ஹடத்தால் விருத்தியை ஸ்திரப்படுத்தவேண்டும்.

ஞானரூப அந்தக்கரணவிருத்தியால் தற்கால ஆவரணபங்க முண்டாவதால் விருத்தியை ஸ்திரப்படுத்துவதின் உபயோகமில்லை; ஆதலால் ஹடத்தின் அபேக்ஷையில்லை.

வைகுண்டவாசியான சதுர்ப்புஜ விஷ்ணுவைத் தியானிப்பதுபோல் "நான் பிரஹ்மம்" என்னும் தியானமும் தியேயானுசாரமாயிருக்கிறது; பிரதீகமன்று. ஆனால் இது அகங்கிரகத்தியானமாம்.

தியேயஸ்வரூபத்தைத் தன்னோடு அபேதமாகச் சிந்தித்தல் அகங்கிரகத்தியான மெனப்படும்.

எவனுக்கு அபரோக்ஷஞான முண்டாகிறதில்லையோ, வேதத்தின் ஆஞ்ஞாரூபவிதியில் விசுவாசம் வைத்து ஹடமாக இடைவிடாமல், "நான் பிரஹ்ம" மென்னும் விருத்தியின் ஸ்திதிவடிவ அகங்கிரகத்தியானஞ் செய்கிறானோ, அவனுக்கும் ஞானமுண்டாகி * மோக்ஷங் கிடைக்கும்.

---

* சம்வாதிப் பிராந்தியினால் பிரவிருத்தித்த புருடனுக்கு யதார்த்தஞானவாயிலாக இஷ்டவஸ்துவின் லாபமுண்டாகிறது. அப்படியே "நான்பிரஹ்மம்" என்னும் விருத்தியின் ஸ்திதியாகிய அகங்கிரகத்தியானஞ் செய்வானாயின் அவனுக்கு ஞானவாயிலாக மோக்ஷம் கிடைக்கிறது. தியானத்திற்கு விஷயமான பிரஹ்மம் பரமார்த்தரூபமன்று; ஆனால் மனோகற்பிதமாம்; ஆதலால் பிரமரூபமாம். இதனாலேயே அதனை விஷயஞ் செய்வதாகிய விருத்திவடிவத் தியானமும் பிராந்திஞானமாம்; யதார்த்தஞானமன்று. என்றாலும் மணியின் பிரபையில் மணியென்னும் புத்திவடிவமான சம்வாதிப்பிராந்தியினால் ஓடிய புருடனுக்கு மணியின் ஞானவாயிலாக மணி கிடைப்பதுபோல முற்கூறிய தியானத்தால் பிரஹ்மத்தின் ஞானமுண்டாய் மோக்ஷப்பிராப்தியும் சம்பவிக்கின்றது.

சம்வாதிப் பிரஹ்மத்தின் வர்ணனம் பஞ்சதசியின் தியானதீபத்தின் ஆரம்பத்தில் எழுதப்பட்டிருக்கிறது.

## பிரணவ உபாஸனை. (281–303)

### 281. பிரணவத்தின் அகங்கிரகத்தியானம்.

வேறுவிதத்தால் அகங்கிரக உபாஸனையைச் சொல்லுகிறேன்:—சிஷ்யனே! பிரணவரூபமாகிய ஓங்கார ஸ்வரூபத்தின் அகங்கிரகத்தியானம் * மாண்டூக்கியம் பிரசினமுதலிய சுருதிகளை யனுசரித்துச் சுரேசுவராசாரியரால் சொல்லப்பட்டிருக்கிறது. அதை நீ செய்வாயாக. அதன் சுருக்கமான கிரமம் இதுவாம்:—பிரணவாக்ஷரம் பிரஹ்மஸ்வரூபம்; "அந்தப் பிரணவஸ்வரூபப் பிரஹ்மம் நான்" என்று ஒரு க்ஷணமும் இடையின்றித் தன் புத்திவிருத்தியை நிறுத்துக. இதற்குச் சமானமான வேறு தியானமில்லை. இந்தத் தியானத்தின் விசேஷக்கிரமம் சுரேசுவராசாரியாற் செய்யப்பட்ட பஞ்சீகாணக் கிரந்தத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த வுபாஸனையைச் செய்பவன் அபாரசமுசாரத்தை யொழிக்கிறான்.

### 282. நிர்க்குணமும் சகுணமுமான பிரணவ உபாசனையைப் பலத்துடன் கூறுவது.

பிரணவவுபாஸனை அநேக உபநிஷத்துக்களில் சொல்லப்பட்டிருந்தாலும் மாண்டூக்கிய வுபநிஷத்தில் விசேஷமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. அதன் வியாக்கியானத்தில் பாஷியகாரரும் ஆநந்தகிரியும் அந்த வுபாஸனையின் கிரமத்தைத் தெளிவாய் எழுதியிருக்கிறார்கள். அந்தக்கிரமமே வார்த்திககாரரால் பஞ்சீகாணக் கிரந்தத்தி லெழுதப்பட்டிருக்கிறது. அங்ஙனமாயினும் அந்தக் கிரந்தங்களை விசாரித்தலில் எவன் புத்தி சாமர்த்திய முடையதன்றோ அவனுக்காகப் பிரணவ உபாஸனையின் கிரமத்தை நாம் எழுதுவாம்:—உபநிஷதங்களில் பிரணவ வுபாஸனை இருவகையாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

1. ஒன்று பரப்பிரஹ்மரூபமாகப் பிரணவத்தைச் சிந்தித்தல்.

2. மற்றொன்று அபரப்பிரஹ்மரூபமாகச் சிந்தித்தல்.

1. நிர்க்குண பிரஹ்மத்தைப் பரப்பிரஹ்ம மென்பர்.

2. ஸகுணப்பிரஹ்மத்தை அபரப்பிரஹ்ம மென்பர்.

1. பரப்பிரஹ்மரூபமாகப் பிரணவத்தைச் சிந்திக்கிறவன் மோக்ஷத்தை யடைகிறான்.

2. அபரப்பிரஹ்மமாகப் பிரணவத்தைச் சிந்தனை செய்கிறவன் பிரஹ்மலோகத்தை யடைகிறான். இவ்விதத்தால் நிர்க்குணஸகுண பேதங்களால் பிரணவ உபாஸனை இரண்டுவிதமாம்.

---

* இங்கு "மாண்டூக்கிய" மென்னும் சொல்லால் கௌடபாதாசாரியாற் செய்யப்பட்ட மாண்டூக்கிய உபநிஷத்தின் காரிகையும் கொள்ளப்படும்.

## 283. நிர்குணவடிவப் பிரணவ வுபாசனேக் கிரமத்தின் ஆரம்பம்.

அதில், நிர்க்குண வுபாசனேயின் கிரமத்தை யெழுதுகின்றோம்; ஸகுணத் தினதன்று. ஏனெனின்,

1. பிரஹ்மலோக இச்சையுள்ளவனுக்கு நிர்க்குண உபாஸனேயினுலும் இச்சையாகிய பிரதிபந்தத்தால் ஞானவாயிலாகத் தற்காலம் மோக்ஷ முண்டா கிறதில்லே; ஆனுல் பிரஹ்மலோக மடையப்படுகிறது. அவ்விடத்தில் ஹிரண்ய கர்ப்பனுக்குச் சமானமாகப் போகங்களே யனுபவித்துப் பின் ஞானமுண் டாக மோக்ஷத்தை யடைகிருன்.

2. பிரஹ்மலோக இச்சையில்லாதவனுக்கு இந்த லோகத்திலேயே ஞான முண்டாய் மோக்ஷம் சித்திக்கிறது. இவ்விதத்தால் ஸகுண உபாஸனேயின் பயனும் நிர்க்குண உபாஸனேயில் அடங்கியிருக்கிறது. ஆகையால் நிர்க்குண உபாஸனேயின் கிரமம் சொல்லுகின்றோம்.

எது காரணகாரியவஸ்துவோ அது ஓங்கார ஸ்வரூபமாம். ஆதலால் சகலரூபங்களும் ஓங்காரமாம்,

1. சகல பதார்த்தங்களிலும் நாமம் ரூபம் என இரண்டு பாகங்களுண்டு. அவற்றில் ரூபபாகம் அவ்வவற்றின் நாமபாகத்தினும் வேறன்று; ஆனுல் நாமஸ்வரூபமே ரூபபாகமாம். ஏனெனின் பதார்த்தத்தின் ரூப (ஆகார) த்தின் பெயரால் அந்தப் பதார்த்தம் நிரூபிக்கப்பட்டுக் கிரகிக்கப்படுகிறது அல்லது தள்ளப்படுகிறது. பெயர் அறியப்பட்டாலன்றிக் கேவலம் ஆகாரத்தால் வியவகாரம் சித்திக்கிறதில்லே. ஆதலால் பெயரே சாரமாம். ஆகாரமழிந்தாலும் பெயர் எஞ்சி நிற்கிறது. கடம் நாசமடைந்தாலும் மண் மிஞ்சுகிறது. அங்குக் கடம் மண்ணினும் வேறன்று; மண்ஸ்வரூபமாகவே யிருக்கிறது. அதுபோல ஆகாரம் நாசமடைய மண்போல் மிஞ்சிநிற்கும் நாமத்தினும் ஆகாரம் வேற ன்று; நாமஸ்வரூபமே ஆகாரமாம்.

அல்லது குடம் சட்டி பானேமுதலியவற்றில் மண் அநுகதமா (உள் ளீடா) யிருக்கிறது.* குடம் சட்டி முதலியன பரஸ்பரம் வியபிசாரியாம். ஆதலால் குடம் சட்டி முதலியன பொய்யாம். அவற்றில் அநுகதமான மண் † சத்தியமாம். அதுபோலக் கடத்தின் ஆகாரம் அநேகமாம். அவற்றிற் கெல்லாம் "கடம்" என்னும் மூன்றெழுத்துகளுடன்கூடிய பெயர் ஒன் றும். ஒரு கடத்தின் ஆகாரம் மற்றொன்றிற் கில்லாமையால் அந்த ஆகாரங் கள் ஒன்றற்கொன்று வியபிசாரியாம். எல்லாக் கடங்களி னுகாரத்திலும்

* முதலிய என்னும் சொல்லால மற்றப் பாத்திரங்களும் கொள்ளப்படும்.

† குடம் சட்டிமுதலியவற்றை அபேக்ஷித்து மண் வெகுகால மிருப்பதாகின்றது. ஆதலால் அது ஆபேக்ஷிக சத்திய மெனப்படும்.

பெயர் ஒன்றே அநுகதமாயிருக்கிறது. ஆதலால் பொய்யான ஆகாரம் * சத்தியமான் பெயரினும் வேறாகா. இவ்விதத்தால் சகலபதார்த்தங்களி ளுகாரமும் தத்தம் பெயரினும் வேறாகா. நாமஸ்வரூபமே ஆகாரமாம்.

2. அவ்வெல்லா நாமங்களும் ஓங்காரத்தைவிட வேறன்று; ஆனல் ஓங்காரஸ்வரூபமே நாமமாம். ஏனெனின் வாசகசப்தத்தினை நாம மென்பர். உலகத்திலும். வேதத்திலும் வழங்கும் சப்தங்களெல்லாம் ஓங்காரத்தி னின் றுண்டாயினவெனச் சுருதியில் பிரசித்தமாய்ச் சொல்லப்பட்டிருக் கிறது. காரியம் யாவும் காரணஸ்வரூபமேயாம். ஆதலால் ஓங்காரத்தின் காரியமான வாசகசப்தரூப நாமம் ஓங்காரஸ்வரூபமாம். இவ்விதத்தால் ரூப பாகமான பதார்த்தத்தினுகாரம் நாமஸ்வரூபமாம். நாமங்களெல்லாம் ஓங் காரஸ்வரூபமாம்; ஆதலால் எல்லாஸ்வரூபமும் ஓங்காரமாம்.

## 284. ஓங்காரப் பிரஹ்மங்களின் அபேதம்.

3. (1) எல்லாஸ்வரூபமும் ஓங்காரமாயிருப்பதுபோல் எல்லாஸ்வரூப மும் பிரஹ்மமாம். ஆதலால் ஓங்காரம் பிரஹ்மரூபமாம்.

(2) அல்லது ஓங்காரம் பிரஹ்மத்தின் வாசகமாம்; பிரஹ்மம் வாச்சிய மாம். வாசகத்துக்கும் வாச்சியத்துக்கும் அபேதமுண்டாகிறது. இதனு லும் ஓங்காரம் பிரஹ்மரூபமாம்.

(3) விசாரித்துப் பார்க்குமிடத்துப் பிரஹ்மத்தில் எந்த அக்ஷரம் அத்தியஸ்தமா யிருக்கிறதோ, அதற்குப் பிரஹ்மம் அதிஷ்டானமா யிருக் கிறது. அத்தியஸ்தத்தின் ஸ்வரூபம் அதிஷ்டானத்தினும் வேறன்று. இதனு லும் ஓங்காரம் பிரஹ்மரூபமாம்.

ஆதலால் ஓங்காரத்தைப் பிரஹ்மசொரூபமாக விசாரம் செய்யவேண் டியது.

## 285. நான்கு பாதங்களையும் சொல்லுதலோடு ஆத்மாவிற்குப் பிரஹ்மத்தோடும் விசுவனுக்கு விராட்டினோடுமுள்ள அபேத மும், விராட்டு விசுவர்களின் ஏழு அங்கங்களும் பத்தொன் பது முகங்களும் சொல்லுதல்.

4. பிரஹ்மரூப ஓங்காரம் ஆத்மாவுக்கு வேறன்றெனச் சிந்தனை செய்க. ஏனெனின் ஆத்மாவுக்குப் பிரஹ்மத்தோடு முக்கிய அபேதமிருக் கிறது.

---

* குடத்தை யபேக்ஷித்து 'குடம்' என்னும் மூன்று எழுத்துக்களையுடைய பெயர் வெகுகாலபரியந்த மிருப்பதாம். ஆதலால் புண்ணியக் குறைவால் இறப்பவனும் வெகு காலமிருக்கும் தேவன் அமரனெனப்படுவதுபோல அந்தப் பெயரும் சத்திய (நித்திய) மெனப்படுகிறது.

பிரஹ்மத்திற்கு * நாலு பாதங்களுண்டு. அப்படியே ஆத்மாவுக்கும் நாலு பாதங்களுண்டு.

பாதமென்பது பாகம் அல்லது அம்சமாம்.

(1) † விராட்டு, ஹிரண்யகர்ப்பன், ‡ ஈசுவரன், தத்பதலக்ஷியமான ஈசுவரசாக்ஷி இந்நான்தும் பிரஹ்மத்தின் பாதங்களாம்.

(2) ¶ விசுவன், $ தைஜஸன், § பிராஞ்ஞன், துவம்பதலக்ஷியமான ஜீவசாக்ஷி இந்நான்தும் ஆத்மாவின் பாதங்களாம். ஜீவசாக்ஷிக்கோ துரியமென்றும் பெயர்.

(1) சமஷ்டி ஸ்தூலப் பிரபஞ்சசகித சேதனத்துக்கு விராட்டென்று பெயர்.

(2) வியஷ்டி ஸ்தூல அபிமானிக்கு விசுவனென்று பெயர்.

விராட்டுக்கும் விசுவனுக்கும் உபாதி ஸ்தூலமாயிருத்தலால் விசுவன் விராட்டுரூபமே; விராட்டினும் வேறல்லன்.

விராட்டுரூப விசுவனுக்கு ஏழங்கங்களுண்டு:—

(1) சுவர்க்கலோகம் சிரசு.

(2) சூரியன் நேத்திரம்.

(3) வாயு பிராணன்.

(4) ஆகாசம் மார்பு.

---

* இங்குப் பாதமென்னும் சொல் எதுவோ அது தானியத்தின்பாதத்தை(படியின் காலே)ப்போல் விபாகவடிவ அர்த்தத்தை யறிவிப்பதாம். பசுவின் பாதத்தைப்போல அவயவ (அங்க) வடிவ அர்த்தத்தைப் போதிப்பதன்று.

† சகல பிராணிகளின் சரீரத்தில் "நான்" என்கிற அபிமானத்தை வைப்பதினுல் ஈசுவரன் "வைசுவானரன்" என்று சொல்லப்படுகிருன். இந்த வைசுவானரன் அநேகவிதமாய்ப் பிரகாசிக்கிறபடியால் "விராட்டு" என்று சொல்லப்படுகிருன்.

‡ சகல ஜீவர்களுக்கும் கர்மானுசாரமாய்ப் பலத்தைக் கொடுப்பதால் ஈசுவரன் என்று பெயர் வந்தது.

¶ சூக்ஷ்மதேகத்தின் அபிமானத்தை விடாமல் ஸ்தூலதேகத்தில் "நான்" என்னும் அபிமானத்தை யுடைத்தாயிருக்கிற ஜாக்கிருதாபிமானியான ஜீவனுக்கு விசுவன் என்று பெயர்.

$ தேஜசு சப்தத்தின் வாச்சியமான அந்தக்கரணத்தை விடாமல் பிராணேந்திரியங்களுடன் கூடியிருக்கிற ஸ்வப்னுபிமானியான ஜீவனுக்குத் தைஜஸன் என்று பெயர்.

§ பிராஞ்ஞன்=பிர+அஞ்ஞன். சுழுப்தியில் ஸ்வப்பிரகாசமான ஆத்மானந்தத்துடன் அஞ்ஞானவிருத்தி சேர்ந்திருப்பதால் சுழுப்தியபிமானியாகிய ஜீவனுக்குப் பிராஞ்ஞன் என்று பெயர்.

(5) சமுத்திராதிரூப ஜலம் மூத்திரஸ்தானம்.

(6) பிருதிவி பாதம்.

(7) ஹோமம் பண்ணப்படும் அக்கினி முகம்.

இவ்வேழும் விசுவனுடைய அங்கங்கள்.

மாண்டூக்கிய உபநிஷத்தில் சுவர்க்கலோகாதிகள் விசுவனுடைய அங்கங்களாகாவாயினும் விராட்டின் அங்கங்களாம். அந்த விராட்டுக்கு விசுவனோடு அபேதமிருத்தலால் விசுவனுடைய அங்கங்களென்று சொல்லப்படுகின்றன.

அவ்வாறு விராட்விசுவர்களுக்கு 19 முகங்களிருக்கின்றன:—பிராணன்கள் 5, கர்மேந்திரியங்கள் 5, ஞானேந்திரியங்கள் 5, அந்தக்கரணம் 4, இப்பத்தொன்பதும் முகங்கள்போலப் போகத்துக்குச் சாதனமா யிருத்தலால் முகங்க ளெனப்படுகின்றன.

ஜாக்கிராவஸ்தையில் இந்தப் பத்தொன்பது முகங்களாலும் ஸ்தூல சப்தாதிகள் பாஹ்ய விருத்தியால் அநுபவிக்கப்படுகின்றன. ஆதலால் விராட்டுரூபவிசுவன் ஸ்தூலத்தின் போக்தா வென்றும், பாஹ்யவிருத்தி (பஹிர்ப்பிரஞ்ஞன்) என்றும், ஜாக்கிராவஸ்தையுடையவனென்றுஞ் சொல்லப்படுகிறான்.

## 286. பதினான்கு திரிபுடிகள்.

போகசாதனங்களான பிராணாதிபத்தொன்பது முகங்களில் சுரோத்திராதிபத்து இந்திரியங்களும் அந்தக்கரணம் நான்கும் கூடிய பதினான்கும் தத்தம் விஷயங்களின் சகாயத்தையும் தத்சம் தேவதைகளின் சகாயத்தையும் அபேக்ஷிக்கின்றன. தேவதை, விஷயம் என்பவற்றின் சகாயமின்றிக் கேவலம் இந்த 14 முகங்களால் மாத்திரம் போக முண்டாகிறதில்லை. ஆதலால் பஞ்சப்பிராணன்களும் 14 திரிபுடிகளும் விராட்ரூபவிசுவனுடைய முகங்களெனப்படுகின்றன. முகம் தேவதை விஷயம் என்னும் இம்மூன்றன் சமுதாயத்திற்குத் திரிபுடியென்று பெயர்.

அத்திரிபுடி இவ்வாறு சொல்லப்படுகின்றது:—

(1) [1] சுரோத்திரேந்திரியம் அத்யாத்மம்.

[2] அதன் விஷயமாகிய சப்தம் அதிபூதம்.

[3] திசையின் அபிமானிதேவதை அதிதெய்வம்.

(க) இவ்விடத்தில் கிரியாசக்தி யுடையனவும் ஞானசக்தி யுடையனவுமாகிய இந்திரியங்களும் அந்தக்கரணமும் அத்யாத்ம மெனப்படும்.

(ங) அவற்றின் விஷயம் அதிபூத மெனப்படும்.

(ச) அவற்றின் சகாயமான தேவதை அதிதெய்வ மெனப்படும்.

(2) [1] துவக்கிந்திரியம் அத்யாத்மம்.
[2] அதன் விஷயமான ஸ்பரிசம் அதிபூதம்.
[3] வாயுதத்துவாபிமானிதேவதை அதிதெய்வம்.

(3) [1] நேத்திரேந்திரியம் அத்யாத்மம்.
[2] ரூபம் அதிபூதம்.
[3] சூரியன் அதிதெய்வம்.




(4) [1] இரசனேந்திரியம் அத்யாத்மம்.
[2] இரசம் அதிபூதம்.
[3] வருணன் அதிதெய்வம்.

(5) [1] கிராணேந்திரியம் அத்யாத்மம்.
[2] கந்தம் அதிபூதம்.
[3] அசுவினிகுமாரர் அதிதெய்வம்.

வார்த்திககார சுரேசுவராசாரியர் பிருதிவியின் அபிமானிதேவதையைக் கிராணத்தின் அதிதெய்வமாகச் சொல்லியிருக்கிறார். அதுவும் சரியே. ஏனெனின் பிருதிவியினின்றும் கிராணம் உற்பத்தியாகிறது. ஆகையால் பிருதிவி அதிதெய்வமாகச் சொல்லப்பட்டது. அன்றியும் சூரியனுடைய குதிரையின் மூக்கினின்றும் அசுவினி குமாரர்களின் உற்பத்தி சொல்லப்பட்டிருந்ததால் மூக்கின் தேவதை அசுவினிகுமாரரென்று சிலவிடத்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

(6) [1] வாக்கிந்திரியம் அத்யாத்மம்.
[2] * வக்தவ்வியம் (சொல்லப்படுவது) அதிபூதம்.
[3] அக்கினிதேவதை அதிதெய்வம்.

(7) [1] பாணீந்திரியம் அத்யாத்மம்.
[2] பதார்த்தங்களைக் கிரகித்தல் அதிபூதம்.
[3] இந்திரன் அதிதெய்வம்.

(8) [1] பாத இந்திரியம் அத்யாத்மம்.
[2] நடத்தல் அதிபூதம்.
[3] விஷ்ணு அதிதெய்வம்.

---

* வசனித்தற்கிரியையின் விஷயமாகிய பதார்த்தம் வக்தவ்வியமெனப்படும். அது வசனித்தற்கிரியையின்வாயிலாக வாக்கிந்திரியத்திற்கு அதிபூதமாம். இவ்வாறே எல்லா விந்திரியங்களுக்கும் தத்தம் கிரியையின்வாயிலாக விஷயவடிவங்களாகிய அதிபூதங்கள் எவையோ அவற்றை யறிந்துகொள்க. சிலவிடத்து வசனித்தல் முதலிய கிரியைகளை அதிபூத மென்பர். அது ஸ்தூலதிருஷ்டியுடைய ஜனங்களினது ஞானத்தின் பொருட்டாம். சுருதியர்த்தத்தின் விசாரத்தால் சொன்னதன்று.

(9) [1] குத இந்திரியம் அத்யாத்மம்.
[2] மலவிஸர்ஜனம் அதிபூதம்.
[3] யமன் அதிதெய்வம்.

(10) [1] உபஸ்த இந்திரியம் அத்யாத்மம்.
[2] கிராமியு (மைதுனக்கிரியாரூபபசு) தர்மத்தினது சுகத்தின் உற்பத்தி அதிபூதம்.
[3] பிரஜாபதி அதிதெய்வம்.

(11) [1] மனசு அத்யாத்மம்.
[2] மனனத்தின் விஷயம் அதிபூதம்.
[3] சந்திரன் அதிதெய்வம்.

(12) [1] புத்தி அத்யாத்மம்.
[2] புத்திக்கு விஷயம் அதாவது ஞானத்துக்கு விஷயம் அதிபூதம்.
[3] பிரகஸ்பதி அதிதெய்வம்.

(13) [1] அகங்காரம் அத்யாத்மம்.
[2] அகங்காரத்தின் விஷயம் அதிபூதம்.
[3] ருத்திரன் அதிதெய்வம்.

(14) [1] சித்தம் அத்யாத்மம்.
[2] சிந்தனையின் விஷயம் அதிபூதம்.
[3] க்ஷேத்திரஞ்ஞனுகிய * சாக்ஷி அதிதெய்வம்.

இந்தப் பதினன்கு திரிபுடிகளும் ஐந்து பிராணன்களும் சேர்ந்து பத்தொன்பதும் விராட்ரூப விசுவனுடைய முகங்களாம்.

## 287. விசுவன் விராட்டு அகாரம் என்பவற்றின் அபேத சிந்தனை.

1. விராட்டுக்கும் விசுவனுக்கும் அபேதமிருப்பதுபோல ஓங்காரத்தின் முதல்மாத்திரையாகிய அகாரத்திற்கும் விராட்ரூப விசுவனேடு அபேதமுண்டு. ஏனெனின்,

(1) பிரஹ்மத்தின் நாலுபாதங்களில் முதற்பாதம் விராட்டு.

(2) ஆத்மாவின் நாலுபாதங்களில் முதற்பாதம் விசுவன்.

---

* சாக்ஷிசேதனம் சித்தத்தின் ஆசிரயமாயிருத்தலால் சித்தத்தின்கண் அநுக்கிரகம் செய்கிறது. அதனுல் அதன் அதிதெய்வமெனப்படுகிறது. இதனுலேயே சில ஆசாரியர்கள் சிந்தித்தல்வடிவ ஸ்மிருதிஞானத்தைச் சாக்ஷியின் ஆசிரிதமாகச் சொல்லியிருக்கிருர்கள். சிலவிடத்துச் சித்தத்தின் அதிதெய்வம் நாராயணன் (வாசுதேவன்) என்று சொல்லப்பட்டிருக்கிறது.

(3) அங்ஙனமே ஓங்காரத்தின் நான்கு மாத்திரைகளாகிய பாதங்களில் முதற்பாதம் அகாரம்.

ஆதலால் முதலாவதாந்தன்மை மூன்றிலும் சமானதர்மமாயிருத்தலால் விசுவன் விராட்டு அகாரம் என்னும் இம்மூன்றையும் அபேதமாய்ச் சிந்திக்க வேண்டும்.

## 288. விசுவதைஜஸர்களின் வேற்றுமை.

விசுவனுக்குச் சொல்லப்பட்ட ஏழு அங்கங்களும் பத்தொன்பது முகங்களும் தைஜஸனுக்கும் இருப்பனவாக அறியத்தக்கனவாம். ஆனால் இவ்வளவு பேதமுண்டு:—

(1) விசுவனுடைய அங்கங்களும் முகங்களும் ஈசுவரனால் செய்யப்பட்டன.

(2) தைஜஸனுடைய இந்திரிய தேவதா விஷயரூப திரிபுடிகளும் சிரசு முதலிய அங்கங்களும் மனோமயமா யிருக்கின்றன.

தைஜஸனுடைய போகம் சூக்ஷ்மமாம்.

(1) போக மென்பது சுகதுக்கங்களின் ஞானமாம். அதில் ஸ்தூலசூக்ஷ்மத்தன்மைகள் சொல்லுதல் பொருந்தாது. அங்ஙனமாயினும், பாஹ்யசப்தாதி விஷயங்களின் சம்பந்தத்தால் சாக்ஷாத்தாக உண்டாகிற சுகதுக்கங்களின் சாக்ஷாத்காரம் ஸ்தூல மெனப்படும்.

(2) மானஸமான சப்தாதிகளின் சம்பந்தத்தாலுண்டாகும் போகம் (சுகதுக்கசாக்ஷாத்காரம்) சூக்ஷ்ம மெனப்படும்.

இக்காரணத்தால்,

(1) விசுவன் ஸ்தூலத்தின் போக்தாவென்று சுருதியிற் சொல்லப்பட்டிருக்கிறது.

(2) தைஜஸன் சூக்ஷ்மத்தின் போக்தா வெனப்படுகிறான்.

ஏனெனின்,

(1) தைஜஸனுடைய போகயோக்கியமான சப்தாதிகள் மானஸமாயிருத்தலால் சூக்ஷ்மமாம்.

(2) அவற்றை அபேக்ஷித்து விசுவனுடைய போக்கியம் பாஹ்யசப்தாதிகளாம். அவை ஸ்தூலமாம்.

விசுவன் பகிர்ப்பிரஞ்ஞன். தைஜஸன் அந்தர்ப்பிரஞ்ஞன். ஏனெனின், விசுவனுடைய அந்தக்கரணத்தின் விருத்திரூபப் பிரஞ்ஞை வெளியேபோகிறது; தைஜஸனுடைய பிரஞ்ஞை போகிறதில்லை.

## 289. தைஜஸ ஹிரண்யகர்ப்ப உகாரங்களின் அபேதசிந்தனை.

2. விசுவனுக்கும் விராட்டுக்கும் அபேதமிருப்பதுபோலத் தைஜஸனையும் ஹிரண்யகர்ப்பரூபமா யறியவேண்டும். ஏனெனின் தைஜஸனுடைய

உபாதி சூக்ஷ்மமாம். ஹிரண்யகர்ப்பனுடைய உபாதியும் சூக்ஷ்மமே. ஆதலால் இவ்விரண்டனையும் ஒன்றென அறிக.

தைஜஸஹிரண்யகர்ப்பர்களை ஒன்றென அறிந்து ஓங்காரத்தின் இரண்டாவது மாத்திரையான உகாரத்தோடு அவற்றின் அபேதத்தைச் சிந்தனை செய்க. ஏனெனின்,

(1) ஆத்மாவின் நாலுபாதங்களில் இரண்டாவது பாதம் தைஜஸன்.

(2) பிரஹ்மத்தின் இரண்டாவது பாதம் ஹிரண்யகர்ப்பன்.

(3) ஓங்காரத்தின் மாத்திரைகளில் இரண்டாவது மாத்திரை உகாரம்.

இரண்டாவதாந்தன்மை மூன்றிலும் சமானதர்மமாம். ஆகையால் மூன்றையும் ஒன்றாகச் சிந்தனைசெய்க.

## 290. பிராஞ்ஞன் ஈசுவரன் மகாரம் என்பவற்றின் அபேதம்; பிராஞ்ஞனது விசேஷணம்.

3. பிராஞ்ஞனை ஈசுவரரூபமாக அறியவேண்டும். ஏனெனின்,

(1) பிராஞ்ஞனுக்குக் காரணசரீரம் உபாதி.

(2) ஈசுவரனுக்கும் காரணம் உபாதி.

ஈசுவரனும் பிராஞ்ஞனும் பாதங்களில் மூன்றாவதாவர்.

(3) ஓங்காரத்தின் மூன்றாவது மாத்திரை மகாரம்.

இம்மூன்றிலும் மூன்றாவதாந்தன்மை சமானதர்மமாயிருத்தலால் இம்மூன்றையும் ஒன்றாக அறிக.

(1) இந்தப் பிராஞ்ஞன் பிரஞ்ஞானகனன். ஏனெனின் ஜாக்கிரஸ்வப்னங்களின் எவ்வளவு ஞானமுண்டோ அது சுழுத்தியில் கன(* ஒரே அவித்தியா ரூப) மாய்விடுகிறது. ஆதலால் பிரஞ்ஞானகனமெனப்படுகிறது.

(2) இந்தப் பிராஞ்ஞன் ஆனந்தபுக்கென்றும் சுருதியிற் சொல்லப்பட்டிருக்கிறான். ஏனெனின் அவித்தையினால் மறைபட்ட ஆனந்தத்தை இந்தப் பிராஞ்ஞன் புசிக்கிறான். ஆகையால் ஆனந்தபுக் கென்று சொல்லப்படுகிறான்.

தைஜஸவிசுவர்களின் போகம் திரிபுடியா லுண்டாகிறதுபோல் பிராஞ்ஞனுடைய போகத்துக்கும் திரிபுடி சொல்லப்படுகிறது.

(1) சேதனத்தின் பிரதிபிம்பசகிதமான அவித்தையின் விருத்தி அத்தியாத்மம்.

---

* மாவானது ஜலத்தினால் பிண்டமாக்கியபோது ஒருவடிவமாகின்றது. மழையின் அநேக துளிகள் தடாகத்தில் ஒருவடிவமாகின்றன. அவ்வாறு ஜாக்கிர சொப்பனங்களின் ஞானம் சுழுத்தியில் ஒரு அவித்தைவடிவ மாகின்றது. அந்த அவித்தையிலிருக்கும் அதிஷ்டான கூடஸ்தனோடுகூடிய சேதனத்தின் பிரதிபிம்பவடிவ பிராஞ்ஞ ஜீவன் பிரஞ்ஞானகன னெனப்படுவான்.

(2) அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்ட ஸ்வரூபானந்தம் அதிபூதம்.

(3) ஈசுவரன் அதிதெய்வம்.

இவ்விதத்தால்,

(1) விசுவன் பகிர்ப்பிரஞ்ஞனுயிருக்கிறான்.

(2) தைஜஸன் அந்தர்ப்பிரஞ்ஞனுயிருக்கிறான்.

(3) பிராஞ்ஞன் பிரஞ்ஞானகனனுயிருக்கிறான்.

## 291. வாஸ்தவ விசுவன்முதலிய மூன்றன் ஏகத்துவம்; துரியத்திற்கு ஈசுவரசாக்ஷியோடு அபேதம்.

4. இவ்விதமாக விசுவாதி மூன்றற்குமுள்ள பேதம் உபாதியினாலாயிருக்கிறது.

(1) விசுவனுக்கு ஸ்தூலம் சூக்ஷ்மம் அஞ்ஞானம் என்னும் மூன்றும் உபாதிகள்.

(2) தைஜஸனுக்குச் சூக்ஷ்மம் அஞ்ஞானம் என்னுமிரண்டும் உபாதிகள்.

(3) பிராஞ்ஞனுக்கு அஞ்ஞானம் ஒன்றே உபாதியாம்.

இவ்வாறு உபாதிகளின் ஏற்றத்தாழ்வால் மூன்றற்கும் பேதமுண்டு; உண்மையில் ஸ்வரூபமாகப் பேதமில்லை.

விசுவன் தைஜஸன் பிராஞ்ஞன் என்னும் மூன்றிலும் அநுகதமான சேதனம் பரமார்த்தமாக மூன்று உபாதிகளின் சம்பந்தமு மில்லாதிருக்கிறது. மூன்று உபாதிகளின் அதிஷ்டானம் துரியம்.

(1) அது பகிர்ப்பிரஞ்ஞனன்று;

(2) அந்தர்ப்பிரஞ்ஞனன்று;

(3) பிரஞ்ஞானகனமுமன்று;

(4) கர்மேந்திரியத்துக்கும் ஞானேந்திரியத்துக்கும் விஷயமன்று;

(5) புத்திக்கு விஷயமன்று;

(6) எந்தச் சப்தத்துக்கும் விஷயமன்று.

இத்தன்மையான துரியத்தைப் பரமாத்மாவின் நான்காவது பாதமான ஈசுவர சாக்ஷியாகிய சுத்தப் பிரஹ்மரூபமென்று அறிக.

## 292. இரண்டு சொரூபமுடைய ஓங்கார ஆத்மாக்களின் அபேதத்தை மாத்திரை வடிவத்தாலும் பாதவடிவத்தாலும் சிந்தித்தல்.

1. இவ்விதத்தால் ஆத்மாவுக்கு இரண்டுவித ஸ்வரூபங்கள் சொல்லப்பட்டன. ஒன்று பாமார்த்தரூபம்; மற்றொன்று அபாமார்த்தரூபம்.

(1) மூன்று பாதங்கள் அபாமார்த்தரூபம்.

(2) ஒருபாதமாகிய துரியம் பாமார்த்தரூபம்.

2. ஆத்மாவுக்கு இரண்டு ஸ்வரூபங்கள் இருப்பதுபோல் ஓங்காரத்துக்கும் இரண்டு ஸ்வரூபங்க ளுண்டு.

(1) அகார உகார மகாரங்களாகிய மூன்றுமாத்திரைவடிவ அக்ஷரங்கள் அபரமார்த்தரூபம்.

(2) மூன்று மாத்திரைகளிலும் வியாபித்திருக்கிற அஸ்தி பாதிப் பிரிய ரூப அதிஷ்டானசேதனம் பரமார்த்தரூபம்.

ஓங்காரத்தின் பரமார்த்தரூபம் சுருதியில் அமாத்திரை யென்னும் சப்தத்தால் சொல்லப்பட்டிருக்கிறது. ஏனெனில் அந்தப் பரமார்த்தஸ்வரூபத்தில் மாத்திரைகளின் விபாக மில்லை. ஆதலால் அமாத்திரை யெனப்படுகிறது.

இவ்விதத்தால் இரண்டு ஸ்வரூபங்களுடன்கூடிய ஓங்காரத்திற்கு இரண்டு ஸ்வரூபங்களுடன் கூடிய ஆத்மாவோடு அபேதத்தை யறிக.

1. வியஷ்டிசமஷ்டி ஸ்தூலப் பிரபஞ்சத்துடன்கூடிய விசுவவிராட்டுகளுக்கும் அகாரத்தோடு அபேதத்தை யறிக.

(1) ஆத்மாவின் பாதங்களில் விசுவன் முதலாவது.

(2) ஓங்காரத்தின் மாத்திரைகளில் அகாரம் முதலாவது.

ஆதலால் இரண்டையும் ஒன்றாக அறிக.

2. சூக்ஷ்மப்பிரபஞ்சசகிதமான ஹிரண்யகர்ப்பரூப தைஜஸனை உகார ரூபமாக அறிக.

(1) தைஜஸனும் ஆத்மாவின் பாதங்களில் இரண்டாவது.

(2) ஓங்காரத்தின் மாத்திரைகளில் உகாரமும் இரண்டாவது.

ஆதலால் இரண்டையும் ஒன்றாக அறிக.

3. காரண உபாதியோடுகூடிய ஈசுவரரூபப் பிராஞ்ஞனை மகாரரூபமாக அறிக.

(1) ஈசுவரரூபப் பிராஞ்ஞன் மூன்றாவதாம்.

(2) அதுபோல மகாரமும் மூன்றாவதாம்.

ஆதலால் ஈசுவரரூபப் பிராஞ்ஞனையும் மகாரத்தையும் ஒன்றாக அறிக.

4. மூன்றிலும் அநுகதமான பரமார்த்தரூப துரியத்தை ஓங்காரவர்ணத்தின் மூன்றுமாத்திரைகளில் அநுகதமான ஓங்காரத்தின் பரமார்த்தரூபமாகிய அமாத்திரைக்கு வேறாகாததாக அறிக.

(1) விசுவாதிகளில் துரியம் அநுகதமாயிருக்கிறது.

(2) அதுபோல அகாராதி மூன்று மாத்திரைகளிலும் அமாத்திரை அநுகதமாயிருக்கிறது.

ஆதலால் ஓங்காரத்தின் அமாத்திரை வடிவத்தையும் துரியத்தையும் ஒன்ருக அறிக.

இவ்விதத்தால் ஆத்மாவின் பாதத்தையும் ஓங்காரத்தின் மாத்திரையையும் ஒன்ருக அறிந்து லயசிந்தனை செய்க.

## 293. லயசிந்தனத்தின் அநுவாதம் (ஒவ்வொருமாத்திரைவடிவ விசுவன்முதலியன அன்னியமாத்திரைவடிவாதல்).

அந்த லயசிந்தனத்தைச் சொல்லுவாம்:—

1. விசுவரூப அகாரம் தைஜஸரூப உகாரத்துக்கு வேருகாமல் உகாரரூபமாகவே யிருக்கிறது. இப்படிச் சிந்தனைசெய்தல் இங்கு லய மெனப்படுகின்றது. இவ்வாறே மற்ற மாத்திரைகளிலும் அறிந்துகொள்க.

2. எந்த உகாரத்தில் அகாரம் லயமாகிறதோ அந்தத் தைஜஸரூப உகாரத்தைப் பிராஞ்ஞரூப மகாரத்தில் லயஞ்செய்யவேண்டும்.

3. பிராஞ்ஞரூப மகாரத்தைத் துரியரூபமான ஓங்காரத்தின் பரமார்த்தரூபமாகிய அமாத்திரையில் லயஞ் செய்யவேண்டும். ஏனெனின், ஸ்தூலத்தின் உற்பத்தியும் லயமும் சூக்ஷமத்தில் உண்டாகின்றன. ஆதலால்,

1. விசுவரூப அகாரம் தைஜஸரூப உகாரத்தில் லயமாகக்கூடும்.

2. சூக்ஷமத்தின் உற்பத்தியும் லயமும் காரணத்தி லுண்டாகின்றன. ஆதலால் தைஜஸரூப உகாரம் அதன் காரணமாகிற பிராஞ்ஞரூப மகாரத்தில் லயமாகக்கூடும்.

இந்த இடத்தில் விசுவாதிகளைக் கொள்வதினல் சமஷ்டியான விராட்டாதிகளும் தத்தம் திரிபுடிகளுமாகிய எல்லாவற்றையும் கொள்ளவேண்டுமென்பதை யறிக.

3. எந்தப் பிராஞ்ஞரூப மகாரத்தில் உகாரம் லயஞ்செய்யப்பட்டதோ, அந்த மகாரத்தைத் துரியரூப ஓங்காரத்தின் பரமார்த்தரூப அமாத்திரையில் லயப்படுத்துக. ஏனெனின் ஓங்காரத்தின் பரமார்த்தஸ்வரூபத்துக்குத் துரியத்தோடு அபேதமிருக்கிறது. அந்தத் துரியம் பிரஹ்மரூபமாம். சுத்தபிரஹ்மத்தில் ஈசுவரனும் பிராஞ்ஞனும் கற்பிக்கப்பட்டிருக்கின்ருர்கள். எது எதில் கற்பிக்கப்படுகிறதோ அது அதன் ஸ்வரூபமாகிறது. ஆதலால் ஈசுவரசகிதப் பிராஞ்ஞரூப மகாரம் லயமாதல்கூடும்.

இவ்விதத்தால் எந்த ஓங்காரத்தின் பரமார்த்தஸ்வரூபமாகிற அமாத்திரையில் எல்லாம் லயப்படுத்தப்படுகின்றனவோ "அது நான்" என்று ஏகாக்கிர சித்தத்துடன் சிந்தனை செய்க.

ஸ்தாவர ஜங்கமரூபமாயும் அசங்கமாயும் அத்துவயமாயும் அசம்ஸாரியாயும் நித்தியமுக்தமாயும் நிர்ப்பயமாயுமிருக்கிற பிரஹ்மரூப ஓங்காரத்தின் பரமார்த்தஸ்வரூபம் எதுவோ "அதுநான்" என்று சிந்தனை செய்வதனால் ஞானமுண்டாகிறது. ஆதலால் ஞானவாயிலாக முக்திரூப பலத்தைக் கொடுக்கும். இது ஓங்காரத்தின் நிர்க்குண உபாஸனை இது எல்லாவற்றிலும் உத்தமமாம்.

## 294. ஓங்காரசிந்தனத்தில் பரமஹம்ஸனுக்கு அதிகார முளதெனல்.

முன்சொன்னபிரகாரம் எவன் ஓங்காரஸ்வரூபத்தை யறிகிறனோ அவன் முனியாவன்; அறியாதவன் முனியாகான். ஏனெனின், முனியென்றால் மனனஞ்செய்பவன். இந்த ஓங்காரத்தின் சிந்தனம் மனனரூபமாம். எவனுக்கு ஓங்காரத்தின் சிந்தனைவடிவ மனனமில்லையோ அவன் முனியல்லன்.

இவ்வாறு மாண்டூக்கிய உபநிஷத்தின்படி சுருக்கமாக ஓங்காரசிந்தனம் சொல்லப்பட்டது. நிருசிம்ஹதாபினி முதலிய உபநிஷத்துக்களிலும் இதன் கிரமமிருக்கிறது. இந்த ஓங்காரசிந்தனம் பரமஹம்ஸர்களின் கோப்பிய (இரகசிய) தனம். பகிர்முக புருஷனுக்கு இதில் அதிகாரமில்லை; அத்தியந்தம் அந்தர்முகனுக்கே அதிகாரமுண்டு. கிரகஸ்தனுக்கு இதில் அதிகாரமில்லை. ஸ்திரீ தன புத்திர சம்பந்தமில்லாத பரமஹம்ஸனே அதிகாரியாவன்.

## 295. ஓங்காரத்தியானமுடையவர்களுக்குப் பயன் (295-296).

1. முன்சொன்னபடி ஓங்காரத்தைப் பிரஹ்மரூபமாகத் தியானஞ் செய்வதினால் ஞானவாயிலாக மோக்ஷ முண்டாகிறது.

2. ஆனால் எவனுக்கு இந்தலோகபோகத்திலாவது பிரஹ்மலோகத்திலாவது இச்சையிருக்கிறதோ, எவன் தீவிரமான வைராக்கியமில்லாமல் ஹடத்தால் இச்சையைத்தகைந்து தனபுத்திராதிகளைத் தியாகஞ்செய்து பரமஹம்ஸகுரு உபதேசத்தால் ஓங்காரரூபப் பிரஹ்மத்தைத் தியானஞ்செய்கிறனோ, அவனுக்குப் போக இச்சை ஞானத்திற் பிரதிபந்தகமா யிருக்கிறது. அதனால் அவனுக்கு ஞானமுண்டாகிறதில்லை. ஆனால் தியானஞ் செய்து கொண்டே இந்தச் சரீரம் விட்டபின் வேறு சரீரம் கிடைக்கிறது.

(1) இந்தலோக போகங்களின் இச்சையைத் தகைந்து தியானஞ் செய்ததினால் இந்தலோகத்தில் வெகுசெல்வத்துடன்கூடிய பரிசுத்தமான சற்குலத்திற் பிறக்கிறன். அங்கு முன்ஜன்மத்தின் இச்சைகளெல்லாம் நிறைவேறி முன்ஜன்மத்தின் தியானசம்ஸ்காரத்தால் மறுபடியும் விசாரத்திலாவது தியானத்திலாவது பிரவிருத்தியுண்டாகிறது. அதனால் ஞானமுண்டாய் மோக்ஷம் கிடைக்கிறது.

**296.** (2) பிரஹ்மலோகத்தின் போகங்களில் இச்சையைத் தகைந்து ஓங்காரரூபப் பிரஹ்மத்தின் தியானத்திற் பிரவிருத்திக்கிறவன் சரீரத்தைவிட்டுப் பிரஹ்மலோகத்துக்குப் போகிறான். அவ்விடத்தில் மனிதர்களுக்கும் பிதிர்க்களுக்கும் தேவதைகளுக்கும் கிடைக்காத சுதந்தரத்தன்மையின் ஆனந்தத்தை யனுபவிக்கிறான். ஹிரண்யகர்ப்பனுடைய விபூதியாகிய சத்தியசங்கற்பாதி சகல ஐசுவரியங்களும் கிடைக்கின்றன.

## 297. பிரஹ்மலோகமார்க்கத்தின் கிரமம்.

பிரஹ்மலோகத்திற்குப் போகும் * மார்க்கத்தின் கிரமம் இதுவாம்:— பிரஹ்மோபாஸனையில் தற்பரனாயுள்ள புருஷன் இறக்குங்காலத்தில் அவன் இந்திரிய அந்தக்கரணங்கள் முழுவதும் † மூர்ச்சையடைந்து எதனையு மறியச் சாமர்த்தியமில்லாதனவாயினும், யமதூதர்கள் அவனுடைய லிங்கசரீரத்தைக் கொண்டுபோக அவனருகில் வருகிறதில்லை. ஆனால்;

1. அக்கினியபிமானிதேவதை அவனை மரணசமயத்தில் சரீரத்தினின்றும் வெளிப்படுத்தித் தன் லோகத்துக்குக் கொண்டுபோகிறது.

2. அக்கினிலோகத்திலிருந்து தின அபிமானிதேவதை தன் லோகத்துக்குக் கொண்டுபோகிறது.

3. அங்கிருந்து சுக்கிலபக்ஷ அபிமானதேவதை தன் லோகத்துக்குக் கொண்டுபோகிறது.

4. அங்கிருந்து உத்தராயணகால(ஆறுமாத)அபிமானிதேவதை தன் லோகத்துக்குக் கொண்டுபோகிறது.

5. அங்கிருந்து மேல் ஸம்வத்ஸர அபிமானிதேவதை தன் லோகத்துக்குக் கொண்டுபோகிறது.

6. அங்கிருந்து தேவலோக அபிமானிதேவதை தன் லோகத்துக்குக் கொண்டுபோகிறது.

7. அங்கிருந்து வாயு அபிமானிதேவதை தன் லோகத்துக்குக் கொண்டுபோகிறது.

---

* இந்த மார்க்கத்தின் கிரமம் யஜுர்வேதத்தின் ஈசாவாசிய உபநிஷத்தின் முடிவிலும், சாந்தோக்கியத்திலும் எழுதப்பட்டிருக்கின்றது.

† மரணசமயத்தில் ஸ்தூலசரீரத்தினின்றும் லிங்கசரீரம் பிரிகிறதினால் சேதனமில்லாமையால் உபாஸகனுடைய இந்திரிய அந்தக்கரணங்கள் அந்நியப்பிராணிகளைப்போல நசிக்கப்பட்டனவாகின்றன. ஆகையால் அவை எதனையும் அறிவதில் சாமர்த்திய முடையனவன்று. கிரியாசக்தியுடைய பிராணனுக்கு ஸ்வரூபமாக அசேதனமா (அறிவில்லாததா)யிருத்தலின் இச்சையின்மையால் அதனால் அவற்றிற்குப் போகுதல் சம்பவிக்கிறதில்லை.

8. அங்கிருந்து சூரியதேவதை தன் லோகத்துக்குக் கொண்டுபோகிறது.

9. அங்கிருந்து சந்திரதேவதை தன்லோகத்துக்குக் கொண்டுபோகிறது.

10. அங்கிருந்து மின்னல் அபிமானிதேவதை தன்லோகத்துக்குக் கொண்டு போகிறது.

11. அங்கு மின்னல் அபிமானிதேவதையின் லோகத்தில் ஹிரண்யகர்ப்ப னுடைய உத்திரவின்படி ஹிரண்யகர்ப்பலோகத்தில் வசிக்கிறவனும் ஹிரண்ய கர்ப்பனுக்குச் சமானமான ரூபத்தையுடையவனுமான ஒரு திவ்விய புருஷன் இந்த உபாஸகனைக் கொண்டுபோக இவன்முன் வந்துசேருகின்றான். அவன் இந்த மின்னல் அபிமானிதேவதையின் லோகத்திலிருந்து வருணலோகத் திற்கு அந்த உபாஸகனைக் கொண்டுபோகிறான். மின்னல் அபிமானிதேவதை கூடவே வருகிறான்.

12. பின் வருணலோகத்திலிருந்து இந்திரலோகத்திற்குக் கொண்டுபோகி றான். வருணதேவதையும் இந்திரலோகபரியந்தம் ஹிரண்யகர்ப்பலோகவாசி யான புருஷனுடனும் உபாசகனோடு மிருக்கிறான்.

13. அதற்குமேல் பிரஜாபதிலோகம்வரையில் இந்திரன் இருவரோடு மிருக்கிறான்.

14. அதற்குமேல் பிரஜாபதி அவ்விருவர்களோடும் பிரஹ்மலோகத்திற்குக் கொண்டுபோகச் சமர்த்தனுகான். ஆதலால் பிரஹ்மலோகத்தில் அந்தத் திவ் வியபுருஷனோடு அந்த உபாசகன் சேருகிறான்.

பிரஹ்மலோகத்தின் அதிபதி ஹிரண்யகர்ப்பன்.

சூக்ஷ்மசமஷ்டியின் அபிமானிசேதனன் ஹிரண்யகர்ப்ப னெனப்படுகி றான். அவனையே காரியப்பிரஹ்ம மென்பர்.

காரியப்பிரஹ்மத்தின் இருப்பிடத்தினைப் பிரஹ்மலோக மென்பர்.

## 298. சாயுஜ்யமோக்ஷத்தின் வர்ணனம்.

முற்கூறியபடி ஓங்கார உபாசனை சுத்தப்பிரஹ்மரூபமாகச் சொல்லப் பட்டிருக்கிறது. சுத்தப்பிரஹ்மத்தின் உபாசகனுக்குச் சுத்தப்பிரஹ்மத்தின் பிராப்திவேண்டும். அங்ஙனமாயினும் சுத்தப்பிரஹ்மத்தின் பிராப்தி ஞானத் தினலேயே யுண்டாகிறது. இச்சைவடிவப் பிரதிபந்தத்தால் எவனுக்கு ஞான முண்டாகவில்லையோ அவனுக்குக் காரியப்பிரஹ்மத்தின் பிராப்தியாகிய சாயுஜ்யரூப மோக்ஷ முண்டாகிறது.

1. பிரஹ்மலோகத்தை யடைந்த உபாஸகனுக்கு ஹிரண்யகர்ப்பனுக் குச் சமானமான விபூதி (ஐசுவரியம்) கிடைக்கின்றது.

2. அவன் சத்தியசங்கற்பனாகிறான்.

3. இச்சித்தபடி அவனுக்குச் சரீரம் உண்டாகிறது.

4. இச்சிக்கும் போகங்களெல்லாம் அவனுக்குச் சங்கற்பத்தினாலேயே கிடைக்கின்றன.

5. ஒருசமயத்தில் ஆயிரம் சரீரங்களால் அவ்வவற்றின் போகங்களைத் தனித்தனியே புசிக்கவேண்டுமென்று இச்சையுண்டாயின், அதேசமயம் ஆயிரம் சரீரங்களும் அவற்றின் வெவ்வேறு சாமக்கிரிகளு முண்டாகின்றன.

அதிகமாய்ச் சொல்வதென்னை! எதனைச் சங்கற்பிக்கிறானோ அதுவே சித்திக்கிறது. ஆனால் ஜகத்தின் சிருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரங்களைவிட்டு மற்றெல்லா விபூதிகளும் ஈசுவரனுக்குச் சமானமாகின்றது. இதற்குத்தான் * சாயுஜ்ய மோக்ஷ மென்று பெயர். இப்படி ஹிரண்யகர்ப்பனுக்குச் சமானமாய் வெகுகாலம் சங்கற்பத்தாற் சித்தித்த திவ்விய பதார்த்தங்களைப் புசித்துப் பிரளயகாலத்தில் ஹிரண்யகர்ப்பலோகத்துக்கு நாசம்வரும்போது ஞானமுண்டாக உபாசகனானவன் விதேகமோக்ஷத்தை யடைகிறான்.

## 299. ஓங்காரத்தின் அகங்கிரகத்தியானத்தால் பிரஹ்மலோகம் கிடைக்குமென்னும் நியமம்.

ஓங்காரரூபப் பிரஹ்மத்தை யுபாசிக்கிறவனுக்குப் பிரஹ்மலோகப்பிராப்தி வாயிலாக மோக்ஷங்கிடைப்பதுபோல மற்ற உபநிஷத்துகளிற் சொல்லிய பிரஹ்ம உபாஸனைகளாலும் இதேபலன் உண்டாகிறது. ஆனால் அகங்கிரக உபாஸனையின்றி வேறு உபாஸனையால் பிரஹ்மலோக மடையப்படமாட்டாதென்று சூத்திரகாரரும் பாஷியகாரரும் பிரஹ்ம சூத்திரத்தின் நான்காவது அத்தியாயத்திற் சொல்லியிருக்கிறார்கள்.

---

* 1. இராஜாவின் பிரஜைகளைப்போல ஈசுவரனது லோகத்தில் வசித்தற்குச் சாலோக்கியமுக்தி என்று பெயர்.

2. அதனினும் சிரேஷ்டமாய் இராஜனது சேவகனைப்போல ஈசுவரன் சமீபத்தில் வாசஞ்செய்தற்குச் சாமீப்பியமுக்தி யென்று பெயர்.

3. அதனினும் மேலானதாய் இராஜாவின் தம்பியைப்போல ஈசுவரனது சமானரூபத்தின் அடைவிற்குச் சாரூப்பியமுக்தி யென்று பெயர்.

4. அதனினும் மேலானதாய் இராஜாவின் மூத்தகுமாரனைப்போல ஈசுவரனது சமான சத்திய சங்கற்பாதி ஐசுவரியத்தை (விபூதியை) அடைதற்குச் சார்ஷ்டிமுக்தி யென்று பெயர்.

இவ்வாறு சாஸ்திரங்களில் பயன்வடிவமான நான்குவித முக்தி சொல்லப்பட்டிருக்கிறது. அவற்றில் கடையான சார்ஷ்டிமுக்தி மேலானதாம். அதனையே சாயுஜ்யமோக்ஷ மென்றும் கூறுவர்.

1. நர்மதையின் பாணங்களைச் சிவரூபமாகவும் சாளிக்கிராமங்களை விஷ்ணுரூபமாகவும் தியானஞ்செய்தல் சொல்லப்பட்டிருக்கிறது. அது பிரதீகத் தியானமாம்; அகங்கிரகத்தியான மன்று.

2. அப்படியே மனதைப் பிரஹ்மரூபமாகவும் சூரியனைப் பிரஹ்மரூபமாகவும் தியானஞ்செய்தல் சொல்லப்பட்டிருக்கிறது. அதுவும் பிரதீகத் தியானமாம்; அகங்கிரகத்தியான மன்று.

அவற்றால் பிரஹ்மலோகம் அடையப்படமாட்டாது. சகுண அல்லது நிர்க்குணப் பிரஹ்மத்தைத் தன்னின் அபேதமாகச் சிந்தனைசெய்தல் அகங்கிரகத்தியானமெனப்படும். அதனாற்றான் பிரஹ்மலோகங் கிடைக்கும்.

## 300. உத்தராயணமார்க்கமாகப் பிரஹ்மலோகத்திற் சென்றவர்கட்கு மறுபடியும் சம்சாரம் வராமையும், ஞானவாயிலாக மோக்ஷமடைதலும்.

முற்கூறிய மார்க்கம் உத்தராயணமார்க்கம் அல்லது தேவமார்க்க மெனப்படும்.

அந்தத் தேவமார்க்கத்தால் பிரஹ்மலோகத்துக்கு எந்த உபாஸகன் போகிறானோ அவனுக்கு மறுபடியும் சமுசார முண்டாகிறதில்லை. ஆனால் அவனுக்கு ஞானமுண்டாகி விதேகமுக்தியை யடைகிறான்.

அவ்விடத்தில் ஞானசாதனங்களான குரு உபதேசாதிகள் வேண்டியதில்லை. ஆனால் பிரஹ்மலோகத்தில் குரு உபதேசாதி சாதனங்களின்றியே ஞான முண்டாகிறது. ஏனெனின் பிரஹ்மலோகத்தில் தமோகுண ரஜோ குணங்கள் லேசமுமில்லை. அந்தலோகம் கேவலம் சத்துவகுணப்பிரதானமானது.

1. தமோகுணமில்லாமையினால் ஜடத்துவம் ஆலசியமுதலியவை இல்லை.

2. ரஜோகுணமில்லாமையினால் காமக்குரோதாதிரூப ரஜோகுணத்தின் காரியமான விக்ஷேபமில்லை.

3. கேவலம் சத்துவகுண மிருத்தலால் அதன் காரியமான ஞானரூபப் பிரகாசம் அந்த லோகத்தில் முக்கியமாம்.

## 301. இரணியகர்ப்பவாசிக்கு அசங்கநிர்விகாரப்பிரஹ்மவடிவ ஆத்மாவின் விளக்கமுண்டாகின்றதென்பதில் காரணம்.

ஓங்காரத்தைப் பிரஹ்மரூபமாக முதலில் உபாசித்தகாலத்து ஓங்காரத்தின் மாத்திரைகளின் அர்த்தம் இவ்வாறு சிந்தனைசெய்யப்பட்டது:—

1. "ஸ்தூல உபாதிசகித விராட்டு விசுவசேதனம் அகாரத்தின் வாச்சியமாம்.

2. சூக்ஷ்ம உபாதியோடுகூடிய சேதனமாகிய ஹிரண்யகர்ப்ப தைஜஸன் உகாரத்தின் வாச்சியமாம்.

3. காரண உபாதியோடுகூடிய சேதனமாகிய ஈசுவரப்பிராஞ்ஞன் மகாரத்தின் வாச்சியமாம்."

இத்தன்மைய முன் சிந்திக்கப்பட்டுள்ள அர்த்தத்தின் ஸ்மிருதி, பிரஹ்ம லோகத்தில் உண்டாகிறது. சத்துவகுணப்பிரபாவத்தால் இவ்வாறு விவேசன (விசார) முண்டாகிறது:—

1. ஸ்தூலோபாதியால் சேதனத்தில் விராட்டுத்தன்மை விசுவத்தன்மைகள் பிரதீதியாகின்றன.

(1) ஸ்தூல சமஷ்டியின் திருஷ்டியால் விராட்டுத்தன்மை யுளது.

(2) ஸ்தூலவியஷ்டியின் திருஷ்டியால் விசுவத்தன்மை யுளது.

சமஷ்டி வியஷ்டி ஸ்தூலத்தின் திருஷ்டியின்றி விராட்டுத்தன்மை விசுவத்தன்மைகள் தோற்றா. ஆனால் சேதனமாத்திரமே விளங்கும்.

2. அப்படியே சூக்ஷ்ம உபாதிசகித ஹிரண்யகர்ப்ப தைஜஸசேதனம் உகாரத்தின் வாச்சியமாம்.

(1) அங்குச் சமஷ்டி சூக்ஷ்ம உபாதியின் திருஷ்டியால் சேதனத்தில் ஹிரண்யகர்ப்பத்தன்மை தோற்றுகிறது.

(2) வியஷ்டிசூக்ஷ்ம உபாதியின் திருஷ்டியால் தைஜஸத்தன்மை விளங்குகிறது.

சூக்ஷ்ம உபாதியின் திருஷ்டியின்றி ஹிரண்யகர்ப்பத்தன்மை தைஜஸத்தன்மைகள் தோற்றுகிறதில்லை.

3. அப்படியே மகாரத்தின் வாச்சியம் ஈசுவரப்பிராஞ்ஞனும். அங்கு,

(1) சமஷ்டியஞ்ஞான உபாதியின் திருஷ்டியால் சேதனத்தில் ஈசுவரத்தன்மை தோற்றுகிறது.

(2) வியஷ்டியஞ்ஞான உபாதியின் திருஷ்டியால் சேதனத்தில் பிராஞ்ஞத்தன்மை தோற்றுகிறது.

அஞ்ஞான உபாதியின் திருஷ்டியின்றி ஈசுவரத்தன்மை பிராஞ்ஞத்தன்மைகள் தோற்றுகிறதில்லை.

எந்த வஸ்து எதனிடத்தில் மற்றொன்றன் பார்வையால் பிரதீதியாகிற தோ அது அதனிடத்தில் பரமார்த்தமாக இருக்கிறதில்லை. எதன் எந்த ரூபம் பிறவற்றின் திருஷ்டியின்றிப் பிரதீதியாகிறதோ அது அதன் பரமார்த்த ரூப மாகிறது. எங்ஙனம்: ஒரு புருஷனிடத்தில் பிதாவின் திருஷ்டியால் புத்திரத் தன்மையும், பாட்டனது திருஷ்டியால் பௌத்திர (பேர)த்தன்மையும் விள ங்குகின்றன. அவை பரமார்த்தமாக இல்லை. புருஷனுடைய பிண்டமே பர மார்த்தமாம். அதுபோல ஸ்தூல சூக்ஷ்ம காரண உபாதியின் திருஷ்டியால் எந்த விராட்டு விசுவாதிவடிவங்கள் தோன்றுகின்றனவோ, அவை மித்தை யாம்; சேதனமாத்திரமே சத்தியமாம்.

அந்தச் சேதனம் எல்லாப்பேதமு மில்லாதாம். ஏனெனின்,

1. விராட்டுக்கும் விசுவனுக்கு மிருக்கும் பேதம் உபாதியினு லாகியதாம். அந்த உபாதி இருவருக்கும் ஸ்தூலமாயிருந்தாலும் விராட்டுக்கு உபாதி சம ஷ்டியும் விச்வனுக்கு உபாதி வியஷ்டியுமாம். அந்தச் சமஷ்டி வியஷ்டி உபாதியால் அவற்றிற்குப் பேதமுளது. ஆதலால் ஸ்வரூபமாகப் பேதமில்லை.

2. அப்படியே தைஜஸனுக்கும் ஹிரண்யகர்ப்பனோடு சமஷ்டி வியஷ்டி உபாதி யால் பேதமுளது; ஸ்வரூபமாக வில்லை.

3. அப்படியே ஈசுவரனோடு பிராஜ்ஞனுக்கும் சமஷ்டி வியஷ்டி உபாதி யால் பேதமுளது; ஸ்வரூபமாக வில்லை.

1. இவ்வாறு பிராஜ்ஞனுக்கு ஈசுவரனோடு அபேதமுண்டு.

2. தைஜஸனுக்கு ஹிரண்யகர்ப்பனோடு அபேதமுண்டு.

3. அங்ஙனமே விசுவனுக்கு விராட்டோடு அபேதமுண்டு.

இவ்விதத்தால் ஸ்தூலோபாதி யுடையவனுக்குச் சூக்ஷ்மோபாதியுடைய வனோடாவது காரணவுபாதியுடையவனோடாவது பேதமில்லை. ஏனெனின், ஸ்தூலசூக்ஷ்மகாரண உபாதியின் திருஷ்டியை விடுதலால் சேதனஸ்வரூபத் தில் எவ்வித பேதமும் தோற்றுகிறதில்லை.

சேதனத்துக்கு அநாத்மாவோடும் பேதமில்லை. ஏனெனின், அநாத்ம தேகாதிகள் அவித்தியாகாலத்தில் தோற்றுகின்றன; பரமார்த்தத்தால் தோற்றுகிறதில்லை. அவற்றிற்கும் சேதனத்தோடு பேதம் பொருந்தாது.

இவ்விதத்தால் சர்வபேதரகிதமாயும் அசங்கமாயும் நிர்விகாரமாயும் நித் தியமுக்தமாயும் பிரஹ்மரூபமாயும் இருக்கிற ஆத்மா ஓங்காரத்தின் லக்ஷியமா

யும் ஸ்வயம்பிரகாசரூபமாயும் அந்த உபாஸகனுக்கு விளங்குகிறது. ஆத லால் ஹிரண்யகர்ப்பலோகத்தில் வசிக்கிறவனுக்குச் சமுசார முண்டாகிற * தில்லை.

## 302. ஓங்காரம் என்பவற்றிற்கும் மகாவாக்கியத்தின் அர்த்தத்திற்கும் ஏகத்துவம்.

மகாவாக்கிய விவேகமின்றி ஞானமுண்டாகாவிடினும் ஓங்காரத்தின் விவேகமே மகாவாக்கியத்தின் விவேகமாம்.

1. (1) ஸ்தூலோபாதிசகிதசேதனம் அகாரத்தின் வாச்சியம்.
   (2) ஸ்தூலோபாதியைவிட்டுச் சேதனமாத்திரம் அகாரத்தின் லக்ஷியம்.

2. (1) சூக்ஷ்மோபாதி சகிதசேதனம் உகாரத்தின் வாச்சியம்.
   (2) சூக்ஷ்மோபாதியை விட்டுக் கேவலசேதனம் உகாரத்தின் லக்ஷியம்.

3. (1) காரண உபாதி சகிதசேதனம் மகாரத்தின் வாச்சியம்.
   (2) காரண உபாதியைவிட்டுக் கேவலசேதனம் மகாரத்தின் லக்ஷியம்.

இவ்விதத்தால்,

1. உபாதிசகித விசுவாதிகள் அகாராதி மாத்திரைகளின் வாச்சியங்களாம்.

2. உபாதிரகிதசேதனம் எல்லா மாத்திரைகளுக்கும் லக்ஷ்யமாம்.

1. அப்படியே நாமரூபமான சகல உபாதிகளோடு கூடிய சேதனம் ஓங்காரவர்ணத்தின் வாச்சியமாம்.

2. நாமரூபமான ஸகல உபாதிகளுமின்றிய சேதனம் ஓங்காரவர்ணத்தின் லக்ஷ்யமாம்.

இவ்வாறு ஓங்காரத்துக்கும் மகாவாக்கியத்துக்கும் அர்த்தம் ஒன்றாகவே யிருக்கிறது. ஆதலால் ஓங்காரவிவேகத்தால் அத்வைதஞான முண்டாகிறது.

இவ்விதமாக ஆசாரியர் வாக்கினின்றும் சிரவணஞ்செய்து அதிருஷ்டி யென்னும் மத்தியமசிஷ்யன் உபாஸனையில் பிரவிருத்தித்து ஞானவாயிலாகப் பரமபுருஷார்த்தமான மோக்ஷத்தை யடைந்தான்.

---

* ஞானவாயிலாக மோக்ஷமாகிய பலமுண்டாகிறது.

## 303. நிர்க்குண உபாசனைக்கு அதிகாரமில்லாதவன் செய்யவேண்டியது.

நிர்க்குண உபாசனையில் அதிகாரமில்லாதவன் * செய்யவேண்டியதைக் கூறுகின்றார்:—இந்த நிர்க்குணத்தியானம் முடியவில்லையாயின் † சகுணஈசுவ

* இங்கு இது அபிப்பிராயமாம்:—வேதாந்தத்தின் சிரவணமனனரூப விசாரத்திற் பிரவிருத்தித்த ஜிஞ்ஞாசு அதனைவிட்டு அந்நியசாதனஞ் செய்யவேண்டியதில்லை.

1. ஒருகால் அந்த விசாரசீலபுருஷன் விசாரத்தைவிட்டு வேறுசாதனங்களிற் பிரவிருத்திப்பானாயின் ஆருடபதித (ஏறிவிழுந்தவ)னாவான்.

2. அல்லது "காம்லேடிநியாயம்" அதாவது தேனையொழுகவிட்டு முழங்கையை நக்குதல் என்னும் திருஷ்டாந்தம் அவனுக்குக் கிடைக்கும்.

ஆதலால் அந்த விசாரசீலபுருஷன் திடஞானம்வரையில் விசாரஞ்செய்யவேண்டியது.

1. விசாரத்திற் பிரவிருத்தியுண்டாகாதவன் நிர்க்குண உபாஸனை செய்யவேண்டியது.

2. நிர்க்குணவுபாசனையில் அதிகாரமில்லாதவனுக்கு "உபவாசத்தினும் பிக்ஷை மேலானது" என்னும் நியாயத்தால் சகுணவுபாசனைமுதலிய வடிவினதாகிய கர்த்தவ்வியம் சொல்லப்பட்டிருக்கிறது.

† 1. மாயாவிசிஷ்ட சேதனரூப காரணப்பிரஹ்மம் சகுண ஈசனும்.

2. அல்லது அதன் உபலக்ஷணமான ஹிரண்யகர்ப்பன், வைசுவாநரன், ஹரி, ஹரன், கௌரி, கணேசன், சூரியன், அவர்களது அவதாரவடிவ காரியப் பிரஹ்மம் சகுணஈச னெனப்படுகின்றது.

3. அல்லது அவற்றின் பிரதிமைமுதலிய வடிவினதாகிய பிரதிநிதி (அவற்றின் ஸ்தானத்தில் ஸ்தாபிக்கப்பட்டது) எதுவோ அது இங்குச் சகுணஈசன் எனப்படுகின்றது.

முற்கூறிய உபாஸியங்களில் (உபாசிக்கப்படுபவற்றில்) முன்முன் மேலானதாம். மேல் 7-வது தரங்கத்திற் கூறப்படுங்கிரமமாக மாயாவிசிஷ்ட சேதனவடிவ காரணப் பிரஹ்மமே ஈசபதத்தின் முக்கியார்த்தமாம். அதுவே உபாஸியமாம். அங்ஙனமாயினும் "மாயையைப் பிரகிருதி (சகலசகத்திற்கும் உபாதானம்) என்று அறிக. பிரஹ்மத்தை மகேசுவர னென்றறிக" என்னும் சுருதியினால் மாயாவிசிஷ்ட சேதனத்தினும் பின்னவஸ்து இல்லாமையால் ஸ்ரீ வித்தியாரணியஸ்வாமிகள் சர்வமதத்தோடும் விரோதமின்றிய ஈசுவர நிரூபணத்தைச் சித்திரதீபத்தில் செய்திருக்கிறார்கள். அதனை யனுசரித்து ஹிரணியகர்ப்பாதி சகல உபாஸிய வஸ்துக்களும் ஈசனெனப்படுகின்றன.

ரனை மனதில் தரிக்கவேண்டியது. சகுண உபாஸனை முடியாவிடின் * நிஷ்காமகர்மஞ்செய்து ராமனைப் பஜிக்கவேண்டியது. நிஷ்காமகர்மமும் முடியாவிட்டால் ஸகாமமான சுபகர்மஞ்செய்யவேண்டியது. அதுவும் முடியாதேனின் அந்தச் சடன் (துஷ்டன்) அடிக்கடி இறந்து பிறக்க.

ஓங்காரத்தின் அர்த்தத்தை யறிந்து அதிருஷ்டியானவன் கிருதார்த்தனுன்.

இத்தரங்கத்தைப் படிப்பவன் எவனே, அவனைத் தாதுவாகிய ஸ்ரீ குருவானவர் சுதிருஷ்டியாக்கக்கடவர்.

குருவேதமுதலியன வியாவகாரிகமென்று கூறுதலாகிய
மத்திமாதிகாரி சாதனவர்ணனமென்னும்
ஐந்தாவது தரங்கம் முற்றிற்று.

---

* பலத்தின் இச்சையின்றிய தனது வர்ணுசிரமகர்மங்களை ஈசுவரார்ப்பண புத்தியினுற் செய்க. அதனேடு நாமகீர்த்தன முதலியவற்றைச் செய்து இராமனைப் பஜிக்க.

அல்லது நிஷ்காமகர்மத்தினுல் இராமனைப் பஜிக்க அதாவது அந்தக் கர்மத்தை ராமனுக்கு அர்ப்பணஞ் செய்க. பல இச்சையில்லாதவனுய் இராமன்பொருட்டுச் செய்த புண்ணிய கர்மமும் இராமனது சந்தோஷத்திற்குக் காரணமாதலால் இராமனது பஜனமேயாம்.



ஓம்.

ஸ்ரீ கணேசாயநம:

# ஸ்ரீ விசாரசாகரம்.

## ஆறுவது தரங்கம்.

### ஸ்ரீ குருவேதமுதலிய சாதனங்கள் மித்தையென்று வர்ணித்தல்.

### 304. * உபோற்காதம்.

1. நான்காவது தரங்கத்தில் உத்தமாதிகாரியின் உபதேசக்கிரமஞ் சொல்லப்பட்டது.

2. ஐந்தாவது தரங்கத்தில் மத்தியமாதிகாரியின் உபதேசக்கிரமஞ் சொல்லப்பட்டது.

3. இந்தத் தரங்கத்தில் கநிஷ்டாதிகாரியின் உபதேசக்கிரமத்தைச் சொல்லுவாம்:—

எவனுக்குச் சந்தேகங்கள் விசேஷமாய் ஜனிக்கின்றனவோ, அவன் புத்தி தீவிரமாயிருந்தாலும் அவன் கநிஷ்டாதிகாரி யெனப்படுகிறான்.

இந்தத் தரங்கம் யுக்திப்பிரதானமாதலால் கேட்ட அர்த்தத்தில் குதர்க்கம் தோற்றுகிறவனுக்கு இந்தத் தரங்க முபயோகப்படும்.

குதர்க்கத்தால் தூஷிக்கப்பட்ட புத்தியையுடையவன் கநிஷ்டாதிகாரியாவன். அவனுக்கு உபதேசக்கிரமம் இந்தத் தரங்கத்தி லுளது.

முன் (ஐந்தாவது) தரங்கத்திற் பிரணவோபாஸனை ஜகத்துற்பத்தி என்பவற்றின் நிரூபணத்துக்குமுன் இது சொல்லப்பட்டது :—"சேதனத்துக்கு வேறான அஞ்ஞானமும் அதன் காரியமும் அநாத்மா வெனப்படும். அவ்வநாத்ம பதார்த்தங்கள் முழுவதும் சொப்பனம்போல மித்தையாம்." இவ் வார்த்தையைக் கேட்டு இரண்டு தமயன்மார்களும் கேள்விகேட்காமல் சும்மாவிருப்பதைப் பார்த்துத் தர்க்கதிருஷ்டி கேட்கின்றான்.

---

* இதனை விசாரசந்திரோதயத்தின் முதல் டிப்பணியிற் காண்க.

## (தர்க்கதிருஷ்டியின் பிரசினம். 305-306.)

### 305. பிரசினம்:—சொப்பனதிருஷ்டாந்தத்தால் ஜாக்கிர பதார்த்தங்கள் மித்தையாகாவெனல்.

தர்க்கதிருஷ்டி பிரசினஞ்செய்கிறன்:-*முன் சுத்தமாயறியப்படாத பதார்த்தத்தின் ஞானம் சொப்பனத்தில் உண்டாகிறதில்லை. ஆனால் ஜாக்கிரத்தில் எதன் அநுபவஞான முண்டாகிறதோ அதன் ஸ்மிருதி சொப்பனத்தி லுண்டாகிறது. ஆதலால் ஸ்மிருதிஞானத்துக்கு விஷயமான ஜாக்கிரபதார்த்தங்கள் சத்தியமாயிருத்தலால் சொப்பனத்திலுண்டாகிற அவற்றின் ஸ்மிருதி வடிவ ஞானமும் சத்தியமே. ஆதலால் சொப்பன திருஷ்டாந்தத்தால் ஜாக்கிர பதார்த்தங்கள் பொய்யென்று சொல்லுதல் பொருந்தாது.

### 306. பிரசினம்:—சொப்பனம் மித்தையன்றெனல்.

சொப்பனஞானத்திற்கு விஷயமான பதார்த்தங்கள் சத்தியமா மென்பதை வேறுவிதமாய்ப் பிரதிபாதிப்பாம்:—

அல்லது (அதாவது வேறுவிதமாய்ச்)சொப்பனத்தின் ஞானமும் அதன் விஷயமான பதார்த்தமும் சத்தியமாம்; மித்தையன்று.ஏனெனின், சொப்பனுவஸ்தையில் ஸ்தூலசரீரத்தை விட்டு லிங்கசரீரம் வெளியே சென்று சத்தியமான பர்வதம் சமுத்திர முதலியவைகளைப் பார்க்கிறது. ஆதலால் சொப்பனம் பொய்யன்று.

## (இலக்கம் 305-306-ல் உள்ள பிரசினத்தினுத்தரம். 307-308.)

### 307. ஜாக்கிரபதார்த்தங்களின் ஸ்மிருதி சொப்பனத்திலில்லையெனல்.

1. பூர்வகாலத்துடன் சம்பந்தமுடைய பதார்த்தத்தின் ஞானம் ஸ்மிருதியெனப்படும். முன் பார்த்த யானையின் "அந்த யானை" என்னும் ஸ்மிருதியுண்டாகின்றது.

2. எதிரில் நிற்கும் யானையைக் கண்டு "இது யானை" என்று உண்டாகும்.ஞானம் ஸ்மிருதியன்று; பிரத்தியக்ஷமாம்.

---

* நையாயிகர் சொப்பனத்தை ஜாக்கிரத்தில் அநுபவிக்கப்பட்ட பதார்த்தங்களின் ஸ்மிருதிவடிவ மானஸவிபரீயாஸ மென்பர். அவர்கள் மதாநுசாரமாகச் சிஷ்யன் கூறுகின்றான்.

சொப்பனத்தில் "இந்த யானை எதிரில் நிற்கிறது" "இது நதி" "இது மலை" என்று ஞான முண்டாகிறது. ஆதலால் ஜாக்கிரத்திற் பார்த்த பதார்த்தங்களின் ஸ்மிருதி சொப்பனத்தில் இல்லை. ஆனால் யானைமுதலிய வற்றின் பிரத்தியக்ஷஞானம் உண்டாகிறது.

"ஜாக்கிரகாலத்தில் அறியப்பட்ட பதார்த்தங்களே சொப்பனத்தில் அறி யப்படுகின்றன. அறியப்படாத பதார்தத்தின் ஞான முண்டாகிறதில்லை. ஆதலால ஜாக்கிர பதார்த்தத்தின் ஞானசம்ஸ்காரத்தால் சொப்பனத்தினது ஞான முண்டாகிறது. சம்ஸ்காரஜந்நிய ஞானம் ஸ்மிருதி யெனப்படும். ஆத லால் சொப்பனத்தின் ஞானம் ஸ்மிருதிரூபமாம்" என்று இப்படி ஒருவன் ஆக்ஷேபம் செய்வானாயின்,

**அது பொருந்தாது.** ஏனெனின், பிரத்தியக்ஷஞான மிருவகைத்தாம்:— 1. ஒன்று அபிஞ்ஞாரூபப் பிரத்தியக்ஷம். 2. மன்றொன்று பிரத்தியபிஞ்ஞா ரூபப் பிரத்தியக்ஷம்.

(1) கேவலம் இந்திரியசம்பந்தத்தா லுண்டாகும் ஞானம் அபிஞ்ஞாப்பிரத் தியக்ஷ மெனப்படும். எங்ஙனம்: "இது யானை" என்று நேத்திரசம்பந்தத்தா லுண்டாகும் யானையின் ஞானம் அபிஞ்ஞாப்பிரத்தியக்ஷம்.

(2) முந்திய ஞானத்தின் சம்ஸ்காரத்தினாலும் இந்திரியசம்பந்தத்தினா லும் உண்டாகும் ஞானம் *பிரத்தியபிஞ்ஞாப்பிரத்தியக்ஷ மெனப்படும். எங்ங னம்:—முன்பார்த்த யானை யெதிரில் காணப்படும் போது "அந்த யானை இது" என்று உண்டாகும் ஞானம் பிரத்தியபிஞ்ஞாப் பிரத்தியக்ஷமாம்.

அவ்விடத்தில் முன் பார்த்த யானையினது ஞானத்தின் சம்ஸ்காரமும் யானையோடுள்ள நேத்திரத்தின் சம்பந்தமும் பிரத்தியபிஞ்ஞாப்பிரத்தியக்ஷத் துக்கு ஹேதுக்களாம். ஆதலால் சம்ஸ்காரஜந்நியஞானம் ஸ்மிருதிரூபமேயா

---

* பிரத்தியக்ஷஞானத்தின் சாமக்கிரியோடுகூடிய ஸம்ஸ்காரஜந்நிய ஞானம் பிரத் தியபிஞ்ஞாபிரத்தியக்ஷ மெனப்படும். அதனைச் சம்ஸ்காரத்தோடுகூடிய இந்திரிய சம்பந்தத்தாற் றோன்றியதெனின், அந்தலக்ஷணம் வெளிப்பிரத்தியபிஞ்ஞாப்பிரத்திய க்ஷத்தில் பொருந்தும். ஆனால் உட்பிரத்தியபிஞ்ஞாப்பிரத்தியக்ஷத்தில் அந்தலக்ஷணத் தின் அவ்வியாப்தி யுண்டாகும். ஆதலால் பிரத்தியபிஞ்ஞாப்பிரத்தியக்ஷத்திற்கு முத லிற் சொல்லப்பட்ட லக்ஷணமே தோஷமின்றியதாம்; வெளி உள் என்னும் இரண்டற் கும் பொதுவாம்.

மென்னும் நியமமில்லை; *பிரத்திபபிஞ்ஞாப் பிரத்தியக்ஷஞானமும் சம்ஸ்கார ஜந்நியமாம். ஆனுல் இந்திரியசம்பந்தமின்றிக் கேவல சம்ஸ்காரஜந்நியஞான முண்டாயின் அது ஸ்மிருதிஞான மெனப்படும்.

1. சொப்பனத்தில் யானைமுதலியவற்றின் ஞானம் கேவலம் சம்ஸ் காரஜந்நிய மன்று. ஆனுல் அது நித்திரைவடிவதோஷஜந்நியமாம். யானை முதலியவற்றைப்போலச் சொப்பனத்தில் கற்பிக்கப்பட்ட இந்திரியங்களு மிருக்கின்றன. ஆதலால் அவற்றின் ஞானம் இந்திரியஜந்நியமாம்.

சொப்பனபதார்த்தம் சாக்ஷிபாஸியமாம். இந்திரியஜந்நியஞானத்துக்கு விஷயமன்று. என்ருலும் அவிவேகியின் திருஷ்டியால் சொப்பனஞானம் இந்திரியஜந்நியமென்று சொல்லப்படுகிறது.

இவ்விதத்தால் சொப்பனத்தின் ஞானம் ஜாக்கிரபதார்த்தத்தின் ஸ்மிருதி யன்று.

2. நித்திரையினின்று விழித்துப் புருஷன் "நான் சொப்பனத்தில் யானை முதலியவைகளைப் பார்த்தேன்" என்று சொல்லுகிருன். சொப்பனத் தில் யானை முதலியவைகளின் ஸ்மிருதியுண்டாகுமாயின், விழித்தபின் "யான் சொப்பனத்தில் யானை முதலியவற்றை ஸ்மரித்தேன்" என்று சொல்ல வேண்டும். ஆனுல் இப்படி ஒருவரும் சொல்லுவதில்லை. ஆதலால் ஜாக்கிர பதார்த்தங்களின் ஸ்மிருதி சொப்பனத்தி லில்லை.

3. "ஜாக்கிரகாலத்தில் கண்ட கேட்ட பதார்த்தங்களின் ஞானமே சொப்பனத்தி லுண்டாகிற தென்னும் நியமமில்லை, ஆனுல் ஜாக்கிரகாலத்தில் அறியப்படாத பதார்த்தத்தின் ஞானமும் சொப்பனத்தி லுண்டாகிறது. ஜன் மம் முழுவதிலும் ஒருபோதும் பார்த்தும்கேட்டுமிராததான விலக்ஷணபதார்த்

---

* இங்கு இது விசேஷமாம்:—

1. சம்ஸ்காரஜந்நியஞானத்தை ஸ்மிருதியெனின் பிரத்தியபிஞ்ஞாஞானமும் சம்ஸ்காரஜந்நியமாம். அதில் ஸ்மிருதியினது லக்ஷணத்தின் அதிவியாப்தியுண்டாகும். அதனை நிவர்த்தித்தற்பொருட்டு ஸ்மிருதியின் லக்ஷணத்தில் மாத்திரபதத்தைப் புகுத் தல் வேண்டும்.

2. சம்ஸ்காரமாத்திரஜந்நிய ஞானத்தினை ஸ்மிருதியெனின், ஸம்ஸ்காரமாத்திர வடிவ சாமக்கிரி அநுபவநாசத்தின் பின் எப்போது மிருத்தலால் எப்போதும் ஸ்மிருதி யுண்டாதல்வேண்டும் என்னும் தோஷத்தை நிவர்த்தித்தற்பொருட்டு ஸ்மிருதியின் லக்ஷணத்தில் உற்பூத மென்னும் சொல்லையும் பிரவேசஞ் செய்விக்கவேண்டும்.

இவ்வாற்ருல் "உற்பூதசம்ஸ்காரமாத்திரஜந்நியஞானம்" ஸ்மிருதியாம் என்னும் ஸ்மிருதியின் லக்ஷணம் தோஷமின்றியதாம்.

தம் சொப்பனத்தில் ஒருகாலத்துத் தோற்றுகிறது. ஆதலால் அவற்றின் ஞானம் ஸ்மிருதியன்று.

4. "இந்த ஜன்மத்தின் பதார்த்தங்களது ஞானத்தின் சம்ஸ்காரமே ஸ்மிருதிக்கு ஹேதுவா" மென்னும் நியமமில்லை. ஜன்மாந்தர ஞானத்தின் சம்ஸ்காரத்தாலும் ஸ்மிருதியுண்டாம். ஏனெனின் அநுகூலஞானத்தால் பிரவிருத்தி யுண்டாகிறது. அநுகூலஞானமின்றிப் பிரவிருத்தி யுண்டாகிறதில்லை. ஆதலால் ஸ்தன்னியபானத்தில் பாலர்களுக்குண்டாகும் முதற்பிரவிருத்திக்குக் காரணமான "ஸ்தன்னியபானம் எனக்கு அநுகூலம்" என்னும் ஞான முண்டாகிறது. அங்கு வேறு ஜன்மத்தில் ஸ்தன்னியபானத்தில் அநுகூலத்தன்மை யநுபவம் செய்யப்பட்டுளது. அதன் ஸம்ஸ்காரத்தால் பாலர்களுக்கு முதலில் அநுகூலத்தன்மையின் ஸ்மிருதி யுண்டாகிறது. ஆதலால் ஜன்மாந்தர ஞான ஸம்ஸ்காரத்தாலும் ஸ்மிருதியுண்டாகிறது. அப்படியே இந்த ஜன்மத்தில் அறியப்படாத பதார்த்தத்தின் ஸ்மிருதியும் ஜன்மாந்தரத்தின் ஞானஸம்ஸ்காரத்தால் சொப்பனத்தில் சம்பவிக்கிறது.

அங்ஙனமாயினும் எத்தன்ஞானம் ஜாக்கிரகாலத்தில் எந்த ஜன்மத்திலும் சம்பவியாதோ அத்தன்மையபதார்த்தம் சொப்பனத்தில் பிரதீதியாகிறது. எங்ஙனம்: தன்தலையை வெட்டுவதைத் தன் கண்ணால் சொப்பனத்தில் பார்க்கிறான். அங்குத் தன் தலையை வெட்டுவதை எவனும் எந்த ஜாக்கிராவஸ்தையிலும் பார்க்கிறதில்லை. ஆதலால் ஜாக்கிரபதார்த்தத்தின் ஞானத்தின் ஸம்ஸ்காரத்தால் சொப்பனத்தில் ஸ்மிருதி யுண்டாகிறதில்லை.

5. சொப்பனம் ஸ்மிருதிரூப மென்பதைக் கண்டனஞ்செய்வதில் அநேக யுக்திகளைக் கிரந்தகாரர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் சொப்பனத்தை ஸ்மிருதிரூபமாகக் கொள்ளுதலில் முற்கூறிய தூஷணம் மிகப்பிரபலமாம்:—ஸ்மிருதி ஞானத்தின் விஷயம் எதிரில் பிரதீதியாகிற தில்லை. சொப்பனத்தின் யானைமுதலியன சொப்பனகாலத்தில் எதிரில் தோற்றுகின்றன. ஆதலால் சொப்பனத்தில் யானைமுதலியவற்றின் ஸ்மிருதியில்லை.

## 308. சொப்பனத்தில் இலிங்கசரீரம் வெளியேசென்று ஜாக்கிரபதார்த்தங்களைக் காண்கிறதில்லை யெனல்.

"லிங்கசரீரம் வெளியே சென்று சத்தியமான மலை சமுத்திராதிகளைப் பார்க்கிற" தென்பதின் உத்தரம்:—

ஸ்தூலசரீரத்திலிருந்து வெளியே சென்று லிங்கசரீரம் சத்தியமான மலை சமுத்திராதிகளைப் பார்க்கும் பக்ஷத்தில் அது வெளியே போவதால் மரணாவஸ்தையில் சரீரம் பயங்கரமாய்த் தோன்றுவதுபோல் சொப்பனாவஸ்தை

யிலும் லிங்கசரீரம் இல்லாமையால் ஸ்தூலசரீரம் அமங்கல (பயங்கர) மாதல் வேண்டும். அவ்வாறே பிராணனில்லாத பிணம்போலவு மாதல்வேண்டும். சொப்பனவஸ்தையில் அப்படியாகிறதில்லை. சொப்பனவஸ்தையில் ஸ்தூல சரீரம் பிராணனோடு கூடியதும் ஜாக்கிரத்திற்போல சுந்தர (மங்கள) ரூபமுமா யிருக்கிறது. ஆகையால் ஸ்தூல சரீரத்தைவிட்டு வெளியே லிங்கசரீரம் சொப்பனவஸ்தையிற் போகிறதில்லை.

"சொப்பனவஸ்தையில் பிராணன் வெளியே போகிறதில்லை. ஆனல் அந்தக்கரணமும் இந்திரியமும் வெளியிலுள்ள பர்வதாதிகளுக்குப் போய் அவற்றைப் பார்க்கின்றன. பிராணன் வெளியே போகாமையினல் ஸ்தூலசரீரம் மரணவஸ்தையிற்போல் பயங்கரமா யிருக்கிறதில்லை. பிராணன் வெளியே போவதிலும் யாதொரு பிரயோஜனமுமில்லை. ஏனெனின் பிராணனிடத்தில் ஞானசக்தி யில்லை; கிரியாசக்தி யிருக்கிறது. ஆதலால் வெளியிலுள்ள பதார்த்தங்களையறியச் சாமர்த்தியமுடையது யாதோ அதுவே வெளியே போகிறது. ஞானசக்தி அந்தக்கரணத்திலும் ஞானேந்திரியத்திலு மிருக்கிறது. பிராணனிற்போல கர்மேந்திரியத்திலும் ஞானசக்தியில்லை; கிரியாசக்தி யிருக்கிறது. ஆதலால் பிராணனும் கர்மேந்திரியமும் சரீரத்தில் இருக்கின்றன. அதனல் மரணநிமித்தத்தாலாம் தாக (எரித்தல்) முதலியவற்றினின்றும் ரக்ஷிப்புண்டாகிறது. அந்தக்கரணமும் ஞானேந்திரியமும் வெளியேபோய்ச் சத்தியபர்வதாதிகளைப் பார்த்துப் பிராண கர்மேந்திரியங்களின் சமீபத்தில் வருகின்றன." என்று கூறின்,

அதுவும் பொருந்தாது. ஏனெனின்,

1. ஸ்தூலசூக்ஷ்மக் கூட்டங்களில் எல்லாவற்றிற்கும் எஜமானன் பிராணனும். பிராணனின்றி யிருக்கும் சரீரத்தைப் பார்த்தால் அதனை யொருக்ஷணமும் வைத்துக்கொள்ளுகிறதில்லை; வெளியே கொண்டுபோய்த் தகனம் செய்கிறார்கள்; தொட்டால் முழுகுகிறார்கள். ஆதலால் ஸ்தூலசரீரத்தின் சாரம் பிராணன். அப்படியே சூக்ஷ்மசரீரத்திலும் பிரதானமானது பிராணன்.

* பிராணனும் இந்திரியாதிகளும் நம்மில் யார் சிரேஷ்டமென்று ஒன்றற்கொன்று விவாதமிட்டுப் பிரஜாபதியினிடத்தில் சென்று "ஸ்வாமீ, எங்களுள் யாவன் சிரேஷ்டன்?" என்று கேட்டன. அப்போது பிரஜாபதியானவர் "நீங்கள் எல்லோரும் ஸ்தூலசரீரத்திற் பிரவேசித்து ஒவ்வொருவராக வெளியே

* இங்குப் பிராணன் இந்திரியமென்னும் சொற்களால் அவற்றின் அபிமானிதேவதைகள் கொள்ளப்படும்.

வாருங்கள். எவன் வெளியே வருவதனால் ஸ்தூலசரீரம் அமங்கலமாகி விழுந்து போகிறதோ அவன் உங்களுக்குள் சிரேஷ்டன்" என்று சொன்னார். பிரஜாபதியின் வார்த்தையைக் கேட்டு யாவும் ஸ்தூலசரீரத்திற் பிரவேசித்தன. நேத்திராதி இந்திரியங்கள் ஒவ்வொன்றும் வெளியே வருவதனால் சரீரம் அவ்வவ் விந்திரியரகிதமாய்க் காணப்பட்டது. பிராணன் வெளியே போகப் பிரயத்தனப்படவே சரீரம் விழத்தொடங்கியது. அப்போது "நம் எல்லோருக்கும் எஜமானன் பிராணனே" என்று யாவும் நிச்சயித்துக்கொண்டன.

இக்காரணத்தால் பிராணன் சரீரத்திலிருக்கும்வரையில் இந்திரியாதிகளிருக்கின்றன. பிராணன் வெளியேபோகவே சகல இந்திரியங்களும் வெளியே போகின்றன. ஆகையால் சூக்ஷ்மக்கூட்டத்திற்கு அரசன்போல் பிராணனே பிரதானமாம். பிராணன் போனாலன்றி அந்தக்கரணமும் இந்திரியங்களும் வெளியே போகிறதில்லை.

2. அல்லது அந்தக்கரணமும் ஞானேந்திரியமும் பூதங்களின் சத்துவகுணகாரியங்களாம். அவற்றில் ஞானசக்தி யிருக்கிறது; கிரியாசக்தியில்லை. பிராணனில் கிரியாசக்தி யிருக்கிறது. அதன் வலியினால் மரணசமயத்தில் லிங்கசரீரம் இந்த ஸ்தூலசரீரத்தை விட்டு லோகாந்தரத்திற்குப் போகிறது. பிராணனுடைய பலத்தினாற்றான் இந்திரிய வாயிலாக அந்தக்கரணத்தின் விருத்தி வெளியிலுள்ள கடாதிகளின் சமீபத்திற் செல்லுகிறது. பிராணனுடைய சகாயமின்றி அந்தக்கரணமுதலியன வெளியிற் செல்லமாட்டா. இக்காரணத்தாற்றான் யோகசாஸ்திரத்தில் "பிராணநிரோதமின்றி மனநிரோதமுண்டாகிறதில்லை. *பிராணனது சஞ்சரிப்பால் மனதின் சஞ்சரிப்புண்டாகிறது. பிராணநிரோதத்தால் மனதின் நிரோதமுண்டாகிறது." என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால் மனதை யடக்குதலாகிய ராஜயோகத்தில் இச்சையுள்ளவன் பிராணநிரோதரூப ஹடயோகத்தை யநுஷ்டிக்கவேண்டியது. இதனாலும் அந்தக்கரணத்தின் கமனம் (போக்கு) பிராணாதீனமா யிருக்கிறது. பிராணன் வெளிப்பட்டாலல்லாமல் அந்தக்கரணமும் ஞானேந்திரியமும் வெளிப்படா.

3. சொப்பனாவஸ்தையில் ஸ்தூலசரீரம் பிராணசகிதமாய்க் காணப்படுகிறது.

---

* "சௌமியனே (காட்சிக்கினியனே)! பிராணன் எதற்கு (கம்பத்திற் பக்ஷியைப் போல)ப் பந்தனமா (கட்டா) யிருக்கிறதோ, அப்படிப்பட்டது மனம்" என்னும் சுருதியினால் மனம் பிராணாதீனமாம் என்பது செவ்வையாய் அறியப்படுகிறது.

ஆதலால் "அந்தக்காணம் சொப்பனத்தில் வெளியேசென்று சத்திய பதார்த்தங்களை யறிகிறது" என்று சொன்னது பொருந்தாது.

4. அல்லது ஒருவன் சொப்பனத்தில் தன் சம்பந்தியுடன் கூடிச் சில வியவகாரங்களைச் செய்கிறான். விழித்துக்கொண்டபின் அந்தச் சம்பந்தியைச் சந்தித்தபோது "நாம் இருவரும் இராத்திரி இன்ன வியவகாரத்தைச் செய்தோ" மென்று சொல்லுகிறதில்லை. பூர்வபக்ஷியின் கிரமமாகவோ அவன் வெளியே சென்று சம்பந்தியைச் சந்தித்து உண்மையாக வியவகாரஞ் செய்திருக்கிறான். அப்படிச் சந்தித்ததும் வியவகரித்ததும் சம்பந்திக்கும் தெரிந்திருக்கவேண்டும். சம்பந்தியும் இவனைக் கண்டபோது அப்படியே சொல்லவேண்டும்; ஆனால் அநுபவத்தில் அப்படியில்லை. சித்தாந்தத்திலோ சம்பந்தியும் சந்தித்ததும் எல்லாம் உள்ளே கற்பிதமாம்.

5. அல்லது வெளியே சென்று சத்திய பதார்த்தங்களைப் பார்க்கும் பக்ஷத்தில் ராத்திரியில் தூங்குகிறவன் தஞ்சாவூரில் மத்தியான்ன சூரியன் பிரகாசிப்பதாகவும், தஞ்சாவூர் காவேரிக்கு வடக்கிலிருப்பதாகவும், ஸ்வாமிமலை தஞ்சாவூருக்கு மேற்கிலிருப்பதாகவும் சொப்பனத்திற் பார்க்கிறான். அங்கு இராத்திரியில் மத்தியான்ன சூரியன் இல்லை. காவேரிக்கு வடக்கில் தஞ்சாவூர் இல்லை. தஞ்சாவூருக்கு மேற்கில் ஸ்வாமிமலை இல்லை. இதனாலும் சத்திய பதார்த்தங்களைச் சொப்பனத்திற் காணுதல் பொருந்தாது. சொப்பனத்தில் ஜாக்கிரத்தின் ஸ்மிருதி யுண்டாகின்றது அல்லது ஈசுவரனால் சிருஷ்டிக்கப்பட்ட பர்வதாதிகளின் ஞானம் வெளியிற்சென் றுண்டாகின்றது என்னும் இரண்டு பக்ஷங்களும் நிராகரிக்கப்பட்டன.

(சித்தாந்தம்:—ஜாக்கிர சொப்பனங்களின் சமத்தன்மை 309—328.)

## 309. சொப்பனத்தில் திரிபுடிக்கூட்டமுழுவதும் உண்டாகின்றனவெனல்.

சித்தாந்தம் கூறப்படுகின்றது:—

ஜாக்கிரபதார்த்தத்தின் ஸ்மிருதியும் லிங்கசரீரம் வெளியேபோகுதலும் சம்பவியாவிடினும், ஜாக்கிரத்திற்போல் சொப்பனத்தில் ஞாதா ஞானம் ஞேயம் என்னும் திரிபுடி தோற்றுகிறது. ஆதலால் கழுத்தின் நாடிக்குட்டானே யாவு முண்டாகின்றன.

இதனைச் சகல பிரமாணங்களுக்கும் சிரசாய் விளங்கும் வேதம் சொல்லுகிறது. மாண்டூக்கிய * உபநிஷத்தில், "ஜாக்கிரகாலத்தின் பதார்த்தங்கள்

சொப்பனத்தில் தோற்றுகிறதில்லை. ஆனல் ரதம், ரதிகன், குதிரைகள், மார்க்கம் என்பவையாவும் சொப்பனத்தில் புதிதாயுண்டாகின்றன." என்று சொல்லியிருக்கிறது. ஆதலால் மலை சமுத்திரம் நதி வனம் கிராமம் பட்டணம் சூரியன் சந்திரன் முதலியனவாகச் சொப்பனத்திற் பார்க்கப்படும் பதார்த்தங்கள் யாவும் புதிதா யுண்டாகின்றன.

சொப்பனத்திற் பர்வதாதிகள் உண்டாகாவிடின் அவற்றின் பிரத்தியக்ஷ ஞானம் சொப்பனத்தி லுண்டாகின்றது. அஃது உண்டாகலாகாது. ஏனெனின், விஷயத்தோடுண்டாம் இந்திரியத்தின் சம்பந்தம் அல்லது அந்தக்கரண விருத்தியின் சம்பந்தம் பிரத்தியக்ஷஞானத்துக்கு ஹேதுவாம். ஆதலால் பர்வதாதி விஷயங்களும் அவற்றின் ஞானசாதனங்களான அந்தக்கரண இந்திரியங்களுமாகிய யாவும் உள்ளே யுண்டாகின்றன.

சொப்பனபதார்த்தம் கிளிஞ்சிலில் வெள்ளி முதலியவற்றைப்போலச் சாக்ஷிபாஸியமாம். சொப்பனஞானத்தில் அந்தக்கரண இந்திரியங்களின் உபயோகமில்லை. ஆதலால் ஞேயமான பர்வதாதிகளின் உற்பத்தியினையே சொப்பனத்தில் அங்கீகரித்தல் தகுதியாம். ஞாதா ஞான இந்திரியங்களின் உற்பத்தியை யங்கீகரித்தல் தகுதியன்று.

1 அங்ஙனமாயினும், எப்படிச் சொப்பனத்திற் பர்வதாதிகள் தோற்றுகின்றனவோ, அப்படியே இந்திரியமும் அந்தக்கரணமும் பிராணனோடு ஸ்தூல சரீரமும் சொப்பனத்தில் தோற்றுகின்றன. ஆதலால் அவற்றின் உற்பத்தியும் அங்கீகரித்தல் வேண்டும்.

2. அல்லது சொப்பனபதார்த்தங்களில் நேத்திராதிகளுக்கு விஷயமாந்தன்மை விளங்குகின்றது. வியாவகாரிக நேத்திராதிகளுக்கு விஷயமாந்தன்மை சொப்பனத்தின் பிராதிபாஸிக பதார்த்தங்களிற் பொருந்தாது.

---

* "ந தத்ர ரதா ந ரதயோகா ந பந்தானோ பவந்த்யத ரதான் ரதயோகான் பத: ஸ்ருஜதே॥ அங்கு (சொப்பனத்தில்) இரதமில்லை, குதிரையில்லை, வழியில்லை. [ஆனல் சொப்பனத்தின் அதிஷ்டான சாக்ஷி அல்லது பிரஹ்மசேதனம் இருக்கிறது.] ஜாக்கிரத்திற்குப் பின்னரே இரதம் குதிரை மார்க்கம் (வழி) என்பவற்றைச் சிருஷ்டிக்கின்றான்" என்னும் சுருதியில் சொப்பனகாலத்தில் இரதாதிமூன்றனல் உபலக்ஷிக்கப்பட்ட சகல ஜகத்தின் நவீனசிருஷ்டி (உற்பத்தி) சொல்லப்பட்டிருக்கிறது. "ஸந்த்யே ஸ்ருஷ்டிராஹ ஹி"॥ கூறிய சுருதி ஜாக்கிர சுழுத்திகளின் சந்தியில் சிருஷ்டியைக் கூறுகின்றது" என்பது முற்கூறிய சுருதிவடிவ மூலத்தையுடைய வியாசசூத்திரமாம். அது முற்கூறிய சுருதியின் அர்த்தத்தை (சொப்பன சிருஷ்டியை)த் திடப்படுத்துகின்றது. ஆதலால் சொப்பனத்தில் சாக்கிர பதார்த்தங்களின் ஸ்மிருதி, அல்லது லிங்கசரீரம் வெளியிற்சென்று அதனல் சத்தியமான மலை சமுத்திர முதலியவற்றைக் காணுதல் சம்பவியாது.

எனெனின், சமத்தையுடைய பதார்த்தங்களே தம்மிற் சாதகபாதகங்களா மென்று 5-வது தரங்கத்தில் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் வியாவகாரிக நேத்திராதிகள் சரீரத்திலிருந்தாலும், அவற்றிற்குச் சொப்பன பதார்த்தங்களோடு விஷமசத்தையிருத்தலால் அவற்றின் ஞானத்திற்குச் சொப்பனத்தின் பர்வதமுதலியன விஷயமாதல் பொருந்தாது.

3. அல்லது வியாவகாரிக இந்திரியங்கள் தத்தம் கோளகங்களைவிட்டுக் காரியஞ் செய்வதில் சாமர்த்திய முடையனவாகா. சொப்பனுவஸ்தையில் கை கால் வாக்கு என்பவற்றின் கோளகங்களோ சலனமில்லாதனவாக அந்நியனுக் குக் காணப்படுகின்றன. சொப்பனங்காண்கிறவன் கையில் திரவியத்தை எடுத் துக்கொண்டு சொப்பனத்தில் கத்திக்கொண்டே ஓடுகிறுன். ஆதலால் சொப் பனத்தில் இந்திரியங்களி னுற்பத்தியை அவசியம் அங்கீகரிக்கவேண்டும்.

4. அப்படியே சுகம் துக்கம் அவற்றின் ஞானம் அந்த ஞானத்திற்காசிரய மான பிரமாதா என்பன சொப்பனத்தில் தோற்றுகின்றன. இல்லாத பதார்த் தத்தின் தோற்றம் உண்டாகாது.

ஆதலால் சகலத்திரிபுடிகூட்டமும் சொப்பனத்தி லுண்டாகின்றன.

அநிர்வசநீயக்கியாதியின் கிரமம் இதுவாம்:— எவ்வளவு பிரமஞான முண்டோ அதன் விஷயங்களெல்லாம் அநிர்வசனீயமாக உண்டாகின்றன. விஷயமின்றி எந்த ஞானமு முண்டாகாதென்பது சித்தாந்தம்.

வேறு சாஸ்திரங்களின் மதத்திலோ பதார்த்தம் வேறுவடிவமாகத் தோற் றுவது பிரம மெனப்படுகிறது. சித்தாந்தத்திலோ எப்படிப் பதார்த்தம் இருக் கிறதோ அப்படியே ஞானமு முண்டாகிறது. ஆதலால் பிரமஸ்தலத்திலும் விஷயத்தின் உற்பத்தி அவசிய முண்டாகிறது. விஷயமின்றி ஞான முண்டா காது.

இவ்விதத்தால் சொப்பனத்தில் திரிபுடி தோற்றுவதால் எல்லாமும் உற் பத்தியாகின்றன.

## 310. சொப்பனத்தினது உற்பத்தியின் சங்கையைச்செய்து அந்தக்கரணத்தின் அல்லது அவித்தையின் பரிணமமும் சேதனத்தின் விவர்த்தமுமான சொப்பனத்தின் சித்தியைக் கூறுதல் (310—311).

இதில் இவ்வாறு சங்கை யுண்டாகிறது:—சொப்பனத்தில் தோற்றும் பதார் த்தங்களுக்கு உற்பத்தியை அங்கீகரிக்கின், சொப்பன திருஷ்டாந்தத்தால் ஜாக்கிரபதார்த்தங்கள் பொய்யென்று சித்தாந்தத்திற் சொல்லப்பட்டிருக்கிறது போல சொப்பனபதார்த்தங்களும் ஜாக்கிர பதார்த்தங்கள்போல் உற்பத்தி யுடையனவாதலால் சத்தியமாதல் வேண்டும். சொப்பனத்திலேயே பதார்த்தங்

களி னுற்பத்தியை ஒப்பாவிடின் இந்தத் தோஷமில்லை. ஏனெனின், ஜாக்கிர பதார்த்தங்கள் உற்பத்தியாகித் தோற்றுகின்றன. சொப்பனத்தில் பதார்த்தங் கள் இல்லாமலே தோற்றுகின்றன. ஆதலால் சொப்பனத்தில் இல்லாத பதார்த் தங்களின் ஞானம் பிரமரூபமாம். அவற்றிற்கு உற்பத்தி யங்கிகரித்தல் தகுதி யன்று.

## 311. அச்சங்கையின் சமாதானம்.

1. எந்த வஸ்துவின் உற்பத்தியில் எவ்வளவு தேசகாலாதி சாமக்கிரிக ளாகிய சாதன (காரண)ங்கள் வேண்டுமோ, அவ்வளவு சாமக்கிரிகளின்றி உற் பத்தியாவது மித்தை யெனப்படுகிறது. சொப்பனத்தின் யானைமுதலானவை களின் உற்பத்திக்குரிய தேசகாலங்களில்லை. நீடித்தகாலத்திலும் விஸ்தார மான இடத்திலும் உண்டாகக்கூடிய யானைமுதலியன க்ஷணமாத்திரகாலத் தில் சூக்ஷ்மமான கண்டப்பிரதேசத்தி லுண்டாதலால் மித்தையாம்.

2. சொப்பனுவஸ்தையில் நீடித்தகாலமும் விஸ்தாரதேசமும் தோற்றி னும் அந்நியபதார்த்தங்களைப்போலச் சொப்பனத்தின் அதிகதேச அதிக காலங்களும் அநிர்வசனீயப் பிராதிபாஸிகமாக உற்பத்தியாகின்றன. ஏனெ னின், விஷயமின்றிப் பிரத்தியக்ஷஞானம் உண்டாகிறதில்லை. சொப்பனத்தில் அதிக தேசகாலங்களின் ஞான முண்டாகிறது. வியாவகாரிக தேசகாலங்கள் சொற்பமா யிருக்கின்றன. ஆதலால் பிராதிபாஸிகமா யுண்டாகின்றன. ஆனுல் சொப்பனுவஸ்தையில் உண்டாகிய பிராதிபாஸிகதேசகாலங்கள் சொப்பனு வஸ்தையின் யானைமுதலியவற்றிற்குக் காரணமன்று. ஏனெனின் எது காரணமோ அது முன்னும், எது காரியமோ அது பின்னும் உண்டாகவேண் டும். சொப்பனத்தின் தேசகாலங்களும் யானைமுதலியனவும் ஒரேசமயத்தி லுண்டாகின்றன. ஆதலால் அவற்றிற்குக் காரணகாரியத்தன்மை பொருந் தாது; வியாவகாரிகதேசகாலங்கள் சொற்பமா யிருக்கின்றன; யானைமுதலிய வற்றிற்குத் தகுதியானவை யன்று. ஆதலால் தேசகாலரூப சாமக்கிரிகளின்றி யுண்டாதலால் சொப்பனபதார்த்தங்கள் மித்தையாம்.

3. மேலும் சொப்பனத்தில் யானைக்குத் தாய்முதலிய சாமக்கிரிகளு மில்லை. சொப்பனத்தில் பிராணிகளின் மாதாபிதாக்கள் தோற்றினும், சொப் பன மாதாபிதாக்கள் புத்திரனுடைய உற்பத்திக்குக் காரணமாகிறதில்லை. ஏனெனின், மாதா பிதா புத்திரன் மூவரும் ஒரேகாலத்தில் கூடவே உண்டா கிறார்கள். ஆதலால் அவர்களுக்குக் காரணகாரியத்தன்மை யில்லை. எந்த நித் திரையோடுகூடிய அவித்தையினின்றும் சொப்பனபதார்த்தங்க ளுண்டாகின் றனவோ, அந்த அவித்தையே அந்தப்பதார்த்தங்களின் மாதாத்தன்மை பிதாத் தன்மை புத்திரத்தன்மைகளை யுண்டுபண்ணுகிறது. இவ்விதமாகச் சொப்பன

பதார்த்தங்களின் உற்பத்தியில் வேறோர் சாமக்கிரியு மில்லை; நித்திரைத்தோஷத்தோடுகூடிய அவித்தையே காரணமாம். தோஷசகித அவித்தையா லுண்டாகும் வஸ்து சிளிஞ்சிலில் வெள்ளிபோல் மித்தையாகும். ஆதலால் சொப்பனபதார்த்தம் சத்தியமன்று; மித்தையாம்.

அவற்றின் உபாதானகாரணம் அந்தக்காணம் அல்லது சாக்ஷாத் அவித்தையேயாம்.

1. முதற்பக்ஷத்தில் சாக்ஷிசேதனம் சொப்பனத்தின் அதிஷ்டானமாம்.

2. இரண்டாவது பக்ஷத்தில் பிரஹ்மசேதனம் சொப்பனத்திற்கு * அதிஷ்டானமாம்.

இவ்விதத்தால் சொப்பனம் அந்தக்காணத்தின் அல்லது அவித்தையின் பரிணாமமும் சேதனத்தின் விவர்த்தமுமாம்.

---

* இங்கு இஃது ஓர் விசேஷமாம்:—

1. ஸ்தூலசூக்ஷ்மமென்னும் இரண்டு தேகங்களால் வளைபட்ட கூடஸ்தசேதன வடிவ பாரமார்த்திக ஜீவனுளன்.

2. மாயையினு லாவரிக்கப்பட்ட கூடஸ்தனிடத்தில் கற்பிக்கப்பட்ட அந்தக்காணத்தில் சிதாபாஸவடிவ தேகமிரண்டில் அபிமானஞ் செய்பவனாகிய வியாவகாரிக ஜீவனுளன்.

3. நித்திரையாகிய மாயையால் மறைக்கப்பட்ட வியாவகாரிக ஜீவவடிவ அதிஷ்டானத்தில் கற்பிக்கப்பட்ட பிராதிபாஸிக ஜீவனிருக்கின்றான்.

இந்த வேறுபாட்டால் ஜீவன் மூவகைப்படுவன். அதன்வாதி (அதனைச் சொல்லுவோர்) வித்தியாரணியஸ்வாமிகள் முதலியோர்கள். அவர்கள் சொப்பனத்தின் அதிஷ்டானம் வியாவகாரிக ஜீவனும் ஜகத்துமாமென்று சொல்லியிருக்கிறார்கள். அவற்றில்,

1. சொப்பனத்தின் ஜீவ (திருஷ்டாவி)னது அதிஷ்டானம் ஜாக்கிரத்தின் ஜீவனும் (திருஷ்டாவாம்).

2. சொப்பனத்தின் ஜக (திருசிய)த்திற் கதிஷ்டானம் ஜாக்கிரத்தின் ஜகத்தாம் (திருசியமாம்).

3. சொப்பன அத்தியாஸத்திற்கு உபாதானம் வியாவகாரிக ஜீவனையும் ஜகத்தையும் மறைக்கும் நித்திரைவடிவ அவஸ்தா (தூலா)ஞ்ஞானமாம்.

வியாவகாரிக திருஷ்டாவும் திருசியமும் ஜடமாம். அதற்குச் சத்தாஸ்பூர்த்தியை (சத்தையின் விளக்கத்தை)த் தருதலாகிய அதிஷ்டானத்தன்மை சம்பவியாது. ஆதலால்,

1. அகங்காராவச்சின்ன (அகங்காரத்தினுல் வரைந்துகொள்ளப்பட்ட) சேதனம்.

2. அல்லது அகங்கார அநவச்சின்னசேதனம் சொப்பனத்தின் அதிஷ்டானமாம். இவ்விரண்டு மதங்களும் நலமுடையனவாம். அவற்றுள்,

1. முதல்மதத்தைக் கொள்ளின் அகங்காராவச்சின்னத்தை மறைக்கும் தூலாஞ்ஞானமே சொப்பனத்தின் உபாதானமென்பது சம்பவிக்கின்றது. ஜாக்கிரத்தின் ஞானத்தினுல் பிரஹ்மஞானமின்றி அதன் நிவிருத்தியும் சம்பவிக்கின்றது.

## 312. மூவகைச் சத்தைப் பக்ஷத்தில் விலக்ஷண ஜாக்கிரசொப்பனங்களுக்கு இரண்டுசத்தையை யங்கீகரிப்பதில் விலக்ஷணத்தன்மையில்லாமை (312-313).

இதில் இவ்வாறு சங்கையுண்டாகின்றது:—இரண்டாவது பக்ஷத்தில் பிரஹ்மசேதனம் சொப்பனத்தின் அதிஷ்டானமென்றும் அவித்தை உபாதான காரணமென்றும் சொல்லப்பட்டது. அங்கு அதிஷ்டானஞானத்தினுல் கற்பிதம் நிவிருத்தியாகிறது. சொப்பனத்துக்கு அதிஷ்டானம் பிரஹ்மமாம். ஆதலால் பிரஹ்மஞானமின்றி அஞ்ஞானிக்கு ஜாக்கிராவஸ்தையில் சொப்பனம் நிவிருத்தியாகலாகாது.

---

2. அவித்தையிற் பிரதிபிம்பவடிவ ஜீவசேதனம் அல்லது பிம்பவடிவ ஈசுவர சேதனம் விவரணகாரர் கிரமப்படி வியாபகமாதலால் அகங்கார அநவச்சின்னசேதனமாம். அதனைச் சொப்பனத்தின் அதிஷ்டானமெனக் கொள்ளின், அதனை மறைக்கும் மூலாஞ்ஞானமே சொப்பனத்தின் உபாதானமெனக் கொள்ளுதல்வேண்டும். ஜாக்கிரபோதத்தால் அந்தச் சொப்பனத்தின் பாதவடிவ நிவிருத்தி யுண்டாகிறதில்லை; உபாதானத்தில் ஒடுங்குதல்வடிவ நிவிருத்தி யுண்டாகின்றது. ஆனுல் அகங்கார அநவச்சின்னசேதனத்தைச் சொப்பனத்தின் அதிஷ்டானமெனக் கொள்ளினும் சரீரத்தின் உள்ளிடத்திலுள்ள சேதனமே அதிஷ்டானமெனல் சம்பவிக்கிறது; வெளியிடத்துள்ள சேதனம் அதிஷ்டானமன்று. அவித்தையிலுள்ள பிரதிபிம்பசேதனம் அல்லது அவித்தையிலுள்ள பிம்ப ஈசுவரசேதன மென்னும் இரண்டும் அகங்கார அநவச்சின்னமாம். வியாபகமாயிருத்தலால் சரீரத்தினுள்ளு மிருக்கின்றன. உள்ளிடத்துள்ள சேதனத்திலேயே எந்தச் சொப்பனத்தின் அதிஷ்டானத்தன்மையிருக்கிறதோ, அதன் அவச்சேதகம் அந்தக்கரணமெனக் கொள்ளின், அகங்கார அவச்சின்னத்திற்கு அதிஷ்டானத்தன்மை சித்திக்கின்றது; அதே சேதனத்தில் சொப்பனத்தின் அதிஷ்டானத்தன்மையின் அவச்சேதகம் (வியாவர்த்தகம்) அந்தக்கரணமெனக் கொள்ளாவிடின், அகங்கார அநவச்சின்னத்திற்கு அதிஷ்டானத்தன்மை சித்திக்கின்றது. அகங்கார அநவச்சின்னம் அவித்தியாப்பிரதிபிம்பமும் பிம்பமுமாகிய இரண்டுமாம். மதபேதத்தால் இரண்டற்கும் சொப்பனத்தின் அதிஷ்டானத்தன்மை யுண்டு. அங்ஙனமாயினும், அவித்தையிற் பிரதிபிம்பவடிவ ஜீவசேதனத்திற்கு அதிஷ்டானத்தன்மை கூறுதலே நலமுடையதாம்.

அல்லது அவித்தையிற் பிரதிபிம்பம் கற்பிதமாயிருத்தலால் அஃது அதிஷ்டானமாதல் தகுதியன்று. ஆதலால் அந்தக்கரண உபகித அல்லது அவித்தையுபகித சாக்ஷி சேதனமே சொப்பனத்தின் அதிஷ்டானமெனக் கொள்ளுதல் உசிதமாம். இவை முழுவதும் மூன்று சத்தைவாதிகளின் கிரமமாம்.

திருஷ்டி சிருஷ்டிவாதத்தின்படி சகல அநாத்ம பதார்த்தங்களும் ஒரு (பிராதிபாஸிக) சத்தையுடையனவா யிருத்தலால் ஜாக்கிர சொப்பன மிரண்டற்கும் பிரஹ்ம சேதனமே அதிஷ்டானமெனக் கொள்ளப்பட்டிருக்கின்றது.

**313.** வேறு சங்கை:—சொப்பனத்துக்கு அதிஷ்டானம் பிரஹ்மமும் உபாதானகாரணம் அவித்தையு மாவதுபோல, வேதாந்தசித்தாந்தத்தில் ஜாக்கிராவஸ்தையின் வியாவகாரிக பதார்த்தங்களுக்கும் அதிஷ்டானம் பிரஹ்மமாம்; உபாதானகாரணம் அவித்தையாம். ஆதலால்,

1. ஜாக்கிரபதார்த்தங்களை வியாவகாரிக மென்பர்.

2. சொப்பனபதார்த்தங்களைப் பிராதிபாஸிக மென்பர். இவ்வாறு பேதம் இருக்கலாகாது. ஏனெனின், இரண்டற்கும் அதிஷ்டானம் பிரஹ்மமும், உபாதானகாரணம் அவித்தையுமாம். ஆதலால்,

1. ஜாக்கிரம் சொப்பனம் இரண்டும் வியாவகாரிகமாக வேண்டும்.

2. அல்லது இரண்டும் பிராதிபாஸிகமாக வேண்டும்.

**314.** அவ்விரண்டு சங்கைகளும் பொருந்தா. ஏனெனின், முதற்சங்கைக்குச் சமாதானம் இதுவாம்:—நிவிருத்தி இருவகையாமென்று முன் 4-வது தரங்கத்தில் கியாதிநிரூபணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

1. காரணசகித காரியத்தின் விநாசவடிவ சொப்பனத்தின் அத்தியந்தநிவிருத்தி ஜாக்கிரத்தில் பிரஹ்மஞானமின்றிச் சம்பவியாது.

2. ஆனால் தடியா லடித்தலால் எப்படிக் கடம் மண்ணில் லயமாகிறதோ அப்படிச் சொப்பனத்துக்குக் காரணமான நித்திராதோஷத்தின் நாசத்தினாலும் சொப்பனத்துக்கு விரோதமான ஜாக்கிரத்தி னுற்பத்தியாலும் அவித்தையில் லயரூபமான நிவிருத்தி சொப்பனத்துக்குத் பிரஹ்மஞானமின்றிச் சம்பவிக்கும்.

**315.** "ஜாக்கிர சொப்பனங்கள் இரண்டும் சமானமாயிருத்தல் வேண்டு" மென்று கூறியது பொருந்தாது. ஏனெனின்,

1. ஜாக்கிரத்தினது தேகாதி பதார்த்தங்களி னுற்பத்தியில் வேறு தோஷமில்லாத கேவல அநாதி அவித்தையே உபாதானகாரணமாம்.

2. சொப்பன பதார்த்தங்களிலோ ஸாதி (உற்பத்தியுடைய) நித்திரா தோஷமும் அவித்தைக்குச் சகாயமாம்.

1. ஆதலால் அந்நிய தோஷமில்லாத கேவல அவித்தியாஜந்நியம் வியாவகாரிக மெனப்படும்.

2. ஸாதிதோஷஸகித அவித்தியா (தூலாவித்தியா) ஜந்நியம் பிராதிபாஸிக மெனப்படும்.

1. சொப்பனபதார்த்தம் நித்திராதோஷ ஸஹித அவித்தியாஜந்நியமாயிருத்தலால் பிராதிபாஸிகமாம்.

2. ஜாக்கிரபதார்த்தம் அந்நியதோஷமில்லாத அவித்தியா ஜந்நியமா யிருத்தலால் வியாவகாரிகமாம்.

இவ்விதத்தால் சொப்பன பதார்த்தங்களில் ஜாக்கிர பதார்த்தங்களினும் விலக்ஷணத்தன்மை (பேதம்) இருக்கிறது. ஆனுல் இவையாவும் மூன்றுவித சத்தைகளை யங்கீகரித்து ஸ்தூலதிருஷ்டியாற் சொல்லப்பட்டன. விசார திருஷ்டியினுலோ,

1. மூன்றுவித சத்தைகள் பொருந்தா.

2. ஜாக்கிர சொப்பனங்களின் பரஸ்பர விலக்ஷணத்தன்மையும் பொருந்தாது.

**316**. வேதாந்தபரிபாஷைமுதலிய கிரந்தங்களில் முன்கிரமப்படி வியாவகாரிக பிராதிபாஸிக பதார்த்தங்களின் பேதம் சொல்லப்பட்டிருக்கிறது. இதனுல் மூன்று சத்தைகள் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன.

அப்படியே வித்தியாரண்ய ஸ்வாமிகளும் மூன்று சத்தையே கொண்டிருக்கிறார்கள். ஏனெனின், அவர்கள் இப்பிரசங்கத்தை எழுதியிருக்கின்றார்கள்:—

தேகாதி பதார்த்தங்களிருவகையாம்.

1. (1) ஒன்று ஈசுவரசிருஷ்டி. அது பாஹியம்.
   (2) மற்றொன்று ஜீவசங்கற்பத்தால் ஆக்கப்பட்டது. அது மனோமயமும் ஆந்தரமுமாம்.

அவ்விரண்டினும்,

2. (1) ஜீவசங்கற்பத்தாலாக்கப்பட்ட ஆந்தரமான மனோமயசிருஷ்டி சாக்ஷிபாஸியமாம்.
   (2) ஈசுவரசிருஷ்டி பாஹியமாம். அது பிரமாதாப்பிரமாணங்களுக்கு விஷயமாம்.
3. (1) ஆந்தரமனோமய தேகாதிகளே ஜீவனுடைய சுகதுக்கங்களுக்குக் காரணமாம்.
   (2) பாஹிய ஈசுவரசிருஷ்டி சுகதுக்கங்களுக்குக் காரணமன்று.
4. (1) ஆதலால் ஆந்தர மனோமய பதார்த்தங்களின் நிவிருத்தி முமுக்ஷுவுக்கு வேண்டியதாம்.
   (2) பாஹியப்பிரபஞ்சம் சுகதுக்கங்களுக்குக் காரணமன்று. ஆதலால் அதன் நிவிருத்தி வேண்டியதில்லை.

**எங்ஙனம்:** இரண்டு புருஷர்களின் இரண்டு புத்திரர்கள் தேசாந்திரம் போயிருந்தார்கள். அவர்களில் ஒருவன் புத்திரன் இறந்துபோனுன். மற்ற

வன் புத்திரன் ஜீவித்திருந்தான். அந்த ஜீவித்திருந்த புத்திரன் வெகு திரவியம் சம்பாதித்து ஒரு மனிதன் வாயிலாகத் தனக்குத் தனங்கிடைத்ததென்று தன் தகப்பனுக்கும் மற்றொருவ னிறந்தானென்று அவன் தகப்பனுக்கும் சொல்லி யனுப்பினான். இதைக்கேட்டுத் தெரிவிக்கும் புருடன் துஷ்டனானபடியால்,

1. ஜீவித்திருக்கும் புத்திரனது தந்தையினிடத்தில் உன் மகன் மரித்தானென்றும்,

2. இறந்த புத்திரனது பிதாவினிடத்தில் உன் மகன் வியாதியின்றி ஜீவித்திருக்கிறானென்றும், வெகு பணம் சம்பாதித்திருக்கிறானென்றும், சீக்கிரத்தில் யானையின்மேலேறி பெருங்கூட்டத்துடன் வருவானென்றும் சொன்னான்.

அந்தக் கபடவார்த்தையைக் கேட்டு,

1. ஜீவித்திருக்கும் புத்திரனுடைய தகப்பன் அழுது வெகு துயரப்பட்டான்.

2. இறந்த புத்திரனது தகப்பன் வெகு சந்தோஷப்பட்டான்.

இவ்விதத்தால் தேசாந்தரத்தில்,

1. (1) ஈசுவரனா லாக்கப்பட்ட புத்திரன் ஜீவித்திருந்தும் மனோமய புத்திரனிறந்துபோனான். அதனால் துக்கமுண்டாகிறது.
   (2) ஈசுவர சிருஷ்டியாகிய ஜீவித்திருப்பவன் பிதாவிற்குச் சுகமுண்டாகிறதில்லை.
2. (1) அப்படியே இரண்டாவதான ஈசுவரனா லாக்கப்பட்ட புத்திரன் இறந்துபோனான். அவனுக்குத் துக்க முண்டாகவில்லை.
   (2) மனோமயபுத்திரன் ஜீவித்திருத்தலால் அவனுக்குச் சுக முண்டாகிறது.

ஆதலால்,

1. ஜீவசிருஷ்டியே சுகதுக்கங்களுக்குக் காரணமாம்.

2. ஈசுவரசிருஷ்டி சுகதுக்கங்களுக்குக் காரணமன்று.

இவ்விதத்தால் வித்தியாரண்ய ஸ்வாமிகள் (பஞ்சதசப்பிரகரணத்தின் த்வைத விவேகத்தில்) ஜீவசிருஷ்டியையும் ஈசுவரசிருஷ்டியையும் சொல்லியிருக்கிறார்கள். அங்கு,

1. ஜீவசிருஷ்டி பிராதிபாஸிகம்.

2. ஈசுவரசிருஷ்டி வியாவகாரிகம்.

அப்படியே வேறு சில கிரந்தகாரர்களும் சத்தையை மூன்றுவிதமாய்ச் சொல்லியிருக்கிறார்கள்.

1. சேதனத்தின் சத்தை பாரமார்த்திகம்.

சேதனத்துக்கு வேறான ஜடபதார்த்தங்களின் சத்தை யிருவகைத்து:— ஒன்று வியாவகாரிகம்; மற்றொன்று பிராதிபாஸிகம்.

2. சிருஷ்டியின் ஆதிகாலத்தில் ஈசுவரசங்கற்பத்தா லுண்டான கேவல அவித்தையின் காரியமான பஞ்சபூதங்களும் அவற்றின் காரியங்களும் வியாவகாரிகசத்தை யுடையனவாம்.

3. தோஷசகித அவித்தையின் காரியங்களான சொப்பனம் கிளிஞ்சிலில் வெள்ளிமுதலியவற்றிற்குப் பிராதிபாஸிகசத்தை யுளது.

இவ்விதத்தால்,

1. ஜாக்கிரபதார்த்தங்களுக்கு வியாவகாரிகசத்தையும்,

2. சொப்பனபதார்த்தங்களுக்குப் பிராதிபாஸிகசத்தையும் சொல்லப்படுகின்றன.

317. * அங்ஙனமாயினும், அநாத்மபதார்த்தங்க ளெல்லாவற்றிற்கும் பிராதிபாஸிகசத்தையே யுளது. ஆதலால் சத்தை இருவகைத்தே.

1. சேதனம் பாரமார்த்திகசத்தை.

2. சேதனத்துக்கு வேறான சகல அநாத்மாக்களுக்கும் பிராதிபாஸிகசத்தையே யுளது.

ஜாக்கிரசொப்பன பதார்த்தங்களுக்குச் சிறிதும் விலக்ஷணத்தன்மை சித்திக்கிறதில்லை யென்னும் உத்தமசித்தாந்தத்தைப் பிரதிபாதிப்பாம்:—

தேசகாலசாமக்கிரியின்றிச் சொப்பனத்தின் யானை மலைமுதலிய பதார்த்தங்கள் உண்டாகின்றன. ஆதலால் அவை மித்தை யெனப்படுகின்றன. அப்படியே ஆகாசாதிப்பிரசஞ்சத்தின் சிருஷ்டி பிரஹ்மத்தினின்றும் உண்டாகிறது. அந்தப் பிரஹ்மத்தில் தேசகாலங்கள் அற்பமு மில்லை. சொப்பனத்தில் யானை மலைமுதலியவைகளுக்கு வேண்டிய தேசகாலங்க ளில்லாவிடினும் அற்பதேசகாலங்க ளிருக்கின்றன. அப்படியே ஆகாசாதிகளின் சிருஷ்டியில் அற்பதேசகாலங்களுமில்லை. ஏனெனின், தேசகாலமின்றிய பரமாத்மாவினின்றும் ஆகாசாதிகளின் சிருஷ்டி சொல்லப்பட்டிருக்கிறது.

1. இக்காரணத்தால் தைத்திரீய உபநிஷத்தில் ஆகாசாதிகளின் சிருஷ்டி க்ரமமாகச் சொல்லப்பட்டிருக்கிறது; தேசகாலங்களின் சிருஷ்டி சொல்லப்படவில்லை.

---

* இங்கு 317 முதல் 329 வரையில் திருஷ்டிசிருஷ்டிவாதமே சொல்லப்பட்டிருக்கிறது.

2. சூத்திரகார பாஷியகாரர்களும் தேசகாலங்களின் சிருஷ்டியைச் சொல்லவில்லை.

சிருஷ்டி யென்பது உற்பத்திக்காம்.

அங்குத் தைத்திரீயஉபநிஷத்திற்கும் சூத்திரகார பாஷியகாரர்களுக்கும் இதுவே அபிப்பிராயமாம்:—ஆகாசாதிப் பிரபஞ்சத்தி னுற்பத்தி தேசகால சாமக்கிரிகளின்றி உண்டாகின்றது. ஆதலால் * ஆகாசாதிகள் சொப்பனம் போல் மித்தையாம்.

**318.** மதுசூதனஸ்வாமிகள் தேசகாலங்களைச் சாக்ஷாத் அவித்தையின் காரியமென்று சொல்லியிருக்கிறார்கள். ஆதலால் மாயாவிசிஷ்ட பரமாத்மாவினின்றும், முதலில் மாயையின் பரிணாமமான தேசகாலங்கள் உண்டாகின்றன. அதன்பிறகு ஆகாசாதிகளின் உற்பத்தி யுண்டாகின்றன. ஆதலால் யோக்கியமான தேசகாலங்களால் ஆகாசாதிப் பிரபஞ்சத்தி னுற்பத்தி சம்பவிக்கிறது.

---

* இங்கே இது இரகசியம்:—ஓர் இரண்டு வலியுடைய் புருஷர்கள் சூன்யவனத்தில் தத்தம் வலியுடைமையைப்பற்றி விவாதஞ்செய்து தத்தம் பலத்தைப் பரீக்ஷித்தற்பொருட்டு "எவன் அந்நியனைக் கொல்லுகின்றானோ அவன் வலிமிகுந்தோனுவன்." என்று பிரதிஞ்ஞைசெய்து இருமுனையோடுகூடிய சக்தியை (சஸ்திரவிசேஷத்தை) இடையிற்பிடித்து அதன் ஒவ்வொருமுனையை மார்பிடத்திற்பொருத்தி ஒருவருக்கொருவர் எதிர்முகமாக வலியொடு பொருத இருவரும் மரணமடைந்தனர். அங்ஙனமே பிரஹ்மரூப சூன்யவனத்தில் ஜாக்கிரப்பிரபஞ்சமும் சொப்பனப்பிரபஞ்சமுமாகிய இரண்டுபலமுடைய புருஷரிருக்கின்றனர். அவர்களில் ஒருவருக்கொருவரில் ஒருவருக்கொருவரின் திருஷ்டாந்தத்தால் ஒருவருக்கொருவர் அடியுண்டாகின்றது. அதனைக் காட்டுவாம்:—

1. தேசகாலமுதலிய சாமக்கிரியின்றி உண்டாகிய அது பொய்யாம். எங்ஙனம்:— தேசவடிவசாமக்கிரி பூரணமாயிருந்தும் காலவடிவ சாமக்கிரியின் குறைவால் உண்டாகிய இருகுப்பக்ஷி, ஒட்டுப்பொன்நாணயம், தோற்பாம்பு என்றல் முதலிய ஐந்திரஜாலிக (மாயாவியினுல் ஆக்கப்பட்ட) பதார்த்தம் மித்தை யெனப்படுகின்றது.

அங்ஙனமே ஹிதையென்னும் கண்டத்தின் நாடியாகிய அற்பதேசத்திலும் அற்பகாலத்திலும் உண்டாகிய சொப்பனப்பிரபஞ்சம் மித்தையாம். அதன் திருஷ்டாந்தத்தால் (அதற்கொத்ததாயிருத்தலால்) ஜாக்கிரப்பிரபஞ்சம் மித்தையாம். இவ்வாறு சொப்பனத்தின் திருஷ்டாந்தத்தால் ஜாக்கிரத்திற்கு அடியுளது.

2. அங்ஙனமே தேசகாலவடிவ சாமக்கிரி லேசமுமில்லாத பிரஹ்மத்தில் ஜாக்கிரப்பிரபஞ்சம் தோற்றுகிறது. ஆதலால் அது அசத்தாம். ஏனெனின், தோற்றுகின்ற தேசகாலமோ ஜாக்கிரப்பிரபஞ்சத்தி லடங்கியதாம். அவற்றிற்குப் பின்னமான தேசகாலம் பிரபஞ்சத்தின் காரணமெனின், அவனை (1) அத்தேசகாலங்கள் பிரஹ்மத்தின் அபின்னமா? (2) அல்லது பின்னமா? என்று கேட்கவேண்டும்.

அங்ஙனமாயினும், மதுசூதனஸ்வாமிகளுக்குத் தேசகாலங்கள் முதலி லுண்டாகின்றன, ஆகாசாதிகள் பின்னுண்டாகின்றன என்பது அபிப்பிராய மன்று. ஏனெனின்,

1. சென்றகாலத்திலிருப்பது முதல் அல்லது முன் எனப்படுகிறது.

2. வருங்காலத்தில் இருப்பதற்குப் பிறகு, பின் என்று பெயர்.

ஆகாசாதிகளி னுற்பத்திக்குமுன் தேசகாலங்கள் உண்டாயினவென்று சொல்லுதலால் ஆகாசாதிகளி னுற்பத்திகாலத்துக்கு முற்கால உபாதியுடைய

---

(1) அபின்னமெனின், பிரஹ்மத்திற்கு வேறான தேசகாலங்களின்மையால் தேச காலமின்றிய பிரஹ்மத்தில் பிரபஞ்சத்தின் பிரதீதி சித்தமாயிற்று.

(2) பிரஹ்மத்திற்கு வேறான தேசகாலங்களைக் கூறின், [1] அவை சத்தியமா? [2] அல்லது மித்தையா?

[1] சத்தியமெனின் அத்வைத சுருதிக்கு விரோத முண்டாம்.

[2] மித்தையெனின் அவையும் பிரபஞ்சத்தைப்போல காரியமாதலின் அவற்றிற் குக் காரணமாகவும் ஓர் தேசகாலத்தைச் சொல்லவேண்டும்.

(க) தனக்குக் காரணம் தானேயாயின் ஆத்மாசிரயம் (தன்னைப்பற்றுதல்) உண் டாகும்.

(ங) முதற்றேசகாலங்களுக்குக் காரணம் இரண்டாவதும் இரண்டாவதற்கு முதலாவதுமாமெனின், ஒன்றன் உற்பத்தியில் ஒன்றன் அபேக்ஷையிருத்தலால் அந்நி யோந்நியாசிரயம் (ஒன்றையொன்று பற்றுதல்) உண்டாகும்.

(ச) இரண்டாவதற்கு மூன்றாவதும் பின் மூன்றாவதற்கு முதற்றேசகாலமும் காரணமெனின், சக்கரம்போற் சுழல்தலாகிய சக்கிரிகை யுண்டாகும்.

(ஞ) மூன்றாவது தேசகாலங்களுக்குக் காரணம் நான்காவதும் நான்காவதற்குக் காரணம் ஐந்தாவதுமாமெனின், அநந்ததேசகாலங்களின் தாரைவடிவ அநவஸ்தை (வரம்பின்மை) உண்டாகும்.

ஆதலால் பிரஹ்மத்தில் ஓர் தேசகாலமும் சித்திக்கிறதில்லை. இவ்வாற்றால் தேச காலமின்றிய பிரஹ்மத்தினின்றும் ஜாக்கிரஜகத்தின் உற்பத்தி தோற்றுகின்றது. ஆதலால் ஜாக்கிரப்பிரபஞ்சம் அசத்தாம் (துச்சமாம்).

அல்லது ஜாக்கிரகாலத்தில் சொப்பனபதார்த்தங்களின் ஸ்மிருதியுண்டாகிறது. சொப்பனத்தில் அநேகமாக ஜாக்கிரபதார்த்தங்களின் ஸ்மிருதி யுண்டாகிறதில்லை. இதனாலும் ஜாக்கிரப்பிரபஞ்சம் அசத்தாம். அதன் திருஷ்டாந்தத்தால் (அதற்கொத்ததா யிருத்தலால்) சொப்பனப்பிரபஞ்சமும் அசத்தாம் (மலடிமைந்தனுக்குச் சமான மாம்). எப்போது ஜாக்கிரத்திற்கு அபாவ மிருக்கிறதோ அப்போது அதனுள்ளடங்கிய சமாதியவஸ்தைக்கும் சேதனத்தில் அபாவ மிருக்கின்றது. எப்போது ஜாக்கிரசொப் பனங்களுக்கு அபாவமிருக்கிறதோ, அப்போது இரண்டவஸ்தைகளிலுமிருக்கும் புத்தியி னின்மையால், அதன் விலயவடிவ சுழுத்திக்கும் சுழுத்தியி னுள்ளடங்கிய மரண மூர்ச்சைகளுக்கும் அபாவ மிருக்கின்றது.

இவ்வாற்றால் பிரஹ்மத்தில் சகலப் பிரபஞ்சமும் சித்தியாமையால் அஜாதவாதம் சித்தமாகின்றது.

பரமாத்மா தேசகாலங்களுக் கதிஷ்டானமா மென்பது சித்திக்கும். இதனால் தேசகாலங்களின் உற்பத்தியில் பூர்வகாலத்தின் அபேக்ஷை யுண்டாகும். காலத்தி னுற்பத்தியின்றி பூர்வகாலஞ் சித்திக்கிறதில்லை. ஆதலால் ஆகாசாதி களுக்கு முற்காலத்தில் தேசகாலாதிகள் உண்டாகின்றனவென்று சொல்லு தல் * பொருந்தாது.

ஆனால் மதுசூதனஸ்வாமிகளின் அபிப்பிராயம் இதுவாம்:—

1. பூதபௌதிகப்பிரபஞ்சம் பிரதீதியாவதுபோலத் தேசகாலங்களும் பிரதீதியாகின்றன.

(1) ஆத்மாவுக்கு வேறான எவையும் நித்திய மன்று. ஆதலால் தேச காலங்கள் நித்திய மன்று.

(2) இல்லாத பதார்த்தம் பிரதீதியாகாது. ஆகையால் ஆகாசாதிகள் போலத் தேசகாலங்களும் உற்பத்தியாகின்றன.

அத்தேசகாலங்கள் மாயையின் பரிணாமமும் சேதனத்தின் விவர்த்தமு மாம். எது விவர்த்தமோ அது எதற்கும் காரண மாகாது. ஆகையால் ஆகாசாதிப்பிரபஞ்சத்தின் உற்பத்தியில் தேசகாலங்கள் காரணமாதல் பொருந் தாது.

2. அல்லது காரணம் முதலிலும் காரியம் பின்னரும் இருக்கின்றன. ஆகா சாதிப்பிரபஞ்சத்துக்குமுன் தேசகால முண்டானதாகச் சொல்வது சரியன்று என்பது சமீபத்திலேயே சொல்லப்பட்டு வந்திருக்கிறது. இதனாலும் தேச காலங்கள் ஆகாசாதிப்பிரபஞ்சத்துக்குக் காரணமாதல் பொருந்தாது. ஆனால் சொப்பனத்தின் பிதாபுத்திரன்போல் தேசகாலசகித ஆகாசாதிப்பிரபஞ்சம்

* தேசகாலங்களின் உற்பத்தியில் பூர்வ (சென்ற) காலத்தைக் காரணமெனக் கொள்ளின், அந்தப் பூர்வகாலத்தின் உற்பத்தியில் யாதேனும் ஓர்காரணத்தைக் காரணமெனக் கொள்ளல்வேண்டும்.

1. அது தனது உற்பத்தியில் தானே காரணமாயின் ஆத்மாசிரய முண்டாகும்.

2. அதற்கு அந்நியபூர்வகாலமும் அந்நியத்திற்குத் தானும் காரணமெனின் அந்நி யோந்நியாசிரய முண்டாகும்.

3. இரண்டாவது பூர்வகாலத்திற்குக் காரணம் மூன்றாவது பூர்வகாலமும் மூன் றாவது பூர்வகாலத்திற்குக் காரணம் முதற்பூர்வகாலமுமாமெனின் சக்கிரிகை யுண் டாகும்.

4. மூன்றாவது பூர்வகாலத்திற்குக் காரணம் நான்காவது பூர்வகாலமும் நான்கா வதற்குக் காரணம் ஐந்தாவது பூர்வகாலமுமாமெனின் அநவஸ்தை யுண்டாகும்.

இவ்வாற்றால் தோஷசமூகங்களி னிருப்பால் தேசகாலங்களின் உற்பத்தியில் பூர்வகாலத்தைக் காரணமெனக் கொள்ளுதல் பொருத்தமின்றியதாம்.

மாயாவிசிஷ்ட பரமாத்மாவினின்றும் உற்பத்தியாகின்றது. ஒருபொருள் யாதேனும் ஒருதேசத்தில் யாதேனும் ஒருகாலத்தி லுண்டாகிறது; அன்னிய தேசத்தில் அன்னியகாலத்தி லுண்டாகிறதில்லை; இவ்வாறு சகலபதார்த்தங் களும் பிரளயகாலத்தி லுண்டாகிறதில்லை; சிருஷ்டிகாலத்தி லுண்டாகின்றன. அதனுல் தேசகாலங்களுக்குக் காரணங்களாந்தன்மைவடிவம் தோன்றுகின் றது. அங்ஙனமாயினும் எந்த மாயையிலிருந்து தேசகாலசகிதப்பிரபஞ்ச முற்பத்தியாகிறதோ, அந்த மாயையினுலேயே தேசகாலங்களில் காரணத் தன்மையும் அன்னியப் பிரபஞ்சத்தில் காரியத்தன்மையும் பிரதீதியாகின்றன. ஆகாசாதிப் பிரபஞ்சத்துக்குத் தேசகாலங்கள் காரணமன்று.

## 319. பிரஹ்மத்தின் காரணத்துவம் தேசகாலங்களில் தோற்றுகின்றது என்றல் முதலிய இடங்களில் அந்நியதாக்கியாதியின் அங்கீகாரம் (319-321).

இதில் இவ்வாறு சங்கை யுண்டாகின்றது:—(பூர்வபக்ஷி) இல்லாத பதார்த் தம் தோற்ருது; சித்தாந்தத்திலும் அங்கீகார மில்லை. இல்லாத பதார்த்தம் தோற்றுமெனக் கொள்ளின்,

1. அசத்தியாதியின் அங்கீகாரமுண்டாம்.

2. இல்லாத மலடிமகன் முயற்கொம்பு முதலியன தோற்றவேண்டும். அப்படித் தோற்ருமையால் இல்லாத பதார்த்தம் பிரதீதியாகாது.

ஆதலால் தேசகாலங்களில் காரணத்தன்மை இல்லாதபக்ஷத்தில் தேச காலங்களில் சர்வபதார்த்தங்களின் காரணத்தன்மை மாயையின் பலத்தாலும் தோற்றலாகாது. காரணத்தன்மை தேசகாலங்களில் தோற்றுகிறது. ஆதலால் தேசகாலங்கள் சகலப் பிரபஞ்சத்துக்கும் காரணங்களாம்.

சகலப் பிரபஞ்சத்துக்கும் காரணம் பிரஹ்மம். பிரஹ்மத்தின் காரணத் தன்மை தேசகாலத்தில் பிரதீதியாகின்றது. தேசகாலங்களில் காரணத் தன்மையில்லையென்று சித்தாந்தி சொல்லுவதும் பொருந்தாது. ஏனெனின்,

1. தேசகாலங்களுக்கு அதிஷ்டானம் பிரஹ்மமா யிருப்பதுபோலச் சகலப் பிரபஞ்சத்துக்கும் பிரஹ்மம் அதிஷ்டானமா யிருக்கிறது. தேசகாலங் களிற்முன் பிரஹ்மத்தின் காரணத்தன்மை பிரதீதியாகிறது; மற்றவற்றில் ஆகிறதில்லையென்று சொல்லுதற்கு யாதொரு காரணமுமில்லை. ஆதலால் அதிஷ்டானப் பிரஹ்மத்தின் காரணத்தன்மை தேசகாலங்களில் பிரதீதியாகு மாயின், பிரஹ்மம் சர்வப் பிரபஞ்சத்திற்கும் அதிஷ்டானமாயிருத்தலால் சர்வப் பிரபஞ்சத்திலும் காரணத்தன்மை தோற்றவேண்டும். சிலவற்றிற் காரணத்தன்மை சிலவற்றிற் காரியத்தன்மை யென்னும் பேதமும் கூடாது.

2. அல்லது தேசகாலங்களில் காரணத்தன்மை யில்லை; பிரஹ்மத்தில் காரணத்தன்மை யிருக்கிறது. அந்தப் பிரஹ்மத்தின் காரணத்தன்மை தேசகாலங்களில் தோற்றுகிறதென்று சொல்லுவதனால் அந்நியதாக்கியாதியின் அங்கீகார முண்டாகும். ஏனெனின், அந்நியவஸ்து அன்னியரூபமாகத் தோற்றல் அந்நியதாக்கியாதி யென்று சொல்லப்படும்; தேசகாலங்கள் காரணமன்று. ஆதலால் தேசகாலங்கள் காரணத்துக்கு அன்னியமான அகாரணமா யிருக்கின்றன. அவை (அகாரணம்) அன்னியரூபமாக அதாவது காரணரூபமாகத் தோற்றுவதை யங்கீகரிப்பதில் அன்னியதாக்கியாதியின் அங்கீகார முண்டாகும். சித்தாந்தத்தில் அன்னியதாக்கியாதி அங்கீகரிக்கப்படவில்லை.

இந்தவிடத்தில் அன்னியதாக்கியாதியை யங்கீகரித்தால், கிளிஞ்சிலில் அநிர்வசனீய வெள்ளியி னுற்பத்தி சித்தாந்தத்தில் ஒப்பப்பட்டிருக்கிறது; அது நிஷ்பலமாகும். ஏனெனின், அன்னியதாக்கியாதியில் இரண்டு மதங்களுள:—

(1) ஒரு இடத்திலிருக்கிற பதார்த்தம் வேறிடத்தில் தோற்றுவது அந்நியதாக்கியாதியாம். அது ஸ்திரீயின் கையிலிருக்கிற வெள்ளி எதிரிலிருக்கும் கிளிஞ்சிலில் தோற்றுவதுபோலாம்.

(2) அல்லது ஒரு பொருள் வேறுரூபமாகத் தோற்றுவது அந்நியதாக்கியாதியாம், அது கிளிஞ்சிலே வெள்ளிரூபமாகத் தோற்றுவதுபோலாம்.

இவ்வாறு சகலப்பிரமஸ்தலங்களிலும் அந்நியதாக்கியாதியினால் நிர்வாகம் சம்பவிக்கிறது. அநிர்வசநீயரஜத முதலியவற்றின் உற்பத்தி கூறுதல் அசங்கதமாகும்.

விஷயத்தின் சமானவடிவமாக ஞான முண்டாகிறது. ஒரு வஸ்துவின் ஞானம் வேறுரூபத்தா லுண்டாகாது. ஆகையால் ரஜதாகாரமான ஞானத்தின் விஷயமான அநிர்வசநீயராஜதமும் உற்பத்தியாகிறது. இந்த அத்துவைத சித்தாந்தத்தில் காரணத்திற் கன்னியமான தேசகாலங்களில் பிரஹ்மத்தினது காரணத்தன்மையின் ஞான முண்டாகாது. ஆதலால், தேசகாலங்களில் பிரதீதியாகும் காரணத்தன்மை எதுவோ அது இல்லாமலாவது, அல்லது பிரஹ்மத்திலிருந்துகொண்டாவது விளங்கமாட்டாது. தேசகாலங்களிலேயே காரணத்தன்மை யிருக்கிறது; அது விளங்குகிறது.

இவ்விதத்தால் "ஆகாசாதிப்பிரபஞ்சத்துக்குத் தேசகாலங்கள் காரணமல்ல" வென்று சித்தாந்தி கூறுவாராயின் அவ்வார்த்தை அசங்கதமாம்.

**320.** [சித்தாந்தி:—] அச்சங்கை பொருந்தாது. ஏனெனின், பிரஹ்மத்தின் காரணத்தன்மை தேசகாலங்களில் பிரதீதியாகிறது. செம்பரத்தம் பூவின் சம்பந்தமுடைய ஸ்படிகத்தில் அப்பூவின் சிவப்புவர்ணம் தோற்று

கிறது. அதிஷ்டானத்தின் சத்தியத்தன்மை சொப்பனகாலத்தில் மித்தையான யானை பர்வத முதலியவற்றில் பிரதீதியாகிறது. அங்கு ஸ்படிகத்தில் அநிர்வசநீயமான சிவப்புவர்ணத்தி னுற்பத்தி அங்கீகரிக்கப்படவில்லை. ஆனால் புஷ்பத்தின் சிவப்புவர்ணம் ஸ்படிகத்தில் தோற்றுகிறது. ஆதலால் வெண்மையான ஸ்படிகம் சிவப்புருவமாய்த் தோற்றுவதால் சிவப்பின் ஞானத்தில் அந்நியதாக்கியாதியே அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது.

அப்படியே சொப்பனத்தின் மித்தியாபதார்த்தங்களில் சத்தியத்தன்மை தோற்றுகிறது. அங்கு அநிர்வசநீய சத்தியத்தன்மை அந்தப் பொருளில் உண்டாகிறது. இவ்வார்த்தையே "மெய்யான பொய்யாம்" என்னும் (வியாகாததோஷமுடைய) வசனம்போலப் பொருந்தாததாம். இல்லாதது பிரதீதியாகாது. ஆனால் சொப்பனத்தின் அதிஷ்டான சேதனத்தின் சத்தியத்தன்மை மித்தியாபதார்த்தங்களில் பிரதீதியாகிறது. ஆதலால் மித்தியா பதார்த்தம் சத்தியரூபமாய்த் தோற்றுதலால் சத்தியத்தன்மையின் ஞானத்தில் அந்நியதாக்கியாதியே அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. அப்படியே அதிஷ்டானப் பிரஹ்மத்தின் காரணத்தன்மை தேசகாலங்களில் அந்நியதாக்கியாதியாகப் பிரதீதியாகின்றது.

**321.** இவ்வளவு இடத்தில் அந்நியதாக்கியாதியை ஒப்பினால் எல்லாப் பிரமஸ்தலங்களிலும் அந்நியதாக்கியாதியையே ஒப்பவேண்டுமென்று கூறின்,

அச்சங்கை பொருந்தாது. ஏனெனின், கிளிஞ்சிலில் வெள்ளிதோற்றுமிடத்தில் அந்நியதாக்கியாதியை அங்கீகரிப்பதில் விஷயத்துக்கு விலக்ஷணமான ஞானம் பொருந்தாது என்னும் தோஷம் சொல்லப்பட்டிருக்கிறது.

எங்கு ஸ்படிகத்தில் சிவப்புவர்ணத்தின் ஞானமுண்டாகிறதோ அங்குச் சிவப்புப் புஷ்பத்திற்கு ஸ்படிகத்துடன் சம்பந்தமிருக்கிறது. ஆதலால் ஸ்படிக சம்பந்தமுடைய புஷ்பத்தின் சிவப்புவர்ணம் ஸ்படிகத்தில் பிரதீதியாகிறது. ஏனெனின், அந்தக்கரணத்தின் விருத்தி சிவப்புப் புஷ்பாகார மாகும்போது அந்த விருத்திக்கு விஷயம் சிவப்புப் புஷ்பத்துடன் சம்பந்தப்பட்ட ஸ்படிகமாம். ஆதலால் புஷ்பத்தின் சிவப்புவர்ணம் ஸ்படிகத்தில் தோற்றுகிறது. [அங்ஙனமே] சுத்தி வெள்ளிரூபத்தினால் அறியப்படமாட்டாது. ஏனெனின், சுத்திதேசத்தில் அநிர்வசநீயமாயும் வியாவகாரிகமாயுமிருக்கிற வெள்ளி அந்நிய மதத்தில் இல்லை; ஆனால் சுத்தி இருக்கிறது. அந்தச் சுத்தியின் சம்பந்தத்தால் சுத்தியின் சமானாகாரமாகவே அந்தக்கரணவிருத்தி யுண்டாகும். ரஜதாகார அந்தக்கரணவிருத்தி யுண்டாகாது. ஆதலால் அவித்தையின் பரிணாமமும் சேதனத்தின் விவர்த்தமுமான அநிர்வசநீய வெள்ளியும் அதன் ஞானமுமாகிய விரண்டு முண்டாகின்றன.

சிவப்புவர்ணம் ஸ்படிகத்தில் பிரதீதியாகிறது. அங்கு அந்தக்கரண விருத்திக்கு ஸ்படிகத்துடனும் சிவப்புப் புஷ்பத்துடனும் சம்பந்த முண்டாகிறது. சிவப்புப் புஷ்ப சம்பந்தத்தால் சிவப்புவடிவ விருத்தி யுண்டாகிறது. அவ்விருத்திக்கு ஸ்படிகத்துடனும் சம்பந்த மிருக்கிறது. ஸ்படிகத்தில் சிவப்பின் சாயை யிருக்கிறது. ஆதலால் புஷ்பத்தின் தர்மம் சிவப்பு வர்ணமாம். ஸ்படிகத்தில் அவ்விருத்திக்கே விஷயமாகிறது.

இவ்விதத்தால்,

1. எங்கு இரண்டு பதார்த்தங்களின் சம்பந்த மிருக்கிறதோ அங்கே ஒன்றன் தர்மம் மற்றொன்றில் தோற்றுதல் சம்பவிக்கிறது. அங்கு அந்நிய தாக்கியாதியே சம்பவிக்கிறது.

2. எங்கு இரண்டு பதார்த்தங்களின் சம்பந்தமுமில்லையோ அங்கு அந்நியதாக்கியாதி இல்லை; ஆனால் அநிர்வசநீயக்கியாதி யிருக்கிறது. புஷ்பத்துடன் சம்பந்தமுடைய ஸ்படிகத்தில் புஷ்பத்தின் சிவப்புவர்ணம் பிரதீதியாவது போலச் சொப்பனத்தின் யானை மலை முதலிவைகளுக்கும் அதிஷ்டான சேதனத்துடன் சம்பந்த மிருக்கிறது. ஆதலால் சேதனத்தின் தர்மமாகிய சத்தியத்தன்மையும் சேதனத்துடன் சம்பந்தமுடைய யானை மலை முதலியவற்றிற் பிரதீதியாகிறது. அது அந்நியதாக்கியாதியாம். அப்படியே அதிஷ்டான சேதனத்தின் தர்மமாகிய காரணத்தன்மை அதிஷ்டான சேதனத்தோடு சம்பந்தமுடைய தேசகாலங்களில் பிரதீதியாகிறது.

## 322. ஜாக்கிரப்பிரபஞ்சம் சாமக்கிரியின்றி யுண்டாகிறது. ஆதலால் சொப்பனசமானமாய் மித்தையாமெனல்.

"அதிஷ்டான சேதனத்தின் சம்பந்தம் சகலப் பிரபஞ்சத்துடனு மிருக்கிறது. சம்பந்தியின் தர்மம் அந்நியதாக்கியாதியினால் அந்நியத்திற் பிரதீதியாமாயின், சேதனத்தின் காரணத்தன்மை சகலப்பிரபஞ்சத்திலும் பிரதீதியாகவேண்டு" மென்று முன் சங்கிக்கப்பட்டது.

அச்சங்கை பொருந்தாது. ஏனெனின்,

1. சொப்பனத்தில் இரண்டு சரீரங்கள் உண்டாகின்றன.

(1) ஒன்று பிதாரூபமாய்த் தோற்றுகின்றது.

(2) ஒன்று புத்திரரூபமாய்த் தோற்றுகின்றது.

அங்கு இரண்டு சரீரங்களுக்கும் சொப்பனத்தின் அதிஷ்டான சேதனத்துடன் சம்பந்தம் இருந்தாலும், பிதாசரீரத்தில் அதிஷ்டான சேதனத்தின் காரணத்தன்மை பிரதீதியாகிறது. புத்திரசரீரத்தில் காரணத்தன்மை பிரதீதி

யாகிறதில்லை. பிதாவாற் பெறப்படுபவன் புத்திரனென் றிவ்வாறு புத்திர சரீரத்தில் காரியத்தன்மை பிரதீதியாகிறது. இவ்விதத்தால் அதிஷ்டான சேதனத்தின் சம்பந்தம் எல்லாவற்றிற்கு மிருந்தாலும், தேசகாலங்களில் சேதன தர்மமான காரணத்தன்மையின் பிரதீதியும் பிறவற்றில் காரியத்தன்மையின் பிரதீதியு முண்டாகின்றன.

2. அல்லது அதிஷ்டான சேதனம் அசங்கமா யிருக்கிறது. அது எதற்கும் பரமார்த்தமாகக் காரணமன்று. மாயையிலுள்ள ஆபாஸன் காரணமா யிருந்தாலும் ஆபாஸனுடைய சொரூபம் மித்தையாகின்றது. எது தானே மித்தையாக இருக்கிறதோ அது வேறொன்றற்குக் காரணமாகாது. ஆதலால் பரமாத்மாவில் பிரபஞ்சத்தின் காரணத்தன்மை யுளதாயின், அது தேசகாலங்களில் பிரமத்தாற் பிரதீதியாகக்கூடும். பரமாத்மாவினிடத்தில் காரணத்தன்மையில்லை. பரமாத்மா காரணத்தன்மை முதலிய தர்மங்களின்றி அசங்கமா யிருக்கிறது. அதன் காரணத்தன்மை தேசகாலங்களில் தோற்றுகிறது என்று கூறுதல் பொருந்தாது. ஆனால் மாயையாலுண்டான அநிர்வசநீய தேசகாலங்கள் அநிர்வசநீய காரணத்தன்மையுடையன வாகின்றன.

பரமார்த்தத்தால் தேசகாலங்கள் காரணமாகா. புத்திரனில்லாதவன் சொப்பனத்தில் புத்திரனையும் பேரனையும் பார்க்கிறான். அங்குப் புத்திரபௌத்திரசரீரங்கள் அநிர்வசநீயமா யுண்டாகின்றன. புத்திரசரீரத்தில் பௌத்திர சரீரத்தின் அநிர்வசநீய காரணத்தன்மையுண்டாகிறது. அங்குப் பரமார்த்தமாகப் புத்திரபௌத்திர சரீரங்களுக்குப் பரஸ்பரம் காரணகாரிய பாவங்களில்லை. அதுபோலத் தேசகாலங்கள் அநிர்வசநீய காரணங்களாகப் பிரதீதியாகின்றன. பரமார்த்தமாகத் தேசகாலங்களுக்கும் ஆகாசாதிப் பிரபஞ்சத்துக்கும் காரண காரியத்தன்மைக ளில்லை.

இவ்விதத்தால் தேசகால சாமக்கிரிகளின்றி ஜாக்கிரப்பிரபஞ்ச முண்டாகிறது. ஆதலால் சொப்பனம்போல் ஜாக்கிரமும் மித்தையாம்.

சொப்பனத்தின் ஸ்திரீ புத்திராதிகள் சொப்பனத்திலேயே சுகதுக்காதிகளுக்கு ஹேதுக்களா யிருக்கின்றன; ஜாக்கிரத்தில் அவர்களில்லை. அப்படியே ஜாக்கிரபதார்த்தங்கள் சொப்பனத்திலில்லை; ஆதலால் ஜாக்கிர சொப்பனங்கள் இரண்டும் சமமாம்.

### 323. ஜாக்கிர பதார்த்தங்கள் ஞானத்தின்கூடவே உற்பத்தியாகின்றன. ஆதலால் வேறு ஜாக்கிரத்தில் இருப்பதில்லையெனல் (323-324.)

ஜாக்கிரத்தினின்று சொப்பனமுண்டாகி மறுபடியும் ஜாக்கிர முண்டாகும்போது, அங்கு முதல்ஜாக்கிரத்தின் பதார்த்தம் எதுவோ அதுவே சொப்

பனவியவஹித (சொப்பனத்தால் மறைக்கப்பட்ட) இரண்டாவது ஜாக்கிரத்திலிருக்கிறது. முதல் சொப்பனத்தின் பதார்த்தம் இரண்டாவது சொப்பனத்திலிருக்கிறதில்லை. ஆகையால் சொப்பனபதார்த்தங்களினும் ஜாக்கிரபதார்த்தங்கள் வேறும் என்று கூறின்,

அச்சங்கையும் சித்தாந்தத்தை யறியாத மூடனது திருஷ்டியா லுண்டாகிறது. ஏனெனின் மூர்க்கனுடைய திருஷ்டி யிவ்வாறிருக்கின்றது. சமுசாரப் பிரவாகம் அநாதி. அதில் ஜீவனுக்கு ஜாக்கிரஸ்வப்பனசுழுத்தி யுண்டாகின்றது.

1. ஜாக்கிரகாலத்தில் சொப்பனமும் சுழுத்தியும் நஷ்டமாகின்றன.

2. சொப்பனகாலத்தில் ஜாக்கிரமும் சுழுத்தியும் நஷ்டமாகின்றன.

3. அங்ஙனமே சுழுத்திகாலத்தில் ஜாக்கிரசொப்பனங்கள் நஷ்டமாகின்றன.

ஆனால் "சொப்பனசுழுத்திகளுண்டாகும்போது ஜாக்கிரகாலத்தின் ஸ்திரீ புத்திரபசுதனாதிகள் நீங்காமல் இருந்துகொண்டே யிருக்கின்றன. அவற்றின் ஞானந்தான் நீங்குகிறது. மறுபடியும் ஜாக்கிர முண்டாகும்போது முதல் ஜாக்கிரத்திலிருந்த பதார்த்தங்களின் ஞான முண்டாகிறது." என்பது அஞ்ஞானிகளாகிய மூர்க்கர்களது திருஷ்டியாம்.

**324.** சித்தாந்த மிதுவாம்:—

1. பதார்த்தங்களெல்லாம் சேதனத்தின் விவர்த்தமும்,

2. அவித்தையின் பரிணாமமுமாம்.

ஆதலால் கிளிஞ்சில்வெள்ளிபோல் எந்தக்காலத்தில் எந்தப் பதார்த்தம் பிரதிதியாகிறதோ, அந்தக் காலத்தில் அதிஷ்டான சேதனத்தை யாசிரயித்த அவித்தையின் இருவகைப் பரிணாமங்க ளுண்டாகின்றன.

1. அவித்தையின் தமோகுணாம்சம் கடாதி விஷயரூபமாகப் பரிணமிக்கிறது.

2. அவித்தையின் சத்துவகுணாம்சம் ஞானரூபமாகப் பரிணமிக்கிறது.

சேதனத்தை ஞானமாகச் சொல்லுதலால் சத்துவகுணத்தின் பரிணாமம் ஞானமா மென்று சொல்லுதல் பொருந்தாது. என்றாலும் வியாபகசேதன முழுவதும் ஞானமன்று; ஆனால் ஆபாஸசகிதவிருத்தியி லாரூடமான சேதனத்தை ஞான மென்பர்.

ஆகையால் சேதனத்தில் ஞானவியவகாரத்தைச் சம்பாதிப்பது விருத்தியாம். இவ்வாறு சேதனத்தில் ஞானத்தன்மையைச் சம்பாதிப்பது விருத்தியாம்.

இவ்வாற்றால் சேதனத்திலுள்ள ஞானத்தன்மைக்கு உபாதி விருத்தியாம். அதினிடத்திலும் ஞானசப்தம் பிரயோகிக்கப்படுகின்றது. "கடத்தின் ஞான முண்டாயிற்று" என்றும், "படத்தின் ஞானம் நஷ்டமாயிற்று" என்றும் உலகத்திற் சொல்லுகிறார்கள். அங்கு விருத்தியிலாரூடமான சேதனத்துக்கு உற்பத்திநாசங்கள் சம்பவிக்கிறதில்லை; விருத்திக்கு உற்பத்திநாசங்களுண்டாகின்றன. ஞானத்துக்கு உற்பத்திநாசங்கள் சொல்லப்படுகின்றன. ஆதலால் விருத்தியிலும் ஞானசப்தம் பிரயோகிக்கப்படுகிறது.

அந்த விருத்திரூப ஞானம் சத்துவகுணத்தின் பரிணாமமாம் என்று கூறுதல் சம்பவிக்கிறது.

1. அந்த விருத்திரூப பரிணாமத்தில் சேதனத்தின் ஆபாசம் உண்டாகிறது.

2. கடாதிவிஷயரூப பரிணாமத்தில் சேதனத்தின் ஆபாஸ முண்டாகிறதில்லை.

ஏனெனின், விஷயமும் விருத்தியும் இரண்டும் அவித்தையின் பரிணாமங்களா யிருக்கினும்,

1. கடாதிவிஷயம் அவித்தையின் தமோகுணபரிணாமமாம். ஆதலால் மலினமா யிருக்கிறது. அதில் ஆபாஸன் உண்டாகிறதில்லை.

2. விருத்தி சத்துவகுணபரிணாமமாய்ச் சொச்சமா (பளபளப்புள்ளதா) யிருக்கிறது. அதில் ஆபாஸ முண்டாகிறது.

இவ்விதத்தால்,

1. விருத்திக்குச் சேதனத்தின் ஆபாஸத்தைக் கொள்ளுதலில் தகுதியிருத்தலால் விருத்தியவச்சின்னசேதனம் ஞான மெனப்படும். சாக்ஷி யென்றும் சொல்லப்படுகிறது.

2. கடாதிவிஷயங்களுக்கு ஆபாஸத்தைக் கிரகிக்கும் யோக்கியதையில்லை. இக்காரணத்தால் விஷயாவச்சின்னசேதனம் ஞானமன்று; சாக்ஷியுமன்று.

இவ்விதத்தால் ஜாக்கிரத்தின் பதார்த்தங்களும் அவற்றின் ஞானமும் கூடவே யுண்டாகின்றன; கூடவே நஷ்டமாகின்றன. இது வேதத்தின் இரகசிய சித்தாந்தம். ஆதலால் ஜாக்கிரத்தின் பதார்த்தங்கள் இரண்டாவது ஜாக்கிரத்தில் இருக்கின்றன என்று கூறுதல் சம்பவியாது.

## 325. ஜாக்கிரத்தினது பதார்த்தங்களுக்கு ஒன்றற்கொன்று காரியகாரணத்தன்மை யில்லையெனல் (325-327).

சொப்பனத்தினின்றும் விழித்துக்கொண்டவனுக்கு "முன் எந்தப்பதார்த்தங்க ளிருந்தனவோ அவையே இவை" என்னும் பிரத்தியபிஞ்ஞை யுண்டா

கிறது. ஆதலால் ஜாக்கிரபதார்த்தங்களுக்கு ஞானத்தின் சமகாலத்தில் உற்பத்திநாச முண்டாகிறதில்லை. ஆனால் அவை ஞானத்துக்குமுன் இருக்கின்றன; ஞானத்தின் நாசத்துக்குப் பின்னு மிருக்கின்றன.

அங்ஙனமாயினும், சொப்பனபதார்த்தங்கள் அந்த க்ஷணத்தில் உற்பத்தியாய், "நான் பிறப்பதற்குமுன் இந்த மலை சமுத்திரமுதலியன உண்டாயிருக்கின்றன" என்று தோற்றுகின்றன. அங்குத் தற்காலமுண்டாகிய பதார்த்தங்களில் வெகுகால நிலைத்திருத்தற்பிராந்தி யுண்டாகிறது. ஆதலால் எந்த அவித்தை மித்தையான மலை சமுத்திரமுதலியவற்றை யுண்டாக்கியிருக்கின்றதோ, அவ்வவித்தையினாலேயே வெகுகாலஸ்திரத்தன்மையும் ஸ்திரத்தன்மையின் பிரதீதியும் அநிர்வசநீயமா யுண்டாயிருக்கின்றன. அதுபோல ஜாக்கிரபதார்த்தங்களினும் வெகுகாலநிலைத்திருத்தற்றன்மை யில்லை. ஆனால் அவித்தையின் பலத்தினால் * மித்தையான ஸ்திரத்தன்மையும் அந்தப் பதார்த்தங்களோடு உற்பத்தியாகிப் பிரதீதியாகிறது.

இவ்வாறு கூறின்,

1. சொப்பனபதார்த்தம் சாக்ஷாத் அவித்தையின் பரிணாமமாம்.

2. ஜாக்கிரபதார்த்தம் சாக்ஷாத் அவித்தையின் பரிணாமமன்று.

ஆனால் கடத்தினுற்பத்தி தண்டம் சக்கரம் குலாலன் என்பவற்றா லுண்டாவதுபோல் சகல பதார்த்தங்களி னுற்பத்தியும் தத்தம் காரணத்தா லுண்டாகிறது; சாக்ஷாத் அவித்தையா லுண்டாகிறதில்லை. சாக்ஷாத் அவித்தையின் பரிணாமமாயிருக்குமாயின், ஆகாசாதிக் கிரமத்தால் பஞ்சபூதங்களின் உற்பத்தியும், பஞ்சீகரணமும், அவற்றினின்று பிரஹ்மாண்டத்தி னுற்பத்தியும் சுருதியிற் சொல்லப்பட்டிருக்கின்றன. அது அசங்கதமாம். ஆதலால் ஈசுவரசிருஷ்டியாகிய ஜாக்கிரபதார்த்தங்கள் தத்தம் உபாதானத்தின் பரிணாமங்களாம்; சாக்ஷாத் அவித்தையின் பரிணாமங்க ளன்று.

1. சொப்பனத்தின் சகல பதார்த்தங்களும் அவித்தையின் பரிணாமங்களாம். அவற்றிற்கு ஒரே அவித்தை உபாதானமாயிருத்தலால் அந்தப் பதார்த்

* ஜாக்கிரபதார்த்தங்களின் "அந்த முன் ஜாக்கிரத்தில் கண்ட பதார்த்தங்கள் இவை" என்னும் வடிவினதாகிய பிரத்தியபிஞ்ஞைஞானம் நித்திரையினின்று விழித்த புருடனுக்குண்டாகிறது. அந்த ஞானம் ஆற்றொழுக்கு, தீபச்சுடர், ஆகாயத்துள்ள நக்ஷத்திரத்தின் ஸ்திதி, விருக்ஷத்தின் பழம் என்பவற்றின் பிரத்தியபிஞ்ஞைஞானத்தினைப் போலப்பிரமரூபமாம். ஆதலால் முக்கிய திருஷ்டாந்தம் சொப்பனமாம். அதனை மேல் கிரந்தகாரரே எழுதியிருக்கின்றனர்.

தங்களுக்கும் அவற்றின் ஞானத்துக்கும் ஒரேயவித்தையினின்றும் ஒரே காலத்தில் உற்பத்தி சம்பவிக்கிறது.

2. ஜாக்கிரபதார்த்தங்கள் வெவ்வேறு காரணங்களா லுண்டாகின்றன. காரியத்துக்குமுன் காரண மிருக்கும். காரணத்தில் காரியம் லயமாகிறது. ஆதலால் கடத்தின் உற்பத்திக்குமுன்னும் கடநாசத்துக்குப் பின்னும் மண் பிண்ட மிருக்கிறது. இவ்விதத்தால் சில பதார்த்தங்கள் அற்பகாலம் நிலைப்பனவும் சில அதிககாலம் நிலைப்பனவுமாகக் காரியகாரணங்களாயிருக்கின்றன. சொப்பனபதார்த்தங்கள் அப்படி யில்லை.

**326.** அச்சங்கை பொருந்தாது. ஏனெனின், ஜாக்கிரபதார்த்தங்களிற் போல் சொப்பனபதார்த்தங்களிலும் காரியகாரணத்தன்மை தோற்றுகின்றது. ஒருவனுக்கு "என் பசு கன்றுபோட்டிருக்கிறது அல்லது என் ஸ்திரீக்குப் புத்திரன் உண்டாயிருக்கிறான்" என்று சொப்பன முண்டாகிறது. அங்குப் பசுவினிடத்திலும் ஸ்திரீயினிடத்திலும் காரணத்தன்மையும் வெகுகால ஸ்திரத்தன்மையும் பிரதீதியாகின்றன. கன்றினிடத்திலும் புத்திரனிடத்திலும் காரியத்தன்மையும் அற்பகாலஸ்திரத்தன்மையும் பிரதீதியாகின்றன. எல்லாம் ஒரேகாலத்தி லுண்டாகின்றன. ஒன்று மற்றொன்றற்குக் காரணமன்று. ஆனால் பசு, கன்று, ஸ்திரீ முதலியவற்றிற்கு அவித்தையே உபாதானமாம். அதுபோல் ஜாக்கிரத்திலும் சில வெகுகாலமிருக்கும் காரணரூபமாகவும், சில சொற்பகாலமிருக்கும் காரியரூபமாகவும் சொப்பனத்திற்போலத் தோற்று கின்றன. எதுவும் எதற்கும் பரஸ்பரம் காரியகாரண மன்று; ஆனால் யாவும் சாக்ஷாத் அவித்தையின் காரியங்களாம்.

**327.** சுருதியில் கிரமமாகச் சிருஷ்டி சொல்லப்பட்டிருக்கிறது. அங்குச் சிருஷ்டியைக் கூறுதலில் சுருதிக்கு அபிப்பிராயமின்று. ஆனால் அத்துவைத த்தைப் போதித்தலில் அபிப்பிராயமாம்.

எல்லாப் பதார்த்தங்களும் பரமாத்மாவினின்று முண்டாயிருக்கின்றன. ஆதலால் அவை அதன் விவர்த்தமாம். எது எதன் விவர்த்தமாயிருக்கிறதோ, அது அதன் சொரூபமாகவே யிருக்கிறது. ஆதலால் சகல நாமரூபங்களும் பிரஹ்மத்துக்கு வேறுகாமல் பிரஹ்மமாகவே யிருக்கின்றன என்னும் அர்த் தத்தைப் போதிப்பதற்காகச் சிருஷ்டி சொல்லப்பட்டது. சிருஷ்டிக்கு வேறு பிரயோசன மில்லை.

அங்குக் கிரமசிருஷ்டி சொன்னது ஸ்தூலதிருஷ்டியுடையவனுக்கு விபரீதக்கிரமமாக லயசிந்தனை செய்யும்பொருட்டாம். அதற்கும் அத்துவைத போதமே பிரயோஜனமாம். ஆதலால் கிரமமாகச் சொல்லுவதிலும் அபிப்

பிராயமில்லை. சிருஷ்டியில் கிரமமில்லை. ஆனால் எல்லாம் ஒரே அவித்தையி னின்று உண்டாயிருக்கின்றன. அவற்றிற்குப் பரஸ்பரம் காரியகாரணத் தன் மையும் முற்பிற்றன்மையும் அவித்தையாலாகிய சொப்பனம்போல் மித்தை யாகத் தோற்றுகின்றன. சுருதி அவற்றிற்குத் தம்மில் காரியகாரணத்தன்மை யும் பூர்வ உத்தரத் (முன்பின்) தன்மையும் சொல்லியிருக்கிறது. அது லய் சிந்தனையின் பொருட்டுச் சொல்லப்பட்டிருக்கிறது. எப்படிச் சொரூபமோ அப்படியே தியான மிருக்கவேண்டு மென்னும் நியமம் தியானத்திலில்லை.

ஆதலால் ஜாக்கிர பதார்த்தங்களுக்குத் தம்மில் காரணகாரியத்தன்மை யில்லை.

## 328. திருஷ்டி சிருஷ்டிவாதத்தின் அங்கீகாரம்.

ஆனால் சகல பதார்த்தங்களும் சாக்ஷாத் அவித்தையின் காரியங்களாம். கிளிஞ்சில் வெள்ளிபோலவும் சொப்பனம்போலவும் அவித்தையின் விருத்தி யுபஹித சாக்ஷியினால் அவற்றின் பிரகாச முண்டாகிறது. ஆதலால் சகல பதார் த்தங்களுஞ் சாக்ஷிபாஸியங்களாம்.

அவித்தையின் ஞானகார ஞேயாகார பரிணாமங்கள் ஒரே காலத்தில் உண்டாகின்றன; கூடவே நஷ்டமாகின்றன. ஆதலால் எப்போது பதார்த்தம் தோற்றுகிறதோ அப்போதுதான் தோற்றத்திற்கு விஷயமான பதார்த்தம் உண்டாகிறது. வேறுகாலத்தில் பதார்த்த முண்டாகிறதில்லை. இதனையே * திருஷ்டிசிருஷ்டிவாத மென்பர்.

இந்தப் பக்ஷத்தில் பதார்த்தங்களுக்கு அஞ்ஞாதசத்தை (அறியப்படாத இருப்பு) இல்லை, ஞாதசத்தை (அறியப்பட்ட இருப்பு) இருக்கிறது. அத்வைத வாதத்தில் இது சித்தாந்த பக்ஷம். இந்தப் பக்ஷத்தில் இரண்டு சத்தைகளிருக் கின்றன; மூன்றில்லை. ஏனெனின், அநாத்மபதார்த்தங்களெல்லாம் சொப்பனம் போல் பிராதிபாஸிகமா யிருக்கின்றன. தோற்றுங்காலத்தினும் வேறாகிய காலத்தில் அநாத்மாவுக்குச் சத்தை யில்லை. ஆகையால் மூன்றாவதான வியாவ காரிகசத்தை யில்லை.

இந்தப்பக்ஷத்தில் அநாத்ம பதார்த்தங்களெல்லாம் சாக்ஷிபாஸியமாயிருக் கின்றன. பிரமாதாப் பிரமாணங்களுக்கு விஷயம் யாதொன்றும் இல்லை. ஏனெனின், அந்தக்கரண இந்திரியங்களும் அங்ஙனமே கடாதிகளுமாகிய சகலத் திரிபுடிகளும் ஞானமும் சொப்பனம்போல் ஒரே காலத்தில் உண்டா கின்றன.

---

* திருஷ்டி என்பது அவித்தியாவிருத்திரூப ஞானம். அது உண்டாகும் சமயத்தி லேயே சிருஷ்டியை அதாவது பிரபஞ்சத்தின் உற்பத்தியைச் சொல்லுவது திருஷ்டி சிருஷ்டிவாத மெனப்படும். இதனையே அஜாதவாத மென்றும் கூறுவர்.

அவற்றிற்கு விஷயவிஷயித்தன்மை பொருந்தாது. கடாதிவிஷயமும் நேத்திராதி இந்திரியங்களும் அந்தக்கரணமுமாகிய இவை ஞானத்துக்குமுன் இருக்குமாயின், நேத்திராதிவாயிலாக அந்தக்கரணத்தின் விருத்திரூபஞானம் பிரமாணஜந்நியமாம். அந்த அந்தக்கரணம் இந்திரியம் விஷயம் என்னும் மூன்றும் ஞானத்துக்கு முற்காலத்திலில்லை. ஆனால் ஞானசமகாலத்திலேயே சொப்பனம்போல் திரிபுடி யுண்டாகின்றது. ஆதலால் திரிபுடியாற்றோன்றும் ஞானம் எதுவுமில்லை. அங்ஙனமாயினும், சொப்பனம்போல் ஞானத்தில் திரிபுடியாற் றோன்றுந்தன்மை தோற்றுகிறது. ஆகையால் ஜாக்கிரபதார்த்தங்கள் சாக்ஷிபாஸ்யமா (சாக்ஷியால் விளக்கப்படுவனவா)ம். பிரமாணஜந்நியஞானத்திற்கு விஷயமன்று. இதனாலும் ஜாக்கிரபதார்த்தம் சொப்பனத்திற்குச் சாமானமாக மித்தையாம்.

அல்லது,

1. ஜாக்கிரத்தில் சிலபதார்த்தங்கள் மித்தியாரூபமாகவும்,

2. சில சத்தியரூபமாகவும் அறியப்படுகின்றன.

(1) அநாதிகாலத்துப் பொருள்க ளிருக்கின்றன. அவற்றுள் சில நஷ்டமாகின்றன. அவற்றிற்குச் சமானமாய்ச் சில வுண்டாகின்றன. இவ்விதமாகப் பிரபஞ்சதாரை ஒருகாலத்திலும் நாசமடைகிறதில்லை.

(2) எவனுக்கு ஞானமுண்டாகிறதோ அவனுக்குப் பிரபஞ்சம் தோற்றுகிறதில்லை. மற்றவர்களுக்குப் பிரபஞ்சம் தோற்றுகிறது.

(3) அந்த ஞானத்துக்கு வேதமும் குருவும் சாதனங்களாம். அவற்றால் பரமசத்தியம் அடையப்படுகிறது.

இவ்விதத் தோற்றம் ஜாக்கிரத்தி லுண்டாகிறது. அங்கு,

1. சிலபதார்த்தங்களில் மித்தியாத்தன்மை,

2. சிலவற்றில் நாசம்,

3. சிலவற்றில் உற்பத்தி,

4. வேதகுருக்களால் பரமபுருஷார்த்தப்பிராப்தி என்னும்

இவையாவும் அவித்தையாலாகிய சொப்பனம்போல் மித்தையா யிருக்கின்றன.

வாஸிஷ்டத்தில் இவ்வாறு அநேக இதிஹாஸங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

1. க்ஷணமாத்திர சொப்பனத்தில் வெகு * கற்பகாலம் தோற்றுகிறது.

2. ஜாக்கிரம்போல் நிலையுடைய பதார்த்தம் தோற்றுகிறது.

3. அவற்றால் வெகுகாலபோக முண்டாகிறது.

ஆதலால் ஜாக்கிரபதார்த்தங்களுக்குச் சொப்பனபதார்த்தங்களினும் சிறிதும் விலக்ஷணத்தன்மை (வேற்றுமை) யில்லை. ஆனால் ஆத்மாவுக்கு வேறான யாவும் † மித்தையாம்.

---

* கற்பகாலநிர்ணயம்:—

| | | | |
|---|---|---|---|
| 15 | கண்ணிமைப்பொழுதுகொண்டது | | காஷ்டை 1 |
| 30 | காஷ்டை | ... | கலை 1 |
| 30 | கலை | ... | முகூர்த்தம் 1 |
| 30 | முகூர்த்தம் | ... | இராப்பகலுள்ள நாள் 1 |
| 15 | நாள் | ... | பக்ஷம் 1 |
| 2 | பக்ஷம் | ... | மாதம் 1 |
| 2 | மாதம் | ... | இருது 1 |
| 3 | இருது | ... | அயனம் 1 |
| 2 | அயனம் | ... | வருஷம் 1 |
| 1,728,000 | வருஷம் | ... | கிருதயுகம் 1 |
| 1,296,000 | ... | ... | திரேதாயுகம் 1 |
| 864000 | ... | ... | துவாபரயுகம் 1 |
| 432000 | ... | ... | கலியுகம் 1 |
| 4,320,000 | ... அல்லது | | 4 யுகம் சேர்ந்தது மகாயுகம் 1 |
| 306,720,000 | ... | ... 71 மகாயுகம் | ... ஒரு மனுவின் காலம் |
| 4,294,080,000 | ... | ... 994 ... | ... 14 மனுக்களின் காலம் |
| 25,920,000 | ... | ... 6 ... | ... சந்திகள் 2 [வின் பகல். |
| 4,320,000,000 | ... | ... 1000 ... | ... கல்பம் அல்லது பிரஹ்மா |
| 8,640,000,000 ஞு | | கொண்டது பிரஹ்மாவின் நாள் 1 | |
| 3,110,400,000,000 ஞு | | ... ... | ஞு 1 |
| 311,040,000,000,000 ஞு | | ... பிரஹ்மாவின் ஆயுள் அல்லது மஹாகல்பம். | |

† இது திருஷ்டிசிருஷ்டிவாதத்தின் நிச்சயமாம். இந்தப்பக்ஷம் பிருஹதாரணிய உபநிஷத்தின் சங்கரபாஷியத்திலும் வார்த்திகத்திலும் சங்கரபாஷிய ஆநந்தகிரி வியாக்கியானங்களோடு கூடிய மாண்டூக்கிய உபநிஷத்தின் காரிகையிலும் வாசிஷ்டத்திலும் வேதாந்தமுக்தாவலியிலும் விருத்திப்பிரபாகரத்தின் எட்டாவது பிரகாசத்திலும் ஆத்மபுராணத்திலும் அத்வைதசித்திமுதலிய கிரந்தங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது. எவர்களுக்கு விசேஷவிருப்ப மிருக்கிறதோ அவர்கள் அங்குக் காண்க. ஆனால் "வீட்டின் மூலையில் தேனிருக்கப் பர்வதத்திற்குப்போதல் எதன்பொருட்டு?" என்னும் நியாயத்தால் எந்த ஜிஞ்ஞாஸுவுக்கு இந்த நூலிற்றானே இந்தத் திருஷ்டிசிருஷ்டிவாதமாகிய உத்தமசித்தாந்தத்தின் ஞானமுண்டாகிறதோ, அவன் வேறு அநேக நூல்களைப் பார்ப்பதற்குப் புத்தியின் விநோதத்தைத்தவிர வேறு பிரயோஜனமில்லை.

### 329. பிரசினம்:—சொப்பனம்போற் சொற்பகாலம் நிலைத்திருப்பது சம்சாரமாயின் அநாதிகாலத்துப் பந்தமுண்டாகாது. பந்த நிவிருத்தி வடிவ மோக்ஷத்தின் பொருட்டுச் சிரவணாதி சாதனங்கள் நிஷ்பலமாகுமெனல்.

சிஷ்யன் கேட்கலாயினான்:—ஈசுவரசிருஷ்டி அநந்தகற்பமாக அநாதியாயிருக்கிறது. அதில் ஞானி முக்தனாகிறான்; அஞ்ஞானிக்குப் பந்த மிருக்கிறது.

ஜாக்கிரம் சொப்பனசமானமாகுமாயின், சொப்பனம் ஒரு க்ஷணம் அல்லது ஒரு நாழிகை அல்லது ஒரு சாமம் இருக்கிறதுபோல், சமுசாரமும் ஒரு க்ஷணம் அல்லது ஒரு நாழிகை அல்லது ஒரு சாமம் அல்லது கொஞ்சம் அதிக காலம் இருக்கும்.

1. சொப்பனம்போல் சமுசாரம் சொற்பகால மிருப்பதாயின் அநாதி காலத்துப் பந்த மாகாது.

2. பந்தநிவிருத்தி வடிவ மோக்ஷத்தின் பொருட்டுள்ள சிரவணாதி சாதனங்கள் நிஷ்பலமாய்விடும்.

[குரு சொல்லலாயினார்:—] முற்கூறிய சித்தாந்தத்தில்,

1. பந்தம் மோக்ஷம் * வேதம் குரு என்பவை அங்கீகரிக்கப்படவில்லை.

* இங்கு இது அபிப்பிராயமாம்:—இந்தத் திருஷ்டிசிருஷ்டிவாதத்தில் ஒரு ஜீவனது அங்கீகாரத்தால் அந்நிய ஜீவவடிவ குரு அல்லது சிஷ்யனது அங்கீகாரமில்லை. ஆனால் சொப்பனத்திலுள்ள ஒரு முக்கிய ஜீவனுக்கு வேறான மற்ற ஜீவாபாஸர்களைப் போல் அந்நிய ஜீவாபாஸர்கள் தோற்றுகிறார்கள். அங்ஙனமே ஆபாஸவடிவமாய்க் குரு சிஷ்யர்கள் இருக்கிறார்கள். அந்தக் குருவினிடத்து ஈசுவரத்தன்மையோடு பக்தி செய்யப்படுகிறது. அதுவும் சொப்பன குருவின் பக்தியைப்போல மித்தையாம் (பிராதிபாஸிகசத்தையுடையதாம்). இந்தப் பக்ஷத்தில் ஜீவன் ஈசுவரன் முதலிய ஆறுபதார்த்தங்களைச் சொரூபமாக அநாதியென்று கொண்டிருக்கிறார்கள். அவற்றினிடையில்,

1. பிரஹ்மத்திற்குப் பாமார்த்திகசத்தை யிருக்கிறது.

2. பிரஹ்மத்திற்கு வேறான பிரபஞ்சத்திற்கு வியாவகாரிகசத்தை யிருக்கிறது.

3. மற்றப் பிரவாகரூபமாய் அநாதியாயுள்ள சகல காரியப்பிரபஞ்சத்திற்கும் பிராதிபாஸிகசத்தை யிருக்கிறது.

ஆதலால் பின்பின் அத்தியாசத்திற்குக் காரணமான முன்முன் அத்தியாசத்தின் ஞானத்தாற்றோன்றும் வாசனையின் ஆசிரயவடிவ அவித்தை யிருத்தலாலும் ஈசுவரனிருத்தலாலும், க்ஷணிகவிஞ்ஞானவாதத்தின் பிராப்தி அல்லது அநீசுவரவாதத்தின் பிராப்தி முதலிய தோஷமில்லை. இவ்வர்த்தத்தை அத்வைதசித்தியில் மதுசூதனஸ்வாமிகள் எழுதியிருக்கின்றார்கள். இவ்வார்த்தை ஜீவனது பிரசங்கத்தாற் சொல்லப்பட்டது.

2. ஆனால் சேதனம் நித்தியமுக்தமா யிருக்கிறது.

3. அவித்தையின் பரிணாமங்கள் சேதனத்தில் நாநாவிவர்த்த மாகின்றன. அதனால் ஆத்மசொரூபத்திற்குச் சிறிதும் ஆனியில்லை.

4. ஆத்மா எப்போதும் அசங்கமாயும் ஏகரஸமாயு மிருக்கிறது.

5. இன்றையவரையில் ஒருவனும் முக்தனானதில்லை; மேலும் ஆவதில்லை. ஆனால் சேதனம் எப்போதும் முக்தமாகவே யிருக்கிறது.

6. அவித்தைக்கும் அதன் பரிணாமத்துக்கும் சேதனத்தோடு எந்தக் காலத்திலும் சம்பந்த மில்லை. ஆதலால் பந்தம், வேதம், குரு, சிரவணாதிகள், சமாதி, மோக்ஷம் என்பவற்றின் பிரதீதியும் சொப்பனம்போல் அவித்தியா ஜந்நியமாம். ஆதலால் மித்தையாம்.

7. இவற்றில் வெகுகாலநிலையுடைமையும் அவித்தியாஜந்நியமாம்.

அங்ஙனமாயினும், இது சித்தாந்தத்தை யறியாமல் ஸ்தூலதிருஷ்டியால் கேட்ட கேள்வியாம்.

## (அக்கிருததெய்வ [இச்சையின்றிய ஆத்மதெய்வ]த்தின் சொப்பனம் 330–452).

### (சென்ற பிரசினத்தின் உத்தரம் 330–338).

### 330. அக்கிருததேவனுக்குச் சொப்பனம்தோற்றுதல் (330–331).

குருவாக்கியம்:—சிஷ்யனே! நித்திராதோஷத்தினால் சொப்பனத்தில் அத்தியாபகன் (ஓதுவிப்போன்), அத்தியயனம் (ஓதல்), வேதம், சாஸ்திரம், புராணம், தர்மசாஸ்திரம், அத்தியயனம் செய்வோன், கர்மம், அதன் பலம் என்பன பிரதீதியாகின்றன. அவ்வெல்லாப் பதார்த்தங்களிலும் சத்தியத்தன்மையின் பிராந்தி யுண்டாகிறது. அங்ஙனமாயினும், அச்சொப்பனத்தின் சகல பதார்த்தங்களும் மித்தையா யிருக்கின்றன. அதுபோல ஜாக்கிரத்தின் சகல பதார்த்தங்களும் மித்தையா யிருக்கின்றன. அவை சத்தியமாகத் தோற்றுவது பிரமமாம். உனக்கு நான் குருவாகத் தோற்றிப் பந்தத்தைநாசஞ் செய்யும் வேதார்த்தவுபதேசத்தைச் செய்தல் எதுவோ அது உனக்குமித்தையாகத் தோற்றுகிறது.

எப்படி அக்கிருததேவனுக்குச் சொப்பனத்தில் மித்தியாப்பிரதீதிக்கு விஷயங்களான குருவேதாதிகள் அநிர்வசநீயமாயுண்டாயினவோ, அப்படி உன் தோற்றத்தில் நான்முதலாகச் சகலமும் அநிர்வசநீயமித்தையா யிருக்கின்றன.

331. அந்த * அக்கிருதேவனுக்கு இவ்வாறு சொப்பன முண்டாயிற்று:—ஓர் அக்கிருதனென்னும் தேவதை அநாதிகாலத்து உறக்கத்தில் தூங்குவதாய்ச் சொப்பன (சம்சார)த்தைக் கண்டது. அச்சொப்பனத்தில் அப்புருஷனுக்கு இத்தோற்ற முண்டாயிற்று:—

1. நான் சண்டாளன் (தேகமிரண்டின் அபிமானியாகிய ஜீவன்).

2. மகா துக்கியா யிருக்கிறேன்.

3. எலும்பு, மஜ்ஜை, இரத்தம், தோல், மாமிசம், மேதை, வீரியம் என்னும் ஏழு தாதுக்களால் என் முகம் நிறைந்திருக்கிறது.

4. மகாகோரமும் பயங்கரமுமான பாம்பு, யானை முதலியவைகளால் நிறைந்திருக்கிற வனத்தில் (சம்சாரத்தில்-ஜகத்தில்) நான் திரிகிறேன்.

அந்தத் தேவதையாகிய யான் திரிந்துகொண்டு அவ்வனத்தில் வெகு இடங்களைப் பார்க்குங்கால்,

1. சில † விடங்களில் அனேக பயங்கரமான பிராணிகள் பக்ஷிக்க எதிரில் ஓடிவருகின்றன.

2. சிலவிடங்களில் பீறிட்டு இரத்தம் நிறைந்த தொட்டிகளில் விழுந்த பிராணிகள் ஹாஹாகார சப்தங்களைச் செய்கின்றன.

3. சிலவிடங்களில் பழுக்கக்காய்ச்சிய இருப்புத்தூண்களிற் கட்டப்பட்டுச் சிலர் அலறுகிறார்கள்.

4. சிலவிடங்களில் சுடுமணல் வழியாய்க் காலில் ஒன்றுமில்லாமல் சிலர் போகிறார்கள். அவர்களை ராஜாவின் சேவகர்கள் இருப்புத்தடியால் அடிக்கிறார்கள். இவ்விதமாக,

---

* கிருதா (ஓர்யா) என்பது இச்சை; அஃதின்றிய தேவன் (ஜெவஃ) என்பது சொப்பிரகாசம்; இப்படிப்பட்ட சுத்தசேதனம் அக்கிருதேவனென்னும் சொல்லின் இரகசியப்பொருளாம். அதற்கு ஜாக்கிர சொப்பனவடிவ விலக்ஷணத்தன்மையின்றிய அநாதிநித்திரையாற் கற்பிக்கப்பட்ட இத்தோற்றுகின்ற பிரபஞ்சவடிவ சொப்பன முண்டாயிருக்கிறது. அப்பிரபஞ்சத்திற்கு விலக்ஷணத்தன்மையின்மையால் ஜாக்கிரமுதலிய அவஸ்தைக்குப் பேதமில்லை. ஆதலால் அந்த ஒரே பிரபஞ்சத்திற்குத் திருஷ்டாந்தவடிவத்தன்மையும் தார்ஷ்டாந்தவடிவத்தன்மையும் பொருந்தாதாயினும், கிரந்தகாரர் அவ்வார்த்தையை இரகசியமாய்வைத்து ஒரே சேதனத்தில் திருஷ்டாந்த தார்ஷ்டாந்தத்தை ஆரோபஞ்செய்திருக்கிறார். இவ்விரகசியார்த்தத்தை யாம் மேலும் டிப்பணியில் பிரசங்கத்தால் அங்கங்கு வெளிப்படுத்துவாம்.

† இங்கிருந்து நரகவர்ணனை.

1. அனேக பயங்கரமான இடங்களைத் தான் பார்க்குங்கால்,

ஒருகாலத்தில் தானும் அபராதஞ்செய்து அதனால் சொப்பனத்தில் அந்தத் துக்கங்களை யடைந்தவனானான்.

* சிலவிடங்களில் திவ்வியமான ஸ்தலங்களைப் பார்க்குங்கால்,

1. அவ்விடங்களி லுத்தமமான தேவதைகள் விளங்குகிறார்கள்.

2. அத்தேவர்களது திவ்வியபோகங்க ளிருக்கின்றன.

3. அமிர்தத்தைப் பார்த்தல்மாத்திரத்தால் அவர்களுக்குத் திருப்தி யிருக்கிறது.

4. அவர்களுக்குப் பசி தாகங்களாற் பீடையுண்டாகிறதில்லை.

5. மல மூத்திரங்களின்றிச் சரீரம் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது.

6. உத்தமமான விமானத்திலிருந்துகொண்டு சிலர் ரமிக்கிறார்கள். அந்த விமானங்கள் அவர்களிஷ்டப்படி போகின்றன.

7. சிலவிடங்களில் அரம்பை ஊர்வசிமுதலிய அப்ஸரஸ்திரீகள் நாட்டியமாடுகிறார்கள். அவர்கள் அங்கமுழுவதும் தோஷமில்லாததா யிருக்கிறது. ஸ்திரீகளெல்லாம் சகல † குணங்களு முடையவர்களா யிருக்கிறார்கள்.

8. அவர்கள் சரீரத்தினின்றும் காமத்தைப் பிரகாசிப்பிக்கும் உத்தமமான சுகந்தம் வருகிறது. சிலவிடங்களில் அவர்களோடு தேவர்கள் ரமிக்கிறார்கள்.

9. தானும் (அக்கிருததேவனும்) ஒருகால் தேவத்தன்மையை யடைந்து அவர்களோடு வெகுகாலம் திவ்விய ஸ்தானங்களில் ரமிக்கிறான்.

10. ஒருகால் அந்தத் தெய்வப்பெண்களோடு திவ்விய ஸ்தானங்களில் ரமிக்கின்றவனாய்த் தற்செயலாய் (புண்ணியம் நசித்துப் பாபமாகிய அதிருஷ்டமுதயமாகவே) இரத்த மலங்கள் நிறைந்த குழிகளில் முழுகுகிறான்.

ஓரிடத்தில் எல்லோருக்கும் அதிபதியான புருஷன் (தர்மராஜன்-யமன்) இருக்கிறான். அவன் உத்தரவின்படி நடக்கிறவர் (யமதூதர்)கள் அவன்முன் நிற்கிறார்கள்.

1. சிலரு(புண்ணிய புருஷர்களு)க்கு அந்த அதிபதியும் அவன் சேவகர்களும் சாந்தரூபமாய்த் தோற்றுகிறார்கள்.

---

* இங்கிருந்து சுவர்க்கவர்ணனை.

† காவிய அலங்காராதி சாகித்திய கிரந்தங்களில் சொல்லப்பட்ட ஸ்திரீகளின் அழகுமுதலிய 32 குணங்களோடு கூடியவர்கள்.

2. சிலரு (பாபிகளு)க்கு மகா பயங்கரரூபமாய்த் தோற்றுகிறார்கள்.

3. அவ்வனத்திலிருக்கிறவர்களுக்குக் கர்மானுசாரமாய்ப் பலனைக்கொடுக்கிறார்கள்.

இவ்விதமாக அக்கிருததேவன் சொப்பனத்தில் அநேக இடங்களைப் பார்த்தான்.

1. வேறு சிலவிடங்களில் பிராமணர்கள் வேதபாராயணஞ் செய்கிறார்கள்.

2. சிலவிடங்களில்* யாகசாலைகளில் உத்தமமான கர்மஞ் செய்கிறார்கள்.

3. சிலவிடங்களில் உத்தமமான நதி ஓடுகிறது. அதில் புண்ணியத்தின் பொருட்டு ஜனங்கள் ஸ்நானம் பண்ணுகிறார்கள்.

4. சிலவிடங்களில் ஞானிகளாகிய ஆசாரியர்கள் சிஷ்யர்களுக்குப் பிரஹ்ம வித்தையை யுபதேசிக்கிறார்கள். அந்தப் பிரஹ்மவித்தையை யடைந்து அவ்வனத்தினின்றும் அவர்கள் வெளிப்பட்டுப் போய்விடுகிறார்கள்.

இவ்விதமாகச் சொப்பனத்தில் அக்கிருததேவன் க்ஷணமாத்திரத்தில் அனேக ஆச்சரியமான பதார்த்தங்களை அவ்வனத்தில் பார்த்தான். அவனுக்குச் சொப்பனத்தில் மறுபடியும் இவ்வாறு தோற்றியது. அதாவது,

1. வெகுகாலமாய் நான் இந்த வனத்தி லிருக்கிறேன்.

2. இந்த வனத்திற்கு ஒருகாலும் நாசம் வருகிறதில்லை.

3. (1) ஒருகாலத்தில் † பகவானுடைய நான்கு முகங்களினின்றும் ‡ அனேக பீஜங்கள் வெளியேவர அவ்வனம் அவரால் சிருஷ்டிக்கப்படுகிறது.

(2) ¶ ஜலம் பாய்ச்சுவதால் அவ்வனம் பரிபாலிக்கப்படுகிறது.

(3) ஒருகால் அவருடைய கோரமான ஹாஸியத்தால் (சிரிப்பினால்) அவர் முகத்தினின்றும் அக்கினி புறப்பட்டு அவ்வனத்தைத் தாகம் (பிரளயம்-சங்காரம்) செய்கிறது.

---

* இங்கிருந்து மிருத்திய (பூ) லோகத்தின் (அதிலுள்ள பரதகண்டத்தின்) வர்ணனையாம்.

† பிரஹ்மா விஷ்ணு சிவரூபங்களால் ஜகத்தின் உற்பத்தி ஸ்திதி சங்காரங்களின் கர்த்தாவாகிய ஈசுவரன்.

‡ ஜீவர்களது பரிபக்குவமாகிய அதிருஷ்டம்.

¶ கர்மானுசாரமாகச் சுகதுக்கங்களின் அனுபவமாகிய போகத்தைக் கொடுப்பதனால்.

4. வனத்தின் உற்பத்தியுடன் எனது உற்பத்தி யுண்டாகிறது. வனம் தகிக்கப்படும்போது நானும் தகிக்கப்படுகிறேன்.

5. வனம் முழுவதையும் தகித்து அந்த ஈசுவரன்மாத்திர மிருக்கிறார்.

6. அவர் சரீரத்தில் வனத்தின் பீஜம் தங்குகிறது.

இத்தோற்றம் சொப்பனத்திலேயே அந்த அக்கிருததேவனுக்குச் சொப்பன வேதசிரவணத்தினு லுண்டாயிற்று.

## 332. அக்கிருததேவன் சொப்பனத்தில் குருவைச் சந்தித்தல்.

அப்போது தனக்கு அடிக்கடி ஜனனமரணங்க ளுண்டாவதைக் கேட்டு அக்கிருததேவன் விசாரித்தான்:—

1. எவ்விதமாக நான் இவ்வனத்தைவிட்டு வெளிப்படுவேன்.

2. அப்படி வெளிப்படாவிட்டாலும் எப்படி எனது இச்சண்டாளத்துவம் (ஜீவத்தன்மை) போய்த் தேவபாவம் (பிரஹ்மத்தன்மை) எப்போது மிருக்கும்.

3. வனத்துக்கு வெளியேபோக வேறு உபாயமில்லை. பிரஹ்மவித்தையை யுபதேசிக்கிற ஆசாரியர் தம் சிஷ்யர்களை வனத்துக்கு வெளியே கொண்டு போகிறார்.

இப்படி விசாரித்து அந்த அக்கிருததேவன் சொப்பனத்திலேயே ஆசாரியனை யடைந்தான். அந்த விதிபூர்வகமாய் அடைந்த சிஷ்யனுக்கு ஆசாரியர் தேவவாக்குரூபமான மித்தியா கிரந்தத்தை யுபதேசிக்கலாயினர்.

## 333. மித்தியா ஆசாரியர் மித்தியா சிஷ்யனுக்கு மித்தியா சம்ஸ்கிருத கிரந்தத்தால் உபதேசித்தலும், கிரந்தத்தின் மங்கலாசரணமும். ௩௩௩-௩௩௮.

மித்தியாசாரியரால் மித்தியா சிஷ்யனுக்கு உபதேசிக்கப்பட்ட * சம்ஸ்கிருதகிரந்தம் மொழிபெயர்க்கப்படுகிறது.

---

* இங்கே சம்ஸ்கிருத கிரந்தம் என்பதனுல் யாதேனுமோர் அக்கிருததேவனது திருஷ்டாந்தத்தோடு கூடிய சம்ஸ்கிருத கிரந்தம் கிரஹிக்கத்தக்கதன்று. ஆனுல் இந்த (விசாரசாகர) கிரந்தத்திற்கு மூல (ஆதார) மான அனேக சம்ஸ்கிருத கிரந்தங்கள் கிரஹிக்கத்தக்கனவாம்.

சமஸ்கிருத கிரந்தத்தை மொழிபெயர்ப்பதில் முதலில் மங்கலம் செய்கிறார். ஏனெனின்,

1. மங்கலம் செய்வதினால் கிரந்தம் முடிதற்குப் பிரதிபந்தமாயுள்ள விக்கினங்கள் நாசமாகின்றன. விக்கினம் என்பது பாபத்திற்காம். பாபத்தினால் சுபகாரியம் முடிவுபெறுகிறதில்லை. அந்தப் பாபங்கள் மங்கலத்தால் நாசமாகின்றன.

2. பாபமற்றவனும் கிரந்தாரம்பத்தில் மங்கலம் அவசியம் செய்யவேண்டும். ஏனெனின், கிரந்தாரம்பத்தில் மங்கலஞ் செய்யாவிட்டால் கிரந்தகர்த்தாவினிடத்தில் புருஷர்களுக்கு நாஸ்திகப்பிராந்தி யுண்டாய்க் கிரந்தத்திற் பிரவிருத்தி யுண்டாகாது.

அம்மங்கலம் மூவகைத்து:—1. வஸ்துநிர்த்தேசரூபம், 2. நமஸ்காரரூபம், 3. ஆசீர்வாதரூபம்.

சகுண அல்லது நிர்க்குணமான பரமாத்மா வஸ்து எனப்படும். அதன் கீர்த்தனமே வஸ்துநிர்த்தேச மெனப்படும். தன்னுடைய அல்லது சிஷ்யனுடைய வாஞ்சித (இஷ்ட) வஸ்துவைப் பிரார்த்திப்பது ஆசீர்வாத ரூபமங்கல மெனப்படும். அந்தத் தனது இஷ்டவஸ்துவின் பிரார்த்தனமும் சிஷ்யனது இஷ்டவஸ்துவின் பிரார்த்தனமும் பின் வருகின்றன.

**334**. புராணத்தில் கணேசனுக்கும் தேவிக்கும் ஈசுவரத்தன்மை பிரசித்தமாயிருக்கிறது. ஆகையால் அநீசுவரசிந்தனையில்லை. புராணத்தில் கணேசனுக்குச் சொல்லப்பட்ட ஜன்மம் ஜீவர்கள் ஜன்மம்போல் கர்மபலனல்ல; ஆனால் ராமகிருஷ்ணாதிகள்போல் பக்தர்களை யநுக்கிரகிக்கப் பரமாத்மாவின் ஆவிர்ப்பாவமே யென்பது வியாஸபகவானுடைய மேலான அபிப்பிராயம்.

இந்தவிடத்தில் இது இரகசியமாம்:—பரமார்த்த திருஷ்டியால் ஜீவனும் பரமாத்மாவைவிட வேறன்று. ஆனால் எந்த ஜனனமரணாதிபந்தங்களின் அத்தியாஸம் ஆத்மாவிலுளதோ, அது ஜீவனுடைய ஜீவத்தன்மையாம். அந்த ஜன்மாதிபந்தம் கணேசாதிகளுக்கு ஆத்மாவில் (தம்மிடத்தில்) பிரதீதியாகிறதில்லை. ஆகையால் அவர்கள் ஜீவர்களல்லர். இவ்வாற்றால் கணேசாதிகளுக்கு ஈசுவரத்தன்மை யுண்டு. அதனால் கிரந்தாரம்பத்தில் அவர்களைச் சிந்தித்தல் தகுதியாம்.

ஈசுவரனுக்கு நாநாரூபம் சொன்னது * எல்லோருக்கும் ஈசுவரத்தன்மையை விளக்குதற்பொருட்டாம்; ஈசுவரபக்தியும் குருபக்தியும் வித்தியாப்பிராப்திக்கு முக்கியசாதனங்களா மென்னும் அர்த்தத்தையும் விளக்குதற்பொருட்டாம்.

## 335. நிர்க்குணவஸ்து நிர்த்தேசவடிவமங்கலம்.

வியாபகமாயும் சத்தியமாயுமிருக்கிற எதன் பிரகாசத்தால் சூரிய சந்திரர்கள் பிரகாசிக்கிறார்களோ, அந்தப் புத்திக்குச் சாக்ஷியாகிய நான் சுத்தஸ்வரூபமாகவும் பூர்ணாநந்தரூபமாகவும் இருக்கிறேன்.

## சகுணவஸ்து நிர்த்தேசரூபமங்கலம்.

ஸ்ரீ கணபதியின் பெயர் விக்கினங்களை அடியோடு நாசம்பண்ணுகிறது. அவரைச் சிந்திக்காவிடின் தேவதைகளுடைய இச்சைகளுஞ் சித்திக்கிறதில்லை. † திரிபுரவதத்தில் இந்த விஷயம் பிரசித்தமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது.

## நமஸ்காரரூபமங்கலம்.

அசுரர்களைச் சங்கரிக்கிறவர்களாயும் பக்தர்களை யெப்போதும் பரிபாலிக்கிறவர்களாயுமிருக்கிற லக்ஷ்மீபதியான மகாவிஷ்ணுவையும் பார்வதிபதியான பரமசிவனையும் நமஸ்கரிக்கிறேன்.

## தான் கருதியதைப் பிரார்த்தித்தல்வடிவ ஆசீர்வாதரூப மங்கலம்.

எந்தச் சக்தியின் பலத்தால் ஈசுவரன் சிருஷ்டிக்கிறாரோ அந்தச் சக்தி இந்தக் கிரந்தம் முடியும்பொருட்டு என் வாக்கிலிருக்கப் பிரார்த்திக்கிறேன்.

## சிஷ்யன் கருதியபொருளைப் பிரார்த்தித்தல்வடிவ மங்கலம்.

பந்தத்தை நீக்கிச் சுகத்தைத் தரும் தீனதயாளுவான தாதுகுரு இந்தக் கிரந்தத்தைப் படிக்கின்றவர் கேட்கின்றவர்களது ஜன்மாதிதுக்கத்தை நிவர்த்திப்பாராக.

---

* கணேசன், விஷ்ணு, சிவன், தேவி, ஆசாரியர் என்னும் இவர்களுக்கும்.

† மயதானவனு லாக்கப்பட்ட முப்புரத்தின் நாசத்தில் பிரவர்த்திக்க மகாதேவனுக்கு எப்போது வெற்றியுண்டாகவில்லையோ, அப்போது அவர் எல்லாத் தேவர்களோடும் விக்கினராஜராகிய கணேசரைப் பூஜித்தார். அதனால் மகாதேவரது வெற்றிவாயிலாகத் தேவர்களது காரியமாகிய நிர்ப்பயத்தன்மை சித்தித்தது என்னும் பிரசங்கம் புராணங்களிற் பிரசித்தம்.

## 333. * வேதாந்தசாஸ்திர கர்த்தாவாகிய † ஆசாரிய (ஸ்ரீ வேத வியாஸ)ரை ‡ நமஸ்கரித்தல்.

(1) காற்றானது (2) வனத்தில் வீசி, மரங்களை யசைத்து, (3) அவற்றின் முட்களை விரித்து, (4) அழகிய (5) தாமரைப்புஷ்பங்களைத் (6) தமது தானங்களினின்றும் பறித்து, (7) முட்களிற் சுழற்றுகிறது. அந்தச் சுழலும் புஷ்பத்தைப் பார்த்து (8) அவ்வழியே போகுமொருவன் சித்தத்தில் (9) இவ்வழகிய கமலம் இங்கிருக்கத்தக்கதன்று (10) உத்தமமான இடத்திலிருக்கத்தக்கதாமென்று விசாரித்து, (11) அப்புஷ்பங்களைக் கையில் எடுத்துக்கொண்டு, (12) மறுபடியும் மேலும் இக்காற்று பூக்களைப் பறித்து முட்களிற் சுழற்றுமாதலால் (13) மீண்டும் வாயு பூக்களை முட்களில் சுழற்றுதிருக்கும்படி யோருபாயஞ் செய்வேனாகவென்று விசாரித்துச் சூத்திரங்களால் ஒருவலைசெய்து முண்மரத்தைப் பிரித்துவிடுகிறான். அவ்வலையால் புஷ்பங்கள் முட்களில் பிரவேசிக்கிறதில்லை.

---

* வேதாந்தமென்பன உபநிஷத்துக்கள். அவற்றின் தாற்பரியத்தை நிச்சயஞ் செய்வதாயிருத்தலின் அவற்றை யநுசரித்துள்ள பிரஹ்மசூத்திரவடிவ உத்திரமீமாம்ஸையும் வேதாந்தசாஸ்திர மெனப்படுகின்றது. அதன் கர்த்தா ஸ்ரீ வேதவியாஸர்.

† "எவன் சாஸ்திரார்த்தத்தை ஆசரித்து உலகத்தைச் சாஸ்திரத்திற் சொல்லப்பட்ட ஆசாரத்தில் நிறுத்தித் தானும் சாஸ்திரத்திற் சொல்லப்பட்ட ஆசாரத்தை ஆசரிக்கிறானோ, அக்காரணத்தால் அவன் ஆசாரிய னெனப்படுகின்றான்." என்னும் வாயு புராணமாகிய சாஸ்திரத்திற் கூறிய லக்ஷணத்தோடு கூடியவர் ஸ்ரீ வேதவியாசராகலின் அவர் சாதாரண (சர்வ ஆஸ்திகசம்பிரதாயங்களுக்கும்) ஆசாரியரா யிருக்கின்றார். அவரை நமஸ்கரித்தல்வடிவ மங்கலத்தை நூலாசிரியர் செய்கின்றனர். இங்குக் குரு சிஷ்யர்களின் சம்வாதவிருப்பால் நூலாசிரியர் எந்த மங்கலத்தைச் செய்திருக்கின்றனரோ, அது முதலிலும் கடைசியிலும் போல நடுவிலும் மங்கலஞ் செய்யவேண்டுமென்னும் விதியை அநுசரித்ததாம்.

‡ மனதினாலும் வாக்கினாலும் சரீரத்தினாலும் தன்னைத் தாழ்த்துதலோடு தனக்கிஷ்டமானதின் மேன்மையைக் கிரமமாகப் புகழ்ந்து சிந்தித்தலும் சொல்லுதலும் செய்தலும் நமஸ்கார மெனப்படும். இம்மூவித நமஸ்காரங்களும் உத்தம மத்திம கனிஷ்ட வடிவங்களா யிருக்கின்றன.

1. அவற்றில் மனதின் நமஸ்காரம் விதை.
2. வாக்குநமஸ்காரம் முளை.
3. சரீரநமஸ்காரம் மரம்.
4. அதனினின்றும் குருமுதலியோரின் மகிழ்ச்சிவடிவபயன் உண்டாகிறது.

**337.** (1) அதுபோல * பேதவாதி ஆசாரியராகிய வாயு எதுவோ (2) அது வேதரூப வனத்தில் (3) அர்த்தவாதரூப முட்களோடுகூடிய விருக்ஷத்தினின்றும் ஸகாமகர்மரூப முட்களைப் பிரவிருத்திக்கச்செய்து, (4) கபடமில்லாமலும் இராகாதி தோஷமின்றி மிகச்சுத்தமாயிருக்கும் (ராகாதி தோஷங்களில்லாமலு மிருக்கும்) (5) சிஷ்யவடிவ தாமரைப்பூக்களைச் (6) சமாதிரூப அவற்றின் ஸ்தானத்தினின்றும் பிடுங்கி (7) ஸகாமகர்மவடிவ முட்களிற் சுழற்றுவதைப் பார்த்து, (8) அவ்வழியே போகிறவனுக்குச் சமானமான எங்கும் வியாபித்திருக்கிற ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் (9) இவ்வழகியகமலவடிவ சுத்தபுருஷன் இவ்விடத்தி லிருக்கத்தக்கவனன்று, (10) ஆனால் என் ஸ்வரூபத்தை யடையத்தகுந்தவ னென்று விசாரித்து, வியாஸரூபந் தரித்து (11) அச்சிஷ்யர்களை உபதேசரூப மடியில் வைத்தார். ஒருவன் மடியிலிருக்கிற புஷ்பத்தைப் பிடுங்கக் காற்று சமர்த்தமாகாததுபோலப் பிரஹ்மநிஷ்ட ஆசாரியருடைய உபதேசத்தில் இருக்கிறவனைப் பேதவாதி பிரமிக்கும்படி செய்யச் சமர்த்தனாகிறதில்லை. ஆகையால் உபதேசமே மடியாம். (12) மறுபடியும் வியாஸபகவான், (13) இந்தப் பேதவாதி மற்றவர்களையும் ஸகாமகர்மரூப முட்களில் சுழற்றுவான். ஆகையால் மேல்சிஷ்யர்கள் பிரமிக்காமலிருக்குமாறு விசாரித்துச் சூத்திரவடிவ வலையினால் வேதவாக்கியரூப விருக்ஷங்களை விபாகஞ்செய்தார்.

வனத்தில் இருவகை விருக்ஷங்களுண்டு:—

1. முண்மரங்கள்;

2. முள்ளில்லாதன.

அவை வலையால் பிரிக்கப்பட்டால் வலையினால் புஷ்பங்களுக்கு முட்களோடுகூடிய மரங்களிற் பிரவேச முண்டாகிறதில்லை.

அதுபோல வேதத்தில் இருவகை வாக்கியங்க ளுள.

1. ஒன்று கர்மத்தைத் துதித்துப் பகிர்முகனைக் கர்மத்திற் பிரவிருத்திக்கச் செய்கிறது.

2. மற்றொன்று கர்மபலத்தின் அநித்தியத்தன்மையைப் போதித்துப் புருஷனை நிவிருத்தியில் திருப்புகிறது.

இவ்வாக்கியங்களை,

---

* இங்குப் பேதவாதியை ஆசாரியனாகச் சொன்னது "தேவதத்தன் சிங்க" மென்னும் வாக்கியம்போலக் கௌணிவிருத்தியினாற் சொன்னதாம். முக்கிய (சக்தி) விருத்தியினாற் சொல்லப்படவில்லை. ஆதலால் முன்னுக்குப்பின் (3-வது தரங்கத்திற்கும் இத்தரங்கத்திற்கும்) விரோதமில்லை.

**338.** வேதவியாஸர் பிரித்துச் சூத்திரத்தினற் சகல வாக்கியங்களுக்கும் நிவிருத்தியில் தாற்பரியமே யல்லாமல் பிரவிருத்தியில் ஒருவாக்கியத்திற்கும் தாற்பரியமில்லை என்று போதித்தார்.

பிரவிருத்தியைப் போதிக்கும் வாக்கியங்கட்கும் ஸ்வாபாவிகமாயும் நிஷித்தமாயுமுள்ள பிரவிருத்தியிலிருந்து புருஷனைத் திருப்பி விஹிதப்பிரவிருத்தியினல் (விதிக்கப்பட்டதனைச் செய்தலால்) அந்தக்கரணம் சுத்தமாக அதினின்றும் நீங்கி ஞானநிஷ்ட புருஷனுகுக என்று இவ்வாறு நிவிருத்தியிலேயே தாற்பரியமாம்.

அர்த்தவாதவாக்கியங்கள் கர்மபயனைப் போதிப்பது * குடஜிஹ்வா நியாயத்தினலாம். பலத்தில் அவற்றிற்குத் தாற்பரியமில்லை யென்னும் அர்த்தத்தைச் சூத்திரத்தினல் வியாஸர் போதிக்கிருர். சூத்திரங்களால் இந்த அர்த்தத்தைப் புருஷன் அறிந்து ஸகாமகர்மத்தில் பிரவிருத்திக்கிறதில்லை.

நூல்வலை புஷ்பங்களை முட்களினின்றும் தடுப்பதுபோல் வியாஸருடைய சூத்திரம் ஸகாமகர்மத்தினின்றும் தடுப்பதால் வலைவடிவமாய்ச் சொல்லப்பட்டது. நிச்சலதாஸனுகிய நான் அந்த ஸ்ரீ வியாஸரை நமஸ்கரிக்கின்றேன்.

**339.** அக்கிநிதேவனுடைய கேள்வி:—1. "நான் யார்?". 2, "சம்சாரத்தின் கர்த்தா யாவன்?". 3. "முக்திக்குக் காரணம் ஞானமா? அல்லது கர்மமா? அல்லது உபாசனையா? அல்லது இரண்டுமா? என்பன.

அவற்றுள்,

1. பகவானே! "நான் யார்?"

(1) தேகஸ்வரூபமா?

(2) அல்லது தேகத்துக்கு வேறு?

நான் மனுஷியனுயிருக்கிறேன், எனக்குச் சரீர மிருக்கிறது என்று இரண்டு பிரதீதியுண்டாகுதலால் எனக்குச் சந்தேகமிருக்கிறது.

---

* ஒரு தாய் தன் குழந்தைக்கு நாவில் வெல்லம்பற்றிய விரலைத் தடவிக் கசப்பான மருந்தில் தித்திக்குமென்னும் புத்தியை யுண்டுபண்ணிக் கசப்பு மருந்தைச் செலுத்தி விடுகிருள். இது சாஸ்திரத்தில் குடஜிஹ்வாநியாய மெனப்படும். அதுபோல் சுருதியாகிய தாய் பாமரஜீவர்களாகிய குழந்தைகளுக்குத் தம் கர்மபலத்தைத் துதிக்கும் வசனங்களாகிய அர்த்தவாதவாக்கியங்கள்வடிவ வெல்லம்பற்றிய விரலை நக்கவைத்துச் சுவர்க்காதிகளின் அடைவாகிய கர்மபலத்தைப் போதித்து அக்கர்மத்திற் பிரவிருத்தியுண்டாகச் செய்கிறது. ஆனல் எப்படி அத்தாய்க்குக் குழந்தையின் ரோகநிவிருத்தியிற் கருத்தோ, வெல்லந்தடவியவிரலைச் சுவைக்கச் செய்வதிற் கருத்தில்லையோ, அப்படியே வேதமாகிய தாய்க்குப் பாவநிவிருத்திவாயிலாகச் சித்தசுத்தியில் தாற்பரியமாம்; ஸ்வர்க்காதி பலத்தில் தாற்பரியமில்லை.

தேகத்துக்கு வேறென்று தாங்கள் சொல்லும்பக்ஷத்தில்,

(3) நான் கர்த்தா போக்தாவா?

(4) அல்லது கிரியையின்றியவனா?

அக்கிரிய (கிரியையின்றியவ)னெனினும்,

(5) நான் சகலசரீரங்களிலும் ஏகனா?

(6) அல்லது அநேகனா?

என்பது முதற்பிரசினத்தின் அபிப்பிராயமாம்.

2. இந்தச் சமுசாரத்தின் கர்த்தா யாவன்? என்பதன் அபிப்பிராயம் இதுவாம்:—

(1) இச்சம்சாரத்திற்கு ஓர் கர்த்தாவுண்டா?

(2) அல்லது தானாகவே யுண்டாயிருக்கிறதா?

கர்த்தா விருக்கும்பக்ஷத்தில்

(3) கர்த்தா ஜீவனா?

(4) அல்லது ஈசுவரனா?

ஈசுவரனெனின்,

(5) அந்த ஈசுவரன் ஓரிடத்திலிருக்கிறாரா?

(6) அல்லது எங்கும் வியாபித்திருக்கிறாரா?

வியாபகரானால்,

(7) வியாபகமான ஆகாசத்திலும் ஜீவன் பின்னமாயிருப்பது போல அந்த ஈசுவரனிலும் ஜீவன் பின்னமா?

(8) அல்லது அபின்னமா?

3. முக்திக்குக் காரணம் யாது? என்பதன் அபிப்பிராயம் இதுவாம்:—

(1) காரணம் ஞானமா?

(2) அல்லது கர்மமா?

(3) அல்லது உபாஸனையா?

(4) அல்லது இரண்டுமா?

இரண்டுமெனின்,

(5) ஞானகர்மங்களா?

(6) அல்லது ஞான உபாஸனைகளா?

(7) அல்லது கர்ம உபாஸனைகளா?

## (1.) "நான் யார்?" என்பதன் உத்தரம் 340-369.

### 340. ஆத்மா சங்காதத்தின் சாக்ஷியாதல்.

ஸ்ரீ குருவானவர் முதலில் சிஷ்யன் கேட்ட பிரசினத்திற்கு உத்தரம் கூறுகின்றார்:— "நீ சச்சிதாநந்தசொரூபம்" என்று சொல்வதனால் தேகத்திற்கு வேறெனப்பட்டது.

ஏனெனின், தேகம் அசத்ரூபமாயும் ஜடரூபமாயும் துக்கரூபமாயு மிருக்கிறது. நீ கர்த்தாபோக்தாவு மன்று. ஏனெனின்,

1. எவனிடத்தில் துக்கமிருக்கிறதோ அவன் துக்கநிவிருத்தியின்பொருட்டும் சுகப்பிராப்தியின்பொருட்டும் கிரியையைச் செய்கிறான். அவன் கர்த்தாவெனப்படுகிறான்.

(1) உன்னிடத்தில் துக்கமில்லாததினால் துக்கநிவிருத்தியின்பொருட்டுக் கிரியையைச் செய்கிறவனல்லன்.

(2) நீ ஆநந்தஸ்வரூபமா யிருக்கிறாய். ஆதலால் சுகப்பிராப்தியின் பொருட்டும் நீ கிரியையின் கர்த்தாவாகிறதில்லை.

2. எவன் கர்த்தாவாகிறானோ அவனே போக்தாவாகிறான். நீ கர்த்தாவன்றி; ஆனகயால் போக்தாவு மன்று.

புண்ணியபாவங்களை யுண்டுபண்ணும் கர்மத்தின் கர்த்தாவும் சுகதுக்கங்களின் போக்தாவும் ஸ்தூலசூக்ஷ்ம சங்காதமாம்; நீ யன்று. நீ சங்காதத்திற்குச் சாக்ஷி.

### 341. ஆத்மா சுகதுக்காதி தர்மங்களின்றி வியாபகமாய் ஏகமாயிருக்கிறதெனல். சாங்கியமதத்தையும் மூவகை நியாய மதங்களையும் சொல்லுதலும் கண்டித்தலும் 341-354.

இதனாலேயே ஆத்மா ஏகமாம்; நாநாவன்று. ஆத்மா கர்த்தாபோக்தாவாயின் அப்போது நாநாவாகும். ஏனெனின் ஒருவன் சுகியாயிருக்கிறான் ஒருவன் துக்கியாயிருக்கிறான். கர்த்தாபோக்தாவாக ஒருவனையே அங்கீகரிக்கின், ஒருவனுக்குச் சுகம் அல்லது துக்கம் உண்டாகிறதினால் எல்லோருக்கும் சுகம் அல்லது துக்கம் உண்டாகவேண்டும். அநுபவத்தில் அப்படியில்லை. ஆதலால் போக்தா அநேகமாம். ஆத்மா போக்தாவாகாததினால் ஒன்றே.

**342.** [பூர்வபக்ஷி:—] சாங்கியமதத்தில் ஆத்மாவைக் கர்த்தா போக்தாவெனஅங்கீகரிக்காது புருஷன் நாநாவென்று அங்கீகரிப்பது மிக்க விருத்தமாயிருக்கிறது. ஏனெனின், இது சாங்கியசித்தாந்தமாம்:—

1. (1) சத்துவரஜஸ்தமோகுணங்களின் சமான அவஸ்தைக்குப் பிரதானமென்று பெயர். அந்தப் பிரதானம் பிரகிருதியாயிருக்கிறது; விகிருதி யன்று.

[1] விகிருதி யென்பது காரியம்.

[2] பிரகிருதி என்பது உபாதானகாரணம்.

[1] அந்தப் பிரதானம் மஹதத்துவத்தின் உபாதானகாரணமாயிருத்தலால் பிரகிருதியாம்.

[2] அநாதியாயிருத்தலால் விகிருதியன்று:—

(2–8) மஹதத்துவம் அகங்காரம் பஞ்சதன்மாத்திரைகள் இவ்வேழு பிரகிருதிகளும் விகிருதிகளாம்.

[1] முன்னிற்பது பின்னிற்பதற்குப் பிரகிருதியாம்.

[2] பின்னிற்பது முன்னிற்பதற்கு விகிருதியாம். தன்மாத்திரைகளும் பூதங்களுக்குப் பிரகிருதிகளாம். இவ்விதத்தால் ஏழு பிரகிருதிகளும் விகிருதிகளாம்.

(9-24) பஞ்சபூதங்கள் தசேந்திரியங்கள் மனது என்னும் இந்தப் பதினாறும் விகிருதிகளாம்; பிரகிருதிகளன்று.

(25) புருஷன் பிரகிருதி விகிருதிகள் இரண்டுமன்று: ஏனெனின்,

[1] ஒன்று ஒருபதார்த்தத்துக்குக் காரணமானால் அப்போது அது பிரகிருதியாகும்.

[2] காரியமானால் அது விகிருதியாகும்.

[1] புருஷன் எதற்கும் காரணமாகாமையினால் பிரகிருதியன்று.

[2] காரியமாகாததினால் விகிருதியு மன்று. ஆதலால் புருஷன் அசங்கன்.

இவ்விதத்தால் சாங்கியமதத்தில் 25 தத்துவங்க ளிருக்கின்றன. தத்துவமென்பது பதார்த்தத்திற்காம்.

2. சாங்கியமதத்தில் * ஈசுவரன் அங்கீகரிக்கப்படவில்லை.

3. சுதந்திரமான பிரகிருதியே ஜகத்துக்குக் காரணமாயிருக்கிறது.

4. புருஷனுடைய போகமோக்ஷங்களின்பொருட்டுப் பிரகிருதியே பிரவிருத்திக்கிறது; புருஷன் பிரவிருத்திக்கிறதில்லை.

5. பிரகிருதியின் விஷயரூபபரிணாமத்தால் புருஷனுக்குப் போக முண்டாகிறது.

6. புத்திவாயிலாக விவேகவடிவப்பிரகிருதியின் பரிணாமத்தால் மோக்ஷ முண்டாகிறது.

7. புருஷன் அசங்கனாயிருத்தலால் அவனிடத்திற் போகமோக்ஷங்கள் பொருந்தா. அங்ஙனமாயினும், ஞானம் சுகம் துக்கம் ராகம் துவேஷ முத

* சாங்கியம் 1. ஸேசுவரசாங்கியம், 2. நிரீசுவரசாங்கிய மென்னும் பேதத்தால் இருவகையாம்.

1. கர்த்தமதேவஹூதிகளின் புத்திரரான பகவானது அவதாரமாகிய கபிலர் ஸேசுவரசாங்கியம் அங்கீகரித்திருக்கின்றனர்.

2. மற்றோர் கபிலர் இருந்தார். அவர் நிரீசுவரசாங்கியம் அங்கீகரித்திருக்கின்றனர். அவர் மதத்தில் ஈசுவரன் அங்கீகரிக்கப்படவில்லை; ஆனால் பிரகிருதியை ஜகத்காரணமாகவும் புருஷனுடைய போகமோக்ஷங்களுக்கு ஹேதுவாகவும் சொல்லப்பட்டிருக்கிறது.

அது பொருந்தாது. ஏனெனின், பிரளயகாலத்தில் சத்துவாதிகுணங்களின் சாம்ய (கலப்பு) அவஸ்தையினைப் பிரதானம் (பிரகிருதி) என்பர். அது எப்போது சிருஷ்டி காலத்தில் சாம்யாவஸ்தையை விடுகின்றதோ, அப்போது ஜகத்துண்டாகிறது. அந்தப் பிரதானம் ஜடமாயிருத்தலால் தானே சாமியாவஸ்தையை விடுதலிற் சாமர்த்திய முடையதாகிறதில்லை. சேதனபுருஷன் அவர் மதத்தில் அசங்கனாயிருத்தலால் அவனுக்குப் பிரதானத்தோடு சம்பந்தமில்லை. சேதனசம்பந்தமின்றி ஜடத்தினால் யாதொரு காரியத்தின் உற்பத்தியு முண்டாகிறதில்லை. ஆதலால் பிரதானவடிவ மாயையோடு கூடிய சேதனம் அந்தர்யாமியாகிய ஈசுவரனும். அவரே ஜகத்திற்குக் கர்த்தாவா மென்று கொள்ளுதல் தகுதியாம்.

சாங்கியமதத்தில் ஆத்மாவின் நாநாத்துவத்தையும் பிரகிருதியின் நித்தியத்தன்மையையும் அங்கீகரித்து ஆத்மாவில் ஸஜாதீய(தன்னினச்)சம்பந்த விஜாதீய (வேற்றினச்) சம்பந்தங்களின் அடைவால் நாநா ஆத்மாவின் அசங்கத்தன்மையைக் கூறுதலும் வியாகாததோஷத்தோடு கூடியதாம். ஒரு வியாபகமான ஆத்மாவை யங்கீகரிக்கவே நாநா அந்தக்கரணத்தால் போகமுதலியவற்றிற்குக் கலவாமையாகிய வியவஸ்தை யுண்டாகிறது. பின் ஆத்மாவின் நாநாத்துவ அங்கீகாரத்தால் அத்வைத சுருதியோடும் அடுத்த டிப்பணியிற் சொல்லப்படும் பேதபாதகயுக்தியோடும் விரோதித்தலைவிட வேறு பயன் பெறுவதில்லை. இவ்வாற்றால் சாங்கியமதம் அசங்கதமாம்.

வியவை புத்தியின் பரிணாமமாயிருக்கின்றன. அந்தப் புத்திக்கு ஆத்மாவோடு விவேகமில்லை; அவிவேகமிருக்கிறது. ஆதலால் ஆத்மாவில் ஆரோபிக்கப்பட்ட பந்தமோக்ஷங்களுள; பரமார்த்தமாக வில்லை.

8. ஆத்மாவில் அவிவேகத்தால் சித்தித்துள்ள போகங்களாலே சாங்கிய மதத்தில் ஆத்மா போக்தா வெனப்படுகிறது.

9. பரமார்த்தமாக ஆத்மா போக்தாவன்று; புத்தியே போக்தாவாம்.

10. புத்தி ஆத்மாவுக்கு வேறும்.

11. இந்த ஞானத்துக்கு விவேகமென்று பெயர்.

12. அதன் அபாவத்துக்கு அவிவேகமென்று பெயர்.

இவ்விதத்தால் சாங்கியமதத்தில்,

13. ஆத்மா அசங்கமாயிருக்கிறது.

14. சுகாதிகள் புத்தியின் பரிணாமங்களாயிருத்தலால் புத்தியின் தர்மங்களாம்.

15. ஆத்மா நாநாவாம்.

[சித்தாந்தி:—] மேற்கூறியது மிகவும் விருத்தமாயிருக்கிறது. சுகதுக்கங்கள் ஆத்மாவின் தர்மங்களானால் அவை ஒவ்வொரு சரீரத்திலும் பேதப்படுவதால் ஆத்மாவிற்கும் பேதமுண்டாம். அச்சுகதுக்கங்கள் ஆத்மாவின் தர்மங்களாகாமல் புத்தியின் தர்மங்களாயிருத்தலால் சுகதுக்கங்களின் பேதத்தால் புத்தியின் பேதம் சித்திக்கிறது; ஆத்மாவின் பேதம் சித்திக்கிறதில்லை.

ஒரே வியாபக ஆகாசத்தில் நாநாவுபாதிகளின் தர்மங்கள், உபாதி ஆகாசம் என்பவற்றின் அவிவேகத்தினால் தோற்றுவதுபோல ஒரேவியாபக ஆத்மாவில் நாநா புத்திகளின் தர்மங்கள் அவிவேகத்தினால் தோற்றுகின்றன என்னும் வார்த்தையினைச் சாங்கியமதத்தில் அங்கீகரிப்பது உசிதம்.

ஆத்மாவை அசங்கமாகக்கொண்டு நாநாவென்று கொள்ளுதல் நிஷ்பிரயோசனமாம்.

சில ஆத்மாக்கள் முக்தர்களாயும் இருக்கின்றார்கள். சிலருக்குப் பந்தமிருக்கிறது. இவ்வாறு பந்தமோக்ஷங்களின் பேதத்தால் ஆத்மாவின் பேதத்தை யங்கீகரிப்பதும் பொருந்தாது. ஏனெனின், பந்தமோக்ஷங்களை ஆத்மாவில் அங்கீகரிக்கின், அப்பந்தமோக்ஷபேதத்தால் ஆத்மாவின் பேதம் சித்திக்கிறது. அப்பந்தமோக்ஷம் சாங்கியமதத்தில் அசங்க ஆத்மாவில் அங்கீகரிக்கப்படவில்லை. ஆனால் புத்தியின் அவிவேகத்தால் பந்தமும் புத்தியின் விவேகத்தால் பந்தத்தின் மோக்ஷமும் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன.

எந்தவஸ்து அவிவேகத்தாலுண்டாகிறதோ விவேகத்தால் நிவிருத்தியாகிறதோ, அந்தவஸ்து ரஜ்ஜுசர்ப்பம்போல மித்தையாம். ஆத்மாவினிடத்திலும் புத்தியின் அவிவேகத்தால் பந்தமிருக்கிறது; விவேகத்தால் அது நிவிருத்தியாகிறது. ஆதலால் பந்தம் மித்தையாம்.

எப்படிப் பந்தம் மித்தையோ அப்படி ஆத்மாவின் மோக்ஷமும் மித்தையாம். எதில் பந்தம் சத்தியமாயிருக்கிறதோ அதற்கே மோக்ஷமும் சத்தியமாகும். ஆத்மாவில் பந்தம் மித்தையாயிருத்தலால் மோக்ஷமும் மித்தையேயாம்.

இவ்விதத்தால் மித்தையான பந்தமோக்ஷங்கள் ஆகாசம்போல ஒரே ஆத்மாவினிடத்திலும் பொருந்துகின்றன. அவற்றின் பேதத்தால் ஆத்மாவின் பேதம் சித்திக்கிறதில்லை. ஆதலால் சாங்கியமதத்திற் சொல்லிய ஆத்மாவின் * பேதம் அசங்கதமாம்.

---

* ஈண்டு இவை பேதத்தின் பாதகயுக்திகளாம்:—ஒரு ஆத்மாவின் பேதம் வேறு ஆத்மாவிலிருக்கின்றது என்று சொல்லும் பிரதிவாதியினை, 1. அந்தப் பேதம் பேதமின்றிய ஆத்மாவிலிருக்கின்றதா, 2. அல்லது பேதத்தோடுகூடிய ஆத்மாவிலிருக்கின்றதா என்று கேட்கவேண்டும்.

1. முதற்பக்ஷத்தைக் கூறின் வியாகாததோஷமுண்டாகும். ஏனெனின், அந்தப் பேதத்தின் ஆசிரயமாகிய ஆத்மாவைப் பேதமின்றியதாகவும் கூறுகின்றாய்; பின்னர் அதில் பேதமிருக்கிறதென்றும் கூறுகின்றாய். ஆதலால் "என் பிதா பாலப்பிரஹ்மசாரி" என்னும் வாக்கியத்தினைப்போல இந்த உன்னுடைய வசனம் வியாகாததோஷத்தோடு கூடியதாகும்.

2. பேதத்தோடுகூடிய ஆத்மாவில் ஆத்மாவின் பேதமிருக்கின்றதென்னும் இரண்டாவது பக்ஷத்தைக் கூறின், (1) எந்தப் பேதத்தோடு கூடியதாய் ஆத்மாவிருக்கின்றதோ அந்தப் பேதமும் இந்தப் பேதமும் ஒன்றா? (2) அல்லது இரண்டா?

(1) ஒன்றேயெனின், தன்னோடுகூடிய ஆத்மாவில் தானே இருத்தலால் ஆத்மாசிரயதோஷ முண்டாகும்.

(2) எந்தப் பேதத்தோடு கூடியதாய் ஆத்மா இருக்கின்றதோ அது ஆத்மாவின் விசேஷணவடிவ பேதமென்னும் இரண்டும் ஒன்றற்கொன்று பின்னமெனின்,

[1] அவ்வாத்மாவின் விசேஷணவடிவ பேதத்திற்கும் பேதரகித ஆத்மாவிலோ இருத்தல் சம்பவியாது. ஆனால் பேதத்தோடுகூடிய ஆத்மாவிலிருத்தல் சொல்லவேண்டும். ஆதலால் ஆத்மாவில் முதற்பேதம் நிலைத்தற்பொருட்டு இரண்டாவது பேதத்தை விசேஷணமாகவும், பின் இரண்டாவது பேதம் நிலைத்தற்பொருட்டு முதற் பேதத்தினை விசேஷணமாகவும் கூறுமிடத்து, ஒன்று நிலைத்தற்பொருட்டு மற்றொன்று வேண்டியதாயிருத்தலின் அந்நியோந்நியாசிரயதோஷம் உண்டாகும்.

343. [பூர்வபக்ஷி:—] அவ்வாறே நியாயமதத்திலும் ஆத்மாவின்பேதம் அசங்கதமாம். ஏனெனின், இது நியாயசித்தாந்தமாம்:—

1. சுகம், துக்கம், ஞானம், இச்சை, த்வேஷம், பிரயத்தனம், தர்மம், அதர்மம், ஞானத்தின்சம்ஸ்காரம், சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம் என்னும் பதினன்கு குணங்களும் ஜீவரூப ஆத்மாவி லிருக்கின்றன.

2. சங்கை, பரிமாணம், வேற்றுமை, சையோகம், விபாகம், ஞானம், இச்சை, பிரயத்தனம் என்னும் இவ்வெண்குணங்களும் ஈசுவரனிடத்தி லிருக் கின்றன. இவ்வளவு பேதமுளது:—

(1) ஈசுவரனுடைய ஞானம் இச்சை பிரயத்தனம் என்பன நித் தியமாம்.

(2) ஜீவனுடைய ஞானுதிகள் மூன்றும் அநித்தியமாயிருக்கின்றன.

(1) ஈசுவரன் வியாபகமாயும் நித்தியமாயுமிருக்கிறன்.

(2) ஜீவன் அநேகமாயும் எங்கும் வியாபகமாயும் நித்தியமாயும் இருக்கிறன். ஜீவனுடைய ஞானம் அநித்தியமாயிருக்கிறது. ஆகலால் ஞானகுண மிருக்குங்காலத்தில் ஜீவன் சேதன மாயும் ஞானகுணம் அழிந்தகாலத்தில் ஜடமாயுமிருக்கிறன்.

3. ஜீவேசுவரர்கள்போல் ஆகாசம், காலம், திக்கு, மனது என்பன நித்தியமாம்.

---

[2] ஆத்மாவில் இரண்டாவது பேதம் நிலைத்தற்பொருட்டுப் அதன் ஆசிரய மாகிய ஆத்மாவினைப் பேதத்தோடுகூடியதாக்குதற்கு அதற்கு விசேஷணமாக மூன்று வது பேதத்தை அங்கீகரிக்கின், அம்மூன்றுவது பேதம் நிலைத்தற்பொருட்டும் முன் போல ஆத்மாவினைப் பேதத்தோடு கூடியதாக்கல்வேண்டும். அந்த மூன்றுவது பேதம் நிலைத்தற்பொருட்டு அதன் ஆசிரயமாகிய ஆத்மாவின் விசேஷணம் முதற்பேத மெனின், முதற்பேதத்திற்கு இரண்டாவதும் இரண்டாவதற்கு மூன்றுவதும் பின் மூன்றுவதற்கு முதற்பேதமும் வேண்டியதாயிருத்தலின் சக்கரம்போல் சுழல்தல் வடிவ சக்கிரிகாதோஷம் உண்டாகும்.

[3] மூன்றுவதுபேதம் நிலைத்தற்பொருட்டுப் பேதத்தின் ஆசிரயமாகிய ஆத்மா வினைப் பேதத்தோடு கூடியதாக்குதற்கு அதன் விசேஷணவடிவ வேறு நான்காவது பேதத்தைக் கூறிப் பின் நான்காவது பேதம் நிலைத்தற்பொருட்டு ஐந்தாவது பேதத் தைக் கூறின் பிரமாணமின்றிய பேதத்தைத் தரித்தல்வடிவ அநவஸ்தைத்தோஷ முண்டாகும்.

ஆதலால் ஆத்மாவின் பரஸ்பரபேதம் [நாநாத்துவம் (பலவாதல்)] அசங்கதமாம். இந்தப் பேதத்தை வாதிக்கும் யுக்தி நையாயிகர்முதலிய சகல பேதவாதிகளாலும் கொள்ளப்பட்டுள்ள பேதத்தைக் கண்டிப்பதாம்.

4. பிருதிவி, ஜலம், தேயு, வாயு என்பவற்றின் பரமாணுக்களும் நித்தியமாயிருக்கின்றன. ஜன்னலின் வழிபாய் வரும் கிரணத்தில் காணப்படும் சூக்ஷ்மமான தூளியின் ஆறிலொருபாகத்துக்குப் பரமாணுவென்று பெயர். அந்தப் பரமாணு ஆத்மாவைப்போல நித்தியமாயிருக்கிறது.

5. ஜாதிமுதலிய வேறு சில பதார்த்தங்களும் நியாயமதத்தில் நித்தியமாயிருக்கின்றன.

வேதத்திற்கு விருத்தமான சித்தாந்தங்களை வெகுவாயெழுதுவதால் ஜிஞ்ஞாசுவுக்கு உபயோகமில்லை யாகலின் எழுதவில்லை.

6. "நான் மனுஷ்யன் பிராஹ்மணன்" என்று தேகத்தில் ஆத்மப்பிராந்தியுண்டாகிறது. அதனால் ராகத்துவேஷங்க ளுண்டாகின்றன. அவற்றால் தர்மாதர்மங்களின்பொருட்டுப் பிரவிருத்தியுண்டாகிறது. அதனால் சரீரத்தின் சம்பந்தவாயிலாகச் சுகதுக்கங்க ளுண்டாகின்றன. இவ்விதத்தால் நியாயமதத்தில் பிராந்திஞானம் ஆத்மாவின் சமுசாரத்துக்கு ஹேதுவாயிருக்கிறது.

7. அந்தப் பிராந்திஞானம் தத்துவஞானத்தால் நிவிருத்தியாகிறது.

8. சரீரமுதலிய சகல பதார்த்தங்களினும் ஆத்மா * வேறு என்னும் நிச்சயத்திற்குத் தத்துவஞானமென்று பெயர்.

---

* இங்கு இது விசேஷமாம்:—நையாயிகமதத்தில் தத்துவஞானத்திற்கு ஏது மனனமென்று சொல்லப்பட்டிருக்கிறது. "ஆத்மா பிறவற்றின் வேறு; ஆத்மாவா யிருத்தலால்; எது பிறபதார்த்தங்களினும் வேறல்லாது பிறபதார்த்தவடிவமா யிருக்கிறதோ அது ஆத்மாவன்று; கடம்போல." என்னும் வெதிரேக அநுமானத்தினால் ஆத்மாவில் பிறபதார்த்தங்களினது பேதத்தின் அநுமிதிஞானமுண்டாகிறது. அது மனனமெனப் படுகிறது.

பிறபதார்த்தங்களின் ஞானமின்றி ஆத்மாவில் பிறபதார்த்தங்களினது பேதத்தின் ஞானம் சம்பவியாது. ஏனெனின், எதற்குப் பிறவற்றில் பேதமிருக்கிறதோ, அது பேதத்தின் பிரதியோகியாம். அந்தப் பிரதியோகியின் ஞானமின்றிப் பேதஞானமுண்டாகிறதில்லை. ஆதலால் ஆத்மாவில் பிறபதார்த்தங்களினது பேதத்தின் அநுமிதிவடிவ மனனத்தின் உபயோகியான பிறபதார்த்தங்களின் நிரூபணமும் தத்துவஞானத்தின் உபயோகியாமென்று கொள்ளுகிறார்கள்.

அது சம்பவியாது. ஏனெனின், சிரவணஞ்செய்த அர்த்தத்தின் நிச்சயத்திற் கநுகூலமான பிரமேயகத சந்தேகத்தினை நிவர்த்திக்கும் யுக்திகள் எவையோ, அவற்றின் சிந்தனத்தை மனனம் என்பர். பேதஞானத்தால் அநர்த்தமுண்டாகிறது. "இவ்வெல்லாம் நிச்சயமாகப் பிரஹ்மம்" என்றல் முதலிய சுருதிவாக்கியங்களால் அபேதத்தில் சகல வேதங்களுக்கும் தாற்பரியமாம். "இரண்டாவதால் பயமுண்டாகிறது" "எவன் இங்கு நாநாவைப்போலக் காண்கிறானோ அவன் மிருத்யுவினின்றும் மிருத்யுவையடைகிறான்" என்றல் முதலிய சுருதிவாக்கியங்களால் பேதஞானத்தின்

(1) அந்தத் தத்துவஞானத்தால் "நான் மனுஷ்யன் பிராஹ்மணன்" என்னும் பிராந்தி நிவிருத்தியாகிறது.

(2) பிராந்திநாசத்தினால் ராகத்துவேஷாதிக ளில்லாமற் போகின்றன.

---

நிந்தை செய்யப்பட்டிருக்கிறது. ஆதலால் பேதஞானத்திற்கு நேரேயாவது அல்லது தத்துவஞானவாயிலாகவாவது புருஷார்த்தத்தன்மையை யுண்டுபண்ணுந்தன்மை சம்பவியாது.

மனனமென்னும் சொல்லினாலும் ஆத்மாவினும் வேறுபதார்த்தங்களினது பேதத்தின் தோற்றமாகிய அர்த்தமுண்டாகிறதில்லை. ஆனால் மனனபதத்திற்குச் சிந்தித்தல்மாத்திரம் பொருளாம். வாக்கியபேதங்களை யநுசரித்து அபேதசிந்தனத்தில் மனனசப்தத்திற்குப் பரியவசானம் (முடிவு) உண்டாகிறது. எந்தவிதத்தினாலும் ஆத்மாவினும் வேறு பதார்த்தங்களின் பேதம் மனனம் என்னும் சொல்லிற்குப் பொருளாகாது.

அல்லது. 1. பிறபதார்த்தங்களின் ஞானத்தினாலேயே புருஷார்த்த (மோக்ஷ)த்திற்குச் சாதனமான தத்துவஞானத்தின் பிராப்தியுண்டாகுமாயின் சகல புருஷர்களுக்கும் தத்துவஞானத்தின் அடைவு உண்டாதல்வேண்டும், 2. அல்லது ஒருவனுக்கும் உண்டாகாது என்பதைக் காட்டுகின்றார்:—

1. பிறபதார்த்தங்களின் சாமானிய ஞானம் தத்துவ (ஆத்ம) ஞானத்தில் அபேக்ஷிக்கப்படுவதாயின் சாமானியஞானம் சகல புருஷர்களுக்கு மிருக்கிறது. ஆதலால் பிறபதார்த்தங்களின் ஞானபூர்வகமான பிறபதார்த்தங்களின் பேதஞானத்தால் எல்லோருக்கும் தத்துவஞான முண்டாதல்வேண்டும்.

2. சர்வபதார்த்தங்களுக்கும் அசாதாரணதர்மம் (ஒருதர்மியில் தர்மசொரூபமான விசேஷவடிவம்) உளது. அவ்விசேஷ வடிவத்தால் பிறபதார்த்தங்களின் ஞானம் தத்துவஞானத்தில் அபேக்ஷிக்கப்படுமாயின் சர்வஞ்ஞனாகிய ஈசுவரனுக்கன்றி யாருக்கும் அசாதாரணதர்மத்தால் சகல பிறபதார்த்தங்களின் ஞானமும் சம்பவியாது. ஆதலால் சகல பிறபதார்த்தங்களின் ஞானத்தால் ஆத்மாவின் பிறபதார்த்தங்களினும் வேறு என்னும் ஞானமின்மையால் சகல அநாத்மபதார்த்தங்களினும் வேறாகிய ஆத்மாவின் ஞானவடிவ தத்துவஞானம் எவனுக்கு முண்டாகாது.

ஆதலால் நையாயிகமதத்தில் அங்கீகரிக்கப்பட்ட ஆத்மாவிற்குப் பிற ஆத்மாவோடும் அநாத்ம பதார்த்தத்தோடுமுள்ள பேதஞானம் எதுவோ அது சம்பவியாது. இதனாலேயே தேகமுதலியவற்றில் ஆத்மப்பிராந்தியின் அபாவமும், அதனால் ராகத்துவேஷத்தின் அபாவமும், அதனால் தர்மாதர்மங்களின் நிமித்தமாகிய பிரவிருத்தியின் அபாவமும், அதனால் சரீரசம்பந்தவடிவ ஜன்மத்தின் அபாவமும், அதனால் இருபத்தொரு துக்கங்களின் நாசவடிவ மோக்ஷமும் நையாயிகர்களை அநுசரித்தவர்களுக்குண்டாகாது. ஆனால் மகாவாக்கியவடிவ சுருதியர்த்தத்தைக் கோசரிக்கும் அபேதஞானமே காரணத்தோடுகூடிய அநர்த்தத்தின் நிவிருத்திபூர்வக பரமானந்தத்தின் பிராப்திவடிவ மோக்ஷத்திற்கு ஏதுவாம்.

(3) அவற்றின் அபாவத்தால் தர்மாதர்மங்களின்பொருட்டுப் பிரவிருத்தியுண்டாகிறதில்லை.

(4) பிரவிருத்தியின் அபாவத்தால் சரீரசம்பந்தரூப ஜன்மமில்லாமற்போகிறது. பிராரப்தம் போகத்தினால் நாசமடைகிறது.

(5) சரீரசம்பந்தத்தின் அபாவத்தால் 21 துக்கங்களும் நாசமுறுகின்றன.

9. அந்தத் துக்கநாசமே நியாயமதத்தில் மோக்ஷமெனப்படுகிறது.

ஒருசரீரமும், சுரோத்திரம் துவக்கு நேத்திரம் ரஸனை கிராணம் மனம் என்னும் ஆறு இந்திரியங்களும், அவற்றின் விஷயங்களும், இந்திரியங்களாதின் ஞானமும், சுகதுக்கங்களுமாகிய இவை இருபத்தொரு துக்கங்களாம். சரீராதிகளும் துக்கத்தை யுண்டுபண்ணுவனவாகலின் துக்கமெனப்படுகின்றன.

சுவர்க்காதிகளின் சுகமும் நாசமாகுமென்னும் பயத்தினால் துக்கத்திற்கு ஹேதுவாம்; ஆதலால் துக்கமெனப்படுகிறது.

நியாயமதத்தில் * சுரோத்திரமும் மனமும் நித்தியமாம். அவற்றிற்கு நாசம் பொருந்தாது. அங்ஙனமாயினும், எந்தரூபங்களால் சுரோத்திரமும் மனமும் துக்கத்துக்கு ஹேதுக்களாகின்றனவோ அந்தரூபங்கள் நாசமாகின்றன.

* நியாயமதத்தில் சுரோத்திரத்தை ஆகாயரூபமாகக்கொண்டு நித்தியமெனக்கொண்டிருக்கிறார்கள்.

அது பொருந்தாது. ஏனெனின்,

1. சுருதியில் நேத்திரமுதலியவற்றைப்போல ஆகாசத்தினின்றும் சுரோத்திரத்தின் உற்பத்தி சொல்லப்பட்டிருக்கிறது. உற்பத்தியுடைய வஸ்து எதுவோ அதற்கு நித்தியத்தன்மை சம்பவியாது.

2. சுரோத்திரத்தை ஆகாயவடிவமாகக் கூறுதலும் சம்பவியாது. ஏனெனின், செவித்துளையிலிருக்கும் ஆகாயத்தினை நியாயமதத்திற் சுரோத்திரமென்பர். அது பொருத்தமின்றியதாம். ஏனெனின், செவித்துளையிலிருக்கும் ஆகாயமிருக்கவும் ஒருகாலத்துக் கேட்டற்றொழிலின் மந்தத்தன்மை அல்லது அதன் அபாவம் உண்டாகிறது; அஃதுண்டாகலாகாது. ஆதலால் பஞ்சீகிருதபூதவடிவ கர்ணகோளகத்திருக்கும் ஆகாயம் எதுவோ அதனினும் வேறாய அபஞ்சீகிருதபூதவடிவ ஆகாயத்தின் காரியமான சுரோத்திரேந்திரியம் உற்பத்தி நாச முடையதாயிருத்தலின் அநித்தியமாம்.

2. அல்லது துர்ஜனதோஷநியாயத்தால் அதனை ஆகாயவடிவமாகக் கொள்ளினும் அதன் நித்தியத்தன்மை சம்பவிக்கிறதில்லை. ஏனெனின், "ஆத்மாவினின்றும் ஆகாயமுண்டாயிற்று" என்னும் தைத்திரீயத்தின் வாக்கியம் ஆகாயத்தின் உற்பத்

பதார்த்தஞானத்தை உண்டுபண்ணுகிறதினால் அவை துக்கத்துக்கு ஹேதுக்களாகின்றன. அந்தப் பதார்த்தங்களின் ஞானத்தை மோக்ஷகாலத்தில் சுரோத்திரமும் மனமும் செய்கிறதில்லை. ஏனெனின், கர்ணகோளகத்தி

---

தியைக் கூறி அதன் அநித்தியத்தன்மையைச் குறிப்பித்திருக்கின்றது. எப்போது ஆகாயத்திற்கு அநித்தியத்தன்மை சித்தித்ததோ அப்போது அதன் ஏகதேசவடிவ சுரோத்திரத்திற்கு அநித்தியத்தன்மை இருக்கிறதென்பதிற்சொல்லவேண்டியதென்னையுளது?

இவ்வாற்றால் சுரோத்திரத்திற்கு நித்தியத்தன்மை சம்பவியாது. அவ்வாறே மனதின் நித்தியத்தன்மையும் பொருந்தாது. ஏனெனின்,

1. மனதைப் பரமாணுவடிவெனக் கொண்டு நித்தியமென்னும் அவர்களை (1) மனம் நிரவயவமா? (2) அல்லது சாவயவமா? என்று கேட்கவேண்டும்.

(1) மனம் நிரவயவமெனின், அதன்கண் அவயவவடிவ இடமின்மையால் அதற்கு ஆத்மாவோடு சையோகம் சம்பவியாது. ஆதலால் இயல்பாகவே ஜடமான ஆத்மாவில் மனதின் சையோகத்தாற் றோன்றத்தக்க ஞானகுணத்தின் உற்பத்தியின்மையால் ஜகத்துக் குருடாமென்னும் பிரசங்கமுண்டாம்.

(2) மனம் சாவயவமெனின், அதன்கண் கடபடமுதலியவற்றிற்போல அநித்தியத்தன்மை விவாதமின்றிச் சித்தித்தது.

2. அல்லது மனம் நித்தியமாயின் அதற்குச் சுழுத்தியில் விசேஷ ஞானத்தை யுண்டுபண்ணுதல் வடிவ லிங்கமின்மையா லறியப்படும் தனது உபாதானமாகிய அஞ்ஞானத்தில் லயமாகின்றது. அஃதாகலாகாது இதனாலும் மனம் அநித்தியமாம்.

3. ஆத்மமனதுகளின் சையோகம் ஞானத்திற்கேதுவாம். அச்சையோகம் ஒன்றன் கிரியையினாலேனும் இரண்டன் கிரியையினாலேனும் உண்டாகின்றது. விபுவாகிய ஆத்மாவிலோ கிரியை ஒருபோதும் உண்டாகிறதில்லை. மோக்ஷகாலத்திலேனும் சுழுத்திகாலத்திலேனும் போகத்திற்கெதிர்முகமாகும் அதிருஷ்டமின்மையால் மனதிலும் கிரியை உண்டாகிறதில்லை. ஆதலால் ஆத்மாவோடு மனதிற்குச் சையோகமின்மையால் சுழுத்திமுதலியவற்றில் விசேஷஞானமுண்டாகிறதில்லை என்று நையாயிகன் கூறின்,

அவ்வாறு கூறுதல் பொருந்தாது. ஏனெனின், வியாபகமாகிய வஸ்துவோடு சகல வஸ்துக்களுக்கும் கிரியையின்றியும் எப்போதும் சையோகமிருக்கின்றது. வியாபகமாகிய ஆகாயத்தோடு கிரியையின்றிய பர்வதத்திற்காவது மரம் கல் முதலியவற்றிற்காவது எப்போதுமே சையோகமிருக்கின்றது. அங்ஙனமே மோக்ஷகாலத்திலேனும் சுழுத்தியிலேனும் கிரியையின்றியதாக மனமிருக்கினும் அதற்கு விபுவாகிய ஆத்மாவோடு சையோகம் சித்தித்தலால் விசேஷஞானம் உண்டாதல்வேண்டும். அங்ஙனம் உண்டாகிறதில்லை. ஆதலால் சுழுத்திமுதலிய காலங்களில் அவசியம் மனதின் லயமுண்டாகின்றது. மீண்டும் ஜாக்கிரகாலத்தில் அதன் உற்பத்தி உண்டாகிறது.

இவ்வாற்றால் உற்பத்திநாச முடையதாயிருத்தலின் மனம் அநித்தியமாம். அதற்கு நித்தியத்தன்மையைக் கூறுதல் பிதற்றுதன்மாத்திரமாம்.

லிருக்கும் ஆகாசம் எதுவோ அது சுரோத்திர மெனப்படும். அக்கர்ணகோள கம் மோக்ஷகாலத்தில் இருக்கிறதில்லை. ஆதலால் ஆகாசரூப சுரோத்திரேந் திரியமிருந்தும் கோளகமில்லாமையால் ஞானமுண்டாகிறதில்லை.

இவ்விதத்தால் ஞானத்தையுண்டுபண்ணும் சுரோத்திரேந்திரியத்தின் ஸ்வரூபமே துக்கமாம். அதற்கே நாசமுண்டாகிறது.

10. ஆத்மாவோடு மனது கூடுவதால் * ஞானமுண்டாகிறது. அந்த மனதின் சையோகம் நியாயசித்தாந்தத்தில், (1) ஒன்றன் கிரியையாலாவது, (2) இரண்டன் கிரியைகளாலாவது உண்டாகிறது.

(1) பக்ஷிக்கு விருக்ஷத்தோடுண்டாம் சையோகம் பக்ஷியொன் றன் கிரியையாலாகிறது.

(2) இரண்டு ஆட்டுக்கடாக்களின் சையோகம் (ஒன்றோடொன்று முட்டிக்கொள்ளுதலாகிய) இரண்டன் கிரியைகளாலு முண் டாகிறது.

அதுபோல வியாபக ஆத்மாவில் கிரியை ஒருகாலு முண்டாகிறதில்லை. மோக்ஷகாலத்தில் மனதிலும் கிரியையுண்டாகிறதில்லை. ஆதலால் சையோக முடைய மனதே மோக்ஷகாலத்தில் இல்லாமற்போகிறது.

---

* 1. ஆத்மாவோடு மனது சேர்வதனுல் ஞானம் உண்டாகுமாயின் சுழுத்தியில் அச் சையோகம் இல்லாததாகவே நித்திரையினின்று விழிக்குங்காலத்தி லுண்டாகும் சுக அஞ்ஞானங்களின் நினைவுக்குக் காரணவடிவமான அநுபவம் சித்திக்கிறது. அது சித்திக்கலாகாது.

2. அல்லது :— ஆத்மாவோடு மனது சையோகமாதலால் ஞானமுண்டாகு மாயின், நியாயமதத்தில் மனதை அணுவடிவமெனக் கொண்டிருக்கிறுர்கள். ஆதலால் அதன் சையோகத்தா லுண்டாகத்தக்க ஞானமும் சரீரத்தின் ஏகதேசத்திற்றுன் இருக் கும் சரீரமுழுவதினுமிராது. ஆதலால் சரீரமுழுவதினு முண்டாகிய முட்குத்துத லின் வருத்தம் விளங்கலாகாது.

3. மனதைச் சித்தாந்தத்திற்போலச் சரீரமுழுவதினும் இருப்பதாகக் கொள் ளின், சரீரமுழுவதினும் துன்பம் சம்பவியாமை யில்லையாயினும் சுழுத்தியில் சுக அஞ் ஞானங்களின் சாமாந்யஞான மிருக்கின்றது. அதன் அசம்பவமுண்டாகும்.

ஆதலால் ஆத்மாவோடு மனது சையோகமாதலால் ஞானமுண்டாகிறதில்லை. ஆனுல் ஆத்மாவின் சொரூபவடிவ உற்பத்திநாசமின்றிய ஞானம் நித்தியமாம் என்று கொள்ளுதல் தகுதியாம்.

344. ஓர் * ஏகதேசி துவக்கோடு மனது சையோகமாதலை ஞானத்திற்கு ஏதுவென்று சொல்லுகிறார்; ஆத்மாவின் சையோகத்தைச் சொல்லுகிறதில்லை. சுழுத்தியில் புரீததி என்னும் நாடியில் மனது பிரவேசிக்கிறது. அப்போது துவக்கோடு மனதிற்குச் சையோகமிருக்கிறதில்லை. ஆதலால் சுழுத்தியில் ஞானமுண்டாகிறதில்லை. அவர்கள் மதத்தில் துவக்கோடு சையோகமுடையமனதே ஞானவாயிலாகத் துக்கத்திற்கு ஹேதுவாயிருத்தலால் துக்கமாம்; கேவல மனம் துக்கமன்று. மோக்ஷத்தில் துவக்கு நாசமடைவதால் அதனோடு சையோகமுண்டாகிறதில்லை; ஆதலால் ஞானமுண்டாகிறதில்லை. மோக்ஷகாலத்தில் மனது இருக்கினும் துக்கத்திற்கு ஹேதுவாய் ஞானத்தையுண்டுபண்ணும் துவக்குடன் சையோகமுடைய மனமெதுவோ அதன் சையோகநாசத்தால் நாசமடைகிறது.

11. இவ்விதத்தால் மோக்ஷகாலத்தில் பரமாத்மாவுக்குப் பின்னமாகவே துக்கமின்றியதாய் வியாபக ஆத்மா † ஜடரூபமாக நிலைத்திருக்கிறது. ஏனெனின் ஞானகுணத்தினால் ஆத்மா பிரகாசிக்கிறது. அந்த ஜீவனுடைய ஞானமுழுவதும் இந்திரியஜன்னியமாகவே இருக்கிறது; நித்தியமன்று. அந்த

---

* ஓர் நியாயத்தின் ஏகதேசி துவக்கினோடு மனதின் சையோகத்தை ஞானத்திற்கு ஏதுவெனக் கூறுகின்றார்.

அதுவும் அசங்கதமாம். ஏனெனின்,

1. மனதோடு உண்டாகும் ஆத்மாவின் சையோகம் ஞானத்திற்கு ஏதுவாமென்னும் அர்த்தத்தை அங்கீகரித்தலில் ஓர் பிரமாணமும் இல்லாததுபோல் துவக்கினோடு உண்டாகும் மனதின் சையோகம் ஞானத்திற்கு ஏதுவாமென்னும் அர்த்தத்தை அங்கீகரித்தலில் சுருதிமுதலிய ஓர் பிரமாணமுமில்லை.

2. பிரமாணத்தாற் பெறப்படாத ஸ்வகபோலகற்பித (தனது புத்தியாற் கற்பிக்கப்படும்) பொருள் அங்கீகரிக்கத்தக்கதாமாயின் "யான் கானற்சலத்தில் ஸ்நானஞ்செய்து ஆகாயபுஷ்பத்தை முடியிற்சூடி முயற்கொம்பின் வில்லேடு வந்தியாபுத்திரன் போர்க்களத்தில் சென்றதைக் கண்டேன்" என்று ஒருவன் சொல்லும் வாக்கியப்பொருளும் அங்கீகரிக்கத்தக்கதாம். ஆதலால் துவக்கோடுண்டாம் மனதின் சையோகம் ஞானத்திற் கேதுவன்று.

3. அல்லது சுழுத்தியில் துவக்கு மனதுகளின் சையோக மில்லாதிருக்கினும் புத்திமான்களது புத்தியால் அறியத்தக்க சுக அஞ்ஞானங்களின் சாமானிய ஞானம் உண்டாகின்றது. அஃதுண்டாகலாகாது.

ஆதலால் துவக்கு மனதுகளின் சையோகம் ஞானத்திற்கு ஏதுவன்று; ஆத்மாவின் சொரூபவடிவமே ஞானமாமென்று அங்கீகரிக்கத்தக்கதாம்.

† நியாயமதத்தில் ஆத்மாவை வியாபகமெனக்கொண்டு ஜடமாக ஒப்பியிருக்கின்றார்கள்.

இந்திரிய ஜந்நியஞானம் மோக்ஷகாலத்தில் நாசமடைகிறது. ஆதலால் பிரகாசமின்றி ஜடரூபமாய் ஆத்மா மோக்ஷகாலத்தில் நிலைத்திருக்கிறது. இது நியாயசித்தாந்தம்.

345. நியாயமதத்தில் முன் சொன்னபடி சுகதுக்கங்களும் பந்தமோக்ஷங்களும் ஆத்மாவுக் குண்டாகின்றன. ஆதலால் ஆத்மா நாநாவும் எங்கும் வியாபகமுமா யிருக்கிறது.

சகல அற்ப பதார்த்தங்களோடும் உண்டாகும் சையோகமே நியாயமதத்தில் வியாபகத்தின் லக்ஷணமாம்; ஸஜாதீய விஜாதீய ஸ்வகதபேதங்களின் அபாவம் வியாபகத்தின் லக்ஷணமன்று. ஏனெனின் நியாயமதத்தில் ஆத்மா நிரவயவமாம். ஆதலால் ஸ்வகதபேதம் ஆத்மாவினிடத்தில் இல்லாமலிருந்தாலும் ஸஜாதீய விஜாதிய பேதங்களில்லாமலிருக்கவில்லை. ஆனல்,

1. ஸஜாதீயமான இரண்டாவது ஆத்மாவின்பேதம் ஆத்மாவில் இருக்கிறது.

2. விஜாதீய கடாதிகளின் பேதமும் ஆத்மாவிலிருக்கிறது.

ஆதலால் ஸஜாதீய விஜாதீய ஸ்வகதபேதங்களின் அபாவம் * வியாபகத்

---

1. அது சுருதிவிருத்தமாம். ஏனெனின்,

(1) "இங்கு (சொப்பனத்தில்) இந்தப் புருஷன் சுயஞ்சோதி (சுவப்பிரகாசன்) ஆகின்றான். (அங்குச் சூரியன் முதலிய சோதிகளின்மையால் வெளிப்படையா யறியப்படுகின்றது.)"

(2) "இந்தப் பிராணன்களில் இதயத்தில் அந்தர்ஜோதி (உட்பிரகாச) வடிவ புருஷனிருக்கின்றான்."

(3) "சத்திய ஞானனந்தவடிவம் பிரஹ்மம் (பரிபூரண வஸ்து) ஆம்."

இவை முதலிய அநேக சுருதி வாக்கியங்களில் வியாபக ஆத்மாவிற்குச் சேதனவடிவத்தன்மை கேட்கப்படுகின்றது.

இதில் யுக்தியுளது. அது மேல் 356 முதல் 359 பரியந்தமான இலக்கங்களில் நூலாசிரியரால் சொல்லப்படும். ஆதலால் ஆத்மா சொரூபமாக ஜடமாமென்னும் நியாயமதத்தின் வார்த்தை அசங்கதமாம்.

* சித்தாந்தத்தில் ஸஜாதீய விஜாதீய ஸ்வகதபேதத்தின் அபாவம் வியாபகத்தின் லக்ஷணமென்று கொள்ளப்பட்டிருக்கிறது. அது "ஒரே அத்துவிதீயப் பிரஹ்மமிருக்கிறது." என்னும் சாந்தோக்கியத்தின் ஆறுவது அத்தியாயத்தின் வசனத்தை அநுசரித்ததாம். இங்கு,

1. "ஒன்று" என்னும் சொல்லினுல் ஸஜாதீயபேதத்தின் நிஷேதமாம்.

2. ஒரே என்பதிலுள்ள "ஏ" என்னும் சொல்லால் விஜாதீயபேதத்தின் நிஷேதமாம்.

தின் லக்ஷணமன்று. ஆனால் சகல * அற்ப பதார்த்தங்களோடுண்டாம் சையோகமே வியாபகத்தின் லக்ஷணமாம்.

இதிலொருவன், "நியாயமதத்தில் ஆத்மாவைப்போல ஆகாச கால திக்குக் களும் வியாபகமாயிருக்கின்றன. பரமாணுக்கள் சூக்ஷ்மமாயும் நிரவயவமாயும் இருக்கின்றன. அவற்றோடு சகல வியாபக பதார்த்தங்களுக்கும் சையோகஞ் சம்பவியாது. ஏனெனின், பரமாணுக்கள் ஸாவயவமானால் அப்போது ஓரி டத்தில் ஆத்மாவின் சையோகமுண்டாம். ஓரிடத்தில் மற்ற வியாபக பதார்த் தங்களின் சையோகமுண்டாம். அந்தப் பரமாணுக்கள் ஸாவயவமன்று; நிரவயவமாம்; அதிசூக்ஷ்மமுமாம். அவற்றோடு ஒரே இடத்தில் சகல வியா பக பதார்த்தங்களுக்கும் சையோகமுண்டாகுமெனல் பொருந்தாது. ஏனெ னின் ஒன்றன் சையோகத்தால் இடம் மறைபட்டுப்போகிறது. அந்தவிடத் தில் வேறு பதார்த்தத்தின் சையோகஞ் சம்பவியாது. ஆகையால் நாநா பதார்த்தங்களுக்கு வியாபகத்துவம் பொருந்தாது. யாதேனும் ஓர் பதார்த் தமே வியாபகமாதல் பொருந்துகின்றது." என்று சங்கிக்கின்,

---

3 "அத்துவிதீய" என்னும் சொல்லால் சவகதபேதத்தின் நிஷேதமாம்.

இந்த லக்ஷணத்தையே அநுசரித்துத் தேசகாலவஸ்துவினாலாகிய அந்தமில்லாத தும் வியாபகத்தின் லக்ஷணமாம். இங்கு

1. "ஒன்று" என்னும் பதத்தால் தேசத்தினாலாகிய அந்தம் நிஷேதிக்கப்படு கின்றது. ஏனெனின், எந்த வஸ்து பரிச்சின்னமோ அது நாநாவாம். எது வியாபக மோ அது நாநாவன்று. ஆனால் ஆகாசத்தைப்போல ஏகமாம். ஆத்மா எதனால் ஏக மாயிருக்கின்றதோ அதனால் பரிச்சின்னமன்று; ஆனால் வியாபகமாம். இதனாலேயே ஆத்மா தேசத்தினாலாகிய அந்தமில்லாததாயிருக்கிறது. நியாயமதத்தில் நாநாவியா பகமென்கிறார்கள். அது அத்வைதசுருதிக்கும் சொல்லப்படும் யுத்திக்கும் உலக அநுபவத்திற்கும் விரோதமாம். கூறிய சுருதியிலுள்ள ஏகம் (ஒன்று) என்னும் பதத் தால் ஆத்மாவில் தேசத்தினாலாகிய அந்தம் நிஷேதிக்கப்பட்டது.

2. நிச்சயவாசகமான "ஏ" என்னும் பதத்தால் ஆத்மாவின் நிரபேக்ஷிக வியா பகத்தன்மையைக் கூறுதலால் ஆத்மாவில் காலத்தினாலாகிய அந்தம் நிஷேதிக்கப் பட்டது.

3. "அத்விதீய" என்னும் சொல்லால் பேதத்தின் பிரதியோகியான (பேதத்தை நிரூபிப்பதான) அந்நியவஸ்துவை நிஷேதித்தலால் ஆத்மாவில் வஸ்துவினாலாகிய அந்தத்தின் நிஷேதம் செய்யப்பட்டது.

இவ்வாற்றால் சித்தாந்தத்திற் கூறிய இருவகை வியாபகத்தின் லக்ஷணமும் சுருதி யைத் தழுவியதாம்.

* இந்த நியாயமதத்திற் கூறிய வியாபகத்தின் லக்ஷணம் சுருதி யுக்தி லோகாநு பவங்கட்கு விரோதமுடையதாம்.

அச்சங்கை பொருந்தாது. ஏனெனின், ஸாவயவவஸ்துவின் சையோகம் எதுவோ அது அந்நியவஸ்துவின் சையோகத்திற்கு விரோதியாம்.

1. எந்தப் பூமியில் கையின் சையோகமுளதாகின்றதோ அந்த இடத்தில் பாதத்தின் சையோகமுண்டாகிறதில்லை. நிரவயவவஸ்துவின் சையோகம் இடத்தைத் தடுக்கிறதில்லை. ஆதலால் வேறு வஸ்துவின் சையோகத்திற்கு விரோதியன்று. இவ்வார்த்தை அநுபவசித்தமாம்.

2. கடத்தின் எந்த இடத்தில் ஆகாசத்தின் சையோகமிருக்கிறதோ, அந்த இடத்திலேயே காலதிக்குக்களின் சையோகமு மிருக்கிறது. யாதேனு மோர் கடத்தின் இடம் ஆகாசகாலதிக்குக்களுக்குப் புறம்பாயிருக்குமாயின் அந்த இடத்தில் ஆகாசகாலதிக்குக்களின் சையோகமிராது. ஆனால் அவ்வாறு வெளியிலோ யாதொரு தேசமுமில்லை. சகல பதார்த்தங்களின் சகல இடங்களும் ஆகாசகாலதிக்குக்களிலேயே இருக்கின்றன. ஆதலால் சகல பதார்த்தங்களின் சகல இடங்களிலும் ஆகாசகாலதிக்குக்களின் சையோக மிருக்கிறது.

இவ்விதத்தால் பரமாணுவிலும் ஒரே இடத்தில் அநேக நிரவயவ வியாபக பதார்த்தங்களின் சையோகமுண்டாகக்கூடும்; யாதொரு தோஷமுமில்லை. ஆதலால் ஆத்மா நாநாவும் முழு (சர்வ) வியாபகமுமாயிருக்கிறது.

346. [சித்தாந்தி :—] * எல்லாவற்றிற்கும் எல்லாப் பதார்த்தங்களோடும் சையோகம் இருக்கிறதென்பது நியாயசித்தாந்தம். அது நலமுடையதன்று. ஏனெனின், வியாபகமான ஆத்மா அநேகமென்று அங்கீகரிக்கின், எல்லாச் சரீரங்களிலும் எல்லா ஆத்மாக்களின் சம்பந்தத்தையு மங்கீகரிக்க வேண்டும். அதனால் இன்னசரீரம் இன்ன ஆத்மாவினுடையதென்னும் நிச்சய மில்லாமற்போம். ஒவ்வொரு ஆத்மாவுக்கும் எல்லாச் சரீரங்களு மிருக்க வேண்டும்.

எவன் கருமத்தினால் எந்தச் சரீரமுண்டாயிற்றோ அந்த ஆத்மாவுக்கு அதுதான் சரீரமென்று ஒருவன் சொல்லும்பக்ஷத்தில்,

அதுவும் பொருந்தாது. ஏனெனின், எந்தச் சரீரத்தாற் கர்மம் செய்யப்பட்டதோ அந்தக் கருமத்தைச் செய்தவனுடைய முன் சரீரத்திலும் சகல ஆத்மாக்களுக்கும் சம்பந்தமுண்டு. ஆதலால் கர்மமும் சகல ஆத்மாக்களினதேயாகும்; ஓராத்மாவினதாகாது.

* சகல ஆத்மாக்களுக்கும் வியாபகவஸ்துவிற்கு வேறான சகல பரிச்சின்னமான தேகம் இந்திரியம் மனம் பரமாணுமுதலிய வஸ்துக்களோடு சையோகமிருக்கிறது என்பது இவ்வாக்கியத்திற்குப் பொருளாம்.

எந்த ஆத்மாவுக்குச் சரீரம் மனதோடு கூடியிருக்கிறதோ அந்த ஆத்மாவுக்கு அதுதான் சரீரம் என்று கூறின்,

அதுவும் பொருந்தாது. ஏனெனின்,

1. சரீரம்போல் மனதுடனும் சகல ஆத்மாக்களுக்கும் சம்பந்தமிருக்கின்றது. அதன்கண் இன்ன மனது இன்ன ஆத்மாவினதென்னும் நிச்சயமுண்டாகிறதில்லை. எல்லா ஆத்மாக்களுக்கும் எல்லாமனது மிருக்கவேண்டும்.

2. அப்படியே இந்திரியமும் எல்லா ஆத்மாக்களுக்கும் எல்லாமுமேயாகும்.

3. வெளிப்பதார்த்தங்களில் "இது என்னுடையது, இது வேறொருவனது" என்னும் வியவகாரமும் சரீரத்தை முன்னிட்டதாம். அச்சரீரம் எல்லா ஆத்மாக்களுக்கும் எல்லாமுமாதலால் வெளிப்பதார்த்தங்களும் எல்லாமும் எல்லா ஆத்மாக்களுடையதாகவேண்டும்.

அன்றியும், எந்த ஆத்மாவுக்கு எந்தச் சரீரத்தில் நான் என்னுடையது என்னும் புத்தியிருக்கிறதோ அந்தச்சரீரமே அந்த ஆத்மாவினது. யானென்னும் புத்தியும் என்னுடையதென்னும் புத்தியும் ஒவ்வொன்றும். ஆதலால் எல்லா ஆத்மாவினுமிராது. ஆனால் ஒரு தர்மம் ஒரே தர்மியிற்றானிருக்கும். ஆதலால் ஒரே ஆத்மாவின் சரீரமாம். எந்த ஆத்மாவுக்கு எந்தச் சரீரமிருக்கிறதோ அந்தச் சரீரத்துடன் சம்பந்தப்பட்ட மனதும் இந்திரியமும் வெளிப்பதார்த்தங்களும் அந்த ஆத்மாவினுடையனவாம். ஆதலால் வியாபகமான நாநா ஆத்மாக்களை அங்கீகரித்தலினும் தோஷமில்லையென்று கூறின்,

அவ்வாறு கூறுதலும் பொருந்தாது. ஏனெனின், நான் என்னும் புத்தி ஒரு தேகத்தில் ஒரே ஆத்மாவுக்கிருந்தாலும் அது நியாயமதத்தில் பொருந்தாது. எல்லா ஆத்மாக்களுக்கும் ஒரு சரீரத்தில் நான் என்னும் புத்தி யுண்டாகவேண்டியது. ஏனெனின், நியாயமதத்தில் புத்தியென்பது ஞானத்திற்காம். அந்த ஞானம் ஆத்மமனதுகளின் சையோகத்தினு லுண்டாகிறது. அந்த மனதோடுண்டாம் சையோகம் எல்லா ஆத்மாக்களுக்கும் இருக்கிறது. ஆதலால் மனதின் சையோகத்தினல் ஒருசரீரத்தில் ஒரு ஆத்மாவுக்கு நான் என்னும் புத்தியுண்டாகிறதுபோல் ஒருசரீரத்தில் எல்லா ஆத்மாக்களுக்கும் நானென்னும் புத்தியுண்டாகவேண்டும்.

மனதின் சையோகம் எல்லா ஆத்மாக்களோடுமிருந்தாலும் எந்த ஆத்மாவில் ஞானத்தை யுண்டுபண்ணும் அதிருஷ்ட மிருக்கிறதோ அந்த ஆத்மாவுக்கே நானென்னும் புத்தியுண்டாகிறது என்று கூறின்,

அங்ஙனமாயினும், எல்லாருக்குமே ஞானமுண்டாகவேண்டும். ஏனெனின், வியாபகமான நாநா ஆத்மாவை யங்கீகரிக்கின், ஒரு சரீரத்தின் சுபாசுபக் கிரியைகளால் சரீரத்திலிருக்கும் எல்லா ஆத்மாக்களுக்கும் அதிருஷ்டம் உண்டாகவேண்டியது. இதனை முன் கூறிவந்தோம். ஆதலால் வியாபகமான நாநா ஆத்மாவை அங்கீகரிக்கின், ஒருதேகத்தில் எல்லா ஆத்மாக்களுக்கும் சுகதுக்கங்களின் போகமுண்டாகவேண்டும்; அனுபவத்தில் அப்படியில்லை.

ஆதலால் ஆத்மா * வியாபகமும் நாநாவும் கர்த்தாபோக்தாவுமாம் என்னும் நியாயசித்தாந்தம் நலமுடையதன்று.

**347.** நம்முடைய சித்தாந்தத்திலோ கர்த்தாபோக்தா அந்தக்கரணம். அந்த அந்தக்கரணம் அனேகம். அது வியாபகமுமன்று; அணுவுமன்று. அதன் பரிமாணம் சரீரத்துக்குச் சமானமாம். தீபப்பிரகாசம்போல் பெரிய சரீரத்தை யடையும்போது அந்தக்கரணம் விரிகிறது. சிறிய சரீரத்தில் அது சுருங்குகிறது. இவ்வார்த்தை சித்தாந்தபிந்துவின் வியாக்கியானத்தில் மதுசூதனஸ்வாமிகளால் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. எந்த அந்தக்கரணத்திற்கு எந்தச் சரீரத்தோடு சம்பந்தமிருக்கிறதோ அந்த அந்தக்கரணத்திற்கு அந்தச் சரீரத்தாற் போகமுண்டாகிறது.

அந்தக்கரணத்தை வியாபகமெனக்கொள்ளின் எல்லாச் சரீரங்களும் எல்லோருடையதாம்; போகமும் எல்லோருக்கு முண்டாகும். அந்த அந்தக்கரணம் வியாபகமன்றாகலின் தோஷமில்லை. அந்தக்கரணத்தை யணுவெனக்கொள்ளின், சரீரத்தின் ஓரிடத்தில் அது இருக்கவேண்டுமென்று அங்கீகரிக்க வரும். அவ்வாறு கூறுதலும் பொருந்தாது. ஏனெனின், ஒரேகாலத்தில் காலிலும் தலையிலும் முட்குத்தினால் இரண்டிடங்களிலும் ஒரேகாலத்தில் வேதனையுண்டாகிறது. அது உண்டாகலாகாது. ஏனெனின், அந்தக்கரணம் அணுவானால் ஒரேஸ்தானத்தில் ஒருகாலத்திலிருக்கும். அதனால் எவ்விடத்தில் அந்தக்கரண மிருக்கிறதோ அவ்விடத்திற்றான் வேதனையுண்டாக வேண்டியது; இரண்டிடங்களிலு முண்டாகலாகாது.

ஆதலால் அந்தக்கரணம் அணுவன்று; வியாபகமுமன்று. ஆனால் சரீரத்துக்குச் சமானமாயிருக்கிறது. அதனால் ஒரு தோஷமுமில்லை. அணுவிற்கும்

* எப்படிப் பல் சடங்களை வியாபகமென்பது பிரயோஜனமின்றியதோ அப்படியே சரீரங்கள்தோறுமுள்ள கர்த்தா போக்தாவான நாநா ஆத்மாக்களுக்கும் வியாபகத்துவஞ் சொல்வது நிஷ்பிரயோசனமாம்.

அல்லதூஉம் நாநா அந்தக்கரணங்களை யங்கீகரித்தலால் போகங்கள் கலவாமை சித்தித்தலால் வியாபகமான ஆத்மாவினை நாநாவென்பது நிஷ்பிரயோஜனமாம்.

வியாபகத்திற்கும் வேருயிருப்பது எதுவோ அதனையே மத்தியமபரிமாண மென்பர்.

348. [பூர்வபக்ஷி:—] நியாயமதத்தில் ஒர் நவீனர் இவ்வாறு அங்கீகரித்திருக்கின்றனர்:—

1. ஆத்மா நாநாவாம்; கர்த்தா போக்தாவாம்; வியாபகமன்று. ஆதலால் போகத்தின் கலப்பில்லை.

2. அணுவுமன்று. ஆதலால் இரண்டிடங்களிலும் முட்குத்தின வேதனை யுண்டாகாதென்பதுமில்லை: ஆனால் வேதாந்தமதத்தில் அந்தக்கரணம் மத்தியமபரிமாணமா யிருப்பதுபோல ஆத்மாவும் * மத்தியமபரிமாணமா யிருக்கிறது. அதனிடத்தில் 14 குணங்களிருக்கின்றன.

349. [சித்தாந்தி:—] அதுவும் நலமுடையதன்று. ஏனெனின்,

1. ஆத்மாவைச் சங்கோச விகாஸமு (சுருங்குதல் விரிதலு) டையதெனக் கொள்ளின் தீபப்பிரகாசம்போல் ஆத்மா விகாரியும் நாசமுடையதுமாகும். அதனால் மோக்ஷத்தைப் பிரதிபாதிக்கும் சாஸ்திரமும் சாதனங்களும் பிரயோஜன மற்றனவாம்.

2. மத்தியமபரிமாணத்தை யங்கீகரித்துச் சங்கோச விகாசங்களை யங்கீகரிக்காவிடின் எந்தச் சரீரத்துக்குச் சமானமாக ஆத்மாவை அங்கீகரிப்பதென்னும் நிச்சயமுண்டாகிறதில்லை.

3. மனுஷிய சரீரத்துக்குச் சமானமெனக் கொள்ளின், எப்போது ஆத்மா யானையின் சரீரத்தை அடைகிறதோ அப்போது முழுதேகத்திலும் ஆத்மா இல்லாமற்போகும். அதனால் எந்த இடத்தில் யானையின் ஆத்மாவில்லையோ அந்தவிடத்தில் வேதனையு முண்டாகலாகாது.

4. யானையின் சரீரத்துக்குச் சமானமாக ஆத்மாவை யங்கீகரிக்கின் அதனினும் வேறு சரீரங்கள் பெரிதாயிருக்கின்றன. அவற்றின் ஏகதேசத்தில் (ஒரிடத்தில்) வேதனை யுண்டாகலாகாது. எதற்குச் சமானமாக ஆத்மாவை அங்கீகரிக்கலாமோ, அத்தன்மைய எல்லாவற்றினும் பெரிய சரீரம் எதற்குமில்லை.

---

* இங்கு இது இரகசியமாம்:—எதனால் சரீரத்தினுள்ளிருக்கும் மனம் இந்திரிய முதலிய எல்லா அற்ப பதார்த்தங்களோடும் ஆத்மாவிற்குச் சையோகமிருக்கிறதோ, அதனால் மத்தியமபரிமாணமுடைய ஆத்மாவினிடத்திலும் நியாயசம்பிரதாயத்திற் கூறிய வியாபகத்தின் லக்ஷணம் சம்பவிக்கிறது.

5. எல்லாச் சரீரங்களேயும்விடப் பெரிதான விராட்டின் சரீரத்துக்குச் சமானமாக ஆத்மாவைக் கொள்ளின், விராட்டின் சரீரத்தினுள் சகல சரீரங்களும் அடங்கியிருத்தலால் எல்லா ஆத்மாக்களுக்கும் எல்லாச் சரீரங்களோடும் சம்பந்தமுண்டாகும். அதன்கண் முன் தோஷம் சொல்லப்பட்டேயிருக்கிறது.

மத்தியமபரிமாணமாயிருக்கும் வஸ்து எதுவோ அது சரீரம்போல் அநித்தியமாகும் என்று நியமமிருக்கிறது. ஆதலால் ஆத்மாவும் மத்தியமபரிமாணமாயிருத்தலால் அநித்தியமாகும். நம்முடைய மதப்படி அந்தக்கரணம் ஞானத்தினுல் நாசமடைகிறது; ஆதலால் அநித்தியமாம். அந்தக்கரணத்திற்கு மத்தியமபரிமாணம் அங்கீகரிப்பதனுல் தோஷமில்லை.

இவ்விதத்தால் நவீனதார்க்கிகர் மதமும் நலமுடையதன்று.

350. [பூர்வபக்ஷீ:—] ஆத்மா நாநாவும் அணுவுமாமென்று சில நையாயிகர் சொல்லுகின்றனர்.

[சித்தாந்தீ:—] அவ்வார்த்தையும் பொருந்தாது. ஏனெனின்,

1. ஆத்மாவைக் கர்த்தா போக்தாவெனக் கொள்ளின், அந்தக்கரணத்தை யணுவென்றவிடத்திற் சொல்லப்பட்ட தோஷம் எதுவோ அஃதுண்டாகும்.

2. ஆத்மாவைக் கர்த்தா போக்தாவென்று அங்கீகரிக்காவிடின் ஆத்மா அநேகமென்று கொள்ளுதல் நிஷ்பலமாய்விடும். வியாபகமான ஓராத்மாவையே எல்லாச்சரீரங்களினு மிருப்பதாக அங்கீகரித்தல் தகுதியாம்.

கர்த்தா போக்தாவென்று அங்கீகரிக்காவிடின் இந்த நையாயிகனுக்குத் தனது சித்தாந்தத்தையும் கைவிடுதலுண்டாம். ஏனெனின், ஞானம் சுகம் துக்கம் தர்மமுதலியன ஆத்மாவின் தர்மங்களென்பது அணுவாதியின் சித்தாந்தம். ஆதலால் ஆத்மாவை யணுவென்று அங்கீகரிக்கின் சரீரத்தின் எந்தவிடத்தில் ஆத்மா இல்லையோ அந்த இடம் மிருத (பிண) சமானமாம், அவ்விடத்தில் வேதனைமுதலியன உண்டாகலாகாது.

351. ஆத்மாவோ சரீரத்தில் ஓரிடத்திலிருக்கிறது. ஆனுல் கஸ்தூரியின் வாஸனைபோல் அதன் ஞானம் முழுசரீரத்திலும் வியாபித்திருக்கிறது. அதனுல் சரீர முழுவதிலுமுண்டாம் அநுகூலப் பிரதிகூலங்களின் சம்பந்தத்தினை அநுபவஞ் செய்கின்றது என்று கூறின்,

அதுவும் பொருந்தாது. ஏனெனின், எவ்வளவிடத்தில் குணமுடைய வஸ்து இருக்குமோ அதற்கு வெளியில் குணமிராது; குணியிலேயே குண

யிருக்கும் என்பது நியமம். கடாதிகளின் ரூபம் அவற்றிற்கு வெளியிலிராதது போல் ஆத்மாவுக்கு வெளியில் ஞானமும் பொருந்தாது. கஸ்தூரியின் சூக்ஷ்ம பாகம் எவ்வளவிடத்தில் வியாபித்திருக்கிறதோ அவ்வளவிடத்திலேயே கந்தம் வியாபித்ததாகிறது. ஆதலால் கஸ்தூரியின் திருஷ்டாந்தமும் பொருந் தாது. ஆதலால் "ஆத்மா அணு" வென்னும் பக்ஷமும் பொருந்தாது.

சிலவிடத்துச் சுருதிகளில் ஆத்மா அத்தியந்தம் அணுவினும் அணு வென்று சொல்லப்பட்டிருக்கிறது. அது அறிதற்கரியதா யிருத்தல்பற்றிக் கூறியதாம். அத்தியந்தம் அணுவாயிருக்கும் வஸ்துவின் ஞானம் மந்தப் பார்வையுள்ளவர்களுக்கு உண்டாகாததுபோல் பகிர்முக புருஷர்களுக்கு ஆத்மாவின் ஞானமுமுண்டாகாது. ஆதலால் அணுவிற்குச் சமானமாமென்ப தே சுருதியின் அபிப்பிராயம். "ஆத்மா அணு" வென்னும் அபிப்பிராயமில்லை. ஏனெனின், * அநேக இடங்களில் ஆத்மா வியாபகரூபமென்று வேதம்தானே பிரதிபாதித்திருக்கிறது. ஆதலால் ஆத்மா அணுவன்று.

இவ்விதத்தால் ஆத்மா வியாபகமாயும் நாநாவாயும் அல்லது மத்தியம பரிமாணமாயும் நாநாவாயும் அல்லது அணுவாயும் நாநாவாயுமிருக்கிறதென்று கூறுதல் பொருந்தாது.

---

* "அணுவினு மணுவும் மகத்தினு மகத்துமாம்" என்னும் சுருதிக்கு இது பொரு ளாம்:—

(1) பிருதிவியினும் ஜலம் சூக்ஷ்மமும் வியாபகமுமாம்.

(2) ஜலத்தினும் தேயு சூக்ஷ்மமும் வியாபகமுமாம்.

(3) தேயுவினும் வாயு சூக்ஷ்மமும் வியாபகமுமாம்.

(4) வாயுவினும் ஆகாயம் சூக்ஷ்மமும் வியாபகமுமாம்.

(5) ஆகாயத்தினும் மாயை சூக்ஷ்மமும் வியாபகமுமாம்.

(6) மாயையினும் ஆத்மா சூக்ஷ்மமும் வியாபகமுமாம்.

(7) இவை முதலிய சுருதிகளில் ஆத்மாவிற்கு எல்லாவற்றினும் சூக்ஷ்மத்தன் மையும் வியாபகத்தன்மையும் சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்வர்த்தம் உபதேசசகஸ்ரியில் பகவான் பாஷ்யகாரரால் சொல்லப்பட்டி ருக்கின் றது. அதை யநுசரித்து ஸ்ரீ விசாரசந்திரோதயத்தின் பத்தாவது கலையிலும் யுக்தியோடு எழுதப்பட்டிருக்கின்றது. ஆதலால் ஆத்மா அணுவென்று கூறுதல் பயனில்லாததாம்.

352. * பரிசேஷத்தால் ஆத்மா ஏகமாயும் வியாபகமாயு மிருக்கிறது. அதனிடத்தில் தர்மாதர்மங்கள் சுகதுக்கங்கள் பந்தமோக்ஷங்கள் என்பவற்றை யங்கீகரிக்கின், சிலருக்குச் சுகம் சிலருக்குத் துக்கம் சிலருக்குப் பந்தம் சிலருக்கு மோக்ஷம் என்னும் வியவகாரமுண்டாகாது. ஆதலால் தர்மாதிகள் புத்தியின் தர்மங்களாம்.

புத்தி ஜடமாயிருத்தலால் அதனிடத்திலும் தர்மசுகாதிகள் பொருந்தாவெனினும், ஆத்மாவின் தர்மங்களாகா என்னும் அபிப்பிராயத்தால் புத்தியின் தர்மமெனப்படுகின்றன; "புத்தியின் தர்மமா" மென்பதில் அபிப்பிராயமன்று.

புத்தியும் சுகாதிகளும் ஆத்மாவினிடத்தில் அத்தியஸ்தங்களா யிருக்கின்றன.

1. எது எதில் அத்தியஸ்தமாயிருக்கிறதோ அது அதில் பாமார்த்தமாயிருப்பதில்லை. ரஜ்ஜுவில் அத்தியஸ்தமான சர்ப்பம் பரமார்த்தமாக ரஜ்ஜுவில் இல்லாததுபோல் புத்தியும் சுகாதிகளும் ஆத்மாவினிடத்திலில்லை.

2. அத்தியஸ்தவஸ்துவும் எதற்கும் ஆசிரயமாகிறதில்லை. ஆதலால் புத்தியும் சுகாதிகளின் ஆசிரயமன்று.

(1) ஆனல் அஞ்ஞானமோ சுத்தசேதனத்தில் அத்தியஸ்தமா யிருக்கிறது.

(2) அந்தக்கரணம் அஞ்ஞான உபகிதத்தில் அத்தியஸ்தமாயிருக்கிறது.

(3) அந்தக்கரணஉபகிதத்தில் தர்மாதர்மங்கள் சுகதுக்கங்கள் பந்தமோக்ஷங்கள் அத்தியஸ்தமாயிருக்கின்றன.

இவ்வாற்ருல் ஆத்மாவிலுள்ள தர்மாதிகளின் அதிஷ்டானத்தன்மைக்கு அந்தக்கரணம் உபாதியாயிருக்கிறது. ஆதலால் அந்தக்கரணத்தின் தர்மமெனப்படுகின்றன.

353. அந்தக்கரணவிசிஷ்டத்தில் தர்மாதிகள் அத்தியஸ்தமெனின் பொருந்தாது. ஏனெனின், விசேஷணத்தோடுகூடியதனை விசிஷ்டமென்பர். தர்மாதிகளின் அத்தியாஸத்துக்கு அதிஷ்டானமான ஆத்மாவுக்கு அந்தக்கரணத்தை விசேஷணமாக அங்கீகரித்தால் அந்தக்கரணமும் தர்மம் சுகமுதலியவற்கு அதிஷ்டானமாகும். இவ்வார்த்தை பொருந்தாது. ஏனெனின்

---

* பலபொருள்கள் நிகழ்ந்தகாலத்து மற்றவை நிஷேதிக்கப்பட எஞ்சிநிற்கும் ஒருபொருளினுண்டாம் நிச்சயம் பரிசேஷ மெனப்படும். அந்தப் பரிசேஷத்தால்.

மித்தியாவஸ்து அதிஷ்டானமாகாது. ஆதலால் ஆத்மாவில் தர்மாதிகளின் அத்தியாஸத்துக்கு அந்தக்கரணம் விசேஷணமன்று; ஆனால் உபாதியாம்.

1. உபாதியின் சுபாவம் இதுவாம்:—தான் தடஸ்தமாய் அதாவது எல்லையி லிருப்பதாய் (சம்பந்தப்படாமலிருந்துகொண்டு) தான் எவ்வளவிடத்தி லிருக் கிறதோ அவ்வளவிடத்திலுள்ள வஸ்துவை யறிவிக்கும்.

2. விசேஷணத்தின் சுபாவம் இதுவாம்:—எவ்வளவிடத்தில் தானிருக்கி றதோ அவ்வளவு இடத்திலுள்ள வஸ்துவைத் தன்னுடன் அறிவிக்கும்.

1. விசேஷணமுடையதனை விசிஷ்டமென்பர்.

2. உபாதியுடையதனை உபஹிதமென்பர்.

இவ்வாற்றால் அந்தக்கரண விசிஷ்டத்திலுள்ள தர்மாதிகளை யத்தியஸ்த மெனின், எவ்வளவிடத்தில் அந்தக்கரண மிருக்கிறதோ, அவ்வளவிடத்தி லுள்ள சேதனபாகமும் அந்தக்கரணமும் இரண்டும் அதிஷ்டானமாகும். அந்த அந்தக்கரணம் தானும் அத்தியஸ்தமாயிருத்தலால் அதிஷ்டானமாகாது. இந்த அபிப்பிராயத்தால் அந்தக்கரணவுபகிதத்தில் தர்மாதிகள் அத்தியஸ்தமெனப் பட்டன.

ஆதலால் "எவ்வளவிடத்தில் அந்தக்கரணமிருக்கிறதோ அவ்வளவிடத்தி லுள்ள சேதனபாகமாத்திரம் அதிஷ்டானமாம்; அந்தக்கரணம் அதிஷ்டான மன்று" என்று கூறுதல் பொருந்துகின்றது.

354. அப்படியே அந்தக்கரணமும் அஞ்ஞானவுபகிதத்தில் அத்தியஸ்த மாயிருக்கிறது; அஞ்ஞானவிசிஷ்டத்தில் அத்தியஸ்தமாயில்லை.

இவ்விதத்தால் அத்தியஸ்தமான தர்மாதிகளுக்கு அதிஷ்டானம் ஆத்மா வாம்.

1. அத்தியாஸத்தின் அதிஷ்டானத்தன்மைக்கு அந்தக்கரண முபாதியா யிருக்கிறது. ஆதலால் சுகதுக்காதிகள் புத்தியின் தர்மங்களெனப்பட்டன.

2. அவிவேகத்தினால் அந்தக்கரணம் ஆத்மா என்னுமிரண்டிலும் அவை பிரதீதியாகின்றன; அதனால் அந்தக்கரண விசிஷ்டப்பிரமாதாவின் தர்மங்க ளெனப்படுகின்றன.

1. தர்மாதிகள் அந்தக்கரணத்தின் தர்மங்களாம்.

2. அல்லது அந்தக்கரண விசிஷ்டப்பிரமாதாவின் தர்மங்களாம்.

3. அல்லது ரஜ்ஜு—சர்ப்பம்போலவும் சொப்பனபதார்த்தம்போலவும் கந்தர்வபட்டணம்போலவும் ஆகாசத்தின் நீலவர்ணம்போலவும் எதன் தர்மமு மாகா.

எவ்விதத்தாலும் ஆத்மாவின் தர்மங்களன்று.

ஆத்மாவினிடத்தில் அத்தியஸ்தமானாலும் எந்த வஸ்து எதனிடத்தில் அத்தியஸ்தமாயிருக்கிறதோ அது அதனிடத்திலேயே பரமார்த்தமாக இருப்பதில்லை. ஆதலால்ராகத்துவேஷங்கள் தர்மாதர்மங்கள் சுகதுக்கங்கள் பந்தமோக்ஷங்கள் என்னு மிவையின்றிய ஏகமும் வியாபகமுமாய் ஆத்மா இருக்கின்றது.

அத்தியஸ்தமென்பது கற்பிதத்தி (கற்பிக்கப்பட்டத)ற்காம்.

## 355. ஆத்மா சத்தெனல்.

அந்த ஆத்மா சத்தாம்.

1. எந்த வஸ்து ஞானத்தினுல் இல்லாமற்போகிறதோ அது அஸத்தென்று சொல்லப்படுகிறது.

2. எதன் நிவிருத்தி எக்காலத்திலு முண்டாகிறதில்லையோ அது சத்தென்று சொல்லப்படும்.

சகல பதார்த்தங்களுக்கும் அவற்றின் நிவிருத்திக்கும் ஆத்மா அதிஷ்டானமாம்.

ஆத்மாவுக்கே நிவிருத்தியுண்டாகுமாயின் அதற்கு வேறு அதிஷ்டானஞ் சொல்லவேண்டும். ஏனெனின்,

1. சூனியத்தில் நிவிருத்தி யுண்டாகாது.

2. ஆத்மாவுக்கும் அதன் நிவிருத்திக்கும் வேறு அதிஷ்டானம் அங்கீகரிக்கின், அதற்கு வேறு அதிஷ்டானம் அங்கீகரிக்கவேண்டும். இவ்விதமாக அநவஸ்தாதோஷம் சம்பவிக்கும்.

அன்றியும், ஆத்மாவின் நிவிருத்தியை அங்கீகரிக்கிறவனை ஆத்மாவின் நிவிருத்தியை எவனாவது அனுபவித்திருக்கிறானா? இல்லையா? என்று கேட்கவேண்டும்.

1. அனுபவித்திருக்கிறானென்று சொல்லுவானாயின்,

அது பொருந்தாது. ஏனெனின், எவன் அனுபவிக்கிறவனோ அவனே ஆத்மாவும் தனது ஸ்வரூபமுமாவன். அதன் நிவிருத்தியின் அநுபவம் தன் தலையை வெட்டினதைத் தான் அனுபவிப்பதற்குச் சமானமாகும். ஆகையால் ஆத்மாவின் நிவிருத்தியின் அனுபவம் பொருந்தாது.

2. ஆத்மாவின் நிவிருத்தியோ உண்டாகிறது; ஆனால் அதன் நிவிருத்தியின் அனுபவம் ஒருவனுக்கு மில்லையெனின்,

இது சித்தித்தது:—ஆத்மாவுக்கு நிவிருத்தியோ உண்டாகிறதில்லை. ஏனெனின், எந்த வஸ்து ஒருவனாலும் அனுபவிக்கப்படவில்லையோ அது மலடிமகனுக்குச் சமானமாகும்.

ஆகையால் ஆத்மாவின் நிவிருத்தி யுண்டாகிறதில்லை. இதனாலேயே ஆத்மா சத்தாம்.

## 356. ஆத்மா சித்து (சைதன்னியம்) எனல். 356—359.

ஆத்மா சித்தாம்.

பிரகாசரூபமான ஞானம் * சித்தெனப்படும்.

1. ஆத்மாவை அப்பிரகாசரூபமாக அங்கீகரிக்கின் அநாத்ம ஜடவஸ்துக்களின் பிரகாசம் ஒருகாலு முண்டாகமாட்டாது.

2. அந்தக்கரணம் இந்திரியங்கள் என்பவற்றால் பதார்த்தங்களின் பிரகாச முண்டாகிறதெனிற் பொருந்தாது. ஏனெனின், அந்தக்கரணமும் இந்திரியங்களும் பரிச்சின்னமாயிருக்கின்றன. ஆதலால் அவை காரியங்களாம்.

1. எது பரிச்சின்னமாயிருக்கிறதோ அது கடம்போல் காரியமாம். அந்தக்கரணமும் இந்திரியங்களும் பரிச்சின்னமாயிருத்தலால் காரியங்களாம்.

2. தேசகாலங்களால் எதற்கு முடிவுண்டாகிறதோ அது பரிச்சின்னமெனப்படும்.

3. எது காரியமோ அது ஜடமாம்.

அந்தக்கரணமும் இந்திரியங்களும் ஜடமாயிருக்கின்றன. அவற்றால் எந்த வஸ்துவும் பிரகாசிக்கமாட்டாது. ஆதலால் எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்கிற ஆத்மா பிரகாசரூபமாயிருக்கிறது.

**357.** ஆத்மா பிரகாசரூபமன்று; அது ஜடமாம்; அதனிடத்தில் ஞானகுணமுண்டு; அந்த ஞானத்தால் ஆத்மாநாத்மாக்களின் பிரகாச முண்டாகின்றது என்று சொல்லுவானாயின், அவனை, 1. ஆத்மாவின் ஞானகுணம் நித்தியமா?, 2. அல்லது அநித்தியமா? என்று கேட்கவேண்டும்.

1. நித்தியமெனின்,

ஆத்மாவின் ஸ்வரூபமே ஞானமென்று சித்திக்கும். ஏனெனின், ஆத்மாவுக்கு வேறானதெல்லாம் அநித்தியம் என்பது நியமம். ஞானத்தை ஆத்மாவுக்கு வேறெனக் கொள்ளின், அநித்தியமேயாகும். ஆதலால் ஞானம்

---

* அலுப்த (கெடாத) பிரகாசத்தினைச் சித்தென்பர். சேதனவடிவ ஞானத்திற்கு லோபம் (கேடு) இல்லை. இவ்வர்த்தத்தில் இது சுருதியாம்:—திருஷ்டாவின் (சொரூபவடிவ) திருஷ்டிக்கு லோபம் (நாசம்) இல்லை; அவிநாசியாயிருத்தலால்.

நித்தியமென்று கொண்டு ஞானம் ஆத்மாவுக்கு வேறென்று சொல்லுதல் பொருந்தாது.

2. அநித்தியமெனக் கொள்ளின்,

கடமுதலியவற்றைப்போல ஜடமாம். அநித்தியவஸ்து எதுவோ அது ஜடமாம். ஆதலால் "ஞானம் அநித்தியமாம்" என்று கூறுதல் பொருந்தாது. ஆனால் ஞானம் நித்தியமேயாம். அந்த நித்தியஞானம் ஆத்மசொரூபமேயாம். அநித்தியமெனக் கொள்ளின், ஒருகாலத்தில் ஆத்மாவில் ஞானமிருக்கும்; ஒருகாலத்தி லிராது. ஆதலால் ஆத்மாவிற்கு வேறாகவும் ஞானமிருக்கும்; நித்தியமெனக் கொள்ளின் அது பின்னமாகாது.

எது குணமோ அது குணியிடத்தில் ஒருகால் இருக்கும்; ஒருகால் இல்லாமலுமிருக்கும். வஸ்திரத்தின் நீல மஞ்சட்குணங்கள் ஒருகால் வஸ்திரத்தி லிருக்கும்; ஒருகால் இல்லாமலுமிருக்கும். ஆதலால் எது குணமோ அது போக்குவரத்துடையதாம்.

ஞானம் நித்தியமாகலின் போக்குவரத்துடையதன்று. ஆதலால் ஆத்மாவின் ஸ்வரூபமே ஞானமாம்.

358. ஞானத்தை அநித்தியமென்று கூறின், இந்திரியங்களாலாவது அந்தக்காணத்திலாவது ஞானம் உற்பத்தியாமென்று சொல்ல நேரும்.

அது பொருந்தாது. ஏனெனின் சுழுத்தியில் இந்திரியாதிகளோ இல்லை; சுகத்தின் ஞானமுண்டாகிறது. அது உண்டாலாகாது.

சுழுத்தியில் சுகத்தின் ஞானமங்கீகரியாவிடின் விழித்துக்கொண்டவனுக்கு "நான் சுகமாய்த் தூங்கினேன்" னென்று சுழுத்திசுகத்தின் ஸ்மிருதி (நினைவு) உண்டாகிறது; அது உண்டாகலாகாது. எந்தவஸ்து முன்னறியப்பட்டிருக்கிறதோ அதன் ஸ்மிருதியுண்டாகும். அறியப்படாத வஸ்துவின் ஸ்மிருதி யுண்டாகாது. சுழுத்திசுகத்தின் ஸ்மிருதி விழித்துக்கொண்டவனுக்குண்டாதலால் சுழுத்தியில் சுகத்தின் ஞானமுண்டு. அந்தஞானத்தை யுண்டு பண்ணும் இந்திரியாதிகள் சுழுத்தியிலில்லை. ஆதலால் ஞானம் நித்தியமாம்.

ஞானத்தைவிட்டு ஆத்மா ஒருபோதுமிருக்கிறதில்லை. ஆதலால் ஞானம் ஆத்மாவின் சொரூபமாம். எப்படி உஷ்ணத்தன்மையைவிட்டு அக்கினி ஒருகாலு மிராமையால் உஷ்ணத்தன்மை அக்கினியின் சொரூபமாயிருக்கிறதோ அப்படியே ஞானமும் ஆத்மாவின் சொரூபமாயிருக்கிறது. எது போக்குவரத்துடையதோ அது குணமாம். உஷ்ணத்தன்மையும் ஞானமும் போக்குவரத்துடையனவன்று. ஆதலால் இவை முறையே அக்கினியின் சொரூபமும் ஆத்மாவின் சொரூபமுமாம்.

எந்த வஸ்து ஒருகாலத்திலிருந்து ஒருகாலத்தில் இல்லாமலிருக்கிறதோ அது ஆகமாபாயி (போக்குவரத்துடையது) எனப்படும்.

359. உற்பத்தியும் விநாசமும் அந்தக்கரணவிருத்திக் கிருக்கின்றன; ஞானத்திற்கில்லை.

1. ஆத்மஸ்வரூபமான ஞானம் விசேஷவியவகாரத்திற் கேதுவன்று. ஆனால் ஞானத்தோடுகூடியவிருத்தி அல்லது விருத்தியில் ஆரூடமான (ஏறிய) ஞானம் வியவகாரத்திற்கேதுவாம். இது அவச்சேதவாதத்தின் கிரமம்.

2. ஆபாஸவாதத்தில் ஆபாஸசகிதவிருத்தியால் வியவகாரமுண்டாகிறது. ஆபாஸவாயிலாகவாவது அல்லது சாக்ஷாத் விருத்தியின்வாயிலாகவாவது ஆத்மஸ்வரூபஞானத்தினாலேயே சர்வவியவகாரமுஞ் சித்திக்கிறது. இல்லாவிடின் ஒருவியவகாரமுஞ் சித்திக்கிறதில்லை. இவ்விதத்தால் எல்லாவற்றையும் பிரகாசிப்பது ஞானஸ்வரூப ஆத்மாவே. ஆதலால் அது சித்தாம்.

## 360. ஆத்மா ஆநந்தரூபமெனல். 360—363.

ஆத்மா ஆநந்தரூபமாயிருக்கிறது. ஆத்மா ஆநந்தரூபமாகாவிடின், விஷயசம்பந்தத்தினால் சொரூபானந்தம் தோற்றுகிறது. அது உண்டாகலாகாது. விஷயத்தில் ஆநந்தமில்லை யென்பது முன் 4-வது தரங்கத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

விஷயத்தில் ஆநந்தமிருக்குமாயின், எந்த விஷயத்தினால் ஒருவனுக்குச் சுகமுண்டாகிறதோ அதனாலேயே வேறொருவனுக்குத் துக்கமுண்டாகிறது. நெருப்பைத் தொடுவதனால் அக்கினிகீடத்துக்கும், ஆண்சர்ப்பத்தைப் பார்ப்பதனால் பெண்சர்ப்பத்திற்கும், ஆண்சிங்கத்தைப் பார்ப்பதினால் பெண்சிங்கத்துக்கும் ஆநந்தமுண்டாகிறது; மற்றப் புருடர்களுக்குத் துக்கமுண்டாகிறது. அது * உண்டாகலாகாது. சித்தாந்தத்தில் அக்கினிகீடத்துக்கு

* எதனால் ஒரே விஷயத்தினால் சிலருக்குச் சுகமும் சிலருக்குத் துக்கமுமுண்டாகிறதோ, அதனால் அந்த விஷயம் நியமமாகத் தன்னை விரும்புவோரும் விரும்பாதவர்களுமாகிய எல்லாப்புருடர்களுக்கும் சுகத்துக்குக் காரணமாகிறதில்லை. ஆனால் விஷய இச்சையுள்ள புருஷனுக்கே விஷயம் தன் அடைவால் இச்சை நீங்க, அதன்வாயிலாக அந்தர்முகமாகிய விருத்தியில் பிரிய மோதப் பிரமோதத்தின் பரியாயவடிவ ஆத்மஸ்வரூபாநந்தத்தின் பிரதிபிம்பத்துக்குக் காரணமாயிருக்கிறது. ஆதலால் விஷயம் ஆனந்தத்துக்குக் காரணமாதல் வியபிசரிக் (பிறழ்) கிறது. மேலும் விஷயப்பிராப்தியினாலாவது ஏகாந்தத்திலிருப்பதனாலாவது உண்டாகும் இச்சையின் அபாவம் எதுவோ அது பிரதிபிம்பசுகத்துக்கு நியமமாய்க் காரணமாம்.

ஆத்மா ஆநந்தரூபமாகாவிடின் அந்தர்முகவிருத்தியில் எந்த ஆநந்தமுண்டாகிறதோ அஃதுண்டாகலாகாது. ஆதலால் ஆத்மா ஆநந்தரூபமாம். இது சகலப்பிரகரணத்தின் சாரமாம்.

நெருப்பைத் தொடுவதில் இச்சையுண்டாகும். அப்போது சஞ்சலபுத்தியில் சொரூபானந்தம் தோற்றுகிறதில்லை. அக்கினிசம்பந்தத்தால் க்ஷணமாத்திரம் இச்சை விலக நிச்சலபுத்தியிற் சொரூபானந்தம் விளங்குகிறது. மற்றைப் புருஷர்களுக்கு அக்கினிசம்பந்தத்தின் இச்சை யுண்டாகிறதில்லை. ஆனால் பிறபதார்த்தங்களினிச்சை இருக்கிறது. அவற்றின் இச்சை அக்கினி சம்பந்தத்தால் நிவிருத்தியாகிறதில்லை. ஆதலால் சஞ்சலமான அந்தக்கரணத்தில் அக்கினிசம்பந்தத்தால் ஆநந்தமுண்டாகிறதில்லை. (அக்கினிகீடம்= நெருப்பிலிருக்கும் ஓர் புழு.)

**361.** இதில் இச்சங்கை யுண்டாகிறது:—அந்தக்கரணத்தின் இச்சாரூப விருத்தி எதுவோ அது விஷயப்பிராப்தியால் நாசமடைந்துவிட்டது. வேறு விருத்திக்கு யாதொரு நிமித்தமுமில்லை யாகலின் உற்பத்தியாகாது. விருத்தி யின்றிச் சொரூபானந்தம் தோற்றுகிறதில்லை. ஆதலால் விஷயத்திலேயே ஆநந்தமிருக்கிறது.

அச்சங்கை பொருந்தாது. ஏனெனின்,

1. இச்சாரூபமான அந்தக்கரணவிருத்தியோ இல்லை. அது இருந்தாலும் அதில் ஆனந்தம் பிரகாசியாது. ஏனெனின், இச்சாரூபவிருத்தி ராஜஸம் (இராஜோகுணத்தினதாம்.)ஆனந்தத்தின் பிரகாஸம் ஸாத்வீகவிருத்தியில் உண்டாகிறது. அங்ஙனமாயினும், இச்சித்த பதார்த்தம் எது கிடைத்திருக்கிறதோ அதன் சொரூபத்தை விஷயித்தற்பொருட்டுள்ள அந்தக்கரணத்தின் ஞான ரூபவிருத்தி எதுவோ அது சாத்வீகமாம். ஏனெனின் சத்துவகுணத்தினின்று ஞான முண்டாகிறதென்பது நியமம். அந்த ஸாத்வீகவிருத்தியில் ஆநந்தம் விளங்குகிறது. ஆனால் அந்த ஞானரூபவிருத்தி பகிர்முகமாம். அதன் பிருஷ்ட (பின்) பாகத்திலிருக்கும் அந்தக்கரணவுபஹித சேதனஸ்வரூபானந்தம் எதுவோ அது அந்த விருத்தியால் கிரகிக்கப்படுகிறதில்லை. ஆதலால் விஷயவுபஹித சேதனரூப ஆனந்தம் விளங்குகிறது. அந்த விஷய உபஹித சேதனம் ஆத்மாவுக்கு அந்நியமன்று. ஆதலால் ஆத்மானந்தமே விஷயத்தில் விளங்குவதாகச் சொல்லப்படுகிறது. அந்த ஞானரூபவிருத்தியில் விஷயத் தோடுண்டாம் நேத்திராதிகளின் சம்பந்தமே காரணமாம்.

2. அல்லது ஞானரூபபகிர்முகவிருத்தியினும் வேறான * அந்தர்முக விருத்தியுண்டாகிறது. அதனிடத்தில் அந்தக்கரண உபஹித சேதனரூப ஆநந்தமே விளங்குகிறது. இது உத்தமசித்தாந்தம். அந்த விருத்தியினுற்பத்தியில் இச்சாதிகளின் அபாவமே காரணமாம். இச்சை முதலியனவின்றி

---

* அது ஏகாக்கிரத்தன்மையோடுகூடிய சாத்துவீகவிருத்தியாம். இதனையே பிரிய மோதப் பிரமோதவிருத்தியென்றும் கூறுகின்றனர்.

ஏகாந்தத்திலிருக்கும் உதாஸீனபுருஷனுக்குப் பகிர்முக ஞானரூபமாக ஒரு விருத்தியும் உண்டாகிறதில்லை. ஆநந்தத்தின் விளக்கம் உண்டாகிறது. ஆதலால் இச்சாதிகளின் அபாவரூப காரணத்தினால் அந்தர்முகவிருத்தி ஆநந்தத்தைக் கிரகிப்பதாகிறது. அதனால் இச்சித்த பதார்த்தம் கிடைத்தலால் இச்சாதிக ளில்லாமற்போதலின் ஞானத்திற்குப்பின் அந்தர்முகவிருத்தி யுண்டாகிறது. அதனால் அந்தக்கரண உபகித ஆநந்தமே கிரகிக்கப்படுகிறது.

அந்த ஸ்வரூபானந்தத்தின் கிரகணமும் விஷயத்தின் ஞானமும் அத்தியந்தம் அவ்வியவஹிதமா (மறைபடாதனவா) யிருக்கின்றன. அதனால் "நான் * விஷயத்தில் ஆநந்தத்தை அநுபவித்தேன்" என்னும் பிராந்தி புருஷனுக்குண்டாகிறது. † முதற்பக்ஷத்தினும் இப்பக்ஷம் உத்தமமாம். ஏனெனின், விஷயத்தின் ஞானரூபவிருத்தியினால் அந்தக்கரண உபகித ஆநந்தத்தின் விளக்கம் பொருந்தாது. ஆதலால் விஷய உபகித ஆநந்தத்தின் விளக்க முண்டாகுமாயின், அப்போது மார்க்கத்திலுள்ள மரத்தின் ஞானரூபவிருத்தி எதுவோ

---

* நாய் எலும்பைக் கடிக்கின்றது. அதனால் குத்தப்பட்ட தன்வாயின் தாடை முதலியவற்றினின்றும் ரக்தம் வெளிப்படுகின்றது. அதனைச் சுவைத்து "இந்த உதிரம் எனக்கு எலும்பினின்றுங் கிடைத்தது" என்று எண்ணுகிறது. அதுபோல விரும்பிய பொருளின் அடைவாகிய நிமித்தத்தால் இச்சை நீங்க அதன்வாயிலாக அந்தர்முகமாகிய (உள்நோக்கிய) விருத்தியிற் பிரதிபிம்பித்த சொரூபாநந்தத்தின் அநுபவத்தைச் செய்து "யான் விஷயத்தில் ஆநந்தாநுபவத்தைச் செய்திருக்கிறேன்" என்று அவிவேகிக்குப் பிராந்தியுண்டாகிறது.

அந்தப்பிராந்தியினால் அவன் மறுபடியும் அதிக விஷயங்களை அடைதற்பொருட்டு முயற்சிக்கின்றான். விவேகிக்கு முற்கூறிய பிராந்தியில்லையாகலின் அவன் நிருபாதிக (உபாதியின்றிய) ஆநந்தத்தை அடைதற்பொருட்டு வேதாந்தவிசார முதலியவற்றில் முயலுகின்றான்.

1. விஷயத்திலுண்டாகும் ஆநந்தத்தின் விளக்கம் எதுவோ அதுவும் சொரூபத்தின் ஆநந்தமாம். அங்ஙனமாயினும், நாய்ப்பாத்திரத்தில் வைக்கப்பட்ட பாலினைப்போல நிஷித்தமாயிருத்தலால் அவ்விஷயாநந்தம் உபாதேயமன்று; ஆனால் அநேக விக்ஷேபங்களுக்கு ஏதுவாயிருத்தலால் தள்ளத்தக்கதாம்.

2. விஷயத்தின் அபாவத்தோடு விசாரமுதலிய சாதனங்களால் விளங்கும் ஆநந்தம் எதுவோ அது பொன்முதலிய பாத்திரத்துள்ள பாலினைப்போலச் சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டதாயிருத்தலின் கொள்ளத்தக்கதாம்.

† "விஷயாகாரவிருத்தியினால் விஷய உபகித சேதனவடிவ ஆநந்தத்தின் பான (விளக்க) முண்டாகின்றது" என்னும் முதற்பக்ஷத்தினும் "வேறு அந்தர்முகவிருத்தியில் அந்தக்கரண உபகித சேதனமாகிய ஆநந்தத்தின் விளக்கமே யுண்டாகின்றது" என்னும் இரண்டாவதுபக்ஷம் உத்தமமாம். இந்தப்பக்ஷமே முன் 4-வது தரங்கத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது.

அதுவும் சாத்விகமாயிருக்கிறது. அதனாலும் விருக்ஷவுபகிதசேதன ஸ்வரூபானந்தத்தின் விளக்கமுண்டாதல்வேண்டும். அப்படியே சர்வஞானத்தினாலும் ஞேய உபகித சேதனரூப ஆநந்தத்தின் விளக்கமுண்டாதல்வேண்டும். ஆதலால் அநாத்மவஸ்துவின் ஞானரூப பகிர்முக விருத்தியினால் ஞேய உபகித சேதனஸ்வரூபானந்தம் கிரகிக்கப்படுகிறதில்லை.

இவ்விதத்தால் விஷயசம்பந்தத்தால் ஆத்மஸ்வரூபானந்தத்தின் விளக்கமுண்டாகிறது. ஆத்மா ஆநந்தரூபமாகாவிடின், விஷயசம்பந்தத்தால் ஆநந்தத்தின் விளக்கம் பொருந்தாது. ஆகையால் ஆத்மா ஆநந்தரூபமாயிருக்கிறது.

302. ஆத்மாவின் சம்பந்தமுடைய வஸ்துக்களில் பிரியமுண்டாகிறது. அவற்றினும் சமீபத்திலிருப்பவற்றில் அதிகப் பிரியமுண்டாகிறது. இவ்விதமாய்ப் புறம்பேயுள்ள பதார்த்தங்களை யபேக்ஷித்து உள்ளேயுள்ள பதார்த்தங்களில் அதிகப் பிரீதியுண்டாகிறது.

1. பரம்பரையாக ஆத்மாவின் சம்பந்தியான புத்திரனுடைய மித்திரனிடத்தில் பிரீதியுண்டாகிறது.

2. புத்திரனுடைய மித்திரனை யபேக்ஷித்துப் புத்திரனிடத்தில் அதிகப் பிரீதியுண்டாகிறது.

3. புத்திரனினும் ஸ்தூல சூக்ஷ்மசரீரங்களில் அதிகப் பிரீதியிருக்கிறது.

4. அவற்றினும் ஸ்தூலத்தினும் சூக்ஷ்மத்தில் அதிகப்பிரீதியிருக்கிறது.

முன் முன் சொல்லப்பட்டவற்றினும் பின் பின் சொல்லப்பட்டவை ஆத்மாவுக்கு அதிக சமீபமானவை.

1. ஆத்மாவின் ஆபாஸம் சூக்ஷ்மசரீரத்திலிருக்கிறது; வேறொன்றிலில்லை. ஆதலால் ஆபாஸன்வாயிலாக ஆத்மாவுக்குச் சூக்ஷ்மசரீரத்தோடு சம்பந்தமிருக்கிறது; பிறிதொன்றனோடில்லை.

2. ஸ்தூலசரீரத்தோடு சூக்ஷ்மசரீரத்துக்குச் சம்பந்தமிருக்கிறது. ஆதலால் சூக்ஷ்மசரீரவாயிலாக ஸ்தூலசரீரத்தோடு ஆத்மாவிற்குச் சம்பந்தமிருக்கிறது.

3. ஸ்தூலசரீரவாயிலாகப் புத்திரனோடு சம்பந்தமிருக்கிறது.

4. புத்திரன்வாயிலாக அவன் மித்திரனோடு சம்பந்தமுண்டாகிறது.

இவ்விதத்தால் பின் பின் உள்ள ஆத்மாவைச் சமீபித்தவை எவையோ அவற்றில் அதிகப் பிரீதியுண்டாகிறது.

எந்தஆத்மசம்பந்தத்தினால் பதார்த்தங்களில் பிரீதியுண்டாகிறதோ அந்த ஆத்மாவினிடத்திலேயே முக்கியமான பிரீதியிருக்கிறது; பதார்த்தங்களிலில்லை. எப்

படிப் புத்திரனுடைய மித்திரனிடத்தில் புத்திரசம்பந்தத்தால் பிரீதியுண்டா கிறதோ, அதனால் புத்திரனிடத்திலேயே பிரீதியிருக்கிறதோ, புத்திரன்து மித்திரனிடத்தில் இல்லையோ, அப்படியே ஆத்மாவுக்கு அதிகச் சமீபத்தி லுள்ளவைகளில் அதிகப் பிரீதியுண்டாகிறது. ஆதலால் ஆத்மாவினிடத்திலே யே எல்லோருக்கும் பிரீதியிருக்கிறது.

அந்தப் பிரீதி ஆநந்தத்திலும் துக்கத்தின் அபாவத்திலும் உண்டா கிறது; வேறொன்றி லுண்டாகிறதில்லை. மற்றப் பதார்த்தங்களில் உண்டாகிற பிரீதி ஆநந்தத்தின்பொருட்டும் துக்காபாவத்தின்பொருட்டுமாம். ஆதலால் ஆநந்தம் துக்காபாவம் என்பவற்றினும் வேறொன்றிற் பிரீதியுண்டாகிறதில்லை. ஆகையால் எல்லோருடைய பிரீதிக்கும் விஷயமாகிய ஆத்மா ஆநந்தரூபமாம்.

துக்கத்தின் அபாவம் ஆத்மவடிவமாம். கற்பிதத்தின் அபாவம் அதிஷ் டானரூபமாம். அது சர்ப்பத்தின் அபாவம் ரஜ்ஜுரூபமா யிருக்கிறதுபோ லாம். ஆதலால் கற்பிதமான துக்கத்தின் அபாவமும் ஆத்மரூபமே.

இவ்விதத்தால் ஆத்மா ஆநந்தரூபமாம்.

**363.** நியாயமதத்தில் ஆத்மாவுக்கு ஆநந்தகுணமிருக்கிறது. அது சரி யன்று. ஏனெனின்,

ஆநந்தகுணத்தை நித்தியமென்று அங்கீகரிக்கின், அது போக்குவரத் துடையதாகாது. அதனால் ஆத்மாவின் சொரூபமே ஆநந்தமென்று சித்திக் கும். நியாயமதத்தில் நித்தியமான ஆநந்தம் இல்லைவேயில்லை.

அநித்தியமென்று கூறின், அநுகூலவிஷய இந்திரியங்களின் சம்பந்தத் தினால் ஆனந்தமுண்டாவதாக அங்கீகரிக்க நேரும். அதனால் சுழுத்தியில் ஆநந்தமுண்டாகலாகாது. ஏனெனின், சுழுத்தியில் விஷயத்துக்கும் இந்திரி யத்துக்கும் சம்பந்தமில்லை. ஆதலால் ஆநந்தம் ஆத்மாவின் குணமன்று. ஆனால் ஆத்மா ஆநந்தஸ்வரூபமாம்.

இவ்வாற்றால் ஆத்மா சத்து சித்து ஆநந்தசொரூபமாம்.

## 364. சத்து சித்து ஆநந்தம் ஒன்றற்கொன்று பின்னமன்றெனல் (364-365).

அந்தச் சத்து சித்து ஆனந்தங்கள் பரஸ்பரம் வேறுகாது ஒன்றுகவே யிருக்கின்றன; ஆத்மாவின் குணங்களாயிருந்தால் பரஸ்பரம் வெவ்வேறுகவு மிருக்கும்; ஆத்மஸ்வரூபமாகவே யிருத்தலால் பின்னமன்று.

1. ஒரே ஆத்மா நிவிருத்தியில்லாததாயிருத்தலால் சத்தெனப்படுகின்றது.

2. ஜடத்துக்கு விலக்ஷணமான பிரகாசரூபமாயிருத்தலால் சித்தெனப்படுகின்றது.

3. துக்கத்துக்கு விலக்ஷணமான முக்கியப் பிரீதிக்கு விஷயமாயிருத்தலால் ஆநந்தமெனப்படுகிறது.

உஷ்ணப் பிரகாசரூபமாய் அக்கினியிருப்பதுபோல ஆத்மா சச்சிதாநந்தரூபமாயிருக்கிறது.

சச்சிதானந்தஸ்வரூபமே சாஸ்திரத்திற் பிரஹ்மமென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால் ஆத்மா பிரஹ்மஸ்வரூபமாம்.

பிரஹ்மமென்பது வியாபகத்திற்காம்.

1. தேசத்தாலெதற்கு முடிவில்லையோ அது வியாபகமெனப்படுகின்றது. ஆதலால் ஆத்மா பிரஹ்மத்துக்கு அன்னியமானால் அது தேசத்தினால் அந்தமுடையதாம்.

2. எதற்குத் தேசத்தினால் முடிவுண்டோ அதற்குக் காலத்தினாலும் முடிவுண்டு என்பது நியமம். ஆதலால் அது அநித்தியமாகும். எதற்குக் காலத்தினால் முடிவுண்டோ அது அநித்தியமெனப்படும். ஆதலால் ஆத்மா பிரஹ்மத்துக்குப் பின்னமாயில்லை.

ஆத்மாவுக்குப் பின்னமாய்ப் பிரஹ்மமிருக்குமாயின், அது அநாத்மாவாகும். அநாத்மகடாதிகள் ஜடமாயிருக்கின்றன. அதனால் ஆத்மாவுக்கு வேறான பிரஹ்மமும் ஜடமேயாகும். ஆதலால் பிரஹ்மம் ஆத்மாவுக்கு வேறன்று; பிரஹ்மஸ்வரூபமே ஆத்மாவாம்.

## 365.

1. ஒரே சேதனம் சர்வப்பிரபஞ்சத்துக்கும் மாயைக்கும் அதிஷ்டானமாயிருக்கிறது. ஆகையால் அது பிரஹ்மமென்று சொல்லப்படுகிறது.

2. அவித்தைக்கும் வியஷ்டி தேகாதிகளுக்கும் அதிஷ்டானமாயிருத்தலால் ஆத்மாவென்று சொல்லப்படுகிறது.

1. தத்பதத்தின் லக்ஷியம் பிரஹ்மமெனப்படும்.

2. துவம்பதத்தின் லக்ஷியம் ஆத்மாவெனப்படும்.

1. ஈசுவரசாக்ஷி தத்பதத்தின் லக்ஷியமாம்.

2. ஜீவசாக்ஷி துவம்பதத்தின் லக்ஷியமாம்.

1. வியஷ்டி சங்காத உபகிதசேதனம் ஜீவசாக்ஷியாம்.

2. சமஷ்டி சங்காத உபகிதசேதனம் ஈசுவரசாக்ஷியாம்.

ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் ஏகத்துவம் பொருந்தாவிடினும், ஜீவசாக்ஷிக்கும் ஈசுவரசாக்ஷிக்கும் உபாதிபேதத்தால் பேதமிருக்கிறது; சொரூபமாக அவை ஒன்றே. மடத்திலிருக்கிற கடாகாசத்துக்கும் மடாகாசத்துக்கும் உபாதிபேதமின்றிச் சொரூபமாகப் பேதமில்லாததுபோல ஆத்மாவுக்கும் பிரஹ்மத்துக்கும் உபாதிபேதமின்றி வேறு பேதமில்லை. இரண்டும் ஒரே வஸ்துவாம்.

## 366. பிரஹ்மவடிவ ஆத்மா ஜன்மமில்லாததெனல் (366-368).

**366.** அந்தப் பிரஹ்மரூப ஆத்மா ஜன்மமில்லாததாம்.

ஆத்மாவுக்கு ஜன்மம் அங்கீகரிக்கும்பக்ஷத்தில் ஆத்மா அநித்தியமாகும். அது பரலோகவாதியாகிய ஆஸ்திகனுக்கிஷ்டமில்லை. ஏனெனின், ஆத்மாவுக்கு உற்பத்திநாசங்களிருந்தால் முதல் ஜன்மத்தில் பூர்வகர்மமின்றியே சுகதுக்கங்களின் போகமும் போகமின்றியே செய்தகர்மத்தின் நாசமுமுண்டாகும். ஆதலால் ஆத்மாவைக் கர்த்தா போக்தாவாக அங்கீகரிக்கினும் ஜன்மநாசங்களற்றதாகவே அங்கீகரிக்கவேண்டும்.

அன்றியும் ஆத்மாவுக்கு ஜன்மத்தை யங்கீகரித்தால் காரணமின்றி எந்த வஸ்துவும் பிறக்கமாட்டாது; ஆதலால் ஏதேனும் ஒரு காரணத்தினால் ஆத்மாவுக்கு ஜனனம் சொல்லவேண்டும். அது பொருந்தாது. ஏனெனின், எது ஆத்மாவுக்கு ஹேதுவாகுமோ அதனை ஆத்மாவுக்கு வேறாகவே சொல்லவேண்டும். அவ்வாத்மாவுக்கு வேறானவை யாவும் ஆத்மாவில் கற்பிதம். ஆதலால் அது ஆத்மாவுக்குக் காரணமாகாது. ரஜ்ஜுவிற் கற்பிக்கப்பட்ட சர்ப்பம் ரஜ்ஜுவுக்கு ஹேதுவாகாததுபோல ஆத்மாவில் கற்பிக்கப்பட்ட வஸ்து ஆத்மாவுக்கு ஹேதுவாகாது.

**367.** ஒரு ரஜ்ஜுவில் அநேக புருஷர்களுக்குத் தண்டம், சர்ப்பம், பூமியின் பிளப்பு, ஜலதாரை எனப் பிராந்தியுண்டாகிறது. அந்தப் பிராந்தியில் இரண்டம்சங்களுண்டு.

1. ஒன்று சாமானியமான "இது" என்னும் அம்சம்.

2. மற்றொன்று சர்ப்பமுதலிய விசேஷ அம்சம்.

அந்தச்சாமானிய "இது" என்னும் அம்சம் சர்ப்பாதி விசேஷ அம்சங்கள் முழுவதினும் வியாபகமா யிருக்கிறது.

1. "இது சர்ப்பம்"

2. "இது தண்டம்"

3. "இது பூமியின் பிளப்பு"

4. "இது ஜலதாரை" என்று

இவ்வாறு சர்ப்பாதி விசேஷ அம்சத்தில் இது எனும் அம்சம் முழுவதும் வியாபகமா யிருக்கிறது. அந்த வியாபக சாமானிய இது என்னும் அம்சம் ரஜ்ஜுஸ்வரூபமாம். அந்தச் சாமானிய இதுவெனும் அம்சத்தின் ஞானத்தையே பிராந்திக்குக் காரணமான ரஜ்ஜுவின் சாமானியஞான மென்பர்.

அந்தச் சாமானியமான இது என்னும் அம்சம் சத்தியம். ஏனெனின், ரஜ்ஜுவென்று அறிந்தபிறகும் அந்த இதுவெனும் அம்சம் பிரதீதியாகிறது.

1. பிராந்திகாலத்தில் "இது சர்ப்ப" மென்று சர்ப்பமுதலியவற்றோடு சேர்ந்து இது என்னும் அம்சம் பிரதீதியாகிறது.

2. அப்படியே பிராந்தி நிவிருத்திக்குப் பின்னும் "இது ரஜ்ஜு" வென்று ரஜ்ஜுவோடு சேர்ந்து இது என்னும் அம்சம் பிரதீதியாகிறது.

இது என்னும் அம்சமும் மித்தையானால் சர்ப்பாதிகளைப்போலப் பிராந்தி நிவிருத்திக்குப் பின் அதுவும் அப்பிரதீதியாகலாகாது. அதனால் சர்ப்பாதிபிராந்தியில் வியாபகமாயிருக்கிற "இது" எனும் அம்சம் சத்தியமாய் அதிஷ்டான ரஜ்ஜுரூபமா யிருக்கிறது. பரஸ்பரம் வியபிசாரியாயுள்ள (ஒன்றற்கொன்று பிறழ்தலுடைய) சர்ப்பாதிகள் கற்பிதமாம்.

368. அப்படியே எல்லாப் பதார்த்தங்களிலும் ஐந்து அம்சங்களுள:—

1. நாமம், 2. ரூபம், 3. அஸ்தி, 4. பாதி, 5. பிரியம் என்பனவாம்.

1. கடம் என்னும் அக்ஷரசமுதாயம் நாம மெனப்படும்.

2. உருட்சி அதன் ரூபம்.

3. "கடம் இருக்கிற" தென்பது அஸ்தி.

4. "கடம் விளங்குகிற" தென்பது பாதி.

5. "கடம் பிரியமாயிருக்கிற" தென்பது பிரியம் (ஆநந்தம்). சர்ப்ப முதலியனவும் பெண்சர்ப்ப முதலியவற்றிற்குப் பிரியமா யிருக்கின்றன.

இவ்விதமாகச் சகல பதார்த்தங்களிலும் ஐந்து அம்சங்களுண்டு.

1-3. அவற்றில் அஸ்தி பாதி பிரியவடிவ மூன்று அம்சங்கள் சகல பதார்த்தங்களிலும் வியாபகமா யிருக்கின்றன.

4-5. நாமரூபங்கள் வியபிசாரியாம். எந்த வஸ்து ஓரிடத்திலிருந்து ஓரிடத்தி லிருப்பதில்லையோ அது வியபிசாரி எனப்படும்.

1-2. கடம் என்னும் நாமமும் உருட்சியானரூபமும் படத்திலில்லை. படமென்னும் நாமமும் அதன் ரூபமும் கடத்தில் இல்லை. இவ்விதத்தால் சகல பதார்த்தங்களிலும் நாமரூபாம்சங்கள் வியபிசாரியாம்.

3-5. அஸ்தி பாதி பிரியமென்னும் மூன்று அம்சங்களும் எங்கும் அனுகதமா (கலந்தவைகளா) யிருக்கின்றன. சர்ப்ப தண்டாதிகளில் அனுகத மான இது என்னும் அம்சம் சத்தியமாயும் அதிஷ்டானமாயு மிருப்பதுபோ லச் சகல பதார்த்தங்களிலும் அநுகதமான அஸ்திபாதிபிரியரூபம் சத்தியமா யும் அதிஷ்டானவடிவமாயும் இருக்கின்றது.

1-2. சர்ப்ப தண்டாதிகளைப்போல் வியபிசாரியாயுள்ள நாமரூபங்கள் கற்பிதமா யிருக்கின்றன.

3-5. அஸ்தி பாதி பிரியம் சச்சிதானந்தரூபமா யிருக்கின்றது. ஆத லால் ஆத்மஸ்வரூபமாம்.

இவ்விதத்தால் சச்சிதாநந்தவடிவ ஆத்மாவில் நாமரூபப் பிரபஞ்ச முழு வதும் கற்பிதமாயிருக்கிறது. அக்கற்பித பதார்த்தங்கள் எவையும் ஆத்மா வின் ஜன்மத்துக்கு ஹேதுவாகா. ஆதலால் ஆத்மா ஜன்மமில்லாததாம்.

எந்த வஸ்துவுக்கு ஜன்மமிருக்கிறதோ அதற்கே * சத்தை (இருப்பு), விருத்தி (வளர்ச்சி), பரிணமம் (திரிபு), அபக்ஷயம் (குறைவு), விநாசம் (அழிவு) என்னும் ஐந்துவித வேறுவிகாரங்க ளுண்டாகின்றன. ஆத்மாவுக்கு ஜனன மில்லாமையினால் பிந்திய ஐந்து விகாரங்களும் இல்லை.

இவ்விதத்தால் ஆத்மா ஜன்மாதி ஆறுவிகாரங்களில்லாததாயிருக்கின்றது.

## 369. ஆத்மா அசங்கம் எனல்.

ஆத்மா அசங்கமா யிருக்கிறது.

சங்க மென்பது சம்பந்தத்திற்காம். அந்தச் சம்பந்தம் ஸஜாதீய விஜா தீய ஸ்வகத பதார்த்தங்களோ டுண்டாகிறது.

1. கடத்துக்குக் கடத்தோடுள்ள சம்பந்தம் ஸஜாதீயத்தோடுள்ள சம் பந்தமாம்.

* "கடம் உண்டாகிறது" என்னும் வியவகாரத்தின் எது ஜநநம். "கடம் இருக் கிறது" என்னும் வியவகாரத்தின் எது இருப்புவடிவ விகாரமாம். இதனையே பிரகடத் தன்மையென்றும் கூறுவர். சத்தை யென்றும் கூறுவர்.

2. கடத்துக்குப் படத்தோடுள்ள சம்பந்தம் விஜாதீயத்தோடுள்ள சம்பந்தமாம். ஸ்வகதமென்பது அவயவத்திற்காம். ஆகலால் படத்துக்கு நூலோடுள்ள சம்பந்தம் ஸ்வகதத்தோடுள்ள சம்பந்தமாம்.

1. ஆத்மா இரண்டு அல்லது அநேகமா யிருக்குமாயின், ஸஜாதீயத்தோடு ஆத்மாவுக்குச் சம்பந்தமுண்டாகும். அந்த ஆத்மா ஏகமாயிருத்தலால் ஸஜாதீய ஆத்மாவோடு ஆத்மாவுக்குச் சம்பந்தமில்லை.

2. ஆத்மாவுக்கு விஜாதீயம் அநாத்மா. இது கானல்ஜலம்போல ஆத்மாவில் கற்பிதமா யிருக்கிறது. அக் கற்பிதத்தோடு ஆத்மாவுக்குச் சம்பந்தம் பொருந்தாது. கானல்ஜலத்தோடு பூமிக்குச் சம்பந்த முண்டாகிறதில்லை. அப்படிச் சம்பந்தமுண்டானால் ஊஷரபூமி அந்த ஜலத்தினால் நனையவேண்டும். கானல்ஜலத்தோடு ஊஷரபூமிக்குச் சம்பந்த மில்லாததுபோல் ஆத்மாவில் கற்பிதமான விஜாதீய அநாத்மாவோடு ஆத்மாவுக்குச் சம்பந்தமில்லை.

3. ஆத்மாவின் அவயவ மிருக்குமாயின் ஆத்மாவிற்கு ஸ்வகதத்தோடு சம்பந்தமுண்டாம். ஆத்மா நித்தியமா யிருத்தலால் நிரவயவமாம். அதற்கு ஸ்வகதத்தோடு சம்பந்தம் பொருந்தாது. இவ்வாற்றால் ஸஜாதீய விஜாதீய ஸ்வகத சம்பந்தம் ஆத்மாவிலில்லை. ஆதலால் ஆத்மா அசங்கமாம்.

இவ்விதத்தால் சிஷ்யனே! சச்சிதானந்தப் பிரஹ்மரூபமாயும் ஜன்மாதி விகாரரகிதமாயும் அசங்கமாயு மிருக்கிறது ஆத்மா. "அதுவே நீ." இது 339-வது பிரசங்கத்தில் கேட்ட கேள்விக்கு ஆசிரியரால் சொல்லப்பட்ட உத்தரமாம்.

## 2. "சம்சாரத்திற்குக் கர்த்தா யாவன்?" என்பதன் உத்தரம் (370-374).

### 370. ஜகத்திற்குக் கர்த்தா ஈசுவரனெனல்.

"ஜகத்திற்குக் கர்த்தா யாவன்?" என்னும் இரண்டாவது பிரசினத்தின் உத்தரத்தைக் கூறுவாம்:—

வியாபகமான சேதனத்தை யாசிரயித்திருப்பதும் அதனை விஷயஞ் செய்வதுமாகிய மாயையினின்றும் அதாவது சதசத்துக்கு விலக்ஷணமான அற்புதசக்திரூபமான அஞ்ஞானத்தினின்றும் ஜகத்தினுற்பத்தி நாசங்களுண்டாகின்றன.

உற்பத்தி நாசங்களைச் சொல்லுவதனால் ஜகத்தின்ஸ்திதியும் பொருளாற் கொள்ளப்படுகின்றது. இதனால் இந்த அர்த்தம் சித்தித்தது:—

1. மாயையோடு கூடின சேதனம் ஈசுவரனெனப்படுகிறது.

2. அந்த * ஈசுவரன் ஜகத்தினுற்பத்தி ஸ்திதி நாசங்களுக்கு ஹேதுவாயிருக்கிறார்.

இப்படிச் சொல்லுவதனால்,

1. ஜகத்திற்கு ஓர் கர்த்தா உண்டா? அல்லது ஜகத்து தானாகவே யுண்டாயிற்றா? என்னுங் கேள்விக்கு உத்தாம் சொல்லப்பட்டது.

2. "ஜகத்துக்குக் கர்த்தா யாதேனுமோர் ஜீவனா? அல்லது ஈசுவரனா?" என்பதற்கும் உத்தரஞ் சொல்லப்பட்டது.

## 371. 1. சர்வஞ்ஞனும், 2. சர்வசக்திமானும் சுதந்திரனுமாவன் (371—372).

ஜகத்திற்குக் கர்த்தா ஈசுவரன். ஜகத்துத் தானாகவே யுண்டாகவில்லை. கர்த்தாவின்றி ஜகத்துண்டாயிருக்குமாயின் குயவனின்றிக் கடமுண்டாதல் வேண்டும். ஆதலால் ஜகத்துக்கு ஓர் கர்த்தா உளன்.

1. அந்த கர்த்தா சர்வஞ்ஞன். ஏனெனின், எவன் காரியத்துக்குக் கர்த்தாவாகிறானோ அவன் அக்காரியத்தையும் அதன் உபாதானத்தையும் அறிந்து செய்கிறான். ஆதலால் ஜகத்தின் கர்த்தாவும், ஜகத்தையும் அதனுபாதானத்தையும் அறிந்து ஜகத்தை யுண்டுபண்ணுகிறான்.

இவ்விதத்தால் ஜகத்தின் கர்த்தா ஜகத்தையும் ஜகத்தின் உபாதானத்தையும் அறிகிறான். அதனால் சர்வஞ்ஞன்.

2. அவன் சர்வவல்லமையுள்ளவன். ஏனெனின், அற்பசக்தியுள்ள ஜீவர்களால் இந்த ஜகத்தின் சிருஷ்டி மனதினாலும் நினைக்கத்தகாது. ஆதலால் அற்புதஜகத்தின் கர்த்தா அற்புதசக்திமானாயிருக்கிறான்.

இவ்விதத்தால் ஜகத்தின் கர்த்தா சர்வவல்லமையுள்ளவன்.

3. அவன் சுதந்திரன். ஏனெனின் ஸ்வல்பசக்தியுள்ளவன் பராதீனனாவன்; ஸர்வசக்தியுள்ளவன் பராதீனனாகான். ஆதலால் அவன் சுதந்திரன்.

இவ்விதத்தால் ஜகத்தின் கர்த்தா சர்வஞ்ஞனும் சர்வசக்தனும் சுதந்திரனுமாயிருக்கிறான். அவனையே ஈசுவரனென்பர்.

---

* (1) அசத்காரணவாதிகள் ஜகத்துக்குக் காரணமில்லை யென்றும், (2) சிலர் ஜகத்துக்குக் காரணம் அபாவமென்றும், (3) சிலர் சூனியமென்றும், (4) நையாயிகர்கள் பரமாணுவென்றும், (5) சிலர் காலமென்றும், (6) சார்வாகர்கள் ஸ்வபாவமென்றும், (7) மீமாம்ஸர்கள் அதிருஷ்டமென்றும், (8) பிரத்தியக்ஷவாதிகள் யதிருச்சையென்றும், (9) பிரத்தியக்ஷப்பிரமாணவாதிகள் பிருதிவிமுதலிய பஞ்சபூதங்களென்றும், (10) சாங்கியமதஸ்தர்கள் பிரகிருதியென்றும், (11) யோகிகள் ஹிரண்யகர்ப்பாதிரூப

**372.** அற்பஞ்ஞனும் (அற்ப அறிவுடையவனும்) அற்பசக்தியுள்ளவனும் பராதீனனு (தன்வசமில்லாதவனு) மாயுள்ளவன் ஜீவனெனப்படுகிறுன்.

அற்பஞ்ஞத்தன்மை முதலியன ஜீவனிடத்திலும் பாமார்த்தமாயில்லை. என்ருலும் அவித்தையாலுண்டாகும் மித்தையான அற்பஞ்சத்தன்மை முதலியன ஜீவனிடத்தில் தோன்றுகின்றன; அதனுல் ஜீவனிடத்திற் சொல்லப்படுகின்றன.

அவித்தையா லுண்டாகும் அற்பஞ்ஞத்தன்மை முதலியவற்றின் பிராந்தியே ஜீவத்தன்மையாம்.

அந்த அற்பஞ்சத்தன்மைமுதலிய பிராந்தி ஈசுவானிடத்தில் இல்லை. ஆனுல் மாயையாலுண்டாகும் சர்வஞ்ஞத்தன்மை முதலியன ஈசுவரனிடத்தில் இருக்கின்றன. இது பின் விஸ்தாரமாய்ப் பிரதிபாதிக்கப்படும்.

இவ்விதத்தால் ஜகத்தின் கர்த்தா ஜீவனல்லன்; ஈசுவரனே.

---

அசங்கபுருஷனென்றும், (12) சிலர் காலாதிசம்யோகமென்றும், (13) சிலர் பரிணாமபுருஷஜீவனென்றும், (14) சிலர் பிரஹ்மமென்றும் இவ்விதமாக ஜகத்துக்குக் காரணத்தைப் பலர் பலவிதமாய்ச் சொல்லுகின்றனர். இவைகள் ஒவ்வொன்றிலும் தோஷமுண்டு. எப்படியெனின், (1) ஜகத்துக்குக் காரணமில்லாவிட்டால் கடமும் காரணமில்லாமல் உண்டாகக்கூடும். ஆகையால் அகாரணத்தில் பிரத்தியக்ஷவிரோதரூப தோஷமிருக்கிறது. (2) (அபாவம் காரணமானுல் அபாவத்திலிருந்து பாவம் உண்டாகுதல் பிரத்தியக்ஷவிரோதரூபதோஷம். (3) சூனியம் காரணமானுல் விதையின்றித் தானியமுண்டாகக்கூடும். ஆகையால் இதில் அசம்பவரூபதோஷமாம். (4) நிரவயவமாயும் ஜடமாயுமிருக்கிற பரமாணுக்களின் சம்யோகம் அசம்பாவிதமாம். (5) காலம் எப்போதுமிருந்தும் சகலகாரியங்களும் எப்போதுமுண்டாகாதபடியால் அகாரணரூப தோஷம் சம்பவிக்கிறது. (6) மலடியிடத்தில் வீரியம் சேர்ந்தும் கர்ப்பத்தை உண்டாக்கும் அதன் ஸ்வபாவம் காணப்படாததினுல் ஸ்வபாவம் காரணமன்று. (7) அதிருஷ்டம் காரணமானுல் இன்னகாரணத்தால் இன்ன காரியந்தான் ஆகும் என்னும் நிச்சயமில்லாமற்போம். (8) யதிருச்சை காரணமானுல், பிருதிவியாதி பூதங்களன்றிச் சகத்து உற்பத்தியாவது அசம்பாவிதம். (9) ஜடப்பிருதிவியாதி பூதங்களே காரணத்தை அபேக்ஷிப்பதால் ஸ்வயம் காரணங்களாகா. (10) ஜடமான பிரகிருதி ஸ்வயம் பிரவிருத்திக்கமாட்டாது. (11) புருஷன் அசங்கனுனுல் எப்படிக் காரணமாவான். (12) காலாதிகளோ ஜடமானதால் அவைகள் காரணமாகா. (13) ஜீவன் காரணமாகான் என்பது மூலத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது. (14) நிர்விகாரமான பிரஹ்மம் காரணமாகமாட்டாது. இவ்விதமாக மேற்கண்ட 14 மதங்களிலும் தோஷமிருக்கிறது; மாயாவிசிஷ்ட பிரஹ்மம் காரணமென்று சொல்லுவதில் யாதொரு தோஷமுமில்லை.

## 373. ஈசுவரன் வியாபகனும் நித்தியனுமாவனெனல்.

அந்த ஈசுவரன் ஓரிடத்திலில்லாமல் எங்கும் வியாபகமாயிருக்கிறான். ஓரிடத்திலிருப்பதாகக் கொள்ளின், எந்த வஸ்துவிற்குத் தேசத்தால் அந்தமுண்டோ அதற்குக் காலத்தாலும் அந்தமுண்டு. ஆதலால் அது அநித்தியமாகும்.

எது அநித்தியமாகுமோ அது கர்த்தாவினாற் பெறப்படுவதாகும். அதனால் ஈசுவரனுக்கும் கர்த்தாவை யங்கீகரிக்க நேரும்.

அந்த ஈசுவரனுக்குக் கர்த்தாவுண்டெனல் பொருந்தாது. ஏனெனின்,

1. தான் தனக்கே கர்த்தாவாதல் பொருந்தாது. தனக்குக் கர்த்தா தானேயென்று கொள்ளின், ஆத்மாசிரயதோஷமுண்டாகும்.

தானே கிரியைக்குக் கர்த்தாவு (ஆசிரயமு)ம் தானே கிரியைக்குக் கர்மமு (கிரியைக்கு விஷயமான காரியமு) மாயின் அப்போது ஆத்மாசிரயமாகும். குயவன் கிரியைக்குக் கர்த்தா. கடம் கர்மம். அதுபோல் கிரியைக்குக் கர்த்தாவும் கர்மமும் வெவ்வேறு யிருக்கின்றன; ஒன்றுதல் பொருந்தாது. ஆதலால் ஆத்மாசிரயதோஷ மிருக்கிறது.

காரியத்துக்குப் பெயர் கர்மம்.

காரியத்தின் விரோதிக்குப் பெயர் தோஷம்.

ஆத்மாசிரயம் காரியத்துக்கு விரோதியாகையால் தோஷமாம்.

2. ஆதலால் ஈசுவரனுக்குக் கர்த்தாவாக வேறொன்றை யங்கீகரிக்கும்படி நேரும். அந்த வேறு கர்த்தாவும் முதற் கர்த்தாவைப்போல கர்த்தாவினாலுண்டாகத்தக்கதெனல் உண்டாகும். அந்தக் கர்த்தாவையும் முதற் கர்த்தாவிற்குப்போல் இரண்டாம் கர்த்தாவுக்குப் பின்னமாகச் சொல்லலாகும். அந்த முதற் கர்த்தாவான ஈசுவரனை இரண்டாவது கர்த்தாவின் கர்த்தாவாகக்கொள்ளின் அந்நியோந்நியாசிரயதோஷ முண்டாகும்.

3. ஆதலால் வேறு மூன்றாவது கர்த்தாவை யங்கீகரிக்க நேரும். அம்மூன்றாவதற்குக் கர்த்தா இரண்டாவது கர்த்தாவெனக் கொள்ளின் அந்நியோந்நியாசிரய தோஷமுண்டாகும். முதலெனக் கொள்ளின் சக்கிரிகாதோஷமுண்டாகும்.

சக்கரத்தின் சுழற்சிபோல்,

(1) முதற்கர்த்தா இரண்டாவதாற் றோன்றத்தக்கதும்,

(2) இரண்டாங்கர்த்தா மூன்றாவதாற் றோன்றத்தக்கதும்,

(3) மூன்றாங்கர்த்தா முதலாவதாற் றோன்றத்தக்கதும்,

(4) அம்முதற்கர்த்தா மறுபடி இரண்டாவதாற் றோன்றத்தக்கதுமாம்.

இவ்வாறு காரிய காரணத்தன்மைகளின் சுழற்சியுண்டாகும். சக்கிரிகாஸ்தானத்தில் எதுவும் சித்திக்கிறதில்லை. எல்லாம் பரஸ்பராபேக்ஷையுள்ளவைகளா யிருக்கின்றன.

4. அந்நியோந்நியாசிரயத்தில் இரண்டற்குப் பரஸ்பராபேக்ஷையுண்டு. ஒன்று சித்திக்காமல் மற்றொன்று சித்திக்கிறதில்லை. ஆதலால்,

(1) எப்படிக் குயவனுக்குக் கர்த்தா தானாகாது அவனது பிதாவாவனோ, அதுபோல முதல் ஈசுவரகர்த்தாவுக்கு வேறு கர்த்தா இருக்கவேண்டும்.

(2) குயவனுடைய பிதா தன் புத்திரனிடத்தினின்றும் பிறக்கிறதில்லை. ஆனால் வேறு பிதாவினின்றும் பிறக்கிறான். அதுபோல் இரண்டாவது கர்த்தா முதற்கர்த்தாவினின்றும் உண்டாகாமல் வேறொரு கர்த்தாவினின்றே உண்டாவதாகச் சொல்லவேண்டும்.

(3) குயவனுடைய பாட்டன் குயவனிடத்தினின்றும் அவன் பிதாவினிடத்தினின்றும் பிறக்காமல் நான்காவது குயவனது பிரபிதாமகனிடத்தினின்றும் பிறக்கிறான். அதுபோல் மூன்றாவது கர்த்தாவும் முதலாவது இரண்டாவது கர்த்தாக்களினின்று முண்டாகிறதில்லை. ஆதலால் நான்காவதான வேறொரு கர்த்தாவை யங்கீகரிக்கவேண்டும்.

(4) அந்த நான்காவதற்கு ஐந்தாவதான வேறோர் கர்த்தா அங்கீகரித்தலாகும்.

இதனால் அநவஸ்தாதோஷ முண்டாகும்.

அநவஸ்தையென்பது தாரை (தொடர்ச்சி).

கர்த்தாவின் தாரையை அங்கீகரித்தால் எந்தக் கர்த்தா ஜகத்தை யுண்டு பண்ணினாரென்னும் நிச்சயமுண்டாகாது.

5. எவரேனு மொருவரை ஜகத்திற்குக் கர்த்தாவாகக் கொள்ளுதலில் ஒரு யுக்தியுமில்லை. அந்த யுத்தியின் அபாவத்திற்கே விநிகமனவிரகமென்று பெயர்.

6. சிலர் தாரைக்கு ஓரிடத்தில் ஆறுதலை அங்கீகரிக்கின், எந்தக்கர்த்தாவில் தாரைக்கு முடிவுண்டாகிறதோ அந்தக் கர்த்தாவையே ஜகத்கர்த்தாவாகக்

கொள்ளுதல் தகுதியாம். அதற்கு முற்பட்டவை யாவும் பயனில்லாதனவாகும். இதனையே பிராக்லோபம் என்பர்.

பின்னுள்ளவற்றின் அபாவத்திற்கும் பிராக்லோபமென்று பெயர்.

இவ்விதத்தால் ஈசுவரனுக்குத் தேசத்தால் முடிவுண்டென அங்கீகரிக்கின் உற்பத்தியை அங்கீகரிக்கவரும். உற்பத்தியை அங்கீகரிக்கின் ஆத்மாசிரயாதி ஆறு தோஷங்களுண்டாகின்றன. ஆதலால் ஈசுவரனுக்குத் தேசத்தால் அந்தம் இல்லை. ஆனால் ஈசுவரன் வியாபகன்; இதனாலேயே நித்தியன்.

## 374. ஈசுவரனுக்கும் ஜீவனுக்கும் சொரூபமாகப் பேதமில்லையெனல்.

அந்த வியாபக ஈசுவரனுக்கும் ஜீவனுக்கும் சொரூபமாகப் பேதமில்லை; உபாதியால் பேதமுண்டு. ஏனெனின்,

1. அவச்சேதவாதத்தில்,
   (1) மாயாவிசிஷ்ட சேதனம் ஈசுவரனெனப்படும்.
   (2) அவித்தியாவிசிஷ்ட சேதனம் ஜீவனெனப்படும்.
2. ஆபாஸவாதத்தில்,
   (1) மாயை ஆபாஸன் என்பவற்றோடு கூடிய சேதனம் ஈசுவரனெனப்படும்.
   (2) அவித்தை ஆபாஸன் என்பவற்றோடு கூடிய சேதனம் ஜீவனெனப்படும்.

1. ஆபாஸவாதத்தில் ஆபாஸசகித அவித்தைக்கும் ஆபாஸசகித மாயைக்கும் பேதமுண்டு; சேதனங்களுக்குப் பேதமில்லை.

2. அப்படியே அவச்சேதவாதத்திலும் அவித்தைக்கும் மாயைக்கும் பேதமுண்டு. சொரூபமாகச் சேதனத்துக்குப் பேதமில்லை.

3. (1) அஞ்ஞானத்திலுள்ள சேதனப்பிரதிபிம்பம் ஜீவனும்.
   (2) பிம்பம் ஈசுவரனும்.

இந்தப் பக்ஷத்திலும் சேதனத்துக்குச் சொரூபமாகப் பேதமில்லை. ஆனால் ஒரே சேதனத்தில் ஜீவத்தன்மையும் ஈசுவரத்தன்மையும் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. இது * மேற்சொல்லப்படும்.

இவ்விதத்தால் ஜகத்தின் கர்த்தா சர்வஞ்ஞனும் சர்வசக்தனும் சுதந்திரனுமிருக்கிற ஈசுவரனே.

---

* இவ்வார்த்தை மேல் 433-வது முதல் 443-வது பரியந்தமான இலக்கங்களிற் சொல்லப்படும். இது மூன்றாவது பிம்பப்பிரதிபிம்பவாதமாம்.

அந்த ஈசுவரன் வியாபகன். அவனுக்கும் ஜீவனுக்கும் விசேஷணமாத்திரத்தாற்பேதமாம். ஸ்வரூபமாகப் பேதமில்லை. இவ்வாறு இரண்டாவது கேள்வியின் உத்தரஞ் சொல்லப்பட்டது.

## (3 "மோக்ஷத்திற்குக் காரணம் யாது?" என்பதன் உத்தரம் 375-406.)

### 375. மோக்ஷத்திற்குக் காரணம் ஞானம் எனல்.

"மோக்ஷத்துக்குச் சாதனம் ஞானமா? அல்லது கர்மமா? அல்லது உபாஸனையா? அல்லது இரண்டுமா?" என்னும் கேள்விக்கு உத்தரஞ் சொல்லுகிறோம்:—

முக்திக்குக் காரணம் கர்மமுமன்று; தியானமு (உபாஸனையு) மன்று; ஆனால் ஞானமே காரணமாம். ஏனெனின், ஆத்மாவினிடத்தில் பந்தம் சத்தியமாயிருந்தால் அதன் நிவிருத்திரூப மோக்ஷம் ஞானத்தினு லுண்டாகாது; கர்மம் அல்லது உபாஸனையா லுண்டாகும். அந்தப் பந்தம் ஆத்மாவினிடத்தில் சத்தியமாயில்லை; ஆனால் ரஜ்ஜுசர்ப்பம்போல் மித்தையா யிருக்கிறது. அந்த மித்தை அதிஷ்டான ஞானத்தினுற்றுன் நிவிருத்தியாதல் கூடும்; கர்மம் அல்லது உபாஸனையால் நிவிருத்தியாகாது. ரஜ்ஜுவில் சர்ப்பம் எந்தக் கிரியையாலும் நிவிருத்தி யாகாமல் கேவலம் ரஜ்ஜுஞானத்தினுல் நிவிருத்தியாகிறதுபோல் ஆத்மாவின் அஞ்ஞானத்தினுல் தோற்றும் பந்தத்தின் பிரதீதியும் அஞ்ஞானமும் ஆத்மாவின் ஞானத்தினுற்றுன் நிவிருத்தியாகும்.

### 376. கர்மமும் உபாஸனையும் மோக்ஷசாதனங்கள் அன்றெனல் (376-379.)

1. கர்மத்தின் பலன் மோக்ஷமானுல் மோக்ஷம் அநித்தியமாகும். ஏனெனின், கிருஷியாதி கர்மங்களின் பலன் அன்னுதிகள்; அவை அநித்தியம்; யஞ்ஞாதி கர்மங்களின் பலனுகிய சுவர்க்காதிகளும் அநித்தியம் என்பது நியமம். மோக்ஷமும் கர்மபலனெனக் கொள்ளின் அது அநித்தியமாகும். ஆதலால் * கர்மத்தின் பலன் மோக்ஷமன்று.

---

* "எப்படி இக்கர்மத்தா லாக்கப்பட்ட உலகம் நசிக்கிறதோ அப்படியே அப்புண்ணியத்தா லாக்கப்பட்ட உலகமும் நசிக்கிறது. இவ்வாறு கர்மத்தா லாக்கப்பட்ட உலகங்களை அநித்தியமென்றறிந்து அவற்றினின்றும் பிராஹ்மணன் (பிரஹ்மமாதற்கு இச்சையுடைய முமுக்ஷு) வைராக்கியத்தை யடையக்கடவன். செய்யப்பட்டதாகிய கர்மத்தால் செய்யப்படாததாகிய மோக்ஷமுண்டாகிறதில்லை." என்னும் சுருதியினுலும் "பாவனை (உபாஸனை)யால் பெறப்படும் பயனும் கர்மத்தின் பயனும் ஸ்திரம் (நிலையுடையன) என்று மதிக்கத்தக்கனவன்று. திராவிடதேசவாசி ஜனங்களில் சேர்க்கையைப்போல" என்னும் சுரேசுவராசாரியரது வாக்கியரூப ஸ்மிருதியினுலும் கர்மத்தின் அல்லது உபாஸனையின் பலம் மோக்ஷமன்று என்னும் அர்த்தம் நிச்சயமாம்.

2. உபாஸனையின் பலனென அங்கீகரிக்கினும் மோக்ஷம் அநித்திய மாகும். ஏனெனில் உபாஸனையும் மானதகர்மமே. கர்மபலன் அநித்தியமா யிருத்தலால் உபாஸனாரூப கர்மபலனும் மோக்ஷமன்று.

377. கர்மத்தைச் செய்கிறவனுக்குக் கர்மத்தினால் ஐந்துவித உபயோகங்கள் உண்டாகின்றன:—

1. பதார்த்தத்தினுற்பத்தி, 2. பதார்த்தத்தின் நாசம், 3. பதார்த்தத்தின் பிராப்தி, 4. பதார்த்தத்தின் விகாரம், 5. சம்ஸ்காரம் என்பனவாம்.

அன்னியரூபத்தை யடைதலே விகாரமாம்.

சம்ஸ்காரம் மலத்தின் நிவிருத்தி குணத்தின் உற்பத்தி என்று இருவகைத்தாம்.

இவ்வைந்துவித உபயோகங்களும் கர்மத்தினால் உண்டாகின்றன. அவை எவையும் முமுக்ஷுவுக்குப் பொருந்தா. ஆதலால் முமுக்ஷு ஞானத்துக்குச் சாதனமான சிரவணாதிகளிற்றான் பிரவர்த்திக்கிறான்; கர்மத்தில் பிரவர்த்திக்கிறதில்லை.

1. குலாலனுடைய கர்மத்தினால் குலாலனுக்குக் கடத்தின் உற்பத்தியாகிய உபயோகமுண்டாகிறது. அதுபோல் முமுக்ஷுவுக்குக் கர்மத்தினால் மோக்ஷத்தின் உற்பத்தியாகிய உபயோகமில்லை. ஏனெனின், அனர்த்தத்தின் நிவிருத்தியும் பரமாநந்தத்தின் பிராப்தியும் மோக்ஷமாம்.

(1) அந்த அநர்த்தத்தின் நிவிருத்தி ஆத்மாவினிடத்தில் * நித்தியசித்தமா யிருக்கிறது. அது ரஜ்ஜுவினிடத்தில் சர்ப்ப நிவிருத்தி நித்தியசித்தமா யிருப்பதுபோலாம்.

(2) ஆத்மா பரமாநந்தஸ்வரூபியா யிருத்தலால் பரமாநந்தப்பிராப்தியும் † நித்தியசித்தமாம்.

இவ்விதத்தால் ஸ்வபாவசித்த (இயல்பாய்ப் பெறப்பட்ட) மோக்ஷம் கர்மத்தாலுண்டாதல் பொருந்தாது.

---

* ரஜ்ஜுவினிடத்தில் வியாவகாரிகசத்தையுடைய சர்ப்பத்தின் அபாவமாகிய சர்ப்பத்தின் நிவிருத்தி நித்தியசித்தமா யிருப்பதுபோல ஆத்மாவில் பரமார்த்தசத்தையுடைய காரியத்தோடுகூடிய அஞ்ஞானமாகிய அநர்த்தத்தின் அத்தியந்தாபாவவடிவ நிவிருத்தி நித்தியசித்தமாம்.

† மறந்துபோன கழுத்திலணிந்துள்ள நகையின் அடைவு அல்லது வீட்டில் புதைக்கப்பட்டுள்ள நிதியின் (தனத்தின்) அடைவு நித்தியசித்தமா யிருப்பதுபோல நிஜவடிவ பரமாநந்தத்தின் அடைவும் எல்லோருக்கும் நித்தியசித்தமாம்.

எந்தவஸ்து முன்னிருக்கவில்லையோ அது கர்மத்தா லுண்டாகும். முன்னரே உள்ள வஸ்துவிற்கு உற்பத்தி யுண்டாகாது.

**378.** வேதாந்த சிரவணமும் மோக்ஷத்தின் உற்பத்தியின்பொருட்டுச் சொல்லப்படவில்லை. ஆனால் "ஆத்மா நித்தியமுக்தன்; கர்த்தவ்வியம் (செய்ய வேண்டியது) சிறிதுமாத்திரமுமில்லை" என்பதை யறிவதற்காம் சிரவணம். இதை யறிவதனால், செய்யவேண்டும் என்னும் கர்த்தவ்வியப் பிராந்தி நிவிருத்தியாய்விடுகிறது.

வேதாந்த சிரவணத்துக்குப் பின்னும் கர்த்தவ்வியம் எவனுக்குத் தோற்றுகிறதோ அவன் தத்துவம் * அறிந்தவனல்லன். இக்காரணத்தினால் நித்தியநிவிருத்தியான அநர்த்தத்தின் நிவிருத்தியும் நித்தியப்பிராப்தமான ஆநந்தத்தின் பிராப்தியும் வேதாந்த சிரவணத்தின் பயனென்று தேவகுருவால் (மண்டநமிசிரரென்னும் தூலைப்பெயர்பூண்ட ஸ்ரீ சங்கராசாரியஸ்வாமிகள் சிஷ்யராகிய சுரேஸ்வராசாரியரால்) நைஷ்கர்ம்யசித்தி நூலிற் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆதலால் மோக்ஷத்தின் உற்பத்திரூப கர்மத்தினுபயோகம் முமுக்ஷுவுக்காகாது.

**379.** 2. எப்படித் தடியாலடித்தல்வடிவ செய்கைக்குக் கடநாசரூப உபயோக முண்டாகிறதோ அப்படியே முமுக்ஷுவுக்குக் கர்மத்தினால் எந்தப் பதார்த்தத்தின் நாசரூப உபயோகமும் பொருந்தாது. ஏனெனின், அன்னிய பதார்த்தங்களின் நாசம் முமுக்ஷுவால் இச்சிக்கப்படமாட்டாது. பந்தநாசமே கர்மத்தினுபயோகமாகச் சொல்லவேண்டும். அந்தப்பந்தம் ஆத்மாவில் இல்லை; மித்தையாகத் தோற்றுகிறது. அந்த மித்தியாய்ப்பிரதீதி கர்மத்தினால் நாசமாகாது. ஆத்மாவின் யதார்த்தஞானத்தினால் மித்தியாப்பிரதீதி நாசமாகும். ஆதலால் முமுக்ஷுவுக்குப் பதார்த்தத்தின் நாசரூப உபயோகமும் கர்மத்தினால் பொருந்தாது.

3. நடத்தல்வடிவ கர்மத்தினால் கிராமம் அடையப்படுவதுபோல் மோக்ஷப்பிராப்திரூப உபயோகம் கர்மத்தினலாகாது. ஏனெனின், நித்தியமுக்தனான ஆத்மாவுக்கு மோக்ஷப்பிராப்தி சொல்லுதல் பொருந்தாது. எவனுக்குப் பந்தமிருக்கிறதோ அவனுக்கு மோக்ஷத்தின் பிராப்தி சொல்லுதல் கூடும். ஆத்மாவில் பந்தமில்லாததினால் மோக்ஷப் பிராப்திரூபமான கர்மத்தினுபயோகம் முமுக்ஷுவுக்குப் பொருந்தாது.

---

* இங்கே இது ஸ்மிருதியாம்:—"ஞானமிருதத்தினால் திருப்தியடைந்த கிருதகிருத்தியனாகிய யோகிக்குச் சிறிதும் மோக்ஷத்தின் கர்த்தவ்வியமில்லை. இருக்குமாயின் அவன் தத்துவஞானியல்லன்."

4. சமையல்வடிவ கர்மத்தினால் அன்னத்தின் * விகாரரூப உபயோகம் சமயற்காரனுக்கு உண்டாகிறதுபோல் முமுக்ஷுவுக்குக் கர்மத்தினால் விகாரரூப உபயோகமும் பொருந்தாது. ஏனெனின், வேறு எவ்விகாரமும் பொருந்தாது. ஆத்மாவில் முதலிற் பந்தத்தை யங்கீகரித்து மோக்ஷதசையில் சதுர்ப்புஜாதி விலக்ஷணரூபத்தின் அடைவு அங்கீகரிக்கின், அந்நியரூபத்தின் பிராப்திரூபவிகாரம் முமுக்ஷுவுக்குக் கர்மத்தினுபயோகமாதல் பொருந்தும். அந்த அன்னியரூபத்தின் பிராப்தி ஆத்மாவில் அங்கீகாரமில்லை. ஆதலால் கர்மத்தால் விகாரவடிவ உபயோகமும் முமுக்ஷுவுக்குப் பொருந்தாது.

5. எப்படி வஸ்திரத்தைத் தோய்த்தல்வடிவ கர்மத்துக்கு மலநிவிருத்தி (அழுக்கு நீங்குதல்) வடிவ சம்ஸ்கார முண்டாகிறதோ, அப்படியே மலநிவிருத்திரூப சம்ஸ்காரமும் முமுக்ஷுவுக்குக் கர்மத்தினால் உபயோகப்படுகிறதில்லை. ஏனெனின்,

(1) வேறொன்றன் மலநிவிருத்தியோ முமுக்ஷுவிற்கு இச்சிக்கப்படுவதன்று; ஆத்மாவின் மலநிவிருத்தியே சொல்லவேண்டும். அந்த ஆத்மா நித்தியசுத்தம்; அதனிடத்தில் மலமில்லை. ஆதலால் மலநிவிருத்திரூப சமஸ்காரம் பொருந்தாது.

(2) அந்தக்கரணத்திலுள்ள பாபரூபமலம் எதுவோ அதன் நிவிருத்தி கர்மத்தினால் உபயோகமெனின், இவ்வார்த்தை சத்தியமாம். ஆனால் சுத்த அந்தக்கரணமுடைய முமுக்ஷு எவனோ அவனை விசாரிக்குமிடத்து அவன் அந்தக்கரணத்திலும் பாபமில்லை. அதனால் பாபரூபமலத்தின் நிவிருத்தியாகிய சம்ஸ்காரமும் முமுக்ஷுவுக்குக் கர்மத்தினால் உபயோகமாதல் பொருந்தாது.

(3) அஞ்ஞானத்தை மலமெனின், அஞ்ஞானம் ஆத்மாவிலிருக்கினும் அதன் நிவிருத்தி கர்மத்தினால் உண்டாகாது. ஏனெனின், அஞ்ஞானத்துக்கு விரோதமானது ஞானமாம்; கர்மமன்று. ஆதலால் முமுக்ஷுவுக்கு மலநிவிருத்திரூப சம்ஸ்காரம் கர்மத்தினால் உபயோகமாதல் பொருந்தாது.

* முன்ரூபத்தை விட்டு வேறுரூபத்தை அடைதல் விகாரம் எனப்படும். அதுவே விக்கிரியை யென்றும் பரிணாமமென்றும் சொல்லப்படும்.

(4) எப்படி வஸ்திரத்திற்குக் காவிஜலத்தில் நனைத்தல்வடிவ கர்மத்திற்குச் சிவப்புக் குணத்தின் உற்பத்திவடிவ சம்ஸ்காரம் உபயோகமாகிறதோ, அப்படி முமுக்ஷுவுக்குக் கர்மத்தினால் குணத்தின் உற்பத்திவடிவ சம்ஸ்காரம் உபயோகமாதல் பொருந்தாது. ஏனெனின், வேறொன்றில் அந்தக்குண உற்பத்தி சொல்லுதல் கூடாது; ஆத்மாவிலேயே சொல்லுதல் உண்டாம். அந்த ஆத்மா நிர்க்குணம். அதனிடத்தில் குணோற்பத்தி பொருந்தாது. ஆதலால் முமுக்ஷுவுக்குக் குணத்தின் உற்பத்திரூப சம்ஸ்காரமும் கர்மத்தின் உபயோகமாதல் கூடாது.

இப்பிரகாணத்தில் உபயோகமென்பது பயனுக்காம்.

கர்மத்திற்கு இவ்வைவகைப் பலன்களைத்தவிர வேறுபலன் உண்டாகிறதில்லை. அவ்வைந்துவித கர்மபலனும் முமுக்ஷுவுக்குப் பொருந்துகிறதில்லை. ஆதலால் முமுக்ஷு கர்மத்தைவிட்டு ஞானத்துக்குச் சாதனமான சிரவணத்திலேயே பிரவர்த்திக்கிறான்.

உபாஸனையும் மானதகர்மமேயாம். ஆதலால் அதைக் கண்டித்தலில் வேறுயுக்தி சொல்லப்படவில்லை.

இவ்விதத்தால் கேவலகர்மமாவது உபாஸனையாவது மோக்ஷத்துக்கு ஹேதுவன்று; கேவலஞானமே மோக்ஷத்துக்கு ஹேதுவாம்.

## 380. ஆக்ஷேபம்:—கர்மமும் உபாசனையும் ஞானத்திற்கு ஏதுவா? மோக்ஷத்திற்கு ஏதுவாவெனல் 380–383.

[பூர்வபக்ஷி:—] *சிலர் கர்ம உபாஸனைகளோடுகூடிய ஞானத்தை மோக்ஷத்திற்கு ஹேதுவாக அங்கீகரிக்கிறார்கள். அதில் யுக்திதிருஷ்டாந்தங்களுஞ் சொல்லுகிறார்கள்.

1. திருஷ்டாந்தம்:—ஆகாசத்தில் ஒரிறகினால் பக்ஷிகளால் பறக்கமுடியாது. ஆனால் இரண்டு இறகுகளால் பறத்தல் உண்டாகிறது. அதுபோல் மோக்ஷலோகத்துக்கும் ஞானரூப ஒருபக்ஷத்தால் போகமுடியாது. உபாஸனாசகிதகர்மம் ஒருபக்ஷம். ஞானம் இரண்டாவது பக்ஷம். உபாஸனையும் மானதகர்மமே. ஆதலால் கர்மமும் உபாஸனையும் ஒருபக்ஷமாகச் சொல்லப்பட்டன.

381. 2. வேறு திருஷ்டாந்தம்:—சேதுதரிசனத்தால் பாபம் நிவாரணமாகிறது. அச்சேதுதரிசனமும் பிரத்தியக்ஷமான ஞானம். சிரத்தாபக்தியு

* பர்த்திருபிரபஞ்சரென்னும் பிராசீனவிருத்திகாரர் (பிரஹ்மசூத்திரத்தின் உரைக்குக்கர்த்தா) சமுச்சயவாதியாவார்; அவரை அநுசரித்தவர்கள்.

டன் போகவேண்டிய நியமத்தை அது அபேக்ஷிக்கிறது. சிரத்தாதிக ளில்லாதவனுக்குச் சேதுதரிசனத்தினால் பயனுண்டாகிறதில்லை. சேதுவின் பிரத்தியக்ஷஞானம் பல உற்பத்தி விஷயத்தில் சிரத்தை நியமாதிகளை யபேக்ஷிக்கிறதுபோல் பிரஹ்மஞானமும் மோக்ஷரூப பல உற்பத்தியில் கர்ம உபாஸனைகளை யபேக்ஷிக்கிறது.

கேவலஞானத்தினால் மோக்ஷமுண்டாகுமென்று அங்கீகரிக்கிறவனும் கர்ம உபாஸனைகளை ஞானத்துக்கு ஹேதுவாக நினைக்கிறான். சுத்தமாயும் நிச்சலமாயுமுள்ள அந்தக்கரணத்தில் ஞானமுண்டாகிறது. அந்த அந்தக்கரணம் சுபகர்மத்தினால் சுத்தமாகிறது. உபாஸனையால் நிச்சலமாகிறது.

இவ்விதத்தால் அந்தக்கரணத்தின் சுத்தி நிச்சலத்தன்மை என்பவைகளின்வாயிலாகக் கர்மமும் உபாஸனையும் ஞானத்துக்கு ஹேதுவாக அங்கீகரிக்கப்பட் டிருக்கின்றன.

**382.** எப்படி ஞானத்துக்கு ஹேதுவாகக் கர்ம உபாஸனைகள் அங்கீகரிக்கப்பட் டிருக்கின்றனவோ, அப்படியே ஞானத்தின் பயனாகிய மோக்ஷத்துக்கு ஹேதுவாகவும் அங்கீகரிக்கப்படுவது தகுதியாம்.

1. திருஷ்டாந்தம்:—ஜலம்விடுதல் விருக்ஷத்தின் உற்பத்திக்கும் விருக்ஷத்தின் பலத்தின் உற்பத்திக்கும் ஹேதுவாகிறது. காட்டிலுள்ள மரங்களின் பலன்கள் ஜலம் விடாமலே யுண்டாவது எதுவோ அதுவும் விருக்ஷத்தின் மூலத்தில் கீழுள்ள ஜலத்தின் சம்பந்தமிருக்கிறது; அதனால் பலனுண்டாகிறது. ஜலசம்பந்த மில்லாவிடின் விருக்ஷமே பட்டுப்போம்; பலனுமுண்டாகாது. அதுபோலக் கர்ம உபாஸனைகள் ஞானோற்பத்திக்கும் ஞானத்தின் பலனாகிய மோக்ஷத்துக்கும் ஹேதுவா யிருக்கின்றன.

இவ்விதத்தால் கர்மம் உபாஸனை ஞானம் என்னும் மூன்றும் மோக்ஷத்துக்கு ஹேதுக்களா யிருக்கின்றன. ஆதலால் ஞானியும் கர்மஞ் செய்ய வேண்டும்.

**383.** 2. அல்லது, கர்ம உபாஸனைகள் ஞானத்தைக் காப்பாற்றுவதற்கு ஹேதுக்களா யிருக்கின்றன. ஏனெனின், கர்மோபாஸனைகளை ஞானியானவன் விடும்பக்ஷத்தில் உண்டான ஞானமும் ஜலமின்றி யிருக்கிற மரம் போல் நஷ்டமாய்விடும். ஏனெனின், சுத்தமான அந்தக்கரணத்தில் ஞானமுண்டாகிறது. சுபகர்மத்தைச் செய்யாவிடின் ஞானிக்குப் பாபமுண்டாகும். உபாஸனையை விடுவதால் அந்தக்கரணம் மறுபடியும் சஞ்சலமாய்விடும். அந்த மலினமும் சஞ்சலமுமாயுள்ள அந்தக்கரணத்தில் ஞானம் தங்கமாட்டாது. அது வறண்ட பூமியிலுண்டாகிய விருக்ஷமும் நிலைத்திராததுபோலாம்.

3. வேறொரு திருஷ்டாந்தம்:—சம்ஸ்காரத்தால் சுத்தம் பண்ணப்பட்ட இடத்தில் வேதாத்தியயனம் செய்யும் பிரஹ்மசாரி வசிக்கிறன். எக்காரணத்தினலாவது சுத்தம் பண்ணப்பட்ட இடமும் அசுத்தமாகும்பக்ஷத்தில் அவன் அவ்விடத்தை விட்டுவிடுகிறன். அதுபோல் கர்மத்தை விடுவதினல் மலினமும் உபாஸனையை விடுவதினல் சஞ்சலமுமாயிருக்கிற அந்தக்கரணத்தில் ஞானம் தங்கமாட்டாது. ஆதலால் கர்மமும் உபாஸனையும் ஞானத்தைக் காப்பாற்றுவதற்கு ஹேதுக்களாகின்றன.

இவ்விதத்தால்,

1. கர்மம் உபாஸனை ஞானம் என்னும் மூன்றையும் மோக்ஷத்துக்கு ஹேதுவாக அங்கீகரித்தலாலும்,

2. அல்லது கர்மோபாஸனைகளை ஞானரக்ஷணைக்கு ஹேதுவாயும் கேவலம் ஞானத்தை மோக்ஷத்துக்கு ஹேதுவாயும் அங்கீகரித்தலாலும்,

இவ்விருபக்ஷங்களிலும் ஞானிக்குக் கர்மோபாஸனைகள் அனுஷ்டிக்க வேண்டியனவாம். இது * சமுச்சயவாத மெனப்படும்.

### 384. கர்ம உபாசனைகளோடு ஞானத்திற்கு விரோத முண்டெனல் 384-386.

[சித்தாந்தி:—]அது (சமுச்சயவாதம்) நலமுடையதன்று. ஏனெனின், தேகத்துக்கு வேறாக ஆத்மாவை யறியாததால் கர்மம் உண்டாகிறதில்லை. ஏனெனின் ஜன்மாந்திரத்தினது போகத்தின்பொருட்டுக் கர்மத்தைச் செய்கிறன். தேகமோ அக்கினியில் தகிக்கப்பட்டுப்போகிறது.. அதனல் ஜன்மாந்தரபோகம் பொருந்தாது. ஆதலால்,

1. சரீரத்துக்கு வேறன ஆத்மாவின் ஞானம் கர்மத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. அப்படிச் சரீரத்துக்கு வேறாயினும் ஆத்மாவின் கர்த்தா போக்தா வடிவத்தால் ஞானம் கர்மத்துக்கு ஹேதுவாகிறது. "நான் புண்ணிய பாபங்களைச் செய்கிறேன், அவற்றின் பலன் எனக்குண்டாகும்" என்று எவனுக்கு ஞானம் இருக்கிறதோ அவன் கர்மத்தைச் செய்கிறன். ஞானியோ ஆத்மாவை இப்படி யறிகிறதில்லை. ஆனல் "புண்ணிய பாபங்கள் சுகதுக்கங்களின்றிய அசங்கமான பிரஹ்மரூபமாய் ஆத்மா இருக்கிறது" என்னும் ஞானம் வேதாந்தவாக்கியத்தா லுண்டாகிறது. அந்த ஞானம் கர்மத்துக்கு ஹேதுவன்று.

* இம்மதம் விருத்திப்பிரபாகரத்தின் மூன்றாவது பிரகாசத்தில் செவ்வையாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

ஆனல் மாருக விரோதியா யிருக்கிறது. ஆதலால் ஞானியினல் கர்மமுண்டாகிறதில்லை.

2. கர்த்தா கர்மபலன் என்பவற்றின் பேதஞானம் கர்மத்துக்கு ஹேதுவாம். அந்தக் கர்த்தாவும் கர்மபலனும் ஆத்மாவுக்கு வேருக ஞானிக்குத் தோற்றுகிறதில்லை. எல்லாம் ஆத்மஸ்வரூபமாகவே தோற்றுகின்றன. இதனுலும் ஞானியினல் கர்மமுண்டாகிறதில்லை.

ஞானிக்குக் கர்மம் இல்லையென்பதைப் பாஷியகாரர் அனேகவிதமாகச் சொல்லியிருக்கிறார். கர்மத்துக்கும் ஞானத்துக்கும் பலத்தால் விரோதமுண்டு. இதனுலும் ஞானகர்மங்களின் * சமுச்சயம் கூடாது.

1. கர்மத்தின் பலன் அநித்தியசமுசாரமாம்.

2. ஞானத்தின் பலன் நித்தியமோக்ஷமாம்.

385. 3. ஆத்மாவில் ஜாதி ஆசிரமம் அவஸ்தை என்பவற்றின் அத்தியாஸம் கர்மத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. ஏனெனின், ஜாதியாசிரமாவஸ்தைகளுக்குத் தகுந்தபடி வெவ்வேறுவித கர்மங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆதலால் ஜாதிமுதலியவற்றின் அத்தியாஸம் கர்மத்துக்கு ஹேதுவாயிருக்கிறது.

---

* வேதத்திலும் சிலவிடத்து ஞானகர்மங்களின் சமுச்சயமெழுதியிருக்கிறது. அங்ஙனமாயினும், சமசமுச்சயம் கிரமசமுச்சயம் என்னும் பேதத்தால் அச்சமுச்சயம் இருவகைத்தாம்.

1. ஞானத்தின் சாதனங்களாகிய சிரவணுதிகளேயும் கர்மத்தின் சாதனங்களாகிய அக்கினிஹோத்திர முதலியவற்றையும் ஒரேகாலத்தில் அநுஷ்டித்தற்குச் சமசமுச்சயமென்று பெயர்.

2. முதலில் அந்தக்கரண சுத்தியின்பொருட்டு ஜிஞ்ஞாஸை (ஞானவிருப்பம்) வரையில் கர்மத்தைச் செய்யவேண்டும். பின் கர்மவிதிகளை ஆதரியாது ஞானத்திற்குச் சாதனமாகிய சிரவணுதிகளின்வாயிலாக ஞானத்தைச் சம்பாதித்தல்வேண்டும். இதற்குக் கிரமசமுச்சயமென்று பெயர். அவற்றில்,

1. சமசமுச்சயம் நீக்கத்தக்கது.

2. கிரமசமுச்சயம் கொள்ளத்தக்கது.

இது வேதத்தின் தாற்பரியமாம். ஆதலால் இங்குச் சமசமுச்சயம் கண்டிக்கப்பட்டது; கிரமசமுச்சயம் கண்டிக்கப்படவில்லை.

ஜாதி ஆசிரம அவஸ்தைகள் தேகதர்மங்கள். கர்மிக்குத் தேகத்தில் ஆத்ம புத்தி இல்லை. ஆனால் கர்மி தேகத்துக்கு வேறான ஆத்மாவைக் கர்த்தாவாக அறிகிறான். இது முன் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால் ஆத்மாவினிடத்தில் ஜாதி ஆசிரம அவஸ்தைகளின் தோற்றம் கர்மிக்கும் பொருந்தாது. அங்ஙனமாயினும் கர்மிக்குத் தேகத்திற்கு வேறான ஆத்மாவின் அபரோக்ஷ ஞானமில்லை. ஆனால் சாஸ்திரத்தினால் பரோக்ஷஞானமிருக்கிறது. தேகத்தில் ஆத்மஞானம் அபரோக்ஷமாயிருக்கிறது. தேகத்துக்கு வேறான ஆத்மாவின் அபரோக்ஷஞானமிருக்குமாயின் அது தேகத்தில் அபரோக்ஷ ஆத்ம ஞானத்துக்கு விரோதமாகும். பரோக்ஷஞானத்துக்கு அபரோக்ஷஞானத்தோடு விரோதமில்லை. ஆதலால் தேகத்துக்கு வேறான கர்த்தாவாகிய ஆத்மாவின் ஞானமும் தேகத்தில் ஆத்மபுத்தியும் இரண்டும் ஒருவனுக்குப் பொருந்துகின்றன.

திருஷ்டாந்தம்:—மூர்த்தியில் ஈசுவரஞானம் சாஸ்திரத்தினால் பரோக்ஷமாயிருக்கிறது. பாஷாணபுத்தி (கல்லுணர்ச்சி) அபரோக்ஷமாயிருக்கிறது. அவற்றிற்கு விரோதமின்று. இரண்டும் ஒருவனுக்கே யுண்டாகின்றன. ரஜ்ஜுவில் எவனுக்குச் சர்ப்பத்தினும் வேறான அபரோக்ஷஞானமிருக்கிறதோ அவனுக்கு அபரோக்ஷ சர்ப்பப்பிராந்தி நிவிருத்தியாகிறது.

இதனால் அபரோக்ஷப்பிராந்திக்கு அபரோக்ஷஞானத்தோடு விரோதமுண்டு பரோக்ஷத்தோடு விரோதமில்லையென்னும் நியமம் சித்திக்கிறது. ஆதலால் தேகத்துக்குப் பின்னமான ஆத்மாவின் பரோக்ஷஞானமும் தேகத்தில் அபரோக்ஷஞானமும் பொருந்துகிறது. அவ்விரண்டும் கர்மத்துக்கு ஹேதுக்களாம்.

1. ஆத்மா தேகத்துக்கு வேறான கர்த்தாவென்னும் ஞானம் கர்மத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. அந்த ஞானம் பிராந்திரூபமாயிருக்கிறது. வித்துவானுக்குப் பிராந்தி இல்லை. ஆதலால் வித்துவானுக்குக் கர்மாதிகாரமில்லை.

2. தேகத்தில் அபரோக்ஷ ஆத்மபுத்தி இருக்குமாயின் அப்போது தேகத்தின் தர்மங்களாகிய ஜாதி ஆசிரம அவஸ்தைகள் பிரதீதியாகும். அந்தத் தேகத்திலுண்டாம் ஆத்மபுத்தியும் வித்துவானுக்கில்லை. ஆனால் பிரஹ்மரூபமாக ஆத்மாவின் அபரோக்ஷஞான மிருக்கின்றது. ஆதலால் ஜாதி ஆசிரம அவஸ்தைகளின் பிராந்தி இல்லாததினாலும் வித்துவானுக்குக் கர்மாதிகாரமில்லை.

"உபாசனையும் நான்உபாஸகன் (உபாஸனைசெய்வோன்), தெய்வம் உபாஸியம்(உபாஸிக்கத்தக்கது)" என்னும் புத்தியால் உண்டாகிறது. வித்துவானுக்கு அவ்வுபாஸிய உபாஸகபாவங்கள் தோற்றுகிறதில்லை. "என்னுடைய தேகாதி

சங்காதங்களும் தெய்வத்தின் தேகாதிசங்காதங்களும் சொப்பனம்போல் கற்பிதங்கள்; சேதனமொன்றேயுள்ளது. இது வித்துவானுடைய நிச்சயம். ஆதலால் ஞானத்திற்கும் உபாஸனைக்கும் விரோதமுண்டு.

**386.** பக்ஷியின் பறத்தல் திருஷ்டாந்தம் பொருந்தாது. ஏனெனின், பக்ஷியின் இரண்டிறகுகளும் ஒரேகாலத்தி லிருக்கின்றன. அவற்றிற்குப் பரஸ்பரம் விரோதமில்லை. ஞானத்திற்கோ கர்மோபாஸனைகளோடு விரோதமுண்டு; ஒருகாலத்தில் பொருந்தா.

### 387. ஞானத்தில் கர்ம உபாஸனைகளின் அபேக்ஷையில்லையெனல் 387–390.

சேதுஞான திருஷ்டாந்தமும் பொருநதாது. ஏனெனின், * சேதுதரிசனம் திருஷ்டபலத்துக்கு ஹேதுவன்று; ஆனால் அதிருஷ்டபலத்துக்கு ஹேதுவாயிருக்கிறது.

1. பிரத்தியக்ஷமாய்க் காணப்படும் பலம் திருஷ்டபல மெனப்படும். அது சாப்பாட்டின் பலமாகிய திருப்தி பிரத்தியக்ஷமாயிருத்தலால் போஜனம் திருஷ்டபலத்துக்கு ஹேதுவாயிருப்பதுபோலாம்.

2. இப்படிச் சேதுதரிசனத்தால் பிரத்தியக்ஷபலன் பிரதீதியாகிறதில்லை. ஆனால் பாபத்தின் நாசரூபபலன் சாஸ்திரத்தினால் அறியப்படுகின்றது. எது பிரத்தியக்ஷமாய்ப் பிரதீதியாகிறதில்லையோ அது அதிருஷ்டபல னெனப்படும்.

ஆதலால் யஞ்ஞாதிகர்மம் ஸ்வர்க்காதி அதிருஷ்டபலத்துக்கு ஹேதுவாயிருப்பதுபோலச் சேதுதரிசனமும் பாபநாசரூப அதிருஷ்டபலத்துக்கு ஹேதுவாயிருக்கிறது. எது அதிருஷ்டபலத்துக்கு ஹேதுவாகிறதோ அது எவ்வளவு பலத்தின் உற்பத்தியில் சாதனமென்று சாஸ்திரம் போதித்திருக்கிறதோ அதனோடுகூடியது பலத்துக்கு ஹேதுவாகிறது. கேவலம் தான்மாத்திரம் ஹேதுவாகிறதில்லை. ஆதலால் சிரத்தை நியமாதிகளுடன் கூடிய சேதுதரிசனம் பாபநாசரூப பலத்துக்கு ஹேதுவாகிறது. சிரத்தை நியமாதிகளில்லாத சேதுதரிசனம் பாபநாசத்துக்கு ஹேதுவாகிறதில்லை. ஏனெனின், சேதுதரிசனத்தினால் பிரத்தியக்ஷமான யாதொருபலனும் பிரதீதியாகிறதில்லை. கேவலம் சாஸ்திரத்தினால் பயன் அறியப்பட்டிருக்கிறது. அந்தச் சாஸ்திரம் சிரத்தாதிகளோடுகூடியசேதுதரிசனத்தால் பலத்தைப் போதிக்கிறது. கேவல

---

* இராமசந்திரர் இராமேசுவரமுதல் இலங்கைவரையில் சமுத்திரத்தில் அணை கட்டியிருக்கிறார். அது சேதுவாம்.

தரிசனத்தினுல் பலோற்பத்திக்கு யாதொரு பிரமாணமும் இல்லை. ஆதலால் பலோற்பத்தியில் சேதுதரிசனம் சிரத்தை பக்தி நியமாதிகளை அபேக்ஷிக்கிறது.

388. பிரஹ்மவித்தை தன் பலோற்பத்தியில் கர்மோபாஸனைகளை யபேக்ஷிக்கிறதில்லை. ஏனெனின், பிரஹ்மவித்தையின் பயனும் சுவர்க்கம்போல் லோகவிசேஷமான அதிருஷ்டமாயின், லோகவிசேஷமும் கேவலப் பிரஹ்மவித்தையாற் கிடைப்பதாகச் சாஸ்திரம் போதித்திராமல் கர்மோபாஸனையோடுகூடிய பிரஹ்மவித்தையால் போதித்திருக்குமாயின், பிரஹ்மவித்தையும் சேதுதரிசனம்போல் பலோற்பத்தியிற் கர்மோபாஸனைகளை யபேக்ஷிக்கும். அந்தப் பிரஹ்மவித்தையின் பயனுகிய மோக்ஷம் சுவர்க்கம்போல் லோகவிசேஷரூப அதிருஷ்டமோவன்று. ஆனுல் மோக்ஷம் நித்தியப்பிராப்தமாயிருக்கின்றது. பிராந்தியால் பந்தம் பிரதீதியாகிறது. அந்தப் பிராந்தியின் நிவிருத்தியே பிரஹ்மவித்தையின் பயனும். அந்தப் பிராந்திநிவிருத்தி கேவலம் பிரஹ்மவித்தையால் எமக்கு (பிரஹ்மவேத்தாவாகிய ஞானிகளுக்கு)ப் பிரத்தியக்ஷமாயிருக்கிறது. ரஜ்ஜுஞானத்தால் சர்ப்பப்பிராந்தியின் நிவிருத்தி எல்லோருக்கும் பிரத்தியக்ஷமாம். ஆதலால் பிராந்தி நிவிருத்தி அதிஷ்டானஞானத்தின் திருஷ்டபலனும்.

திருஷ்டபலோற்பத்தி எவ்வளவு சாமக்கிரிகளால் பிரத்தியக்ஷமாய்ப் பிரதீதியாகிறதோ அச்சாமக்கிரிகள் திருஷ்டபலத்துக்கு ஹேதுக்களெனப்படுகின்றன.

1. * துரி தந்து வேமாக்களால் படத்தினுற்பத்தி பிரத்தியக்ஷமா யிருக்கிறது. ஆதலால் துரி தந்து வேமாக்கள் படத்துக்கு ஹேதுக்களாகின்றன.

2. கேவலம் போஜனத்தினுல் திருப்திரூபபலன் பிரத்தியக்ஷமாய்ப் பிரதீதியாகிறது. ஆதலால் கேவலபோஜனம் திருப்திக்கு ஹேதுவாயிருக்கிறது.

அதுபோலக் கேவல அதிஷ்டானஞானத்தினுல் பிராந்திநிவிருத்தி பிரத்தியக்ஷமாய்ப் பிரதீதியாகிறது. ஆதலால் கேவல அதிஷ்டானஞானமே பிராந்தி நிவிருத்திக்கு ஹேதுவாயிருக்கிறது.

ரஜ்ஜுஞானம் பிராந்திநிவிருத்தியில் வேறொன்றையும் அபேக்ஷியாததுபோலப் பந்தப்பிராந்திக்கு அதிஷ்டானமான நித்தியமுக்த ஆத்மாவின் ஞானமும் பந்தப்பிராந்தியின் நிவிருத்தியில் கர்மோபாஸனைகளை அபேக்ஷிக்கிறதில்லை.

---

* துரியென்பது தறி. படத்தின் உபாதானகாரணமான நூல் தந்து. வேமாவென்பது நாடா அதாவது நூல்வைக்கும் குழல். இதனை நூனழி யென்பர்.

389. 1. ஞானத்தின் பலமாகிய மோக்ஷத்தைச் சுவர்க்கம்போல் லோகவிசேஷமான அதிருஷ்டமென அங்கீகரிக்கின் அது வேதவாக்கியத்துக்கு விருத்தமாம். ஏனெனின், ஞானியின் பிராணன் எந்தலோகத்துக்கும் போகிறதில்லையென்று வேதத்தில் சொல்லியிருக்கிறது.

2. லோகவிசேஷத்தை அங்கீகரிப்பதினால் ஸ்வர்க்கம்போல் மோட்சம் அநித்தியமாகும். ஆதலால் மோட்சம் லோகவிசேஷரூபமன்று.

3. * லோகவிசேஷத்தை மோக்ஷமென அங்கீகரிக்கின் அவனுக்கும் கேவலம் ஞானத்தினாலேயே மோக்ஷலோகத்தின் அடைவு அங்கீகரிக்கத்தக்கது. ஏனெனின், சாஸ்திரத்தினால் பிரதிபாதிக்கப்பட்ட அர்த்தம் சாஸ்திரானுசாரமாகவே அங்கீகரிக்கப்படுகின்றது. அந்தச் சாஸ்திரமானது மோக்ஷம் கேவலம் ஞானத்தினா லுண்டாவதாகச் சொல்லுகிறது. ஆதலால் கேவலஞானம் மோக்ஷத்துக்கு ஹேதுவாம். கர்மம் உபாஸனை ஞானம் என்னும் மூன்றும் ஹேதுவன்று.

390. விருக்ஷதிருஷ்டாந்தமும் பொருந்தாது. ஏனெனின், ஜலம்விடுதல் விருக்ஷத்தின் உற்பத்திக்கும் ரக்ஷணைக்கும் ஹேதுவாயிருக்கினும் விருக்ஷத்தின் பலோற்பத்தியில் காரணமன்று. முதிர்ந்தமரத்துக்கு ஜலம் விடுதல் விருக்ஷத்தின் ரக்ஷணையின்பொருட்டாம்; பலத்தின் பொருட்டன்று. ஜலத்தாற் செழித்த விருக்ஷமே பலத்துக்கு ஹேதுவாம்; ஜலம் விடுதல் ஹேதுவன்று. அதுபோலக் கர்மோபாஸனைகளும் ஞானத்தின் உற்பத்தியில் உபயோகமாம்; மோக்ஷத்திலில்லை. ஆதலால் ஞானோற்பத்திக்கு முன்னேயே அந்தக்கரணத்தின் சுத்தியின்பொருட்டும் நிச்சலத்தன்மையின்பொருட்டும் கர்மோபாஸனைகளை யனுஷ்டிக்க வேண்டியது. ஞானமுண்டானபின் மோட்சத்தின்பொருட்டு இவற்றை யநுஷ்டிக்க வேண்டியதில்லை.

ஞானத்தின் உற்பத்திக்கு முன்னும் எதுவரையில் அந்தக்கரணத்தில் மலவிக்ஷேபங்கள் இருக்கின்றனவோ அதுவரையிற்றான் கர்மோபாஸனைகளை யனுஷ்டிக்க வேண்டியது. எவனுடைய அந்தக்கரணம் சுத்தமாயும் நிச்சலமாயுமாகிறதோ அந்த ஜிஞ்ஞாசுவானவன் சிரவணத்துக்கு விரோதமான கர்மோபாஸனைகளைத் தள்ளவேண்டியது. மலமென்பது பாவம். அது அசுபவாஸனைக்கு ஹேதுவா யிருக்கிறது. எதுவரையில் மலமிருக்கிறதோ அதுவரை

---

* இங்கு துர்ஜனதோஷ நியாயத்தால் லோகவிசேஷத்தை மோக்ஷமெனக் கொள்ளினும் அந்த மோக்ஷம் ஞானமின்றி யுண்டாகாது என்னும் வார்த்தையைச் சித்தாந்தி சொல்லுகின்றார். எங்ஙனம்: ஒருவனுக்குப் பிரபலசத்துரு உளனாயின், அவன் தனது வலியின்றிய சத்துருவிற்கு முதலில் அடிக்க உத்தரவுகொடுத்துச் சந்தோஷமடைவித்துப் பின் அவனைக் கொல்லுகிறான். அதற்குத் துர்ஜனதோஷ நியாயமென்று பெயர்.

யில் அசுபவாசனை யிருக்கிறது. எப்போது அசுபவாசனை யுண்டாகவில்லையோ அப்போது மலமின்மை நிச்சயிக்கப்படுகின்றது. அந்தக்காணத்தின் சஞ்சலத் தன்மையும் ஏகாக்கிரத்தன்மையும் அநுபவசித்தமா யிருக்கின்றன. ஆதலால் உத்தமஜிஞ்ஞாசுவுக்கும் வித்துவானுக்கும் கர்மோபாஸனைகள் நிஷ்பிரயோசனமா யிருக்கின்றன.

## 391. கர்மோபாஸனைகளால் ஞானத்தின் இரக்ஷிப்புண்டாகாதெனல்.

"ஞானத்தைக் காப்பாற்றும்பொருட்டுக் கர்ம உபாசனைகளைச் செய்ய வேண்டும். ஜலத்தினால் உண்டாகும் விருக்ஷம் ஜலத்தினால் இரக்ஷிக்கப்படுகிறது. ஜலசம்பந்த மில்லாமற்போனால் முதிர்ந்த மாமும் பட்டுப்போகிறது. அதுபோலக் கர்மோபாஸனைகளா லுண்டாகும் ஞானமும் கர்மோபாஸனைகளால் இரக்ஷிக்கப்படுகிறது. ஞானி கர்மோபாஸனைகளைச் செய்யாவிடின், அந்தக்காணம் மறுபடியும் மலினமும் சஞ்சலமுமாய்விடும். அந்த மலினசஞ்சல அந்தக்காணத்தில், நீரில்லா நிலத்தின் மாம்போல், முன்னமே உண்டாயிருந்த ஞானமும் நஷ்டமாய்விடும். ஆகையால் ஞானியும் கர்மோபாஸனைகளைச் செய்யவேண்டும்." என்று முன் சொல்லப்பட்டது.

அது பொருந்தாது. இங்கு பூர்வபக்ஷியை நோக்கி இது கேட்கவேண்டும். ஆபாஸசகித அல்லது சேதனசகித அந்தக்காணத்தின் "நான் அசங்கப் பிரஹ்மம்" என்னும் விருத்தி வேதாந்தத்தின் பலரூப ஞானமாம். கர்மோபாஸனைகளைச் செய்யாவிடின் அவ்விருத்திரூபஞானத்தின் நாசமாகுமா? அல்லது சேதனசொரூப ஞானத்திற்கு நாசமுண்டாகுமா?

இதற்கவன் இங்ஙனங் கூறுவான்: "சொரூபஞானமோ நித்தியமாம். ஆதலால் அதற்கு நாசமும் இரக்ஷிப்பும் பொருந்தா. ஆனால் வேதாந்தத்தின் பயனாகிய பிரஹ்மவித்தைவடிவஞான மெதுவோ அது கர்மோபாசனைகளால் உற்பத்தியாகிறது. கர்மோபாஸனைகளை விடுதலால் உற்பத்தியாகிய வித்தையும் நஷ்டமாய்விடும். ஆதலால் அதன் ரக்ஷிப்பின்பொருட்டுக் கர்மோபாஸனைகளைச் செய்யவேண்டு" மென்று கூறின்,

அது பொருந்தாது. ஏனெனின்,

1. ஒருமுறை யுண்டாகிய அந்தக்காணத்தின் பிரஹ்மாகார விருத்தியால் அஞ்ஞானம் பிராந்தி என்பவற்றின் நாசரூபபலன் அதேசமயத்தில் சித்திக்கிறது. அஞ்ஞானப் பிராந்திகளின் நாசத்துக்குப் பிறகு மறுபடியும் விருத்தியை ரக்ஷித்தலின் உபயோகமில்லை.

2. கர்மோபாஸனைகளால் அந்தக்காண விருத்தியை இரக்ஷித்தலும் கூடாது. ஏனெனின், கர்மோபாஸனைகளை யநுஷ்டிக்கின், அப்போது கர்

மோபாசனைகளினது சாமக்கிரிகளின் விருத்திரூப் ஞானமே உண்டாகும்; பிரஹ்மத்தின் ஞானமுண்டாகமாட்டாது. வேறு விருத்தியுண்டாதலால் முதல் விருத்தி தங்காது. ஆதலால் 'கர்மோபாஸனைகள் ஞானோற்பத்திக்குப் பரம்பரையாய் ஹேதுக்களாம். உண்டானவிருத்திக்கு விரோதிகளாகின்றன. ஆதலால் கர்மோபாஸனைகளால் ஞானம் இரக்ஷிக்கப்படமாட்டாது.

## 392. ஞானிக்குப் பாபமும் சஞ்சலத்தன்மையு மின்மையால் கர்மோபாஸனைகளின் உபயோகமில்லை யெனல் 392–393.

"ஞானிக்குக் கர்மத்தை விடுவதனால் பாபமுண்டாகிறது" என்று முன் சொல்லப்பட்டது.

அது பொருந்தாது. ஏனெனின்,

1. சுபகர்மத்தைவிடுதல் பாபத்துக்கு ஹேதுவாகாது; நிஷித்தகர்மத்தை யனுஷ்டித்தலே பாபத்துக்கு ஹேதுவாம். இதனைப் பாஷியகாரர் வெகுவிதமாய்ப் பிரதிபாதித்திருக்கிறார். ஆதலால் கர்மத்தை விடுதலால் பாபமுண்டாகிறதில்லை.

2. ஞானிக்கோ எவ்விதத்திலும் பாபமுண்டாகாது. ஏனெனின், புண்ணியபாபங்கள் அவற்றின் ஆசிரயமான அந்தக்கரணம் என்பவை பாமார்த்தமாக இல்லை. அவித்தையால் மித்தையாய்ப் பிரதீதியாகின்றன. அந்த அவித்தையும் மித்தியாத்துப்பிரதீதியும் ஞானவானுக்கில்லை. ஆதலால் சுபகர்மத்தை விடுவதனாலேனும் அசுபகர்மத்தைச் செய்வதனாலேனும் ஞானிக்குப் பாபமுண்டாகாது.

393. இவ்விடத்தில் இது சித்தாந்தம்:—ஞானம்: 1. மந்தம், 2. திடம் என இருவகைத்து.

1. சமுசயாதிகளோடுகூடிய ஞானம் மந்தமெனப்படும்.

2. சமுசயாதிகளில்லாத ஞானம் திடமெனப்படும்.

திடஞானமுள்ளவனுக்குச் செய்யவேண்டிய தொன்றுமில்லை. ஒரு தடவையுண்டாகிய சமுசயமில்லாத அந்தக்கரணத்தின் விருத்திரூப ஞானமே அவித்தையை நாசஞ்செய்துவிடுகிறது. அந்த (விருத்திரூப) ஞானம் நாசமானாலும் நன்றாயறியப்பட்ட ஆத்மாவில் மறுபடியும் பிராந்தியுண்டாகிறதில்லை. ஏனெனின், பிராந்திக்குக் காரணமான அவித்தை ஒருமுறையுண்டான ஞானத்தால் நஷ்டமாய்விட்டது. ஆதலால் பிராந்தியும் அவித்தையுமில்லாததினால் மறுபடியும் விருத்திஞான முண்டாவதிலோர் பிரயோசனமுமில்லை.

ஜீவன்முக்தியின் ஆனந்தத்தின்பொருட்டு ஒருவன் விருத்தியின் ஆவி ருத்தியை யபேக்ஷிக்கின் அடிக்கடி வேதாந்த அர்த்தத்தைச் சிந்தனை செய்ய வேண்டும். வேதாந்தார்த்தத்தைச் சிந்திப்பதனாலேயே அடிக்கடிப் பிரஹ்மா காரவிருத்தி யுண்டாகிறது. கர்மோபாஸனைகளால் பிரஹ்மாகாரவிருத்தி யுண்டாகிறதில்லை. ஏனெனின், கர்மோபாஸனைகள் அந்தக்கரணத்தின் சுத்தி நிச்சலத்தன்மை என்பவற்றின்வாயிலாகவே ஞானத்திற் குபயோகப்படுகின்றன. வேறுவிதமாக அவைக ளுபயோகப்படுகிறதில்லை. வித்துவானுடைய அந்தக்கரணத்தில் பாபமும் சஞ்சலத்தன்மையுமில்லை. ராகத்துவேஷங்களின் வாயிலாகப் பாபத்துக்குஞ் சஞ்சலத்தன்மைக்குங் காரணம் அவித்தையாம். அந்த அவித்தை ஞானத்தால் நாசமாகிறது. ஆதலால் வித்துவானுக்குப் பாபமும் சஞ்சலத்தன்மையு மில்லாமையால் கர்மோபாஸனைகளின் உபயோக மில்லை.

## 394. ஞானிகளினது பிராரப்தத்தின் வேறுபாடும் அவர்களுக்கு ஜீவன்முக்தி சுகத்தின்பொருட்டும் உபாஸனையிற் பிரவிருத்தியுண்டாகாமையும்.

"ராகத்துவேஷாதிகள் அந்தக்கரணத்தின் சகஜதர்மங்கள். எதுவரையில் அந்தக்கரணமிருக்கிறதோ அதுவரையில் ராகத்துவேஷங்கள் ஞானிக்கு எவ்விதத்தாலும் நாசமாகா. அந்த ராகத்துவேஷங்களால் ஞானியின் அந்தக்கரணமும் சஞ்சலப்படும். ஆதலால் சஞ்சலத்தன்மையை நீக்குதற்பொருட்டு ஞானியும் உபாஸனையை யனுஷ்டிக்கவேண்டியது.

அந்தக்கரணத்தின் சஞ்சலத்தன்மையால் ஞானிக்கு விதேகமோக்ஷத்தில் ஹானியில்லையாயினும், சஞ்சலமான அந்தக்கரணத்தில் சொரூபாநந்தம் விளங்காதாகலின் சஞ்சலத்தன்மை ஜீவன்முக்திக்கு விரோதியாம். ஆதலால் ஜீவன்முக்தியின்பொருட்டுச் சஞ்சலத்தன்மையைப் போக்க உபாஸனை செய்ய வேண்டும்" என்று ஒருகால் இவ்வாறு கூறின்,

அது பொருந்தாது. ஏனெனின் திடபோதம் எவன் அந்தக்கரணத்தி லுண்டாயிருக்கிறதோ அவனுக்குச் சமாதியும் விக்ஷேபமும் சமமாம். ஆதலால் அந்தக்கரண நிச்சலத்தன்மையின்பொருட்டு வித்துவான் யாதொரு பிரயத்தினமுஞ் செய்யவேண்டியதில்லை. அங்ஙனமாயினும், வித்துவானுடைய பிரவிருத்தியும் நிவிருத்தியும் பிராரப்தத்தின் ஆதீனமாயிருக்கின்றன. பிராரப்த கர்மம் எல்லோருக்கும் வெவ்வேறாயிருக்கிறது.

1. ஜனகாதிகள்போல் சில வித்துவான்களுக்குப் பிராரப்தம் போகத்துக்கு ஹேதுவாகிறது.

2. சுகதேவர் வாமதேவர்கள் போலச் சிலருக்குப் பிராரப்தம் நிவிருத்திக்கு ஹேதுவாகிறது.

1. எவன் பிராரப்தம் போகத்துக்கு ஹேதுவாகிறதோ அவனுக்குப் பிராரப்தத்தால் போக இச்சையும் போகசாதனத்தின்பொருட்டுப் பிரயத்தனமுமுண்டாகின்றன.

2. எவன் பிராரப்தம் நிவிருத்திக்கு ஹேதுவாயிருக்கிறதோ அவனுக்கு ஜீவன்முக்தியினது ஆனந்தத்தின் இச்சையுண்டாகிறது. மற்றப் போகத்தில் அருவருப்புண்டாகிறது.

ஜீவன்முக்தி ஆனந்தத்தின் இச்சையுள்ளவன் பிரஹ்மாகாரவிருத்தி அடிக்கடி யுண்டாகும்பொருட்டு வேதாந்த அர்த்தத்தைச் சிந்தித்தலே செய்ய வேண்டும்; உபாஸனை செய்யவேண்டியதில்லை. ஏனெனின், அந்தக்கரணத்தின் நிச்சலத்தன்மைமாத்திரத்தால் பிரஹ்மானந்தம் விசேஷமாய் விளங்க மாட்டாது; பிரஹ்மாகாரவிருத்தியாற்றான் விளங்கும். அந்தப் பிரஹ்மாகார விருத்தி வேதாந்தசிந்தனையாலேயே யுண்டாகிறது; உபாஸனையா லுண்டாகிறதில்லை.

அந்தக்கரணத்தின் சஞ்சலத்தன்மையும் வித்துவானுக்கு வேதாந்தசிந்தனையினாலேயே நீங்கிவிடுகிறது. ஆதலால் அந்தக்கரணத்தின் நிச்சலத்தன்மையின்பொருட்டும் உபாஸனையில் பிரவிருத்தியுண்டாகிறதில்லை.

இவ்விதத்தால் எவனுக்குத் திடபோத முண்டாயிருக்கிறதோ அவனுக்குக் கர்மோபாஸனைகளில் பிரவிருத்தியுண்டாகிறதில்லை.

## 395. திட அதிட ஞானிகளுக்கும் உத்தமமந்த ஜிஞ்ஞாஸுக்களுக்கும் கர்மோபாசனையில் அதிகாரமில்லையெனல் 395–396.

1. எவனுக்கு மந்தபோதமிருக்கிறதோ அவனும் மனனநிதித்தியாஸனங்களையே செய்யவேண்டும்; கர்மோபாஸனைகளைச் செய்யவேண்டியதில்லை. ஏனெனின், எவனுக்கு மந்தபோத முண்டாயிருக்கிறதோ அவன் உத்தமஜிஞ்ஞாசு. அவனுக்கு மனனநிதித்தியாஸனங்களைவிட வேறொன்றும் செய்யவேண்டியதில்லை. இது சாரீரகத்தில் சூத்திரகாரராலும் பாஷியகாரராலும் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது.

2. வித்துவானுக்கு மனனநிதித்தியாஸனங்களும் * செய்யவேண்டிய தில்லை. ஜீவன்முக்தியின் ஆநந்தத்தின்பொருட்டு மனனநிதித்தியாஸனங் களில் வித்துவான் பிரவர்த்திக்கிறான். அவனும் தன் இச்சையாற் பிரவர்த் திக்கிறான். "நான் வேதத்தின் ஆஞ்ஞைப்படி நடக்காதபக்ஷத்தில் எனக்கு ஜனனமரணாதி சமுசாரமுண்டாகும்" என்னும் புத்தியால் செய்யப்படும் கர் மம் கர்த்தவ்ய மெனப்படும். ஜன்மாதிகளின் உணர்ச்சி வித்துவான்களுக் குண்டாகிறதில்லை. ஆதலால் தன்னிச்சையால் வித்துவான் மனனநிதித் தியாஸனங்களைச் செய்கின்றான். அது கர்த்தவ்யமன்று.

இவ்விதத்தால் மந்தபோதம் அல்லது திடபோத முண்டானவனுக்குக் கர்மோபாஸனைகள் கர்தவ்யமன்று.

**396.** 3. எவனுக்குப் போதமுண்டாகவில்லையோ, ஆனால் ஆத்மா வை அறியவேண்டுமென்னும் தீவிரமான இச்சையிருக்கிறதோ, போகத்தில் இச்சையில்லையோ, அவனுடைய அந்தக்கரணம் சுத்தமாயிருக்கிறது. ஆத லால் அவனும் உத்தமஜிஞ்ஞாசுதான். அவனுக்கும் போதத்தின்பொருட்டுச் சிரவணாதிகள் செய்யவேண்டியனவாம்; கர்போபாஸனைகளன்று. ஏனெ னின், கர்மோபாஸனைகளின் பலன் எதுவோ அது அவனுக்குச் சித்தித்திருக் கிறது.

4. ஞானத்தின் சாமானிய இச்சையால் எவன் சிரவணத்திற் பிரவர்த் திக்கிறானோ, எவன் அந்தக்கரணம் போகத்தில் ஆசக்தியுள்ளதாயிருக்கிறதோ அவன் மந்தஜிஞ்ஞாசு. அவனும் சிரவணத்தைவிட்டு மறுபடியும் கர்மோபாஸனை களிற் பிரவர்த்திக்கவேண்டியதில்லை. கர்மோபாஸனைகளின் பலன்களாகிய அந்தக்கரணத்தின் சுத்தியும் நிச்சலத்தன்மையும் அவனுக்குச் சிரவணத்தினா லேயே உண்டாய்விடும். சிரவணத்தின் ஆவிருத்தியால் அந்தக்கரணத்தின்

* 1. "தத்துவத்தினையறியாதவர்கள் எவர்களோ அவர்கள் சிரவணத்தைச் செய்க நான் தத்துவத்தை அறிந்தவன்; எக்காரணத்தால் சிரவணத்தைச் செய்யவேண்டும்."

2. "சம்சயத்தை யடைந்தவர்கள் எவர்களோ அவர்கள் மனனத்தைச் செய்க. சம்சயமில்லாத யான் மனனத்தைச் செய்யேன்".

3. "விபரியத் (விபரீதத்)தை யடைந்தவன் எவனோ அவன் நிதித்தியாசனத்தைச் செய்க. நான் தேகத்தில் ஆத்மத்தன்மையின் ஞானவடிவ விபரியயத்தை ஒருபோதும் அடைகிறதில்லையாகலின் எனக்கு விபரியயமின்மையால் என்னதியான மிருக்கின் றது? ஒன்றுமில்லை".

இவ்வாறு பஞ்சதசியின் திருப்திதீபத்தில் வித்யாரண்யசுவாமிகள் வித்வானுக்குக் கர்த்தவ்ய மின்றென்பதனை விஸ்தாரமாக எழுதியிருக்கின்றனர்.

தோஷம் நீங்கி இந்த ஜன்மத்திலாவது அல்லது வேறு ஜன்மத்திலாவது அல்லது பிரஹ்மலோகத்திலாவது ஞானமுண்டாகும்.

ஆவிருத்தியென்பது அடிக்கடி யென்பதாம்.

சிரவணத்தை விட்டுக் கர்மோபாஸனைகளிற் பிரவிருத்திக்கிறவன் * ஆருடபதிதன் எனப்படுகிறான்.

1-2. இவ்விதமாக ஞானிக்கும் உத்தமஜிஞ்ஞாசுவுக்கும் கர்மோபாஸனைகளின் அதிகாரமில்லை.

3. வேதாந்தசிரவணத்தில் பிரவர்த்தித்துள்ள மந்தஜிஞ்ஞாசுவுக்கும் அதிகாரமில்லை.

4. எவனுக்கு ஞானத்தின் இச்சையிருந்தும் போகத்தில் புத்திபற்றியிருக்கிறதோ, அதனாற் சிரவணத்தில் எவன் பிரவிருத்திக்கிறதில்லையோ, அந்த மந்தஜிஞ்ஞாசுவுக்கு நிஷ்காமகர்மத்திலும் உபாஸனையிலும் அதிகாரமுண்டு.

5. போகத்திலேயே எவனுக்கு ஆசையிருக்கிறதோ ஞானத்தில் இச்சையில்லையோ அவன் பகிர்முகன். அவனுக்கு ஸகாமகர்மத்திலும் அதிகாரமுண்டு.

ஆதலால் ஞானிக்குக் கர்மோபாஸனைகளில் அதிகாரமில்லை. கர்மோபாஸனைகளுக்கு ஞானம் விரோதியாம்.

## 397. திடஞானத்திற்குக் கர்மோபாசனைகள் விரோதியன்று. ஆனால் மந்தஞானத்திற்கு விரோதியாமெனல் 397–399.

கர்மோபாஸனைகளும் அந்தக்கரணத்தின் சுத்தி நிச்சலத்தன்மைகள் வாயிலாக ஞானோற்பத்திக்கு ஏதுக்களாம். ஆனால் ஞானோற்பத்திக்குப் பின் கர்மோபாஸனைகளைச் செய்யின் உண்டான ஞானமும் நஷ்டமாய்விடும். ஆதலால் அவை ஞானத்துக்கு விரோதிகளாம்; ஏனெனின்,

1. "நான் கர்த்தா. யஞ்ஞாதிகள் எனக்குச் செய்யவேண்டியன. யஞ்ஞாதிகளுக்குச் சுவர்க்காதிகள் பயன்." என்னும் பேதபுத்தியால் கர்மஞ்செய்யப்படுகிறது.

---

* மோக்ஷத்தின் ஏணியிலேறி அங்கிருந்து கீழே விழுவோனுக்கு கரம்லேடி நியாயம் (உள்ளங்கையிலுள்ள இலட்டுகத்தை யெறிந்துவிட்டுக் கையைநக்குகிறவன் திருஷ்டாந்தம்) கிடைக்கிறது. இது பஞ்சதசியின் தியானதீபமென்னும் ஒன்பதாவது பிரகரணத்தின் வியாக்கியானத்தில் எழுதப்பட்டிருக்கிறது.

2. "நான் உபாஸகன், தெய்வம் உபாஸியம்" என்னும் பேதபுத்தியால் உபாஸனையுண்டாகிறது.

அவ்விரண்டுவகைப் புத்திகளும் 'எல்லாம் பிரஹ்மமயம்' என்னும் புத்தியை விலக்கியுண்டாகின்றன. ஆதலால் கர்மோபாஸனைகள் ஞானத்துக்கு விரோதிகளாம்.

ஞானி ஆத்மாவை அசங்கனாக அறிந்தாலும் தேகத்தின் போஜனாதி வியவகாரங்களையேனும், அல்லது ஜனகாதிகளின் வியவகாரங்களைப்போல் அதிகமான ராஜ்யபாலனாதி வியவகாரங்களையேனும் செய்கிறான். அந்த வியவகாரத்திற்கு ஞானம் விரோதியன்று. வியவகாரமும் ஞானத்துக்கு விரோதியன்று. ஏனென்னின், எந்த ஆத்மஸ்வரூபம் ஞானத்தால் அசங்கம் என்று அறியப்படுகிறதோ அந்த ஆத்மாவில் வியவகாரம் பிரதீதியானால் வியவகாரத்துக்கு ஞானமும் ஞானத்துக்கு * வியவகாரமும் விரோதியாகும். வித்துவானுக்கு ஆத்மாவில் அந்த வியவகாரம் பிரதீதியாகிறதில்லை. எல்லா வியவகாரமும் தேகாதிகளை ஆசிரயித்துக்கொண் டிருக்கின்றன. ஆத்மாவில் வியவகாரசகித தேகாதிகளின் சம்பந்தமேயில்லை. இத்தன்மைய புத்தியோடு ஞானி சகல வியவகாரங்களையுஞ் செய்கிறான். இக்காரணத்தால் வித்துவானுடைய பிரவிருத்தியும் நிவிருத்தியே யெனப்படுகிறது.

---

* இவ்வர்த்தத்தினை வித்தியாரண்யசுவாமிகள் திருப்திதீபத்திலும் இவ்வாறு எழுதியிருக்கின்றார்கள்:—

1. "பிராரத்தம் எப்போது ஜகத்தின் சத்தியத்தன்மையைச் சம்பாதித்துப் போகத்தைக் கொடுக்கின்றதோ அப்போது வித்தைக்கு விரோதியாகின்றது. போகமாத்திரத்தால் விஷயத்திற்குச் சத்தியத்தன்மை உண்டாகிறதில்லை."

2. "வித்தை (ஞானம்) எப்போது ஜகத்தை ஒடுக்குகின்றதோ அப்போது பிராரப்தத்திற்கு விரோதியாகும். மித்தியாத்தன்மையின் ஞானத்தினாலோ அதற் (ஜகத்திற்)கு விலயமுண்டாகிறதில்லை". இங்குப் பிராரப்தசத்தத்தால் அதன்காரியமாகிய வியவகாரமும் கொள்ளப்படும்.

3. அங்ஙனமே தியானதீபத்திலும் "வியவகாரம் எதுவோ அது பிரபஞ்சத்தின் சத்தியத்தன்மையினையும் ஆத்மாவின் ஜடத்தன்மையினையும் அபேக்ஷை செய்கிறதில்லை; ஆனால் இச்சாதனங்களையே அபேக்ஷிக்கின்றது."

4. "மனம் வாக்கு சரீரம் அவற்றிற்குப் புறம்பான பொருள்கள் (வீடு நில முதலியன) எவையோ அவை வியவகாரத்திற்குச் சாதனங்களாம். அவற்றைத் தத்துவஞானி மித்தையென அறிகின்றான். ஆனால் சொரூபமாக நாசஞ்செய்கிறதில்லை. ஆதலால் இவனுக்கு (ஞானிக்கு) வியவகாரம் ஏன் உண்டாகாது? (உண்டாகவே செய்யும்)."

இவ்வாற்றால் ஞானத்திற்கும் பிராரப்தத்தாற்றோன்றும் வியவகாரத்திற்கும் விரோதமில்லை.

**398.** வேறு வியவகாரங்கள் ஞானத்துக்கு விரோதியாகாததுபோலக் கர்மோபாஸனைகளையும் அன்னிய பகிர்முக புருஷர்களைச் செய்வித்தற்பொருட்டு ஆத்மாவை யசங்கமென்றறிந்தும், கிரியையைத் தேகம் வாக்கு அந்தக்கரணம் என்பவற்றை யாசிரயித்ததாய் அறிந்தும் செய்யின் ஞானத்துக்கு அவை விரோதியாகா. ஏனெனின், வித்துவான் அசங்கமென்றறிந்த ஆத்மாவைக் கர்த்தாவென்று அறிந்து கர்மோபாஸனைகளைச் செய்யின், அப்போது ஞானத்துக்கு அவை விரோதியாம். அந்த ஆத்மாவின் அசங்கவடிவ திடநிச்சயம் கர்மோபாஸனைகளால் வித்துவானுக்கு நீங்குகிறதில்லை. ஆதலால் * ஆபாஸரூபமான கர்மோபாஸனைகள் திடஞானத்துக்கு விரோதியாகா. இக்காரணத்தால், ஜனகாதிகள் ஆபாஸரூபகர்மஞ் செய்திருக்கிறார்கள்.

ஆத்மாவை யசங்கமென்றறிந்து மற்ற வியவகாரங்கள்போல் தேகாதிகளின் தர்மங்களையுமறிந்து வித்துவான் செய்யுஞ் சுபக்கிரியைகள் ஆபாஸரூப கர்மங்களெனப்படும். அவற்றிற்கு ஞானத்தோடு விரோதமில்லை. பாஷியகாரர் கர்மோபாஸனைகளுக்கு ஞானத்தோடு எந்த விரோதஞ் சொல்லியிருக்கிறாரோ, அது ஆத்மா கர்த்தாவென்னும் புத்தியினால் எந்தக் கர்ம உபாஸனைகள் செய்யப்படுகின்றனவோ அதற்கு ஞானத்தோடு விரோதம் சொல்லியிருக்கிறார்; ஆபாஸரூபத்தாற் சொல்லவில்லை.

**399.** அங்ஙனமாயினும், மந்தபோதத்துக்கு ஆபாஸரூபகர்மோபாஸனைகளும் விரோதிகளாம். ஏனெனின் சமுசயாதிகளோடு கூடிய போதம் மந்தபோத மெனப்படும். எவன் அந்தக்கரணத்தில் "ஆத்மா அசங்கனா? அல்லது அசங்கனன்று?" என்று ஒருகால் சந்தேக முண்டாகிறதோ அவன் அடிக்கடி "ஆத்மா அசங்கன், எனக்குச் செய்யவேண்டிய தொன்றுமில்லை" என்னும் அர்த்தத்தைச் சிந்தனை செய்யவேண்டியது. அப்போதே சமுசயம் நீங்கித் திடபோத முண்டாய்விடும். அப்படிச் செய்யாமற் கர்மோபாஸனைகளைச் செய்தால் உண்டான மந்தபோதமும் நீங்கி "நான் கர்த்தா போக்தா" என்னும் விபரீத நிச்சயமுண்டாகும். ஆதலால் மந்தபோத முண்டாவதற்கு முன்னேயே கர்மோபாஸனைகளைச் செய்யவேண்டும்; பிறகு அவைகளைச் செய்யவேண்டியதில்லை.

மந்தபோதமுள்ளவன் கர்மோபாஸனைகளைச் செய்தால் உண்டான போதமும் நஷ்டமாய்விடும்.

---

* ஆத்மாவை அசங்கமென்றறிந்தும் கிரியைகள் மனோவாக்குக் காயங்களைச் சார்ந்தனவென்றறிந்தும் செய்யப்படும் கர்மோபாஸனைகள் ஆபாஸரூபங்களாம்.

திருஷ்டாந்தம்:—பக்ஷி தன் முட்டைகளை இறகு முளைக்குமுன் அவ்வண் காக்கின்றது; இறகு முளைத்தபின் காக்கிறதில்லை. இறகு முளைத்தபின்னும் காக்குமாயின் முட்டையிலுள்ள ஜலத்தினால் குஞ்சின் மிருதுவான இறகு கரைந்துபோகும். அதுபோல் ஞானோற்பத்திக்கு முன்னேயே கர்மோபாஸனைகளை யனுஷ்டிக்கவேண்டும்; ஞானோற்பத்திக்குப் பின் அனுஷ்டிக்க வேண்டியதில்லை. ஞானத்தின் உற்பத்திக்குப் பின்னும் கர்மோபாஸனைகளை யனுஷ்டிக்கின் குஞ்சு நஷ்டமாவதுபோல் மந்தஞானமும் நஷ்டமாய்விடும். முதிர்ந்தபக்ஷி முட்டையின் சம்பந்தத்தினால் நஷ்டமாகாததுபோலத் திடபோதம் நஷ்டமாகாது. முதிர்ந்த பக்ஷிக்கு முட்டைபோல் திடபோதத்துக்குக் கர்மோபாஸனைகளால் பிரயோஜனமுமில்லை.

இவ்விதத்தால் மோக்ஷத்தின் பொருட்டு ஞானிக்குச் செய்யவேண்டியதொன் யாதொன்றுமில்லை. இவ்வாறு மூன்றாவது பிரசினத்தின் உத்தரஞ் சொல்லப்பட்டது.

## 400. முற்கூறிய பொருள் சகலவேதத்தின் சாரமாமெனல்.

சிஷ்யனுக்கு ஆசாரியர் கூறியவிடை வேதாநுசாரமாகச் சொன்னதாம். ஆதலால் இது யதார்த்தமாமெனக் கூறுகின்றார்:—

சிஷ்யனே! யான் உனக்குச் சொல்லியது முழுவதும் வேதத்தின் சாரமாம். ஆதலால் இதனை நீ நம்புவாயாக. இதை யுணர்வதினால் சிரமமின்றி அபாரமான ஜனனமரணரூப சமுசாரம் நாசமாய்விடும்.

* 401. பாஷையின் சம்பிரதாயம்.

## 402. உபதேசித்த அர்த்தத்தின் சுருக்கம் (402-404).

"ஜகத்கர்த்தா ஈசுவரன் அவன் உனக்கு வேறல்லன். நீ சச்சிதாநந்த ரூபப் பிரஹ்மம்" என்று ஆசாரியர் முன்னுபதேசித்ததை மறுபடியும் தயையுடன் சிஷ்யனுக்குச் சொல்லுகிறார். சிஷ்யனே! தீனத்தன்மையை விட்டு உன் ஸ்வரூபத்தைப் பார். நீயோ ஜனனமில்லாத சுத்தப்பிரஹ்மம். பார்க்கப்படுபவைகளையெல்லாம் பிரகாசஞ் செய்கிறாய். உன் அஞ்ஞானத்தால் ஜகத்தையெல்லாம் நீ சிருஷ்டித்தபிறகு மறுபடியும் எல்லாவற்றையும் நாசஞ் செய்து நீ நாசமற்றவனாயிருக்கிறாய். மித்யாப் பிரபஞ்சத்தைப் பார்த்துக் கொஞ்சங்கூட மனவருத்தத்தை அடைகிறதில்லை. நீ தேவர்களுக்கெல்லாம் தேவனாயிருக்கிறாய். நீ சுகாரசியாயிருக்கிறாய். மாயையினால் உன்னிடத்தில் ஜீவன் ஜகத்து ஈசுவரன் மூன்றும் விளங்குகின்றன. அது ரஜ்ஜுவில் சர்ப்பமும் கிளிஞ்சிலில் வெள்ளியும் விளங்குவதுபோலாம்.

---

* இப்பிரசங்கம் ஹிந்திபாஷையின் சம்பிரதாயத்தைக் கூறுகின்றது. அஃது இங்குத் தமிழில் உபயோகமின்மையால் மொழிபெயர்க்கப்படவில்லை.

**403.** ஞானசாதனத்தைச் சொல்லுகிறேன்:—சிஷ்யனே! ராகமாகிய பதார்த்தத்திலுள்ள திடமான ஆசக்தியைத் தகித்துவிடு. லோபத்தையொழித்துவிடு. துவேஷத்தைக் கொன்றுவிடு. காமத்தை நீக்கிவிடு.

* ராகம் லோபம் துவேஷம் காமம் என்பவற்றைக் கொள்வதனால் சகல ராஜஸதாமஸ விருத்திகளும் கொள்ளப்படுகின்றன. இதனால் சகலமான ராஜஸ தாமஸ விருத்திகளையும் நாசஞ்செய்கவென்னும் அர்த்தம் சித்திக்கிறது. இராஜஸதாமஸவிருத்திகள் ஞானத்துக்கே விரோதிகளாயிருக்கின்றன. அவைகளை நாசஞ்செய்யாமல் ஞானமுண்டாகிறதில்லை. ஆதலால் அவற்றின் நிவிருத்தி ஜிஞ்ஞாசுவினால் அபேக்ஷிக்கப்படுவதாம்.

விவேகம் வைராக்கியம் சமாதிஷட்கசம்பத்தி முமுக்ஷுத்துவம் என்னும் நான்கும் ஞானசாதனங்களாம். அவற்றில் விவேகம் முக்கியமானது. ஏனெனின், விவேகத்தினால் வைராக்யாதிகளுண்டாகின்றன. ஆதலால் ஆசாரியர் இப்போது விவேகத்தை யுபதேசிக்கிறார்:—

சிஷ்யனே! பாராவாரமாகிய சமுசாரத்தைக் கானல் ஜலத்துக்குச் சமானமாக மித்தையென்று நீ யடிக்கடி அறிவாயாக.

1. பாராவாரமென்பது சமுசாரத்திற்காம்.

2. அபாராவாரமென்பது ஆத்மாவிற்காம்.

பாராவாரம் மித்தையென்றதனால் அபாராவாரம் மித்தையன்று சத்தியமாம் என்பது அர்த்தத்தினாற் சொல்லப்பட்டது.

வித்தைபாடி பண்ணும் ஜாலவித்தைகளைப் பார்க்கும் மகனைப் பார்த்துத் தகப்பன் "மகனே! வித்தையாடியாற் காண்பிக்கப்பட்ட இம்மாமாமுதலியன

---

* 1. விஷயத்தில் தோஷதிருஷ்டியினால் ராகம் நாசமாகின்றது.

2. அர்த்தத்தில் அனர்த்தத்தைக் காணுதலால் லோபம் நாசமாகின்றது.

3. காமாபாவத்தால் குரோதமாகிய துவேஷமுண்டாகிறதில்லை.

4. பதார்த்தங்களைச் சிந்தித்தலாகிய சங்கற்பமில்லாமையால் இச்சையாகிய காமமுண்டாகிறதில்லை.

இவ்வாற்றால் அந்நிய ராஜஸ தாமஸ விருத்திகளினது நாசத்தின் உபாயமும் சாஸ்திரத்தாற் கண்டுகொள்க.

அல்லது பாகவதத்தின் ஏகாதசஸ்கந்தத்தின் 13-வது அத்தியாயத்திற் கூறிய தேசகாலாதிவடிவ பத்துச் சாத்துவிக பதார்த்தங்களைச் சேவித்தலால் சத்துவகுணத்தின் விருத்திவாயிலாகச் சகல ராஜஸ தாமஸ விருத்திகளின் நாச (திரஸ்கார) முண்டாகிறது.

முழுமையும் பொய்" என்றான். இப்படிச் சொன்னதினால் வித்தையாடி பொய்யனென மகன் நினைக்கிறதில்லை. ஆனால் அவனைச் சத்தியமாகவே அறிகிறான். அதுபோல ஜகத்து மித்தையென்று சொல்லுதலால் ஆத்மா சத்தியமென்று அறிந்துகொள்ளுவான் என்னும் அபிப்பிராயத்தால் ஆசாரியர் பாராவார (சமுசார)த்தை மித்தையாகச் சொன்னார்.

இவ்விதத்தால் ஜகத்து மித்தையாம்; ஆத்மா சத்தியமாமென்று குரு விவேகத்தை யுபதேசித்தார்.

அந்த விவேகத்திற்கு வேறான சாதனங்கள் தாமாகவே யுண்டாகின்றன. ஆதலால் விவேகத்தின் உபதேசத்தால் சகல சாதனங்களின் உபதேசமும் அர்த்தத்தினால் சொல்லப்பட்டது.

ஞானத்தின் பகிரங்கசாதனங்களைச் சொன்னோம்.

இனி அந்தரங்கசாதனமான சிரவணத்தைச் சொல்லுகிறோம்:—சிஷ்யனே! ஞானரூப சூரியனைச் சிரவணத்தினால் சம்பாதித்து அஞ்ஞானரூப தமஸை நாசஞ்செய்.

தமஸென்பது இருளிற்கும் அஞ்ஞானத்திற்கும் பெயராம். இருள் உபமானம். அஞ்ஞானம் உபமேயம். எதற்கு உபமை கொடுக்கப்படுகின்றதோ, அது உபமேயம்; எதன் உபமை கொடுக்கப்படுகின்றதோ, அது உபமானமெனப்படும்.

404. ஞானத்தின் சொரூபம் அந்நிய (சாங்கியம் நியாயமுதலிய) சாஸ்திரங்களில் நாநாவிதமாக அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் மகாவாக்கியாநுசாரமாக ஞானத்தின் சொரூபத்தைக் கூறுகின்றோம்:—

சிஷ்யனே!

1. சீவ ஈசுவரர்களில் அவித்தைமாயைப் பாகங்களைவிட்டு அவற்றின் பேதத்தோற்றம் எதுவோ அதனை நீக்கி,

2. சீவேசுவரர்களிடத்துள்ள வேதன (ஞான) மாகிய சேதனபாகத்தைப் பேதமின்றியதென்று அறி.

இப்படிக் கூறுதலால் மகாவாக்கியங்களில் பாகத்தியாகலக்ஷணையினால் ஜீவேசுவரர்களது ஏகத்துவத்தைக் காண்க.

வேதத்தின் சாரத்தை விசாரித்து உன்னை நீ காத்துக்கொள். தாஸனிடத்து ஆசைவை. இதனை (இப்பிரபஞ்சத்தைப்) பாராதே.

முற்கூறியதனையே சுருக்கிக் கூறுவாம்:—சிஷ்யனே! அழியத்தக்க சங்காதமாகிய தேகாதி நீயல்லை. ஆனால் அழியாத பிரஹ்மம் நீ. * விருக்ஷரூப சம்சாரம் மித்தை. ஆகாசத்தில் நீலவர்ணமும் கூடாரரூபமும் உண்மையில்லாமல் மித்தையாகப் பிரதீதியாவதுபோலச் சமுசாரமும் ஆத்மாவில் இல்லாமல் மித்தையாகப் பிரதீதியாகிறது.

சுருதிஸ்மிருதிகளில் சமுசாரத்தை விருக்ஷரூபமாகச் சொல்லியிருத்தலால் இவ்விடத்திலும் விருக்ஷசப்தம் சமுசாரத்தில் பிரயோகிக்கப்பட்டிருக்கிறது.

## 405. வேறுவகையால் மோக்ஷத்திற்குச் சாதனம் ஞானமாமென்று கூறுதல் (405–406).

மோக்ஷத்திற்குச் சாதனம் ஞானமாமென்னும் பொருளை வேறுவகையாற் கூறுகின்றார்:—

---

* 1. எல்லாவற்றினும் மேலானதா யிருத்தலால் உயரமாயுள்ள மாயாவிசிஷ்ட பரப்பிரஹ்மம் எதற்கு மூலமா (வேரா) யிருக்கிறதோ,
2. மகதத்துவம் எதற்கு முளையா யிருக்கிறதோ,
3. அகங்காரம் எதற்குக் கிளையா யிருக்கிறதோ,
4. பஞ்சதன்மாத்திரை எதற்குக் கொம்பா யிருக்கிறதோ,
5. கூறிய மகதத்துவமுதலியன யாவும் காரியத்தன்மையால் தாழ்வுடையனவாயிருத்தலின் எதற்குக் கீழ்ச்சாகைகள் எனப்படுகின்றனவோ,
6. வேதமுதலிய சாஸ்திரங்கள் எவையோ அவை மிக இனிமையைத்தரும் வாக்கியங்களால் இதன் அநித்தியத்தன்மைமுதலிய தோஷங்களை மூடுகின்றனவாகலின் அச்சாஸ்திரங்கள் எதற்கு இலைகளா யிருக்கின்றனவோ,
7. நான்கு புருஷார்த்தமும் எதற்கு இரஸமா யிருக்கின்றதோ,
8. தர்மாதர்மம் எதற்குப் புஷ்பமோ,
9. ஜனனமரணாதி துக்கங்கள் எதற்குப் பழமோ,
10. அஞ்ஞானமுடைய ஜீவர்களாகிய பக்ஷிகள் எதன் போக்தாவாகின்றனவோ,
11. வைராக்கியத்தினால் தீட்டப்பட்ட ஞானமாகிய கோடரி எதனை வெட்டுவதாயிருக்கின்றதோ,

அத்தன்மையதாம் இச்சம்ஸாரவடிவ அசுவத்தவிருக்ஷம் (அரசமரம்).

இவை முதலிய அநேகவிதங்களாகச் சாஸ்திரங்களிற் சம்ஸாரமாகிய விருக்ஷம் வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

சிஷ்யனே! தேகாபிமானியான அஞ்ஞானியும், ஞானியும் பந்தமோக்ஷங்களுக்கு இருப்பிடங்களாவர்.

1. அஞ்ஞானியோ பந்தத்துக்கிருப்பிடம்.

2. ஞானி மோக்ஷத்துக்கிருப்பிடம்.

ராகமும் விராகமும் அவர்களது கொடிகள். எப்படிக் கொடி ராஜாவின் பட்டணத்துக்கு அடையாளமாயிருக்கிறதோ அப்படி அஞ்ஞானிக்கு ராகமும் ஞானிக்கு விராகமும் அடையாளங்களா யிருக்கின்றன.

1. அஞ்ஞானிக்கு * இராகம் குறி.

2. ஞானிக்கு விராகம் குறி.

அஞ்ஞானியினிடத்தும் விராகமுண்டாகிறது; ஆதலால் ஞானிக்கு அஞ்ஞானியின் வேறான விராகம் சொல்லப்பட்டிருக்கிறது. சிஷ்யனே! சப்தாதி விஷயங்களில் சத்தியத்தன்மையின் பிராந்தியும், ரஜ்ஜுசர்ப்பம்போல் விஷயம் பிரமவடிவமென்னும் நிச்சயமாகியபுத்தியும் காற்றுக்கொடியை யாட்டுவது போல் ராகவிராகங்களை யாட்டு (சஞ்சலப்படுத்து) கின்றன; அவற்றைத் தளர விடுகிறதில்லை.

1. விஷயத்தில் சத்தியபுத்தியால் ராகத்தின் தளர்ச்சி நீங்குகிறது.

2. விஷயத்தில் பிரமபுத்தியால் விராகத்தின் தளர்ச்சி நீங்குகிறது.

**406.** விஷயம் அசத்தியம். ஆதலால் அதில் உண்டாம் சத்தியபுத்தி பிராந்திரூபமாம். பிராந்திஞானமும் அதற்கு விஷயமான மித்தியாவஸ்துவும் இரண்டும் பிரம மெனப்படும். இங்ஙனம் கூறியதனால் அஞ்ஞானியின் விராகத்துக்கும் ஞானியின் விராகத்துக்கும் பேதம் சொல்லப்பட்டது. ஏனெனின், அஞ்ஞானியின் விராகம் விஷயத்தில் மித்தியா புத்தியாலுண்டானதன்று ஆதலால் அது மந்தமாயிருக்கிறது. "விஷயம் மித்தை" யென்னும் புத்தி அஞ்ஞானிக் குண்டாகிறதில்லை.

1. சாஸ்திரத்தினாலும் யுக்தியினாலும் விஷயம் மித்தையென்று அஞ்ஞானியும் அறிந்திருந்தாலும் விஷயம் மித்தையென்னும் அபரோக்ஷபுத்தி ஞானிக்கே யுண்டாகிறது; அஞ்ஞானிக்குண்டாகிறதில்லை. ஆதலால் அஞ்ஞானிக்கு விஷயத்திலுள்ள பரோக்ஷமான மித்தியாபுத்தியால் அபரோக்ஷமான சத்தியப்பிராந்தி நிவிருத்தியாகிறதில்லை. இவ்விதத்தால் அஞ்ஞானிக்கு விஷயத்தில் விராகமுண்டாகும்போது பரோக்ஷ மித்தியாபுத்தியு மிருக்கிறது. ஆனால் பரோக்ஷ மித்தியாபுத்தியினும் பிரபலமாக அபரோக்ஷ சத்தியபுத்தியிருக்கிறது. ஆதலால் அஞ்ஞானிக்குப் பரோக்ஷ மித்தியாபுத்தி விராகத்

* இங்கு இராகமென்றது தீவிராகத்தினை. இத்தீவிராகமின்மையினையே விராகமென்றனர்.

துக்கு ஹேதுவன்று. ஆனால் பிரபலமான சத்தியபுத்தியால் விஷயத்தில் ராகமேயுண்டாகிறது. விராகமுண்டாயினும் அம் மித்தியாபுத்தியினா லுண்டா கிறதில்லை. ஆனால் விஷயத்தில் தோஷதிருஷ்டியால் உண்டாகிறது.

2. ஞானி சர்வப்பிரபஞ்சத்தையும் அபரோக்ஷவடிவத்தால் மித்தையாக அறிகிறான். அவ்வபரோக்ஷ மித்தியாபுத்தியால் அபரோக்ஷ சத்தியபுத்தி நிவிருத்தியாய்விடுகிறது. ஆதலால் ராகத்துக்கு ஹேதுவான விஷயத்திலுள்ள சத்தியபுத்தி ஞானிக்கிருக்கிறதில்லை. விராகத்துக்கு ஹேதுவான விஷயத்தில் மித்தியாபுத்தி ஞானிக்கிருக்கிறது. ஞானிக்கு விஷயத்தில் சத்திய புத்தி மறுபடியும் உண்டாகுமாயின் ராகமும் மறுபடியுமுண்டாகி விராகம் நிவிருத்தியாம். அவ்வபரோக்ஷமாய் மித்தையென்றறிந்த பதார்த்தத்தில் மறுபடியும் சத்தியபுத்தி யுண்டாகிறதில்லை. அபரோக்ஷமாய் மித்தையென் றறிந்த ரஜ்ஜுவிலுள்ள சர்ப்பத்தில் சத்தியபுத்தி மறுபடியும் உண்டாகாதது போல் ஞானிக்கு மறுபடியும் சத்தியபுத்தி யுண்டாகிறதில்லை. இவ்விதத்தால் ஞானிக்கு ராகத்தின் உற்பத்தியும் விராகத்தின் நிவிருத்தியும் உண்டாகிற தில்லை. ஆதலால் ஞானியின் விராகம் திடமாம்.

தோஷதிருஷ்டியால் அஞ்ஞானிக்குண்டாகும் விராகமோ நிவிருத்தியாய் விடும். ஏனெனின், எந்தப் பதார்த்தத்தில் தோஷதிருஷ்டி யுண்டாகிறதோ அந்தப் பதார்த்தத்திலேயே வேறு காலங்களில் நல்லதெனும் புத்தியு முண் டாகிறது. அது எல்லாப் புருஷர்களுக்கும் பசுதர்மத்தின் முடிவில் ஸ்திரீயி னிடத்தில் தோஷதிருஷ்டி யுண்டாய்க் காலாந்தரத்தில் மறுபடியும் நல்லதெ னும் புத்தியுண்டாவதுபோலாம். இவ்விதத்தால் தோஷதிருஷ்டி நீங்கும் போது அஞ்ஞானியின் விராகமும் நீங்கிப்போம். ஆதலால் அஞ்ஞானிக்குத் * திடமான விராகமுண்டாகிறதில்லை.

இவ்விதத்தால் ராகமும் விராகமும் அஞ்ஞானிக்கும் ஞானிக்கும் சின் னங் (குறி) களாய்ச் சொல்லப்பட்டன.

---

* அஞ்ஞானிக்குத் திடவிராகமுண்டாகாது என்னும் அபிப்பிராயத்தால் கீதை யில் பகவான் இது கூறியிருக்கின்றனர்:—நிராஹார (வெளியில் விஷயங்களை விட்டவ) னாகிய தேகி (ஜிஞ்ஞாசு) எவனோ அவனுக்கு ரஸமின்றியதன்மை எவ்வாறுண்டாகுமோ அவ்வாறு விஷயம் நிவிருத்தியாகின்றது. அதாவது அவனுக்கு விஷயங்களிலுள்ள ஸ்தூலராகமெதுவோ அது நீங்குகின்றது. ஆனால் ரஸமென்னும் சொற்பொருளாகிய வாசனைவடிவ சூக்ஷ்மராகம் எதுவோ அது மனதில் நிற்கிறது. இப்புருஷனது அவ் விரஸ (சூக்ஷ்மராக)மும் பரப்பிரஹ்மத்தைப் பார்க்க (அபரோக்ஷமாயறிய) நீங்குகின் றது.

வேறு சின்னங்களையும் சொல்லுகிறோம்:—சிஷ்யனே! வீட்டின்பேசில் யானை முதலியவைகளின் மூர்த்திவடிவங்கள் இருப்பதுபோலப் பந்த மோக்ஷங்களுக்கு இருப்பிடங்களாகிய அஞ்ஞானி ஞானிகளின் அந்தக்கரணங்களில் சாக்ஷ்ய (சாக்ஷியாலறியப்படுவன) சாக்ஷியென்னும் மூர்த்திகள் இருக்கின்றன.

1. அஞ்ஞானியின் அந்தக்கரணத்தில் சாக்ஷ்யரூபமூர்த்தியுளது.

2. ஞானியின் அந்தக்கரணத்தில் சாக்ஷிரூபமூர்த்தி இருக்கின்றது.

சாக்ஷிக்கு விஷயமான பிரபஞ்சத்தினைச் சாக்ஷ்யமென்பர்.

1. சாக்ஷ்யரூபமூர்த்தி மலினமாயிருக்கிறது.

2. சாக்ஷிரூபமூர்த்தி சுத்தமாயிருக்கின்றது. இவற்றுள் சாக்ஷ்யத்தில் அழுந்தியவர்கள் இராகிகள். சாக்ஷியில் அழுந்துவோர் தியாகி விராகிகள். சஞ்சலப்பிரமத்தை நிஜவடிவமென்றறிந்தவன் துக்கமாகிய கிணற்றில் முழுகுகிறான். அசலப் பிரஹ்மத்தை நிஜவடிவமென்றறிகிறவன் ஆநந்த ஸ்வரூபத்தையடைகிறான்.

## 407. இலக்ஷணை மூன்றுவிதமாம் (407-409).

பாகத்தியாகலக்ஷணையினால் என்று 304-வது பிரசங்கத்தில் விசேஷமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. அதில் எதுவைக் கூறுதற்கு இலக்ஷணையின் பேதத்தைக் கூறுவாம்:—

பண்டிதர்களாகிய புத்திமான்கள் ஜஹதிலக்ஷணை (விட்டலக்கணை) அஜஹதிலக்ஷணை (விடாதலக்கணை) பாகத்தியாகலக்ஷணை (விட்டுவிடாதலக்கணை) என்று லக்ஷணை மூன்றுவகையாகக் கூறுகின்றனர். அவற்றுள் முதல் இரண்டும் மகாவாக்கியத்திற்பொருந்தா. பாகத்தியாகலக்ஷணையினால் தனது சொரூபமாகிய பிரஹ்மரூபத்தை யறிவிக்கின்றது.

408. சிஷ்யன் கேட்கின்றான்:—சாமாநிய ஞானத்திற்குப் பிறகு விசேஷத்தின் ஞானமுண்டாகும். சாமாநியமாய்ப் பிராஹ்மணனென்றறிந்தபின் அவனுடைய சாரஸ்வதன் [* திராவிடனென்றல்] முதலிய விசேஷத்தின் ஞானமுண்டாவதுபோல் லக்ஷணையின் சாமானிய ஞானத்துக்குப்பின் ஜஹதி முதலிய விசேஷவடிவங்களின் ஞானமுண்டாகும். லக்ஷணையின் சாமானிய வடிவமறிந்தாலன்றி ஜஹதிமுதலிய விசேஷ வடிவங்களின் ஞானமுண்டாகாது.

இவ்வபிப்பிராயத்தால் சிஷ்யன் கூறுகின்றான்:— லக்ஷணை யென்பது யாது? இதனை அறியேன். ஆதலால் லக்ஷணையின் சாமானியரூபத்தைக் காண்பித்துப் பின் ஜகதிமுதலிய லக்ஷணைகளின் மூன்றுபேதத்தைச் சொன்

* திராவிடன் = தமிழன் முதலிய என்பதனால் தெலுங்கன், மகாராஷ்டிரன், வைஷ்ணவன் என்றல் முதலியனவுங் கொள்ளப்படும்.

ணுல் விசேஷமாயிருக்கும். ஆதலால் அவற்றின் தனித்தனி லக்ஷணங்களைக் காட்டியருளல்வேண்டும்.

## 409. குருவாக்கியம்.

சிஷ்யனே! ஏகாக்கிரசித்தத்துடன் நான் சொல்வதைக் கேள். லக்ஷணைகளையும் அவற்றின் பேதங்களையும் அறிவாய். பதத்துக்கும் அர்த்தத்துக்குமுள்ள * சம்பந்தம் விருத்தி யெனப்படும். அது இருவகைத்து. ஒன்று

* 1. கன்றிற்குப் பசுவோடு சம்பந்தமிருக்கிறது. அதனால் அது அநேக பசுக்களின் மத்தியிலிருக்கிற தன் தாயாகிய பசுவினிடத்துப் பிரவிருத்திக்கிறது. சம்பந்தமின்றிப் பிரவிருத்தியாது. இதனால் கன்றிற்கும் மாட்டிற்கும் ஜந்நியஜநகபாவ சம்பந்தம் அறியப்படுகிறது. அந்த ஜந்நியஜநகபாவரூபத்தின் ஞானத்துக்கு ஹேதுவாகிய கன்றிற்குக் கோவினிடத்துண்டாகும் பிரவிருத்தி எதுவோ அதுவும் சம்பந்தமெனப்படும்

2. அதுபோலச் சப்தங்கட்குத் தத்தம் அர்த்தத்தில் உண்டாம் பிரவிருத்தி எதுவோ அதுவும் ஓர் சம்பந்தமின்றி யுண்டாகாது. ஆதலால் சப்தத்திற்குத் தன் வாச்சிய வடிவ அர்த்தத்துடன் வாச்சிய வாசகபாவ (சொல்லப்படுவது சொல்லுவதெனுந் தன்மை) சம்பந்தமும், லக்ஷிய வடிவ அர்த்தத்துடன் லக்ஷ்யலக்ஷகபாவ (லக்ஷணையினுல் அறியத்தக்கது லக்ஷணையாலறிவிப்பது எனுந்தன்மை) சம்பந்தமும் அறியப்படுகின்றன.

இவ்விருவகைச் சம்பந்தத்தினையே ஸ்மார்யஸ்மாரகபாவரூபசம்பந்த மென்றும் கூறுகின்றனர்.

(1) வாச்சியவடிவ அல்லது லக்ஷியவடிவ அர்த்தம் எதுவோ அது பதத்தினுல் ஸ்மரிக்க (நினைக்க)த்தக்கதாம். ஆதலால் அது ஸ்மாரியம் (நினைக்கத்தக்கது) எனப்படுகின்றது.

(2) வாசகவடிவ அல்லது இலக்ஷகவடிவமான பதம் எதுவோ அது அவ்வர்த்தத்தை ஸ்மரணஞ்செய்விப்ப (நினைப்பூட்டுவ)தாம். ஆதலால் அது ஸ்மாரகம் (நினைப்பூட்டுவது) எனப்படுகின்றது.

அவ்விரண்டற்கும் தம்மில் ஸ்மார்ய ஸ்மாரகபாவரூப சம்பந்தமிருக்கிறது. அச்சம்பந்தத்தினை யறிதற்கேதுவான சப்தத்திற்குத் தன் அர்த்தத்திலுண்டாம் பிரவிருத்தி எதுவோ அதுவும் சப்தத்திற்கு அர்த்தத்தோடுள்ள சம்பந்த மெனப்படுகிறது. அந்தப் பிரவிருத்திவடிவ சம்பந்தத்தினையே சப்தத்தின் விருத்தியென்றும் கூறுவர்.

அந்த விருத்திரூப சம்பந்தம் சிலவிடங்களில் சக்திரூபமாகிறது. சில விடங்களில் லக்ஷணரூபமாகிறது. இதனைப் பிரசங்கத்தினுல் அறிந்துகொள்க.

1. சாஸ்திரத்தில் விருத்தியென்பது அந்தக்கரணத்தின் அல்லது அவித்தையின் பரிணமத்திற்குமாம்.
2. அவ்வாறே இருப்பதின் பெயரும் விருத்தியாம்.
3. அவ்வாறே பிழைப்பிற்கும் விருத்தியென்று பெயர்.
4. அவ்வாறே பிராணன்களது செய்கைக்கும் விருத்தியென்று பெயர்.
5. அவ்வாறே ஓர் வியாகரணத்தின் பிரிவிற்கும் விருத்தியென்று பெயர்.

அவற்றுள் எதுவும் இங்கு விருத்தியென்னும் சொல்லிற்குப் பொருளெனக் கொள்ளத்தக்கதில்லை. ஆனுல் சப்தத்திற்கு அர்த்தத்தோடுள்ள சம்பந்தம் எதுவோ அது இங்கு விருத்திசப்தத்திற்குப் பொருளெனக் கொள்ளத்தக்கதாம்.

இச்சப்தத்தினது விருத்தியின் வர்ணனம் வேதஸ்துதியின் ஸார்வயார்த்ததீபிகையிலும் விருத்திரத்நாவலியிலும் எழுதப்பட்டிருக்கிறது.

*சக்திவிருத்தி; மற்றையது†லக்ஷணவிருத்தி. அவற்றின் அர்த்தத்தை விவேகத் (லக்ஷணத்) தோடு கேட்பாயாக.

---

* சப்தத்திலுள்ள தன் அர்த்தத்தையறிவிக்கும் சாமர்த்தியம் சப்தத்தின் சக்தி (ஆற்றல்) எனப்படும்.

அந்தச் சக்திவிருத்தி இரண்டு கபாலங்களின் இடையிலுள்ள கபாலசையோகத்தினைப்போலும், காரியகாரணங்களின் மத்தியிலிருக்கும் சமவாயசம்பந்தம் அல்லது தாதாத்மியசம்பந்தம்போலும் சப்தம் அர்த்தம் என்னும் இரண்டற்கும் மத்தியிலிருக்கிறது. ஆதலால் அந்தச்சக்தி சப்தத்துக்கு அர்த்தத்தோடுள்ள சக்திவிருத்திவடிவ சாக்ஷாத் சம்பந்தமாகச் சொல்லப்படுகிறது

இந்தச் சாக்ஷாத் சம்பந்தரூப சக்திவிருத்தி: 1. யோகம் (காரணம்), 2. ரூடி (இடுகுறி), 3. யோகரூடி (காரண இடுகுறி) என மூவகையாம்.

1. எந்தச் சப்தத்தில் தன் அவயவங்களுடைய யோகமாகிய சேர்க்கையினால் அர்த்தஞான முண்டாக்கும் சாமர்த்தியமிருக்கின்றதோ அந்தச் சப்தத்துக்குத் தன் அர்த்தத்துடன் யோகசக்திரூப சம்பந்த மிருக்கின்றது. அதுவே சப்தத்தின் யோகவிருத்தி எனப்படுகின்றது. எங்ஙனம்: பாதரக்ஷை யென்னும் பதத்தில் பாதம் ரக்ஷையென்னும் இரண்டு அவயவங்களுண்டு. அவற்றின் சேர்க்கையால் பாதத்தை முட்களினின்றும் காப்பாற்றும் செருப்பு, ஜோடு, கட்டை யென்னும் அர்த்தஞான முண்டாகிறது. ஆகையால் பாதரக்ஷையென்னும் சப்தத்துக்கும் பாதத்தைக் காப்பாற்றுவதென்னும் அதன் அர்த்தத்திற்கும் யோகசக்திரூப சம்பந்த மிருக்கிறது.

2. எந்தப் பதத்தின் அவயவங்களால் அர்த்தஞான முண்டாகிறதில்லையோ, ஆனால் "இப்பதத்திற்கு இதுவே பொருளாம்" என்று பொருள்செய்யும் சங்கேதம் (பரிபாஷை எந்தப்பதத்தி லிருக்கிறதோ, அந்தப் பதத்துக்குத்) தன் அர்த்தத்தோடு ரூடிசக்திரூப சம்பந்த மிருக்கிறது. அதுவே சப்தத்தின் ரூடிவிருத்தி எனப்படுகிறது. எங்ஙனம்: பாகையென்னும் பதத்தில் அதன் அவயவத்தினின்றும் யாதொரு அர்த்தஞானமு முண்டாகிறதில்லை. ஆனால் பாகையென்னும் பதத்தினால் தலையிற் சுற்றுதல் வடிவ அர்த்தம் உலகத்தில் சங்கேதத்தால் விளங்குகிறது. அந்தப் பாகையென்னும் சப்தத்திற்குத் தலையிற் சுற்றுதலாகிய தன் அர்த்தத்துடன் ரூடிசக்திரூபசம்பந்தம் இருக்கிறது.

3. எந்தப் பதத்திற்கு அவயவங்களாலும் அர்த்தத்தின் ஞானமுண்டாகிறதோ உலகத்தாரின் சங்கேதமுமதிலிருக்கிறதோ அந்தப்பதத்திற்குத் தன் அர்த்தத்துடன் யோகரூடி யென்னும் இருவடிவ சக்தியிருக்கின்றது. எங்ஙனம்: அங்கரக்கை யெனும் பதத்தில் அங்கம் ரக்கையென இரண்டு அவயவங்கள் இருக்கின்றன. அவற்றின் சேர்க்கையால் சட்டை என்னும் அர்த்தஞானமுண்டாகிறது. பாதமாகிய அங்கத்தை ரக்ஷிக்கும் "பாதரக்ஷையினை அங்கரக்கை என்று சொல்லலாகாது. ஆனால் இச்சட்டையினையே அங்கரக்கை யென்று சொல்லவேண்டும்." என்று இவ்வங்கரக்கை சப்தத்தில் உலகத்தாரின் சங்கேதமுமிருக்கிறது. ஆதலால் அங்கரக்கை யென்னும் பதத்தில் தனது அர்த்தத்தோடுள்ள யோகரூடி உபயவடிவ சக்திமய சம்பந்த மிருக்கிறது.

சப்தத்தின் மூவகைச் சக்திவிருத்தி எதுவோ அதனையே முக்கியவிருத்தி யென்றும் கூறுவர்.

† 1. சப்தத்தின் சக்திவிருத்திரூப சம்பந்தத்தால் அறியப்படுகிற சப்தத்தின் சாக்ஷாத் சம்பந்தமுடைய அர்த்தம் சக்கியார்த்தம் எனப்படும்.

2. இந்தச் சக்கியார்த்தத்தின் சம்பந்தியாயும் சொல்லுவோனுடைய தாற்பரியத்துக்கு விஷயமாயுமிருக்கிற வேறு அர்த்தத்தில் சப்தத்துக்குள்ள பரம்பராசம்பந்தமெதுவோ அது சப்தத்தின் லக்ஷணவிருத்தி எனப்படும்.

## 410. நியாயக்கிரமமான சக்திலக்ஷணம்

### (ஈசுவரேச்சை)

### ச க் தி ல க்ஷ ண ம்.

இந்த கடபதத்தைக் கேட்கவே இந்த எல்லாக் கல்சரூபப் பொருள் ஞானம் எல்லோருக்கும் உண்டாகுக என்பது ஈசுவர இச்சை. இதனை நியாய சாஸ்திரத்தில் சக்தி யென்பர்.

---

3. அந்த லக்ஷணாவிருத்தியால் அறியப்படு மியல்புடையதாய்ச் சப்தத்திற்குப் பரம்பரையாய்ச் (சக்கியார்த்தவாயிலாக) சம்பந்தமுடைய அர்த்தம் எதுவோ, அது சப்தத்தின் லக்ஷியார்த்த மெனப்படும்.

1. பிதாவென்னும் சொல்லினது சக்திவிருத்திவடிவ சாக்ஷாத் சம்பந்தம் ஜநகனாகிய அர்த்தத்தோடு இருக்கின்றது. ஆதலால் பிதா சப்தத்திற்குச் சக்திவிருத்திவடிவ சம்பந்தத்தா லறியப்படு மியல்புடைய பிதாவென்னும் சொல்லின் சாக்ஷாத் சம்பந்தமுடைய ஜநகனாகிய அர்த்தம் எதுவோ அது பிதாவென்னும் சொல்லின் சக்கியார்த்த மெனப்படும்.

2. அச்சநகவடிவ சக்கியார்த்த சம்பந்தியாய் ஓர் பெருநாளில் "எல்லோருக்கும் முதலில் பிதாவினிடத்து நமஸ்காரஞ் செய்யென்று பௌத்திரனை நோக்கிப் போதிக்கிறவனாகிய சொல்லும் புருஷனது தாற்பரியத்திற்கு விஷயமாகின்ற பிதாமகன் (பாட்டன்) வடிவ வேறுபொருள் எதுவோ அதிலுள்ள பிதாவென்னும் சொல்லின் பாம்பரைச் சம்பந்தம் பிதாவென்னும் சொல்லின் லக்ஷணாவிருத்தியாம்.

3. அந்த லக்ஷணாவிருத்தியால் அறியப்படும் இயல்புடையதாய்ப் பிதாவென்னும் சொல்லிற்குப் பரம்பரையாக (ஜநகவடிவ சக்யார்த்தவாயிலாக)ச் சம்பந்தமுடையதான பிதாமகன் என்னும் பொருள் எதுவோ அது பிதாவென்னும் சொல்லின் லக்ஷியார்த்தமாம்.

எவ்வர்த்தத்தோடு எதற்கு நேர் சம்பந்தமில்லாமல் ஒன்றன்வாயிலாகச் சம்பந்தமிருக்கின்றதோ அவ்வர்த்தத்தோடு அதற்குப் பரம்பரைச் சம்பந்தம் சொல்லப்படுகின்றது.

பௌத்திரனாகிய மூன்றாவது புருஷனுக்குப் பிதாமகனாகிய முதற்புருஷனோடு சாக்ஷாத் சம்பந்தம் (ஜந்நியஜநகபாவசம்பந்தம்) இல்லை. ஆனால் புத்திரனுக்குத் தனது பிதாவோடு சம்பந்த (ஜந்நியஜநகபாவ) மிருக்கின்றது. பிதாவிற்குப் பிதாமகனோடு சம்பந்த மிருக்கின்றது. ஆதலால் பௌத்திரனுக்குப் பிதாமகனோடு பிதாவின்வாயிலாகச் சம்பந்தமிருக்கின்றது. அது பரம்பரைச் சம்பந்தமாம்.

அவ்வனமே சப்தத்திற்குத் தனது சாக்ஷாத் சம்பந்தியாகிய சக்கியார்த்தத்தினும் வேறான சக்கியார்த்த சம்பந்தி எதுவோ அதனோடு சாக்ஷாத் சம்பந்தமில்லை. ஆனால் சப்தத்திற்குச் சக்திரூபசம்பந்தம் சக்கியார்த்தத்தோ டிருக்கின்றது. சக்கியார்த்தத்திற்குச் சையோகமுதலியவடிவ யாதேனும் ஓர்வகைச் சம்பந்தம் வக்தாவி (சொல்லுவோனது) தாற்பரியத்தின் விஷயவடிவ தனது சம்பந்தியாகிய வேறு பொருளோடிருக்கின்றது. ஆதலால் அச்சக்கியசம்பந்தியான வேறுபொருளோடு சப்தத்திற்குச் சக்கியார்த்தவாயிலாகச் சம்பந்தமிருக்கின்றது. ஆதலால் அது பரம்பரைச் சம்பந்த மெனப்படும்.

இச் சப்தத்தின் பரம்பரைச் சம்பந்தமே இலக்ஷணாவிருத்தியாம். அச் சப்தத்தின் பரம்பரைச் சம்பந்தம் எவ்வர்த்தத்தோ டுண்டாகின்றதோ அது சப்தத்தின் லக்ஷியார்த்தமாம். இவ்வாறு லக்ஷணாவிருத்தியின் சாமானியலக்ஷணமும் உதாரணமும் சொல்லப்பட்டன. இதன் விட்டலக்ஷணைமுதலிய மூவகைப் பேதத்தின் அநேக உதாரணங்கள்மேல் 430-வதுமுதல் 438-வது இலக்கபரியந்தமான மூவகை இலக்ஷணையின் பிரசங்கத்து டிப்பணத்தில் எழுதப்படும்.

## 411. சித்தாந்தத்தின்படி சக்திலக்ஷணம். (பதத்திலுள்ள அர்த்தஞானத்தை யுண்டுபண்ணுஞ் சாமர்த்தியம்.)

1. கடபதத்தைக் கேட்கிறவனுக்குக் கலசரூபப் பொருளின் ஞானத்தையுண்டுபண்ணும் கடபதத்திலுள்ள சாமர்த்தியமே கடபதத்திற் சக்தியாம்.

2. அதுபோலப் படபதத்தைக் கேட்கிறவனுக்கு வஸ்திரரூபப் பொருளின் ஞானமுண்டுபண்ணும் படபதத்திலுள்ள சாமர்த்தியமே படபதத்திலுள்ள சக்திவிருத்தியாம்.

இப்படியே எல்லாப் பதங்களிலும் அறியவேண்டியது.

திருஷ்டாந்தம்:—நெருப்பில் தன்னோடு சேர்தல்மாத்திரத்தால் பதார்த்தைத் தகிக்கும் சாமர்த்தியரூபசக்தி இருக்கிறதுபோல், சுரோதாவின் கர்ணேந்திரியத்துடன் சேர்தல்மாத்திரத்தால் வஸ்துவின் ஞானத்தை யுண்டுபண்ணும் பதத்திலுள்ள சாமர்த்தியம் சக்தி யெனப்படும்.

சாமர்த்தியம், பலம், வலி, ஆற்றல் என்பன பரியாயபதங்கள்.

அக்கினியில் தகிக்கிற சக்தி இருக்கிறதுபோல் ஜலத்தில் நனைக்கிற சாமர்த்தியமும் தாகத்தைத் தணிக்கும் சாமர்த்தியமும் பொடிகளைத் திரட்டும் சாமர்த்தியமும் உண்டு. அச்சாமர்த்தியமே சக்தி யெனப்படும்.

இவ்விதமாக எல்லாப் பதார்த்தங்களிலும் தன் தன் காரியத்தைச் செய்யும் சாமர்த்தியமிருக்கிறது. அதுவே சக்தியாம். இது வேதத்தின் சித்தாந்தம். இதனை நிச்சயமாய் மனதிற்கொள்ளுவாயாக. நியாயசித்தாந்தம் தள்ளத்தக்கதாம்.

## 412. பிரசினம்:—வர்ணசமுதாயத்தினும் வேறாகச் சக்தியில்லையாகலின் ஈசனது இச்சை சக்தியாமெனல்.

அப்படியானால் அக்கினியில் அதன் சொரூபத்துக்கு வேறாகச் சக்தி காணப்படுகிறதில்லை. தகிப்பதற்கேதுவான அக்கினியிலுள்ள சாமர்த்தியமே அக்கினியில் சக்தியென்று முன் சொன்னது பொருந்தாது. ஏனெனின், தாகத்திற்குத் காரணமாந்தன்மை கேவலம் அக்கினியிற்றானிருக்கிறது. பிரசித்தமல்லாத சாமர்த்தியம் அக்கினியில் இருக்கிறதாகக்கொண்டு அதில் காரணத்தன்மையைக் கற்பித்தலாலும் பிரசித்தமான அக்கினியிலுள்ள காரணத்தன்மையை விடுதலாலும் ஒரு பிரயோஜனமுமில்லை. எப்படித் திருஷ்டாந்தத்தில் சக்தி சம்பவிக்கவில்லையோ அப்படியே பதத்தினிடத்திலும் அக்ஷரசமுதாயமாகிய பதத்தின் ஸ்வரூபத்துக்கு வேறாகச் சக்தி விளங்குகிறதில்லை. அச்சக்திக்குப் பிரயோஜனமுமில்லை. ஆதலால் ஈசுவர இச்சாரூபமான நியாயமதத்திற் சொல்லிய சக்தியே என் புத்திக்கு ஒத்திருக்கிறது.

## (முற்கேட்ட பிரசினத்தின் உத்தரம் 413-427.)

### 413. சித்தாந்தத்தின்படி அக்கினி முதலியவற்றில் தாகமுதலிய காரியத்தை யுண்டுபண்ணும் சாமர்த்தியவடிவ சத்தியுண்டென்று கூறல் 413-414.

குருவானவர் சொல்லலுற்றார்.

நண்பனே! பிரதிபந்தங் (தடை)களுள்ளபோது நெருப்பினால் தாகமுண்டாகிறதில்லை. உத்தேஜகங்(மாற்று)கள் சமீபத்தில் இருந்தால் நெருப்புடன் சேர்ந்த பதார்த்தம் பிரதிபந்தமுள்ளபோதும் எரிக்கப்படுகிறது. சத்தியின்றிக் கேவலம் அக்கினியே தகித்தற்குக் காரணமாமாயின், எப்போதும் அதாவது பிரதிபந்தகமில்லாத காலத்திற்போல உத்தேஜகங்களில்லாது பிரதிபந்தங்களிருக்கும்போதும் தாகமுண்டாதல்வேண்டும். ஏனெனின், எரிக்குங் காரணமான கேவலம் அக்கினி அக்காலத்திலும் இருக்கிறது. எம்முடைய மதத்திலோ இந்தத் தோஷமில்லை. ஏனெனின், எம்முடைய மதத்தில் அக்கினியின் சக்தி அல்லது சக்தியோடுகூடிய அக்கினி எரித்தற்கு ஹேதுவாயிருக்கிறது. கேவலம் அக்கினி ஹேதுவன்று.

பிரதிபந்த மிருக்குமிடத்துப் பிரதிபந்தத்தால் அக்கினிக்கு நாசம் அல்லது திரோதானம் (மறைவு) உண்டாகாவிடினும், அக்கினியின் சக்திக்கு நாசமாவது அல்லது மறைப்பாவது உண்டாகிறது. ஆதலால் எரிப்பதற்கேதுவான சக்தி அல்லது சக்தியோடுகூடிய அக்கினி இல்லாததினால் தாகமுண்டாகிறதில்லை.

எவ்விடத்தில் பிரதிபந்தத்துக்குச் சமீபத்தில் உத்தேஜகம் வந்திருக்கிறதோ அவ்விடத்தில் பிரதிபந்தகமானது அக்கினியின் சக்தியை நாசமாக்கிவிட்டது அல்லது மறைத்துவிட்டது. ஆனால் உத்தேஜகம் மறுபடியும் சக்தியை உண்டாக்குகிறது அல்லது வெளிப்படுத்துகிறது. ஆதலால் பிரதிபந்தங்களிருந்தும் உத்தேஜகங்களுடைய மகிமையால் எரிக்குஞ் சக்தி அல்லது சக்தியோடு கூடிய அக்கினியிருத்தலால் தாகமுண்டாகிறது.

இவ்விதமாகப் பிரதிபந்தத்தால் நாசமடைவதும் உத்தேஜகத்தாலுண்டாவதுமான அக்கினியின் சக்தி தாகத்திற்கு ஏதுவாயிருக்கிறது.

1. காரியத்துக்கு விரோதமாயிருப்பது பிரதிபந்த மெனப்படும்.

2. பிரதிபந்தகமிருக்கக் காரியத்துக்குச் சாதகமாயிருப்பது உத்தேஜக மெனப்படும்.

1. அக்கினிஸ்தானத்தில் பிரதிபந்தகமும் உத்தேஜகமும் மணிமந்திர ஔஷதங்களாம்.

எந்த மணி அல்லது மந்திரம் அல்லது ஔஷதம் சமீபத்தில் இருத்தலால் தாகமுண்டாகிறதில்லையோ அது பிரதிபந்தகமாம்.

2. எந்த *மணிமந்திர ஔஷதங்களின் சன்னிதானத்தால் பிரதிபந்தங்களிருக்கவும் தாகமுண்டாகிறதோ அது உத்தேஜகமாம்.

## 414. குருவாக்கியம்.

சிஷ்யனே! அக்கினியிற்போல் ஜலமுதலிய சகல பதார்த்தங்களினுமுள்ள சக்தியை நீ யறி: சக்தியின்றி எந்த ஹேதுவினாலும் எக்காரியமுமாகிறதில்லை.

இவ்விதமாகச் சக்தியின் பிரயோஜனஞ் சொல்லப்பட்டது.

"அக்கினிக்கு வேறாகச் சக்தி காணப்படவில்லை" யென்று முன் சிஷ்யன் கேட்ட கேள்விக்குச் சமாதானஞ் சொல்லுவதற்காகச் சக்தியின் அநுபவத்தைக் காட்டுவோம்:—

இப்போது (தடையுள்ளபோது) இதில் (பிரகாசிக்கின்ற நெருப்பில்) சக்தி (தாகசாமர்த்தியம்) இல்லை. மறுபடியும் உத்தேஜகமிருக்குங்காலத்து அந்த வேறு சக்தியுண்டாகின்றது. இந்தச் சக்தியின் பிரசித்த அநுபவம் டிகாநாதர் முதலியோரது விநோதத்தைப் பார்ப்பவர்களெல்லோருக்கும் இருக்கின்றது. அந்த உலகாநுபவத்தைச் சிஷ்யனே! நீ எந்தவிடத்தில் மறைப்பாய். அநுமிதிப்பிரமைவடிவ இவ்வநுபவத்தினை எவ்விதத்தாலும் கெடுக்கமுடியாது.

சித்தாந்தத்தின்படி சக்தியின் சொரூபமும் பிரமாணமும் நிரூபணஞ் செய்யப்பட்டன.

## 415. அந்நியமதங்களின் சக்தியைக் கண்டித்தல் 410-427.

†பதசக்தி ஈசுவரனது இச்சாரூபமென்று சொன்னது பொருந்தாது. ஏனெனின், ஈசுவரனுடைய இச்சை ஈசுவரனுடைய தர்மமாம். ஆதலால் அது ஈசுவரனிடத்திலிருக்கிறது. ஆகையால் ஈசுவரனிடத்துள்ள இச்சையே பதசக்தியென்று சொல்லுவது பொருந்தாது. சக்தியானது பதத்தின் தர்மமாயின் பதத்தின் சக்தியென்று சொல்லக்கூடும். ஆதலால் பதத்தின் சாமர்த்திய

* இங்குப் பிரதிபந்தவடிவ எந்த மணிமந்திர ஔஷதங்கள் உளவோ அவற்றால் எந்த அக்கினியின் தாகஞ்செய்யும் சக்தியின் நாசம் அல்லது மறைப்பு உண்டாகிறதோ, அத்தன்மைய உத்தேஜகவடிவ மணிமந்திர ஔஷதங்கள் எவையோ அவையும் அவற்றால் எந்த அக்கினியின் சக்தியினது உற்பத்தி அல்லது வெளிப்படுதல் உண்டாகிறதோ அதுவும் டிகாநாதர் முதலியோரிடத்துப் பிரசித்தம்.

† நையாயிகன் பதசக்தி அதாவது பதத்தின் சக்தி சொல்லியிருக்கிறான்.

ரூபமே பதத்தின் சக்தியாம். ஈசுவரனுடைய * இச்சை பதத்தின் சமீபத்திலுமில்லை. அதைப் பதத்தின் சக்தியென்று சொல்லுதல் பொருந்தாது.

## 416. வையாகரண முறைப்படி சக்திலக்ஷணம் (பதத்திலுள்ள அர்த்தத்தின் யோக்கியதை).

பதத்தினிடத்திலுள்ள அர்த்தத்தின் யோக்கியதை அதாவது பதார்த்த ஞானமுண்டாக்கும் ஹேது எதுவோ அவ்வேதுத்தன்மை பதத்தில் சக்தியோம். கடபதத்தில் கலசரூப அர்த்தஞானத்திற்கு ஏதுவாந்தன்மையாகிய யோக்கியதையிருக்கிறது; அதுவே சக்தியாம். இது வையாகரணபூஷணக் கிரந்தத்தில் † ஹரியின் காரிகையை மேற்கோளாகக் கொடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

அல்லது வையாகரணபூஷணமாதலால் அதாவது உத்தமவையாகரணமாதலால் ஹரியின் காரிகையை (சுலோகத்தை)ப் பார்த்துச் ‡ சொல்லுகிறது.

## 416. வையாகரணமதக்கிரமமான சக்தியின்கண்டநம் 417-418.

### குருவாக்கியம்.

சிஷ்யனே! வையாகரணமதத்தில் ஒரு பிரபலமான தோஷமிருக்கிறது. அதைக் கேள். அர்த்தஞானத்திற்கு ஏதுவாந்தன்மைவடிவ யோக்கியதை

---

* ஈசுவரனது இச்சை ஈசுவரனது தர்மமாம். ஆதலால் அது ஈசுவரனது ஆசிரிதமாயிருத்தலால் (ஈசுவரனது சமீபமாயிருக்கிறது; இதனாலேயே அது ஈசுவரனது சம்பந்தியாயிருத்தலால்) ஈசுவரனது சக்தியாம். அவ்விச்சை கடாதிபதங்களின் தர்மமன்று. ஆதலால் பதங்களின் சமீபத்தில்லை. இதனாலேயே பதங்களின் சம்பந்த மில்லாததாயிருத்தலால் அது பதங்களின் சக்தியன்று. எங்ஙனம்: குலாலனுக்குச் செய்யவேண்டுமென்னும் இச்சையிருக்கிறது. அது குலாலனது தர்மமாம்; கடத்தின் தர்மமன்று. அதுபோல "இந்த (கட) பதத்திற்கு இந்த (கலச வடிவ) அர்த்தமுண்டாகுக" என்னும் சங்கற்பத்தை முன்னிட்ட ஈசுவரனது இச்சை எதுவோ, அது ஈசுவரனை யாசிரயித்த தர்மமாம்; இதனால் ஈசுவரனது சக்தியாம்; பதங்களின் தர்மமன்று; ஆதலால் அது பதங்களின் சக்தியன்றென வறிக.

† ஹரியின் காரிகையென்றது ஹரிபண்டிதராற் செய்யப்பட்ட ஏறக்குறைய 700 சுலோகமுள்ள வியாகரணநூல். அவ்வடிவப் பிரமாணத்தினை எழுதி வையாகரணபூஷணமென்னும் நூலில் சக்தி சொல்லப்பட்டிருக்கிறது.

‡ இது வையாகரணபூஷணகாரர் மதம். மஞ்சூஷாகிரந்தத்தில் யோகபாஷியத்தின்படி வாச்சியவாசகத்தன்மைகளுக்குக் காரணமாகிய சொல்லிற்கும் பொருளிற்குமுள்ள தாதாத்மிய சம்பந்தமெதுவோ, அதுவே சக்தியென்று கொண்டிருக்கின்றனர். இச்சக்தியினையே யோகமதத்திலும் கொண்டிருக்கிறார்கள். அவ்வாச்சிய வாசகங்களின் தாதாத்மியவடிவ சக்தியின் கண்டநம் மேல் பட்டமதப்பிரசங்கத்திற் செய்யப்படும்.

யைச் சக்தியென்று சொல்லும் வையாகரணியை உன்னுடைய மதத்தில் பதத்திற் சாமர்த்தியமிருக்கிறதா? இல்லையா? என்று கேட்கவேண்டும். சாமர்த்தியமிருக்கிறதென்னும் முதற்பக்ஷத்தைக் கூறின் நம்முடைய மதத்தின்படி சக்தியே சித்திக்கிறது. வையாகரணி பதத்தில் சாமர்த்திய மிருக்கிறதாகச் சொல்லும்பக்ஷத்தில் இந்த லோகப்பிரசித்த சாமர்த்தியரூப சக்தியினையே பதசக்தியாகக் கொள்ளவேண்டும். பதத்தில் அர்த்தஞானத்தை யுண்டுபண்ணுந்தன்மையான யோக்கியதை சக்தியாகக் கொள்ளலாகாது.

இதன் கருத்தென்னவெனில், எவன் பதத்தில் ஒரு சாமர்த்தியத்தை யங்கீகரிக்கின்றானோ, அவனுக்கு அச்சாமர்த்தியத்திற்கு வேறாகச் சக்தியைக் கொள்வது தகுதியன்று. சாமர்த்தியரூபமே சக்தியெனக்கொள்வது தகுதியாம். ஏனெனின் சாமர்த்தியம், பலம், வலி, ஆற்றல், சக்தி இவ்வைந்தும் ஒரே வஸ்துவுக்குப் பெயர் என்பது லோகத்திற் பிரசித்தம்.

ஆற்றலில்லாதவனை உலகத்தில் பலமில்லாதவனென்றும் அல்லது சாமர்த்தியமில்லாதவன் என்றும் வலியில்லாதவன் என்றும் அல்லது சக்தியில்லாதவன் என்றும் சொல்லுகிறார்கள். அன்றியும் வறுக்கப்பட்ட விதையைப் பார்த்து இதில் முளைக்கும்படியான சாமர்த்தியமில்லை, பலமில்லை, சக்தியில்லை, வலியில்லை, அல்லது ஆற்றலில்லையென்று சொல்லுகிறார்கள்.

இவ்விதத்தால் சாமர்த்தியமும் சக்தியுமொன்றென்பது லோகப்பிரசித்தம்.

அக்கினியிலும் சாமர்த்தியரூபமே சக்தியென்பது நிச்சயிக்கப்பட்டதாம். ஆதலால் பதத்திற் சாமர்த்தியரூபமே சக்தியென்று கொள்ளுவது யுக்தம். பதத்தில் சாமர்த்தியத்தை யங்கிகரித்து அதற்கு வேறான யோக்கியதையைச் சக்தியாகக்கொள்வது உலகவழக்கிற்கு விரோதமேயல்லாமல் வேறு பயனில்லை. கேவலம் உலகப்பிரசித்தியின் விரோதமே பயனும்.

418. சாமர்த்தியத்தினையே யாம் யோக்கியதையாகக் கொள்ளுகின்றோமென்று வையாகரணி சொல்லும்பக்ஷத்தில் நம்முடைய மதமே சித்திக்கிறது.

சாமர்த்தியத்தை யங்கீகரித்தாற் சாமர்த்தியரூபசக்தி பதத்திலிருக்கக் கூடும். அச்சாமர்த்தியத்தை நாம் அங்கீகரிக்கிறதேயில்லை. ஆதலால் அர்த்தஞானத்தை யுண்டுபண்ணும் வடிவினதாகிய யோக்கியதையே பதத்தில் சக்தியாமென்று வையாகரணி சொல்லும்பக்ஷத்தில் அவனை இது கேட்கவேண்டும்:—

சாமர்த்தியமின்மையைக் கேவல பதத்திலேயே அங்கீகரிக்கிறாயா? அல்லது நெருப்புமுதலிய சகல பதார்த்தங்களிலும் அங்கீகரிக்கிறாயா?

இரண்டாவது பக்ஷத்தைக் கூறின், நெருப்புமுதலிய பதார்த்தங்களில் சாமர்த்தியரூப சக்தியிருப்பதாகப் பிரதிபாதித்தலிற் சொன்ன யுக்திகளால் இந்த ஆக்ஷேபம் கண்டிக்கப்படுகிறது.

முதற்பக்ஷத்தைக் கூறின், அதில் இரண்டாவது பக்ஷத்திற் கூறிய தோஷமில்லை. ஏனெனின், அக்கினிமுதலிய சர்வபதார்த்தங்களிலும் சாமர்த்திய வடிவசக்தி ஒப்பாவிடின், பிரதிபந்தகத்தால் தாகமின்மை யுண்டாகலாகாது. இது இரண்டாவது பக்ஷத்தில் தோஷமாம். அந்தத் தோஷம் முதற்பக்ஷத்திலில்லை. ஏனெனின், நெருப்புமுதலிய சர்வபதார்த்தங்களிலுமோ சாமர்த்திய வடிவசக்தி யிருக்கிறது. ஆதலால் பிரதிபந்தகத்தினால் தாகத்தினின்மை சம்பவியாதெனல் இல்லை. ஆனால் பதத்தில் அர்த்தஞானத்தை யுண்டுபண்ணுந் தன்மைவடிவ யோக்கியதைக்கு வேறான சாமர்த்தியவடிவ சக்தியில்லை. ஆனால் பதத்தில் அர்த்தத்தின் யோக்கியதையே சக்தியாமென்பது முதற் பக்ஷம். அதில் பிரதிபந்தத்தால் தாகம் சம்பவியாமைவடிவதோஷமோ இல்லை.

அங்ஙனமாயினும், பதத்திலும் வஹ்நியினைப்போலச் சாமர்த்தியத்தினை அவசியம் கொள்ளவேண்டுமென்பதனைச் சொல்லுவாம்:—பதத்தில் சாமர்த்தியத்தின் அங்கீகாரமில்லையாயின், சாமர்த்தியமில்லாத பதம் யோக்கியமாம் அதாவது அர்த்தஞானத்தை யுண்டுபண்ணுவதாம் என்பது மதத்தின் நிச்சயமாம். அது அசங்கதம். ஏனெனின், பதம் அசமர்த்தம் அர்த்த ஞானத்தை யுண்டுபண்ணத்தக்கதென்று சொல்லுவது நபும்சகனுக்கு அமோகவீரியமிருக்கிறதென்று சொல்லுவதுபோல் சொல்லும்பொழுதே விரோதமுடையதாயிருக்கிறது.

1. சாமர்த்தியத்தோடுகூடியது சமர்த்தமாம்.

2. சாமர்த்தியமில்லாதது அசமர்த்தமாம்.

அசமர்த்தத்தால் ஒரு காரியமும் ஆகிறதில்லை யென்பது உலகப்பிரசித்தம். இதனால் அசமர்த்தபதத்தினாலும் அர்த்தத்தின் ஞானமாகிய காரியம் பொருந்தாது. ஆதலால் பதத்தில் சாமர்த்தியத்தைக் கொள்ளுதல் தகுதியாம். சாமர்த்தியத்தைப் பதத்தில் அங்கீகரித்தால் அப்போது சக்தியும் பதத்தில் சாமர்த்தியவடிவேயெனக் கொள்ளுதல் தகுதியாம்.

இவ்விதத்தால் அர்த்தஞானத்தை யுண்டுபண்ணுந்தன்மைவடிவ* யோக்கியதை பதத்திற் சக்தியன்று; ஆனால் சாமர்த்தியரூபமே சக்தியாம்.

---

* வறுத்த விதையினைப்போலச் சாமர்த்தியமில்லாத பதத்தில் அந்தஞானத்தினை யுண்டுபண்ணுந்தன்மையு மின்மையால் அந்த யோக்கியதை பதத்திற் சக்தியன்று. ஆனால் அந்த யோக்கியதை எந்தச் சாமர்த்தியத்தினால் உண்டாகிறதோ, அச்சாமர்த்தியமே உலகப்பிரசித்த சக்தியாம்.

வையாகரண மதத்தில் வேறு தோஷங்களைப் பார்க்கவேண்டுமானால் சக்தி நிருபணத்தில் தர்ப்பணக்கிரந்தத்தைச் சோதிக்கவேண்டியது. தூஷணம் கடினமாயிருப்பதால் அக் கிரந்தத்தினிற் கூறியது இங்கு எழுதப்படவில்லை.

## 419. * பட்டர் மதப்படி சக்தி லக்ஷணம் 419-421.
### (பதத்திற்கு அர்த்தத்தோடுள்ள பேதாபேதவடிவ தாதாத்மியம்.)

பதத்திற்கு அர்த்தத்துடனுள்ள † தாதாத்மிய சம்பந்தத்தினைச் சக்தியென்று பட்டர் மதத்தை யனுசரித்தவர்கள் சொல்லுகிறார்கள். இதை நீ அறி. அந்தத் தாதாத்மிய சம்பந்தத்தினைப் பேதாபேதரூபமென்று சொல்லுகிறார்கள். இது அவர்களுடைய அபிப்பிராயமாம்:—

1. அக்கினியென்னும் பதத்துக்கு நெருப்பு என்னும் அர்த்தத்தோடு அத்தியந்தம் பேதமில்லை. அத்தியந்தம் பேதமிருக்குமாயின், எப்படி அக்கினிபதத்தினினும் அத்தியந்தம் பின்னமான ஜலமுதலியவைகள் இருக்கின்றனவோ அவை அக்கினியெனும் பதத்தால் தோற்றுகிறதில்லையோ, அவ்வாறு அக்கினிபதத்தால் அக்கினிரூப அர்த்தமும் பிரதீதியாகாது. பதத்துக்கு அத்தியந்தம் பின்னமான அர்த்தம் பிரதீதியாகிறதில்லை.

2. பதத்துக்குத் தன்னர்த்தத்துடன் அத்தியந்தம் பேதம் இல்லாதது போல் அத்தியந்தம் அபேதமுமில்லை. அத்தியந்த அபேதம் வாச்சியவாசகங்களுக்கிருந்தால் அக்கினிபதத்தின் வாச்சியமான நெருப்பினால் முகம் சுடப்படுகிறதுபோல் நெருப்பின் வாசகமான அக்கினிபதத்தை யுச்சரிப்பதனாலும் முகம் (வாய்) சுடப்படவேண்டும். ஆனால் பதத்தை யுச்சரிப்பதினால் முகம் சுடப்படுகிறதில்லை. ஆதலால் அத்தியந்த அபேதமுமில்லை.

ஆனால் அக்கினிபதத்துக்கு நெருப்புவடிவ அர்த்தத்துடன் பேதத்தோடு கூடிய அபேதமிருக்கிறது.

1. பேதமிருத்தலால் முகம் சுடப்படுகிறதில்லை.

2. அபேதமிருத்தலால் அக்கினியென்னும் பதத்தால் ஜலமுதலியவற்றிற்போல் நெருப்பின் பிரதீதியுண்டாகாமலிருக்கிறதில்லை.

---

* சங்கரதிக்விஜயத்தில் குமாரிலபட்டரென்றும் பட்டபாதரென்றும் சொல்லப்பட்டவரும், மண்டனமிசிர பிரபாகரர்களுடைய குருவாயிருந்தவரும் ஜைமினியாற் செய்யப்பட்ட பூர்வமீமாம்ஸைக்கு வார்த்திகம் செய்தவரும் எவரோ அவர் இவ்விடத்தில் பட்டரெனப்படுகின்றார்.

† இத்தாதாத்மிய சம்பந்த லக்ஷணம் பின் வருதல் காண்க.

எப்படி அக்கினிபதத்துக்கு நெருப்புவடிவ அர்த்தத்துடன் பேதசகித அபேத மிருக்கிறதோ, அப்படியே உதகம், வனம், நீர், ஜீவனம் என்னும் பதங்களுக்கு ஜலரூப அர்த்தத்துடன் பேதசகித அபேதமிருக்கிறது.

1. அத்தியந்தம் பேதம் இருந்தால் எப்படி உதகமுதலிய பதங்களுக்கு அத்தியந்தம் பின்னமாயுள்ள அக்கினிமுதலியவைகள் உதகமுதலிய பதங்களால் பிரதீதியாகிறதில்லையோ, அப்படியே ஜலரூப அர்த்தமும் உதகமுதலிய பதங்களால் பிரதீதியாகாது. அதனால் அத்தியந்தம் பேதமில்லை.

2. அத்தியந்தம் அபேதமுமில்லை. அத்தியந்த அபேதமிருந்தால் ஜலத்தால் முகத்தில் குளிர்ச்சி யுண்டாகிறதுபோல் உதகமுதலிய பதங்களை யுச்சரிப்பதனாலும் முகத்தில் குளிர்ச்சி யுண்டாகவேண்டும். ஆனால் பதத்தினால் குளிர்ச்சி யுண்டாகிறதில்லை. ஆதலால் அத்தியந்த அபேதமில்லை.

ஆனால் பேதசகித அபேதமிருப்பதால் இரண்டு தோஷங்களுமில்லை.

இவ்விதத்தால் எங்கும் தத்தம் வாச்சியங்களுடன் வாசகபதங்கட்குப் பேதசகித அபேதமிருக்கிறது. அந்தப் பேதசகித அபேதத்தினையே பட்டரை யனுசரித்தவர்கள் தாதாத்மியசம்பந்தமென்று சொல்லுகிறார்கள். பேதாபேதமென்றும் சொல்லுகிறார்கள். அந்தப் பேதாபேதரூப தாதாத்மியசம்பந்தமே சகல பதங்களிலுமுள்ள தத்தம் அர்த்தத்தைக் கொடுக்குஞ் சக்தியாம். தாதாத்மிய சம்பந்தத்துக்கு வேறாகச் சாமர்த்தியரூப சக்தி இல்லை. பேதாபேதத்தில் யுக்தி சொல்லப்பட்டது.

**420.** இனிப் பிரமாணத்தைச் சொல்லுவாம்:—மாண்டூக்கிய முதலிய வேதவாக்கியங்களில் "ஓம் அக்ஷரம் பிரஹ்ம"மென்று சொல்லப்பட்டிருக்கிறது. அங்கு வியாகரணத்தின்படி பிரகாசரூபமாய் எல்லாவற்றையுங் காப்பாற்றுவது ஓம் அக்ஷரத்தின் அர்த்தமாம். இத்தன்மையது பிரஹ்மம். ஆதலால் ஓம் அக்ஷரம் பிரஹ்மத்தின் வாசகமாம். பிரஹ்மம் வாச்சியமாம்.

1. வாச்சியவாசகங்களுக்குத் தம்மில் அத்தியந்தம் பேதமிருந்தால் வாசகமான ஓம் அக்ஷரத்துக்கும் வாச்சியமான பிரஹ்மத்திற்கும் மாண்டூக்கியாதி உபநிஷத்துக்களில் அபேதஞ் சொல்லப்பட்டிராது. "ஓம் அக்ஷரம் பிரஹ்ம"மென்று அபேதஞ் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால் வாச்சிய வாசகங்களின் அபேதத்தில் வேதவசனம் பிரமாணமாம்.

2. எல்லா ஜனங்களின் உணர்ச்சியினாலும் வாச்சிய வாசகங்களுக்குப் பேதஞ் சித்திக்கிறது. எப்படியெனின், அக்கினிமுதலிய பதங்கள் வாச்சி

லிருக்கின்றன. நெருப்புமுதலிய அவற்றின் அர்த்தங்கள் வாக்குக்கு வெளியில் அடுப்பு முதலியவிடங்களில் இருக்கின்றன. அதுபோல் ஓமென்னும் அக்ஷரரூப பதம் வாக்கிலிருக்கிறது. அதன் அர்த்தமாகிய பிரஹ்மம் வாக்கிலில்லை; ஆனால் வாக்கிற்கு வெளியில் அதாவது தன் மகிமையி லிருக்கிறது. பிரஹ்மம் வியாபகமா யிருத்தலால் வாக்கிற் பிரஹ்மத்தின் அபாவமில்லையெனினும், பிரஹ்மத்தில் வாக்கிருக்கிறதே யல்லாது வாக்கிற்* பிரஹ்மமில்லை. இவ்விதத்தால் பதம் வாக்கிலும் அர்த்தம் வாக்குக்கு வெளியிலும் எல்லோருக்கும் விளங்குகின்றன. ஆதலால் பதத்துக்கும் அர்த்தத்துக்கும் பேதம் லோகப்பிரசித்தமாம்.

1. இவ்விதத்தால் வாச்சியவாசகங்களின் பேதத்தில் சர்வலோகானுபவமும் பிரமாணமாம்.

2. அவற்றின் அபேதத்தில் வேதவசனம் பிரமாணமாம். ஆதலால் பதத்துக்கு அர்த்தத்துடன் பேதாபேதரூப தாதாத்மிய சம்பந்தம் அப்பிரமாணமன்று. ஆனால் பிரமாணசித்தமாம்.

**421**. பிரசங்கத்துக்கு† அன்னிய ஸ்தானங்களிலும் பேதாபேத தாதாத்மிய சம்பந்தத்தைக் காண்பிப்பாம்:—

1. ரூபம் ரஸம் கந்தமுதலியவை குணங்களாம். அவற்றின் ஆசிரயம் குணியெனப்படும். அது ரூபாதிகளின் ஆசிரயமான பூமி குணியாயிருப்பதுபோலாம்.

2. அநேகங்களிலிருக்கிற ஒரு தர்மம் ஜாதியெனப்படும்.

எங்ஙனம்: எல்லாப் பிராமணசரீரங்களிலுமே ஒரு பிராமணத்துவ மிருக்கிறது. எல்லாச் சூத்திரர்க ளிடத்திலுமே சூத்திரத்துவ மிருக்கிறது. எல்லா ஜீவர்களிடத்திலுமே ஜீவத்துவமிருக்கிறது. புருஷர்களிடத்தில் புருஷத்துவம் இருக்கிறது. எல்லாக் கடங்களிலுமே கடத்துவமிருக்கிறது. உலகத்திலெதற்குப் பிராமணத்துவம், சூத்திரத்துவம், ஜீவத்துவம், புருஷத்துவம்,

* சொற்ப தேசத்திலிருப்பது வியாப்பிய மெனப்படும். அதிகதேசத்திலிருப்பது வியாபக மெனப்படும். எங்ஙனம்: கடம் சொற்பதேசத்திருத்தலால் வியாப்பியமாம். ஆகாசம் அதிகதேசத்திருத்தலால் வியாபகமாம்.

வியாப்பியம் வியாபகத்தினுள்ளும் வியாபகம் வியாப்பியத்துக்கு வெளியிலுமிருக்கின்றன. கடம் ஆகாசத்தினுள்ளேயே யிருக்கின்றது. ஆகாசம் கடத்தின் வெளியிலுமிருக்கின்றது. அவ்வாறே வாக்குப் பிரஹ்மத்தினும் சொற்பதேசத்திலிருத்தலால் வியாப்பியமாய்ப் பிரஹ்மத்தினுள்ளிருக்கிறது. பிரஹ்மம் வாக்கினும் அதிகதேசத்திலிருத்தலால் வியாபகமாதலின் வாக்குக்கு வெளியிலும் சொல்லப்படுகிறது.

கடத்துவ முதலியவற்றைச் சொல்லுகிறார்களோ அந்தப் பிராமணர் சூத்திரர் முதலிய சரீரங்களிலேயே பிராஹ்மணத்துவமுதலிய ஜாதிகள் இருக்கின்றன. ஜாதிக்கு ஆசிரயமான பிராமணன் முதலியன வியக்தியெனப்படும்.

3. போதல் வருதல் முதலியவை கிரியைகளெனப்படும். அதனையுடையது அதாவது கிரியைக்காசிரயம் கர்த்தாவாம்.

இவ்வளவுபதார்த்தங்களுக்குத் தாதாத்மியசம்பந்த மிருக்கிறதென்பதை நீ யறிந்து காரணகாரியங்களைக் குணகுணியாதிகளிற் சேர்க்க.

அபிப்பிராயம் இதுவாம்:—

1. குணகுணிகட்குப்போலக் காரணகாரியத்திற்கும் தாதாத்மிய சம்பந்த மிருக்கிறது.

2. இங்ஙனம் குணத்திற்கும் குணிக்கும் தம்மில் தாதாத்மிய சம்பந்த மிருக்கிறது.

3. ஜாதிக்கும் வியக்திக்கும் தம்மில் தாதாத்மிய சம்பந்தமிருக்கிறது.

4. அவ்வாறே கிரியைக்கும் கிரியையுடையதற்கும் தாதாத்மிய சம்பந்த மிருக்கிறது.

காரணத்துக்கும் காரியத்துக்கும் தாதாத்மிய சம்பந்தமிருக்கிறது.

* தாதாத்மிய மென்பது பேதசகித அபேதமாம்.

நிமித்தகாரணத்துக்கும் காரியத்துக்கும் பேதாபேதரூப தாதாத்மிய மில்லை. ஆனால் அத்தியந்தம் பேதமிருக்கிறது. அங்ஙனமாயினும், உபாதான காரணத்துக்கும் காரியத்துக்கும் பேதாபேதரூப தாதாத்மியமே சம்பந்தமாம். கடத்துக்கு நிமித்தகாரணம் குலாலன் தண்டம் முதலியன. அவற்றிற்குக் கடரூபகாரியத்தோடு அத்தியந்தபேத மிருக்கிறது. ஆனால் உபாதானகாரணமான மண்பிண்டத்திற்கும் கடமாகிய காரியத்துக்கும் பேதசகித அபேதமிருக்கிறது.

1. மண்பிண்டத்தினும் கடம் அத்தியந்தம் வேறாயின் மண்பிண்டத்தினும் அத்தியந்தம் பின்னமான தைலமுண்டாகாததுபோலக் கடமுமுண்டாகாது.

* குணகுணிமுதலிய இந்நான்கிடத்திலும் பட்டரைப்போல வேதாந்திகளும் தாதாத்மியசம்பந்தம் கொள்ளுகிறார்கள். ஆனால் வேதாந்தமதத்தில் தாதாத்மியசம்பந்தத்தின் லக்ஷணம் பட்டமதத்தினும் வேறாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அது மேற் சமீபத்திலேயே சொல்லப்படும். இந்த நான்கிடத்திலும் நையாயிகர் சமவாயசம்பந்தம் கொள்ளுகிறார்கள். நித்தியசம்பந்தத்தினைச் சமவாய மென்பர்.

2. உபாதானகாரணத்துக்குக் காரியத்தோடு அத்தியந்தம் அபேதமிருக்கினும் மண்ணினின்றும் கடமுற்பத்தியாகாது. ஏனெனின், தன் ஸ்வரூபத்தினின்று தன்னுற்பத்தி யுண்டாகாது.

1. ஆதலால் உபாதானகாரணத்துக்குக் காரியத்தோடு பேதசகித அபேதமிருக்கிறது; அதனால் பேதபக்ஷத்தின் தோஷமில்லை.

2. பேதமிருக்கிறது. அதனால் அபேதபக்ஷத்தின் தோஷமில்லை.

இவ்விதத்தால் உபாதானகாரணத்துக்குக் காரியத்தோடு பேதாபேதம் யுக்தியாற் சித்திக்கின்றது.

1. பிரதீதியினாலும் உபாதானகாரணத்துக்கும் காரியத்துக்கும் பேதாபேதம் சித்திக்கின்றது. "இது மட்பிண்டம் இது கடம்" என்னும் பின்னப் பிரதீதியால் பேதம் சித்திக்கிறது.

2. விசாரித்துப் பார்க்குமிடத்துக் கடத்துக்குள்ளும் புறமும் மண்ணை விட வேறொன்றும் பிரதீதியாகிறதில்லை. ஆனால் மண்ணே பிரதீதியாகிறது. ஆதலால் அபேதம் சித்திக்கிறது.

இவ்விதத்தால் உபாதானகாரணத்துக்கும் காரியத்துக்கும் பேதாபேதரூப தாதாத்மியசம்பந்த மிருக்கிறது.

அதுபோலக் குணத்துக்கும் குணிக்கும் பேதாபேத மிருக்கிறது.

1. கடத்தின் ரூப(நிறத்)த்துக்குக் கடத்தோடு அத்தியந்தம் பேதமிருந்தால், எப்படிக் கடத்தோடு படத்துக்கு அத்தியந்தம் பேதமிருக்கிறதோ, அந்தப் படம் கடத்தை யாசிரயிக்காமல் சுதந்திரமாயிருக்கிறதோ, அப்படியே கடத்தின் ரூபமும் கடத்தை யாசிரயிக்காமல் இருக்கவேண்டும்.

2. குணத்துக்கும் குணிக்கும் அத்தியந்தம் அபேத மிருந்தாலும் கடத்தின் ரூபம் கடத்தை யாசிரயித்ததாதல் கூடாது. ஏனெனின், தானே தனக்கு ஆசிரயமாயிராது.

ஆதலால் குணகுணிகளுக்குப் பேதாபேதரூப தாதாத்மியசம்பந்த மிருக்கிறது.

இந்தயுக்தியினை ஜாதிக்கும் வியக்திக்கும் அப்படியே கிரியைக்கும் கிரியையுடையதுக்குமுள்ள பேதாபேதரூப தாதாத்மியசம்சந்தத்தில் அறியவேண்டும். கண்டனஞ் செய்யப்படும் மதம் எதுவோ அதில் அநேக யுக்திகளைச் சொல்லுவதனால் பிரயோஜனமில்லையாகலின் வேறு யுக்திகளை எழுதவில்லை,

## 422. பட்டர்மத கண்டனம். 422-427.

ஒரு வஸ்துவுக்கு ஒரேயிடத்தில் பேதாபேதமிருப்பது விருத்தம். ஆதலால் முழுவதும் பிசகென்று யுக்திமான்கள் சொல்லுகிறார்கள்.

இதன் அபிப்பிராயம் இதுவாம்:—

ஒரு கடத்தில் தன் அபேதமும் பிறவஸ்துக்களின் பேதமுமிருந்தாலும்,

1. எதன் அபேதமிருக்கிறதோ அதன் பேதமில்லை; எதன் பேதமிருக்கிறதோ அதன் அபேதமில்லையென்னும் அபிப்பிராயத்தால் ஒரு வஸ்துவிற்குப் பேதம் அபேதம் விருத்தமெனப்பட்டது.

2. ஒரு வஸ்துவிற்கே அதாவது கடத்திற்கே தன்னிலபேதமும் பிறிதில் பேதமுமிருக்கின்றது. ஆனால் எதில் அபேதமிருக்கிறதோ அதில் பேதமில்லை;எதிற்பேதமிருக்கிறதோ அதில் அபேதமில்லையென்னும் அபிப்பிராயத்தால் ஒருவஸ்துவின் பேதமும் அபேதமும் ஒன்றில் விருத்தமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

பேதாபேதங்கள், தம்மில் விரோதிகளாம். ஒரு வஸ்துவில் எதற்குப் பேதமிருக்கிறதோ அதற்கு அபேதமும் எதற்கு அபேதமிருக்கிறதோ அதற்குப் பேதமும் விரோதமுடையனவாம். ஆதலால் வாச்சியவாசகங்கள், குணகுணிகள், ஜாதிவியக்தி, கிரியை கிரியையுடையது, உபாதானகாரணம் காரியம் என்பவற்றிற்குப் பேதாபேதரூப தாதாத்மியசம்பந்தம் அங்கீகரிக்கின் அது அசுத்தமாம்.

**423.** 1. "வாக்கில் வாசகமும் வெளியில் வாச்சியமும் இருத்தலால் பேதமும்,

2. சுருதியில் ஓம் அக்ஷரம் பிரஹ்மமென்று சொல்லியிருத்தலால் அபேதமுமாம்" என்று முன்(420)வாச்சியவாசகங்களின் பேதாபேதத்தில் பிரமாணமாக எது சொல்லப்பட்டிருக்கிறதோ

அதற்குச் சமாதானம்:— பிரணவவர்ணமாகிய ஓம் அக்ஷரத்துக்கும் பிரஹ்மத்துக்கும் வேதத்தில் அபேதஞ் சொல்லப்பட்டிருக்கிறது. அவ்வேத வசனத்துக்கு வாச்சியவாசகங்களின் அபேதத்தில் கருத்தில்லை. ஆனால் அதில் வேறு இரகசியமான அபிப்பிராயமிருக்கிறது. அந்த அபிப்பிராயத்தைப் பட்டர் அறியவில்லை. எந்தவிடத்தில் ஓம் அக்ஷரம் பிரஹ்மமென்று சொல்லப்பட்டிருக்கிறதோ, அவ்வாக்கியத்தின் ஓம் அக்ஷரத்துக்கும் பிரஹ்மத்துக்கும் பேதமில்லையென்பது அவ்வாக்கியத்தின் தாற்பரியமன்று. ஆனால்

"ஓம் அக்ஷரத்தைப் பிரஹ்மரூபமாக உபாஸனை செய்யவேண்டிய" தென்பது தாற்பரியம். எப்படி உபாஸனை விதிக்கப்பட்டிருக்கிறதோ அப்படியே உபாஸியத்தின் சொரூபமு மிருக்கவேண்டுமென்னும் நியமமல்லை. ஆனல் வஸ்துவின் சொரூபத்தைவிட்டு வேறு ஸ்வரூபமாகவும் அதனிடத்தில் உபாஸனை செய்யப்படுகின்றது.

1. சாளக்கிராமத்தையும் பாணத்தையும் விஷ்ணுரூபமாயும் சிவரூபமாயும் உபாஸிக்கும்படி சொல்லப்பட்டிருக்கிறது. அங்குச் சங்குசக்கராதிகளுடன் கூடிய சதுர்ப்புஜமூர்த்தி சாளக்கிராமத்திலில்லை. கங்கையாலலங்கரிக்கப்பட்ட ஜடைமுடி, உடுக்கை, தோல், கபாலமென்பவற்ருேடு கூடிப் பத்திராமுத்திரையால் சரணடைந்தவர்களுக்குத் திரிகுணரகிதமான ஆத்மோபதேசம் செய்யும் மூர்த்தி பாணத்திலில்லை. ஆனல் சாளக்கிராமமும் பாணமும் சிலாரூப (கல்வடிவ) ங்களாம். சாஸ்திரத்தின் ஆஞ்ஞையால் அவற்றின் சிலாரூப திருஷ்டியைவிட்டுச் சாளக்கிராமபாணங்களில் முறையே விஷ்ணுரூபமும் சிவரூபமும் உபாஸிக்கப்படுகின்றன. ஆதலால் உபாஸனை உபாஸியத்தினது ஸ்வரூபத்தின் அதீனமாகிறதில்லை. ஆனல் விதியின் அதீனமாயிருக்கிறது. சாஸ்திரவசனம் விதிக்கிறபடி உபாஸனையைச் செய்யவேண்டும்.

2. சாந்தோக்கிய உபநிஷத்தில் பஞ்சாக்கினி வித்தியாப்பிரகாணத்தில் சுவர்க்கலோகம் மேகம் பூமி புருஷன் ஸ்திரீ இவ்வைந்து பதார்த்தங்களையும் அக்கினிரூபமாக உபாஸிக்கும்படி சொல்லியிருக்கிறது. சிரத்தை சோமம் மழை அன்னம் வீரியம் இவ்வைந்து பதார்த்தங்களையும் பஞ்சாக்கினிகளின் ஆகுதிகள்ரூபமாக உபாஸிக்கும்படிச் சொல்லப்பட்டிருக்கின்றது. அவ்விடத்தில் ஸ்வர்க்காதிகள் அக்கினியன்று. சிரத்தாதிகளும் ஆகுதியன்று.

அங்ஙனமாயினும், வேதாஞ்ஞையால் ஸ்வர்க்காதிகள் அக்கினிரூபமாகவும், சிரத்தாதிகள் ஆகுதிரூபமாகவும் * உபாஸிக்கப்படுகின்றன.

இவ்விதத்தால் ஓம் அக்ஷரத்தின் பிரஹ்மரூப உபாஸனை சொல்லப்பட்டிருக்கிறது. அங்கு ஓம் அக்ஷரம் பிரஹ்மரூபமன்றெனினும் பிரஹ்மரூபமாய் உபாஸித்தல் பொருந்துகின்றது. உபாசனைவாக்கியத்தில் வஸ்துவின் அபேதம் அபேக்ஷிக்கப்படுவதின்று. ஆனல் பின்னவஸ்துவினையும் அபின்னரூபத்தால் உபாஸித்த லுண்டாகின்றது.

---

* இப்பஞ்சாக்கினிவித்தையின் முழுப்பிரசங்கமும் பஞ்சதசியின் தியானதீபத்தினது உரையின் டிப்பணியிலும், சாந்தோக்கியத்திலும் எழுதப்பட்டிருக்கின்றது.

விசாரித்துப் பார்க்குமிடத்துப் பிரஹ்மத்தின் வாசகமான ஓம் அக்ஷாத்துக்குத் தனது வாச்சியமான பிரஹ்மத்தோடு அபேதம் பொருந்தவும் செய்கின்றது. கடாதி அந்நியபதங்களுக்குத் தத்தம் ஜடவடிவ அர்த்தத்தோடு அபேதம் பொருந்தாது. ஏனெனின், எல்லா நாமரூபங்களும் பிரஹ்மத்திற் கற்பிக்கப்பட்டிருக்கின்றன. பிரஹ்மம் அதிஷ்டானமாயிருக்கிறது. ஓம் அக்ஷரமும் பிரஹ்மத்தின் நாமமாம். ஆதலால் பிரஹ்மத்திற் கற்பிதமாயிருக்கிறது. கற்பிதவஸ்து அதிஷ்டானத்துக்கு வேறுகாமல் அதிஷ்டானரூபமாகவே இருக்கிறது. ஆதலால் ஓம் அக்ஷரம் பிரஹ்மரூபமாம்.

கடாதிபதங்களுக்கு ஜடரூப தமது அர்த்தங்கள் அதிஷ்டானமன்று. ஆனால் வாச்சியத்தோடு கடாதிபதங்கள் பிரஹ்மத்திற் கற்பிதமாம். பிரஹ்மம் அவற்றின் அதிஷ்டானமாம். ஆதலால் பிரஹ்மத்தோடு எல்லாவற்றிற்கும் அபேதம் கூடும். ஆனால் கடாதிபதங்களுக்குத் தம் ஜடரூப வாச்சியார்த்தங்களோடு அபேதம் எவ்விதத்தினாலும் பொருந்தாது. ஆதலால் பட்டர் மதத்தில் வாச்சியவாசகங்களுக்கு அபேதம் கூடாது.

**424.** வாச்சிய வாசகங்களுக்குக் கேவலம் பேதம் அங்கீகரிப்பவர் மதத்தில் இத்தோஷம் பட்டராற் சொல்லப்பட்டிருக்கிறது:—கடபதத்தின் வாச்சியம் கடபதத்தினும் அத்தியந்தம் பின்னமாயிருந்தால், கடபதத்தினும் அத்தியந்தம் பின்னமான வஸ்திரரூப அர்த்தம் பிரதீதியாகாததுபோலக் கடபதத்துக்கு அத்தியந்தம் பின்னமான கலசரூப அர்த்தமும் பிரதீதியாகாது. அல்லாமலும் கடபதத்தினும் பின்னமாக வாச்சியத்தைக்கொண்டு அதற்குக் கடபதத்தால் பிரதீதியை யங்கீகரிக்கின், எப்படிக் கடபதத்துக்கு அத்தியந்தம் பின்னமான கலசரூப அர்த்தம் கடபதத்தால் விளங்குகிறதோ அப்படி அத்தியந்தம் பின்னமான வஸ்திரமும் கடபதத்தால் பிரதீதியாகவேண்டும். இந்தத்தோஷமும் சாமர்த்தியத்தை அல்லது இச்சைவடிவ சக்தியை அங்கீகரியாதவர் மதத்திலிருக்கிறது.

சக்தியை யங்கீகரிக்கின் அவர் மதத்தில் தோஷமில்லை. ஏனெனின் கடபதத்தின் வாச்சிய கலசமும் அதன் அவாச்சியமான வஸ்திராதிகளும் அவ்விரண்டும் கடபதத்துக்கு வேறாயிருக்கின்றன. ஆனால் கடபதத்தில் கலசரூப அர்த்தஞானத்தைக் கொடுக்கும் சக்தியிருக்கிறது; வேறு அர்த்தஞானத்தைக் கொடுக்கும்படியான சக்தியில்லை. ஆதலால் கடபதத்தால் கலசரூப அர்த்தத்துக்கு வேறான அர்த்தம் பிரதீதியாகிறதில்லை.

இவ்விதத்தால் எந்தப்பதத்தில் எந்த அர்த்தத்தின் சக்தியிருக்கிறதோ அவ்வர்த்தமே அப்பதத்தால் பிரதீதியாகிறது. வேறு அர்த்தம் பிரதீதியா

றதில்லை. ஆதலால் வாச்சியவாசகங்களின் அத்தியந்தபேதத்தில் தோஷமில்லை. அவற்றிற்குப் பேதசகித அபேதரூபதாதாத்மியசம்பந்தம் பொருந்தாது.

425. பேதமும் அபேதமும் தம்மில் விரோதிகளாம். அப்படியே உபாதான காரணத்துக்குக் காரியத்தோடு பேதசகித அபேதமில்லை; * கேவலம் பேதம் இருக்கிறது. கேவல பேதத்திற்சொன்ன தோஷம் நையாயிக மதத்திலும் சக்திவாதியின் மதத்திலும் இல்லை. ஏனெனின் காரண காரியங்களின் அத்தியந்த பேதத்தில் இத்தோஷமிருக்கிறது:—மட்பிண்டத்திலும் அத்தியந்தம் பின்னமான கடமுற்பத்தியானுல் அத்தியந்தம் பின்னமான தைலமும் மட்பிண்டத்தினின்று உற்பத்தியாகவேண்டும். அத்தியந்தம்பின்னமான தைலத்தின் உற்பத்தியாகாவிடின் அத்தியந்தம் பின்னமான கடமும் மட்பிண்டத்தினின்று உற்பத்தியாகலாகாது.

426. இந்தத் தோஷம் நையாயிகமதத்திலில்லை. ஏனெனின், சகல வஸ்துக்களினுற்பத்தியிலும் நையாயிகர் பிராகபாவத்தைக் காரணமெனக் கொண்டிருக்கிறுர்கள். கடத்தினுற்பத்தியில் தண்டம் சக்கரம் குலாலன் காரணமாயிருப்பதுபோல் கடத்தின் பிராகபாவமும் கடத்திற்குக் காரணமாம். அப்படியே சகல பதார்த்தங்களின் பிராகபாவமும் சகல பதார்த்தங்களி னுற்பத்திக்கும் காரணமாயிருக்கிறது.

1. கடத்தின் பிராகபாவம் கடத்தினுபாதான காரணமான மட்பிண்டத்தில் இருக்கிறது வேறென்றிலில்லை.

2. எண்ணெயின் பிராகபாவம் எள்ளிலிருக்கிறது; வேறென்றில் இல்லை.

---

* சக்திவாதி (சித்தாந்தி) யின் மதத்தில் உபாதான காரணத்திற்குக் காரியத்தோடு கேவல பேதமில்லை: ஆனுல் அநிர்வசநீய தாதாத்மியமிருக்கிறது. அங்ஙனமாயினும், இங்கே காரியகாரணத்தின் எந்தக் கேவலபேதம் சொல்லப்பட்டிருக்கிறதோ அது பிரௌடிவாதமாம். பிரௌடி என்பது தனது மேன்மையின்பொருட்டு; வாதம் என்பது சொல்லுதலாம். அது பிரௌடிவாதத்தின் சொரூபமாம். அதன் இலக்ஷணம் இதுவாம்:—பிரதிவாதியின் வார்த்தையை அங்கீகரித்தும் தன்மதத்தின் தோஷத்தை பரிகரித்தலைப் பிரௌடிவாதமென்பர்.

இங்குக் காரிய காரணங்களின் பேதபக்ஷத்தில் பட்டர் தோஷங்கூறியிருந்தனர். அந்தப் பட்டர்கூறிய தோஷத்தோடுகூடிய பக்ஷத்தை அங்கீகரித்தும் தனது மதத்தின் தோஷத்தைப் பரிகரித்திருக்கின்றனர். ஆதலால் இது பிரௌடிவாதமாம்.

இவ்விதத்தால் சகல காரியங்களின் பிராகபாவமும் தத்தம் உபாதான காரணத்திலிருக்கிறது. எந்தப் பதார்த்தத்தில் எதன் பிராகபாவமிருக்கிறதோ அந்தப் பதார்த்தத்திலிருந்து அதன் உற்பத்தியுண்டாகிறது; வேறொன்றன் உற்பத்தி யுண்டாகிறதில்லை.

1. மட்பிண்டத்தில் கடத்தின் பிராகபாவ மிருக்கிறது அதனால் மட்பிண்டத்தினின்று கடமே யுற்பத்தியாகிறது; தைல முற்பத்தியாகிறதில்லை.

2. எண்ணெயின் பிராகபாவம் எள்ளிலிருக்கிறது. அதனால் எள்ளினின்று எண்ணெயே யுண்டாகிறது; கடமுண்டாகிறதில்லை.

இப்படிச் சகல காரியங்களிலும் பிராகபாவம் காரணமாயிருக்கிறது. ஆதலால் காரணகாரியங்களுக்கு அத்தியந்தம் பேதமங்கீகரித்தலால் நையாயிகமதத்தில் தோஷமில்லை.

427. சாமர்த்தியரூப சக்திவாதியின் மதத்திலும் தோஷமில்லை. ஏனெனின் மட்பிண்டத்தில் கடத்தின் சாமர்த்தியரூபசக்தி யிருக்கிறது; தைலத்தின் சக்தியில்லை. எள்ளில் எண்ணெயின் சாமர்த்தியரூபசக்தி யிருக்கிறது; கடத்தின் சாமர்த்திய ரூபசக்தியில்லை. ஆதலால் மட்பிண்டத்தினின்று கடமே உண்டாகிறது; தைல முண்டாகிறதில்லை. அப்படியே எள்ளினின்று எண்ணெயே யுண்டாகிறது; கட முண்டாகிறதில்லை.

இவ்விதத்தால் உபாதானகாரணத்திற்கும் காரியத்திற்கும் அத்தியந்தம் பேதத்தைக் கொள்ளுதலில் தோஷமில்லை. பேதாபேதம் அசங்கதமாம்.

பேதத்திலும் அபேதத்திலும் பட்டாற் சொல்லப்பட்ட இருபக்ஷ தோஷங்களும் பட்டர்மதத்தில் நிச்சயமாயுண்டு. ஏனெனின், பட்டர் பேத சகித அபேதத்தை அங்கீகரித்திருக்கிறார். இதனால் காரண காரியங்களுக்குப் பேதமுமிருக்கிறது அபேதமுமிருக்கிறதென்னும் பொருள் சித்திக்கிறது.

1. பேதமிருத்தலால் பேதபக்ஷத்திற் சொன்ன தோஷமுண்டாம்.

2. அபேதமிருத்தலால் அபேதபக்ஷத்திற் சொன்ன தோஷமுண்டாம்.

ஆதலால் பேதாபேதம் அசங்கதமாயிருக்கிறது.

திருடனுக்குத் திருட்டுத்தோஷமும் சூதாடிக்குச் சூதாட்டதோஷமும் உண்டு. இவ்விரண்டையும் அனுஷ்டிக்கிறவனுக்கு இவ்விருதோஷங்களும் சம்பவிக்கின்றன. அதுபோல் குணகுணி முதலியவற்றின் பேதாபேதங்களை ஒப்புக்கொள்ளுதலாலும் பேதபக்ஷத்திலும் அபேதபக்ஷத்திலுஞ் சொன்ன இரண்டு தோஷங்களு முண்டாகின்றன.

சக்திவாதியின் மதத்தில் கேவலம் பேதத்தை அங்கீகரிப்பதனுல் தோஷமில்லை. ஏனெனின் குணியில் குணத்தைத் தரிக்கும் சக்தியிருக்கிறது; வேருென்றன் சக்தியில்லை. ஆதலால் பேதபக்ஷத்தில், கடத்தின் ரூபாதிகள் கடத்துக்குப் பின்னமாயிருப்பதுபோல் படாதிகளும் கடத்துக்குப் பின்னமாயிருக்கின்றன; ரூபாதிகள்போல் படாதிகளும் கடத்திலிருக்கவேண்டும்; அல்லது படாதிகள்போல் ரூபாதிகளும் இருக்கலாகாது என்னும் தோஷம் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தத் தோஷம் சக்தியை அங்கீகரியாதவன் மதத்தில் கேவலம் பேதத்தை யொப்புக்கொள்ளுவதினுலும் தோஷமில்லை.

1. மாருகப் பட்டர்மதத்தில் பேதாபேதங்க ளிரண்டையும் ஒப்புக்கொள்ளுவதினுல் இரண்டு பக்ஷங்களின் தோஷங்களும் மேற்கூறிய திருஷ்டாந்தங்களால் இருக்கின்றன.

2. பேதமும் அபேதமும் விரோததர்மங்களாதலின் அஸம்பவதோஷம் இருக்கிறது.

அப்படியே ஜாதிவியக்திகளுக்கும் கிரியை கிரியையுடையவற்றிற்கும் கேவலம் பேதமிருக்கிறது. அங்ஙனமாயினும், வியக்தியில் ஜாதியைத் தரிக்கும் சக்தியிருக்கிறது. கிரியையுடையதில் கிரியையைத் தரிக்கும் சக்தி இருக்கிறது; வேருென்றைத் தரிக்கும் சக்தியில்லை.

இவ்விதத்தால் உபாதானகாரணத்துக்கும் காரியத்துக்கும் அப்படியே குணகுணி முதலியவற்றிற்கும் பேதாபேதரூப தாதாத்மியசம்பந்தம் அஸங்கதமாம்.

எல்லாவற்றிற்கும் தம்மில் பேதம் அங்கீகரித்தலில் பட்டாற் சொல்லப்பட்ட தோஷத்தைச் சக்தி விழுங்குகிறது.

வேதாந்த சித்தாந்தத்திலும் காரியம் குணம் ஜாதி கிரியை என்பவற்றிற்கு உபாதானகாரணம் குணி வியக்தி கிரியையுடையது என்பவற்ருேடு அத்தியந்தம் பேதமில்லை. ஆனுல் தாதாத்மிய சம்பந்தமே யங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. அங்ஙனமாயினும், வேதாந்தமதத்தில் பேதாபேதரூப தாதாத்மிய சம்பந்தமில்லை. ஆனுல் பேதாபேதங்களுக்கு விலக்ஷணமான அநிர்வசநீய வடிவ தாதாத்மியசம்பந்த மிருக்கிறது.

1. பேதத்துக்கு விலக்ஷணமாயிருத்தலால் அபேதபக்ஷத்தின் தோஷமில்லை.

2. அபேதத்துக்கு விலக்ஷணமாயிருத்தலால் பேதபக்ஷத்தின் தோஷமில்லை.

இவ்விதத்தால் பேதாபேதங்களுக்கு விலக்ஷணமான அநிர்வசனீய * தாதாத்மிய சம்பந்தமிருக்கிறது.

ஆனால் பேதாபேதரூப தாதாத்மியசம்பந்தம் அசங்கதமாம். ஆதலால் "வாச்சியவாசகங்களின் பேதாபேதரூப தாதாத்மியசம்பந்தமே சக்தி" யென்று சொன்ன பட்டரைச் சார்ந்தவர்களின் மதம் நலமுடையதன்று. ஆனால் பதத்தைக் கேட்டமாத்திரத்தில் அர்த்தஞானத்தை யுண்டுபண்ணும் பதத்திலுள்ள சாமர்த்தியமே பதத்திற் சக்தியாம்.

இவ்விதமாகச் சக்தி நிரூபிக்கப்பட்டது.

## 428. சக்கியலக்ஷணம்.

லக்ஷணையின் ஞானத்தில் சக்கியத்தின் ஞானம் உபயோகியா யிருக்கிறது. ஏனெனின், சக்கியசம்பந்தம் லக்ஷணையின் ஸ்வரூபமாம். சக்கியத்தை யறியாமல் சக்கியசம்பந்தரூபலக்ஷணையின் ஞானமுண்டாகாது. ஆதலால் சக்கியத்தின் லக்ஷணத்தைச் சொல்லுகிறோம்.

---

* கேவலம் பேதமுள்ளவிடத்துத் தாதாத்மியம் பொருந்தாது. ஏனெனின், அபேத உணர்ச்சியின் விஷயத்தினது பெயரே தாதாத்மியமாம். ஆதலால் கேவல பேத மிருக்கும்பொழுது அபேதத்தோற்ற முண்டாகாது. அதனால் தாதாத்மிய சம்பந்தத்தில் அபேதத்தின் அபேக்ஷையிருக்கிறது. அன்றியும் கேவல அபேதமுள்ளவிடத்துச் சம்பந்த முண்டாகாது. ஏனெனின், இரண்டு பதார்த்தங்களுக்குச் சம்பந்தம் கூடும். தனது சொரூபத்தோடு தனது சம்பந்தம் சம்பவியாது. ஆதலால் எல்லாச் சம்பந்தத்திலும் பேதத்தின் அபேக்ஷயுமுண்டு. எதனால் தாதாத்மியமும் சம்பந்தமோ அதனால் அதில் பேதத்தின் அபேக்ஷயுமுண்டு. இவ்வாற்றால் பேத அபேத மிரண்டு மின்றித் தாதாத்மியசம்பந்தம் பொருந்தாது. பேதாபேதங்களுக்கு ஓரிடத்திலிருத்தல் விரோதமாம்.

அங்ஙனமாயினும், இங்குக் கற்பிதபேதத்தோடு கூடிய வாஸ்தவ அபேதத்திற்குத் தாதாத்மியசம்பந்தமென்று பெயர். இங்குப் பேத அபேதத்திற்கு விலக்ஷணம் தாதாத்மியமென்றதின் அபிப்பிராயம் இதுவாம்:—

1. பேதத்திற்கு விலக்ஷணமென்று சொல்லுதலால் வாஸ்தவ பேதமில்லாததெனப்பட்டது. அதனால் கற்பிதபேதத்தோடுகூடிய தென்பதறிவிக்கப்பட்டது.

2. அபேதத்திற்கு விலக்ஷணமென்றதனால் கற்பித அபேதமில்லாத தெனப்பட்டது. இதனால் வாஸ்தவ அபேதமென்பது அறிவிக்கப்பட்டது.

இவ்வாற்றால் சித்தாந்தத்தில் கற்பிதபேதத்தோடுகூடிய வாஸ்தவ அபேதம் தாதாத்மியசம்பந்த மெனப்படுகின்றது. இதனையே அநிர்வசநீயதாதாத்மியசம்பந்த மென்பர்.

எந்தப் பதத்தில் எந்த அர்த்தத்தின் சக்தியிருக்கிறதோ அந்தப்பதத்தின் அவ்வர்த்தம் சக்கியமென்று அறியத்தக்கது. சக்கியார்த்தத்தையே * வாச்சியார்த்தமென்றும் சொல்லுகிறார்கள்.

எங்ஙனம்: அக்கினிபதத்தில் நெருப்புவடிவ அர்த்தத்தின் சக்தியிருக்கிறது. ஆதலால் அக்கினிபதத்துக்கு நெருப்பு சக்கியார்த்தம் அல்லது வாச்சியார்த்த மெனப்படுகிறது.

வாச்சியார்த்தத்தைப் போதிக்கிற பதம் வாசகமெனப்படும்.

## 429. லக்ஷியார்த்தம் லக்ஷணையென்பவற்றின் சாமானியரூபம். இனி லக்ஷணையும் ஜஹறதிமுதலிய பேதத்தின் லக்ஷணமும்.

சக்கியமெனப்படும் வாச்சியார்த்தத்தின் சம்பந்தம் லக்ஷணையின் ஸ்வரூபமாகிய லக்ஷணமாம்.

எந்த அர்த்தம் பதத்தின்சக்தியால் அறியப்படவில்லையோ, ஆனால் லக்ஷணையால் அறியப்படுகிறதோ அது பதத்தின் லக்ஷியார்த்தம் எனப்படும்.

## 430. 1. ஜஹறதி, 2. அஜஹறதி, 3. பாகத்தியாகலக்ஷணை என்பவற்றின் லக்ஷணம் 430–432.

1. எங்கு வாச்சியார்த்தம் முழுவதும் விடப்பட்டும் அதன் சம்பந்தம் பிரதீதியாகிறதோ, அங்கு ஜகதிலக்ஷணை சொல்லப்படுகிறது. ஒருவன் "கங்கையில்கிராமமிருக்கிற"தென்றுசொல்லுகிறவிடத்தில் கங்கையென்னும் பதத்துக்குக் கரையில் ஜஹதிலக்ஷணை இருக்கிறது. ஏனெனின், கங்கையென்னும் பதத்துக்கு வாச்சியார்த்தம் கங்காநதியின் பிரவாகமாம். அப்பிரவாகத்தில் கிராமமிருப்பது அசம்பவமாம். ஆதலால் வாச்சியார்த்தம் முழுவதனையும்விட்டுக் கரையில் கங்கையென்னும் பதத்துக்கு ஜகதிலக்ஷணை இருக்கிறது.

வாச்சியத்தின் சம்பந்தத்துக்கு லக்ஷணையென்று பெயர். "கங்கையில் கிராமம்" என்னுமிடத்தில் கங்காபதத்தின் வாச்சியமான பிரவாகத்துக்குக் கரையோடு சையோகசம்பந்தமிருக்கிறது. ஆதலால்,

(1) கங்காபதத்தின் வாச்சியத்துக்குக் கரையோடுள்ள சம்பந்தம் லக்ஷணையாம்.

(2) வாச்சியம் முற்றிலும் விட்டிருக்கிறது. ஆதலால் † ஜகதிலக்ஷணையாம்.

---

* இதனையே அபிதேயார்த்தமென்றும், முக்கியார்த்தமென்றும் கூறுவர்.

† ஜஹதிலக்ஷணையின் எளிதான உதாரணம் இதுவாம்:—எந்த வரனது (மாப்பிள்ளையின்) பிதா பரதேசம் போயிருக்கிறானோ அந்த வரன் மாமியார் வீட்டில் விவா

431. 2. வாச்சியார்த்தத்தோடு வாச்சியத்தின் சம்பந்தியின் ஞானம் எந்தப்பதத்தினால் உண்டாகிறதோ அந்தப்பதத்தில் அஜகதிலக்ஷணை கொள்ளப்படுகிறது.

"சிவப்பு ஓடுகிறது" என்று ஒருவன் கூறுமிடத்து அங்குச் சிவப்பு என்னும் பதத்துக்குச் சிவப்பு வர்ணத்துடன் கூடிய குதிரையில் அஜகதிலக்ஷணையாம். ஏனெனின், சிவப்பு என்பது வர்ணம் அந்தக்கேவல வர்ணத்தில் ஓடுதல் சம்பவியாது. ஆதலால் சிவப்பு என்னும் பதத்தின் வாச்சியமான சிவப்புவர்ணத்துடன் கூடிய குதிரையில் சிவப்பு என்னும் பதத்துக்கு அஜகதிலக்ஷணை யிருக்கின்றது.

குணத்துக்கும் குணிக்கும் தாதாத்மியசம்பந்தம் சொல்லப்படுகிறது.

சிவப்பும் நிறத்தின் பேதமாதலால் குணமாம். ஆதலால்,

1. சிவப்பு என்னும் பதத்தின் வாச்சியமான சிவப்புக் குணத்துக்குக் குணியாகிய குதிரையோடுள்ள தாதாத்மியசம்பந்தம் லக்ஷணையாம்.

---

கத்தின்பொருட்டுப் பிதாவோடு பிறந்தவன்முதலிய சம்பந்திகளை உடன்கொண்டு சென்றான். அங்கு வஸ்திரமணிவிக்கும் சமயத்தில் ஒருவன் "மாப்பிள்ளையின் தகப்பனுக்கு வேஷ்டி போர்த்துங்கள்" என்று சொன்னான். இந்த வார்த்தையில் பிதாவென்னும் சொல்லின் சக்கியார்த்தமாகிய மாப்பிள்ளையின் ஜநகன் (பெற்றவன்) எவனோ அவன் அங்கு இல்லை. ஆதலால் ஜநகவடிவ சக்கியார்த்தத்தில் சொல்லுவோனது தாற்பரியம் சம்பவியாது. ஆனால் பிதா சப்தத்தின் சக்கியார்த்தமாகிய ஜநகனை முழுவதும்விட்டு அவன் சம்பந்தியாகிய பிதாவின் சகோதரனைக் கொள்ளவேண்டும். ஆதலால் ஜஹதிலக்ஷணையாம்.

இங்கு ஜநகசக்கியார்த்தத்திற்குப் பிதாவின் சகோதரனோடு சகோதரத்தன்மைச் சம்பந்தமிருக்கிறது. அது லக்ஷணையாம். அந்த லக்ஷணையால் அறியப்படும் பிதாவின் சகோதரனாகிய அர்த்தம் பிதாவென்னும் சொல்லின் லக்ஷியமாம்.

அல்லது ஒருவன் "கிணறு நடக்கிறது" என்று சொன்னான். அங்குக் கிணறு என்னும் சொல்லின் சக்கியார்த்தமாகிய ஜலநிறைந்த குழி எதுவோ அதில் நடத்தலாகிய தொழில் இல்லாமையால் சொல்லுவோனது கருத்துச் சம்பவியாது. ஆனால் கிணற்றின் சம்பந்தமுள்ள இரண்டு மாடுகளோடுகூடிய தோற்சாலில் சொல்லுவோனது கருத்திருக்கின்றது. ஆதலால் கிணறுவடிவ சக்கிய (வாச்சிய) முழுவதையும் விட்டு, அதன் சம்பந்தியான இரண்டு மாடுகளோடு கூடிய தோற்சால் கொள்ளப்படுகின்றது. ஆதலால் ஜஹதிலக்ஷணையாம். இவ்வாறு "வழி தொலைந்தது" "அடுப்பு எரிகிறது" என்றல் முதலிய வாக்கியங்களிலும் ஜஹதிலக்ஷணை அறிந்துகொள்க.

இந்த ஜஹதிலக்ஷணையை ஓர் நூலாசிரியர் இவ்வாறு சித்தாந்தத்தில் உபயோகம் காட்டியிருக்கின்றனர்:—"இவ்வெல்லாம் நிச்சயமாகப் பிரஹ்மம்" என்றல் முதலிய

2. வாச்சியத்தினைவிடாமல் அதிகத்தைக் கிரகிப்பது. ஆதலால் * அஜ கதிலக்ஷணையாம்.

432. 3. பதத்தின் வாச்சியார்த்தத்தில் ஒரு பாகத்தைவிட்டு ஒரு பாகத்தைக் கிரகிப்பது பாகத்தியாகலக்ஷணை யெனப்படுகிறது. அதனையே ஜகதி அஜஹதிலக்ஷணையென்றும் கூறுவர்.

முன்பார்த்த பொருளையே வேறிடத்தில் பார்த்து "அது இதுதான்" என்று ஒருவன் சொல்லுவானாயின் அங்குப்பாகத்தியாகலக்ஷணை யிருக்கிறது. எனெனின்,

(1) சென்றகாலத்திலும் வேறிடத்திலுமிருக்கும் பொருள் 'அது' எனப் படும். ஆதலால் சென்றகாலத்துடனும் வேறிடத்துடனும் கூடிய பொருள் "அது" என்னும் பதத்தின் வாச்சியார்த்தமாம்.

---

சுருதிவாக்கியங்களில் சகல ஜகத்திற்கும் பிரஹ்மவடிவத்துவம் சொல்லப்பட்டிருக் கிறது. அங்கு அநித்தியத்தன்மை, திருசியத்தன்மை, விகாரமுடைமை, ஜடத்தன்மை, துக்கவடிவத்தன்மை முதலிய விபரீத தர்மங்களோடு கூடிய நாமரூபமய ஜகத்தினை நித் தியம் திருஷ்டா, அவிகாரி, சேதனம், ஆநந்த முதலிய சொரூபப் பிரஹ்மமென்று சொல்லுதல் விருத்தமாம். அதில் சுருதிவாக்கியங்களின் தாற்பரியம் சம்பவியாது. ஆனால் பாதசாமானாதிகரணியத்தின்படி நாமரூபத்தைப் பாதித்து எஞ்சியிருக்கும் அதன் சம்பந்தியாகிய அதிஷ்டான சேதனம் பிரஹ்மமாம் என்னும் அர்த்தத்தில் சுருதிவாக்கி யங்களுக்குத் தாற்பரியமாம். ஆதலால் இங்கு எல்லாமென்னும் சொல்லிற்கு வாச்சிய மாகிய நாமரூபஜகத்து முழுவதனையும் விட்டு அதன் சம்பந்தியான அஸ்திபாதிப்பிரிய வடிவ அதிஷ்டானத்தைப் பிரஹ்மவடிவாகக் கொள்ளவேண்டும். ஆதலால் ஜஹதி லக்ஷணையாம்.

இங்கு ஆரோபிக்கப்பட்ட நாமரூபத்திற்குத் தனது அதிஷ்டான சேதனத்தோ டுள்ள தாதாத்மியசம்பந்தமெதுவோ, அது லக்ஷணையாம். அதனால் அறியப்படும் அதிஷ் டானசேதனம் லக்ஷியார்த்தமாம்.

முக்கிய சித்தாந்தத்திலோ அதிஷ்டானத்தைவிட்டு ஆரோபிதத்தின் பிரதீதி யுண்டாகிறதில்லை. ஆனால் அதிஷ்டானத்தினும் வேறாகாததாய் ஆரோபிதம் தோற்று கிறது. ஆதலால் அஸ்திபாதிப்பிரியவடிவ நாமரூபம் எல்லாம் என்னும் சொல்லிற் காவது ஜகத்து என்னும் சொல்லிற்காவது வாச்சியார்த்தமாம். அதினின்றும் நாம ரூபபாகத்தைவிட்டு எஞ்சியிருக்கும் அஸ்திபாதிப்பிரியவடிவ அதிஷ்டான பாகமெது வோ, அது பிரஹ்மமாம். இவ்வாறு முற்கூறிய சுருதிவாக்கியத்துள்ள எல்லாமென்னும் பதத்தில் பாகத்தியாகலக்ஷணை அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது.

இவ்வாற்றால் ஜஹதிலக்ஷணையின் உதாரணம் சொல்லப்பட்டது.

* அஜஹதிலக்ஷணைக்கு இவை உதாரணங்களாம்:—

1. "காகங்களினின்றும் தயிரைக் காக்க (எறும்புகளைப் போக்கும்பொருட்டு வெயி லில் தயிரைவைத்து அங்கு ஓர் வேலைக்காரனை உட்காரவைத்து எஜமானன் சொல் லும் காகங்களினின்றும் தயிரை இரக்ஷிக்க)" என்னும் வாக்கியத்தில் காகமென் னும் சொற்பொருளாகிய காக்கைகளாகிய பக்ஷிகள் எவையோ அவற்றினின்றும் தயிரை இரக்ஷித்தலில் சொல்லுகின்றவனது தாற்பரியமில்லை. ஆனால் தயிரை உண்

(2) நிகழ்காலத்திலும் சமீப இடத்திலுமிருக்கும் பொருள் இது எனப் படும். ஆதலால் நிகழ்காலத்துடனும் சமீபதேசத்துடனுங்கூடிய வஸ்து "இது" என்னும் பதத்தின் வாச்சியார்த்தமாம்.

சென்றகாலத்துடனும் வேறிடத்துடனும்கூடிய பொருளே நிகழ்காலத் துடனும் சமீபதேசத்துடனும் கூடியிருக்கிறது என்பது "அதுவே இது" என்னும் வாசகசமுதாயத்தின் வாச்சியார்த்தமாம் அது சம்பவியாது. ஏனெனின்,

(1) சென்றகாலத்துக்கும் நிகழ்காலத்துக்கும் விரோதமிருக்கிறது.

(2) அப்படியே அன்னியதேசத்துக்கும் சமீபதேசத்துக்கும் விரோத முண்டு.

---

பனவாயிருத்தலால் காகத்திற்கு, ஸஜாதீய இனமான பூனைமுதலியவற்றினின்றும் தயிரை இரக்ஷிக்கவென்பது சொல்லுவோனது தாற்பரியமாம். ஆதலால் காகமென்னும் சொல்லின் வாச்சியமாகிய காக்கைகளாகிய பக்ஷிகளுக்குப் பூனைமுதலியவற்றோடு ஸஜா தீயசம்பந்தமிருக்கின்றது. அது இலக்ஷணையாம். வாச்சியத்தை நீக்காது அதிகத்தைக் கொள்ளுதலால் அஜகதிலக்ஷணையாம்.

2. அங்ஙனமே வயலைக்காக்கும்பொருட்டுக் கட்டிலில் உட்கார்ந்திருக்கும் புரு டன் பக்ஷிகளை ஒட்டுதற்குக் கர்த்தாவாயின் அங்கு ஒருவனை நோக்கி ஒருவன் "மஞ் சங் கூவுகின்றது" என்று சொல்லுகின்றான். அங்கு மஞ்சமென்னும் பதத்திற்கு மஞ் சத்தில் உட்கார்ந்திருக்கும் புருடனிடத்து அஜகதிலக்ஷணையாம். ஏனெனின் மஞ்சு பதத்தின் வாச்சியமாகிய மஞ்சத்தில் அழைத்தல் சம்பவியாதாகலின் மஞ்சபதத் திற்கு வாச்சியமாகிய கட்டில் எதுவோ அதனோடுகூடிய புருஷனிடத்தில் மஞ்சபதத் திற்கு அஜகதிலக்ஷணையிருக்கிறது. இங்கு மஞ்சபதத்தின் வாச்சியமாகிய மஞ்சம் எதுவோ அதற்குத் தன் ஆதேயம் (இடத்து நிகழ்பொருள்) ஆகிய புருஷனோடு ஆதே யத்தன்மைச் சம்பந்தமிருக்கின்றது. அது லக்ஷணையாம். வாச்சியத்தைவிடாமல் அதிகம் கொள்ளப்படுகின்றமையால் அஜகதிலக்ஷணையாம்.

3-4. அங்ஙனமே "கவிகையாளர் செல்லுகின்றனர்" "விறகை உள்ளே விடு" என்றல்முதலிய வாக்கியங்களிலும் கவிகையாளர் என்னும் பதத்திலும் விறகு என்னும் பதத்திலும் தமது வாச்சியமாகிய குடையோடுகூடிய புருஷன் கட்டைகளின் கூட்டம் என்பவற்றோடு அவற்றின் சம்பந்தியாகிய குடையின்றிய புருஷர்களையும் விறகுதாங் கிய புருஷனையும் முறையே கொள்ளவேண்டும். ஆதலால் வாச்சியத்தை விடாமல் அதி கம் கொள்ளப்படுதலின் அஜகதிலக்ஷணையாம்.

இவ்வாற்றால் எங்குச் சுருதிவாக்கியத்தில் ஆத்மாவின் சத்துமுதலிய விசேஷணங் களினுள் ஒன்றல்லது இரண்டு விசேஷணங்களைச் சொல்லியிருக்கின்றதோ அங்கு அவற்றோடு சொல்லப்படாத ஏனைய எல்லா விசேஷணங்களையும் கொள்ளவேண்டும். ஆதலால் அங்கு (அத்தன்மையவிடத்தில்) சித்தாந்தத்திலும் அஜகதிலக்ஷணையின் உப யோகமிருக்கின்றது.

ஆதலால் இரண்டு பதங்களிலுமுள்ள தேசகாலங்களாகிய வாச்சிய பாகங் களைவிட்டு வஸ்துமாத்திரத்தில் இரண்டு பதங்களுக்கும் * பாகத்தியாக லக்ஷணை இருக்கிறது.

## (மகாவாக்கியங்களில் லக்ஷணை 433-449.)

"தத்துவமஸி" என்னும் மகாவாக்கியத்தில் லக்ஷணையைக் காண்பித் தற்காகத் "தத்" "துவம்" என்னும் பதங்களின் வாச்சியார்த்தங்களை வர்ணிப் பாம்:—

### 433. "தத்" பதத்தின் வாச்சியார்த்தம்.

1. சர்வசக்திமானும் (எல்லா ஆற்றலுடையவனும்),
2. சர்வஞ்ஞனும் (எல்லாமுணர்பவனும்),
3. விபுவும் (வியாபகனும்),
4. ஈசனும் (எல்லாவற்றையும் நடத்துவோனும்),
5. சுதந்திரனும் (கர்மாதீனமில்லாதவனும்),
6. பரோக்ஷனும்(ஜீவப்பிரத்தியக்ஷத்திற்கு விஷயமாகாதவனும்),
7. மாயியும் (மாயையைச் சுவாதீனமாகவுடையவனும்),
8. பந்தமோக்ஷமின்றியவனுமாகிய (பந்தமுள்ளதற்கு மோக்ஷமுளதாம்.

---

* "அவனே இவன்" என்னும் வாக்கியத்திலுள்ள "அவன்" "இவன்" என்னும் இரண்டு பதங்களுக்கும் ஒன்றற்கொன்றுள்ள சமான (ஒரு) வேற்றுமையின் வலியால் ஒரு பொருளுடைமைவடிவ சாமாநாதிகரண்யசம்பந்தமிருக்கின்றது. அதன் வலியால் அவற்றின் வாச்சியார்த்தமாகிய பரோக்ஷவஸ்து அபரோக்ஷவஸ்துக்களவையோ அவற் றிற்கு ஏகத்துவம் தோற்றுகின்றது. அவ்விரண்டு வாச்சியங்களும் விரோதிதர்ம முடை யனவாயிருத்தலின் அவற்றிற்கு ஐக்கியம் சம்பவியாது. ஆதலால் இங்கு லக்ஷணை செய் தல் தகுதியாம். இதில் ஜகதி அல்லது அஜகதிலக்ஷணையோ பொருந்தாது. ஆனல் பாகத்தியாகலக்ஷணை பொருந்துகின்றது. ஆதலால் "அவன்" என்னும் பதத்தின் வாச் சியமாகிய பரோக்ஷத்தன்மையோடு கூடிய வஸ்து "இவன்" என்னும் பதத்திற்கு வாச் சியமாகிய அபரோக்ஷத்தன்மையோடு கூடிய வஸ்து என்பவற்றினின்றும் பரோக்ஷத் தன்மை அபரோக்ஷத்தன்மைப் பாகத்தைவிட்டு அவிரோதியாகிய வஸ்து மாத்திரம் கொள்ளப்படும்.

1. இங்குப் பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத்தன்மைப் பாகங்கட்கு வஸ்துவோடு ஆசிரியத்தன்மைச் சம்பந்த மிருக்கின்றது.

2. வஸ்துபாகத்திற்குத் தனது சொரூபத்தோடு தாதாத்மியசம்பந்தமிருக்கின்றது.

இவ்வெல்லா வாச்சியபாகத்திற்கும் வஸ்துவோடுள்ள ஆசிரயத்தன்மைத் தாதாத்மிய சம்பந்தமெதுவோ அது லக்ஷணையாம்.

1. ஒன்றற்கொன்று விரோதியாகிய பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத்தன்மை வடிவ வாச்சியபாகங்களை விட்டு,

ஈசுவரன் பந்தமில்லாதவனாகலின் அவனிடத்து மோக்ஷமுமில்லை.)

இத்தனை தர்மங்களுடன் கூடிய ஈசுவரசேதனம் "தத்" பதத்தின் வாச்சியார்த்தமாம்.

## 434. "துவம்" பதவாச்சிய நிருபணம்.

ஈசுவரதர்மங்களுக்கு விபரீதமான தர்மங்கள் எதனிடத்திலிருக்கின்றனவோ அந்த ஜீவசேதனத்தைத் துவம்பதத்தின் வாச்சியமாக அறி. இதன் கருத்து இதுவாம்:—

1. ஜீவன் அற்பசக்திமான்;
2. அற்பஞ்ஞன்;
3. பரிச்சின்னன்;
4. அநீசன்;
5. கர்மாதீனன்;

---

2. அவிரோதியான கேவல வஸ்துவடிவ வாச்சியபாகம் கொள்ளப்படுகின்றது.

ஆதலால் இது பாகத்தியாகலக்ஷணையாம்.

அங்ஙனமே "தத்துவமசி" முதலிய மகாவாக்கியங்களிலுள்ள ஜீவேசர்களின் வாசகமான இரண்டுபதங்களுக்கும் ஒன்றற்கொன்று சமானவேற்றுமையின் வலியால் ஒரு பொருளுடைமைவடிவ சாமானாதிகரண்யசம்பந்த மிருக்கின்றது. அதன்வலியால் அவற்றின் வாச்சியமாகிய ஜீவேசுரர்களுக்கு ஏகத்துவம் தோற்றுகின்றது. அவ்விரண்டும் விரோதிதர்மமுடையனவாயிருத்தலின் அவற்றிற்கேகத்துவம் சம்பவியாதாகலான் ஆண்டு லக்ஷணை அங்கீகரிக்கத்தக்கதாம். அதில் முன்சொல்லுங் கிரமமாக ஜகதி அல்லது அஜகதிலக்ஷணையோ சம்பவியாது; பாகத்தியாகமே சம்பவிக்கின்றது. ஆதலால் எல்லா மகாவாக்கியங்களிலும் இரண்டிரண்டு பதங்கட்கு வாச்சியமான ஜீவேசுவரர் எவர்களோ அவர்களினின்றும்,

1. தர்மத்தோடுகூடிய உபாதிவடிவ விரோதியான வாச்சியபாகத்தை விட்டு,
2. அவிரோதியான சேதனபாகம் கொள்ளப்படும்.

1. இந்தத் தர்மத்தோடுகூடிய மாயை அவித்தைகளுக்கு அதிஷ்டானத்தன்மைச்சம்பந்த மிருக்கின்றது.
2. சேதனபாகத்திற்குத் தன்னோடு தாதாத்மியசம்பந்த மிருக்கின்றது.

இவ்வெல்லா வாச்சியத்திற்கும் சேதனபாகத்தோடுள்ள அதிஷ்டானத்தன்மைத் தாதாத்மியசம்பந்தமெதுவோ அது லக்ஷணையாம்.

1. விரோதியாகிய வாச்சியபாகத்தை விட்டு,
2. அவிரோதியான சேதனபாகம் கொள்ளப்படும்.

ஆதலால் இது பாகத்தியாகலக்ஷணை எனப்படுகின்றது.

6. அவித்தியாமோகிதன்;

7. பந்தமோக்ஷமுடையவன்;

8. பிரத்தியக்ஷன். ஏனெனின், தன் ஸ்வரூபம் ஒருவனுக்கும் பரோக்ஷமன்று; பிரத்தியக்ஷமேயாம். ஈசுவரனுடைய ஸ்வரூபம் ஈசுவரனுக்குப் பிரத்தியக்ஷமாயிருந்தாலும் ஜீவர்களுக்குப் பிரத்தியக்ஷமன்று. ஆதலால் பரோக்ஷமெனப்படுகிறது. ஜீவனுடைய ஸ்வரூபத்தை ஜீவனும் ஈசுவரனும் இருவரும் அறிவர். ஆதலால் * பிரத்தியக்ஷ மெனப்படுகிறது.

இவ்வளவு தர்மங்களுடன் கூடிய ஜீவசேதனம் "துவம்" பதத்தின் வாச்சிய மெனப்படுகிறது.

## 435. வாச்சியார்த்தத்தில் ஏகத்துவத்தின் விரோதமும் லக்ஷணை செய்யவேண்டுமெனலும்.

ஸாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்தில் உத்தாலகமுனி தன் புத்திரனாகிய ஸ்வேதகேதுவுக்கு ஜகத்தை யுண்டுபண்ணும் ஈசுவரனைக் காட்டித் † தத்துவமஸி (அது நீ) யென்று சொன்னார். அதன் வாச்சியார்த்த மிதுவாம்:—

1. "தத்" என்பது அது அதாவது ஜகத்தை யுண்டுபண்ணும் சர்வசக்திமானும் சர்வஞ்ஞத்துவமுதலிய தர்மசகிதனுமிருக்கிற ஈசுவரன்.

2. "துவம்" என்பது நீ அதாவது அற்பசக்தி அற்பஞ்ஞத்தன்மை முதலிய தர்மங்களோடு கூடிய ஜீவன். "அஸி" யென்பது இருக்கிறாய்.

இங்கு "அது நீயாயிருக்கிறு" யென்று சொல்லுவதனால் ஈசுவர ஜீவர்களின் ‡ ஒருமை வாச்சியார்த்தத்தால் விளங்குகிறது. அது பொருந்தாது. ஏனெனின்,

---

* ஜீவன் தன்னுடைய நிஜரூபமான அகம்பதலக்ஷியமான கூடஸ்தனை மாத்திரம் அறியாமலிருந்தாலும், அகம்பதத்தின் வாச்சியமான அந்தக்கரணவிசிஷ்டசேதன அல்லது ஸ்தூல சூக்ஷ்ம சங்காதவிசிஷ்டசேதனவடிவத்தால் நான் என்று அறிகிறான். ஆதலால் ஜீவனுக்கு விவேகத்துக்கு முன்னும் விசிஷ்டாத்மவடிவத்தால் தனது சொரூபத்தின் ஞானம் பிரத்தியக்ஷமாம்.

† "தத்துவமஸி" என்று சாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிஷத்தினது 6-வது அத்தியாயத்துள்ள மகாவாக்கியத்தினைச் சுவேதகேதுவாகிய புத்திரனுக்கு உத்தாலகராகிய பிதாவானவர் எப்படி 9 முறை உபதேசஞ்செய்திருக்கின்றனரோ அவ்வெல்லாக்கிரமமும் தத்துவமஸி மகாவாக்கிய உபதேசமென்னும் நூலிற் கூறியுளது. விருப்புடையோர் ஆண்டுக் கண்டுகொள்க.

‡ இங்கு வாச்சியார்த்தத்தோடு ஏகத்துவத்தின் விளக்கம் கூறப்பட்டது. அது "தத்துவம்" என்னும் இரண்டு பதங்களின் சாமானாதிகரண்யவடிவ சம்பந்தத்தின் வலியாற் சொல்லப்பட்டது. சாமானாதிகரண்யத்தின் உதாரணத்தோடுகூடிய லக்ஷணத்தை 140-வது பக்கத்தில் † இக்குறியுள்ள டிப்பணத்திற் காண்க.

1. சர்வசக்திமான் அற்பசக்திமான்.

2. சர்வஞ்ஞன் அற்பஞ்ஞன்.

3. வியாபகன் பரிச்சின்னன்.

4. சுதந்திரன் கர்மாதீனன்.

5. பரோக்ஷன் பிரத்தியக்ஷன்.

6. மாயையை ஸ்வாதீனத்தில் வைத்திருப்பவன் அவித்தியாமோகிதன் என்னும் இத்தன்மைய இருவரும் ஒன்றெனச் சொல்லுவது "நெருப்புக்குளிர்ந்திருக்கிற" தென்பதற்குச் சமானமாகும். ஆதலால் நல்ல புத்தியுள்ளவனே! நீ லக்ஷணேயால் லக்ஷியார்த்தத்தை யறி; வாச்சியார்த்தத்தில் விரோதமிருக்கிறது.

என் அன்பனே! மகாவாக்கியத்தில் ஜகதிலக்ஷணேயும் அஜகதிலக்ஷணேயும் பொருந்தா. ஆதலால் பாகத்தியாகலக்ஷணேயை மகாவாக்கியத்தில் அறியவேண்டியது. அதனுல் விரோதம் பரிகாரமாகும்.

## 436. 1. மகாவாக்கியத்தில் ஜகதிலக்ஷணேயின் அசம்பவம். ஜகதிசம்பவியாதென்பதைச் சொல்லல்.

சகல வேதாந்தத்தாலும் அறியத்தக்கவை சாக்ஷிசேதனமும் பிரஹ்மசேதனமுமே. அச்சாக்ஷிசேதனமும் பிரஹ்மசேதனமும் துவம்பத தத்பதங்களின் வாச்சியார்த்தங்களில் பிரவேசித்திருக்கின்றன.

ஜகதிலக்ஷணே யிருக்குமிடத்தில் வாச்சியம் முழுவதனேயும் விட்டு வாச்சியத்தின் சம்பந்தி வேறு ஞேயமாம். ஆதலால் மகாவாக்கியத்தில் ஜகதிலக்ஷணேயை ஒப்பினுல் வாச்சியத்தில் வந்த சேதனத்தைவிட வேறு புதிதான ஒன்று ஞேயமாகும். சேதனத்துக்கு வேருனது அசத்து ஜட துக்கரூபமாம். அதை அறிகிறதினுல் புருஷார்த்தம் சித்திக்கிறதில்லை. ஆதலால் மகாவாக்கியத்தில் ஜகதிலக்ஷணேயில்லை.

## 437. 2. மகாவாக்கியத்தில் அஜஹதி சம்பவியாமை. அஜகதிலக்ஷணே சம்பவியாதெனக் கூறல்.

அன்பனே! அஜகதிலக்ஷணேயிருக்கும் இடத்தில் வாச்சியார்த்தம் முழுவதுமிருக்க, வாச்சியத்திற்கதிகமும் கிரகிக்கத்தக்கதாம். மகாவாக்கியங்களில் அஜகதிலக்ஷணேயை அங்கீகரித்தால் வாச்சியார்த்தம் முழுவதுமிருக்கும். வாச்சியார்த்தம் மகாவாக்கியங்களில் விரோதத்தோடு கூடியதாயிருக்கிறது.

விரோதத்தை நீக்குவதற்காக லக்ஷணை அங்கீகரிக்கப்படுகின்றது. அஜகதி லக்ஷணையை யங்கீகரிப்பதால் மகாவாக்கியங்களில் விரோதம் நீங்குகிறதில்லை, ஆதலால் அஜகதியின் கிரமத்தை மகாவாக்கியங்களில் விடுக.

## 438. 3. மகாவாக்கியத்தில் பாகத்தியாகத்தை அங்கீகரித்தல். பாகத்தியாக லக்ஷணையின் கிரமம்.

அன்பனே! தத்பதத்தின் வாச்சியம் ஈசுவரன்; துவம்பதத்தின் வாச்சியம் ஜீவன். இவர்களுக்குத் தம்மிலுள்ள விரோததர்மங்களை விட்டுச் சுத்தமாயும் அசங்கமாயுமிருக்கிற சேதனத்தை லக்ஷணையால் அறிக. இது பாகத்தியாக லக்ஷணை. இவ்விடத்தில் இந்தச் சித்தாந்தமுண்டு. ஜீவேசுவரர்களுடைய ஸ்வரூபங்கள் அனேகவிதமாக அத்துவைதக் கிரந்தங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றன.

1. விவரணக்கிரந்தத்தில்

   (1) அஞ்ஞானத்திற் பிரதிபிம்பம் ஜீவன் என்றும்

   (2) பிம்பம் ஈசுவரனென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

2. வித்தியாரண்யஸ்வாமிகள் மதத்தில்

   (1) சுத்தசத்துவகுணஸகிதமாயையில் ஆபாஸம் ஈசுவரனென்றும்

   (2) மலினசத்துவகுணச்கித அந்தக்கரணத்தின் உபாதானகாரணமான அவித்யாம்சத்தில் ஆபாஸம் ஜீவனென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

## 439. ஜீவேசுவரர்களின் சொரூபத்தில் பஞ்சதசிகாரர் விவரணகாரர் முதலியோர்களின் மதம்.

## (ஆபாஸப் பிரதிபிம்ப அவச்சேதவாதங்கள் 439-443.)

பஞ்சதசிக்கிரந்தத்தில் வித்தியாரண்யஸ்வாமிகள் அந்தக்கரணத்தின் ஆபாஸனை ஜீவனென்று சொல்லியிருக்கிறார்கள். அங்ஙனமாயினும், அந்தக்கரணத்தின் ஆபாஸனை ஜீவனென்று கொள்ளின், சுஷுத்தியில் அந்தக்கரண மிருப்பதில்லை. ஆதலால் சுழுத்தியில் ஜீவனுமில்லாதிருக்கவேண்டும். பிராஞ்ஞரூப ஜீவன் சுழுத்தியிலிருக்கிறது. ஆதலால் வித்தியாரண்யஸ்வாமிகளுக்கு இது அபிப்பிராயமாம்:—

அந்தக்கரணரூப பரிணமத்தையடையும் அவித்தையினம்சத்திலுள்ள ஆபாஸன் ஜீவன்; அந்த அவித்தையினம்சம் சுழுத்தியிலு மிருக்கிறது. ஆதலால் பிராஞ்ஞனது அபாவமில்லை.

* கேவலம் ஆபாஸங்களே ஜீவேசுவரர்கள் அன்று. ஆனால்,

1. மாயையின் அதிஷ்டான சேதனமும் மாயாசகித ஆபாஸனும் ஈசுவரனும்.

2. அவித்தியாம்சத்தின் அதிஷ்டான சேதனமும் அவித்தியாம்சத்தினோடுகூடிய ஆபாஸனும் ஜீவனும்.

1. ஈசுவரவுபாதியில் சுத்தசத்துவகுணமுண்டு. ஆதலால் ஈசுவரனிடத்தில் சர்வசத்தி சர்வஞ்ஞத்தன்மை முதலிய தர்மங்கள் இருக்கின்றன.

2. ஜீவனுடைய உபாதியில் மலினசத்துவகுணமுண்டு. ஆதலால் ஜீவனிடத்தில் அற்பசத்தி அற்பஞ்ஞத்தன்மை முதலிய தர்மங்களிருக்கின்றன.

இதனை ஆபாசவாதம் என்பர்.

440. விவரணமதத்தில் ஜீவேசுவரர்களுக்கு உபாதி ஒரே அஞ்ஞானமாம். ஆதலால் இவ்விருவரும் அற்பஞ்ஞர்களாயிருக்கவேண்டும். அங்ஙனமாயினும், எந்த உபாதியில் பிரதிபிம்ப முண்டாகிறதோ அதன் சுபாவம் இதுவாம்:— பிரதிபிம்பத்தில் தன் தோஷத்தை யுண்டுபண்ணுகிறது; பிம்பத்தி லுண்டு பண்ணுகிறதில்லை.

கண்ணாடியாகிய உபாதியில் முகத்தின் பிரதிபிம்ப முண்டாகிறது. கழுத்தின்பேரிலிருக்கிற முகம் பிம்பமாம். அங்குக் கண்ணாடியாகிய உபாதியின் பொன்மை கருமை சிறுமை முதலிய பல தோஷங்கள் பிரதிபிம்பத்தில் தோற்றுகின்றன; கழுத்தின்பேரிலிருக்கும் பிம்பத்தில் தோற்றுகிறதில்லை. அதுபோல் கண்ணாடிஸ்தானத்து அஞ்ஞானத்திலுள்ள பிரதிபிம்பரூபமான ஜீவனிடத்தில் அஞ்ஞானத்தாலுண்டான அற்பஞ்ஞத்தன்மைமுதலிய தோ

* கேவலசிதாபாசரே ஜீவேசுரர்களல்லர். எனெனின் தனது தாதாத்மிய சம்பந்தத்தால் அதிஷ்டானத்தினும் வேறாகாததாய் எது தோற்றுகின்றதோ அது ஆரோபிதமெனப்படுகின்றது. ஆரோபிதம் அதிஷ்டானத்தினும் வேறுந்தன்மையாகத் தோற்றுகிறதில்லை. எங்ஙனம்: ரஜ்ஜுவில் சர்ப்பம் ஆரோபிதமாயிருத்தலால் அது ரஜ்ஜுவின் வேறாய்த் தோற்றுகிறதில்லை. ஆனால் ரச்சுவின் வேறாகாததாய் ரச்சுவின் சொரூபத்தை மறைத்துச் சர்ப்பம் தோற்றுகிறது. அங்ஙனமே மாயை அவித்தையிலுள்ள ஆபாசர்களும் ஆரோபிதர்களாயிருத்தலின் அவர்களுக்கு அதிஷ்டான கூடஸ்தபிரஹ்மங்களுக்கு வேறாகத்தோற்றுதல் சம்பவியாது. ஆனால் அவ்விரண்டற்கும் தனது அதிஷ்டான கூடஸ்தபிரஹ்மங்களோடு தாதாத்மிய சம்பந்தவடிவ ஏகத்துவத்தை யடைந்து அவற்றின் சொரூபத்தை மறைத்தே தோற்றுகின்றது. ஆதலால் அதிஷ்டான சேதனமும் உபாதியோடுகூடிய சிதாபாசனும் ஜீவன் அல்லது ஈசுவரனும்.

ஷங்கள் இருக்கின்றன. பிம்பரூப * ஈசுவரனிடத்தில் தோஷங்களில்லை. ஆதலால்,

1. ஈசுவரனிடத்தில் சர்வஞ்ஞத்தன்மை முதலியவை யிருக்கின்றன.

2. ஜீவனிடத்தில் அற்பஞ்ஞத்தன்மை முதலியவை இருக்கின்றன.

**441.** ஆபாஸத்துக்கும் பிரதிபிம்பத்துக்கும் இவ்வளவு பேதமுண்டு:— ஆபாஸபக்ஷத்தில் ஆபாஸன் மித்தை. பிரதிபிம்பபக்ஷத்தில் பிரதிபிம்பம் மித்தையன்று; சத்தியமாம். ஏனெனின்,

பிரதிபிம்பவாதியின் சித்தாந்தம் இதுவாம்:—கண்ணுடியில் தோற்றும் முகத்தின் பிரதிபிம்பம் முகத்தின் சாயையன்று. ஏனெனின்,

1. சாயையின் சுபாவம் இதுவாம்:— எந்தத் திக்கில் சாயையுடைய வன் முகமும் பின்புறமும் இருக்கின்றனவோ அந்தத் திக்கிலேயே சாயை யின் முகமும் பின்புறமும் இருக்கின்றன.

2. கண்ணுடியில் பிரதிபிம்பத்தின் முகமும் பின்புறமும் பிம்பத்துக்கு எதிராயிருக்கின்றன. ஆதலால் கண்ணுடியில் சாயாரூபப் பிரதிபிம்பமில்லை. ஆனல் கண்ணுடியை விஷயமாக்குவதற்காக நேத்திரவாயிலாகப் புறப்பட்ட அந்தக்கரணத்தின் விருத்தி கண்ணுடியை விஷயமாக்கி அதேகாலத்தில் கண் ணுடியினின்று திரும்பிக் கழுத்திலிருக்கும் முகத்தை விஷயமாக்குகிறது.

சுற்றும் வேகத்தினல் கொள்ளிக்கட்டையின் சக்கரந் தோற்றுகிறது; அது சக்கரமன்று. அதுபோலக் கண்ணுடியையும் முகத்தையும் விஷயமாக்கு வதில் விருத்தியின் வேகத்தால் முகம் கண்ணுடியிலிருக்கிறதாகத் தோன்று கிறது. ஆனல் முகம் கழுத்தின்பேரிலேயே இருக்கிறது; அக்கண்ணுடியி லில்லை; சாயையுமன்று. விருத்தியின் வேகத்தால் கண்ணுடியில் உண்டாகும் முகத்தின் தோற்றம் எதுவோ அதுவே பிரதிபிம்பமாம்.

இவ்விதத்தால் கண்ணுடியாகிய உபாதியின் சம்பந்தத்தால் கழுத்தின் பேரிலுள்ள முகமே பிம்பரூபமாயும் பிரதிபிம்பரூபமாயும் தோற்றுகிறது. விசாரித்துப் பார்க்குமளவில் பிம்பப்பிரதிபிம்பபாவங்களில்லை. அதுபோல் அஞ்ஞானரூப உபாதியின் சம்பந்தத்தால் அசங்கசேதனத்தில் பிம்பஸ்தா

* பிரதிபிம்பவாதத்தில் சுத்தப்பிரஹ்மமே ஈசுவரனும். அதில் சர்வஞ்ஞத்தன்மை முதலிய தர்மங்களும் சம்பவியா. அங்ஙனமாயினும், ஜீவனது அற்பஞ்ஞத்தன்மை முத லிய தர்மங்களை யபேக்ஷித்துச் சுத்தப்பிரஹ்மத்தில் பிம்பத்தன்மை ஈசுவரத்தன்மை சர் வஞ்ஞத்தன்மை என்றல் முதலிய தர்மங்களின் ஆரோபமுண்டாகின்றது. வாஸ்தவ மாக ஜீவேசுவரர்கள் இருவரும் சுத்தப்பிரஹ்மவடிவம். அதில் எத்தர்மமும் சம்பவியாது.

னத்து ஈசுவரபாவமும் பிரதிபிம்பஸ்தானத்து ஜீவபாவமும் பிரதீதியாகின்றன. விசாரித்துப்பார்க்குமளவில் ஈசுவரத்தன்மையும் ஜீவத்தன்மையும் இல்லை.

அஞ்ஞானத்தால் சேதனத்தில் உண்டாம் ஜீவத்தன்மையின் தோற்றமும் அஞ்ஞானத்திலுள்ள பிரதிபிம்ப மென்று சொல்லப்படுகிறது. ஆதலால் பிம்பபாவமும் பிரதிபிம்பபாவமும் மித்தையாம். ஸ்வரூபமாகப் பிம்பப்பிரதிபிம்பங்கள் சத்தியம். ஏனெனின், பிம்பப்பிரதிபிம்பங்களின் ஸ்வரூபம் திருஷ்டாந்தத்திலோ முகமாம்; தார்ஷ்டாந்தத்திலோ சேதனமாம். அந்த முகமும் சேதனமும் சத்தியமாம்.

1. இவ்விதத்தால் பிரதிபிம்பம் ஸ்வரூபமாகச் சத்தியமாயிருத்தலால் சத்திய மெனப்படுகிறது.

2. ஆபாஸத்தின் ஸ்வரூபம் சாயையெனக் கொண்டிருக்கின்றனர்; ஆதலால் மித்தையாம்.

இது ஆபாஸப்பிரதிபிம்ப வாதங்களின் * பேதம்.

---

* இங்கு ஓர் விசேஷமுளது:—ஜலநிறைந்த அநேக கடங்களில் சூரியனது அநேகப் பிரதிபிம்ப (ஆபாச)ங்களுள. அவற்றுள்,

(1) ஒவ்வொரு பிரதிபிம்பம் வியஷ்டி யெனப்படும்.

(2) எல்லாம் சேர்ந்து ஒரு சமஷ்டிப்பிரதிபிம்ப மெனப்படும்.

அவற்றினிடையில் எந்தப் பிரதிபிம்பம் ஜலத்தின் அபாவத்தால் அபாவமாகின்றதோ அதற்குச் சூரியனோடு அபேதம் சொல்லப்படுகின்றது; பிறவற்றிற்கில்லை. இவ்வாறு எல்லாப் பிரதிபிம்பங்களுக்கும் எப்போது அபாவமுண்டாகிறதோ அப்போது அச்சமஷ்டிப் பிரதிபிம்பத்திற்குச் சூரியனோடு அபேதம் சொல்லப்படுகின்றது.

அங்ஙனமே கூறிய இவ்வாபாசவாதியின் பட்சத்தில்,

1. அநேக புத்திவடிவ அல்லது அவித்தையின் அம்சவடிவ ஜலத்தில் பிரஹ்மத்தின் அநேகப் பிரதிபிம்ப (ஆபாச)ங்களுள. அவற்றில் ஒவ்வொரு பிரதிபிம்பம் வியஷ்டியெனப்படும்.

2. எல்லாஞ் சேர்ந்து ஒரு சமஷ்டிப்பிரதிபிம்ப மெனப்படும்.

அவற்றில்,

1. அநேக வியஷ்டிப்பிரதிபிம்பம் ஜீவர்களாம்.

2. ஒரு சமஷ்டிப்பிரதிபிம்பம் ஈசுவரனும்.

அவற்றினிடையில் எந்தச் சீவனுக்கு உபாதியின் அபாவத்தால் அபாவமுண்டாகின்றதோ அதற்குப் பிரஹ்மத்தோடு உபசாரமாத்திரமான அபேதம் சொல்லப்படுகின்றது.

இவ்வாறு எல்லா ஜீவர்களின் அபாவம் எப்போதுண்டாகின்றதோ அப்போது அச்சமஷ்டிப் பிரதிபிம்பவடிவ ஈசுவரனுக்கு விதேகமோக்ஷமுண்டாகும்.

**442.** சில கிரந்தங்களில்,

1. சுத்தசத்துவகுணசகித மாயாவிசிஷ்டசேதனம் ஈசுவரனெனப்படுகின்றது.

---

1. இந்தப் பட்சத்தில் ஜகப்பிரஹ்மங்களின் அல்லது ஜீவப்பிரஹ்மங்களின் அபேதத்தைப் போதிக்கும் சுருதிவாக்கியங்களில் பாகத்தியாகலட்சணையின் அங்கீகாரமில்லை. ஆனால் "கங்கையிற் கிராமம்" என்னும் வாக்கியத்தினைப்போல வாச்சியமுழுவதினையும் விட்டு அதன் சம்பந்தியாகிய பிரஹ்மத்தைக் கொள்ளுதலால் ஜகதிலக்ஷணையின் அங்கீகாரமுண்டு. இது அதிஷ்டான கூடஸ்தனைவிட்டுக் கேவல புத்தியோடுகூடிய அல்லது அவித்தையோடுகூடிய ஆபாசனை ஜீவனென்று கொள்ளும் ஓர் வேதாந்தத்தின் ஏகதேசியாகிய ஆபாசவாதியின் மதமாம்.

2. இந்தப் பட்சத்தில் புருஷார்த்த(மோக்ஷ)த்தின் பொருட்டுப் பிரயத்தனஞ்செய்யும் ஜீவன் மோட்சதசையில் இல்லையாகலின், "வட்டிக்காசைப்பட்டு முதலுமிழந்தான்" என்பதனைப்போல மோட்சத்தை யடையும்பொருட்டுப் பிரயத்தனஞ்செய்யும் ஜீவனது சொரூபம் நஷ்டமாகும் என்னும் அநர்த்தத்தை யறிந்து இச்சித்தாந்தத்தில் எம்முமுக்ஷுவுக்கும் பிரவிருத்தியுண்டாகாது.

ஆதலால் இப்பட்சம் நலமுடையதன்று.

பஞ்சதசியிலும் இவ்விசாரசாகரமுதலிய நூல்களிலும்,

1. அதிஷ்டான கூடஸ்தனோடு சாபாஸபுத்தி அல்லது அவித்தை ஜீவனெனக் கொள்ளப்படுகின்றது.

2. அதிஷ்டானப் பிரஹ்மத்தோடு சாபாஸமாயை ஈசுவரனெனக் கொள்ளப்பட்டிருக்கின்றது.

இதில் வாச்சியபாகத்தின் ஏகதேசத்தை விட்டு ஏகதேசத்தைக் கொள்ளுதலால் மகாவாக்கியமுதலிய விடங்களுள் சித்தாந்தசம்மதமான பாகத்தியாகலக்ஷணையே கொள்ளப்படுகின்றது.

இந்தப்பட்சத்தில் முக்கிய ஆகாசத்தின் திருஷ்டாந்தமே அங்கீகாரமாம். அவ்வாகாச திருஷ்டாந்தத்தின் விஸ்தாரவர்ணனம் பஞ்சதசியின் சித்திரதீபத்திலும் நூலின் நான்காவது தரங்கத்திலும் செய்யப்பட்டிருக்கின்றது.

இந்தப் பட்சத்தின்படி,

1. ஆகாயத்தின் அல்லது முகமுதலியவற்றின் பிரதிபிம்பத்திற்கு அதிஷ்டானவடிவ **உபாதானம்** கடாகாசம் அல்லது கண்ணாடி முதலியனவாம்.

2. **பரிணாமி உபாதானம்** ஜலம் அவித்தை முதலியனவாம்.

3. **நிமித்தகாரணம்** மகாகாசமும் முகமுதலிய பிம்பமும் உபாதியின் சந்நிதியுமாம்.

அந்தப் பிரதிபிம்பத்தைப் பாதிக்கத் தனது பிம்பமாகிய முகமுதலியவற்றோடு அபேதமுண்டாகிறது. அங்ஙனமாயினும், ஜலம் கண்ணாடிமுதலிய பிம்பத்தின் சந்நிதிவடிவ நிமித்தங்கள் எதுவரையில் உளவோ, அதுவரையில் பாதிக்கப்பட்ட பிரதிபிம்பத்திற்கும் அநுவிருத்தி (பிரதீதி) உண்டாகின்றது. இதனையே **பாதிதாநுவிருத்தி** யென்பர்.

அங்ஙனமே,

1. சிதாபாசவடிவ ஜீவனது அதிஷ்டானவடிவ **உபாதானம்** கூடஸ்தனும்.

2. **பரிணாமி உபாதானம்** நாநாபுத்தி அல்லது அஞ்ஞான அம்சமாம்.

2. மலினசத்துவகுணசகித அந்தக்கரணத்தின் உபாதானமான அவித்தையின் அம்சவிசிஷ்டசேதனம் ஜீவனென்று சொல்லப்படுகிறது.

இதனை அவச்சேதவாத மென்பர்.

---

3. பிராரப்தம் நிமித்தகாரணமாம்.

அவற்றினின்றும் எந்தச் சிதாபாசன் புத்தி அல்லது அஞ்ஞான அம்சமாகிய உபாதியோடுகூடிய தனது சொரூபத்தைப் பாதித்து யான் என்றல் முதலிய ஜீவவாசக பதங்களின் லட்சியார்த்தமான கூடஸ்த அதிஷ்டானமாகிய தனது நிஜரூபமெதுவோ, அதன் அபிமானத்தால் அவ்வகம்பதத்தின் லட்சியமான கூடஸ்தனது பிம்பவடிவப் பிரஹ்மத்தோடு முன்னமே சித்தித்துள்ள ஏகத்துவத்தை அறிகின்றானோ அவன் முத்தனாகின்றான். மற்றையவன் பெத்தனாகின்றான்.

முற்கூறிய "அகம் பிரஹ்மாஸ்மி" என்னும் ஞானம் உண்டாகுங் காலத்திலேயே அவித்தைவடிவ உபாதானத்தின் நாசத்தால் அதன் காரியமான ஜகத்தோடுகூடிய சிதாபாசனது பாதம் உண்டாகின்றது. அங்ஙனமாயினும், எதுவரையிலும் பிராரப்தமாகிய நிமித்தமிருக்கின்றதோ அதுவரையில் பாதமாகிய (மித்தையென்றறிந்த) தேகமுதலிய ஜகத்தோடு சிதாபாசனது அநுவிருத்தி (பிரதீதி) உண்டாகின்றது. எப்போது பிராரப்தத்திற்கு முடிவுண்டாகுமோ அப்போது அந்தப் பிரதீதியின் அபாவமுண்டாகின்றது. அதுவே அதன் விதேகமோக்ஷமாம். முற்கூறிய பக்ஷத்தினும் இப்பக்ஷம் உத்தமமாம்.

பிம்பப்பிரதிபிம்பவாதத்தில்,

1. பிரதிபிம்பத்தின் அதிஷ்டானமாகிய உபாதானம் பிம்பமாம்.

2. பரிணாமிஉபாதானம் முகமுதலிய பிம்பத்தின் அஞ்ஞானமாம்.

3. அதன் நிமித்தகாரணம் கண்ணாடி பிரதிபிம்பங்களின் சந்நிதி (அண்மை) முதலியனவாம்.

பிம்பப்பிரதிபிம்பங்களின் அபேதஞானத்தால் பிரதிபிம்பத்தன்மையின் நிவிருத்தி உண்டாகின்றது. ஆனால் எதுவரையில் பிம்பகண்ணாடிகளின் சந்நிதியாகிய உபாதி (நிமித்தம்) இருக்கின்றதோ அதுவரையில் மித்தையென்றறிந்த பிரதிபிம்பத்தன்மையின்றிய பிரதிபிம்பத்தினது சொரூபத்தின் பிரதீதியுண்டாகின்றது. எப்போது கண்ணாடிமுதலியவற்றின் நீக்கமுண்டாகின்றதோ அப்போது பிரதிபிம்பத்தினது பிரதீதிக்கு அபாவமுண்டாகின்றது.

1. அங்ஙனமே ஒரே அஞ்ஞானத்தால் சுத்தப் பிரஹ்மமாகிய பிம்பத்தில் ஜீவவடிவப் பிரதிபிம்பத்தன்மை தோற்றுகின்றது. அதன் உபாதானம் அஞ்ஞானமும் அதிஷ்டானம் சுத்தப்பிரஹ்மமுமாம்.

2. நிமித்தகாரணம் அதிருஷ்டமாம். எப்போதந்தப் பிரதிபிம்பத்திற்குத் தனது பிம்பமாகிய பிரஹ்மத்தோடு தனது ஏகத்துவம் தோற்றுகின்றதோ அப்போது அதன் பிரதிபிம்பத்தன்மை (ஜீவத்தன்மை) நீங்குகின்றது. ஆனால் எதுவரையில் பிராரப்த வடிவ உபாதி (நிமித்தம்) இருக்கின்றதோ அதுவரையில் பாதிக்கப்பட்ட ஜகத்தோடு இச்சீவனது ஜீவத்தன்மையில்லாத சொரூபத்தின் பிரதீதியுண்டாகின்றது. எப்போது பிராரப்தத்திற்கு அந்தமுண்டாகுமோ அப்போது அந்தப் பிரதீதிக்கு அபாவமுண்டாகக் கேவல சுத்தப்பிரஹ்மம் எஞ்சியிருக்கும். அதுவே அதன் விதேகமோக்ஷமாம்.

இந்தப்பக்ஷத்தில் சொப்பனத்திலேப்போல முக்கியமான ஒரு ஜீவனது அங்கீகாரமாம். எந்த நாநா ஜீவர்கள் தோற்றுகின்றனரோ அவர்கள் ஜீவாபாசர்கள். இதில்

வேதாந்தத்தின் பிரக்கிரியைகள் * எல்லாமுமே அத்வைத ஆத்மாவை யறிவித்தற் பொருட்டாம். ஆதலால் எந்தப்பிரக்கிரியையால் ஜிஞ்ஞாசுவுக்குப் போதமுண்டாகுமோ, அந்தப் பிரக்கிரியையே அவனுக்கு நலமுடையதாம். அங்ஙனமாயினும் வாக்கியவிருத்தியிலும் உபதேசஸஹஸ்ரி என்னுங்கிரந்தத்திலும் பாஷியகாரரால் ஆபாஸவாதமே எழுதப்பட்டிருக்கிறது.

ஆதலால் ஆபாஸவாதமே முக்கியமாம்.

## 443. நான்கு மகாவாக்கியங்களிலும் பாகத்தியாகத்தைக் காட்டுதல்.

அதன்படி

1. (1) மாயை
   (2) மாயையிலுள்ள ஆபாஸன்
   (3) மாயையின் அதிஷ்டான சேதனம்

இம் மூன்றுஞ் சேர்ந்து சர்வசக்தி சர்வஞ்ஞத்தன்மைமுதலிய தர்மங்களுடன்கூடிய ஈசுவரன் எனப்படும். அதுவே தத்பதத்தின் வாச்சியமாம்.

2. (1) வியஷ்டி அவித்தை
   (2) அதில் ஆபாஸம்
   (3) அதன் அதிஷ்டான சேதனம்

இம்மூன்றுஞ் சேர்ந்து அற்பசக்தி அற்பஞ்ஞத்தன்மைமுதலிய தர்மங்களுடன் கூடிய ஜீவன் எனப்படும். அது துவம்பதத்தின் வாச்சியமாம்.

இவ்விரண்டன் ஏகத்துவத்தையும் தத்துவமஸிவாக்கியம் போதிக்கிறது. அது பொருந்தாது. ஆதலால்,

1. ஆபாஸசகிதமாயை, மாயையாலுண்டான சர்வசக்தி சர்வஞ்ஞத்தன்மைமுதலிய தர்மங்கள் என்னும் இத்துணை வாச்சியபாகங்களைவிட்டு, சேதனபாகத்தில் தத்பதத்திற்குப் பாகத்தியாகலக்ஷணை சித்திக்கிறது.

---

மூன்று சத்தையின் அங்கீகாரமுண்டு. ஆதலால் இதுவும் வியாவகாரிகபக்ஷ மெனப்படும். ஆனால் மற்றெல்லா வியாவகாரிக பக்ஷங்களுள்ளும் இப்பக்ஷம் உத்தமமானது.

இவ்வாற்றால் ஆபாசவாதப் பிரதிபிம்பவாதங்களுக்குப் பேதமுண்டு.

* எல்லாம் என்னும் பதத்தால் காரியகாரண உபாதிவாதம், அவச்சின்ன அநவச்சின்னவாதம், திருஷ்டி சிருஷ்டிவாதமுதலிய பக்ஷங்கள் கிரகிக்கத் தக்கனவாம். வேதாந்தத்தினது அநேக பக்ஷங்களின் அநுவாதம் அப்பய்யதீக்ஷிதரால் செய்யப்பட்ட சித்தாந்தலேசம் என்னும் கிரந்தத்திலும் ஸ்ரீ விருத்திப்பிரபாகரம் என்னும் கிரந்தத்தின் எட்டாவது பிரகாசத்திலும் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது.

2. அப்படியே ஆபாஸசகித அவித்தியாம்சமும் அவித்தையாலுண்டான அற்பசக்தி அற்பஞ்ஞத்தன்மைமுதலிய தர்மங்களுமாகிய துவம்பதத்தின் வாச்சியபாகத்தைவிட்டுச் சேதனபாகத்தில் துவம்பதத்திற்குப் பாகத்தியாக லக்ஷணை சித்திக்கிறது.

இவ்வாறு பாகத்தியாகலக்ஷணையால்,

1. ஈசுவர ஜீவர்களின் ஸ்வரூபத்திலுள்ள லக்ஷியமான சேதனபாகங்களின் ஒருமையைத் *"தத்துவமஸி" என்னும் மகாவாக்கியம் போதிக்கிறது.

2. அதுபோல †"அயம் ஆத்மா பிரஹ்மம்" என்னும் மகாவாக்கியத்தில்,

(1) ஆத்ம பதத்துக்கு ஜீவன் வாச்சியம்.

(2) பிரஹ்ம பதத்துக்கு ஈசுவரன் வாச்சியம். பிரஹ்மபதத்துக்குச் சுத்தம் வாச்சியமன்று ஈசுவரனே வாச்சியமென்பது நாலாவது தரங்கத்தில் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது.

முன்போல் இரண்டு பதங்களுக்கும் லக்ஷணையிருக்கிறது.

(3) லக்ஷியார்த்தம் பரோக்ஷமன்று என்னும் பொருளை அறிவித்தற்காக அய மென்னும் பதமிருக்கிறது. "அயம்" (இந்த) அதாவது எல்லோருக்கும் ‡அபரோக்ஷமான ஆத்மாவே பிரஹ்மமென்பது வாக்கியத்தின் அர்த்தமாம்.

---

* இந்தத் "தத்துவமஸி" என்னும் வாக்கியம் உபதேசவாக்கிய மெனப்படும். இதனின் வேறாகிய மூன்றும் அநுபவவாக்கிய மெனப்படும்.

† இது அதர்வணவேதத்தின் மாண்டூக்கிய உபநிஷத்திலுள்ள மகாவாக்கியமாம். இதன் விசேஷப்பிரசங்கம் ஸ்ரீ பஞ்சதசியினது மகாவாக்கிய விவேகத்தின் டிப்பணியிலும் மாண்டூக்கியத்தின் உரையிலும் எழுதப்பட்டிருக்கிறது.

‡ அபரோக்ஷம் இருவகையினதாம்:—

1. ஒன்றே சுவயம்பிரகாசமாதலால் புத்திவடிவ ஞானத்தின் விஷயமாகிய ஆத்மாவின் சொரூபம் எதுவோ அது அபரோக்ஷமாம்.

2. மற்றையது "யான் சொப்பிரகாச ஆத்மா" என்று புத்தியினால் பார்த்தல் எதுவோ அதுவும் அபரோக்ஷ மெனப்படும்.

அவற்றில், முதலாவது அபரோக்ஷம் நித்தியமாம் (எப்போது மிருப்பதாம்); இரண்டாவது (புத்திவிருத்திவடிவ) அபரோக்ஷம் அநித்தியமாம் (எப்போதாயினும் உண்டாவதாம்.)

3. * "அஹம் பிரஹ்மாஸ்மி" என்னும் மகாவாக்கியத்தில்,

(1) அஹம் பதத்துக்கு ஜீவன் வாச்சியமாம்.

(2) பிரஹ்ம பதத்துக்கு ஈசுவரன் வாச்சியமாம்.

இவ்விரண்டு பதங்களுக்கும் சேதனபாகத்தில் லக்ஷணையுண்டு.

"நான் பிரஹ்மம்" என்பது வாக்கியத்தின் அர்த்தமாம்.

4. † "பிரஞ்ஞானம் ஆனந்தம் பிரஹ்மம்" என்னும் மகாவாக்கியத்தில்,

(1) பிரஞ்ஞானபதத்துக்கு ஜீவன் வாச்சியம்;

(2) பிரஹ்மபதத்துக்கு ஈசுவரன் வாச்சியம்;

இலக்ஷணை முன்போலாம்.

(3) இலக்ஷியமான பிரஹ்மாத்மா ஆனந்தகுணமுடையதன்று; ஆனந்தரூபமே என்னும் அர்த்தத்தை அறிவித்தற்பொருட்டு ஆனந்தம் என்னும் பதமிருக்கிறது.

ஆத்மாவுக்கு அபின்னமான பிரஹ்மம் ஆனந்தரூபமென்பது வாக்கியார்த்தம்.

மகாவாக்கியத்தில் பாகத்தியாகலக்ஷணை இருக்கிறது. அதுபோல அந்நியவாக்கியங்களிலும் சத்தியம் ஞானம் ஆனந்தம் என்னும் பதங்கள் சுத்தப்பிரஹ்மத்தைப் பாகத்தியாகலக்ஷணையால் போதிக்கின்றன; சக்தியால் போதிக்கிறதில்லை; ஏனெனின் சுத்தப்பிரஹ்மம் எந்தப் பதத்துக்கும் வாச்சியமன்றென்பது சித்தாந்தம். ஆதலால் பதங்களெல்லாம் விசிஷ்டத்தின் வாசகங்களும் சுத்தத்தின் லக்ஷகங்களு (இலக்ஷணையினாற் பொருளுணர்த்துவனவு) மாம்.

1. மாயையின் ஆபேக்ஷிகசத்தியத்தன்மையும் சேதனத்தின் நிரபேக்ஷிக சத்தியத்தன்மையும் சேர்ந்து சத்தியமென்னும் பதத்தின் வாச்சியமாகிறது. நிரபேக்ஷிகசத்தியம் லக்ஷியமாம்.

---

* இது யஜுர்வேதத்தின் பிருகதாரணியக உபநிஷத்திலுள்ள மகாவாக்கியமாம். இதன் விசேஷப்பிரசங்கம் ஸ்ரீ பஞ்சதசியின் மகாவாக்கியத்தின் டிப்பணியிலும் பிருகதாரணியகத்தின் உரையிலும் எழுதப்பட்டிருக்கிறது.

† இது இருக்குவேதத்தின் ஐதரேயவுபநிஷத்தின் மகாவாக்கியமாம். இதன் விசேஷப்பிரசங்கம் ஸ்ரீ பஞ்சதசியின் மகாவாக்கியவிவேகத்தின் டிப்பணியில் எழுதப்பட்டிருக்கிறது.

2. புத்திவிருத்திரூபஞானமும் ஸ்வயம்பிரகாசஞானமும் இரண்டுஞ் சேரின் ஞானபதத்தின் வாச்சியமாம்; ஸ்வயம்பிரகாசபாகம் லக்ஷியமாம்.

3. விஷயசம்பந்தத்தாலுண்டாம் சுகாகாரமான சாத்துவிக அந்தக்கரண விருத்தியும் பரமப்பிரேமைக்கிடமான ஸ்வரூபசுகமுமாகிய இரண்டும் சேர்ந்து ஆனந்தபதத்தின் வாச்சியமாம். விருத்திபாகத்தை விட்டு ஸ்வரூபபாகம் லக்ஷியமாம்.

இவ்விதமாகச் சகல பதங்களுக்கும் சுத்தப்பிரஹ்மத்தில் லக்ஷணை சம்க்ஷேபசாரீரகத்தில் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது.

## 444. முற்கூறிய பொருளின் சுருக்கம்.

கங்கையிலிடைச்சேரி யென்னுமிடத்து ஜகதிலக்ஷணையை யறி. "சிவப்பு ஓடுகிறது" என்னுமிடத்தில் அஜகதிலக்ஷணையை அறி. "அதுவே இது" என்னுமிடத்தில் பாகத்தியாகலக்ஷணை யிருக்கிறது. இதற்கு ஜகதி அஜகதி லக்ஷணையென்பது வேறு பெயர். "தத்துவமஸி" முதலிய மகாவாக்கியங்களில் ஜகதிலக்ஷணையையும் அஜகதிலக்ஷணையையும் நீக்கிப் பாகத்தியாக லக்ஷணை காட்டப்பட்டிருக்கிறது. பிரஹ்மம் எந்தப் பதத்துக்கும் வாச்சியமல்லவென்று வேதஞ் சொல்லுகிறது. ஆதலால் எல்லாப்பதங்களிலும் நீ இப்படியே அறியவேண்டியது. மாயையின் ஆபேக்ஷிகசத்தியத்துவமும் சைதன்னியத்தின் நிரபேக்ஷிகசத்தியத்துவமும் சேர்ந்து சத்தியபதத்தின் வாச்சியமாகின்றன. இவற்றில் நிரபேக்ஷிகசத்தியத்துவமும் லக்ஷியம். ஸ்வயம்பிரகாசஞானமும் புத்திவிருத்திஞானமும் சேர்ந்து ஞானபதத்தின் வாச்சியமாமென்று அறி. இவற்றில் ஸ்வயம்பிரகாசஞானம் லக்ஷியம். ஆத்மசுகமும் விஷயசுகமும் சேர்ந்து ஆநந்தபதத்தின் வாச்சியமாம். இவற்றில் விஷயசுகத்தைவிட்டு ஆத்மசுகத்தை ஆனந்தபதத்தின் லக்ஷியமாக அறிக.

## 445. பிரசினம்:—இரண்டு பதங்களிலும் லக்ஷணையை அங்கீகரித்தல் நிஷ்பிரயோஜனமாம்.

மகாவாக்கியங்களில் விரோதத்தை நீக்குதற்காக இரண்டு பதங்களிலும் லக்ஷணை அங்கீகரிக்கப்பட்டது. அங்கு ஒருபதத்தில் லக்ஷணையை அங்கீகரிப்பதினாலேயே விரோதம் நிவிருத்தியாய்விடும். இரண்டு பதங்களிலும் லக்ஷணையை அங்கீகரிப்பது நிஷ்பிரயோஜனமென்று சிலர் சொல்லுகிறார்கள். இதன் தாற்பரியம் இதுவாம்:—சர்வஞ்ஞத்தன்மை முதலியவற்றோடு கூடியதற்கு அற்பஞ்ஞத்தன்மை முதலியவற்றோடு கூடியதோடு ஏகத்துவம் பொருந்தாது. என்றாலும் ஒருபதத்தின் லக்ஷியமாகிய சுத்தத்துக்கு விசிஷ்டத்துடன் ஏகத்துவம் பொருந்தும்.

திருஷ்டாந்தம்:—

1. "சூத்திரமனிதன் பிராஹ்மணன்" என்றிவ்வாறு சூத்திரத்துவ தர்மத்துடன்கூடிய மனிதனுக்குப் பிராஹ்மணத்துவ தர்மத்தோடுகூடியவனுடன் ஏகத்துவஞ் சொல்வது விருத்தமாம்.

2. மனிதன் பிராஹ்மணன் என்றிவ்வாறு சூத்திரத்துவ தர்மமில்லாத சுத்த மனிதனுக்குப் பிராமணத்துவத்தோடு கூடியதன்மையைச் சொல்லுவதில் விரோதமில்லை.

அதுபோல,

1. அற்பஞ்ஞத்தன்மை முதலிய தர்மங்களுடன் கூடிய சேதனத்துக்கும் சர்வஞ்ஞத்துவமுதலிய தர்மங்களுடன்கூடின சேதனத்துக்கும் ஏகத்துவம் விருத்தமுமாம்.

2. ஆனல் ஜீவேசுர வாசகபதங்களுக்குச் சேதனத்தில் லக்ஷணையால் சேதனமாத்திரத்துக்குச் சர்வஞ்ஞத்தன்மைமுதலிய தர்மங்களோடுகூடியதோடாவது அற்பஞ்ஞத்தன்மைமுதலிய தர்மங்களுடன்கூடியதோடாவது ஏகத்துவம் சொல்லுவதில் விரோதமில்லை.

ஆதலால் இரண்டு பதங்களில் லக்ஷணையை அங்கீகரிப்பதில் யாதொரு யுக்தியுமில்லை.

## (முன் பிரசினத்தின் உத்தரம் 446-450.)

### 446. சமாதானம்:—இரண்டு பதங்களிலும் லக்ஷணை பயனுடையதாமெனல்.

ஒரு பதத்தில் லக்ஷணையை அங்கீகரிக்கிறவனை இரண்டு பதங்களில் எந்தப்பதத்தில் லக்ஷணையிருக்கிறது என்று கேட்பாம்.

1. எல்லா மகாவாக்கியங்களின் முதற்பதத்தில் லக்ஷணையுண்டு; இரண்டாவதில் இல்லை.

2. அல்லது இரண்டாவது பதத்தில் லக்ஷணை எல்லாவாக்கியங்களிலுமுண்டு முதற்பதத்திலில்லையென்று சொல்லுவானாயின், சிஷ்யனே! அவனைப் பார்த்து இது சொல்வாயாக. மூடனே! முதற்பதத்திலாவது இரண்டாம் பதத்திலாவது நியமமாக லக்ஷணை எல்லா வாக்கியங்களிலும் இருக்கிறதாகக் கொள்ளும்பக்ஷத்தில் வாக்கியங்களுக்குப் பரஸ்பரம் விரோதமுண்டாகும். ஏனெனின்,

1. மூன்று வாக்கியங்களிலும் அதாவது

(1) "அஹம் பிரஹ்மாஸ்மி"

(2) "பிரஞ்ஞானமாநந்தம் பிரஹ்மம்"

(3) "அயமாத்மா பிரஹ்மம்" என்னும்

இம்மூன்று வாக்கியங்களிலும் முதலாவது பதம் ஜீவவாசகமாம்.

(4) "தத்துவமஸி" வாக்கியத்தில் முதற்பதம் ஈசுவரவாசகமாம்.

(1) முதற்பதத்தில் எல்லா வாக்கியங்களிலும் லக்ஷணையை அங்கிகரித்தால் சேதனம் சர்வஞ்ஞத்தன்மை முதலியவற்றோடு கூடிய ஈசுரனுயிருக்கிறதென்று முதல்மூன்று வாக்கியங்களுக்கும் அர்த்தமாகும்.

(2) சேதனம் அற்பஞ்ஞத்தன்மை முதலியவற்றோடுகூடிய சமுசாரியாகிய ஜீவரூபமென்று தத்துவமஸி என்னும் வாக்கியத்துக்கு அர்த்தமாகும். ஏனெனின், மூன்று வாக்கியங்களிலும் முதற்பதம் ஜீவவாசகம் அதற்குச் சேதனபாகத்தில் லக்ஷணையுண்டு. இரண்டாவதாகிய ஈசுவரவாசகபதத்துக்கு வாச்சியம் கிரகிக்கப்பட்டிருக்கிறது.

"தத்துவமஸி"யில் முதலாவது ஈசுவரவாசகபதம். அதற்குச் சேதனபாகத்தில் லக்ஷணையுண்டு. இரண்டாவது ஜீவவாசகபதம். அதன் வாச்சியம் கொள்ளப்படுகிறது.

இவ்விதமாக லக்ஷணையை நியமஞ்செய்யின் வாக்கியங்களுக்குப் பரஸ்பரம் விரோதமுண்டாகும்.

அப்படியே எல்லா வாக்கியங்களின் இரண்டாவது பதத்தில் லக்ஷணையை யங்கீகரிக்கின்,

1. மூன்று வாக்கியங்களிலும் முதலாவதாகிய ஜீவபதத்திற்கு வாச்சியத்தையும் இரண்டாவதாகிய ஈசுவரபதத்துக்குச் சேதனபாகத்தில் லக்ஷணையையும் கொள்ளுதலால் அற்பஞ்ஞத்தன்மை முதலியவற்றோடு கூடிய சேதனமிருக்கிறது என்று மூன்று வாக்கியங்களுக்கும் அர்த்தமாகும்.

2. "தத்துவமஸி" வாக்கியத்தில் முதலாவதாகிய ஈசுவரபதத்திற்கு வாச்சியத்தையும் இரண்டாவதாகிய ஜீவபதத்துக்குச் சேதனபாகத்தில் லக்ஷணையையும் அங்கீகரிப்பதினுல் சர்வஞ்ஞத்தன்மைமுதலிய தர்மங்களோடு கூடிய சேதனமிருக்கிறதென்று "தத்துவமஸி" வாக்கியத்துக்கு அர்த்தமாகும். இதனுல் பரஸ்பரம் விரோதமேயுண்டாகும்.

இவ்விதத்தால் முதற்பதத்திலாவது இரண்டாவது பதத்திலாவது லக்ஷணையின் நியமம் பொருந்தாது. ஆதலால் நல்லிலக்கண ஆசிரியர்கள் இரண்டு பதங்களிலும் லக்ஷணையைக் கூறுகிறார்கள்.

## 447. ஈசுவரவாசகபதத்தில் லக்ஷணையுண்டென்பதன் உத்தரம்.

முதற்பதத்திலாவது இரண்டாவது பதத்திலாவது லக்ஷணையிருக்கிறதென்னும் நியமஞ்செய்யாது, எல்லா வாக்கியங்களிலும் ஈசுவரவாசகபதத்தில் லக்ஷணையிருக்கிறதென்னும் நியமத்தைச் செய்யின், அந்த ஈசுவரவாசக பதம் முதலாவதாகவாவது இரண்டாவதாகவாவது இருக்கக்கூடும்; அதனால் வாக்கியங்களுக்குப் பரஸ்பரம் விரோதமில்லை என்று கூறின்,

**அதன் சமாதானம்:—** ஈசுவரவாசக பதத்தினையே லக்ஷகமெனின், சர்வ அநர்த்தங்களும் அற்பஞ்ஞத்தன்மை பராதீனத்தன்மை ஜனனமரணமுதலிய துக்கசாதனங்களுமாகிய இவற்றிற்கிருப்பிடமான சமுசாரி ஜீவன் சுருதி வாக்கியங்களில் ஞேயமா (அறியத்தக்கதா) கின்றது. அதனால் மோக்ஷத்துக்கு ஹானியுண்டாம்.

இதன் தாற்பரியம் இதுவாம்:—ஈசுவரவாசகபதத்திலேயே லக்ஷணையை அங்கீகரிக்கின் மகாவாக்கியங்கட்கு இந்த அர்த்தமுண்டாகும்:—"தத்பதத்துக்கு லக்ஷியமான அத்வயமாயும் அசங்கமாயும் மாயாமலமில்லாததாயும் இருக்கிற சேதனமே காம கர்ம அவித்தைகளின் அதீனமாய் அற்பஞ்ஞத்தன்மை, அற்பசக்தி, பரிச்சின்னம், புண்ணியபாவங்கள், சுகதுக்கங்கள், ஜனன மரணங்கள், கமனாகமனங்கள் முதலிய அநேக அநர்த்தங்களுக்குப் பாத்திரமாம்". மகாவாக்கியத்துக்கு இது அர்த்தமாயின், ஜிஞ்ஞாசுவிற்கு இந்த அர்த்தத்தில் புத்தியை ஸ்திரப்படுத்தும்படி நேரிடும். எதில் புத்தி நிலைக்கிறதோ பிராணவியோகத்துக்குப் (பிராணன் பிரிந்த) பிறகு அதனையே அடைகிறான். இதனால் வேதவாக்கிய விசாரத்தால் முமுக்ஷுவுக்கு அநர்த்தமே பிராப்தமாகும்; ஆனந்தம் அடையப்படமாட்டாது. ஆதலால் ஈசுவரவாசகபதத்தில் லக்ஷணை இருக்கிறது, ஜீவவாசகபதத்தில் லக்ஷணை இல்லை யென்னும் நியமம் அசங்கதமாம்.

## 448. ஜீவவாசகபதத்தில் லக்ஷணையிருக்கிறதென்பதன் உத்தரம்.

எல்லா மகாவாக்கியங்களிலும் ஜீவவாசகபதத்தில் லக்ஷணையுண்டு; ஈசுவர வாசகத்தில் இல்லை. ஆதலால் புருஷார்த்தத்திற்கு ஹானி யில்லை. ஏனெனின், ஜீவவாசகபதத்தில் லக்ஷணையை ஒப்புக்கொள்ளுவதில் "துவம்பதத்தின்

லக்ஷியமான சேதனபாகம் சர்வசக்திமானும் சர்வஞ்ஞனும் சுதந்திரனும் ஜன்மாதி பந்தரகிதனுமி யிருக்கிற ஈசுவரரூப" மென்று மகாவாக்கியத்துக்கு அர்த்தமாகும். இந்த அர்த்தத்தில் புத்தியை நிறுத்துவதினால் ஜிஞ்ஞாஸுவுக்கு மிக வுத்தமமான ஈசுவரபாவமே பிராப்தமா (அடையப்படுவதா)கும். ஆதலால் ஜீவவாசக பதத்தில் லக்ஷணையின் நியமஞ்செய்யப்படும் என்று கூறின்,

அதன் சமாதானம்:—துவம் பதத்தின் லக்ஷியமாகிய சாக்ஷியை ஈசுவரரூபமாகச் சொல்வது சரியன்று. ஆதலால் யதீசுவரோத்தமர்கள் இரண்டு பதங்களிலும் லக்ஷணையைக் கூறுகிறார்கள்.

இதன் தாற்பரியம் இதுவாம்:—ஜீவவாசகபதத்தில் லக்ஷணையை யங்கீகரித்து ஈசுவரவாசகத்தில் லக்ஷணையை அங்கீகரியானாயின், அவனை 1. துவம் பதத்தின் லக்ஷணை வியாபகசேதனத்தி லிருக்கிறதா? 2. அல்லது எவ்வளவிடத்தில் ஜீவனுடைய உபாதி இருக்கிறதோ அவ்வளவிடத்திலுள்ள சாக்ஷிசேதனத்தி லிருக்கிறதா? என்று கேட்கவேண்டும்.

1. வியாபகசேதனத்தில் துவம்பதத்தின் லக்ஷணையைக் கூறின் பொருந்தாது. ஏனெனின், வாச்சியார்த்தத்தில் எது பிரவேசிக்கிறதோ அதில் பாகத்தியாகலக்ஷணை சம்பவிக்கிறது. வாச்சியத்தில் வியாபகசேதனம் பிரவேசிக்கிறதில்லை. ஆனால் ஜீவத்தன்மையின் உபாதியிலிருக்கிற சாக்ஷிசேதனம் வாச்சியத்திற் பிரவேசிக்கிறது. ஆதலால் சாக்ஷிசேதனத்திலேயே துவம்பதத்தின் லக்ஷணை இருக்கிறது; வியாபகசேதனத்தில் இல்லை. அந்தச் சாக்ஷிசேதனத்தில் எல்லோருடைய இருதயங்களையும் பிரேரித்தல் சர்வப்பிரபஞ்சத்திலும் வியாபித்திருத்தல் முதலிய ஈசுவரதர்மங்கள் சம்பவியா. சாக்ஷி எப்போதும் அபரோக்ஷமா யிருக்கிறது. அதனிடத்தில் பரோக்ஷத்தன்மை முதலிய ஈசுவரதர்மங்கள் சுத்தமா யிருக்கமாட்டா.

2. மாயையில்லாததனை மாயையோடு கூடியதென்பது சம்பவியாது. தண்டமில்லாதவனைத் தண்டி என்று சொல்வதும், சம்ஸ்காரமில்லாத துவிஜச்சிறுவனைச் சம்ஸ்கார முடையவனாகச் சொல்லுவதும் சம்பவியாது. ஆதலால் சாக்ஷிசேதனத்துக்கு ஈசுவரனோடு அபேதங்கூறின் மகாவாக்கியம் அஸம்பவ அர்த்தத்தைப் பிரதிபாதிப்பதாகும்.

## 449. இரண்டு பதங்களிலுமுள்ள லக்ஷணையும் ஓதப்புரோதபாவமும்.

இரண்டு பதங்களிலும் லக்ஷணையை ஒப்புக்கொள்ளுமிடத்துத் தோஷமில்லை, ஏனெனின், ஏகத்துவ விரோதியான தர்மங்க ளெல்லாவற்றையும்

விட்டு இரண்டு பதங்களிலுமுள்ள பிரகாசரூபசேதனமாகிய வாச்சியபாகம் எதுவோ அவ்வெல்லாத் தர்மங்களுமின்றிய சேதனத்தில் இரண்டு பதங்களுக்கும் இலக்ஷணையாம்.

உபாதியினாலும் உபாதியினலாகிய தர்மங்களாலும் சேதனத்துக்குப் பேதமிருக்கிறது; ஸ்வரூபமாக இல்லை. உபாதியையும் உபாதியினாலுண்டாகும் தர்மங்களையும் விடுவதனால் இரண்டு பதங்களின் லக்ஷியமான சேதனத்திற்கு ஏகத்துவம் சம்பவிக்கிறது. கடாகாசத்தில் கடதிருஷ்டியை விட்டு மடவிசிஷ்ட ஆகாசத்தோடு ஏகத்துவம் சம்பவிக்கிறதில்லை. மடதிருஷ்டியையும் விடுவதனால் ஏகத்துவம் பொருந்துகிறது.

எல்லாவாக்கியங்களிலும் "தத் துவம்", "துவம் தத்" என்றிவ்வாறு * ஓதப்புரோதபாவத்தின் கிரமத்தை அறிக. இந்த ஓதப்புரோதபாவத்தைச் செய்தலால் வாக்கியத்தின் அர்த்தத்தில் பரோக்ஷத்துவ † பரிச்சின்னத்துவ பிராந்தி கெடுகிறது.

---

* போக்குவரவுப் பழக்கமில்லாத மார்க்கம் செவ்வையாய் விளங்காததுபோல ஓதப்புரோதபாவமின்றிச் செவ்வையான அபேதஞான முண்டாகாது. ஆதலால் மகாவாக்கியத்தின் உபதேசத்திற்குப்பின் ஜிஞ்ஞாசு ஓதப்புரோதபாவஞ் செய்யவேண்டும். இதனையே அந்வயமென்றும் வியதிரேகமென்றும் கூறுவர்.

† இங்கே இது பிரசினமாம்:—மகாவாக்கிய உபதேசத்தின்பின் ஜிஞ்ஞாசுவிற்குப் பிரஹ்ம ஆத்மாக்களில் பரோக்ஷத்துவ பரிச்சின்னத்துவ பிராந்தி தோற்றுகின்றது. அது காரணமின்றிச்சம்பவியாது. அங்குவேறெதுவும் பிராந்திக்குக் காரணமாதல்கூடாது. ஆனால் பிரஹ்மத்திலுள்ள மாயையும் ஆத்மாவிலுள்ள அவித்தையும் பிராந்திக்குக் காரணமாதல் கூடும். அம்மாயை அவித்தை பிரஹ்மாத்மாவின் ஆசிரிதமாய் முன்னிருந்தன. அவை யிரண்டும் ஜிஞ்ஞாசு தத் துவம் பதார்த்தங்களின் சோதனைசெய்தகாலத்து நஷ்டமாயின.

எங்ஙனம் கடசொரூபத்தை விசாரிக்கக் கடத்திலுள்ள அவித்தை யிருப்பதில்லையோ, அங்ஙனம் பிரஹ்மாத்மாவை விசாரிக்க அவற்றிலுள்ள மாயை அவித்தைக ளிருப்பதில்லை. ஆனால் அவ்வதிகாரியின் திருஷ்டியினால் பாதிக்கப்படுவனவாகின்றன. மூன்றாவது சேதனமில்லை. சேதனமின்றி அந்நிய ஜடவஸ்துவை ஆசிரயித்து மாயை அவித்தைகளிரா. மாயை அவித்தைகளின் ஸ்திதியின்றி முற்கூறிய இருவகைப்பிராந்தி சம்பவியாது. ஜிஞ்ஞாசுவின் சித்தத்தில் தோற்றுகின்ற பிராந்தி எவையோ அவற்றிற்கு மாயை அவித்தைகளின்றி வேறு கதி (காரணம்) சம்பவியாது. இவ்வர்த்தாபத்திப்பிரமாணத்தால் மாயை அவித்தைகளினது ஸ்திதியின் கற்பனையுண்டாகின்றது. ஆதலால் மகாவாக்கியத்தின் உபதேசத்திற்குப்பின் அம்மாயையவித்தைகள் எங்கே நிலைத்திருந்து பரோக்ஷத்தன்மை பரிச்சின்னத்தன்மைப் பிராந்திகளை உண்டாக்கும்? என்பது பிரசினம்.

1. "தத் துவம்" என்று சொல்லுவதினால் தத்பதத்தின் அர்த்தத்துக்குத் துவம்பதத்தின் அர்த்தத்தோடு அபேதஞ் சொல்லப்பட்டது. அத் துவம் பதத்தின் அர்த்தமாகிய சாக்ஷி நித்திய அபரோக்ஷமாயிருக்கிறது. அதனால் பரோக்ஷத்தன்மைப் பிராந்தி கெடுகிறது.

2. "த்வம் தத்" என்பதனால் துவம்பதத்தின் அர்த்தத்துக்குத் தத்பத அர்த்தத்துடன் அபேதஞ் சொல்லப்பட்டது. அத் தத்பதத்தின் அர்த்தம் வியாபகம். ஆதலால் பரிச்சின்னத்தன்மையின் பிராந்தி கெடுகிறது.

1. அதுபோல்

(1) "அகம் பிரஹ்மம்"
(2) "பிரஞ்ஞானம் பிரஹ்மம்"
(3) "ஆத்மா பிரஹ்மம்" என்னும்

இவற்றால் பரிச்சின்னத்தன்மை கெடுகிறது.

2. அன்றியும்,

(1) "பிரஹ்மம் அகம்"
(2) "பிரஹ்மம் பிரஞ்ஞானம்"
(3) "பிரஹ்மம் ஆத்மா" என்னும்

இவற்றாற் பரோக்ஷத்தன்மை நிவிருத்தியாகிறது.

சிஷ்யனே! எங்கு வேதவாக்கியங்களும் ஸ்மிருதிவாக்கியங்களும் ஜீவப்பிரஹ்மங்களின் ஏகத்துவத்தைச் சொல்லுகின்றனவோ, அங்கு முழுதும் பாகத்தியாகத்தையே யதார்த்தமாயறிக.

## 450. கிரந்தத்தின் (333-ல் கூறியதின்) சமாப்தி.

இவ்விதமான குருபதேசத்தைக் கேட்டுச் சிஷ்யன் உடனே கிருதகிருத்தியனானான். இதன் யதார்த்தத்தைவிசாரிக்கிறவனுடைய துக்கமெல்லாம் நசித்துப்போம். மித்தையான குருவினால் சம்ஸ்கிருத பாஷையில் இக்கிரந்த முபதேசிக்கப்பட்டது. இதைக் கேட்கிறதினால் அஞ்ஞானம் நிவிருத்தியாய்விடுகிறது. இது அந்தக்கிரந்தத்தின் மொழிபெயர்ப்பாகச் செய்யப்பட்டது. அக் கிருததேவனுக்குச் சொப்பனத்தில் இவ்வுபதேசத்தைக் குரு செய்தார். அதனால் துக்ககாரணமான மித்தியாவனத்தின் சொரூபம் நசிக்கவில்லை.

---

இதற்கு இது உத்தரமாம்:— பதார்த்த சோதனத்திற்குப்பின் விசாரித்தறியப்பட்ட பிரஹ்மாத்மாக்களிலோ மாயை அவித்தை சம்பவியாவெனினும், மகாவாக்கியத்தின் அர்த்தமாகிய பிரஹ்மாத்மஐக்கியம் எதுவோ அது செவ்வையாய் அறியப்பட்டதாகாது; ஆனால் அறியப்படாததாம். அவ்வைக்கியத்தில் மாயை அவித்தை நிலைத்திருந்து பரோக்ஷத்தன்மைவடிவமும் பரிச்சின்னத்தன்மைவடிவுமாகிய பிராந்தியை உண்டு பண்ணுகின்றன. அந்தப் பிராந்தியை நீக்குதற்பொருட்டு ஓதப்புரோதபாவஞ் செய்ய வேண்டியதாம். ஓதப்புரோதபாவம் செய்ய ஐக்கியத்தின் செவ்வையான ஞானமுண்டாய் மாயை அவித்தைகளின் நிவிருத்திரூபிலாக பரோக்ஷத்தன்மை பரிச்சின்னத்தன்மை வடிவப் பிராந்தியின் நிவிருத்தியுண்டாகின்றது.

**451. பிரசினம்:—பொருளோடு நூலைப்படித்தாலும் துக்கத்திற்குக் காரணமானவனம் தோற்றுகிறதேயெனல்.**
**அக்கிருததேவ வாக்கியம்.**

ஸ்வாமி! நாம் அர்த்தத்தோடு இந்நூலைப் படிப்பித்தீர்கள். அது எனக்கு வந்தது. ஆனல் துக்கத்துக்குக் காரணமான வனம் எனக்கின்னும் விளங்கிக்கொண்டிருக்கிறது. எந்த வுபாயத்தால் அது நசித்துப்போகுமோ அதைச் சொல்லியருள்க.

**(முன் பிரசினத்தின் உத்தரம். 452—453).**

**452. வனத்தின் நாசத்திற்கு ஏது இதுவே (முற்கூறியதே) யாமெனலும், அக்கிருததேவனது சொப்பனத்தின் சமாப்தியும் (நாசமும்).**

சிஷ்யன் வார்த்தையைக் கேட்டுக் குரு சொல்லுகிறார்;—சிஷ்யனே! வனம் நசிக்கும்படியான உபாயத்தைக் கேள். இத்தன்மைய வேறு உபாயமில்லை. வனத்தைக் கெடுக்கும் ஏது இதுவேயாம்:—மகாவாக்கியத்தின் அர்த்தத்தை விசாரித்து "நான் அக்கிருதன்" என்று நிச்சயித்துச் சொல்லென்றார். சிஷ்யன் அப்படியே வாக்கியத்தை விசாரித்து "நான் அக்கிருதன்" என்று உரத்துச் சொன்னன். நித்திரையொழிந்து கண் விழித்துக்கொண்டான். அக்கணமே வனம் கிரந்தம் குரு எல்லாம் மறைந்துவிட்டன. வனதுக்கத்தை மறந்து தான் அக்கிருதன் என்று தெரிந்துகொண்டு சுகியானன்.

**453. மித்தியாகுருவேதங்களால் அஞ்ஞானஜந்நிய மித்தியாஜகத்தின் பரிகாரமுண்டாகிறது.**

அக்கிருததேவனுகிய எனக்கு நித்திரையால் எவ்விதமாய் வனதுக்கமுண்டாயிற்ரே, அப்படியே ஆத்மாவின் அஞ்ஞானத்தால் ஜகத்துக்கம் பிரதீதியாகிறது. எப்படி மித்தையான குருவினுலும் கிரந்தத்தினுலும் மித்தையான வனம் நசித்ததோ அப்படி மித்தையான குருவினுலும் வேதத்தினுலும் மித்தையான ஜகத்துக்கம் நசித்துப்போகிறது. வாக்கியங்களின் லக்ஷியார்த்தத்தை யறிந்து ஜிஞ்ஞாசு பூர்ணகிருதகிருத்தியனுகிறன். தீனதயாளுவாயும் நிராவரணமாயு மிருக்கிற தாதுவே நான்.

குருவேதாதிசாதன மித்தியாவர்ணனமென்னும்
ஆறுவது தரங்கம் முற்றிற்று.

---

# ஸ்ரீ விசாரசாகரம்.

## ஏழாவது தரங்கம்.

### * ஜீவன்முக்தி † விதேகமுக்தி வர்ணனம்.

### 454. ஞானிக்கு வியவகாரத்தில் நியமமில்லையெனல்.

உத்தம மத்தியம கனிஷ்டாதிகாரிகளான மூவரும் இவ்வாறு குருபதேசத்தைக் கேட்டு யாதொரு சமுசயமுமின்றி ஆத்மாவே பிரஹ்மமென்னும் உத்தமமான ஞானத்தை யடைந்தார்கள். குரு மூவருக்கும் ஒரேகாலத்தி லுபதேசஞ் செய்தாலும் குருவுபதேசத்தால் பிரஹ்மசாக்ஷாத்காரம் உத்தமமான தத்துவதிருஷ்டிக் குண்டாயிற்று.

காய்ந்த அரசஞ்சருகுகள் காற்றினால் அங்குமிங்கும் பறந்து ஓடுகிறது போல் எஞ்சிய கர்மமான பிராரப்தத்தால் ஞானி கிரியைகளைச் செய்கிறதாகக் காணப்படுகிறான். ஒருகாலத்தில் குதிரைவண்டியிலேறித் தோட்டமுதலியவைகளைப் பார்க்கிறான். ஒருகால் காலில் ஒன்றுமில்லாமல் நடக்கிறான். அவன் படுக்கையோ அனேகவிதம். போக போஜனாதிகள் ஒருகாலத்தி லுத்தமமாயிருக்கின்றன. ஒருகால் போஜனமின்றி மலையின் குகையி லிருந்துகொண்டு கற்றரையிற் படுத்துக்கொண்டு இரவைப் போக்குகிறான். ஒருகால் இவனை ஆயிரம் பெயர்கள் நமஸ்கரிக்கிறார்கள். ஒருகாலத்தில் இவன் உபயலோகப் பிரஷ்டன் என்று கர்மியால் நிந்திக்கப்படுகிறான். எவன் இவனைப் பூஜிக்கிறானோ அவன் சுகிருதத்தை யடைகிறான். தோஷதிருஷ்டியுடன் இவனைப் பார்க்கிறவன் பாவத்தையடைகிறான். இவ்விதமாக ஞானியின் வியவகாரம் நியமமின்றி யிருக்கிறது. தத்துவத்தைப் பூர்ணமா யறிந்தவனுக்குப் பிரமமும் சந்தேகமு முண்டாகா. அவனுக்குச் செய்யவேண்டியது யாதொன்றுமில்லை. அவனுடைய பேதப்பிரமங்களெல்லாம் நசித்துப்போயின. வேதப்பிரமாணத்தால் ஸ்வயம்பிரகாசமான அத்துவயப் பிரஹ்மத்தின் ஞானம் உண்டாயிருக்கிறது.

---

* ஜீவன்முக்தியின் லக்ஷணம் மேல் 476-வது பிரசங்கத்திற் சொல்லப்படும்.

† விதேகமுக்தியின் லக்ஷணம் மேல் 475-வது பிரசங்கத்திற் சொல்லப்படும்.

## (ஞானியின் வியவகாரத்தில் நியமத்தை ஆக்ஷேபித்தல் 455-473.)

### 455. ஞானி சமாதி சரீரநிர்வாக மென்பவற்றினும் அதிகமான காரியத்தில் பிரவிருத்திக்கலாகா தென்பதன் ஆக்ஷேபம் 455-458.

ஞானிக்கு வியவகார நியமமுண்டென்று சிலர் சொல்லுகிறார்கள். திரிபுடியைத் துக்கத்துக்குக் காரணமென்று கண்டு நீக்கிச் சமாதியில் ஞானி பொருந்துகிறான். சொற்பவியவகார மிருக்குமானால் அது பிச்சைவாங்கி யுண்ணுதலும் நீர் குடித்தலுமாம். சமாதி சுகத்தை மறக்கிறதில்லை. திரிபுடியினின்றும் அருவருப்புண்டாகிறது. இக்காரணத்தால் ஞானி சமாதிக்குப் பிரயத்தனம் அடிக்கடி பண்ணுகிறான். சமாதி சுகத்தைவிட்டுப் பிரமிக்கிறவன் நாய் கழுதை பிரேதத்திற் கொப்பாவன். கௌடபாதாசாரியா ருடைய காரிகையில் சமாதிப்பிரகாரம் விவரமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதமாய் ஞானியானவன் விக்ஷேபத்தைப் போக்கிச் சகல சுகசாரத்தையும் அடைகிறான். சமாதிசுகம் அஷ்டாங்கமின்றி யுண்டாகிறதில்லை. சமாதி சுகத்திற்குக் காரணம் அவையே. அச்சமாதிக் கனுகூலமான அவற்றைச் சொல்லுகிறேன் கேள்:—இயமநியமாதிகள் ஐந்தைந்து, அனேகவித ஆஸனங்கள், அநேகவிதப் பிராணயாமம், அநேகவிதப் பிரத்தியாகாரம், தாரணை, தியானம், ஸவிகற்பசமாதி என்பன. இவ்வஷ்டாங்க சாதனங்களால் நிர்விகற்பசமாதி அனுஷ்டிக்கத்தக்கது.

இவ்வாறு சமாதியை யனுஷ்டிக்க வேண்டுமென்று சொல்லுவதைக் கேட்டு, இவர்கள் பேய்பிடித்தவர்கள்போல் பிதற்றுகிறார்கள் என்று நினைத்துத் தத்துவதிருஷ்டியானவன் ஒன்றும் பேசாமல் சிரித்தான்.

இதன் தாற்பரியம்:—ஞானியின் சரீரவியவகாரத்திற்கு நியமமில்லை. ஏனெனின், ஞானியின் வியவகாரத்தில் அஞ்ஞானமும் அதன் காரியமான பேதப்பிராந்தியும் அப்படியே பேதப்பிராந்தியின் காரியமான ராகத்துவேஷங்களுமோ இல்லை. ஆனால் ஞானிக்கும் பிராரப்தகர்மத்தின் சேஷமிருக்கிறது. அதுவே அவனுடைய வியவகாரத்துக்குக் காரணமாயிருக்கிறது. அப்பிராரப்தகர்மம் புருஷபேதத்தால் நாநாவிதமாயிருக்கிறது. ஆதலால் ஞானியின் பிராரப்த கர்மஜந்நிய வியவகாரத்தில் நியமமில்லை. இது சித்தாந்த பக்ஷம்.

* சிலர் இவ்வாறு சொல்லுகிறார்கள்:—ஞானியின் வியவகாரத்தில் எந்தக் கர்மத்தின் நியமமுமில்லை. ஆனால் ஞானிக்கு நிவிருத்தியின்பொருட்டு நியமமுண்டு. பிரவிருத்தியுண்டானால் தேகஸ்திதியின் பொருட்டுப் போஜனத்துக்காகப் பிக்ஷையிலும் மானங்காக்கக் கௌபீனக் கிரகணத்திலுந்தான் பிரவிருத்தியுண்டாகிறது. வேறு பிரவிருத்தி யுண்டாகிறதில்லை. ஏனெனின், ஞானமுண்டாவதற்குமுன் ஞானவிருப்பகாலத்தில் விஷயத்தில் தோஷதிருஷ்டியால் வைராக்கிய முண்டாகிறது. அந்த வைராக்கியம் ஞானமுண்டான பிறகும் தோஷதிருஷ்டியாலும் விஷயத்தில் மித்தியாபுத்தியாலு மிருந்து கொண்டிருக்கிறது.

1. அபரோக்ஷமாகப் பொய்யென்றறிந்த பதார்த்தங்களில் சத்தியபுத்தியுண்டாகிறதில்லை.

2. தோஷதிருஷ்டியால் ராக முண்டாகிறதில்லை. பிரவிருத்தி ராகத்தாலுண்டாகிறது. ஞானிக்கு ராகம் சம்பவியாமையினால் பிரவிருத்தி யுண்டாகிறதில்லை.

சரீர போஷணையின்பொருட்டுப் போஜனாதிகளிலுண்டாம் பிரவிருத்தியோ ராகமின்றிப் பிராரப்த கர்மத்தா லுண்டாகிறது. கர்மம் மூன்றுவிதம்:- 1. சஞ்சிதம், 2. ஆகாமி, 3. பிராரப்தம். அவற்றில்,

1. சென்ற சரீரங்களிற் செய்யப்பட்டுப் பலனுக்கு வாராமலிருக்கும் கர்மம் சஞ்சிதமாம்.

2. எதிர்காலத்துக் (வர்த்தமான சரீரத்திற் செய்யப்படும்) கர்மம் ஆகாமியாம்.

3. முன் சரீரங்களிற் செய்யப்பட்டு வர்த்தமான சரீரத்துக்கு ஏதுவாயிருக்கும் கர்மம் பிராரப்தமாம்.

அவற்றில்,

1. சஞ்சிதகர்மம் ஞானத்தால் நசித்துப்போகிறது.

2. ஞானிக்கு ஆத்மாவில் கர்த்திருத்துவப்பிராந்தி இல்லை. ஆதலால் அவனுக்கு ஆகாமிகர்மமில்லை.

---

* கேவல சந்நியாசியினையே ஞானத்திற்கு முக்கிய அதிகாரியெனக் கொள்ளும் சங்கராநந்தஸ்வாமி முதலியோர்.

3. எந்தப் பிராரப்தகர்மமானது ஞானியின் சரீரத்தை யாரம்பித்திருக்கிறதோ அந்தப் பிராரப்தகர்மம் சரீரஸ்திதிக்குக் காரணமான பிக்ஷை முதலியவற்றிற் பிரவிருத்தியை யுண்டாக்குகிறது. பிராரப்தகர்மம் போகமின்றி நாசமடையாது.

சிலவிடங்களில் (அபரோக்ஷாநுபூதி விவேகசூடாமணிமுதலிய கிரந்தங்களில்), "சஞ்சித ஆகாமி கர்மங்களைப்போல் ஞானிக்குப் பிராரப்தகர்மமும் இல்லை. ஆதலால் போஜனமுதலிய பிரவிருத்திகளும் ஞானிக்குச் சம்பவியா" என்று எழுதியிருக்கிறது. அதன் அபிப்பிராயம் இதுவாம்:—ஞானியின் திருஷ்டியால் ஆத்மாவில் கர்மம் அதன் பலன் என்பவற்றின் சம்பந்தமில்லை. ஆதலால் ஆத்மாவில் எல்லாக் கர்மங்களும் நிஷேதிக்கப்பட்டிருக்கின்றனவென்னும் அபிப்பிராயத்தால் பிராரப்தம் நிஷேதிக்கப்பட்டிருக்கிறது. ஞானத்துக்கு முன்செய்த பிராரப்தத்துக்கு ஞானியின் சரீரத்தில் போகமுண்டாகாதென்னும் அபிப்பிராயத்தால் பிராரப்தம் நிஷேதிக்கப்படவில்லை. ஏனெனின்,

1. ஞானியின் சஞ்சிதகர்மம் ஞானத்தால் நாசமடைகிறது

2. ஆகாமியின் சம்பந்த முண்டாகிறதில்லை

3. பிராரப்தம் போகத்தால் நசித்துப்போகிறது

என்று சூத்திரகாரர் சொல்லியிருக்கிறார்.

ஆதலால் பிராரப்தபலத்தால் சரீரபோஷணை சம்பந்தமான கிரியைகள் மாத்திரம் ஞானியினிடத்தில் உண்டாகின்றன; அதிகமானவை யுண்டாகிறதில்லை.

**456.** ஆனால் கர்மம் அனேகவிதமாம். எங்கு ஒரு கர்மம் அனேக சரீரங்களை யுண்டுபண்ணுவதாகிறதோ அங்கு அத்தன்மைய கர்மத்தாலுண்டான முதல் சரீரத்தில் ஒருவனுக்கு ஞானமுண்டானால் அங்கு ஞானிக்கு வேறு சரீரத்தின் பிராப்தியுண்டாகலாகாது. ஏனெனின், எது பலத்தைக் கொடுக்க ஆரம்பித்திருக்கிறதோ அது பிராரப்த மென்னப்படும். அது போகமின்றி நசித்துப்போகிறதில்லை. அநேக சரீரங்களுக்கு ஹேதுவான கர்மம் ஒன்று. அதனாலுண்டான முதற்சரீரத்திலேயே ஞானமுண்டாயின், ஞானத்துக்குப் பிறகும் அந்தக்கர்மத்துக்குப் பலனாகிய அனேக சரீரங்க ளுண்டாகவேண்டியனவா யிருக்கின்றன. ஆதலால் ஞானிக்கும் வேறு சரீரங்களின் அடைவு உண்டாகவேண்டும்.

457. பிராரப்தகர்மத்தின் பயனாக எத்தனை சரீரங்களுண்டாகவேண்டுமோ அத்தனை சரீரங்களும் ஞானிக்குண்டாகும். பிராரப்தபோகத்துக்கு அதிகமானது உண்டாகிறதில்லை. இதனால் ஞானமும் ஸபலமாகிறது என்று ஒருவன் சொல்லுவானாயின் அது பொருந்தாது. ஏனெனின் இது * வேதத்தின் முரசாம்:— ஞானியின் பிராணன் வேறு லோகத்திலாவது இவ்வுலகத்தின் வேறு சரீரத்திலாவது போகிறதில்லை. ஆனால் அவ்விடத்திலேயே அந்தக்கரணமும் இந்திரியங்களோடு ஒடுங்கிவிடுகின்றது. பிராணன் போகாமல் வேறு சரீரம் அடையப்படுகிறதில்லை. ஆதலால் ஞானிக்குப் பிராரப்தசேஷத்தால் வேறு சரீரமுண்டாகுமென்று சொல்லுவது சம்பவியாது.

ஆனால் இது சமாதானமாம்:—எங்கு ஒரு கர்மத்தால் அனேக சரீரங்களுண்டாகின்றனவோ அங்குக் கடைசியான சரீரத்திற்றான் ஞானமுண்டாகும்; முன் சரீரங்களி லுண்டாகாது. ஏனெனின், அனேக சரீரங்களை யுண்டுபண்ணும் பிராரப்தமே ஞானத்துக்குப் † பிரதிபந்தகமாம்.

1. விஷயத்தில் ஆசக்தி (பற்று)

2. புத்திமந்தத்தன்மை

3. பேதவாதிவசனத்தில் விசுவாசம் என்னும்

இவைகள் ஞானத்துக்குப் பிரதிபந்தங்களாம். அதுபோல் ‡ விலக்ஷணைப் பிராரப்தமும் ஞானத்துக்குப் பிரதிபந்தகமாம்.

ஞானத்தின் பிரதிபந்தங்களிருக்க எங்கு ஞானசாதனங்களான சிரவணாதிக ளிருக்கின்றனவோ அங்குப் பிரதிபந்தம் நிவிருத்தியாகவே முதல் ஜன்மத்தில் செய்த சிரவணாதிகளாலேயே வேறு சரீரத்தில் ஞானமுண்டாகிறது. எங்ஙனம்: § வாமதேவர் பூர்வஜன்மத்தில் சிரவணாதிகளைச் செய்தார். அப்

---

* "அந்த ஞானியின் பிராணன் வெளியிற் செல்லுகிறதில்லை. ஆனால் இங்கு மரிக்குமிடத்திலேயே ஒடுங்குகின்றது." என்றல் முதலியன வேதவாக்கியங்களின் முரசாம்.

† ஞானத்தின் மூவகைப் பிரதிபந்தங்களினது நிவிருத்தியின் உபாயத்தோடு கூடிய வர்ணனம் ஸ்ரீ பஞ்சதசியின் தியானதீபத்தில் எழுதப்பட்டிருக்கின்றது. முன் ஐந்தாவது தரங்கத்தின் டிப்பணியில் அதன் பெயர்மாத்திரம் எழுதப்பட்டிருக்கிறது.

‡ ஜன்மாந்திரத்துக்கு ஏதுவான பிராரப்தசேஷம்.

§ இங்கு வாமதேவர் என்னும் சொல்லால் ரிஷபதேவர் புத்திரராகிய பரதராஜரும் கொள்ளப்படுவர். பரதருக்கும் மூன்று ஜன்மத்திற்கு ஏதுவான பிராரப்தசேஷம் இருந்தது. அதனால் சாதன சாமக்கிரிகளிருந்தும் ஞானமுண்டாகவில்லை. பின் மூன்றாவது ஜன்மத்தில் உபதேசமின்றியே முன் செய்யப்பட்ட விசாரத்தால் ஞானமுண்டாயிற்று.

போது பிராரப்தத்தின் பலனாகிய ஒருசரீரம் எஞ்சியிருந்தபடியால் ஞான முண்டாகவில்லை. சிரவணாதிகள் செய்துகொண்டிருக்க வர்த்தமான சரீரம் போய் வேறு சரீரம் அடையவே முன் ஜன்மத்தில் செய்த சிரவணாதிகளினாலேயே அவருக்குக் கர்ப்பத்தில் ஞானமுண்டாயிற்று. ஆதலால் ஞானத்துக்குப் பின் வேறு சரீரத்தின் சம்பந்த முண்டாகாது. வர்த்தமான சரீரத்தின் சேஷ்டைகள் பிராரப்தத்தால் உண்டாகின்றன. அங்குச் சரீர போஷணைக்கு எவ்வளவு கிரியைகள் வேண்டுமோ அவ்வளவே உண்டாகின்றன. ராகத்தாலுண்டாம் அதிக சேஷ்டைகளுண்டாகிறதில்லை. ஆதலால் சகலப் பிரவிருத்தியும் இல்லாதவன் ஞானியாகிறான்.

458. இவ்விதமாக நிவிருத்திப் பிரதானமாகிய ஞானியின் வியவகார முண்டாகிறது.

இதில் இத்தன்மைய சங்கையிருக்கிறது:—மனதின் சுபாவம் அதிக சஞ்சலமானது. மனதின் ஸ்திதி நிராலம்பமா (ஆசிரயமில்லாததா) கிறதில்லை. யாதேனும் ஓர் ஆலம்ப (ஆசிரய)த்தால் மனதின் ஸ்திதியுண்டாகிறது. ஆதலால் மனதின் யாதேனும் ஓர் ஆலம்பனத்தின் அடைவின்பொருட்டும் ஞானிக்குப் பிரவிருத்தியுண்டாகும்.

அதன் சமாதானம் இதுவாம்:— சமாதியில்லாத புருஷனது மனம் சஞ்சலப்பட்டாலும் சமாதியால் மனம் ஜயிக்கப்படும். ஞானி சமாதியில் நிலைக்கிறான். அதனால் ஞானிக்குப் பிரவிருத்தி யுண்டாகிறதில்லை.

## 459. சமாதியின் அஷ்டாங்கங்கள்—459–465.

அச் சமாதி எட்டு அங்கங்களா லுண்டாகின்றது. அவையாவன:—

1. இயமம், 2. நியமம், 3. ஆசனம். 4. பிராணாயாமம், 5. பிரத்தியாகாரம், 6. தாரணை, 7. தியானம், 8. ஸவிகற்பசமாதி என்பன.

460. 1. அஹிம்சை, 2. சத்தியம், 3. திருடாமை, 4. பிரஹ்மசரியம், 5. அபரிக்கிரகம் என்னும் இவ்வைந்தும் * இயமமெனப்படும்.

---

* இவ்வியமமாதிகளின் லக்ஷணம் பாதஞ்சலசூத்திரத்திலும் ஹடயோகப்பிரதீபிகையின் டிப்பணியிலும் விரிவாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. இராஜயோகானுசாரமாய் அவற்றின் அர்த்தம் ஸ்ரீ சங்கராசாரியருடைய அபரோக்ஷாநுபூதி கிரந்தத்திலும் ஹடயோகப்பிரதீபிகையின் டிப்பணியிலும் எழுதப்பட்டிருக்கிறது.

461. 1. சௌசம், 2. சந்தோஷம், 3. தவம். 4. ஸ்வாத்தியாயம், 5. ஈசுவரப்பிரணிதானம் என்னும் இவ்வைந்தும் நியம மெனப்படும்.

ஞானசமுத்திரக் கிரந்தத்தில் பத்துவித இயமமும் பத்துவித நியமமும் சொல்லப்பட்டிருக்கின்றன. அது புராணக்கிரமமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. வேதாந்த சம்பிரதாயத்தில் இயமநியமங்கட்கு ஐந்து ஐந்து பேதங்களேயுள.

462. ஆசனங்களின் பேதம் அநேகம். அவற்றில், 1. ஸ்வஸ்திகம், 2. கோமுகம், 3. வீரம், 4. கூர்மம், 5. பத்மம், 6. குக்குடம், 7. உத்தானம், 8. கூர்மகம், 9. தனுஷம், 10. மத்ஸ்யம், 11. பச்சிமதானம், 12. மயூரம், 13. ஸவம், 14. சிம்ஹம், 15. பத்ரம், 16. சித்தம் என்றல் முதலிய 84 ஆசனங்கள் யோககிரந்தங்களில் சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றின் லக்ஷணங்களும் அங்கு எழுதப்பட்டிருக்கின்றன. கிரந்தம் விரியுமென்னும் பயத்தினாலும் வேதாந்தத்தில் அவைகளினுபயோகம் அதிகமாயில்லாததினாலும் அவற்றின் லக்ஷணங்களை இவ்விடத்தில் எழுதவில்லை. மேற்சொல்லிய ஆசனங்களிலும் சிம்ஹம், பத்ரம், பத்மம், சித்தம் என்னும் நான்கும் முக்கியமானவை.

மேற்சொல்லிய நாலு ஆசனங்களிலும், சித்தாசனம் மிகவும் சிரேஷ்டமானது. அதன் லக்ஷணம் இதுவாம்:— இடது குதிகாலை குதலிங்கங்களின் மத்தியான யோனியில் அழுத்திக்கொண்டு வலது குதிகாலை லிங்கத்தின்பேரிலழுத்திக்கொண்டு புருவங்களின் மத்தியில் திருஷ்டியை வைத்துக் கட்டைபோல் நிமிர்ந்து சலனமின்றிச் சரீரமிருப்பது சித்தாசனமாம்.

சிலர் இதன் லக்ஷணத்தை வேறுவிதமாகவும் சொல்லுகிறார்கள்:— இடது குதிகாலை யோனிஸ்தானத்தில் வைக்காமல் லிங்கத்தின்பேரில் வைத்து அதன்பேரில் வலது குதிகாலை வைக்கவேண்டியது. மற்ற லக்ஷணங்கள் முன்போன்றனவே. இந்தச் சித்தாசனமே அதிக சிரேஷ்டமானது. ஏனெனில், சில ஆசனங்கள் ரோகநாசத்திற்கு ஏதுவாம். சில ஆசனங்கள் பிராணாயாமாதி சமாதி அங்கங்களுக்குச் சாதகங்களா யிருக்கின்றன. சித்தாசனம் சமாதிகாலத்திலாகிறது. ஆதலால் இது அதிக சிரேஷ்டமானது. இதனையே வஜ்ஜிராஸன மென்றும் முக்தாஸன மென்றும் குப்தாஸனமென்றும் கூறுவர்.

463. ஆசனசித்தியின் பிறகு பிராணாயாமமும் செய்யவேண்டியது. அந்தப் பிராணாயாமம் அநேகவிதம். அங்ஙனமாயினும் அதன் லக்ஷணம் சுருக்கமாய்ச் சொல்லப்படுகின்றது:—

1. மூக்கின் இடது துவாரத்தின் வழியாய் இடையென்னும் நாடியால் வாயுவைப் பூரிக்கவேண்டும். இது பூரகம் எனப்படும்.

2. மூக்கின் வலது துவாரத்தால் காற்றை விடவேண்டும். இது ரேசக மெனப்படும்.

3. சுழுமுனையால் காற்றை யடக்கவேண்டும். இது கும்பக மெனப்படும்.

இவ்வாற்றால் பூரக ரேசக கும்பகங்களுக்குப் பிராணயாமமென்று பெயர். அந்தப் பிராணயாமம் இருவகைத்து. (1) ஒன்று அகர்ப்பம். (2) மற்றொன்று ஸகர்ப்பம்.

1. பிரணவோச்சாரணமின்றிச் செய்யும் பிராணயாமம் அகர்ப்பமெனப் படும்.

2. பிரணவோச்சாரணத்தோடுகூடிய பிராணயாமம் ஸகர்ப்ப மெனப் படும்.

**464.** 1. விஷயங்களினின்றும் சகல இந்திரியங்களையும் தகைப்பது பிரத்தியாகார மெனப்படும்.

2. அந்தராயமி (இடையி)ன்றி அந்தக்கரணம் நிலைத்தல் தாரணை யெனப் படும்.

3. அந்தராயத்தோடுகூடிய அத்துவிதீயவஸ்துவினிற் செல்லும் அந்தக் கரணத்தின் பிரவாகத்திற்குத் தியானமென்று பெயர்.

**465.** எழுந்த சம்ஸ்காரங்களின் திரஸ்காரமும் அடங்கிய ஸம்ஸ்காரங் களின் பிரகடமுமுண்டாய் அந்தக்கரணம் ஏகாக்கிரமாய்ப் பரிணமித்தல் சமாதி யெனப்படும். அச்சமாதி இருவகையாம். (1) ஒன்று ஸவிகற்பசமாதி. (2) மற் றொன்று நிர்விகற்பசமாதி.

1. ஞாதா ஞான ஞேயரூப திரிபுடி விளக்கத்தோடுகூடிய அத்துவிதீயப் பிரஹ்மத்திலுள்ள அந்தக்கரணவிருத்தியின் நிலைமை ஸவிகற்பசமாதி யெனப் படுகின்றது. அந்த ஸவிகற்பம் இருவகைத்தாம்:—(1) ஒன்று சப்தாநுவித்தம். (2) மற்றொன்று சப்தாநநுவித்தம்.

(1) அகம்பிரஹ்மாஸ்மி என்னும் சப்தத்தோடு அநுவித்தம், அதாவது கூடியது சப்தாநுவித்த சமாதியாம்.

(2) சப்தத்தோடுகூடாதது சப்தாநநுவித்தசமாதியாம்.

2. திரிபுடித்தோற்றமில்லாத அகண்டப் பிரஹ்மாகாரமான அந்தக்கரண விருத்தியின் நிலைமைக்கு நிர்விகற்பசமாதி யென்று பெயர்.

இவ்விதத்தால் ஸவிகற்ப நிர்விகற்ப ரூபத்தால் சமாதி இருவகையாகிறது. அவற்றுள், (1) ஸவிகற்பசமாதி சாதனமாம். (2) நிர்விகற்பசமாதி பலனும்.

1. சாதனரூப ஸவிகற்பசமாதியில் திரிபுடிரூபத்துவைதம் பிரதீதியாகிறது. அங்ஙனமாயினும் அந்தத்துவைதம் பிரஹ்மரூபமாகப் பிரதீதியாகிறது. மண் விகாரத்தை மண்ரூபமாக அறிதலால் விவேகிக்கு மண்ணின் விகாரமான கடாதிகளும் பிரதீதியாகின்றன. ஆனால் மண்ரூபமாகவே பிரதீதியாகின்றன. அதுபோல் ஸவிகற்பசமாதியில் திரிபுடித்துவைதம் பிரஹ்மரூபமாகவே பிரதீதியாகிறது.

2. நிர்விகற்பசமாதியிலும் ஸவிகற்பசமாதியிற்போல் திரிபுடியாகிய துவைதமிருந்தாலும் அது பிரதீதியாகிறதில்லை. அது ஜலத்தில் உப்பைக் கரைத்தால் உப்பு இருந்தும் நேத்திரத்துக்கு அது முற்றும் பிரதீதியாகாதது போலாம்.

இவ்விதத்தால் ஸவிகற்ப நிர்விகற்ப சமாதிகளுக்கு இப்பேதஞ் சித்தித்தது:—

1. ஸவிகற்பசமாதியில் பிரஹ்மரூபமாகத் துவைதம் பிரதீதியாதல்.

2. நிர்விகற்பசமாதியில் திரிபுடியாகிய துவைதம் பிரதீதியாகாமை.

### 466. சுழுத்திக்கும் நிர்விகற்பசமாதிக்கும் பேதம்.

அவ்வாறே சுழுத்திக்கும் நிர்விகற்ப சமாதிக்கும் இது பேதமாம்:—

1. சுழுத்தியில் அந்தக்கரணத்தின் விருத்தி பிரஹ்மாகாரமாகிறதில்லை.

2. நிர்விகற்பசமாதியில் பிரஹ்மாகாரமான அந்தக்கரணத்தின் விருத்தி இருக்கிறது; அதன் அபாவமில்லை.

இவ்விதத்தால்,

1. சுழுத்தியில் விருத்தியோடுகூடிய அந்தக்கரணத்தின் அபாவமுண்டாகிறது.

2. நிர்விகற்பசமாதியில் விருத்தியோடு கூடிய * அந்தக்கரணமிருந்தும் அது பிரதீதியாகிறதில்லை.

---

* சமாதியில் அந்தக்கரணம் இல்லையாயின், யோகியின் தேகம் தூங்குவோனைப் போல விழவேண்டும்; விழுகிறதில்லை. ஆதலால் சமாதியில் அந்தக்கரணமுண்டென்றறியவேண்டியது.

நிர்விகற்பசமாதியில் அந்தக்கரணத்தின் எந்தப் பிரஹ்மாகார விருத்தியுண்டாகிறதோ, அதற்கு ஏது சவிகற்பசமாதியின் அப்பியாஸமாம். ஆதலால் சாதனரூப எட்டங்கங்களில் ஸவிகற்பசமாதி எண்ணப்பட்டிருக்கிறது. நிர்விகற்பஸமாதி பயனும்.

## 467. நிர்விகற்பசமாதி இருவகைத்தெனல்.

அந் நிர்விகற்பசமாதியும் இருவகைத்தாம்:—(1) ஒன்று அத்துவைத பாவனுரூபம். (2) மற்றொன்று அத்துவைதாவஸ்தானரூபம்.

1. அத்துவைதப் பிரஹ்மாகாரமான அந்தக்கரணத்தின் அஞ்ஞார்தவிருத்தியோடு கூடியதாயின் அது அத்துவைதபாவனுரூப நிர்விகற்பசமாதி யெனப்படும்.

2. இந்தச் சமாதியில் அப்பியாசம் அதிகமாவதனால் பிரஹ்மாகார விருத்தியும் சாந்தமாய் விடுகிறது. ஆதலால் விருத்தியில்லாததான நிர்விகற்பசமாதி அத்துவைதாவஸ்தானரூபநிர்விகற்பசமாதி யெனப்படும்.

எப்படிக் காய்ச்சின இரும்பின்பேரில் விடப்பட்ட ஜலத்திவலை அவ்விரும்பிலேயே பிரவேசிக்கிறதோ அப்படி அத்துவைதபாவனுரூபசமாதியின் திடமான அப்பியாஸத்தால் அத்திபந்தப்பிரகாசமான பிரஹ்மத்தில் விருத்தி லயமாகிறது. * அது † அத்துவைத அவஸ்தானரூப நிர்விகற்பசமாதிக்குச் சாதனமாயிருக்கிறது.

## 468. அத்துவைத அவஸ்தானரூபசமாதிக்கும் சுழுத்திக்கும் பேதம்.

அத்வைத அவஸ்தானவடிவசமாதிக்கும் சுழுத்திக்கும் இவ்வளவு பேதமுண்டு:—

1. சுழுத்தியில் விருத்தி அஞ்ஞானத்தில் லயமாகிறது.

2. அத்வைத அவஸ்தானரூபசமாதியில் விருத்தி பிரஹ்மப்பிரகாசத்தில் ‡ லயமாகிறது.

---

* ஆதலால் அந்த அத்வைதபாவனைவடிவசமாதி.

† இந்த அத்வைதாவஸ்தானவடிவ நிர்விகற்பசமாதியே ஞானத்தின் ஏழாவது பூமிகைவடிவ யோகத்தின் பரம அவதியாம்.

‡ இங்கு இது இரகசியமாம்:—முற்கூறிய சமாதியில் இராஜத தாமதகுணங்கள் அடியோடு நீங்குதலால் ஆவிற்பவித்த சுத்தசத்துவகுணவடிவ உபாதானத்திலேயே விருத்தியின் லயம் சம்பவிக்கிறது; நிர்விகாரப் பிரஹ்மப்பிரகாசத்தில் இல்லை.

1. சுழுத்தியின் ஆனந்தம் அஞ்ஞானாவிருதமாயிருக்கிறது.

2. சமாதியில் ஆவரணமில்லாத பிரஹ்மானந்தம் விளங்குகிறது.

## 469. நிர்விகற்பசமாதியின் லயம், விக்ஷேபம், கஷாயம், ரஸாஸ்வாதம் என்னும் நான்கு விக்கினங்கள் 469—472.

ஆனால் நிர்விகற்பசமாதியில் நான்கு விக்கினங்களிருக்கின்றன. அவற்றை நீக்கும்பொருட்டு அவற்றின் சொரூபத்தைச் சொல்லுகிறேன் :— 1. லயம், 2. விக்ஷேபம், 3. கஷாயம், 4. ரஸாஸ்வாதம் என விக்கினங்கள் நான்காம்.

1. ஆலஸ்யத்தினலாவது (சோம்பலினலாவது,) நித்திரையினலாவது விருத்தியில்லாமலிருத்தற்கு லய மென்று பெயர். அந்த லயத்தால் சுழுத்திக்குச் சமானமான அவஸ்தை யுண்டாகின்றது. பிரஹ்மானந்தம் விளங்குகிறதில்லை. ஆதலால் நித்திரை ஆலஸ்யமுதலிய நிமித்தங்களால் எப்போது விருத்தி தனது உபாதானமான அந்தக்கரணத்தில் லயமாகிறதோ, அப்போது யோகி சாவதானப்பட்டு நித்திரை முதலியவற்றைத் தகைந்து விருத்தியை எழுப்பவேண்டியது. இவ்வாறு லயரூபவிக்கினத்துக்கு விரோதியான நித்திரை ஆலஸ்யங்களின் நிரோதத்தோடுகூடிய விருத்தியின் பிரவாகவடிவ ஜாகரணம் (விழிப்பு) எதுவோ அது கௌடபாதாசாரியாற் * சித்தசம்போதன மெனப்படுகின்றது.

470. 2. விக்ஷேபத்தின் அர்த்தம் இதுவாம்:—பூனை முதலியவைகளின் பயத்தால் சிட்டுக்குருவிகள் வீட்டுக்குள் பிரவேசிக்கின்றன. அப்போது பயக்கிலேசங்களுக்குக் கிரகத்திற்குள் தற்காலம் இடம் காணப்படுகிற

---

காய்ந்த இரும்பில் நீர்த்துளி லயமாதலின் திருஷ்டாந்தம் சொல்லப்பட்டது. அங்கும் விசாரதிருஷ்டியினல் பிருதிவியின் காரியமான இரும்பில் நீர்த்துளி லயமாகிறதில்லை. ஜலத்திற்கு உபாதானமான அக்கினிமாத்திரத்தில் நீர்த்துளி லயமாகிறது. அதற்குக் காய்ச்சிய இரும்பில் உபசாரம் (சொல்லுதல்) உண்டாகிறது. அங்ஙனமாயினும், பிரஹ்மப் பிரகாசத்தின் விளக்கவடிவ நிமித்தத்தால் விருத்தியின் லயமுண்டாயிருக்கிறது. ஆதலால் உபசாரத்தினல் பிரஹ்மப்பிரகாசத்தில் லயம் சொல்லப்படுகிறது.

அல்லது, அந்தச் சமாதியுடைய பிரஹ்மவித்துவரிஷ்டனது திருஷ்டியினல் குண முதலியன தோற்றுகிறதில்லை ; ஆனல் சுத்தப்பிரஹ்மம் தோற்றுகிறது. அங்கு அந்த (பிரஹ்மவிவர்த்த) விருத்தி (திருஷ்டி) யின் அபாவமுண்டாயிற்று. இதனலும் பிரஹ்மப்பிரகாசத்தில் விருத்தியின் லயம் சொல்லப்படுகிறது.

* இவ்வர்த்தம் கௌடபாதாசாரியாரால் செய்யப்பட்ட மாண்டூக்கிய உபநிஷத்தின் காரிகையில் சொல்லப்பட்டிருக்கிறது.

தில்லை ஆதலால் மறுபடியும் வெளியே வந்து பயத்தை அல்லது மரணரூப துக்கத்தை யடைகின்றன. அதுபோல் அநாத்மபதார்த்தங்களைத் துக்கமேஹது வென அறிந்து அத்துவைதாநந்தத்தை விஷயமாக்குவதற்காக அந்தர்முக மாகிய விருத்தி அங்கு விருத்திக்கு விஷயமாகிய சேதனம் அதிசூக்ஷ்மமா யிருத்தலால் கொஞ்சகாலம் விருத்தி நிலைத்தலின்றி உடனே சேதனஸ்வரூபா நந்தத்தின் லாபமுண்டாகிறதில்லை. அதனல் விருத்தி பகிர்முகமாய்விடுகிறது. இவ்வாறு பகிர்முகமாம் விருத்திக்கு விக்ஷேபமென்று பெயர். அந்த விருத்தி யின் ஸ்திரத்தன்மையின்றிச் சொரூபானந்தம் அடையப்படுகிறதில்லை. ஆத லால் அந்தர்முகவிருத்தி யுண்டானுலும் எவ்வளவுகாலம் விருத்தி பிரஹ்மா காரமாகவில்லையோ அவ்வளவுகாலம் பாஹ்ய பதார்த்தங்களில் தோஷபாவனை யால் விருத்தியை யோகி பகிர்முகமாகவிடுகிறதில்லை. ஆனுல் விருத்தியின் அந் தர்முகத்தன்மையினையே நிறுத்துவன்.

விக்ஷேபரூப விக்கினத்துக்கு விரோதியான யோகியின் பிரயத்தனத்தைக் கௌடபாதாசாரியர் சமமென்று கூறியிருக்கிறுர்.

471. 3. ராகாதிதோஷத்தினைக் கஷாயமென்பர். ராகாதிதோஷங்கள் இருவகையாம்:—(1) பாஹ்யம், (2) மற்றொன்று ஆந்தரமாம்.

(1) எவற்றிற்கு (எவ்விராகாதிகட்கு) புத்திரன் ஸ்திரீ தனதி விஷயங் கள் இருப்பனவாகின்றனவோ, அவை பாகியமாம்.

(2) சென்றகாலத்தின் அல்லது வருங்காலத்தின் சிந்தனவடிவ மனோ ராச்சியம் ஆந்தரமெனப்படும்.

இவ்விருவகை ராகாதிகளும் சமாதியிற் பிரவிருத்தித்த யோகியினிடத் துச் சம்பவியா. ஏனெனின்,

சித்தத்திற்கு ஐந்து பூமிகைகளுண்டு:—(1) க்ஷேபம், (2) மூடத்துவம், (3) விக்ஷேபம், (4) ஏகாக்கிரத்துவம், (5) நிரோதபூமிகை என்பனவாம், அவைகளில்,

(1) * உலகவாசனை. † தேகவாசனை, ‡ சாஸ்திரவாசனை என்றல் முத லிய ரஜோகுணத்தின் பரிணமங்களாகிய திட அநாத்ம வாசனையை க்ஷேப மென்பர்.

---

* "என்னை உலகம் நிந்திக்கலாகாது. எல்லோரும் என்னைத் துதிக்கவேண்டும்" என்னும் ஆக்கிரகத்தின் திடசம்ஸ்காரத்திற்கு உலகவாசனையென்று பெயர்.

† "ஸ்தூலசூக்ஷ்ம தேகங்களின் ரோகாதிரூப அல்லது பாபரூப மலங்களை ஔஷ தாதிகளாலாவது அல்லது தீர்த்தயாத்திரையினுலாவது அடியோடு நீக்குவேன். அன்றி யும், அவற்றின்கண் புஷ்டி அழகு முதலியவடிவ அல்லது புண்ணியவடிவ குணத்தைச் சம்பாதிப்பேன்" என்னும் ஆக்கிரகத்தின் திடசம்ஸ்காரம் தேகவாசனையாம்.

‡ "சகலசாஸ்திரங்களின் பாடத்தையாவது அர்த்தத்தையாவது அல்லது அந்த அந்தச் சாஸ்திரத்திற்கூறிய ஆசாரணத்தை (நடையை) யாவது யான் தரிப்பேன்" என்னும் ஆக்கிரகத்தின் திடசம்ஸ்காரம் சாஸ்திரவாசனையாம்.

(2) நித்திரை ஆலஸ்யமுதலிய தமோகுண பரிணாமங்களை மூடத்தன்மை என்பர்.

(3) தியானத்திற் பிரவிருத்தித்த சித்தம் ஒருகாலத்தில் வெளியே செல்லுவதனை விக்ஷேபமென்பர்.

(4) அந்தக்கரணத்தின் அதீத (சென்ற) பரிணாமமும் வர்த்தமான பரிணாமமும் சமாநாகாரமாதலை ஏகாக்கிரத்தன்மையென்பர்.

இந்த ஏகாக்கிரத்தன்மையின் லக்ஷணம் யோகசூத்திரத்தில் பதஞ்சலிபகவானால் சொல்லப்பட்டிருக்கிறது. அதன் தாற்பரியம் இதுவாம்:—சமாதிகாலத்தில் யோகியின் அந்தக்கரணத்தில் ஏகாக்கிரத்தன்மை யுண்டாகிறது. அந்த ஏகாக்கிரத்தன்மை விருத்தியின் அபாவரூபமன்று. ஆனால் சமாதிகாலத்திலுண்டாம் அந்தக்கரணத்தின் பரிணாமங்களெல்லாம் பிரஹ்மத்தையே விஷயமாக்குகின்றன. ஆதலால் அந்தக்கரணத்தின் அதீதபரிணாமமும் வர்த்தமான பரிணாமமும் கேவலம் பிரஹ்மாகாரமாதலால் சமாநாகாரமாகின்றன.

(5) இந்த ஏகாக்கிரத்தன்மையின் பெருக்கத்தை நிரோதமென்பர்.

இவ்வைந்து பூமிகைகளும் அந்தக்கரணத்தினவாம். பூமிகையென்பது அவஸ்தையாம்.

இவ்வைந்து பூமிகைகளோடுகூடிய அந்தக்கரணத்துக்கு முறையே க்ஷிப்தம், மூடம், விக்ஷிப்தம், ஏகாக்கிரம், நிருத்தம் என்றும் பெயராம். அவற்றில் (1—2)க்ஷிப்த மூட அந்தக்கரணங்களுக்கோ சமாதியில் அதிகாரமில்லை. (3) விக்ஷிப்த அந்தக்கரணத்துக்கு அதிகாரமுண்டு. (4—5) ஏகாக்கிர நிருத்த அந்தக்கரணங்கள் சமாதிகாலத்தில் உண்டாகின்றன.

இது யோகசாஸ்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கிறது.

ராகாதி தோஷத்தோடுகூடிய அந்தக்கரணம் க்ஷிப்தமாகவே இருக்கிறது. அந்த க்ஷிப்த அந்தக்கரணத்துக்கு யோகத்தில் அதிகாரமில்லை. ஆகையால் ராகாதிதோஷரூப கஷாயம் சமாதிக்கு * விக்கினமென்று சொல்வது பொருந்தாது.

* எந்தப்புருஷனுக்கு இராஜனிடத்துப் போகும் அதிகாரமிருக்கிறதோ, அவனை வாயில்காப்பவன் தடுத்தான் என்பது பொருந்தும். எவனுக்கு அங்குப் போவதற்கே அதிகாரமில்லையோ அவனை வாயில்காப்பவன் தடுத்தான் என்பது பொருந்தாது. அங்ஙனமே, க்ஷிப்த அந்தக்கரணத்திற்குச் சமாதியில் அதிகாரமுளதாயின் அதற்கு ராகாதி தோஷவடிவ கஷாயம் சமாதியின் விக்கினமாகும். எதனால் அந்த க்ஷிப்த அந்தக்கரணத்திற்குச் சமாதியில் அதிகாரமில்லையோ அதனால் அதற்கு ராகாதிதோஷ வடிவ கஷாயம் சமாதியின் விக்கினமாம் என்று இவ்வாறு கூறுதல் பொருந்தாது.

அங்ஙனமாயினும் இது சமாதானமாம்:—பாஹ்யமாகவாவது ஆந்தரமாகவாவதிருக்கும் *ராகாதிகள் க்ஷிப்த அந்தக்கரணத்திலேயே யுண்டாகின்றன. அந்த அந்தக்கரணத்துக்கு அதிகாரமுமில்லை. ஆயினும் அநேக ஜன்மங்களில் முன் அநுபவிக்கப்பட்ட பாஹ்ய ஆந்தர ராகத்துவேஷங்கள் எவையோ அவற்றின் சூக்ஷ்மசம்ஸ்காரம் விக்ஷிப்தாதி அந்தக்கரணத்திலும் சம்பவிக்கும். ஆதலால் ராகத்துவேஷங்களுக்குக் கஷாயமென்று பெயரில்லை. ஆனால் ராகத்துவேஷாதிகளின் சம்ஸ்காரத்துக்குக் † கஷாய மென்று பெயர். அந்தச் சமுஸ்காரம் அந்தக்கரணமிருக்கும்வரையில் நீங்குகிறதில்லை. ஆதலால் சமாதிகாலத்திலும் அந்தக்கரணத்தி லிருக்கிறது. ஆனால் ராகத்துவேஷாதிகளின் உற்பூதசமுஸ்காரம் (புலப்பட்டவாசனை) சமாதிக்கு விரோதமாம். அநுற்பூதம் (புலப்படாதது) விரோதியன்று.

வெளியானதை உற்பூதம் என்பர்.

வெளியாகாததனை அநுற்பூதம் என்பர்.

சமாதியில் பிரவிருத்தித்த யோகிக்கு ராகத்துவேஷங்களினது சம்ஸ்காரங்களின் வெளிப்படுந்தன்மையுண்டாமாயின் விஷயங்களில் தோஷதிருஷ்டியால் அதனை அழுத்திவிடவேண்டியது.

விக்ஷேபத்துக்கும் கஷாயத்துக்கும் இது பேதமாம்:—

(1) பாஹ்ய விஷயாகார விருத்திக்கு விக்ஷேபமென்று பெயர்.

---

* இங்கு இது பிரக்கிரியையாம்:—1. உத்தியுக்தம், 2. ஆசைவடிவினது, 3.வாசனை வடிவினது என்னும் பேதத்தால் ராகமுதலியன மூவகைத்தாம்.

1. பாசியப்பிரவிருத்திக்கு ஏதுவான ராகாதிகள் உத்தியுக்த மெனப்படுகின்றன. அவற்றையே பாஹ்யராகாதிகள் என்பர்.

2. மனோராஜ்ஜியவடிவ ராகாதிகள் ஆசைவடிவின வெனப்படுகின்றன. அவற்றையே ஆந்தரராகாதிகளென்றும் கூறுவர்.

3. ஜன்மாந்தரத்தில் முன் அநுபவிக்கப்பட்ட ராகாதிகளின் சம்ஸ்காரங்கள் வாசனைவடிவினவாம். அவற்றில் வாசனைவடிவம் உற்புத்த அநுற்புத்த பேதத்தால் இருவகையாம்.

இவ்வர்த்தத்தை ஜீவன்முக்திவிவேகமென்னும் நூலில் வித்தியாரணியசுவாமிகள் மூறியிருக்கின்றனர்.

† இதில் இது திருஷ்டாந்தமாம்:—இராஜாவைச் சந்திக்க வீட்டினின்றும் புறப்பட்ட ஓர் தனிகனை இராஜத்துவாரத்தில் விழித்திருக்கும் துவாரபாலகன் (வாயில்காப்பவன்) தடுத்துவிடுவதுபோலச் சகல விஷயங்களினின்றும் உபரதியடைந்த நிர்விகற்ப சமாதியின் ஆனந்தத்தின்பொருட்டு அந்தர்முகமாகிய யோகியின் மனதை இடையில் (சமாதியானந்தம் கிடைத்தற்குமுன்) உற்பூத ராகாதிகளின் சம்ஸ்காரவடிவ கஷாயம் தடுத்து விடுகிறது. ஆதலால் அது சமாதியின் விக்கினமாம்.

(2) யோகியின் பிரயத்தனத்தினால் எங்கு விருத்தி அந்தர்முகமாகியும் ராகாதிகளின் உற்பூத சமுஸ்காரத்தால் அந்தர்முகமான விருத்தியும் தகையப் பட்டுப் பிரஹ்மத்தை விஷயஞ்செய்கிறதில்லையோ அவ்விருத்தியினைக் கஷாய மென்பர். விஷயத்தில் தோஷத்தைப் பார்த்தலோடுகூடிய யோகியின் பிரயத் தனத்தினால் கஷாயவிக்கினம் நிவிருத்தியாகிறது.

472. 4. ரஸாஸ்வாதத்தின் பொருள் இதுவாம்:—யோகிக்குப் பிரஹ் மானந்தத்தின் அநுபவமுண்டாகிறது. விக்ஷேபரூப துக்கத்தின் நிவிருத்தி யின் அநுபவ முண்டாகிறது. சிலவிடத்துத் துக்கநிவிருத்தியினாலும் ஆநந்த முண்டாகிறது.

எங்ஙனம்:—சுமையைத் தூக்கும் புருஷனுக்குச் சுமையை இறக்குவதி னால் ஆனந்த முண்டாகிறது. அங்குண்டான ஆநந்தத்தில் வேறு விஷயம் காரணமன்று; சுமையாலுண்டான துக்கத்தின் நிவிருத்தியினால் "எனக்கு ஆநந்தமுண்டாயிருக்கிறது" என்று சொல்லுகிறான். ஆதலால் துக்கநிவிருத்தி யும் ஆனந்தத்துக்கு ஏதுவாம். அதுபோல் யோகிக்குச் சமாதியில் விக்ஷே பத்தாலுண்டான துக்கநிவிருத்தியினால் எந்த ஆநந்த முண்டாகிறதோ அதன் அநுபவத்துக்கு ரஸாஸ்வாதமென்று பெயர்.

இவ்வநுபவத்தினாலேயே யோகி திருப்தி யடைந்துவிட்டால் சகலமான உபாதிகளுமற்றப் பிரஹ்மானந்தாகாரவிருத்தி அவனுக்குண்டாகாமையால் அதன் அநுபவம் சமாதியில் உண்டாகாது. ஆதலால் துக்க நிவிருத்தியாலுண் டாகும் ஆநந்தத்தின் அநுபவரூப ரஸாஸ்வாதமும் சமாதியில் விக்கினமாகும்.

இச்சித்த பதார்த்தத்தின் அடைவின்றியும் விரோதியின் நிவிருத்தியால் ஆநந்த முண்டாகிறதென்பதற்கு வேறு திருஷ்டாந்தம்:—பூமியிற் புதையலிருக் கிறது. அது பொல்லாத விஷ சர்ப்பத்தால் காக்கப்பட்டிருக்கிறது. புதையலை எடுப்பதற்கு முன்னும் அதை யடைவதற்குத் தடையாயிருந்த சர்ப்பத்தை யொழிப்பதினாலாநந்த முண்டாகிறது. அங்குச் சர்ப்பநிவிருத்தியாலுண்டான ஆநந்தத்தில் ஒருவன் திருப்தியடைந்து, புதையலெடுக்கும் முயற்சியை விட்டுவிட்டால் புதையல் கிடைத்தலாலுண்டாகும் பரமானந்த முண்டாகாது. அதுபோல் அத்துவைதப்பிரஹ்மரூபம் புதையல். தேகாதியநாத்மபதார்த்தங் களின் பிரதிரூப விக்ஷேபம் சர்ப்பம். விக்ஷேபரூப சர்ப்பத்தின் நிவிருத்தி யால் உண்டாகும் அவாந்தர ஆநந்தரூபரஸத்தின் அநுபவம் ஆஸ்வாதனம். அது புதையல்வடிவ அத்துவைதப் பிரஹ்மத்தை யடைவதாலுண்டாகும் பரமாநந்தத்தின் அடைவிற்குத் தடையாயிருத்தலால் விக்கினமெனப்படுகிறது.

அல்லது ரஸாஸ்வாதத்திற்கு இது வேறு பொருளாம்:— ஸவிகற்ப சமாதிக்குப்பின் நிற்விகற்பசமாதி யுண்டாகிறது. சவிகற்பசமாதியில் திரிபுடி பிரதீதியாகிறது. ஆதலால் சவிகற்பசமாதியின் ஆநந்தம் திருபுடிரூப உபாதிசகிதமா யிருத்தலால் ஸோபாதிக மெனப்படுகிறது. நிர்விகற்பசமாதியில் திரிபுடி பிரதீதியாகிறதில்லை. ஆகையால் நிர்விகற்பசமாதியில் நிருபாதிக (உபாதியில்லாத) ஆநந்த முண்டாகிறது. இவ்விதத்தால் சவிகற்பசமாதிக்குப் பின்னும் நிர்விகற்பசமாதியின் ஆரம்பத்திலும் சவிகற்பசமாதியின் சோபாதிகானந்தம் விடமுடியாது அனுபவிக்கப்படுகிறது. அது ரஸாஸ்வாத மெனப்படும். ஆதலால் விக்ஷேபநிவிருத்தியாலுண்டாகும் ஆநந்தத்தின் அநுபவம் அல்லது சவிகற்பசமாதியினது ஆநந்தத்தின் அநுபவம் ரஸாஸ்வாத மெனப்படும். அவ்விருவித ரஸாஸ்வாதங்களும் நிர்விகற்ப சமாதியின் பரமானந்தாநுபவத்துக்கு விரோதிகளாதலால் விக்கினங்க ளாகின்றன. ஆதலால் ரஸாஸ்வாதத்தையும் தள்ளவேண்டும்.

இவ்விதமாக நிர்விகற்பசமாதியில் நான்கு விக்கினங்க ளிருக்கின்றன. அந்நான்கு விக்கினங்களும் சமாதியின் ஆரம்பத்தி லுண்டாகின்றன.

## 473. ஞானிக்குப் பாஹியப்பிரவிருத்தி சம்பவியாதென்னும் ஆக்ஷேபத்தின் சமாப்தி.

ஆதலால் சாவதானமாய் நான்கு விக்கினங்களையும் தடுத்துச் சமாதியில் பரமானந்தத்தை வித்துவான் அடைகிறான். அவனையே ஜீவன்முக்தனென்பர்.

இவ்விதத்தால் ஞானியின் சித்தம் நிராலம்பமாயிருக்கிறதில்லை. பிராரப்த பலத்தால் சமாதியினின்றும் எழுந்திருந்தாலும் அப்போதும் சமாதியில் அநுபவித்த பரமாநந்தத்தின் ஸ்மிருதி யுண்டாகிறது. ஆதலால் எழுந்த காலத்திலும் ஞானியின் சித்தம் நிராலம்பமா யில்லை.

போஜனாதிகளிலுண்டாகும் ஞானியின் பிரவிருத்தி கேவலம் பிராரப்தத்தா லுண்டாகிறது. ஆனால் போஜனாதி வியவகாரங்களில் ஞானி துக்கமிருக்கிறதாக நினைத்துப் பிரவிருத்திக்கிறான். ஏனெனில் போஜனாதிகளிற் பிரவிருத்தியும் சமாதிசுகத்திற்கு விரோதியாம். போஜனாதி சரீரநிர்வாகப் பிரவிருத்தியே எவனுக்குத் துக்கரூபமாய்ப் பிரதீதியாகிறதோ அவனுக்கு அதிகப் பிரவிருத்தி யுண்டாகிறதில்லை.

இவ்விதமாக அநேக ஆசாரியர்கள் இந்தப்பக்ஷத்தையே எழுதியிருக்கிறார்கள். ஜீவன்முக்தியின் ஆநந்தமும் பாஹியப் பிரவிருத்தியி லுண்டாகிற

இல்லை. ஆனால் நிவிருத்தியிலுண்டாகிறது. ஆகலால் ஜீவன்முக்தியின் சுகத்தை யிச்சிக்கிற ஞானிக்குப் பாஹியப்பிரவிருத்தி யுண்டாகிறதில்லை.

## (455-473-ல் நிகழ்ந்த ஆக்ஷேபத்தின் சமாதானம் 474-478)

### 474. ஞானி நிரங்குச (தடையற்றவ) னாயிருக்கிறான், பிராரப்தத்தால் வியவகாரம் சித்திக்கிறது எனல்.

* அங்ஙனமாயினும் ஞானிக்கு நிவிருத்தியிலும் நியமமிருப்பதாகச் சொல்லுவது பொருந்தாது. ஏனெனில் நிவிருத்தியிலாவது பிரவிருத்தியிலாவது வேதத்தின் ஆஞ்ஞாரூபவிதியோ ஞானிக்கில்லை. ஞானிக்கு வியவகாரத்தில் நியமமில்லாமையால் ஞானி நிரங்குசன். அவன் வியவகாரம் பிராரப்தத்தா லுண்டாகிறது.

1. எந்த ஞானியின் பிராரப்தம் பிக்ஷாபோஜனமாத்திர பலத்திற்கு ஏதுவாகிறதோ அவனுக்குப் பிக்ஷாபோஜனமாத்திரத்திற் பிரவிருத்தி யுண்டாகிறது.

2. எவன் பிராரப்தம் அதிக போகத்துக்கு ஏதுவாகிறதோ அவனுக்கு அதிகத்திலும் பிரவிருத்தி யுண்டாகிறது.

எவன் பிராரப்தம் பிக்ஷாபோஜனமாத்திரத்துக்கு ஹேதுவாகிறதோ அவனுக்குத்தான் ஞானமுண்டாகும். எவன் பிராரப்தம் அதிக வியவகாரத்துக்கு ஹேதுவாகிறதோ அவனுக்கு ஞான முண்டாகாது. ஆதலால் பிக்ஷாபோஜனாதி வியவகாரங்களைக் காட்டிலும் அதிக வியவகாரம் ஞானிக்குண்டாகாது. எவனுக்கு அதிகப்பிரவிருத்தி யிருக்கிறதோ அவன் ஞானியல்லன் என்று ஒருவன் சொல்லுவானாயின்,

அச்சங்கை பொருந்தாது. ஏனெனின், யாஞ்ஞவல்கியர் ஜனகாதிகள் ஞானிகளெனப்படுகிறார்கள். சபையில் ஜயமடைந்து தனத்தைச் சேர்க்கும் வியவகாரம் யாஞ்ஞவல்கியருக்கும் ராஜ்யபரிபாலன வியவகாரம் ஜனகருக்கும் சொல்லப்பட்டிருக்கின்றன. அன்றியும், வாசிஷ்டகிரந்தத்தில் அநேகஞானிகளின் வியவகாரம் அநேகவிதமாய்ச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால் ஞானியின் பிரவிருத்தியிலாவது நிவிருத்தியிலாவது நியமமில்லை.

யாஞ்ஞவல்கியர் சபையில் ஜயமடைந்தபிறகு † வித்வத்சந்நியாசரூப நிவிருத்தியைத் தரித்தார். அன்றியும் பிரவிருத்தியில் அருவருப்புக்கு ஹேதுவான அநேக தோஷங்களையும் சொல்லியிருக்கிறார். அங்ஙனமாயினும், யாஞ்ஞ

* இப்போது இங்கிருந்து நூலாசிரியர் முற்கூறிய ஞானிகளது நிவிருத்தியின் நியமத்தில் உண்டாகிய சங்கையின் சமாதானத்தைச் சொல்லுகின்றார்.

† இவ்வித்துவத்சந்யாசமுதலியவற்றின் லக்ஷணத்தை நாரதபரிவிராஜகோபநிஷத்து சூதசங்கிதை முதலியவற்றிற் காண்க.

வல்கியருக்கு வித்வத்சந்நியாஸத்துக்குமுன் ஞானமிருந்ததில்லை யென்று சொல்லுதல் பொருந்தாது. ஆனால் ஞானமோ முன்னும் இருந்தது. ஆனால் வித்வத்சந்நியாசத்துக்கு முன் ஜீவன்முக்தியின் ஆநந்தம் அடையப்படவில்லை. ஆதலால் ஜீவன்முக்தியின் ஆனந்தத்தை யடைவதற்காகச் சேர்த்துவைத்ததையெல்லாம் தியாகம் பண்ணிவிட்டார். யாஞ்ஞவல்கியருடைய பிராரப்தம் சிறிதுகாலம் அதிகபோகத்துக்கு ஏதுவாயிருந்தது. பிற்காலம் சொற்ப போகத்துக்கு ஏதுவாயிருந்தது. ஆதலால் முதலிலோ யாஞ்ஞவல்கியருக்கு அருவருப்பில்லாத அதிகபோகமும் பின் அருவருப்பால் சர்வபோகத்தியாகமும் உண்டாயின.

1. ஜனகருடைய பிராரப்தம் மரணபரியந்தம் ராஜ்யபரிபாலனாதி விசேஷ போகத்துக்கு ஹேதுவாயிருந்தது. ஆதலால் எப்போதும் தியாகமே சம்பவிக்கவில்லை. போகத்தில் அருவருப்பும் அவருக்குண்டாகவில்லை.

2. வாமதேவாதிகளுடைய பிராரப்தம் சொற்பபோகத்துக்கு ஹேதுவாயிருந்தது. போகத்தில் அருவருப்பு அவர்களுக்கு எப்போதும் இருந்தபடியால் பிரவிருத்தியின் அபாவமே சொல்லப்பட்டிருக்கிறது.

3. சிகித்துவஜனுக்கு ஞானத்துக்குப் பிறகு அதிகப்பிரவிருத்தி யுண்டாயிருக்கிறதாக வாசிஷ்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்விதமாக ஞானிகளுக்கு அநேகவிதமான விலக்ஷணவியவகாரங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவர்கள் எல்லோருக்கும் * ஞானம் சமானமாம்:—அதன் பயனாகிய மோக்ஷமும் சமமே. பிராரப்தபேதத்தால் வியவ

* ஞானம் எல்லோருக்கும் சமம் என்பதில் அடியிற்கண்ட சுலோகத்தைச் சொல்லுவார்கள்.

"𑌕𑍃𑌷𑍍𑌣𑍋 𑌭𑍋𑌗𑍀 𑌶𑍁𑌕𑌸𑍍𑌤𑍍𑌯𑌾𑌗𑍀 𑌰𑌾𑌜𑌾𑌨𑍌 𑌜𑌨𑌕𑌰𑌾𑌘𑌵𑍌 ।
𑌵𑌸𑌿𑌷𑍍𑌠𑌃 𑌕𑌰𑍍𑌮𑌕𑌰𑍍𑌤𑌾 𑌚 𑌤 𑌏𑌤𑍇 𑌜𑍍𑌞𑌾𑌨𑌿𑌨𑌃 𑌸𑌮𑌾𑌃 ॥"

"கிருஷ்ணோபோகீ சுகஸ்தியாகீ ராஜாநௌ ஜநகராகவௌ
வசிஷ்ட கர்மகர்த்தாச த ஏதே ஞாநிநஃ ஸமாஃ" இதன் அர்த்தம்:—

1. கிருஷ்ணன் போகி,
2. சுகர் தியாகி,
3. ஜநகரும் ராயரும் இராஜாக்கள்,
4. வசிஷ்டர் கர்மகர்த்தா.

இவ்விதமாக இவர்களுடைய பிராரப்தபேதத்தால் வியவஹாரம் வெவ்வேறாக இருந்தாலும், ஞானவிஷயத்தில் அவர்களும் இவர் (இக்காலத்தவர்)களுமாகிய ஞானிகள் சமானமாயிருக்கிறார்கள். இது சம்பிரதாயமாய் வழங்கும் சுலோகத்தின் பொருளாம். கூறிய அர்த்தம் சித்திரதீபத்திலும் "பிராரப்தகர்மம் நாநாவாயிருத்தலால் ஞானிகளின் நடையும் வேறுவேறுவிதமாக (ஒன்றற்கொன்று விலக்ஷணமாய்) இருக்கிறது. அதனால் பண்டிதர்கள் திடஞானத்தால் மோக்ஷத்தைப் பிரதிபாதிக்கும் சாஸ்திரத்தின் அர்த்தத்தில் மயக்கமுடையவராகுதல் தகுதியன்று. அந்தஞானிகள் தத்தம் கர்மங்களின் அநுசாரமாக எப்படியோ அப்படி (விலக்ஷணமாய்) இருத்தலைச்செய்க. எல்லோருக்கும் ஞானம் சமமாம் முக்தியும் சமானமாம் என்பது ஸ்திதியாம் (சாஸ்திர வித்வான்களது நிச்சயமாம்.)

காரம் பேதப்படுகிறது. வியவகாரம் குறைவதால் ஜீவன்முக்தியின்சுகம் அதிகப்படுகிறது. வியவகாரம் அதிகரித்தால் ஜீவன்முக்தியின் சுகம் குறைகிறது.

## 475. ஞானிக்கு விதேகமோக்ஷத்தியாகமும் பரலோகத்தின் இச்சையுமுண்டாகிறதில்லை எனல்.

இதிற் சிலர் இவ்வாறு * சங்கிக்கின்றனர்:—ஜீவன்முக்தியின் சுகத்தை விட்டுத் துச்சமான போகத்திற் பிரவிருத்திக்கிறவன் விதேகமோக்ஷத்தையும் விட்டு வைகுண்டாதி லோகங்களை யிச்சித்து அந்த லோகங்களுக்குப் போவான்.

அந்தச் சங்கை பொருந்தாது. ஏனெனின்,

1. ஜீவன்முக்திசுகத்தின் தியாகமும் போகத்திற் பிரவிருத்தியும் ஞானியின் பிராரப்த பலத்தால் சம்பவிக்கின்றன.

2. விதேகமோக்ஷத்தியாகமும் பரலோககமனமும் சம்பவிக்கிறதில்லை. ஏனெனின்,

1. ஞானியின் பிராணன் வெளியிற் போகிறதில்லை. ஆதலால் பரலோககமனம் சம்பவிக்கிறதில்லை.

2. விதேகமோக்ஷத்தியாகமும் சம்பவிக்கிறதில்லை. ஏனெனின், ஞானத்தால் அஞ்ஞானம் நிவிருத்தியாகிப் பிராரப்தபோகத்துக்குப் பின் ஸ்தூல சூக்ஷ்ம சரீராகாரமான அஞ்ஞானம் சேதனத்தில் லயமாதலை விதேகமோக்ஷமென்பர். அது அவசிய முண்டாகிறது. மூலாஞ்ஞானம் எஞ்சியிருந்தாலாவது நிவிருத்தியான அஞ்ஞானம் மறுபடியும் உண்டானாலாவது விதேக மோக்ஷம் சித்தியாது. அந்த மூலாஞ்ஞானத்துக்கு விரோதியான ஞானமுண்டாகவே அஞ்ஞானம் மிஞ்சியிராது. பிரமாணத்தால் நாசமான அஞ்ஞானம் மறுபடியும் உண்டாகாது. ஆதலால் விதேகமோக்ஷத்தின் அபாவமுண்டாகாது.

3. விதேகமோக்ஷத்தியாகத்திலும் பரலோககமனத்திலும் ஞானியின் இச்சையு முண்டாகாது. எனெனின்,

(1) ஞானிக்கு இச்சை கேவலம் பிராரப்தத்தாலுண்டாகின்றது. எவ்வளவு சாமக்கிரிகளின்றிப் பிராரப்தபோக முண்டாகாதோ, அவ்வளவு சாமக்கிரிகளைப் பிராரப்தம் உண்டாக்குகிறது. இச்சையின்றிப் போகமுண்டாகாது. ஆதலால் ஞானியினிச்சையும் பிராரப்தத்தின் பலனும்.

* இச்சங்கை த்வைதவிவேகத்தில் வித்தியாரண்யஸ்வாமிகளால் எழுதப்பட்டிருக்கிறது.

(2) அந்நியலோகத்திலாவது அல்லது இந்தலோகத்திலாவது அன்னிய சரீரத்தின் சம்பந்தம் ஞானிக்குப் பிராரப்தத்தாலும் உண்டாகிறதில்லை யென்பது முன் இந்தத் தரங்கத்திலேயே பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது.

ஆதலால் ஞானிக்குப் பிராரப்தத்தால் விதேகமோக்ஷத்தியாகத்திலாவது அல்லது பரலோககமனத்திலாவது * இச்சை யுண்டாகிறதில்லை.

---

* துவைத விவேகத்தில் முற்கூறிய சங்கைவடிவ தர்க்கத்தின் கர்த்தாவாகிய ஸ்ரீ வித்தியாரணிய சுவாமிகளுக்கு "மந்தப் பிராரப்தத்தால் போகமுதலியவற்றில் பிரவிருத்தித்த ஞானிக்கு விதேகமோக்ஷத்தின் தியாகத்திலும் பரலோகத்தின் கமனத்திலும் இச்சையுண்டாகும்" என்னும் அர்த்தத்தில் அபிப்பிராயமில்லை. ஆனால் பிரயத்தினமில்லாத ஞானிகளுக்கு இஷ்டப்படி நடத்தலுக்கு எதுவான போகாதிகளின் ஆசையை விடுவித்து ஜீவன்முத்தியின் சுகத்தில் ஆசை யுண்டாக்குவதில் அபிப்பிராயமாம். ரோகத்தை யுண்டாக்கும் பதார்த்தத்தை யுண்ணும் புத்திரனுக்கு மிக்க இதத்தை விரும்பும் அவன் தாய் "அப்பா! நீ ஆரோக்கியத்தின் இச்சையைவிட்டுப் பார்த்தல் மாத்திரத்தில் அழகாயிருக்கும் இந்த ரோகமுடைய பதார்த்தங்களை விவேகமிழந்து புசிப்பாயானால், அப்போது வஞ்சகர்களாற் செய்யப்பட்ட விஷங்கலந்த இலட்டுகத்தைப் புசிக்கும் விருப்பால் நீ ஜீவித்திருக்கும் இச்சையையும் இழப்பாய்" என்று சொல்லுகிறாள். இவ்வாறு சொல்லும் தாய்க்குப் புத்திரன் உயிரிழத்தலிலும் விஷங்கலந்த இலட்டுகத்தைப் புசிக்கவேண்டு மென்பதிலும் அபிப்பிராயமின்று. ஆனால் தர்க்கத்தால் ரோகத்திற்கு எதுவான ரோகமுண்டாக்கும் பதார்த்தங்களைச் சாப்பிடும் ஆசையை நீக்குதலிலும் ரோகமில்லாதிருந்தலில் ஆசையுண்டாக்குதலிலும் தாற்பரியமாம்.

அதுபோல வித்தியாரணிய சுவாமிகளுக்கும் "விவேகத்தை விட்டு (உபேக்ஷித்து) மந்தப்பிராரப்தத்தின் பலத்தில் சகாயமாயுள்ள வாசனையினலாவது அல்லது கேவல வாசனையினலாவது விக்ஷேபத்திற்கு எதுவான காமாதிகளின் பாவசத்தன்மைவடிவ பிரமாதத்தையடைந்த ஞானிக்கு ஜீவன்முக்திவடிவ ஜீவனத்தை விடுதலிலும் பரலோகத்தின் போகத்திலும் இச்சையுண்டாகும்" என்னும் அர்த்தத்தில் அபிப்பிராயமன்று. ஆனால் அநிஷ்டத்தைச் சம்பாதித்தல்வடிவ தர்க்கத்தால் அவனுக்கு இஷ்டப்படி நடத்தல்வடிவ ரோகத்திற்கு எதுவான போகத்திற் பிரவிருத்தித்தலை ஒழித்து ஜீவன்முக்தியின் விலக்ஷணசுகவடிவ ஆரோக்கியத்தில் ஆசையுடையவனுக்குவதில் அபிப்பிராயமாம்.

அன்றியும், திடஞானமுடையவன் மோக்ஷத்தின் இச்சையில்லாதவனாயிருந்தாலும் முக்தனாகின்றான் என்னும் அர்த்தத்தில் பாஷியகாரர் வசனம் பிரமாணமாம்:—'அஞ்ஞானிக்குத் தேகத்தில் ஆத்மபுத்தியிருப்பதுபோல எவனுக்குத் தேகத்தில் ஆத்மஞானத்தைக் கெடுக்கும் ஞானம் பிரஹ்மத்திற்கு வேறாகாத ஆத்மாவில் உண்டாகிறதோ, அவன் விருக்ஷத்தினின்றும் நழுவிய கையையுடைய நரனைப்போல இச்சியாதிருந்தும் முக்தனாகின்றான்."

சொப்பனத்தினின்று விழித்த புருஷனுக்குச் சொப்பனப்பிராந்தியின் நீக்கத்தை விடுதலினும் சொப்பனத்திலுள்ள பரலோகத்திற் செல்லுதலிலும் இச்சை சம்பவியாததுபோல, ஞானிக்குப் பந்தப்பிராந்தியினீக்கமாகிய விதேகமோக்ஷத்தை விடுதலிலும் சொர்க்கமுதலிய பரலோகத்திற் செல்லுதலிலும் இச்சை சம்பவியாது.

## 476. ஞானிக்கு மந்தப்பிராரப்தத்தால் ஜீவன்முக்தி சுகத்தின் விரோதியான பிரவிருத்தியுண்டாதல்.

ஜீவன்முக்திசுகத்துக்கு விரோதியான வர்த்தமான சரீரத்திலுள்ள அதிக போகத்தின் இச்சையோ பிக்ஷாபோஜனாதிகளிற்போல் ஜனகாதிகளுக்குச் சம்பவிக்கிறது.

இந்தவிடத்தில் இது இரகசியமாம்:—ஞானியின் பாஹ்யப்பிரவிருத்தி ஜீவன்முக்திக்கு விரோதியன்று. ஆனால் ஜீவன்முக்தியின் விலக்ஷணசுகத்துக்கு விரோதியாம். ஏனெனின், ஆத்மா நித்தியமுக்தமாம்; அவித்தையினால் அதற்குப் பந்தம் பிரதீதியாகிறது எந்தக்காலத்தில் ஞானமுண்டாகிறதோ அந்தக்காலத்திலேயே அவித்தையாலுண்டான பந்தப்பிரமம் நிவிருத்தியாகிறது. ஞானமுண்டானபின் பந்தப்பிராந்தி யுண்டாகிறதில்லை. சரீரத்தோடு கூடியிருப்பவனுக்கு பந்தப்பிராந்தி இல்லாமையே ஜீவன்முக்தியென்று சொல்லப்படும். தேகாதிகளின் பிரவிருத்தியிலும் நிவிருத்தியிலும் ஞானிக்கு ஆத்மாவினிடத்தில் பந்தப்பிராந்தி யுண்டாகிறதில்லை. ஆதலால் பாஹ்யப்பிரவிருத்தியாலும் ஜீவன்முக்தி நிவிருத்தியாகிறதில்லை. அங்ஙனமாயினும் பாஹ்யப்பிரவிருத்தியில் ஜீவன்முக்தனுக்கு விலக்ஷணசுகமுண்டாகிறதில்லை. ஏகாக்கிரத்தன்மைவடிவ அந்தக்கரணபரிணாமத்தினால் சுகமுண்டாகிறது. அந்த ஏகாக்கிரத்தன்மையாகிய பரிணாமம் பாஹ்யவிருத்தியிலுண்டாகிறதில்லை.

இவ்விதமாகப் பிராரப்தபேதத்தால் ஞானிகளின் வியவகாரம் அநேகவிதமாயிருக்கிறது. ஆனால் எவனுடைய பிராரப்தம் அதிகப் பிரவிருத்திக்கு ஹேதுவாயிருக்கிறதோ அவனுடையது * மந்தப்பிராரப்தமெனப்படுகிறது. ஏனெனின் அதிகப்பிரவிருத்தி ஏகாக்கிரத்தன்மைக்கு விரோதியாயிருக்கிறது. ஏகாக்கிரத்தன்மையின்றி நிருபாதிகாநந்தம் பிரதீதியாகிறதில்லை. இது சமாதிநிரூபணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

---

* சகலப்பிருதிவியின் இராஜ்ஜியத்தையுமடைந்த புருஷனுக்கு வியாதிக்குக் காரணமான பிராரப்தகர்மம் விரோதியாயிருத்தலால் மந்தமெனப்படுகின்றது. அதுபோல அவித்தையும் அதன் காரியமுமாகிய சத்துருக்களைச் சங்கரித்துப் பிரஹ்மத்தின் தன்மையையடைந்த ஞானிக்கு அதிகப்பிரவிருத்திக்குக் காரணமான பிராரப்தம் ஏகாக்கிரத்தன்மைக்கு விரோதியாயிருத்தலால் மந்தமெனப்படுகிறது.

இங்கு மந்தமென்னும் பதத்திற்குத் தாழ்ந்ததென்பது பொருளாம். சிதைந்ததென்பது பொருளன்று. ஏனெனின் முற்கூறிய அரசன் தளர்ந்த பிராரத்தத்தாற்றோன்றிய அல்லது கஷ்டசாத்தியமான ரோகத்தினை மருந்துமுதலிய பிரயத்தினத்தால் நிவிருத்தி செய்கிறான். ஆனால் தீவிரதரபிராரத்தத்தாற் றோன்றிய அசாத்திய ரோகத்தினை நிவர்த்தித்தல் அவனாற் கூடாததாம். அதுபோலச் சிதைந்த பிராரத்தத்தின் பயன்வடிவப் பிரவிருத்தியினையோ ஞானி ஜீவன்முக்தியினது சுகத்தின்பொருட்டு வாசனையை (ராகத்துவேஷத்தினை) நீக்குதலாகிய பிரயத்தினத்தால் நீக்குகிறான்; ஆனால் தீவிரதரபிராரப்தத்தின் பயன்வடிவப் பிரவிருத்தியானது அதனால் நீக்கக்கூடாததாயிருக்கிறது. இவ்வாறு விவஸ்தையைச் செய்யப் பிராரப்தமும் புருஷகாரமுமாகிய இரண்டும் பயனுடையனவாம். ஆதலால் அதிகப் பிரவிருத்திக்குக் காரணமான பிராரப்தம் சிதைந்ததன்று; ஆனால் தாழ்ந்ததாம். இதனால் அது மந்தமெனப்படுகின்றது.

**477.** ஞானியின் வியவகாரத்திற்கு நியமமில்லாமை. **477-478.**

"ஞானிக்குச் சகல அநாத்மபதார்த்தங்களிலும் மித்தியாபுத்தியுண்டாகிறது. அவனுக்கு ராகமுண்டாகிறதில்லை. ஆதலால் பிரவிருத்தி சம்பவியாது" என்று * முன் சொல்லப்பட்டது. அச்சங்கையும் பொருந்தாது. ஏனெனின்,

எப்படித் தேகத்தில் மித்தியாபுத்தி ஞானிக்கு இருந்தாலும் தேகத்துக்கு அநுகூலமான பிக்ஷாதிகளில் கேவலம் பிராரப்தத்தால் பிரவிருத்தியுண்டாகிறதோ, அப்படியே எந்தஞானிக்கு அதிக போகத்தின்பொருட்டுப் பிராரப்த மிருக்கிறதோ அந்த ஞானிக்கு அதிகப்பிரவிருத்தியு முண்டாகிறது.

எப்படி வித்தையாடியின் வேடிக்கையை மித்தையென்றறிந்து அதைப் பார்க்க எல்லா ஜனங்களும் பிரவிருத்திக்கிறார்களோ, அப்படி ஸர்வபதார்த்தங்களிலும் ஞானிக்கு மித்தியாபுத்தியிருந்தும் பிரவிருத்தி யுண்டாகிறது.

**478.** "எவனுக்கு எந்தப் பதார்த்தத்தில் தோஷதிருஷ்டியிருக்கிறதோ அவனுக்கு அந்தப்பதார்த்தத்தில் பிரவிருத்தியுண்டாகாது. ஞானிக்குஅநாத்ம பதார்த்தத்தில் தோஷதிருஷ்டியிருக்கிறது. அவனுக்கு ராகமில்லை. ஆதலால் பிரவிருத்தியுண்டாகாது" என்று சொல்லும்பக்ஷத்தில்,

அதுவும் பொருந்தாது. ஏனெனின், எந்த அபத்தியஞ் செய்வதால் ரோகியால் அந்வயவியதிரேகங்களால் தோஷமிருப்பதாக நிச்சயிக்கப்பட்டிருக்கிறதோ அந்த அபத்தியஞ்செய்வதில் பிராரப்தத்தால் ரோகிக்குப் பிரவிருத்தியுண்டாகிறதுபோல், † பிராரப்தத்தால் ஞானிக்குச் சர்வவியவகாரங்

---

* முன் ஆறாவது தரங்கத்தின் 406-வது பிரசங்கத்திற் சொல்லப்பட்டிருக்கிறது.

† இங்கு இது விவேகமாம்:—1. மந்தம், 2. தீவிரம், 3. தீவிரதரம் என்னும் பேதத்தால் பிராரப்தகர்மம் மூன்றுவகையாம்.

1. எதன் உபாதேய (கொள்ளத்தக்க) பலம் பிக்ஷையன்னத்தைப்போல அதிகப் பிரயத்தினத்தால் கிடைக்கிறதோ, எதன் அகஸ்மாத்தாகக்கிடைத்த ஹேய (தள்ளத்தக்க) பலம் செவ்வையாய்ச் சாதிக்கத்தக்க ரோகத்தினைப்போல அற்பப் பிரயத்தினத்தால் நிவிருத்தியாகிறதோ அப்படிப்பட்ட பிராரப்தம் மந்தப்பிராரப்த மெனப்படும்.

2. எதனது உபாதேயபலம் விருந்து அன்னத்தைப்போல அற்பப் பிரயத்தினத்தால் கிடைக்கின்றதோ, எதனது அகஸ்மாத்தாகக் கிடைத்த ஹேயபலம் கஷ்டத்தாற் சாதிக்கத்தக்க பலத்தைப்போல அதிகப்பிரயத்தினத்தால் நிவிருத்தியாகிறதோ, இத்தன்மைய பிராரப்தம் தீவிரபிராரப்தமாம்.

3. எதனது உபாதேயபலம் ஆசனத்தில் (உட்கார்ந்திருக்குமிடத்தில்) கிடைத்த அன்னத்தினைப்போலப் பிரயத்தினமில்லாமல் தானே கிடைக்கிறதோ, எதனது பலாற்காரமாகக் கிடைத்த ஹேயபலம் எருதின் காயத்தைப்போல மரணபரியந்த முயற்சியினும் நீங்காதோ இத்தன்மைய பிராரப்தமானது தீவிரதரபிராரப்தமாம்.

களிலும் பிரவிருத்தித்தல் தோஷதிருஷ்டியிருந்தும் சம்பவிக்கிறது. இவ்விதத்தால் ஞானியின் வியவகாரத்துக்கு * நியமமில்லை.

---

இவ்வாறு மந்தமும் தீவிரமுமாகிய பிராரப்தத்தின் பலம் பிரயத்தினத்தின் வசத்ததாம். அந்தப்பிரயத்தினத்திற்கு ஹேது சுபாசுபவாசனையாம். அந்த வாசனையின் நிவிருத்தியும் புருஷப் பிரயத்தனத்தால் உண்டாகிறது. அவற்றுள்,

1. சுபவாசனையின் நிவிருத்தி துற்சங்கமுதலிய முயற்சியால் உண்டாகிறது.

2. அசுபவாசனையின் நிவிருத்தி சற்சங்கம் விவேகஞான முதலியவற்றா லுண்டாகிறது.

எதனால் ஞானி சற்சங்கம் விவேகஞானமுதலியவற்றோடு கூடியவனா யிருக்கிறானோ, அதனால் அவனுடைய சித்தத்தில் அசுபப்பிரவிருத்திக்கு ஏதுவான எவ்வித அசுபவாசனையுமில்லை. ஆனால் சுபப்பிரவிருத்திக்கு ஏதுவான சுபவாசனையே யிருக்கிறது. அதனால் அந்த ஞானியின் மந்தமும் தீவிரமுமான பிராரப்தங்களின் நிஷித்த பலத்தில் விதிநிஷேதத்தாற் றோன்றிய குணதோஷ புத்தியில்லாதிருக்கவும் சுபவாசனைவடிவ சுபாவத்தினாலேயே வெறிகொண்ட வைஷ்ணவனைப்போலவும் பிராஹ்மணர் முதலியோரது குழந்தையினைப் போலவும் பிரவிருத்தி சம்பவியாது; நிவிருத்தியே சம்பவிக்கின்றது.

ரோகிக்கு அந்வயவியதிரேகங்களால் தோஷம் நிச்சயிக்கப்படினும் அபத்தியத்தைக் கொள்ளுதலில் எந்தப் பிரவிருத்தி யுண்டாகின்றதோ, அது பிரயத்தினசீல ரோகிக்கு உண்டாகிறதில்லை. ஆனால் நாச்சுவையுள்ள பிரயத்தினமில்லாத ரோகிக்கு அபத்திய சேவனத்தில் பிரவிருத்தி யுண்டாகின்றது. சில பிரயத்தினசீல ரோகிகளுக்கும் அபத்தியத்தைக் கொள்ளுதலிற் பிரவிருத்தி யுண்டாகின்றது. அது தீவிரதரபிராரப்தத்தின் பயனாம்.

இவ்வாற்றால் தோஷநிச்சயவடிவமும் மித்தியாத்தன்மைநிச்சயவடிவமுமாகிய திடவிவேகத்தோடு கூடிய ஞானியின் மந்த அல்லது தீவிர பிராரப்தத்தின் பலவடிவ இஷ்டப்படி நடத்தலாகிய நிஷித்தப்பிரவிருத்தி சம்பவிக்கிறதில்லை.

**பிராரப்தபக்தர்கள்** பிராரப்தத்தின் பயன் முற்றும் நீக்கத்தகாததாகலின் புருஷப்பிரயத்தனம் வியர்த்தமாம் என்று **கூறுவாராயின் அவ்வாறு கூறுதல் பொருந்தாது.** எனெனின், இவ்வாறிருக்குமானால் சர்வஞ்ஞர்களால் ஆக்கப்பட்ட வைத்தியசாஸ்திரம் மந்திரசாஸ்திரம் யோகசாஸ்திரம் முதலிய உபாயங்களை அறிவிக்கும் சாஸ்திரங்கள் வியர்த்தமாகும். திருஷ்டபலத்திற்கு ஏதுவாகிய உபாயங்களை அறிவிக்கும் அச்சாஸ்திரங்களை வியர்த்தமென்று கூறுதல் பொருந்தாது. இவ்விவஸ்தையால் பிராரப்தமும் புருஷகாரமுமாகிய இரண்டும் சபலமாகின்றன. இது வாசிஷ்டமுதலிய உத்தம நூல்களின் மதமாம்.

இங்குச் சில அதிகவிசாரமுண்டு. அதனைப் பாலபோதமுதலியவற்றில் காட்டியிருத்தலால் இங்குப் பிரசங்கத்தால் தன்மைமாத்திரம் அறிவிக்கப்பட்டது.

* இங்கு இது அபிப்பிராயமாம்:—சுவாதீனகாரியத்தில் நியமமுண்டாகின்றது. பராதீனகாரியத்தில் நியமம் சம்பவியாது. எதனால் ஞானிகளது சரீரங்களின் வியவகாரம் நானாப்பிராரப்தத்தின் அதீனமாயிருக்கின்றதோ, அதனால் கையினின்றும் விடுபட்ட பாணம் வேகத்தின் அதீனமாய்ப் பசுவைத்துளைப்பதுபோலப் பிராரப்தத்தின் அதீனமான ஞானியினது தேகத்தின் வியவகாரத்திற்கு நியமம் சம்பவியாது.

ராகமுதலிய வாசனைகளைத் தடுத்துச் சுவாதீனசித்தமுடைய சில ஞானிகள் மந்த அல்லது தீவிர பிராரப்தத்தின் பயனாகிய சரீரத்தின் வியவகாரத்தை நியமமாகவே வைக்கின்றார்கள். அங்ஙனமாயினும், தீவிரதரபிராரப்தத்தின் பயனாகிய சரீரத்தின் வியவகாரத்தினது நியமம் ஞானியினாலுமாகாது.

இந்தப்பக்ஷம் விஸ்தாரமாய்த்* திருப்திதீபிகையில் வித்தியாரண்யஸ்வாமிகளாற் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் தத்துவதிருஷ்டியின் வியவகாரம் நியமமில்லாமலிருக்கிறது. சமாதிரூப நியமவிதியைக்கேட்டுத் தத்துவதிருஷ்டி சிரிக்கிறான்.

## 479. தத்துவதிருஷ்டியின் தேசாதி அபேக்ஷையில்லாத தேகவீழ்வு 479–480.

இவ்வாறு சிறிதுகாலஞ் சஞ்சாரஞ்செய்து நல்ல ஞானமடைந்த தத்துவதிருஷ்டியானவன் பிராரப்தபோகங்களை யனுபவித்தான். பிறகு அவன் பிராணன் அவ்விடத்திலேயே லீனமாய்விட்டது.

1. பிராரப்தபோகத்துக்குப் பிறகு ஞானியின் பிராணனுக்குக் கமனமில்லாததினால் தத்துவதிருஷ்டியின் பிராணன் லீனமானதென்று சொல்லப்பட்டது.

2. ஞானி சரீரத்தைவிடுவதில் காலவிசேஷங்களின் அபேக்ஷையில்லை. உத்தராயணத்திலாவது தக்ஷிணாயனத்திலாவது சரீரத்தை விடக்கூடும். எவ்விதத்தினாலும் அவன் முக்தனே.

3. அப்படியே தேசவிசேஷத்தின் அபேக்ஷையுமில்லை. காசிமுதலிய புண்ணிய தேசங்களிலாவது அல்லது அத்தியந்தம் மலின (பாவ) க்ஷேத்திரங்களிலாவது ஞானி தேகத்தை விடக்கூடும். எவ்விதத்தினாலும் அவன் † முக்தனே.

4. அப்படியே ஆஸனவிசேஷங்களின் அபேக்ஷையுமில்லை. பூமியில் சவாசனத்திலிருந்துகொண்டாவது சித்தாசனத்திலிருந்துகொண்டாவது சரீரத்தை விடக்கூடும்.

---

* ஞானிக்குப் பிரீதியின்றிப் பிராரத்தபோகம் உண்டாகின்றது. அந்தப் பிராரத்தம் இச்சை அநிச்சை பரயிச்சை எனும் பேதத்தால் மூன்றுவகையாம் என்னும் அர்த்தத்தை ஸ்ரீ வித்தியாரண்யசுவாமிகள் திருப்திதீபத்தில் 143 முதல் 162-வது சுலோகபரியந்தம் எழுதியிருக்கின்றார்கள். அதனை அறியவிருப்பமுள்ளவர்கள் அங்குக் கண்டுகொள்க; விஸ்தாரபயத்தினால் இங்கு எழுதவில்லை.

† இங்கு இது சம்பிரதாயத்தையநுசரித்த வாக்கியமாம்:—"ஞானியின் தேகம் காசியில் விழுக அல்லது சண்டாளனது வீட்டில் விழுக. ஆனால் ஞானமடையுங்காலத்தில் பந்தப்பிராந்தி நீங்குதலால் அந்த ஞானி எல்லாவிதத்தாலும் முக்தனே."

5. அப்படியே சாவதானமாய்ப் பிரஹ்மசிந்தனை செய்துகொண்டாவது ரோகத்தினால் வியாகூலத்தையடைந்து ஐயோ ஐயோவென்றலறிக்கொண்டாவது தேகத்தை விடக்கூடும். எவ்விதத்தினாலும் முக்தனே. ஏனெனின் எந்தக்காலத்தில் ஞானத்தால் அஞ்ஞானம் நிவிருத்தியாயிற்றோ அந்தக்காலத்திலேயே ஞானி * முக்தனாய்விட்டான்.

ஆதலால் ஞானிக்கு விதேகமோக்ஷத்தில் தேசகால ஆஸனாதிகளின் அபேக்ஷையில்லை.

எப்படி ஞானிக்குத் தேகவியோகத்தில் தேசகாலாதிகளின் அபேக்ஷையில்லையோ அப்படியே ஞானத்தின் நிமித்தமான சிரவணத்திலும் தேசகால ஆஸனாதிகளின் அபேக்ஷையில்லை.

**480.** உபாஸகனுக்குத் தேசகாலாதிகளின் அபேக்ஷையுண்டு. பீஷ்மாதிகள் ஞானிகளாகச் சொல்லப்படுகிறார்கள். பீஷ்மர் உத்தராயணத்திலல்லாமல் பிராணத்தியாகம் செய்யவில்லை. அங்ஙனமாயினும் பீஷ்மாதிகள் அதிகாரிபுருஷர்களாம். ஆதலால் உபாஸகர்களுடைய உபதேசத்தின்பொருட்டு அவர்கள் காலவிசேஷத்தை யபேக்ஷித்தார்கள்.

வசிஷ்டர் பீஷ்மர் முதலியோர் அதிகாரிகளா யிருந்தபடியால் அவர்களுக்கு அநேக ஜன்மங்கள் உண்டாயின. ஏனெனின், அதிகாரிபுருஷனுக்கு ஒரு கற்பபரியந்தம் பிராரப்த மிருக்கின்றது. கற்பம் முடிந்தாலல்லது விதேகமோக்ஷ முண்டாகிறதில்லை. கற்பத்துக்குள்ளேயே அவர்களுக்கு இச்சையின் வலியால் அநேகசரீரங்க ளுண்டாகின்றன. அங்ஙனமாயினும் ஆத்மஸ்வரூபத்தில் அவர்களுக்கு ஜனனமரணப் பிராந்தியுண்டாகிறதில்லை. ஆதலால் அவர்கள் ஜீவன்முக்தர்கள். இந்த அதிகாரிபுருஷர்களின் வியவகாரம் முழுவதும் பிறருடைய உபதேசநிமித்தமேயாம். ஞானிகளின் வியவகாரத்தில் வேறு யாதொரு நியமமுமில்லை. இந்த அபிப்பிராயத்தால் தத்துவதிருஷ்டியின் தேகவியோகத்தில் தேச கால ஆசனாதிகள் ஒன்றுஞ் சொல்லப்படவில்லை.

## 481. அதிருஷ்டியின் தேசாதி அபேக்ஷையோடு கூடிய தேகவீழ்ச்சி.

இரண்டாவது சிஷ்யனாகிய அதிருஷ்டியானவன் அக்கங்கைக்கரையை சுபஸ்தானமாகக்கொண்டு ஏகாந்தமும் பவித்திரமுமான இடத்தில் பிரஹ்மத்தியானம் செய்து சாஸ்திரப்படி தேகத்தைவிட்டு முற்கூறிய மார்க்கமாய்ச் சென்று பிரஹ்மத்தையடைந்து அதிக ஆநந்தத்தை யடைந்தான்.

* இந்த அர்த்தத்தை வித்தியாரண்யஸ்வாமிகளும் பூதவிவேகத்தின் முடிவில் எழுதியிருக்கின்றார்கள்.

எப்படி ஞானிக்குத் தேசகாலங்களின் அபேக்ஷையில்லையோ அப்படி உபாஸகனுக்கு அதனினும் விபரீதமாக அறியவேண்டியது.

உத்தமமான தேசங்களிலும் உத்தமமான உத்தராயணாதிகாலங்களிலும் உபாஸகன் சரீரத்தை விட்டால் அப்போது உபாஸனை பலிக்கிறது.

ஞானிக்கு மரணசமயத்தில் சாவதானத்தன்மையால் ஞேயத்தின் ஸ்மிருதியிருக்கவேண்டுமென்னும் அபேக்ஷையில்லை. உபாஸகனுக்கு மரணசமயத்தில் தியானிக்கப்படுவதினது ஸ்வரூபத்தின் ஸ்மரணையின் அபேக்ஷையிருக்கிறது.

1. எந்தத் தியேயத்தை முன் தியானஞ் செய்திருக்கிறானோ அந்தத் தியேயத்தின் ஸ்மிருதி மரணசமயத்திலுண்டானால் அப்போது உபாஸனை பலிக்கிறது.

2. எப்படித் தியேயத்தின் ஸ்மிருதியபேக்ஷிக்கப்படுகிறதோ அப்படியே தியேயப்பிரஹ்மத்தையடைய 5-வது தரங்கத்திற் சொல்லப்பட்ட மார்க்கத்தின் ஸ்மிருதியும் வேண்டியதாயிருக்கிறது. ஏனெனின் மார்க்கசிந்தனையும் உபாஸனைக்கு அங்கமாம்.

ஞானத்தின்பொருட்டுச் சிரவணத்தில் தேசகால ஆஸனங்களின் அபேக்ஷையில்லை. தியானத்தில் உத்தமமான தேசம் நிரந்தரமான காலம் சித்தாதி ஆஸனங்கள் முதலியன வேண்டியவைகளாயிருக்கின்றன. அதனால் அதிருஷ்டிக்கு உத்தமதேசமான கங்காதீரத்திலிருத்தலும் கங்காதீரத்தை மிகவும் உத்தமமான இடமாகக் கண்டு அவ்விடத்தில் ஏகாந்தத்தில் பிரஹ்மத்தியானஞ்செய்து மரணசமயத்திலும் யோகசாஸ்திரக் கிரமப்படித் தேகம் வீழ்தலும் சொல்லப்பட்டது.

(தர்க்கதிருஷ்டியின் நிச்சயமும் பதினெட்டுப் பிரஸ்தானங்களும் 482-491.)

482. சகலசாஸ்திரங்களும் பிரஹ்மஞானத்திற்கு ஏதுவாதல்.

மூன்றாவது சிஷ்யனாகிய தர்க்கதிருஷ்டியானவன் குருமுகமாகவுபதேசம் பெற்று, கேட்ட அர்த்தத்தில் பிறசாஸ்திரங்களின் விரோதத்தைத் தள்ளுவதற்காகச் சகல சாஸ்திரங்களின் அபிப்பிராயத்தையும் விசாரித்து இவ்வாறு நிச்சயஞ்செய்தான்:—

1. சகல சாஸ்திரங்களின் பரமப்பிரயோஜனம் மோக்ஷமாம்.

2. மோக்ஷத்துக்குச் சாதனம் ஞானமாம்.

3. அந்த ஞானம் அத்வயநிச்சயரூபமாம்.

4. பேதநிச்சயம் யதார்த்தஞானமன்று.

5. சாஸ்திரங்களெல்லாம் சாக்ஷாத்தாகவாவது பரம்பரையாகவாவது பிரஹ்மஞானத்துக்கு ஹேதுக்களாம்.

ஸம்ஸ்கிருத * வைகரிவாக்கின் பதினெட்டுப் பிரஸ்தானங்களிருக்கின்றன. அவற்றில்,

1. சில கர்மத்தைப் பிரதிபாதிக்கின்றன.

2. சில விஷயசுகத்தின் உபாயங்களைச் சொல்லுகின்றன.

3. சில பிரஹ்மத்துக்கு அந்நியமான தேவதைகளினுபாஸனையைப் போதிக்கின்றன.

4. அப்படியே ஞானத்தின்பொருட்டுள்ள நியாய சாங்கியாதி சாஸ்திரங்களும் பேதஞானத்தையே யதார்த்தஞானமாகச் சொல்லுகின்றன.

ஆதலால் எல்லாவற்றிற்கும் அத்வைதப் பிரஹ்மதைதப் போதிக்குந்தன்மை பொருந்தாது.

அங்ஙனமாயினும், சகலசாஸ்திரங்களையுஞ் செய்தவர்கள் சர்வஞ்ஞர்களாயும் கிருபாநிதிகளாயுமிருக்கிறார்கள். ஆதலால் அவர்களாற் செய்யப்பட்ட மூலசூத்திரங்களின் அர்த்தம் வேதாநுசாரமாகவேயிருக்கிறது. ஆனால் அவற்றின் வியாக்கியானகாரர்கள் பிராந்தர்களா யிருந்தபடியால் மூலசூத்திரகாரருடைய அபிப்பிராயங்களுக்கு விலக்ஷணமாய் அர்த்தம் பண்ணியிருக்கிறார்கள். அச்சூத்திரங்களுக்கு வேதத்துக்கு விருத்தமான அர்த்தமின்று. ஆனால் சகல சாஸ்திரங்களின் அர்த்தமும் வேதாநுசாரமாகவே யிருக்கிறது. இதைத் தர்க்கதிருஷ்டியானவன் உத்தமசம்ஸ்காரத்தால் நிச்சயம்பண்ணினான்.

## 423. வித்தையின் பதினெட்டுப் பிரஸ்தானங்கள்.

வித்தையின் 18 பிரஸ்தானங்கள்:—வேதங்கள் 4, உபவேதங்கள் 4, வேதாங்கங்கள் 6, புராணம், நியாயம், மீமாம்சை, தர்மசாஸ்திரம் என்றிவ்வாறு வைகரிவாக்கு ஸம்ஸ்கிருதபாஷாரூபவித்தையில் 18 பேதங்களாம். அவற்றைப் † பிரஸ்தானங்களென்பர்.

---

* பரை, பைசந்தி, மத்திமை, வைகரி என வாக்குகள் நான்காம். அவற்றுள், வைகரி பிறர்காதிற்குக் கேட்கும் அகாராதி எழுத்துவடிவினது.

† வித்தையின் அங்கங்களைப் பிரஸ்தானங்களென்பர். வித்தையின் பதினெட்டுப் பிரஸ்தானங்கள் அக்கினிபுராணத்தின் ஆரம்பத்திலும் மதுசூதனஸ்வாமி செய்த பிரஸ்தானபேதத்திலும் எழுதப்பட்டிருக்கின்றன.

## 484. நான்குவேதங்களும் பிரஹ்மஞானத்தில் தாற்பரியமாமெனல்.

இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்று † வேதங்கள் நான்காம். அவற்றில்,

1. சிலவசனங்கள் ஞேயப்பிரஹ்மத்தைப் போதிக்கின்றன.

2. சில தியேயத்தைப் போதிக்கின்றன.

3. மற்றவை கர்மத்தைப் போதிக்கின்றன. கர்மத்தைப் போதிக்கும் வேதவசனத்துக்கும் அந்தக்கரணசுத்திவாயிலாக ஞானமே பிரயோஜனமாம்.

பிரவிருத்தியில் எந்த வேதவசனத்துக்கும் அபிப்பிராயமில்லை. ஆனால் நிஷித்தத்தில் ஸ்வாபாவிகமாய்ப் பிரவிருத்திப்பதினின்றும் தடுப்பதில் அபிப்பிராயமாம். ஆதலால் அபிசாராதி கர்மத்தைப் பிரதிபாதிக்கிற அதர்வண வேதத்துக்கும் நிவிருத்தியில் தாற்பரியமாம். துவேஷத்தால் சத்துருவைக் கொல்லவேண்டுமென்று ஒருவன் பிரவிருத்தித்தால் அவனை விஷம் கொடுத்தலாலாவது சுடுவதினாலாவது கொல்லாமலிருப்பதற்காக அபிசாரகர்மங்களாகிற சியேனயாகாதிகள் சொல்லப்பட்டிருக்கின்றன. சத்துருவைக் கொல்லும்பொருட்டான கர்மம் அபிசாரமெனப்படும். இத்தன்மையது சியேனமென்னும் யஞ்ஞமாம்.

---

† இருக்குவேதத்தில் 21 சாகைகளும், யஜுர்வேதத்தில் 109 சாகைகளும், சாமவேதத்தில் 1000 சாகைகளும், அதர்வணவேதத்தில் 50 சாகைகளுமுள. ஒருமரத்தையுடையவன் தன் பிள்ளைகளுக்கு அதன் கிளைகளைப் பிடித்துக்கொடுப்பதுபோல் வியாசபகவான் வேதத்தை நான்கு பாகங்களாக்கி அவற்றில் பல சாகைகளைக் கற்பித்து ஒவ்வொரு சாகைக்குரிய விதிகளையும் ஏற்படுத்தினர். எத்தனை சாகைகளுண்டோ அத்தனையுபநிஷத்துக்களுண்டென முத்திகோபநிஷத்திலும் மகாவாக்கியரத்நாவலியிலுஞ் சொல்லப்பட்டிருக்கிறது. சாகைகள் 1180. ஆகையால் உபநிஷத்துக்களும் 1180 உண்டு. இவற்றில் 840 உபநிஷத்துக்கள் கர்மத்தைப் போதித்துக் கர்மகாண்டமெனப்படுகின்றன. 232 உபநிஷத்துகள் தியேயப்பிரஹ்மத்தைப் போதித்து உபாசனாகாண்டமெனப்படுகின்றன. 108 உபநிஷத்துகள் ஞேயப்பிரஹ்மத்தைப் போதிக்கின்றன. இவை வேதத்தின் அந்தியபாகமானதினாலும் வேதத்தின் சாரமான அர்த்தத்தைச் சொல்லுதலாலும் வேதாந்தமென்றும் ஞானகாண்டமென்றுஞ் சொல்லப்படுகின்றன. இந்த 108 உபநிஷத்துக்களில் (1) ஈச, (2) கேன, (3) கட, (4) பிரசின, (5) முண்டக, (6) மாண்டூக்கிய, (7) தைத்திரீய, (8) ஐதரேய, (9) சாந்தோக்கிய, (10) பிரகதாரண்யக உபநிஷத்துக்கள் முக்கியமானவை. இவற்றில் ஐதரேயம் இருக்குவேதத்தினது. ஈசாவாசியமும் பிரகதாரணியகமும் சுக்லயஜுர் வேதத்தின. கடவல்லியும் தைத்திரீயமும் கிருஷ்ணயஜுர் வேதத்தின. கேனமும் சாந்தோக்கியமும் சாமவேதத்தின. முண்டகமும் மாண்டூக்கியமும் அதர்வணவேதத்தின.

சியேனயாகத்தைப் போதிக்கிற வேதவசனத்துக்குச் சத்துருவைக் கொல்ல இச்சிக்கிறவன் சியேனயாகத்தில் பிரவிருத்திக்க என்பது அர்த்த மன்று. ஆனால் சத்துருவைக் கொல்ல இச்சிக்கிறவன் சியேனயாகத்துக்கு வேறான விஷங்கொடுத்தல் முதலிய சத்துருவைக் கொல்லு முபாயங்களில் பிரவிருத்திக்கக் கூடாதென்பதாம். இவ்விதமாகத் துவேஷத்தாற் கிடைத்த விஷங்கொடுத்தல் முதலியவற்றினின்றும் நிவிருத்திப்பதில் சியேனயாகத்தை அறிவிக்கும் வசனத்திற்கு அபிப்பிராயமாம்; பிருவிருத்தியிலில்லை. ஏனெனின் பிரவிருத்தி துவேஷத்தாற் கிடைத்தது. * எது அந்நியத்தாற் கிடைத்ததா கின்றதோ அதில் வாக்கியத்திற்கு அபிப்பிராயமாகாது.

இவ்விதமாக அதர்வணவேதம் முழுவதற்கும் நிவிருத்தியில் தாற்பரிய மாம். மற்ற மூன்று வேதங்களில் கர்மத்தைப் போதிக்கும் வாக்கியங்களுக்கு அந்தக்கரணசுத்திவாயிலாக ஞானத்தி லுபயோக முண்டென்பது ஸ்பஷ்டமா யிருக்கிறது.

---

* 1. "மணஞ்செய்த மனைவியோடு கூடவேண்டும்."

2. "ருதுவுடைய மனைவியைக் கூடவேண்டும்."

3. "ஓமஞ்செய்து மிஞ்சிய மாமிசத்தைப் புசிக்கவேண்டும்."

4. "சூத்திராமணியென்னும் யாகத்தில் கட்குடித்தல்வேண்டும்."

இவை முதலிய வேதத்தின் விதிவாக்கியங்களுக்கு வேறொன்றால் (இராகத்தால்) கிடைத்த சர்வஸ்திரீகளையும் கூடுதல், அல்லது எப்போதும் மணந்த பெண்ணைக் கூடு தல் அல்லது மாமிசத்தையும் மதுவையும் உட்கொள்ளுதல் என்பவற்றில் பிரவிருத்திக் கச் செய்வதில் அபிப்பிராயமன்று. ஆனால் அவற்றின்கண் இயல்பாயுள்ள பிரவிருத்தி எதுவோ அதனைச் சுருக்குதல்வாயிலாக நிவிருத்தியில் அபிப்பிராயமாம். ஆதலால் அவ் வேத வாக்கியங்கள் பரிசங்கியாவிதிவடிவமாயிருக்கின்றன. நியமவிதிவடிவம் அல்லது அபூர்வவிதிவடிவமன்று.

அதுபோலச் சியேனயாகத்தை அறிவிக்கும் அதர்வணவேதத்தின் வசனத்திற்கும் அந்நிய (துவேஷ)த்தாற் கிடைத்த சத்துருமாரணத்திற் பிரவிருத்தித்தலில் அபிப்பிராய மன்று. ஆனால் அந்த இயல்பான பிரவிருத்தியைத் தடுத்தல்வாயிலாக அந்த விஷங் கொடுத்தல் முதலியவற்றினின்றும் நீங்குதலில் அபிப்பிராயமாம். ஆதலால் இந்தச் சியேனயாகத்தை யறிவிக்கும் வசனமும் பரிசங்கியாவிதி வடிவமாம்.

வேறொன்றாற் கிடைத்த அர்த்தத்தை அதனைச் சுருக்குதற்பொருட்டு அறிவிக்கும் வேதவசனம் எதுவோ அது பரிசங்கியாவடிவம் எனப்படுகின்றது.

இந்த விதிவசனங்களை விசாரசந்திரோதயத்தின் 16-வது கலையிற் காண்க. இவற் றின் விஸ்தாரமான வர்ணனம் வேதாந்த பதார்த்த மஞ்சூஷா என்னும் நூலில் செய்யப் பட்டிருக்கிறது.

## 485. நான்கு உபவேதங்களுக்கும் பிரஹ்மஞானத்தில் தாற்பரியமெனல்.

நான்கு உபவேதங்கள்:—ஆயுள்வேதம், தனுர்வேதம், காந்தர்வவேதம், அர்த்தவேதம் என்று உபவேதங்கள் நான்காம். அவற்றில்,

1. ஆயுள்வேதத்தின் கர்த்தாக்கள் பிரஹ்மா, பிரஜாபதி, அசுவினீகுமாரர்கள், தன்வந்திரி முதலியவர்களாவர். சரகம் வாக்பட்டம் முதலிய சிகிச்சா சாஸ்திரங்களும் ஆயுள்வேதமே. வாத்ஸ்யாயனராற் செய்யப்பட்ட காமசாஸ்திரமும் ஆயுள்வேதத்தில் அடங்கியதாம். ஏனெனின், காமசாஸ்திரத்துக்கு விஷயமான பிந்து ஸ்தம்பனாதிகளும் சரகர்முதலியோரால் சொல்லப்பட்டிருக்கின்றன. அந்த ஆயுள்வேதத்துக்கு வைராக்கியத்திலேயே அபிப்பிராயம். ஏனெனின், ஆயுள்வேதத்தின்படி ரோகாதிகள் நிவிருத்தியானாலும் மறுபடியும் ரோகாதிகளுண்டாகின்றன. ஆதலால் இலௌகிக வுபாயங்களெல்லாம் துச்சமாயிருக்கின்றன. இந்த அர்த்தத்திற்றான் ஆயுள்வேதத்திற்கு அபிப்பிராயம். ஔஷததானம் முதலியவற்றால் புண்ணியமுண்டாக அந்தக்கரணசுத்தி வாயிலாகவும் ஞானத்தில் ஆயுள்வேத முபயோகமாகிறது.

2. விசுவாமித்திரராற் செய்யப்பட்ட தனுர்வேதத்தில் ஆயுதம் நிரூபிக்கப்பட்டிருக்கிறது:—(1) முக்தம், (2) அமுக்தம், (3) முக்தாமுக்தம், (4) யந்திர முக்தம் என ஆயுதங்கள் நாலுவகையாம்.

(1) சக்கராதிகள் கையால் விடப்படுவதால் முக்தமெனப்படுகின்றன.

(2) கத்திமுதலியவை அமுக்தமெனப்படுகின்றன.

(3) ஈட்டிமுதலியன முக்தாமுக்த மெனப்படுகின்றன.

(4) அம்பு குண்டு முதலியவைகள் யந்திரமுக்தமெனச் சொல்லப்படும்.

இவ்வகையான நால்வகை ஆயுதங்களுண்டு. அவற்றில்,

(1) முக்தத்தை அஸ்திர மென்பர்.

(2) அமுக்தத்தைச் சஸ்திர மென்பர்.

இந்த நான்குவித ஆயுதங்களுக்கும் பிரஹ்மா, விஷ்ணு, பசுபதி, பிரஜாபதி, அக்கினி, வருணன்முதலிய தேவதைகளும் மந்திரங்களுஞ் சொல்லப்பட்டிருக்கின்றன. க்ஷத்திரியகுமாரர்களும் அவர்களை யனுசரித்த பிராஹ்மணாதிகளும் அதிகாரிகளென்று சொல்லப்படுகிறார்கள். அவர்கள் (1) பதாதிகள், (2) ரதாரூடர்கள், (3) அசுவாரூடர்கள், (4) கஜாரூடர்களென நாலுவகையினர். யுத்தத்தில் சகுனமங்கலங்களும் சொல்லப்பட்டிருக்கின்றன.

(1) இவ்வளவு அர்த்தமும் தனுர்வேதத்தின் முதற் பாதத்திற் சொல்லப்பட்டிருக்கின்றன.

(2) ஆசாரியருடைய லக்ஷணமும் அவரிடத்திலிருந்து சாஸ்திரத்தைக் கிரகிக்கிற முறையும் இரண்டாம் பாதத்திற் சொல்லப்பட்டிருக்கின்றன.

(3) குருசம்பிரதாயத்தால் அடையப்பட்ட சஸ்திரத்தின் அப்பியாஸமும் மந்திரசித்தி தேவதாசித்திகளின் பிரகாரங்களும் மூன்றும் பாதத்திற் சொல்லப்பட்டிருக்கின்றன.

(4) சித்தியான மந்திரத்தின் பிரயோகம் நான்காம் பாதத்திற் சொல்லப்பட்டிருக்கின்றது.

இவ்வளவு விஷயங்கள் தனுர்வேதத்தில் இருக்கின்றன. இந்தத் தனுர்வேதம் பிரஹ்மா பிரஜாபதி முதலியோர்களினின்றும் விசுவாமித்திரருக்குக் கிடைத்தது. அவர் இதைப் பிரசித்தஞ் செய்தார்; விசுவாமித்திரரிடத்தினின்றும் தனுர்வேத முண்டாகவில்லை. துஷ்டர்கள் திருடர்கள் முதலியவர்களினின்றும் ஜனங்களை யிரக்ஷிக்கும் க்ஷத்திரியதர்மத்தைத் தனுர்வேதம் போதிக்கிறது. ஆகையால் அதற்கும் அந்தக்கரணசுத்தியால் ஞானவாயிலாக மோக்ஷத்திலேயே அபிப்பிராயமாம்.

3. காந்தர்வவேதம் பரதராற் பிரசித்தப்படுத்தப்பட்டிருக்கிறது. அதில் ஸ்வர தாள மூர்ச்சனைகளோடு கூடிய கீதம் நடனம் வாத்தியம் என்பன விஸ்தாரமாய் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. தேவதைகளின் ஆராதனை நிற்விகற்ப சமாதிசித்தி காந்தர்வவேதத்தின் பிரயோஜனமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால் அதற்கும் அந்தக்கரணத்தின் ஏகாக்கிரத்தன்மையால் ஞானவாயிலாக மோக்ஷமே பிரயோஜனமாம்.

4. அர்த்தவேதமும் அநேகவிதமாம்:—நீதிசாஸ்திரம், அசுவசாஸ்திரம், சிற்பசாஸ்திரம், பாகசாஸ்திர முதலிய தனசம்பாதனத்துக்கு உபயோகமான உபாயங்களைப் போதிக்கும் சாஸ்திரங்களெல்லாம் * அர்த்தவேத மெனப்படும். தனம் சம்பாதிப்பதில் சகலவுபாயங்களையு மறிந்தவனுக்கும் பாக்கியமின்றித் தனங்கிடைக்கிறதில்லை. ஆதலால் அர்த்தவேதத்துக்கும் வைராக்கியத்திலேயே கருத்தாம்.

## 486. நான்குவேதங்களின் ஆறங்கங்களினது அர்த்தத்தோடு கூடிய பிரயோஜனம்,

நான்கு வேதங்களுக்கும் ஆறங்கங்களுண்டு:—1. சிக்ஷை, 2. கற்பம், 3. வியாகரணம், 4. நிருக்தம், 5. சோதிஷம், 6. பிங்களம் என்னும் இவ்வாறும் வேதத்துக் குபயோகமாயிருப்பதால் வேதாங்கங்க ளெனப்படுகின்றன: அவற்றுள்,

* இதனையே ஸ்தாபத்தியவேதமென்றும் கூறுவர்.

1. சிக்ஷையைச் செய்தவர் பாணினி. வேதத்தின் சப்தங்களில் அக்ஷரங்களினது ஸ்தானங்களின் ஞானமும் * உதாத்தானுதாத்தஸ்வரித ஸ்வரங்களின் ஞானமும் சிக்ஷையா லுண்டாகின்றன. வேதத்தின் வியாக்கியானரூப அநேகப் பிரதிசாகையென்னுங் கிரந்தங்களுண்டு. அவையும் சிக்ஷைக்குட்பட்டனவாயிருக்கின்றன.

2. அங்ஙனமே கற்பசூத்திரங்களினால் வேதத்தில் போதிக்கப்படுகிற கர்மங்களை யனுஷ்டிக்கும் முறை அறியப்படுகின்றது. யஞ்ஞத்தைச்செய்து வைக்கும் பிராமணன் ரித்விக்கென்று சொல்லப்படுகிறான். அவர்களது வேறு வேறாய்ச் செய்யத்தக்க கர்மங்களின் கிரமங்களை யறிவிப்பன கற்பசூத்திரங்களாம். இந்தக் கற்பசூத்திரத்தைச் செய்தவர்கள் காத்தியாயனர் ஆசுவலாயனர் முதலிய முனிகளாம். ஆதலால் † கற்பசூத்திரமும் வேதத்துக் குபயோகியாயிருத்தலால் வேதாங்கமாம்.

3. அங்ஙனமே வியாகரணத்தால் வேதத்தினது பதங்களின் சுத்தத் தன்மையின் ஞானமுண்டாகிறது. அந்த வியாகரணசூத்திரரூப எட்டு அத்தியாயங்கள் பாணினிமுனிவராற் செய்யப்பட்டிருக்கின்றன. காத்தியாயனரும் பதஞ்சலியும் வார்த்திகம் பாஷியம் என்கிற வியாக்கியானங்களை அச்சூத்திரங்களுக்குச் செய்திருக்கிறார்கள். வேறு வியாகரணங்களில் வேதத்தினது சப்தங்கள் விசாரிக்கப்படவில்லை. ஆதலால் புராணாதிகளில், அவைக ளுபயோகமுள்ளனவாம்; ஆனால் வேதத்துக் குபயோகமானவையன்று. பாணினியாற் செய்யப்பட்ட வியாகரணம் வேதங்களின் சப்தங்களினது சித்தியையும் செய்கிறது. ஆதலால் வேதத்தின் அங்கமாம்.

4. அங்ஙனமே யாஸ்கர் என்னும் முனி 13 அத்தியாயவடிவ நிருக்தத்தைச் செய்திருக்கிறார். அதில் வேதமந்திரங்களில் பிரசித்தமில்லாத பதங்களின் அர்த்தங்களைப் போதிக்கும்பொருட்டுப் பெயர்கள் நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. ஆதலால் வைதீக அப்பிரசித்த பதங்களின் அர்த்தஞானத்தி

---

1. * உச்சஸ்வரம் உதாத்தமெனப்படுகிறது. இதனை எடுத்தல் என்பர்.

2. நீச (தாழ்ந்த) ஸ்வரம் அநுதாத்த மெனப்படுகிறது. இதனைப் படுத்தல் என்பர்.

3. சமானஸ்வரம் ஸ்வரிதமெனப்படும். இதனை நலிதலென்பர்.

† கற்பசூத்திரங்கள் ஆறுவகை:—1. ஜைமினியாற் செய்யப்பட்டது ஜைமினீயம்; 2. ஆசுவலாயனராற் செய்யப்பட்டது ஆசுவலாயனம்; 3. ஆபஸ்தம்பராற் செய்யப்பட்டது ஆபஸ்தம்பம்; 4. போதாயனராற் செய்யப்பட்டது பௌத்தாயனம்; 5. காத்தியாயனராற் செய்யப்பட்டது காத்தியாயனீயம்; 6. வைகானஸராற் செய்யப்பட்டது வைகானஸீயம்.

னுபயோகியா யிருத்தலால் நிருக்தமும் வேதாங்கமாம். ஸம்ஞையை (பெயரைப்) போதிக்கிற ஐந்து அத்தியாயவடிவ நிகண்டு என்னும் கிரந்தத்தைப் பாஸ்கர் செய்திருக்கிறார். அதுவும் நிருக்தத்துக்கு அந்தர்ப்பூதமா யிருக்கின்றது. அமரசிம்ஹன் ஹேமன் முதலியோராற் செய்யப்பட்ட பெயர்களைப் போதிக்கும் நிகண்டுகள் யாவும் நிருக்தத்தில் அடங்கியனவாம்.

5. அங்ஙனமே ஆதித்தியர் கர்க்கர்முதலியவர்களாற் செய்யப்பட்ட சோதிடமும் வேதாங்கமாயிருக்கிறது. ஏனெனின், வைதிக கர்மத்தின் ஆரம்பத்தில் காலத்தின் ஞானம் வேண்டியதாயிருக்கிறது. அந்தக் காலஞானம் சோதிடத்தா லுண்டாகிறது. ஆகையால் வேதாங்கமாயிருக்கிறது.

6. பிங்களமுனிவரால் எட்டு அத்தியாயங்கள் அடங்கிய சூத்திரத்தால் சந்தஸ் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. அவற்றால் வேதத்திற் சொல்லிய காயத்திரி முதலிய சந்தசுகளின் ஞான முண்டாகிறது. ஆகையால் பிங்களர்செய்த சூத்திரமும் வேதாங்கமாயிருக்கிறது.

அவ்வாறே இவ்வேதாங்கங்கள் ஆறினும் வேதத்துக் குபயோகப்படாத அர்த்தங்களும் பிரசங்கத்தால் நிரூபிக்கப்பட்டன. அவை பிரதானத்தன்மையாகச் சொல்லப்படவில்லை. ஆதலால் வேதத்தின் பிரயோஜனமே இவ்வாறங்கங்களின் பிரயோஜனமாம்; வேறன்று.

## 487. பதினெண்புராண உபபுராணங்களின் அர்த்தம்.

புராணங்கள் பதினெட்டு. அவை வியாஸரென்னும் முனிவாற் செய்யப்பட்டன. அவை 1. பிரஹ்மம், 2. பத்மம், 3. வைஷ்ணவம், 4. சைவம், 5. பாகவதம், 6. நாரதீயம், 7. மார்க்கண்டேயம், 8. ஆக்னேயம், 9. பவிஷியத், 10. பிரஹ்மவைவர்த்தம், 11. லைங்கம், 12. வாராஹம், 13. ஸ்கந்தம், 14. வாமனம், 15. கூர்மம், 16. மாத்ஸ்யம், 17. காருடம், 18. பிரஹ்மாண்டம் என்பனவாம். இப்பதினெண்புராணங்களும் வியாஸராற் செய்யப்பட்டன. காளிபுராண முதலிய வேறு அனேக புராணங்களுமுண்டு. அவை உபபுராணங்களாம். சிலர் உபபுராணங்களும் 18 எனச் சொல்லுகிறார்கள்; அது நியமமன்று. உப புராணங்கள் அநேகமுண்டு. பாகவதங்கள் 2:—ஒன்று வைஷ்ணவம், மற்றொன்று பகவதிபாகவதம். ஒவ்வொன்றிலும் பதினெண்ணாயிரங் கிரந்தங்களுள. ஒவ்வொன்றிலும் 12 ஸ்கந்தங்களுள. ஆனால் அவற்றில் ஒன்று புராணம்; மற்றொன்று உபபுராணம். இவ்விரண்டும் வியாஸராலேயே செய்யப்பட்டன. ஆகையால் இரண்டும் பிரமாணங்களே. வியாஸர் புராணங்களைச் செய்ததுபோல் சில உபபுராணங்களையும் செய்திருக்கிறார். சில உபபுராணங்கள் பராசரர் முதலிய வேறு சர்வஞ்ஞமுனிகளாற் செய்யப்பட்டிருக்கின்றன. ஆகையால் உபபுராணங்களும் பிரமாணங்களே.

உபநிஷத்தின் பொருளே புராண உபபுராணங்களின் பொருளாம். இது * இனிப் பிரதிபாதிக்கப்படும்.

## 448. நியாய வைசேஷிக சூத்திரங்களின் பயன்.

கௌதமமுனிவரால் நியாயசூத்திரம் ஐந்து அத்தியாயமாகச் செய்யப் பட்டிருக்கிறது. அவற்றில் யுக்தி பிரதானம். யுக்திசிந்தனத்தால் எவனுக்குத் தீவிரபுத்தியுண்டாகிறதோ அவன் மனனம்பண்ணுவதிற் சமர்த்தனுகிறான். ஆகையால் யுக்திப்பிரதானமான † நியாயசூத்திரத்துக்கும் மனனவாயிலாக வேதாந்தஜந்நியஞானமே பலனுகிறது.

கணுதரென்னும் முனிவர் பத்து அத்தியாயவடிவ வைசேஷிகசூத்திரங்களைச் செய்திருக்கிறுர். அவைகளும் நியாயத்தில் அடங்கியிருக்கின்றன.

## 489. தர்மமீமாம்ஸை பிரஹ்மமீமாம்ஸை யென்னும் இரண்டு மீமாம்ஸைகளுக்கும் ஸங்கர்ஷணகாண்டத்திற்கும் பயன்.

மீமாம்சை இருவகையாம்:—1. ஒன்று ‡ தர்மமீமாம்சை, 2. மற்றொன்று § பிரஹ்மமீமாம்சை.

1. தர்மமீமாம்சையினைப் பூர்வமீமாம்சையென்பர்.

2. பிரஹ்மமீமாம்சையை உத்தரமீமாம்சையென்பர்.

1. தர்மமீமாம்சை 12 அத்தியாயம். அது ஜைமினி என்னும் முனிவரால் செய்யப்பட்டிருக்கின்றது. கர்மத்தை யனுஷ்டிக்கும் விதி இதிற் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் விதியுடன் கர்மத்திற் பிரவிருத்தித்தல் தர்மமீமாம்சையின் பயனும். கர்மத்திற் பிரவிருத்திக்கிறதினுல் அந்தக்கரணசுத்தியும் அதினின்று ஞானமும் ஞானத்தால் மோக்ஷமு முண்டாகின்றன. இவ்விதமாகத் தர்மமீமாம்சைக்கு மோக்ஷமே பயனுகிறது. தர்மமீமாம்சை

---

* இந்தவார்த்தை மேல் 510 முதல் 517 பரியந்தமான பிரசங்கங்களிற் சொல்லப்படும். தர்மசாஸ்திரத்தில் கர்மகாண்டத்தின் அர்த்தமிருக்கிறது. புராணங்களில் உபநிஷத்து வடிவ ஞானகாண்டத்தின் அர்த்தமிருக்கிறது. இதனைச் சூதசங்கிதையின் வியாக்கியானத்தில் வித்தியாரணியசுவாமிகள் எழுதியிருக்கின்றுர்கள்.

† நியாயசூத்திரங்களுக்கு மனனவாயிலாக வேதாந்தஜந்நியஞானமே பயனுமென்னும் அர்த்தத்தை நியாயத்தின் கரைகடந்த சிரோமணிபட்டாசாரியரும் தமது நூலில் எழுதியிருக்கின்றனர். ஆதலால் இவற்றிற்கு முற்கூறிய பயன் சம்பவிக்கிறது.

‡ எதில் தர்மத்தின் மீமாம்ஸை (விசாரம்) இருக்கிறதோ அது தர்மமீமாம்ஸை யெனப்படும்.

§ எதில் பிரஹ்மத்தின் மீமாம்ஸையிருக்கிறதோ அது பிரஹ்மமீமாம்ஸையெனப்படும். (மீமாம்ஸை = ஆராய்ச்சி.)

யின் 12 அத்தியாயங்களில் தம்மில் அர்த்தபேதமிருக்கிறது. அது கடினமாயிருப்பதால் இவ்விடத்தில் எழுதப்படவில்லை. ஜைமினியால் ஐந்து அத்தியாயங்களில் சங்கர்ஷணகாண்டம் செய்யப்பட்டிருக்கிறது. அதில் உபாஸனை சொல்லப்பட்டிருக்கிறது. சங்கர்ஷணகாண்டமும் தர்மமீமாம்சையில் அந்தர்ப்பூதமாயிருக்கிறது.

2. பிரஹ்மமீமாம்சை நான்கு அத்தியாயங்களாகச் செய்யப்பட்டிருக்கிறது. அதன் கர்த்தா வியாஸர். ஒவ்வொரு அத்தியாயத்திலும் நாலு பாதங்களுள.

1. அங்கு முதல் அத்தியாயத்தில் இவ்வர்த்தமுளது:—எல்லா உபநிஷத்து வாக்கியங்களும் பிரஹ்மத்தைத்தவிர வேறொன்றையும் பிரதிபாதிக்கிறதில்லை.

2. உபநிஷத்துவாக்கியங்களில் மந்தபுத்தியுள்ள புருஷர்களுக்கு விரோதங்கள் தோன்றுகின்றன. அவற்றின் பரிகாரம் இரண்டாவது அத்தியாயத்திற் சொல்லப்பட்டிருக்கிறது.

3. மூன்றாவது அத்தியாயத்தில் ஞானஉபாஸனைகளின் சாதனங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

4. நான்காவது அத்தியாயத்தில் ஞான உபாஸனைகளின் பலன் சொல்லப்பட்டிருக்கிறது.

இந்தப் பிரஹ்மமீமாம்ஸாரூப சாரீரகசாஸ்திரமே சர்வசாஸ்திரங்களினும் பிரதானமானது. முமுக்ஷுவிற்கு இதுவே கொள்ளத்தக்கது. இதற்கு *வியாக்கியானரூபக் கிரந்தங்கள் அனேகங்களாயிருக்கின்றன. ஆயினும், ஸ்ரீ சங்கராசாரியராற் செய்யப்பட்ட ‡ பாஷியரூப வியாக்கியானமே முமுக்ஷுக்களாற் கேட்கத்தக்கது. அதற்கு ஞானவாயிலாக மோக்ஷபயன் விளக்கமாகவேயிருக்கிறது.

---

* சங்கராசாரியாற்செய்யப்பட்ட பாஷியம், ராமாநுஜபாஷியம், மத்துவபாஷியம், பாஸ்கராசாரியாற் செய்யப்பட்ட பாஷியம், விஷ்ணுஸ்வாமியாற் செய்யப்பட்ட பாஷியம், விஞ்ஞானேந்திரபிக்ஷுவாற் செய்யப்பட்ட பாஷியம், நீலகண்டபாஷியம் என்றன் முதலியன பாஷியவடிவ வியாக்கியானங்கள்.

‡ இங்குப் பாஷியமென்னும் சொல்லால் ஸ்ரீ சங்கராசாரியாது சிஷ்யப்பிரசிஷ்யர்களாற் செய்யப்பட்ட அந்தப் பாஷியத்தின் வியாக்கியானங்களும் கொள்ளப்படும். அப்பாஷியவியாக்கியானங்கள் அநேகமாம். அவற்றின் பெயர்மாத்திரம் பஞ்சதசியின் திருப்திதீபத்தினது 101-வது சுலோகத்தின் டிப்பணத்திற் கூறப்பட்டிருத்தலால் ஆண்டுக் காண்க.

## 490. ஸ்மிருதிமுதலிய நூல்களின் கர்த்தாக்களும் பிரயோஜனமும்.

மனு, யாஞ்ஞவல்கியர், விஷ்ணு, யமன், அங்கிரா, வஸிஷ்டர், தக்ஷர், ஸம்வர்த்தர், சாதாதபர், பராசரர், கௌதமர், சங்கர், லிகிதர், ஹாரீதர், ஆபஸ்தம்பர், சுக்கிரர், பிரஹஸ்பதி, வியாஸர், காத்தியாயனர், தேவலர், நாரதர்முதலியோர் ஸர்வஞ்ஞர்களா யிருக்கின்றார்கள். அவர்களால் வேதாநுசாரமாக ஸ்மிருதிகளென்னும் கிரந்தங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. அவை தர்மசாஸ்திரமாம். அவற்றில் வர்ணாசிரமங்களின் காயிகவாசிக மானசிக தர்மங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அவற்றிற்கும் அந்தக்காணசுத்திவாயிலாக ஞானமுண்டாய் மோக்ஷம் சித்திப்பதே பிரயோஜனமாயிருக்கிறது. அப்படியே வியாஸரால் மகாபாரதமும் வால்மீகரால் ராமாயணமும் செய்யப்பட்டிருக்கின்றன. அவைகளும் தர்மசாஸ்திரத்தில் அந்தர்ப்பூதமாயிருக்கின்றன.

தேவதைகளை ஆராதிக்கும்பொருட்டுள்ள மந்திரசாஸ்திரமும் தர்மசாஸ்திரத்தில் அந்தர்ப்பூதமாயிருக்கிறது. தேவதைகளின் ஆராதனைக்கு அந்தக்காணசுத்தி பிரயோஜனமாம்.

அப்படியே சாங்கியசாஸ்திரம், யோகசாஸ்திரம், வைஷ்ணவதந்திரம், சைவதந்திரம் முதலியவைகளும் தர்மசாஸ்திரத்தில் அந்தர்ப்பூதமாயிருக்கின்றன. ஏனெனின் மானஸமாகிய உபாசனைவடிவ தர்மம் இவற்றிலும்நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

## 491. சாங்கிய சாஸ்திரத்தின் பயன்.

கபிலர் சாங்கியசாஸ்திரத்தை, ஆறு அத்தியாயவடிவமாகச் செய்திருக்கிறார்.

1. அதன் முதல் அத்தியாயத்தில் விஷயம் நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

2. இரண்டாவது அத்தியாயத்தில் மகத்தத்துவம் அகங்காரம் முதலிய பிரதானத்தின் காரியங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

3. மூன்றாவது அத்தியாயத்தில் விஷயத்தினின்றும் வைராக்கிய முண்டாதல் சொல்லப்பட்டிருக்கிறது.

4. நான்காவது அத்தியாயத்தில் விரக்தர்களுடைய சரித்திரம் சொல்லப்பட்டிருக்கிறது.

5. ஐந்தாவது அத்தியாயத்தில் பரபக்ஷம் கண்டிக்கப்பட்டிருக்கின்றது.

6. ஆருவது அத்தியாயத்தில் சகல அர்த்தங்களும் சுருக்கமாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. பிரகிருதி புருஷர்களின் விவேகத்தால் புருஷன் அஸங்கன் என்னும் ஞானம் சாங்கியசாஸ்திரத்தின் பிரயோஜனமாம். அச்சாஸ்திரத்திற்கும் துவம்பதத்தின் லக்ஷியார்த்தசோதனைவாயிலாக மகாவாக்கியஜந்திய ஞானத்தி னுபயோகமாதலால் மோக்ஷமே பலனும்.

## 492. யோகசாஸ்திரத்தின் பயனும், சாரீரகத்திற் சொல்லியதோடு விரோதமின்மையும்.

அதுபோல யோகசாஸ்திரம் பதஞ்சலிமுனிவரால் நான்குபாதவடிவமாகச் செய்யப்பட்டிருக்கிறது. அவர் சேஷாவதாரம். ஒரு இருஷி சந்தியோபாஸனை செய்துகொண்டிருக்கும்போது அவருடைய அஞ்சலியில் தோன்றி பூமியில் விழுந்தபடியால் பதஞ்சலியென்று பெயரிடலாயிற்று.

1. அவர், சரீரத்தின் ரோகரூப மலத்தை நிவிருத்திக்கும்பொருட்டுச் சிகிச்சைநூலைச் செய்திருக்கிருர்.

2. அசுத்தபதங்களின் உச்சாரணரூப வாக்கின் மலத்தைப் போக்கப் பாணினிமுநிவரின் வியாகரணத்துக்குப் பாஷியஞ் செய்திருக்கிருர்.

3. விக்ஷேபரூப அந்தக்கரணமலத்தைப் போக்க யோகசூத்திரங்களைச் செய்திருக்கிருர்.

1. அதில் முதற்பாதத்தில் சித்தவிருத்தியின் நிரோதரூப சமாதியும் அதன் சாதனமான அப்பியாஸம் வைராக்கியமுதலியவைகளும் சொல்லப்பட்டிருக்கின்றன.

2. அதுபோல இரண்டாவது பாதத்தில் விக்ஷேபப்பட்ட சித்தத்திற்குச் சமாதிசாதனமாகிய இயமம், நியமம், ஆஸனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், ஸவிகற்பசமாதியென்னும் எட்டு அங்கங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

3. மூன்ருவது பாதத்தில் யோகத்தின் விபூதி (ஐசுவரியங்)கள் சொல்லப்பட்டிருக்கின்றன.

4. நான்காவது பாதத்தில் யோகத்தின் பலனுகிய மோக்ஷம் சொல்லப்பட்டிருக்கிறது.

இவ்விதத்தால் யோகசாஸ்திரமும் ஞானசாதனமான நிதித்தியாஸனத்தைச் சம்பாதித்தல்வாயிலாக மோக்ஷத்துக்கு ஹேதுவாயிருக்கிறது.

சாரீரகசூத்திரத்தில் சாங்கியயோகங்களைக் கண்டித்திருப்பது உபநிஷத்துக்கு விருத்தமாகச் செய்யப்பட்டிருக்கும் அவற்றின் வியாக்கியானத்தைக் கண்டித்திருக்கிறது. மூலசூத்திரத்தைக் கண்டனஞ் செய்யவில்லை.

## 493. பாஞ்சராத்திர பாசுபத தந்திரங்களின் பயன்.

அப்படியே நியாய வைசேஷிக சூத்திரங்களின் கண்டனமும் விருத்தமான வியாக்கியானத்தின் கண்டனமாமென்றே கொள்க.

அப்படியே நாரதரால் பஞ்சராத்திரமென்னும் தந்திரம் செய்யப்பட்டிருக்கிறது. அதில் வாசுதேவனிடத்தில் அந்தக்கரணத்தை நிறுத்துதல் சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கும் அந்தக்கரணம் ஸ்திரப்படுதலால் ஞானவாயிலாக மோக்ஷமே பலனும். வைஷ்ணவக்கிரந்தங்களெல்லாம் பஞ்சராத்திரத்தில் அடங்குகின்றன. அந்தப் பஞ்சராத்திரம் தர்மசாஸ்திரத்தில் அடங்குகிறது.

அப்படியே பாசுபததந்திரத்தில் பசுபதியின் ஆராதனை சொல்லப்பட்டிருக்கிறது. அதன் கர்த்தா பசுபதி. அதற்கும் அந்தக்கரணத்தின் நிச்சலத்தன்மை வாயிலாக மோக்ஷசாதனமான ஞானம் பலனும்.

## 494. சைவநூல் முதலியவற்றின் பயனும் வாமமார்க்கமும்.

சைவநூல்களெல்லாம் பாசுபததந்திரத்தில் அடங்கியிருக்கின்றன.

அப்படியே கணேசன், சூரியன், தேவி என்னும் இவர்களினுபாஸனையைப் போதிக்கும் கிரந்தங்களுக்கும் சித்த ஏகாக்கிரத்தன்மைவாயிலாக ஞானம் பயனும். இவைகளெல்லாம் தர்மசாஸ்திரத்தில் அடங்குகின்றன.

ஆனால் தேவியுபாஸனையைப் போதிக்கும் கிரந்தங்களில் இரண்டு சம்பிரதாயங்களுண்டு. அவற்றிலொன்று தக்ஷிணசம்பிரதாயம்; மற்றொன்று உத்தாசம்பிரதாயம். உத்தாசம்பிரதாயத்தை வாமமார்க்க மென்பர். அவற்றில்,

1. தக்ஷிணசம்பிரதாயப்படி எந்த நூல்களில் தேவியுபாஸனையிருக்கிறதோ அவை தர்மசாஸ்திரத்தில் அடங்குகின்றன.

2. வாமமார்க்கம் எந்நூல்களிலிருக்கின்றனவோ, அவை தர்மசாஸ்திரத்திற்கு விருத்தமாம். ஆதலால் அவை அப்பிரமாணமாம்.

வாமதந்திரம் பரமசிவனாற் செய்யப்பட்டதாயினும் சகலசாஸ்திரங்களுக்கும் வேதத்துக்கும் விரோதமாயிருக்கிறது. ஆதலால் அது பிரமாணமன்று.

விஷ்ணுவாற் புத்தாவதாரத்திற் செய்யப்பட்ட நாஸ்திகக்கிரந்தம் வேதத்துக்கு விருத்தமாயிருப்பதால் அப்பிரமாணமா யிருப்பதுபோல் சிவனாற் செய்யப்பட்ட வாமதந்திரமும் வேதத்துக்கு அத்தியந்தம் விருத்தமாயிருக்கிறது. கள் முதலிய அசுத்தமான பதார்த்தங்களைக் கிரகிக்கலாமென்று இதிற் சொல்லியிருக்கிறது. உலகத்தை வஞ்சிக்கும்பொருட்டு உத்தம பதார்த்தங்களின் பெயரை மலினபதார்த்தங்களுக்குக் கொடுத்திருக்கிறார்கள். கள்ளிற்குப் பெயர் தீர்த்தம். மாமிசத்துக்குப் பெயர் சுத்தம். மத்தியபான பாத்திரத்துக்குப் பெயர் பதுமை. வெண்காயத்துக்குப் பெயர் வியாஸர். வெள்ளைப்பூண்டுக்குச் சுகதேவரென்று பெயர். கள்ளைக் கட்டும் சாணானுக்குப் பெயர் தீக்ஷிதர். வேசியைச் சேவிப்பவனுக்கும் சக்கிலிச்சிமுதலிய சண்டாளஸ்திரீகளைச் சேவிப்பவனுக்கும் பிரயாகைசேவிப்பவன் காசிசேவிப்பவன் என்று பெயரிட்டிருக்கிறார்கள். பைரவிசக்கிர மத்தியில் இருக்கிற சண்டாளர் முதலியோரைப் பிராஹ்மணர் என்கிறார்கள். அத்தியந்தம் வியபிசாரஸ்திரீயை யோகினீயென்பர். வியபிசாரியை யோகியென்பர். இப்படிப் பலவிதமாய் வாமமார்க்கத்தின் வியவகாரம் நிஷித்தமாயிருக்கிறது. பூஜாகாலத்தில் பலதோஷங்களுடன் கூடிய ஸ்திரீயை உத்தமசக்தியென்று சொல்லுகிறார்கள். ஜாதியில் சண்டாளியும் அதிவியபிசாரியுமான தூரஸ்திரீயைத் தேவியாகப் பாவித்துப் பூஜிக்கிறார்கள். அவளாற் குடிக்கப்பட்டு மிச்சமான மத்தியத்தைக் குடிக்கிறார்கள். அதிகக்குடியால் அவள் வாந்திசெய்தால் அதைப் பூமியில் விடாமல் சிரத்தையுடன் ஆசாரியர்சகிதமாய் மற்றவர்கள் சாவதானமாய்க் குடிக்கிறார்கள். இவ்வாந்தியைப் பைரவி என்கிறார்கள்.......யில் நாக்கை வைத்துக்கொண்டு மந்திரம் ஜபிக்கிறார்கள். 1. மத்தியம், 2. மாமிசம், 3. மத்ஸியம், 4. முத்திரை, 5. மந்திரம் இவ்வைந்து மகாரங்களையும் போகமோக்ஷத்தின்பொருட்டுச் சேவிக்கிறார்கள். முதலாவது இரண்டாவது முதலிய மகாரங்களை அப்பிரசித்தமான பெயர்களால் வியவகரிக்கிறார்கள். இவைமுதலிய வாமதந்திரத்தின் சகலவியவகாரங்களும் இவ்வுலகத்தினின்றும் பரலோகத்தினின்றும் ஒருவனைப் பிரஷ்டனாக்கிவிடுகின்றன. இக்காரணத்தினாற்றான் காது குத்திக்கொண்டிருக்கிற யோகிகள், அவதூதகோசாயிகள், அநேக சந்நியாசிகள், பிராஹ்மணர்கள் முதலியோர்கள் வாமமார்க்கத்தை யனுஷ்டித்தாலும் உலகத்தாலும் வேதத்தாலும் நிந்திக்கப்பட்டதென அறிந்து, இம்மார்க்கத்தை இரகசியமாய் வைத்துக்கொண்டிருக்கிறார்கள்.

அதிகமாய்ச் சொல்லுவதென்? வாமமார்க்கத்தைக் கேட்ட மிலேச்ச னுக்கும் மயிர்க்குச்சுண்டாகிறது. இப்படி நிந்திக்கப்பட்டதா யிருக்கிறது வாமமார்க்கம். தாழ்ந்தவர்களும் உண்ணுதவற்றை யுண்ணுதல்முதலிய எல்லா நிந்திக்கப்படு மார்க்கங்களையும் வாமதந்திரத்தில் கூறுகிறார்கள். மிகத்தாழ்ந்த விவகாரங்கள் எழுதத் தகுந்தவைகளன்ருகலின் விசேஷக்கிரமங்களை எழுத வில்லை. வாமதந்திரம் சர்வவிதத்திலும் தள்ளத்தக்கது.

## 495. நாஸ்திகமதம்.

நாஸ்திகமதமும் தள்ளத்தக்கது. இதில் 1. மாத்தியமிகர், 2. யோகா சாரர், 3. சௌத்திராந்திகர், 4. வைபாஷிகர், 5. சார்வாகர், 6. திகம்பரரென ஆறுபேதங்களுள. இவ்வறுவரும் வேதத்தைப் பிரமாணமாகக் கொள்ளுகிற தில்லை. இவ்வறுவருடைய சித்தாந்தமும் ஒன்றற்கொன்று வித்தியாசப் படுகின்றன.

1. மாத்தியமிகன் சூன்யவாதி.

2. யோகாசாரனுடைய மதத்தில் சகல பதார்த்தங்களும் விஞ்ஞானத் துக்கு வேறுக இல்லை. விஞ்ஞானமே தத்துவம். அந்த விஞ்ஞானம் க்ஷணிக மாயிருக்கிறது.

3. ஸௌத்திராந்திக மதத்தில் விஞ்ஞானத்திஞகாரம் பாஹியபதார்த்த மாகிய விஷயமின்றி யுண்டாகிறதில்லை. ஆதலால் விஞ்ஞானத்தால் பாஹிய பதார்த்தங்கள் அநுமானிக்கப்படுகின்றன. இவ்விதத்தால் ஸௌத்திராந்திக மதத்தில் பாஹியபதார்த்தம் அனுமானப் பிரமாணத்துக்கு விஷயமாம்; பிரத்தியக்ஷமன்று; ஸ்திரமுமன்று. ஆனுல் எல்லாப் பதார்த்தங்களும் க்ஷணி கமா யிருக்கின்றன.

4. வைபாஷிகமதத்தில் பாஹியபதார்த்தம் க்ஷணிகமாயிருந்தாலும் பிரத்தியக்ஷப் பிரமாணத்துக்கு விஷயமாம். இதுவே ஸௌத்திராந்திகத்துக் கும் வைபாஷிகத்துக்கு முள்ள பேதம்.

இந்நான்கும் சுகத (புத்த) ருடையது.

5. சார்வாகமதத்தில் பதார்த்தம் க்ஷணிகமன்று. ஆனுல் இம்மதத்தில் தேகமே ஆத்மாவாம்.

6. திகம்பரமதத்தில் தேகமாத்மாவன்று. ஆத்மா தேகத்தைக் காட்டி லும் வேறுனது. ஆனுல் தேகத்தின் பரிமாணம் எவ்வளவுண்டோ அவ்வளவு ஆத்மாவின் பரிமாணமாம்.

இவ்விதமாக இவர்களுக்குத் தம்மில் மதபேதமிருக்கிறது. மற்றும் அநேக பேதங்களுண்டு. எல்லாம் வேதவிருத்தமா யிருக்கின்றன. ஆகையால் இவர்கள் நாஸ்திகராவர். இதனாற்றான் அம்மதங்களை விசேஷமாய்ச் சொல்லவுமில்லை; கண்டிக்கவுமில்லை.

## 496. சாகித்திய முதலியவற்றின் தாற்பரிய பூர்வகமான தர்க்கதிருஷ்டியின் சாரத்தைக் கிரகிக்கும் நிச்சயம்.

இவ்விதத்தால் வாமமார்க்க நாஸ்திகமதக் கிரந்தங்கள் ஸம்ஸ்கிருதத்தில் எழுதப்பட்டிருந்தாலும் வேதத்துக்குப் பாஹியமாயிருக்கின்றன. ஆகையால் வேதாநுசாரியான வித்தையின் பிரஸ்தானங்கள் பதினெட்டேயாம்.

அன்றியும், மம்மடர் முதலியவர்களாற் செய்யப்பட்ட * சாகித்தியக் கிரந்தங்களும் காமசாஸ்திரத்தில் அடங்குகின்றன. அப்படியே சகல காவியங்களுக்கும் † சிலவற்றிற்குக் காமசாஸ்திரத்திலும் ‡ சிலவற்றிற்குத் தர்ம சாஸ்திரத்திலும் அடக்கமிருக்கின்றது.

இவ்விதத்தால் அஷ்டாதச வித்தையின் பிரஸ்தானங்கள் முழுவதும் பிரஹ்மஞானவாயிலாக மோக்ஷத்துக்கு ஹேதுக்களாம். § சில சாக்ஷாத் ஞானத்துக்கு ஹேதுக்களாயும் சில பரம்பரையாக ஞானத்துக்கு ஹேதுக்களாயும் இருக்கின்றன. இதுவே சகலசாஸ்திரங்களின் ¶ அபிப்பிராயமென்று தர்க்கதிருஷ்டி நிச்சயித்தான். உத்தரமீமாம்சையொழிந்த பிறசாஸ்திரங்களெல்லாம் ஜிஞ்ஞாசுவால் தள்ளத்தக்கவையென்று சாரீரகத்திற் சூத்திரகாரராலும் பாஷியகாரராலும் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது. ஆகையால் வேறு சாஸ்திரங்களும் மோக்ஷத்துக் குபயோகமென்று சொன்னது சரியன்று; ஆயினும் சாரத்தைக் கிரகிக்கும் திருஷ்டியால் தர்க்கதிருஷ்டியானவன் மேற்சொல்லிய சாரமான நிச்சயஞ்செய்தான்.

---

* அலங்கார கிரந்தங்களுக்கு.

† நாயிகாபேதமும் ரசபேதமுதலியனவுமாகிய அர்த்தங்களைச் சொல்லும் காவிய நூல்களுக்கு.

‡ பகவத் சரித்திரத்தைப் பிரதிபாதிக்கும் காவியகிரந்தங்கள்.

§ பசித்தவர்களுடைய பசியைப் போக்கித் திருப்தியாக்குவதற்குப் பக்குவமாகிய அன்னமே சாக்ஷாத்சாதனமாயும் உழவுமுதலிய பயிர்களை பரம்பராசாதனமாயு மிருப்பதுபோல் அஞ்ஞானத்தைப்போக்கி ஆத்மாநுபவதிருப்தியைக் கொடுப்பதற்குச் சில கிரந்தங்கள் நிஷ்காமகர்மத்தைப் போதிக்கும் வாயிலாகப் பரம்பராசாதனமாயும் சில ஞானத்தைப் போதிக்கும் வாயிலாகச் சாக்ஷாத்சாதனமாயு மிருக்கின்றன.

¶ இது ஓர் சாரத்தைக் கிரகிக்கும் திருஷ்டியுடைய பண்டிதர் வசனமாம்:— "ஹக்ஷிஜாநெ யத்ரு விஷெ்ணாய ஹக்ரு வெஜாஃ வூராவூ உா | உகாநிகாநிஸ்வஹூணி ஜீவொஜாஹவஜ்ஹெஹஙவஃ ‖ "எந்த மதங்களில் விஷ்ணுவின் (வியாபகமான பரமாத்மாவின்) பக்தி அல்லது ஞானமிருக்கிறதோ, பின்னும் எந்தமதங்களில் நான்கு வேதங்களும் மேலான பிரமாணங்களா யிருக்கின்றனவோ, அவ்வெல்லாமதக்களும் நேராகவாவது பரம்பரையாகவாவது ஜீவர்களது உய்விற்கு ஏதுவாயிருக்கின்றன."

## 497. தர்க்கதிருஷ்டி ஓர் வித்துவானோடு சந்தித்தல்.

குருமுகமாகக் கேட்கப்பட்ட அர்த்தத்தில் புத்தி ஸ்திரப்படுவதற்காகச் சகல சாஸ்திரங்களின் அபிப்பிராயத்தையும் விசாரித்தும் தர்க்கதிருஷ்டிக்கு மறுபடியுஞ் சந்தேக முண்டாயிற்று. அதாவது சாஸ்திரத்தின் அபிப்பிராயம் தான் நிச்சயித்ததுதானோ வேறோ வென்பதாம். ஏனெனின் தர்க்கதிருஷ்டி கனிஷ்டாதிகாரியென்று சொல்லப்பட்டமையால் அவனுக்கு அடிக்கடி குதர்க்கத்தாற் சந்தேகமுண்டாகிறது. அதனை நிவிருத்திக்கும்பொருட்டுத் தன்னிச்சயத்தை வேறு வித்வானுடைய நிச்சயத்தோடு ஒத்துப்பார்க்கும்படிப் புறப்பட்டுப்போய் ஓர் வித்வானைச் சந்தித்துத் தன் அபிப்பிராயங்களை அவரிடம் வெளியிட்டான். அப்போது தர்க்கதிருஷ்டியின் வசனத்தைக் கேட்டு நீ சொன்னதெல்லாம் முக்கியசித்தாந்தமென்று வித்வான் சொன்னார். இவ்விதமாகத் தர்க்கதிருஷ்டி சகலசமுசயங்களுமற்று அபரோக்ஷமாய்ப் பிரஹ்மத்தை யறிந்து ஜகத்து பந்தமோக்ஷங்கள் எல்லாம் மித்தையென்று தெரிந்துகொண்டான்.

## 498. ஞானிக்கு இச்சை சம்பவித்தலும் இச்சை யில்லாமையின் அபிப்பிராயமும்.

பிராரப்தம் கொஞ்சம் சேஷமிருந்தபடியால் தாய்தந்தையரையும் தன் வீட்டையும் சீக்கிரத்தில் பார்க்கவேண்டுமென்கிற இச்சையுண்டாயிற்று.

ஞானிக்குச் சகல வியவகாரங்களும் அஞ்ஞானிக்குண்டாவதுபோல் பிராரப்தத்தா லுண்டாகின்றனவென்று முழுவதும் முன் சொல்லப்பட்டன. ஆகையால் இச்சை சம்பவிக்கிறது. ஞானிக்கு இச்சையுண்டாகிறதில்லை யென்று சில சாஸ்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கிறது. அதற்கு ஞானியின் அந்தக்கரணம் பதார்த்தத்தின் இச்சாரூப பரிணாமத்தை யடைகிறதில்லை யென்பது அபிப்பிராயமன்று. ஏனெனின் அந்தக்கரணத்துக்கு * இச்சாதிகள் சகஜதர்மங்களாம்.

அந்தக்கரணம் பூதங்களின் சத்துவகுணகாரியமென்று சொல்லப்பட்டிருந்தாலும் ரஜோகுணதமோகுணசகித சத்துவகுணத்தின் காரியமாம்; கேவலம் சத்துவகுணத்தின் காரியமன்று. கேவலசத்துவகுண காரியமாயின் அந்தக்கரணத்துக்குச் சஞ்சலிக்கும் சுபாவமிருக்கலாகாது. அப்படியே காமக்குரோதாதி ராஜஸவிருத்தியும் மூடத்துவம் (நித்திரை) முதலிய தாமஸ விருத்தியும் எந்த அந்தக்கரணத்துக்கு முண்டாகலாகாது. அப்படி யுண்

* ஞானியின் பிராரப்த போகத்திற்கேதுவான இச்சைமுதலியவற்றை இங்கு அந்தக்கரணத்தின் சகஜதர்மமென்றார்; பந்தத்திற்கேதுவான இச்சையாதிகளையன்று.

டாவதால் அந்தக்கரணம் கேவலம் சத்துவகுணத்தின் காரியமன்று. ஆனால் அப்பிரதானமான ரஜோகுண தமோகுணசகிதப் பிரதானமான சத்துவகுணத்தையுடைய பூதங்களினின்றும் அந்தக்கரண முண்டாயிருக்கிறது. ஆதலால் அந்தக்கரணத்தில் முக்குணங்களு மிருக்கின்றன. அம்முக்குணங்களும் அந்தக்கரண மிருக்கு மிடங்களிலெல்லாம் சமமாகவில்லை. ஆனால் ஏற்றக்குறைச்சலா யிருக்கின்றன. ஆகையால் குணங்களின் ஏற்றக்குறைவால் ஒவ்வொருவருக்கும் வெவ்வேறுவித சுபாவம் இருக்கிறது. இவ்விதத்தால் அந்தக்கரணம் முக்குணங்களின் காரியமாயிருக்கிறது.

எதுபரியந்தம் அந்தக்கரண மிருக்கிறதோ அதுவரையில் ரஜோகுணத்தின் பரிணாமரூபமான இச்சையில்லாமலிருக்கமாட்டாது. ஆகையால் ஞானிக்கு இச்சையுண்டாகிறதில்லை யென்பதற்கு அபிப்பிராயம் இதுவாம்:—ஞானி அஞ்ஞானி இருவருக்கும் இச்சை சமானமாகவே யிருக்கிறது. ஆனால்,

1. அஞ்ஞானி * இச்சாதிகளை ஆத்மதர்மமாக அறிகிறான்.

2. ஞானிக்கு இச்சை யுண்டாகுங்காலத்திலும் இச்சையை ஆத்மதர்மமாக அவன் அறிகிறதில்லை. ஆனால் காமம், சங்கற்பம், சந்தேகம், ராகம், துவேஷம், சிரத்தை, பயம், லஜ்ஜை, இச்சை முதலியவைகள் அந்தக்கரணத்தின் பரிணாமங்களா யிருக்கின்றன. ஆதலால் அவற்றை அந்தக்கரணதர்மங்களென்று அறிகிறான்.

இவ்விதமாக இச்சைமுதலியன வுண்டாயினும் அந்த இச்சைமுதலியன ஆத்மாவின் தர்மமாக ஞானிக்குப் பிரதீதியாகிறதில்லை. ஆகையால் ஞானிக்கு இச்சையில்லையென்று சொல்லப்பட்டது.

அப்படியே மனதினாலும் வாக்கினாலும் சரீரத்தினாலும் செய்யப்படும் வியவகாரங்களெல்லாம் ஞானிக்கு ஆத்மாவினிடத்திற் பிரதீதியாகிறதில்லை. ஆனால் கிரியைகளெல்லாம் மனோ வாக்குக் காயங்களி லிருக்கின்றன.

ஆத்மா அசங்கனென்பது (ஞானியின்) அந்தக்கரணத்தோடு கூடிய சிதாபாஸனது நிச்சயம். ஆகையால் ஞானி சகலவியவகாரங்களுக்கும் கர்த்தாவாயிருந்தும் அகர்த்தாவே. இக்காரணத்தால் சுருதியில் இவ்வாறு சொல்லியிருக்கிறது:—"ஞானத்துக்குப் பிறகு இச்சரீரத்திற் செய்யப்படும் சுபாசுப கர்மங்களும் அவற்றின் பலனாகிய புண்ணியபாவங்களும் சம்பந்தப்படுகிறதில்லை" என்பதாம்.

---

* இச்சையாதிகள் ஆத்மதர்மமாக அறியப்பட்டபோது திடமாய்ப் பந்தத்திற்குக் காரணமாகின்றன. அவையே அந்தக்கரண தர்மமென் றறியப்பட்டபோது அதிடமாய்ப் பந்தகாரணமாகாமல் கேவலம் பிராரப்த போகஹேதுவான வியவகாரமாத்திரத்திற்குக் காரணமாகின்றன.

பிராரப்தபலத்தால் அஞ்ஞானிக்குண்டாவதுபோல் ஞானிக்கும் சகல வியவகாரங்களும் அவற்றின் இச்சையும் சம்பவிக்கின்றன.

## 499. சுபசந்ததிராஜாவின் பிரசங்கம். 499–508.

சுபசந்ததிராஜாவினைவிட்டு மூன்று புத்திரர்களும் புறப்பட்டுப் போனார்கள். அங்குப் புத்திரர்களுடைய சரித்திரம் சொல்லப்பட்டது. இப்போது அவர்கள் தகப்பன் சரித்திரத்தைச் சொல்லுகிறேன்:—புத்திரர்கள் வீட்டைவிட்டுப்போனபோது ராஜாவுக்குத் தீவிரவைராக்கிய மில்லாததினால் அவர்களது பிரிவால் துக்கமுண்டாயிற்று. அப்படி மந்தவைராக்கிய மிருந்தபடியால் விஷயபோகத்திற் சுகமுண்டாகவில்லை. புத்திரர்கள் போய்விட்டபடியால் எண்ணமிருந்தும் ராஜ்யத்தை விட்டுப்போக முடியவில்லை. இதனாலும் துக்கமுண்டாயிற்று. தீவிரவைராக்கிய மிருந்தால் ராஜ்யத்தை யநாதையாய் விட்டுப் போவான்; வைராக்கியம் தீவிரமின்றி மந்தமாயிருந்தபடியால் ராஜ்யத்தை விட முடியவில்லை. போகத்தில் ஆஸக்தியு மிருக்கவில்லை. ஆகையால் இருவிதத்திலும் துக்கமே யுண்டாயிற்று. யதார்த்தமான தீவிரவைராக்கியமில்லை. மந்தவைராக்கியத்தின் பலனாகிய உபாஸ்யத்தை (உபாஸிக்கத்தக்கதனை) யறிந்து கொள்ள வேண்டுமென்னும் இச்சையைக் கூறுகின்றார்:—

## 500. சுபசந்ததி பண்டிதர்களோடு தூங்காமல் விழித்திருக்கும் தேவன் யாவன் என்று பிரசினஞ்செய்தல்.

மந்தவைராக்கியம் சுபசந்ததிக்குண்டானதே அவனுக்குப் பெரும்பாக்கியம். இதனால் அவனுக்கு எந்தத்தெய்வம் உபாஸிக்கத்தக்கதென்று அறிந்து கொள்ள இச்சையுண்டாயிற்று; பிறகு சிரேஷ்டவித்வான்களை வரவழைத்து அவர்களைத் தகுந்த ஆஸனங்களில் உட்காரவைத்து அவர்களைப் பார்த்து, புருஷார்த்தத்தை யடைவதற்காக எல்லாஜனங்களாலும் ஆராதிக்கத்தக்கதாயும் தூக்கம் விழிப்பற்றதாயும் பக்தர்களை எப்போதும் பரிபாலனம் பண்ணுகிறதாயுமிருக்கிற தெய்வம் யாது என்று கேட்டான். அரசன் வார்த்தையைக் கேட்டு அப்பண்டிதரில் ஒருவன் அரசனை நோக்கிச் சொல்லத்தொடங்கினான்:—

## 501. விஷ்ணுவுபாசகனது உத்தரம்.

கேளும் அரசனே! சகலவேதாந்தசிரோமணியான வாசுதேவனைச் சிவனும், பிரமனும் நித்தியம் சேவிக்கிறார்கள். வாசுதேவன் பரோபகாரி; பக்தருக்கு ஹிதஞ்செய்பவர்; சங்கு சக்கர கதா பத்மதாரீ; மங்களஸ்வரூபி;

தயாநிதி. இப்படிப்பட்ட மகாவிஷ்ணுவானவர் நிஜபக்தர்களை யறிந்து அவர்களுக்கு க்ஷேமத்தை யுண்டுபண்ணுகிறார். சக்தி, கணேசர், சூரியன், சிவன் என்னும் இவர்களெல்லாம் அவராஞ்ஞைப்படி நடக்கிறார்கள் என்று பாரதமும், பத்மபுராணமும், நிருசிம்ஹதாபனீ, ராமதாபனீ, கோபாலதாபனீ என்னுமுபநிஷத்துகளும் சொல்லுகின்றன. விஷ்ணுசொரூபத்தினின்றும் ஜகத்துமுழுமையு முண்டாகிறது. பீடாதிதுக்கங்களை அவர் பரிகரிப்பவர். இவரை எல்லோரும் ஆராதிக்கிறார்கள். பல அவதாரங்களைத் தரித்து எல்லாத் தேவர்களுக்குஞ் சகாயஞ் செய்திருக்கிறார். ஆகையால் விஷ்ணுவே உபாஸிக்கத்தக்கவர். விஷ்ணுவுக்குச் சமானமாய் உபாஸிக்கத்தக்க வேறொரு தெய்வமில்லை. விஷ்ணுவுக்குச் சிவன் உத்தமபக்தனாயிருந்தாலும் அவன் உபாஸிக்கத்தக்க சொரூபத்தைத் தரிக்கவில்லை. சிவன் சவம்போல் அமங்களஸ்வரூபி. ஆகையால் அவனை நாம் இவ்வாறு தியானிக்கலாகாது. சாம்பல், உடுக்கை, யானைத்தோல், மண்டையோடு என்பவற்றைத் தரிக்கப்பட்டவன் யாருக்குத்தான் க்ஷேமத்தை யுண்டுபண்ணப்போகிறான்? அவன் பிள்ளையாகிய கணங்களுக்கெல்லாஞ் சிரேஷ்டனாயிருக்கிற கணபதியும் அப்படியே விலக்ஷணமான மனுஷியமிருகரூபங்களைத் தரிக்கிறான். சடர்ஹடமாய்த் தேவியைத் தியானிக்கிறவர்கள் அவள் சமானரூபத்தைத் தரிக்கிறார்கள். ஸ்திரீயானவள் நிந்திக்கத்தக்கவளாயும் அசுசியாயும் கணக்கிடப்படாத அவகுணவிசித்திர முடையவளாயும் கபடஸ்வரூபியாயும் பராதீனமாயு மிருக்கிறாள். இப்படிப்பட்ட வடிவத்தை விரும்புகிறவன் எவனோ அந்த நரன் கழுதையைப் போன்றவனாய் அவளைச் சேவிக்கட்டும். இச்சூரியனோ இராப்பகலாய் ஓய்வில்லாமல் அலைகிறான். இவனை யுபாஸிக்சப்படுபவனும் இவனைப்போலவே அலைவான். ஆகையால் மற்ற எல்லாத் தேவதைகளையு மொழித்து எப்போதும் விழிப்புள்ளவராயிருக்கிற மகாவிஷ்ணுவே சேவிக்கத் தக்கவரென்று அறியத்தக்கது. நாரதபாஞ்சராத்திரத்தில் விஷ்ணுபூஜாத்தியான விதிகள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. விஷ்ணு உபாஸனையொழிந்த மற்ற நான்குபாஸனைகளும் உலகத்தில் விளங்குகின்றன. அவற்றில் ஒவ்வொன்றையும் நிஷேதித்ததினால் ஸ்மார்த்தஉபாஸனையும் நிஷேதிக்கப்பட்டதாய்விட்டது. ஏனெனின், ஐந்து தேவதைகளையும் * சமபுத்தி

* மகாதேவன் ஆத்மாராமராயிருத்தலால் சகல பதார்த்தங்களிலும் சமம் அதாவது மித்தை என்னும் புத்தியிருக்கிறது. அல்லது சம (ஏக=பிரஹ்ம) புத்தியிருக்கிறது. ஆதலால் அவர் சகல விபூதிகளிலும் விரக்தராய்த் தோல் கபால முதலிய நிந்திக்கப்படும் பொருள்களையே தரிக்கின்றார். இதனை மஹிம்நமென்னும் ஸ்தோத்திரத்தில் புஷ்பதந்தாசாரியரும் சொல்லியிருக்கிறார்:— "வரதனே! இந்திராதிதேவர்கள் தம்முடைய புருவத்தினால் இரக்ஷிக்கப்பட்டவர்களாய் அந்தந்தச் செல்வத்தைத் தரிக்

யுடன் உபாஸித்தற்கு ஸ்மார்த்தவுபாஸனையென்று பெயர். சிவன்முதலிய நாலுதேவதைகளும் விஷ்ணுவுக்குச் சமானமாகாரென்று நிஷேதிக்கப்பட்டிருத்தலால் ஸ்மார்த்தவுபாஸனையும் நிஷேதிக்கப்பட்டதாயிற்று.

## 502. சிவவுபாஸகனது உத்தரம்.

சிவ உபாஸகராகிய முநி மேற்சொன்னதைக் கேட்டுக் கோபங்கொண்டு கண்சிவந்து சொல்லுகிறார்:—அரசனே! என் வார்த்தையைக் கேளும். நான் சொல்வதற்கு அனேக கோடிப் பிரமாணங்களுண்டு. கேட்கப்பட்டவையெல்லாம் கொடுத்தருளும் பரமசிவனுக்குச் சமானம் யார்? மகாவிஷ்ணுவால் யாசிக்கப்பட்டுத் தன்னுடைய சகலஐசுவரியங்களையுங் கொடுத்துத் தான் பஸ்மத்தைத் தரித்தார். இக்காரணத்தினாலேயே தோலையும் மண்டையோட்டையும் தரித்தார். அவருக்கு நல்லது பொல்லாதது கிடையாது. அவருக்கெல்லாஞ் சமந்தான். நக்கினமாயிருந்துகொண்டு வைராக்கியத்துக்குச் சமானமான சுகங்கிடையாது என்று உபதேசிக்கிறார். இவ்விதமான பெருங்கொடை யளிக்கின்றார்:—நரனும் நாரியும் காசியில் மரணமடைந்தால் சீக்கிரத்தில் † சாயுஜ்யமோக்ஷத்தை யடைகிறார்கள். கர்ப்பவாச சங்கடத்தையடையார். அவர்கள் சிவனுக்குச் சமானமாகிச் சர்வதிவ்விய போகங்களையு மனுபவிக்கிறார்கள். அப்போது லிங்கசரீரத்தை விட்டுப் பிரஹ்மத்தை யடையும்படியான அத்வைதபோதத்தைப் பரமசிவன் செய்கிறார். உயர்வு தாழ்வு, சிறிதும் பாராமல் எல்லோருக்கும் அவர் முக்தியளிக்கிறார். அவருக்குச் சமானமான தாதா ஒருவருமில்லை. பக்தியுள்ளவர்களையும் இல்லாதவர்களையுஞ் சமமாயிரக்ஷிக்கிறார். விஷ்ணுவின் சுபாவத்தை நாம் கேள்விப்படுகிறோம்:—அவர் பக்தர்களைமாத்திர மிரக்ஷிக்கிறாரென்பது உலகப்பிரசித்தமாயிருக்கிறது. ஹரி சேவகன் ஹரன் சேவியனென்று வியாஸர் கந்தபுராணத்திற் சொல்லியிருக்கிறார். இராமேச்சுரத்தில் இராமசந்திரன் பரமசிவனைப் பூஜித்திருக்கிறார். பாரத பத்மபுராணங்களிற் சகலதேவர்களையும் விட ஹரிசிரேஷ்டரென்று சொன்னதற்குத் தாற்பரியம் அப்படியன்று. ஏனெனின், பாரததாற்பரிய நூலைப் பார்க்குமிடத்துச் சிவனுக்கே ஈசுரத்துவம் பிர

---

கிறார்கள். தம்மிடத்தில் குடும்பத்தின் சாதனமாக நந்திகேசுவரர், கட்டுவாங்கம் (நான்கு கால் ஒருபட்டிவடிவமாமயமான சஸ்திரம்), கோடரி, யானைத்தோல், பஸ்மம், பாம்பு என்பனவுள. இதனால் அறியத்தக்கதாவது சுவாத்மாராம புருஷனை விஷயவடிவ கானற்சலம் பிரமிக்கச் செய்கிறதில்லை."

† சிவசமான ஐசுவரியத்தோடுகூடிய சிவலோகத்தை.

தியாகிறது. இவ்வாறு * அப்பயதீக்ஷிதரென்னும் வித்துவான் சகலபுராணங்களுக்கும் இதிஹாஸங்களுக்கும் தாற்பரியம் எழுதியிருக்கிறார்.

அங்குப்பாரதத்தில் உள்ளபிரசங்கம் இதுவாம்:—அசுவத்தாமாவால்நாராயணாஸ்திரமும் ஆக்கினேயாஸ்திரமும் பிரயோகப்படுத்தப்பட்டபோது வெகு சேனைகள் மரித்தும் பஞ்சபாண்டவர்களில் ஒருவரும் மரிக்கவில்லை. அப்போது ரதத்தைவிட்டுத் தனுர்வேதத்தையும் ஆசாரியனையும் திரஸ்கரித்து வனத்துக்குப் போனார். அப்போது வியாஸர் அவரைச் சந்தித்துச் சொல்லுகிறார்:—"ஓ! பிராஹ்மணா! நீ ஆசாரியனையும் வேதத்தையும் நிந்திக்கலாகாது. இந்த அர்ச்சுனனும் கிருஷ்ணனும் நரநாராயணரூபங்கள். இவர்கள் சிவனை மிகப்பூஜித்திருக்கிறார்களாதலின் இவர்களுடைய பக்திக்கதீனமாகித்திரிசூலியான மகாதேவன் இவர்களுடைய ரதத்துக்கு முன்னின்று இவர்கள்பேரில் பிரயோகிக்கப்படும் சஸ்திராஸ்திரங்களின் சாமர்த்தியத்தை நாசஞ்செய்கிறார்."

இவ்விதத்தால் மகாபாரதத்தில் மகாதேவருடைய கிருபையால் நாராயணரூப கிருஷ்ணனுக்கு விபூதியுண்டாயிருக்கிறதென்பது சித்திக்கிறது. ஆதலால் விஷ்ணுசரித்திரத்தைப் பிரதிபாதிக்கும் கிரந்தம் சிவனுடைய ஆதிக்கியத்தைப் பிரதிபாதிக்கிறது. ஏனெனின் அக்கிரந்தத்தில் விஷ்ணு சேவியனாகச் சொல்லப்பட்டிருக்கிறார். பாரதப்பிரசங்கத்தால் அந்த விஷ்ணு சிவபக்தன். ஆதலால் எந்தச் சிவபக்தியால் விஷ்ணு சேவியனானோ அந்தச் சிவனே பரமசேவியனாகிறார். இவ்விதமாக அப்பயதீக்ஷிதர் சகல வைஷ்ணவக் கிரந்தங்களிலும் சிவனே பிரதிபாத்தியராகச் சொல்லப்பட்டவரென்று சொல்லியிருக்கிறார். ஹரியானவர் பக்தர்களுக்குள் உத்தமமானவர். சிவனுக்கே மகாதேவனென்றும் மகேசனென்றும்பெயர். மற்றத் தேவர்களுக்குத் தேவரென்றும் ஈசரென்றும் பெயர். சிவமென்பதற்கு மங்களமென்று பொருள். சிவத்துக்கு அந்நியமானதெல்லாம் அசிவம். சிவனுக்கு அன்னியமான தெய்வங்களெல்லாம் அசிவங்கள் அதாவது அமங்கலஸ்வரூபிகள். இந்த அமங்களரூப தெய்வங்களைவிட்டு மங்களஸ்வரூப சிவனை யுபாஸிக்க வேண்டியது. விஷத்தைப் பார்த்து மற்றெல்லாத் தேவர்களுக்கும் பயமுண்டாயிற்று. அப்போது அவ்விஷத்தைக் கண்டத்திற்கொண்டு பயத்தைப்போக்கினார். இவருடைய குமாரரான கணேசர் சகல விக்கினங்களையும் உடனே

* இப்பண்டிதர் சிவகாஞ்சிபுரியில் இருந்தார். அவர் பெரிய சிவஉபாசகராயிருந்தார். இவர் சித்தாந்தலேசமுதலிய வேதாந்த நூல்களையும் செய்திருக்கிறார்.

போக்குகிறார். காரியத்தில் காரணகுணமிருத்தலால் விக்கினங்களையெல்லாம் நாசம்பண்ணுகிறவர் சிவனென்றறியவேண்டியது. ஜனனமரணங்களாகிற துக்கரூப விக்கினங்களெல்லாம் சிவத்தியானத்தால் நாசமாமென்று அறியத்தக்கது. இவ்விதமாகச் சேவிக்கத்தக்கவன் சதாசிவனே. விவேகியானவன் சமாதியோடு விழிக்கக்கடவன். பாசுபததந்திரத்தில் சிவபூஜாவிதிகள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. அவ்விதிப்படிப் பூஜித்துத் தியானஞ்செய்க. நாரதபாஞ்சராத்திரமதம் பொய். அது சூத்திரபாஷியத்திற் கண்டிக்கப்பட்டிருக்கிறது. அதனையனுசரித்த இராமானுஜாதி நவீன வைஷ்ணவர்கள் மதமும் * கல்பதருவின் உரையாகிய பரிமளத்திற் கண்டிக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் சிவசேவையில் சித்தத்தைச் செலுத்தி விரும்பிய புருஷார்த்தத்தினை அடைக.

## 503. கணேசபூஜகனது உத்தரம்.

கணேசன் சிவன் புத்திரனென்று சொன்னதையும் காரணத்தின் குணம் காரியத்திலிருப்பதாகச் சொன்னதையுங் கேட்டுக் கணேசபூஜகன் கோபத்துடன் சொல்லுகிறான்:— "அரசனே! நான் சொல்லும் பதார்த்தத்தைக் கேட்க. இவ்விருவரும் பொய்யை நிஜமெனச் சாதிக்கிறார்கள். கணேசன் சிவபுத்திரனென்றும் பராதீனனென்றுஞ் சொல்லியிருக்கிறார்கள். இவ்விஷயமாய் வியாஸர் புராணத்திற் சொல்லியிருக்கிற ஒரு கதையைச் சொல்லுகிறேன். கேட்பீராக:—திரிபுரசங்காரஞ்செய்ய ஹரி ஹராதி எல்லாத் தேவர்களும் போனார்கள். கணேசனைப் பூஜிக்காதவரையில் திரிபுரர்கள் சிறிதும் தோல்வியடையவில்லை. பிறகு மனவருத்தமுற்று எல்லோரும் கணேசனை யாராதித்துத் திரிபுரர்களை ஜயித்தார்கள். எவனைப் பூஜித்ததினால் இவர்கள் ஜயமடைந்தார்களோ அவனே சேவிக்கத்தக்கவனென்று அறியவேண்டியது. தசரதனுக்கு ராமன் புத்திரனாயிருந்ததுபோல் பரமசிவனுக்குக் கணபதி புத்திரராயிருந்து விக்கினங்களைப் போக்கினார். கணேசபுராணம் வியாஸர் செய்திருக்கிறார். அதில் எல்லாவற்றிற்குங் கணேசனே காரணம் என்று காட்டியிருக்கிறார். அவருடைய துதிக்கையிலிருந்து அரி அரன் விதி ரவி சக்தி முதலியோர் யாவரும் ஜனித்தார்கள். எவர்கள் க்ஷணமாத்திரம் இவரைத் தியானிக்கிறார்களோ அவர்களுடைய விக்கினங்களெல்லாம் உடனே ஒழிகின்றன. இப்படி இரவும் பகலும் விழிப்புள்ளவராயிருக்கிற விநாயகக்கடவுளைப் பக்தியுடன் நிஷ்காமமாய்ப் பஜிக்கவேண்டியது.

---

* ஸ்ரீ சங்கராசாரியாற் செய்யப்பட்ட பிரஹ்மசூத்திரபாஷியத்தின்பேரில் வாசஸ்பதிமிசிரர் செய்தது பாமதிநிபந்தனமென்னும் உரையாம். அதன் உரைக்குக் கல்பதருவென்று பெயர். அதற்குப் பரிமளமென்று ஒருரையிருக்கிறது. இப்பரிமளவியாக்கியானம் அப்பயதீக்ஷித ஸ்வாமிகளால் செய்யப்பட்டதென்பது பிரசித்தம்.

## 504. தேவிபக்தனுடைய உத்தரம்.

கணேசன் சக்திக்குக் காரணமென்று சொன்னதைக் கேட்டுப் பகவதீபக்தன் கர்ச்சித்து அரசனைப் பார்த்துச் சொல்லத்தொடங்கினான்:—அரசனே! என் சத்தியமான வசனத்தைக் கேட்பீராக. இம்மூவருஞ் சொன்னதெல்லாம் அப்பிரமாணம். சக்தியில்லையாயின், தேவர்களெல்லாம் கொல்லப்பட்ட பிணத்துக்குச் சமானமாவரென்று அறிக. சக்தியில்லாதவர் அசமர்த்தரெனப்படுவர். அவர்கள் எப்படிக் காரியத்தை யுண்டுபண்ணுவர். எவர்கள் அதிகமாய்ச் சக்தியை யுபாசித்தார்களோ அவர்கள் சகலத்திற்கும் அதிகாரியானார்கள். ஹரி ஹரன் சூரியன் கணபதி முக்கியமானவர்கள். இவர்களிடத்தில நாநாவிதமான சக்தி காணப்படுகிறது. பிரபஞ்சத்தில் எதைச் சக்தியென்று சொல்லுகிறார்களோ அதனைப் பகவதியின் ரூபமென்று அறிக. பகவதிக்கு இரண்டு ரூபங்களுண்டு:—1. ஒன்று சாமானியம், 2. மற்றொன்று விசேஷம்.

1. எல்லாப் பதார்த்தங்களிலுமுள்ள தத்தம் காரியத்தைச் செய்யுஞ் சாமர்த்தியரூப சக்தி எதுவோ அது பகவதியின் சாமானியரூபமாம்.

2. அஷ்டபுஜாதிகளுடன் கூடிய மூர்த்தி விசேஷரூபமாம்.

சாமானியரூப சக்தியின் அம்சங்கள் எண்ணிறந்தவை. எவனிடத்தில் சக்தியின் அம்சம் குறைவாயிருக்கிறதோ அவன் அற்பசக்திமான்; அசமர்த்தன் எனப்படுகிறான். எவனிடத்தில் சக்தியின் அம்சம் அதிகமாயிருக்கிறதோ அவன் சமர்த்தன் எனப்படுகிறான். விஷ்ணு சிவன் முதலியவர்களிடத்தில் சக்தியின் அம்சம் அதிகமாயிருக்கிறபடியால் அவர்கள் அதிக சமர்த்தரென்று சொல்லப்படுகிறார்கள்.

இவ்விதமாய்ப் பகவதியின் சாமானியரூப சக்தியம்சத்தின் மிகுதியால் விஷ்ணு, சிவன், கணேசன், சூரியன் என்னும் இவர்களுடைய மகிமை பிரசித்தமாயிருக்கிறது. பிராணனின்றிய சரீரம் அமங்களமாவதுபோல் சக்தியின்றிய சகலதேவர்களும் அமங்களஸ்வரூபிகளாவர்கள். ஆதலால் எந்தச் சக்தியின் மிகுதியால் தேவர்களுடைய மகிமை பிரசித்தமாயிருக்கிறதோ அம்மகிமை சக்தியினதே; தேவர்களதன்று. விஷ்ணு சிவன் முதலியோர் பகவதியின் சாமானியரூப சக்தியை விசேஷமாயுபாஸித்தபடியால் அவர்களிடத்தில் சக்தியின் அம்சம் அதிகமாயிருக்கிறது.

பகவதியினுடைய நிராகாரரூப சக்திக்கு அனேக அம்சங்களிருப்பதுபோல ஸாகாரரூபசக்திக்கும் அனேக அம்சங்களுண்டு. அச்சாகார அம்சங்களில் துர்கிரூபம் பிரதானம். மாகேசுவரீ, வைஷ்ணவீ, கௌரீ, கணேசீ,

முதலியனவும் பிரதான அம்சங்களே. பகவதியுபாஸனையால் விஷ்ணுவுக்கு வைஷ்ணவி யென்னும் பகவதியின் அம்சங்கிடைத்தது. அப்படியே மற்றத் தேவதைகளுக்கும் பகவதியின் உபாஸனையால் *தத்தம் மாகேசுவரி முதலிய அம்சங்கள் கிடைத்திருக்கின்றன. அவர்களுள்ளும் விஷ்ணுவும் சிவனும் பகவதியின் முக்கிய பக்தர்களாயிருக்கிறார்கள். ஏனெனின் தியானஞ்செய்வோனுக்குத் தியேயரூபத்தைபடைவதே தியானத்தின் பரம அவதியாகும். விஷ்ணுவுக்கும் சிவனுக்கு முபாஸனையால் தியேயரூபங் கிடைத்திருக்கிறது. ஆதலால் இவர்கள் முக்கிய உபாஸகர்கள்.

மதனத்தால் அமிர்த முண்டானபோது, சுராசுரர்களுடைய விவாதத்தைத் தீர்க்க விஷ்ணுவுக்குச் சாமர்த்திய மில்லாமற் போயிற்று. அப்போது தன்னுபாஸ்யரூபமான பகவதியின் அம்சத்தைத் தியானஞ்செய்து தானே யந்த உபாஸ்யரூபத்தை யடைந்தார். அந்த ரூபத்தின் மகாத்மியத்தால் அசுரர்களும் விஷ்ணுவுக்கு அனுகூலமானார்கள். அப்படியே சிவனுஞ் சமாதியிற் பகவதியைத் தியானஞ்செய்தார். அதனால் சிவனது பாதிசரீரம் உபாஸ்யவடிவமாயிற்று. ஒவ்வொருகாலத்து விக்ஷேபத்தால் சமாதியில்லாமற் போனமையால் சிவனது முழுசரீரமும் உபாஸிக்கத் தக்கதாகவில்லை. இவ்விதத்தால் எல்லாத் தேவர்களும் பகவதியின் உபாசகர்களாகின்றார்கள். அவ்வுபாசனை தக்ஷிணமார்க்கத்தினும் உத்தரமார்க்கத்தினும் இரண்டுவகையாய்ச் சொல்லப்படுகிறது. முன் தக்ஷிணமார்க்கம் சொல்லப்பட்டது. மேல் உத்தர மார்க்கத்தைச் சொல்லுவாம்:—

பகவதியின் பக்தர்களான ஹரிஹரர்களைப்போல் பகவதியை யார்தானுபாஸிக்கப் போகிறார்கள். அங்ஙனமாயினும், மகாமாயையைத் தியானிக்கிறவன் சகல புருஷார்த்தத்தையும் சீக்கிரத்திலடைவான். ஒருங்கே போக மோக்ஷங்களை யடையத்தக்கதான வேறு சாதனம் ஜகத்திலில்லை. பகவதி பக்தன் சகல போகங்களையும் அனுபவித்துங் கர்ப்பவாசத்தை யடைகிறதில்லை. சிவனாற் செய்யப்பட்ட தந்திரத்தின் கிரமத்தைச் சொன்னோம். பகவதியின் பக்தி மிகுந்த சுகத்தைத் தரும். முன்னோர்கள் எல்லோரும் அநுஷ்டித்து வந்த பஞ்சமகாரங்களையும் ஒருபோதும் விடலாகாது. எல்லாத் தேவர்களும் பல தேவராகிய நல்ல ஞானியும் முதல் மகாரத்தை எப்போதும் ஜலத்தைப் போலச் சாப்பிட்டார்கள். மற்றும் முன்னோர்க ளெல்லோரும் மகாரத்தையே சேவித்தார்கள். மகாரங்களைச் சேவிக்கும் விதிகள் பரமசிவனால் பரோபகாரத்தின்பொருட்டுச் சொல்லப்பட் டிருக்கின்றன. சிவவசனத்தை மனதில்

---

* ஹரிஹரன் முதலியோர் தத்தம் அதாவது வைஷ்ணவி முதலிய பகவதியின் அம்சங்களை அப்பகவதியின் கிருபையினாற் பெறுகின்றனர் என்னும் பொருள் தேவி பாகவதத்தில் வெளிப்படையாய் எழுதப்பட்டிருக்கின்றது.

தரிக்கிறவன் இச் சரீரத்திலேயே போகமோக்ஷங்களை யடைகிறான். வியாஸர் பாகவதத்தைச் செய்திருக்கிறார். உபபுராணத்திற் காளியை வர்ணித்திருக்கிறார். பகவதியின் பக்திதான் மேலாகச் சொல்லப்பட்டிருக்கிறது. பூஜாவிதிகள் எல்லாவற்றையும் அறிவித்திருக்கிறார். ஹரி ஹரன் சூரியன் கணேசன் முதலியோர் பகவதியைத் தியானஞ் செய்கிறவர்களாய்ச் சேவிக்கிறார்கள். மதியுடையோர் யாவரும் முதல் மகாரத்தைக் குடித்து மூழ்கிய மனதுடையவர்களாய்ப் பகவதியைப் பூஜிக்கிறார்கள். ஜகத்ஜனனியாகிய தேவியே விழிப்புள்ளவளா யிருக்கிறாள். இவளைச் சேவிப்பவன் பரமானந்தத்தை யடைகிறான்.

## 505. சூரியபக்தனுடைய உத்தரம்.

சூரியபக்தன் பகவதியின் மாகாத்மியத்தைக் கேட்டுக் கோபங்கொண்டு சொல்லுகிறான். அரசனே! என்னுண்மையான வசனத்தைக் கேட்க. நான் சொல்வது பொய்யன்று. கோடி சபதம் செய்கிறேன். அவர்களுடைய மதங்களெல்லாம் மிகவும் பாபமுள்ளனவும் இழிவானவைகளாயும் இருக்கின்றன. ஜகத்திற் சொல்லப்படும் கெட்ட குணங்களெல்லாம் தேவிமார்க்கத்தில் உத்தமமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. மலினமான மத்தியம் தீர்த்தமென்றும், மாமிசம் சுத்தமென்றும் சொல்லப்பட்டிருக்கின்றன. விபரீதத்தைச் சொல்லும் * சம்புதந்திரம் அனுஷ்டிக்கத் தக்கதன்று. தக்ஷிணசம்பிரதாயம் சிரேஷ்டமாகையால் எல்லோராலும் அனுஷ்டிக்கத் தக்கதா யிருந்தாலும் இவர்களுடைய மனது எதில் கட்டுப்படுகிறதோ அந்தச் சூரியனில்லையாயின் எல்லோரும் அந்தகராவர். எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்கிறவன் சூரியன். அவன் இல்லாவிட்டால் எங்கும் இருள் கவிந்துகொள்ளும். ஜகத்திலுள்ள மற்றப் பிரகாசங்கொடுக்கும் வஸ்துக்களெல்லாம் சூரியனுடைய அம்சங்களே. சூரியனைப்போல் ஒருவனும் ஹிதஞ் செய்கிறவனில்லை. பிறருடைய ஹிதத்தின் பொருட்டுத் தான் ஆகாசத்தில் ஓயாமல் அலைகிறான். சகல காரியங்களும் காலாதீனமா யிருக்கின்றன. அதனையே சென்றகாலம், நிகழ்காலம், வருங்காலமென்று மூவகையாகச் சொல்லுகிறார்கள். ஆச்சரியம்! இச்சூரியன் சூத்திரமாய்க் கிரியைகளைச் செய்கின்றார். இவ்விதியாக எல்லாம் சூரியனிலிருந்தே யுண்டாகின்றன. அவர் கோபத்தால் எல்லாம் பஸ்மமாகின்றன. இவருக்கு ஸாகாரம் நிராகாரமென இரண்டு ரூபங்களுண்டு. நிராகாரப்பிரகாசம் சகல நாம ரூபங்களிலும் வியாபித்திருக்கிறது. எதை வேதாந்தி பாதி சப்தத்தால் வியவகரிக்கிறாரோ அது நிராகாரப் பிரகாசரூபமான சூரியனுடைய

---

* சம்புதந்திரமென்பது பாமரபுருஷர்களுக்கும் ஓரிடத்து ஆசையிருக்கவேண்டுமென்னும் அபிப்பிராயத்தால் வாமமார்க்கத்தைக் கூறும் சிவ (வாம) தந்திரமாம். இதனைச் சேவிக்கின்றவனது புத்தி யுத்திப்பிரமாணங்களாற் சூனியமாதலால் வெறுமையானதாம்.

சூரியனுடைய சாமானியரூபமாம். அது ஜகத்துக்கெல்லாம் அதிஷ்டானமாம். அதனை யறியாததினால் ஜகத்துவடிவ விவர்த்தமுண்டாகிறது. அந்த நிராகாரப் பிரகாசமே அந்தக்கரணவிருத்தியிலுள்ள பிரதிபிம்பத்தோடு ஞானமென்று சொல்லப்படும். "அகம் பானு (யான் சூரியன்)" என்று அந்தக்கரணவிருத்தி பிரகாசத்தின் பிரதிபிம்பத்தோ டுண்டாகும்போது அஞ்ஞானம் நிவிருத்தியாக ஜகத்தும் நிவிருத்தியாகிறது.

சூரியனுடைய ஸாகாரரூபத்தைச் சொல்லுகிறேன் கேட்க:—பிராதக்காலத்தில் அவருடைய தேஜசு பிரகாசிக்கிறது. சந்திரன் நக்ஷத்திரம் தீப முதலிய அநேகம் அதன் அம்சமே. நிராகாரஸாகார பேதத்தால் சூரியனுக்கு இரண்டுரூபமுண்டு. அவற்றுள் நிராகாரரூபம் ஞேயம்; ஸாகாரரூபம் தியேயம். இதுவே *வேதாந்தங்களில் நிர்க்குணசகுண பேதத்தால் இருவகைப் பிரஹ்மமாகச் சொல்லப்பட் டிருக்கிறது. எச் சூரியனிடத்தில் ஒரு காலத்திலும் அந்தகாரம் லேசமுமில்லையோ அவரைப் பார்த்தே எல்லோரும் தங்கள் கர்மத்தைச் செய்கிறார்கள். ஒருபோதும் தூங்காது விழித்திருக்கின்றார். அவரைத் தியானஞ் செய்வதனால் அந்தகாரம் ஒழிந்துபோம். மற்றத் தேவதைகள் விழிப்புள்ளவர்களென்று சொன்னது மித்தையென்று அறியவேண்டியது.

## 506. முற்கூறிய மதத்தின் அநுவாதத்தோடு ஸ்மார்த்தமதம்.

ஐந்து உபாஸகர்களும் பரஸ்பரம் விருத்த வசனங்களைச் சொன்னதுபோல் அநேக பண்டிதர்களும் தங்கள் தங்கள் புத்திக்கெட்டியபடி விருத்தமாகவே பேசினார்கள்.

இவ்வைவர் மதமும் ஒன்றற்கொன்று விரோதிப்பதுபோல ஸ்மார்த்த பண்டிதன் மேற்கண்ட ஐந்து தேவதைகளிடத்திலும் பேதபுத்தி கொள்ளாவிட்டாலும் அவனுடைய மதமும் இவர்கள் மதங்களுக்கெல்லாம் விரோதமாயிருக்கிறது. ஏனெனின்,

வைஷ்ணவனுடைய மதம் இதுவாம்:—விஷ்ணுவுக்குச் சமானமான வேறு தெய்வமில்லை. எல்லோரும் விஷ்ணு பக்தர்களே. விஷ்ணுவின் ராம கிருஷ்ண நாராயணன் முதலிய நாமங்களுக்குச் சமானமாய்ப் பிறதெய்வங்களின் நாமங்களை எவன் நினைக்கிறானோ அவன் † நாமாபராதி. அவனுக்கு

---

* வேதத்தின் அந்த (கடைசிப்) பாகமாகிய உபநிடதங்களில்.

† எவனுக்குப் பத்து நாமாபராதங்களில் யாதேனுமோர் அபராதமிருக்கின்றதோ அவன் நாமாபராதி யெனப்படுவான். அப்பத்தபராதங்கள் இவையாம்:—

1. சத்புருஷர்களின் நிந்தை, 2. அசத் புருஷர்களிடத்தில் நாமத்தின் மகிமையைச் சொல்லுதல், 3. விஷ்ணு சிவன் என்பவர்களிடத்தில் பேதஞானம், 4. சுருதிவாக்கியத்தில் அசிரத்தை, 5. சாஸ்திரவாக்கியத்தில் அசிரத்தை, குருவாக்கியத்தில் அசிரத்தை,

ராமாதி நாமோச்சாரணங்களின் யதார்த்தபல னுண்டாகிறதில்லை. இப்படியே சைவமதத்திலும் சிவனுக்குச் சமானமான வேறு தெய்வமில்லை. சிவனுடைய நாம உச்சாரணத்தின் பலன் விஷ்ணுநாம உச்சாரணத்தா லுண்டாகிறதில்லை. இவ்விதமாக எல்லோருடைய மதங்களிலும் அவரவர்களின் உபாஸிய தெய்வத்துக்குச் சமானமாய் வேறு தெய்வமில்லை. ஸ்மார்த்த மதத்திலோ எல்லாத் தேவர்களும் சமமே, ஆதலால் ஸ்மார்த்த மதமும் மேற்சொல்லிய ஐந்து மதங்களுக்கும் விருத்தமா யிருக்கின்றது.

## 507. ஆறு சாஸ்திரங்களும் ஒன்றற்கொன்று விரோதமாதல்.

1. சாங்கியம், 2. பாதஞ்சலம், 3. நியாயம், 4. வைசேஷிகம், 5. பூர்வமீமாம்சை, 6. உத்தரமீமாம்சை என்னும் இவ்வாறு சாஸ்திரங்களின் மதங்களும் பரஸ்பரம் விருத்தமாம். ஏனெனின்,

1. சாங்கியசாஸ்திரத்தில் ஈசுவரன் அங்கீகரிக்கப்படவில்லை. சமாதிவடிவ யோகத்தின் அபேக்ஷையின்றிக் கேவலம் பிரகிருதி புருஷர்களின் விவேகஞானத்தால் மோக்ஷமுண்டாவதாகக் கொள்ளப்பட்டிருக்கிறது.

2. பாதஞ்சலசாஸ்திரத்தில் ஈசுவரனும், சமாதியால் மோக்ஷமும் அங்கீகரிக்கப்பட் டிருக்கின்றன. ஆகையால் சாங்கியமும் பாதஞ்சலமும் ஒன்றற்கொன்று விருத்தமாம்.

3-4. நியாயமதத்தில் நான்கு பிரமாணம், வைசேஷிகமதத்தில் இரண்டு பிரமாணம் என்பன விருத்தம். இவ்வாறே நியாய வைசேஷிகங்களுக்குத் தம்மில் மற்றும் அநேக விரோதமுண்டு. ஜிஞ்ஞாசுவால் அவைகள் விரும்பப்படுவன வாகாமையின் அவற்றை இங்கெழுதவில்லை.

5. பூர்வமீமாம்சையில் ஈசுவரனும் மோக்ஷரூப நித்தியசுகமும் அங்கீகரிக்கப்படவில்லை. ஆனால் கர்மத்தா லுண்டாகும் விஷயசுகமே புருஷார்த்தமா யிருக்கின்றது.

6. உத்தரமீமாம்சையில் மோக்ஷமும் ஈசுவரனும் அங்கீகரிக்கப்பட்டுள.

---

7. நாமத்தில் அர்த்தவாதப் பிரமத்தின் அநுஷ்டானம். 8. அநேக பாபங்களை நாசம் பண்ணுகிற நாமம் தனக்கு இருக்கிறதென்னும் புத்தியினால் நிஷித்த கர்மங்களைச் செய்தல். 9. பெரும் புண்ணியத்தை யுண்டுபண்ணுவது நாமமென்னும் புத்தியினால் விகித கர்மங்களை விடுதல். 10. மற்றத் தர்மங்களோடு நாமத்தைச் சமானமாயறிதல் என்னும் இப்பத்தும் சிவ விஷ்ணுக்களின் ஜபத்தில் நாமாபராதங்கள். இதனாலேயே ஓர் மகாத்மாவானவர் "இராமா இராமா வென்று சொல்லுகிறார்கள்; ஆனால், பத்துத் தோஷங்களின்றி எவரும் சொல்லுகிறதில்லை. ஒருமுறை பத்துத் தோஷமின்றிக் கூறுவாராயின் கோடியாகத்தின் பயனுண்டாம்" என்று ஹிந்திபாஷையில் கூறியிருக்கின்றார்.

விஷயசுகம் புருஷார்த்தமன்று. உத்தரமீமாம்சையின் மதம் இக் கிரந்தத்தில் வியக்தமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகையால் சர்வசாஸ்திரங்களின் மதங்களும் இதற்கு விருத்தமாம். வேறு சாஸ்திரங்களிலும் பேதவாதம் சொல்லப்பட்டிருக்கிறது. இதிலோ பேதம் கண்டிக்கப்பட்டு அபேதம் சொல்லப்பட்டு மிருக்கிறது.

இவ்விதத்தால் சகல சாஸ்திரங்களின் சித்தாந்தமும் பரஸ்பரம் விருத்தமாம்.

## 508. தர்க்கதிருஷ்டி பிதாவைச் சந்தித்தல்.

இவ்விருத்த வசனங்களைக் கேட்டு அரசனுக்கு * நூதன சமுசயங்களுண்டாயின. இவர்களுள், யார் சொல்லுவதுண்மை. எல்லோரும் யுக்திப்பிரமாணங்களுடன் பேசுகிறார்கள். இவ்வித சமுசயமாகிற சோகத்தினால் துக்கமுற்ற அரசன் மனதில் உபாசிக்கத் தக்கதெய்வம் இன்னதென்று தோன்றாமற்போயிற்று. இச் சந்தேகத்தை எவனிடத்திற் சொல்லுகிறது. ஜகத்தினுள்ள சாஸ்திர நிபுண பண்டிதர்கள் சொல்லும் விருத்த வசனங்களைக் கேட்டு வெகுகாலம் யோசனையில் முழுகியிருந்தான். இப்படி யிருக்கும்போது தர்க்கதிருஷ்டி தகப்பனிடம் வந்தான். இருவரும் பரஸ்பரமாலிங்கனஞ் செய்துகொண்டனர். புத்திரன் தகப்பனை விதிப்படி நமஸ்கரித்தான். தகப்பன் பிரியத்துடன் ஆசீர்வதித்து ஆசனங்கொடுத்தான்.

## தர்க்கதிருஷ்டி பிதாவைநோக்கி உபதேசித்தல் (509-522)

## 509. காரணரூபம் உபாசிக்கப்படுவதாதலும் காரியரூபம் தாழ்ந்ததாதலும்.

தகப்பன் சிந்தையில் மூழ்கியிருப்பதைக் கண்டு, ஐயா! தங்கள் சித்தத்தினுள்ள வியாகூலம் யாது? என்ன யோசனை? முகம் பிரசன்னமாயில்லையே? என்று தர்க்கதிருஷ்டி வினவினான்.

புத்திரன் வசனத்தைக் கேட்டுத் தன் கவலைக்குக் காரணமான சகல விருத்தாந்தங்களையும் அவனுக்குச் சொன்னான். எந்தத்தெய்வம் உபாசிக்கத் தக்கதென்று தெரியவில்லை யென்றான்.

---

* ஒரு ஸ்திரீயின் அங்கணத்தில் பூனை இறந்து கிடந்தது. அதனை அவள் தாழ்வாரத்தின் வாயிலைத்திறந்து போட்டுவிட்டு ஊருக்கு வெளியில் கிடத்திப்போயினள். அங்கு அதன்பிறகு ஓர் நோய்கொண்ட ஒட்டகம் அவள் அங்கணத்தில் நுழைந்து இறந்துபோய்விட்டது. அதனால் அந்த ஸ்திரீக்கு எப்படிப் பெருத்த கவலை யுண்டாயிற்றோ அப்படிச் சுபசந்ததி ராஜாவும் உபாசிய தெய்வத்தின் அறியாமையை நீக்குவதற்குப் பண்டிதர்களை நோக்கி வினவினன். அதனால் புது சம்சயமுண்டாயிற்று. அதனை நிவர்த்திக்க அவனுக்குப் பெருங்கவலை யுண்டாயிற்று.

தர்க்கதிருஷ்டி தகப்பன் வார்த்தையைக் கேட்டு அவனுக்குச் சுபமுண்டாகக் கருதிச் சொல்லுகிறான். காரணரூபம் உபாஸ்யமென்றும் காரியரூபம் துச்சமென்றும் அறிக. காரணரூபத்தின் நாமங்கள் பல. இது வேதத்தின் முக்கிய சித்தாந்தம். இதிஹாச புராணங்களில் வியாசர் சொல்லிய சித்தாந்தம் இதுவே; வேறில்லை. இந்த மர்மத்தைப் பண்டிதர்களறியாமல் பிறர் மதத்தைக் கண்டிக்கிறார்கள். பாரதத்துக்கு வியாக்கியான மெழுதின நீலகண்ட பண்டிதர் அவ்வியாக்கியானத்தின் ஆரம்பத்தில் இப்பிரசங்கத்தைச் செய்திருக்கிறார். அவ்விடத்திலேயே உத்தமமான சுருதி சித்தாந்தங்களையு முள்ளபடி சொல்லியிருக்கிறார்.

## 510. புராணத்திற் சொல்லிய ஸ்துதி நிந்தைகளின் வியாசர் அபிப்பிராயம்.

சகல புராணங்களின் கர்த்தா வியாசர் ஒருவரே. அவர் ஸ்கந்த புராணத்திற் சிவனுக்கு ஸ்வதந்திராதி ஈசுவர தர்மங்களுண்டெனச் சொல்லியிருக்கிறார். மற்றத் தேவதைகளுக்குச் சிவ கிருபையால் எல்லா விபூதிகளுங் கிடைக்கிறதாகச் சொல்லியிருக்கிறார். ஆகையால் இவர்களுக்கு ஜீவதர்மம் சொல்லப்பட்டது. அப்படியே விஷ்ணுபுராண பத்மபுராணங்களில் விஷ்ணுவுக்கு ஈசுவரத்துவஞ் சொல்லப்பட்டிருக்கிறது. அவ்வாறே சிலரைப் புராணங்களிலும் சிலரை உபபுராணங்களிலுமாக விஷ்ணு சிவன் என்பவர்களுக்கு வேறான கணேசாதி தேவதைகளுக்கு ஈசுவரத்துவஞ் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதத்தால் வியாசர்வாக்கியத்தில் விரோதம் காணப்படுகிறது.

அதற்குச் சமாதானம் இதுவாம்:— * எல்லோரும் ஈசுவரர்கள்தாம். எந்தப் பிரகரணத்தில் பிறதெய்வம் நிந்திக்கப்பட்டிருக்கிறதோ அதன் நிந்தையால் அதன் உபாசனையை விடுதலில் வியாஸருக்கு அபிப்பிராயமில்லை. ஆனால் வைஷ்ணவ புராணத்திற் சிவாதி தேவதைகளின் நிந்தை விஷ்ணுவின் ஸ்துதியினால் விஷ்ணுவுபாசனையிற் பிரவிருத்தித்தற்கு ஹேதுவாம். அவ்வாறே சிவபுராணத்திற்செய்த விஷ்ணுவாதிகளின் நிந்தையும் அவற்றின் உபாஸனைகளை விட்டுவிட வேண்டுமென்னும் கருத்தன்று. ஆனால் அந்நிந்தை சிவ உபாஸனையிற் பிரவிருத்தி யுண்டாகும்பொருட்டேயாம். ஒரு பிரகரணத்தில் பிறதேவதையின் நிந்தை அதன் உபாசனையைத் தள்ளுவதற்கா யிருக்கும் பக்ஷத்தில் எல்லாத் தேவதைகளி னுபாஸனைகளையும் தள்ளும்படி நேரிடும். ஆகையால் அன்னிய தேவதையின் நிந்தை ஒன்றனது ஸ்துதியின் பொருட்டாம்; மற்றதினுபாஸனையை விட்டுவிடுவதற்காகவன்று.

---

* எல்லோரு மென்றதால் விஷ்ணு, சிவன், கணேசன், தேவி, சூரியன் முதலிய இவ்வைந்து தேவதைகள்.

திருஷ்டாந்தம்:—வேதத்தில் அக்கினிஹோத்திரத்துக்கு இரண்டு காலங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஒன்று சூரியோதயத்துக்கு முன்னும் மற்றொன்று சூரியோதயத்துக்குப் பின்னுமாம். அங்கு முற்காலப்பிரசங்கத்தில் பிற்காலம் நிந்திக்கப்பட்டிருக்கிறது. பிற்காலப்பிரசங்கத்தில் முற்காலம் நிந்திக்கப்பட்டிருக்கிறது. அங்கு அக்கினிஹோத்திரத்தை விட்டு விடவேண்டுமென்னும் அபிப்பிராயம் நிந்தைக்கிருக்குமாயின், இவ்விரண்டு காலங்களிலும் ஹோமத்தை விட்டுவிடும்படி நேரிடும் நித்தியகர்மத்தை விடுதல் பொருந்தாது. ஆகையால் முற்காலத்தினது ஸ்துதியின்பொருட்டுப் பிற்கால நிந்தையும் பிற்கால ஸ்துதியின்பொருட்டு முற்காலநிந்தையுஞ் செய்யப்பட்டிருக்கின்றன. அதுபோல், ஒரு தெய்வத்தி னுபாஸனைப்பிரசங்கத்தில் பிற தேவதையின் நிந்தைக்குத் தாற்பரியம் அத்தெய்வத்தின் துதியிலாம்; பிற தெய்வத்தின் நிந்தையிலன்று.

## 511. ஐந்துதேவதைகளி னுபாஸகரும் ஒரே (பிரஹ்மலோக) பலனை யடைதல்.

சாகாபேதத்தால் சிலர் உதயத்துக்கு முன் ஹோமஞ் செய்கிறார்கள்; சிலர் உதயத்துக்குப்பின் செய்கிறார்கள். இருவருக்கும் பலன் ஒன்று. அதுபோல் இச்சாபேதத்தால் ஐந்து தேவதைகளுக்குள் எதை யுபாஸித்தாலும் ஐந்துபாஸனைகளாலும் பிரஹ்மலோகமே யடையப்படும். அவ்விடத்தில் போகங்கள் அநுபவிக்கப்பட்டு விதேகமோக்ஷம் சித்திக்கிறது. விஷ்ணுமுதலிய தேவதைகளி னுபாஸனையால் வைகுண்டாதி லோகங்கள் அடையப்படுமென்று புராணங்களிற் சொல்லியிருக்கிறது; பிரஹ்மலோகம் அடையப்படுவதாய்ச் சொல்லப்படவில்லை. என்றாலும் உத்தமஉபாஸகர்கள் விதேகமுக்திக்கு அதிகாரிகளாயிருப்பதால் தேவயானமார்க்கமாக எல்லோரும் பிரஹ்மலோகத்துக்கே போகிறார்கள். ஆனால் ஒரே பிரஹ்மலோகம் விஷ்ணுவுபாஸகனுக்கு வைகுண்டரூபமாயும் அங்குள்ளவர்கள் சதுர்ப்புஜங்களோடு கூடினவர்களாயும் பிரதீதியாகிறார்கள். தானுஞ் சதுர்ப்புஜனாகவே யாகிறான். அப்படியே சிவோபாஸகனுக்குப் பிரஹ்மலோகமே சிவலோகமாகவும் அங்குள்ளோர் திரிநேத்திர ஸ்வரூபிகளாகவும் பிரதீதியாகிறது. தன்னையும் அப்படியே காண்கிறான். இவ்விதமாக எல்லாவுபாஸகர்களுக்கும் பிரஹ்மலோகமே தமது உபாஸ்யத்தின் லோகமாகக் காணப்படுகிறது. ஏனெனின் இது நியமமாம்:— * தேவையான மார்க்கமின்றி வேறுமார்க்கத்தாற் போகிறவன் மறுபடியும்

---

* 1. தேவயானம், 2. பிதிர்யானம், 3. ஜாயஸ்வமிரியஸ்வம் யென்னும் பேதங்களால் சமுசாரமார்க்கங்கள் மூன்றாம்.

1. சூரியமண்டலத்தைப் பேதித்துக்கொண்டு பிரஹ்மலோகத்துக்குப் போகும் மார்க்கம் தேவயானமார்க்கமாம். இதனையே அர்ச்சிமார்க்கமென்றுங் கூறுவர்.

சமுசாரத்திற்கு வருகிறான். தேவயானமார்க்கமொன்றே பிரஹ்மலோகத்துக்குப் போவதாம். ஆகையால் விதேகமோக்ஷத்துக்கு யோக்கியர்களான உபாஸகர்களெல்லாரும் பிரஹ்மலோகத்துக்குப் போகிறார்கள். அந்தப் பிரஹ்மலோகத்தில், உபாஸகனுடைய இச்சாநுசாரமாகச் சகலசாமக்கிரிகளுடன் கூடியதாக அப்பிரஹ்மலோகமே உபாஸகனுக்குப் பிரதீதியாகும்படியான இத்தன்மைய அற்புதமகிமையிருக்கிறது.

இவ்விதத்தால் ஐந்துதேவதைகளின் உபாஸனைகளுக்கும் பலமொன்றே.

## 512. ஒரே பரமாத்மாவினிடத்தில் நாநா நாமரூபங்கள் சம்பவிக்குமாறு.

அதில் இச்சங்கை யுண்டாகிறது:—ஐந்து தேவதைகளுக்கும் நாமரூபங்கள் வெவ்வேறாய்ச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஈசுவரனோ ஒருவன். ஒரு ஈசுவரனுக்கு நாநாரூபங்கள் சம்பவியா.

அதற்குச் சமாதானம் இதுவாம்:—பரமார்த்தமாக நாமரூபங்கள் எவையும் பரமாத்மாவினிடத்திலில்லை. மந்தபுத்தியுள்ளவர்களது உபாஸனையின் பொருட்டு நாமரூபரகித பரமாத்மாவிற்கு மாயையினாலாக்கப்பட்ட கற்பித நாமரூபங்கள் சொல்லப்படுகின்றன. ஆகையால் ஒரே பரமாத்மாவினிடத்தில் மாயையாற் கற்பிக்கப்பட்ட நாமரூபங்கள் அநேகம் பொருந்துகின்றன. இவ்விதத்தால் சர்வபுராணவாக்கியங்களின் விரோதமும் நிவிருத்தியாய்விடுகிறது.

## 513. எல்லாப் புராணங்களுக்கும் காரணகாரியப் பிரஹ்மங்களினது உபாஸனையின் கிரமத்தால் கொள்ளப்படுந்தன்மையிலும் தள்ளப்படுந் தன்மையிலும் தாற்பரியமாதல் (513-514)

புராணவாக்கியங்களில் விரோதசங்கைக்கு முக்கிய சமாதானம் இதுவாம்:—விஷ்ணு சிவன் கணேசன் தேவி சூரியன் முதலிய ஒவ்வொரு நாமமும் காரணப்பிரஹ்மத்தினதாம். காரியப்பிரஹ்மத்துக்கும் இந்நாமங்களுண்டு. மாயாவிசிஷ்டகாரணத்தைப் பிரஹ்மமென்கிறார்கள். காரியமான ஹிரண்யகர்ப்பத்தையும் பிரஹ்மமென்கிறார்கள். இவ்விதமாகக் காரணப் பிரஹ்மத்தையும் காரியப்பிரஹ்மத்தையும் விஷ்ணு சிவன் முதலிய பதங்

---

2. சந்திரமண்டலத்தைப் பேதித்துக்கொண்டு இந்திரலோகரூபமான பிரஹ்மலோகத்துக்குப் போகும் மார்க்கம் பிதிர்யானமார்க்கமாம். இதனையே தூமமார்க்கமென்றும் கூறுவர்.

3. அடிக்கடி ஜனனமரணங்களுக்குக் காரணமான மிருத்தியுலோகத்துக்கு வரும் மார்க்கம் ஜாயஸ்வமிரியஸ்வமார்க்கமாம். இம்மூன்றும் சமுசாரமார்க்கங்களாம். நான்காவதாகிய பிரஹ்மஞானரூபமார்க்கம் மோக்ஷமார்க்கமாம்.

கள் அறிவிக்கின்றன. இப்படியே இவ்வைந்து பதங்களுக்கும் நாராயணன் நீலகண்டன் விக்கினேசன் சக்தி பானுமுதலிய அநேகப் பிரதிபதங்களுண்டு. அவையாவும் காரணகாரியப் பிரஹ்மங்களிரண்டையும் போதிக்கின்றன. சிலவிடத்துக் காரணப்பிரஹ்மத்தையும் சிலவிடத்துக் காரியப்பிரஹ்மத்தையும் சந்தர்ப்பத்துக்குத் தகுந்தபடி போதிக்கின்றன. திருஷ்டாந்தம்:—ஸைந்தவபதம் குதிரையையும் உப்பையும் அறிவிக்கிறது. போஜன சந்தர்ப்பத்தில் அது உப்பையும் நடைசந்தர்ப்பத்தில் குதிரையையும் அறிவிக்கின்றது. அதுபோல் வைஷ்ணவபுராணத்தில் விஷ்ணு நாராயணன் முதலிய பதங்கள் காரணப்பிரஹ்மத்தையும், சிவன் கணேசன் முதலியபதங்கள் காரியப்பிரஹ்மத்தையும் போதிக்கின்றன.

**514.** 1. ஆதலால் வைஷ்ணவநூல்களில் விஷ்ணுஸ்துதிக்கும் சிவாதிகளின் நிந்தைக்கும் வியாஸர் அபிப்பிராயம் இதுவாம்:—காரணப்பிரஹ்மம் உபாஸிக்கத்தக்கது; காரியப்பிரஹ்மம் உபாஸிக்கத்தக்கதன்று.

2. ஸ்கந்தபுராணுதி சைவநூல்களில் சிவன் மகேசன் முதலிய பதங்கள் காரணப்பிரஹ்மத்தையும் விஷ்ணு கணேசன் தேவி சூரியன் முதலிய பதங்கள் காரியப்பிரஹ்மத்தையும் போதிக்கின்றன. ஆகையால் இந்தப் புராணங்களிலும் காரணப்பிரஹ்மத்தின் ஸ்துதியும் காரியப்பிரஹ்மத்தின் நிந்தையும் இருக்கின்றன.

3. அப்படியே கணேசபுராணத்தில் கணேசபதம் காரணப்பிரஹ்மத்துக்கும் விஷ்ணு சிவன் முதலிய பதங்கள் காரியப்பிரஹ்மத்துக்கும் வாசகங்களாயின. ஆகையால் காரணத்தின் ஸ்துதியும் காரியத்தின் நிந்தையும் இருக்கின்றன.

4. அப்படியே காளிபுராணத்தில் காளிதேவி முதலிய பதங்கள் காரணப்பிரஹ்மத்தையும் விஷ்ணு சிவன் சூரியன் முதலிய பதங்கள் காரியப்பிரஹ்மத்தையும் போதிக்கின்றன. ஆகையால் காரணத்தின் ஸ்துதியும் காரியத்தின் நிந்தையு மிருக்கின்றன.

5. இப்படியே ஸௌரபுராணத்தில் சூரியன் பானுமுதலிய பதங்களால் காரணப்பிரஹ்மமும் விஷ்ணு சிவன் முதலிய பதங்களால் காரியப்பிரஹ்மமும் போதிக்கப்படுகின்றன; ஆகையால் காரணப்பிரஹ்மத்தின் ஸ்துதியும் காரியப்பிரஹ்மத்தின் நிந்தையு மிருக்கின்றன.

இவ்விதமாகச் சகலபுராணங்களிலும் காரிய காரணங்களின் பெயர்வடிவ சங்கேதபேத மிருக்கிறது. எடுத்துக்கொள்ளும்படியாயும் தள்ளும்படியாயு மிருக்கிற அர்த்தத்தில் பேதமில்லை. சகலபுராணங்களிலும் காரணப்பிரஹ்மத்தினுபாஸனை எடுத்துக்கொள்ளத்தக்கது. காரியப்பிரஹ்மத்தினுபாஸனை தள்ளத்தக்கது. ஆகையால் சகல புராணங்களும் ஒரே காரணப்பிரஹ்மத்தினுபாஸனையைப் போதிக்கின்றன. இவற்றிற்குத் தம்மில் விரோதமில்லை.

## 515. மூர்த்திப்பிரதிபாதனத்தின் அபிப்பிராயம் (515-516)

சதுர்ப்புஜ திரிநேத்திர ஸஹண்டமூர்த்தி அஷ்டபுஜமூர்த்தி முதலியவை மாயையின் பரிணாமமாயும் சேதனத்தின் விவர்த்தமாயும் இருப்பதால் காரியங்களாயிருக்கின்றன. அவற்றின் உபாஸனையுஞ் சொல்லப்பட்டிருக்கிறது. அங்ஙனமாயினும் அந்தச் சதுர்ப்புஜாதிமூர்த்திகளின் மாயாவிசிட்டகாரணத்தை விசாரித்துப் பார்க்குமளவில் யாதொரு பேதமுமில்லை. ஆகையால் அவ்வாகாரங்களைப் பாதித்துக் காரணரூபத்தால் அவற்றை உபாசிப்பதில் கருத்தாம். ஏனெனின் ஆகாரம் காரியம். ஆகையால் அது துச்சமாம். காரணம் சத்தியமாம்; எவனுடைய மந்தப்பிரஞ்ஞை ஆகாரத்திலேயே ஸ்திரமாயிருக்கிறதோ அவன் சாஸ்திரத்திற் சொல்லிய ஆகாரத்தையே உபாஸிக்கவேண்டியது. அதனாலும் பிரஞ்ஞை நிச்சலமாகிக் காரணப்பிரஹ்மத்தி னுபாஸனையில் ஸ்திரப்படுகிறது.

**516.** காரணப்பிரஹ்மஉபாஸனை இவ்வாறு சொல்லப்பட்டிருக்கிறது:— பிரஹ்மம் ஜகத்தின் காரணமாம். சத்தியகாமன், சத்தியசங்கற்பன், சர்வஞ்ஞன், சுதந்திரன், சர்வப்பிரேரகன், கிருபாளு என்று இப்படி ஈசுவரதர்மங்களைத் தியானிக்கவேண்டியது. மூர்த்தியைத் தியானிக்கவேண்டுமென்பது சாஸ்திரத்தின் கருத்தன்று. சாஸ்திரத்தில் அநேக மூர்த்திகளைப்பற்றிச் சொல்லியது உபாஸனையின் பொருட்டன்று. ஆனால் எல்லா மூர்த்திகளுங் காரணப்பிரஹ்மத்தி னுபலக்ஷணங்களே. எந்த வஸ்து எதன் ஏகதேசத்திலும் ஏககாலத்திலும் இருந்து வியாவர்த்தகமாயுமிருக்கிறதோ அது உபலக்ஷண மெனப்படும்.

“காகமுட்கார்ந்திருப்பது தேவதத்தன்வீடு” என்னும் வாக்கியத்தில் தேவதத்தன் வீட்டுக்குக் காகம் உபலக்ஷணமாயிருக்கிறது. ஏனெனின் வீட்டின் ஒருபக்கத்திலும் எப்போதாவதொருகாலத்திலும் காகம் உட்காருகிறது எப்போதும் உட்காருகிறதில்லை. மற்றக் கிரகங்களினின்றும் தேவதத்தனது கிரகத்தை வேறுபிரித்தறிவிப்பதாம். அதுபோல் ஜகத்தின் காரணம் பிரஹ்மம். அதன் ஏகதேசத்தில் எப்போதாவது மூர்த்தியிருக்கிறது. சதுர்ப்புஜாதி மூர்த்திகள் காரணப்பிரஹ்மத்திலேயே இருக்கின்றன; வேறிடத்தில் இல்லை. ஆகையால் வியாவர்த்தகங்களாயிருத்தலால் உபலக்ஷணங்களாயிருக்கின்றன.

உபலக்ஷணத்தின் பிரயோஜனம் இதுவாம்:—விசேஷிய வஸ்துவினது ஸ்வரூபத்தின் ஞானமுண்டாம். எப்படிக் காகத்தால் தேவதத்தன் வீடு அறியப்படுகிறதோ வேறு பிரயோசனமில்லையோ, அப்படியே சதுர்ப்புஜாதி ஆகாரத்தினால் நிராகாரமான காரணப்பிரஹ்மத்தின் ஞானமே உபாஸனையின் பொருட்டு மூர்த்தியைச் சொல்லுதலின் பிரயோஜனமாம்; வேறில்லை.

